بِسْمِ اللهِ الرَّحْمٰنِ الرَّحِيْمِ



TOPICS I HAVE ADDRESSED VARIOUS EVENTS 

- லால்பேட்டை அன்சாரி ஹஜரத் அவர்களின் இல்ல திருமணத்தில் என் வாழ்த்துரை
  ( ஏன் கோணல் எலும்பைக் கொண்டு இறைவன் பெண்ணை படைத்தான் ? )
- வாசனை திரவியங்கள்
- என்னைத் தேடி வந்து புத்தகங்களை அள்ளி தந்தவர்
- லால்பேட்டை முஸ்லிம் பட்டதாரிகள் கல்விச் சங்கம் சார்பாக நடத்தப்பட்ட கல்வி விழிப்புணர்வு மாநாட்டில் கல்வியின் சிறப்பு பற்றிய என் சொற்பொழிவு
- சூஃபியாக்களை பிரபஞ்சத்தின் எந்த விதிகளாலும் கட்டுப்படுத்த முடியாது
- காலப் பெருவெளியில் சூஃபியாக்கள்
- தூத்துக்குடி மன்பவுஸ்ஸலாஹ் மதரஸா பேராசியர்கள் கேட்டுக் கொண்டதற்கிணங்க *"எழுத்தும் , எழுத்தாற்றலும்"* பற்றி என் சிறப்பு சொற்பொழிவு
- கலீபா காஜா அபூஸயீது ஜிஷ்தி உஸ்மானி அவர்களின் இல்லத்தில் நடைபெற்ற வருடாந்திர காஜா ஜிஷ்தி (ரஹ்) மஜ்லீஸில் என் சிறப்புரை :

( பள்ளப்பட்டி மதரஸா ஆண்டு விழா மலருக்கான சிறப்புக் கட்டுரை )




அண்டை வீட்டிற்கு அருகில் அண்டப் பெருவெளி.
அண்டம் என்பது நம்மைச் சுற்றியுள்ள எல்லாவற்றையும் குறிக்கின்ற ஒரு சொல்லாகும். பூமி, நிலவு, வானம், சூரியன், சூரியனைச் சுற்றி வரும் கோள்கள், விண்மீன்கள், விண்மீன்களுக்கு இடையுள்ள விண் துகள்கள் (COSMIC DUST), அவற்றின் இயக்கம், இவற்றை எல்லாம் சூழ்ந்துள்ள வெட்ட வெளி (EMPTY SPACE), கண்ணுக்குத் தெரியாத தொலைவில் உள்ள விண்மீன்களுக்கும் அப்பால் உள்ள விண்மீன் குழுக்கள் (GALAXY) ஆகியன அனைத்தும் 'அண்டம்' என்ற சொல்லில் ஒற்றைச் சொல்லில் அடங்கும்.

இத்துடன் காலம் என்ற கருத்தும் அது தொடர்பான முறைமைகளும் இதில் அடங்கும். ஒரு புதிய ஆய்வு, அண்டம் வாழ்க்கைக்கு ஏற்ற நிலையைப்பெற தேவையான அளவு வேகமாக விரிவடைந்து வருவதை உறுதிசெய்கிறது. தற்போதைய வானியல் ஆய்வுகளின்படி, அண்டத்தின் வயது 13.73 (± 0.12) பில்லியன் ஆண்டுகள் என்று கணக்கிடப்பட்டுள்ளது.

அண்டம் ஒரு கோள வடிவில் இருக்கக்கூடும் என்றும் கருதப்படுகின்றது. ஆனால் அண்டத்தின் எல்லையை நம்மால் இதுவரை காண இயலவில்லை. தொலை தூரத்தில் இருந்து வரும் ஒளிக்கதிர்கள் கதிர் வீச்சுகள் இவற்றை வைத்துக் கொண்டு நம்மால் ஓரளவு அறிந்து கொள்ள முடிந்த அண்டத்தின் பகுதியை 'அறியப்பட்ட அண்டம் (OBSERVABLE UNIVERSE)' என்று சொல்லப்படுகின்றது.
இந்த அறியப்பட்ட அண்டம் ஒரு கோள வடிவில் இருப்பது இயல்பு. இக்கோளத்தின் விட்டம் 92 பில்லியன் ஒளி ஆண்டுகள் (LIGHT YEARS) அல்லது அதற்கு மேலும் இருக்கலாம் எனக் கணக்கிடப்பட்டுள்ளது
ஓர் ஒளி ஆண்டு என்பது ஒளி ஓர் ஆண்டில் போகின்ற தூரத்தைக் குறிக்கும். ஒளி ஒரு நொடியில் 299,792,458 மீட்டர் தூரம் போகின்றது; ஓர் ஆண்டில், 9,460,730,472,580,800 மீட்டர் போகும். எனவே, ஒரு ஒளி ஆண்டு என்பது 9,460,730,472,580,800 மீட்டர் ஆகும். 92 பில்லியன் ஒளி ஆண்டுகள் என்பது ஏறத்தாழ 8.80 ×1026 மீட்டர் என்றாகும்.
அண்டம் தோன்றுவதற்கு முன்பு அண்டம் ஒரு நுண்ணிய புள்ளியாக இருந்ததாகவும், பின் அது "ஒரு நாள்" திடுமென மிகப் பெரிய முழக்கத்தோடு வெடித்துச் சிதற, அதிலிருந்து இப்போது நாம் காணும் எல்லாப் பொருட்களும் (விண்மீன்கள், விண்மீன் குழுக்கள் ஆகியன) தோன்றியதென்றும் கூறுகின்றனர்.

இதையே குர்ஆனிலும் இறைவன் :
"நிச்சயமாக வானங்களும், பூமியும் (முதலில்) இணைந்திருந்தன என்பதையும், இவற்றை நாமே பிரித்(தமைத்)தோம் " (குர்ஆன் : 21:30)
(எவருடைய உதவியுமின்றி) நம்முடைய சக்தியைக் கொண்டே வானத்தை அமைத்தோம். நிச்சயமாக நாம் (அதனை அவர்களின் அறிவிற்கெல்லாம் எட்டாதவாறு) மிக்க விசால மாக்கியும் வைத்திருக்கின்றோம். (குர்ஆன் : 51:47)

தோன்றிய இப்பொருட்கள் எல்லாதிசைகளிலும் சிதறிச் சென்றன. தோன்றிய பொருட்கள் வெவ்வேறு திசைகளில் செல்வதால் அவற்றுக்கிடையே உள்ள இடைவெளி பெரிதாகிக் கொண்டே போகின்றது. ஆனால், எப்பொழுதும் ஒரு பொருளின் வேகம் ஒளியின் வேகத்தை விட குறைவாகவே இருக்கும் என்பதால், அவற்றுக்கு இடையே உள்ள தொலைவும் ஒளி செல்லும் தொலைவை விட குறைவாகவே இருக்கும்.
எடுத்துக்காட்டாக, இரண்டு விண்மீன்கள் 5 ஆண்டுகள் இரண்டு திசைகளில் சென்று இருந்தால், அந்த விண்மீன்களுக்கு இடையேயுள்ள தொலைவு 5 ஒளி ஆண்டுகளுக்கு மேலாக இருக்க முடியாது.
'SPACE என்று சொல்லப்படுகின்ற வெட்ட வெளியும் ஒரு ஊது பை (BALLOON) போல விரிந்துகொண்டே செல்லுகின்றது. இதனால், பொருள்களுக்கிடையே உள்ள தொலைவு இன்னும் மிகுதி அடைகின்றது.

அண்டத்தில் உள்ள விண்மீன் குழுக்கள் (GALAXY) மிக வேகமாக சென்று கொண்டிருக்கின்றன. நமக்கு அருகில் உள்ள விண்மீன் குழுக்களை விட மிகத்தொலைவில் உள்ள குழுக்கள் மிக வேகமாக போய்க்கொண்டிருக்கின்றன.
இது மட்டுமன்றி, இந்த விண்மீன் குழுக்களின் வேகம் நாளுக்கு நாள் அதிகரித்துக் கொண்டே போகின்றது. இதை எட்வின் ஹப்பிள் (EDWIN POWELL HUBBLE) என்ற அமெரிக்க வானியல் ஆய்வாளர் கண்டு பிடித்தார். விண்மீன் குழுக்கள் மிக வேகமாகப் போவதைப் பார்த்துத்தான் எட்வின் ஹப்பிள் நம் அண்டம் விரிவடைந்து கொண்டிருக்கின்றது என்று சொன்னார்.

விண்மீன் குழுக்களின் வேகம் நாளுக்கு நாள் அதிகரித்துக் கொண்டு போவதற்குக் காரணம் என்ன? அண்டம் வெடித்துச் சிதறும் போது விண்மீன் குழுக்களின் வேகம் நாள் தோறும் குறைந்து கொண்டே போக வேண்டுமே அல்லாது வேகம் அதிகரித்துக் கொண்டு போவது ஏன்?
இதற்குக் காரணம் அண்டத்தில் மறைந்து கிடக்கும் ஒருவகையான DARK ENERGY எனப்படும் மறை ஆற்றல் (கருப்பு ஆற்றல்) காரணமாக இருக்கலாம் என அறிஞர்கள் கருதுகின்றனர். இதைப் பற்றி சரிவரத் தெரியாததால், அண்டம் இன்னும் எத்தனை காலம் விரிவடைந்து கொண்டு போகும், இறுதியில் அதன் முடிவுதான் என்ன, என்பன போன்ற கேள்விகட்கு இன்னும் விடை கிடைக்காமலேயே இருக்கின்றது. இந்த விடையைத் தேடி விஞ்ஞானம்...
ஜேம்ஸ் வெப் தொலைநோக்கி: JAMES WEBB SPACE TELESCOPE (அண்டத்தை காணும் கண்) உருவாக்கியது. இந்திய மதிப்பில் ரூ. 75,000 கோடி பொருட்செலவில் நவீனத் தொழில்நுட்பத்தின் உதவியுடன் அனுப்பப்பட்டுள்ள இத்தொலைநோக்கியின் அத்தனை கூறுகளும் வடிவமைப்புக்கு ஏற்பச் செயல்படுகிறது.
நாசாவின் மைல்கல்லாகப் பார்க்கப்படும் ஜேம்ஸ் வெப் விண்வெளி தொலைநோக்கி (JAMES WEBB SPACE TELESCOPE) கிறிஸ்துமஸ் தினத்தன்று விண்ணில் ஏவப்பட்டது. பால்வீதியில், பூமியைப் போன்று உயிர் இருந்த/இருப்பதற்குச் சாத்தியமான புறக்கோள்கள் (EXOPLANETS) இருக்கின்றனவா, பெருவெடிப்பிலிருந்து முதல் விண்மீன் கூட்டங்கள் எப்படி உருவாகின போன்ற பல கேள்விகளுக்கு இத்தொலைநோக்கி பதில் சொல்லும். ஐரோப்பிய மற்றும் கனடிய விண்வெளி நிறுவனங்கள் இத்திட்டத்துக்குப் பங்களித்தன.

‘தொலைநோக்கி’ என்னும் வார்த்தையிலிருந்து தொலைவில் இருக்கும் பொருட்களைப் ‘பார்க்க’ உதவும் கருவி என்று நாம் புரிந்துகொள்வோம்.
ஒரு பொருளை நாம் பார்க்க வேண்டுமென்றால், அந்தப் பொருளின் மீது ஒளி பட்டு, பிரதிபலித்து அது நம் கண்களுக்கு வந்துசேர வேண்டும். ஒளி என்பது நேனோமீட்டர் முதல் கிலோமீட்டர் வரை அகன்ற அலைநீளத்தை உள்ளடக்கியது. இதில், நம்மால் 0.4 முதல் 0.7 மைக்ரோமீட்டர் அலைநீளத்தில் உள்ள ஒளியைப் பார்க்க முடியும் – அதனால், புலனாகும் ஒளி என்று இந்த அலைநீளம் அழைக்கப்படுகிறது.
வெறும் கண்களுக்குப் புலப்படாத அலைநீளத்தில் உள்ள ஒளியை உணர நமக்குக் கருவிகள் தேவைப்படுகின்றன. பூமியில் இருக்கும் அனைத்துப் பொருட்களும் அகச்சிவப்புக் கதிர்களை வெளியிடும். இதை நாம் வெப்பமாக உணர்வோம். அகச்சிவப்புக் கதிர்களின் அலைநீளம் நம் கண்களால் பார்க்கக்கூடிய ஒளியின் அலைநீளத்தைவிட அதிகம்.

நம் உடலில் உள்ள வெப்பமும் அகச்சிவப்புக் கதிராக வெளிவரும். ஆக, அகச்சிவப்புப் புகைப்படக் கருவிகள் மூலம், இரவிலும் மனிதர்களைக் கண்காணிக்க முடியும். ஏடிஎம் கருவிகளில் உள்ள கண்காணிப்புக் கருவிகள் அதைத்தான் செய்கின்றன.
விண்வெளியில் உள்ள கோள்களும் விண்மீன் கூட்டங்களும் வெப்பத்தை அகச்சிவப்புக் கதிர்களாக வெளியிடும். ஆக, அகச்சிவப்புக் கருவிகளை உணரும் தொலைநோக்கிகளைப் பொருத்துவதன் மூலம் நம்மால் விண்ணில் உள்ள பல்வேறு பொருட்களைப் பற்றி ஆராய முடியும்.
ஜேம்ஸ் வெப் தொலைநோக்கி 0.6 – 28.3 மைக்ரோமீட்டர் அலைநீளம் கொண்ட அகச்சிவப்புக் கதிர்களை உள்வாங்கும் திறன் கொண்டது.

பூமியிலிருந்து செயல்படும் தொலைநோக்கிகளின் பார்வையை நம் வளிமண்டலம் மறைத்துவிடும்.அதனாலேயே அதிகப் பொருட்செலவு ஆனாலும், விண்வெளித் தொலைநோக்கிகள் தேவைப்படுகின்றன.

ஜேம்ஸ் வெப்புக்கு முன்னதாக 1990-ல் நாசாவால் விண்ணில் அனுப்பப்பட்ட ஹப்பிள் விண்வெளித் தொலைநோக்கி முக்கியத்துவம் வாய்ந்தது. விண்வெளி ஒளிப்படம் என்று கூகுளில் தேடினால் கிடைக்கும் கிட்டத்தட்ட அனைத்து ஒளிப்படங்களும் ஹப்பிள் எடுத்ததாகத்தான் இருக்க முடியும்.
பிரபஞ்சத்தின் வயது 1,380 கோடி ஆண்டுகள் என்று துல்லியமாகக் கணக்கிட உதவியது, புளூட்டோவைச் சுற்றி வரும் இரண்டு நிலவுகளைக் காண்பித்தது என்று லட்சக்கணக்கான ஆய்வுகளுக்கு உதவியாக ஹப்பிள் இருந்துவருகிறது. இது முக்கியமாக, புலனாகும் ஒளி அலைநீளத்தை உள்வாங்கும் தொலைநோக்கி.சரி, புலனாகும் அலைநீளத்தை உள்வாங்கும் ஹப்பிள் இருக்கும்போது, அகச்சிவப்புக் கதிர்களைப் படம்பிடிக்கும் ஜேம்ஸ் வெப் எதற்காகத் தேவைப்படுகிறது? அண்டம் விரிவடைந்துகொண்டே போகிறது என்பதை ஹப்பிள் தந்த தரவுகள் மூலம் ஆய்வாளர்கள் உறுதிப்படுத்தினார்கள். ஆக, நமக்கு அருகில் இருக்கும் விண்மீன் கூட்டங்களும் நாளடைவில் நம்மிடமிருந்து விலகும்.

அப்படி அவை தொலைவுக்குச் செல்லும்போது, அவற்றிலிருந்து வரும் ஒளியின் அலைநீளமும் அதிகரிக்கும். புலனாகும் ஒளியிலிருந்து, அகச்சிவப்பு அலைநீளத்துக்குச் செல்லும். மேலும், ஆய்வாளர்கள் காண விரும்பும் விண்வெளிப் பொருட்களுக்கு முன்பு தூசுப் படலம் இருந்தால் அது புலனாகும் ஒளியில் மறைந்துவிடும். ஆனால், அகச்சிவப்புக் கதிர்கள் தூசுப் படலத்தைத் தாண்டி வரும். இக்காரணங்களால் ஜேம்ஸ் வெப் தேவைப்படுகிறது.
விண்வெளிப் பொருட்களிலிருந்து வரும் ஒளியை உள்வாங்கி, அதை மின்னணு சமிக்ஞைகளாக மாற்றுவதற்கு, மிகப் பெரிய கண்ணாடி தேவை. இது எவ்வளவு பெரியதோ அதைப் பொறுத்து நிறைய ஒளியைப் பெற முடியும், பல்வேறு பொருட்களை ஒரே நேரத்தில் பார்க்க முடியும்.

வெப்பில் 6.5 மீட்டர் விட்டம் கொண்ட கண்ணாடி இருக்கிறது. இவ்வளவு பெரிய கண்ணாடியை விரிந்த நிலையில் விண்ணில் ஏவ முடியாது என்பதற்காக, ஓரிகாமி முறையில் காகிதத்தை மடிப்பதுபோல, கண்ணாடியை மடித்து வைத்து, பிறகு விரித்துக்கொள்ளும் தொழில்நுட்பத்தைப் பயன்படுத்தியிருக்கின்றனர் ஆய்வாளர்கள்.
ஹப்பிள் தொலைநோக்கி பூமியிலிருந்து 550 கிலோமீட்டர் தூரத்தில் இருக்கிறது. பூமியின் வெப்பத்தின் காரணமாக வரும் அகச்சிவப்புக் கதிர்கள் தொலைநோக்கிக்கு இடையூறாக இருக்கக்கூடாது என்பதற்காக, பூமியிலிருந்து 15 லட்சம் கிலோமீட்டர் தொலைவில் ஜேம்ஸ் வெப் நிலைநிறுத்தப்படவுள்ளது.
மேலும், தொலைநோக்கியில் இருக்கும் பாகங்களின் வெப்பத்தாலும் அகச்சிவப்புக் கதிர்கள் வரும் என்பதால், மைனஸ் 267 டிகிரி செல்சியஸ் குளிர்நிலையில் செயல்படுமாறு வடிவமைக்கப்பட்டுள்ளது.
ஹப்பிள் அனுப்பப்பட்ட பிறகு, அதிலிருந்து கிடைத்த ஒளிப்படங்கள் எதிர்பார்த்த அளவுக்குக் கூர்மையாக இல்லாமல் மங்கலாக இருந்தன. இதைச் சரிசெய்வதற்காக விண்வெளி வீரர்கள் விண்வெளி நடை (SPACEWALK) மேற்கொண்டு அக்கோளாறைச் சரிசெய்தனர்.
ஏதாவது தவறு இருந்தால், ஹப்பிளைச் சரிசெய்ததுபோல ஜேம்ஸ் வெப்பை அவ்வளவு தொலைவுக்குப் போய் சரிசெய்வதெல்லாம் சாத்தியமில்லாத காரியம். எனவே, பலகட்ட சோதனைகளுக்குப் பின்பு ஜேம்ஸ் வெப் களமிறக்கப்பட்டது.

ஜேம்ஸ் வெப் அனுப்பிய அண்டவெளிப் புகைப்படங்களால் நம் பிரபஞ்ச இயலின் நிறைய கோட்பாடுகளும் சிந்தனையும் மாறி வருகிறது .
விஞ்ஞான உலகம் தரிசித்த அண்டவெளியை, நிதர்சனமாக அவதானித்து அந்த அண்டவெளியினுள் மெஞ்ஞானிகளால் சென்று வர முடிந்தது.
திருமூலருக்கு யோகமுறைகளைப்பற்றி உபதேசம் அருளிய நந்தி தேவன் இந்த புவனமெங்கிலும் சுற்றி வரும்படி சொல்லி அனுப்பினார். திருமூலரும் கிளம்பினார். நம் பூமியானது ஒரு அண்டம். இதைப்போல 1008 அண்டங்கள் சேர்ந்தது ஒரு பேரண்டம். 1008 பேரண்டங்கள் சேர்ந்தது ஒரு புவனம்.
திருமூலரும் தான் பல ஆண்டுகள் கஷ்டப்பட்டு செய்து வைத்திருந்த சொரூபக் குளிகை ஒன்றை வாயில் அடக்கிக் கொண்டும் கமலி என்கிற குளிகையை உடலில் அணிந்து கொண்டும் வானவெளியில் பாய்ந்தார்.
ஆச்சர்யமடையும் படியான காட்சிகளைக் கண்டார். பல அண்டங்களையும், அவற்றில் காயகல்பமுண்டு சித்தியடைந்த யோகிகளும், ஞானிகளும் நிறைய இருப்பதைக் கண்ணுற்றார். இந்த உண்மையை அவர் தன்னுடைய நூலான ''கருக்கிடை -600'' என்ற நூலில் எழுதியுள்ளார். அதாவது...
''அண்டம் இருந்த அடவு சொன்னார் நந்தி
தண்டியது அஞ்சும் தனித்த அடுக்காக
ஒண்டி நின்று ஓடி நுழை என்றார்
கண்டிக் கமலினி காணீர் சொரூபமே...
சொரூபத்தை வாய்வைத்துச் சூட்டிக் கமலினி
அரூபத்தைச் சோதிபோல் அண்ட
நுழைந்திட்டேன் நிருபத்த கற்பம் நிலையான யோகியும்
தருவொத்த ஞானச் சதகோடி சித்தரே.
பாடல் 353, 354.
ஒரு அண்டத்தில் பல யோகிகளையும்
ஞானிகளையும் கண்டு அவர்கள் பாதங்களில் வீழ்ந்து வணங்கினாராம். அவர்கள் உனக்கு என்னென்ன சித்திகள் தெரியும் என்று கேட்டார்களாம். திருமூலரும் நந்தி அருளால் தனக்கு அறுபது கோடி சித்துக்களும், வாத

வித்தைகளும் சித்தியாயிற்று என்று சொன்னாராம். அவர்களும் நீ சிறுவன் இன்னும் பார்க்க வேண்டியவை நிறைய இருக்கின்றன .
அவற்றையெல்லாம் பார்த்துவிட்டு வா எனச் சொல்லி அனுப்பி வைத்தார்களாம்.
அடுத்த அண்டத்துக்குள் நுழைந்தால் அங்கே கல்சிலை போல அசைவற்று மௌன சமாதியில் பல சித்தர்கள் அமர்ந்திருக்கக் கண்டு அவர்களை பல முறை வலம் வந்து வணங்கியும் அவர்கள் அசைவற்ற நிலையிலேயே இருந்ததினால்
அடுத்த அண்டத்துக்குச் சென்றாராம். இது
குறித்த பாடலைப் பாருங்கள்.
"சித்தரைக் கண்டேன் தெவிட்டாதே பாவித்தேன்.
ஒத்திய சித்து உனக்கென்ன ஆச்சென்றார்
அத்திய கோடி அறுபது ஆச்சென்றேன்
எத்தி இளஞ்சித்து இன்னம்பார் என்றாரே
என்றே நுழைந்தேன் அடுத்தொரு அண்டத்தில்
கண்டேன் சித்தரைக் கடிபதுமைப் போல
தண்டேன் கைகூப்பினேன் தடாவினேன் தட்டாது
அண்ட நிராகரித்து அடைந்த பெரியோரை
பெரியோர் தனைக்கண்டேன் பேராய் வலம் வந்தேன்
தரியோ மவுனமென்று அப்பால் நுழைந்திட்டேன்
பரிவாய் அடுக்கொண்டு பாய்ந்து முடியேறி
விரிவாம் அடுக்கில் விரைந்து நுழைந்தேனே.
பாடல் -355,356,357.
"மிஃஹ்ராஜின் இரவில் சுவர்க்கம் அனைத்தும் எனக்குக் காண்பிக்கப்பட்டன . சுவர்க்கத்தில் தண்ணீராறு , பாலாறு , தேனாறு, மது ஆறு ( திராட்சை ரச ஆறு) குர்ஆன் (47 : 15 ) எனக்குக் காட்டப்பட்டன .இந்த நான்கு ஆறுகளும் எவ்விடத்திலிருந்து உற்பத்தியாகி , எங்கு போய்ச் சேருகின்றன? " என்று நபி (ஸல்) அவர்கள் ஜிப்ரயீல் (அலை) அவர்களிடம் கேட்க ,

" நபியே ! இவை ஹவ்லுல் கவ்தருக்குப் போய்ச் சேருகிறது . குர்ஆன் 108 : 01 ஆனால் இவைகள் எங்கு உற்பத்தியாகிறது என்பது எனக்குத் தெரியாது . தாங்கள் இறைவனிடம் கேட்டு தெரிந்து கொள்ளுங்கள் "
"உடனே அதற்கென்று படைக்கப்பட்ட மலக்கு என்னிடம் ஸலாம் சொல்லி . என்னை கண்ணை மூடி திறக்கும்படிச் சொன்னார் .அவ்வாறே கண்ணை மூடி திறக்க ,
அந்த நொடியே அவ்விடத்தில் முத்தினால் அமைந்த குப்பா ஒன்று அதன் வாயிலுக்குத் தங்கத்தினால் கதவு போடப்பட்டிருப்பதைக் கண்டேன்.
அந்த வளை மண்டபத்தின் மீது , இவ்வுலகிலுள்ள மனிதர்கள், ஜின்கள், மற்றும் பெரும் படைப்புகளை ஒன்று சேர்த்து அந்த பெரும் மலையின் உச்சியில் இருக்கும் ஒரு பறவையின் அளவுதான் இருக்கும். அப்படி பிரமாண்டமான ஒரு குப்பாவுக்குள்ளே இருந்துதான் மேற்கூறப்பட்ட நான்கு
நதிகளும் உற்பத்தியாகுவதைக் கண்டேன் .

அந்த மலக்கு"நபியே ! குப்பாவுக்குள்ளே நுழைய வேண்டுமா?" என்று கேட்க ,
"இந்த குப்பாவிற்குத் தங்க கதவுகள் போடப்பட்டு பூட்டப்பட்டிருக்கிறதே இந்த பூட்டிற்குரிய சாவி வேண்டுமே "
"நபியே .! பிஸ்மில்லாஹிர் ரஹ்மானிர் ரஹீம் என்ற சொல்தான் சாவி " ( கம்ப்யூட்டரின் கடவுச்சொல் மாதிரி)
நானும் கதவருகே "பிஸ்மில்லாஹிர் ரஹ்மானிர் ரஹீம்" என்று சொல்ல, கதவு தானாகவே திறந்தது. அந்த குப்பாவுக்குள் நான்கு தூண்கள் இருக்க ஒவ்வொரு தூணிலும் "பிஸ்மில்லாஹிர் ரஹ்மானிர் ரஹீம் " என்ற வாக்கியம் எழுதப்பட்டிருந்தது .
மேற்கூறிய நான்கு ஆறுகளில் தண்ணீராறு "பிஸ்மில்லாஹ் " என்ற பதத்திலுள்ள மீமில் இருந்தும் , பாலாறு " "அல்லாஹ்" என்பதிலுள்ள "ஹா" விலிருந்தும் , மது ஆறு "அர்ரஹ்மான் "
என்பதிலுள்ள மீமில் இருந்தும் , தேனாறு "அர்ரஹீம்" என்பதிலுள்ள மீமில் இருந்தும் உற்பத்தியாகிக் கொண்டிருந்தது . ("மீம்" என்னவென்று நீங்கள் அறிவீர்களா ? ) அந்த நான்கு ஆறுகளின் முகத்துவாரங்களும் "பிஸ்மில்லாஹிர்ரஹ்மானிர்ரஹீம் " என்ற வாக்கியம்தான் என்பதை நான் புரிந்து கொண்டேன் " .
பின்பு இறைவன் என்னிடம் , "யாரேனும் ஒருவன் பிஸ்மியை இதய சுத்தியுடன் ஓதினால் அவனுக்கு குப்பாயின் தங்க கதவுகள் திறக்கப்பட்டு , நான்கு ஆறுகளிலிருந்தும் வேண்டிய மட்டும் புகட்டுவேன் என்று இறைவன் கூறினான் .

மிஹ்ராஜ் விண்ணேற்றத்தின் போது, ஓரிடத்தில் ஒட்டகங்கள் சாரி சாரியாகச் செல்லவும் ,ஒட்டகங்கள் ஒவ்வொன்றின் மீதும் அதை ஓட்டுபவர் அமர்ந்திருக்கவும் அதன் இரு பக்கங்களிலும் தொங்கிக் கொண்டிருந்த இரு பொதிகளையும் பற்றி நபி (ஸல்) அவர்கள், வானவர் ஜிப்ரயீல் (அலை) அவர்களிடம் கேட்க,
"எனக்கு இது பற்றி யாதொன்றும் தெரியாது .நான் இங்கு வந்த காலத்திலிருந்து இவ்வாறுதான் சென்று கொண்டுள்ளது. தாங்கள் விரும்பின் இது பற்றி இறைவனிடமே கேளுங்கள்" என்று பதிலுரைத்தார்கள் .

அவ்வாறே நபி (ஸல்) அவர்கள் இறைவனிடம் அது பற்றி வினவ, இறை ஆணைப்படி அவ் ஒட்டகம் ஓட்டி தம் ஒட்டகத்தை நபி(ஸல்) அவர்களின் அருகே ஓட்டிச் சென்று அதன் இரு பக்கங்களில் தொங்கிக் கொண்டிருந்த பொதியில் ஒன்றை திறக்க அதில் ஒரு கோள வடிவ கிரகம் தென்பட்டது .
அக்கோளத்தை நபி (ஸல்) அவர்கள் முன் வைக்கப்பட்டு அதன் திறவுகோலையும் அவர்களின் கையில் கொடுக்க, நபி (ஸல்) அவர்கள் அதனைத் திறந்து கொண்டு உள்ளே சென்றனர்.
அங்கு குதிரையுடன் நின்று கொண்டிருந்த வீரர் ஒருவர் நபி(ஸல்) அவர்களுக்கு ஸலாம் உரைத்து, அக்குதிரையையும் அவர்களிடம் ஒப்படைத்தார். அதன் மீது ஏறி சென்ற நபி(ஸல்) அவர்கள் அங்கு நாடுகளும் கண்டங்களும், நகரங்களும் ,காடுகளும், கழனிகளும் இருப்பதையும், அங்கு மக்கள் இறைவனைத் துதித்துக் கொண்டும் , தம் மீது ஸலாவாத்து ஓதிக் கொண்டும் இருப்பதைக் கண்டு பெரும் வியப்பெய்தினர்.
இதிலிருந்து எண்ண முடியாத கோளங்களும் அவற்றில் மனிதர்களும் உள்ளனர். அவர்களுக்கும் நபி (ஸல்) அவர்களே நபியாகவும் ரஸூலாகவும் இருக்கிறார்கள் .
விஞ்ஞானிகளும் பிரபஞ்சத்திலுள்ள எண்ணிலடங்கா கோலங்களில் நம் பூமியை போன்று தட்ப வெப்ப நிலையை பெற்றுள்ள கோலங்கள் எத்தனை எத்தனையோ உள்ளன என்றும் அவற்றிலெல்லாம் நிச்சயம் மனித உற்பத்தி தோன்றியிருக்க வேண்டும் என்றும் அதில் மனிதர்கள் வாழ்ந்து கொண்டிருப்பார்கள் என்றும் கூறுகின்றனர்.
அண்ணலெம் பெருமானார் (ஸல் ) அவர்கள் அகில உலகங்களுக்கும் அருளப்பெற்ற அருட்பெருங்கொடை அன்றி வேறென்ன ?

وَمَاۤ اَرْسَلْنٰكَ اِلَّا رَحْمَةً لِّلْعٰلَمِيْنَ
(நபியே!) உங்களை அகில உலகத்தாருக்கு ஓர் அருளாகவேயன்றி நாம் அனுப்பவில்லை." (குர்ஆன் : 21:107)
ஆதாரம் : நபி ஸலவாத்தின் நற்பலன்கள் - அப்துற் - றஹீம்
விஞ்ஞானிகளும் பிரபஞ்சத்திலுள்ள எண்ணிலடங்கா கிரகங்களில் நம் பூமி போன்று தட்பவெப்ப நிலையைப் பெற்றுள்ள கிரகங்கள் எத்தனையோ உள்ளன என்றும் அவற்றில் நிச்சயம் மனித வாழ்வும் இருக்கும் என்றும் அவர்களைத் தேடிதான் வாயேஜர் 1, 2 விண்கலங்கள் விண்வெளிக்கு அனுப்பப்பட்டுள்ளது.
நபி (ஸல்) அவர்கள் திறந்து பார்த்த கிரகத்தை இன்ஷா அல்லாஹ் நம் வாயேஜர் விண்கலம் ஒரு சமயம் எட்டலாம். அக்கிரகவாசிகளின் தகவல் தொடர்பு நமக்கு கிட்டலாம் . அம்மக்களுக்கும் நபியாக வந்த நம் அண்ணலெம் பெருமானார் (ஸல்) அவர்களை ஜியாரத் செய்வதற்கு நம் பூமிக்குக் கூட வரலாம் ! ஒரு சமயம் நம் கண்களுக்கு தெரியாத அவர்கள் வந்து கொண்டும் போய் கொண்டிருக்கலாம் !

وَرَفَعْنَا لَكَ ذِكْرَكَ
உங்களுடைய கீர்த்தியையும் நாம் உயர்த்தினோம். (அல்குர்ஆன் : 94:4)
என்று அண்ணலெம் பெருமானார் ஸல்லல்லாஹு அலா முஹம்மது ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் புகழை பூலோகத்தில் மட்டுமல்லாமல் வேற்றுக் கிரகங்களிலெல்லாம் இறைவன் உயர்த்தி இருப்பது நம்மை இன்னும் வியப்பில் ஆழ்த்துகிறது !

ரஹ்மத் ராஜகுமாரன்

CALL - 9443446903
9360181033

## வாசனை திரவியங்கள்



பண்டைய நாகரீகங்களான மெசபடோமியா, எகிப்து காலகட்டங்களிலேயே வாசனைத் திரவியங்களை வேறு வடிவங்களில் பயன்படுத்தியுள்ளனர்.
கி.மு. 1580 _1085 ஆண்டுகளில் எகிப்தியர்கள் பண்டிகை காலங்களின் போது ஆண்கள், பெண்கள் இருவருமே வாசனை களிம்புகளை பயன்படுத்த ஆரம்பித்தனர். இது கிரீஸ், ரோம் மற்றும் இஸ்லாமிய நாடுகளுக்கும் பரவத் தொடங்கியது.

14 லூயி ஆட்சிக் காலத்தில் அவரது நீதிமன்றம் `வாசனைத் திரவிய நீதிமன்றம்’ என்றே அழைக்கப்பட்டது.
உடம்பில் மட்டுமல்லாது ஆடைகள், மின் விசிறிகள், பர்னிச்சர் பொருட்களிலும் வாசனைத் திரவியங்களை தெளித்திருந்தனர்.
18-ம் நூற்றாண்டில் யூ டி கோலன் (EAU DE COLOGNE) மேம்படுத்தப்பட்டது. எலுமிச்சை, ரோஸ்மெரி, பர்க்மாட் ஆகியவை வாசனைத் திரவியத்தில் பயன்படுத்தப்பட்டது
17- வது நூற்றாண்டில்தான் இதன் வளர்ச்சி வேகமாக இருந்தது. 1656-களில் வாசனைத் திரவியங்களை தயாரிப்பவர்கள் உருவாக தொடங்கினர். பிரான்ஸ் மக்கள் வாசனைத் திரவியங்களை அதிகமாக பயன்படுத்த ஆரம்பித்தனர்.

1709-ம் ஆண்டு ஜியோவானி மரியா பரினா என்ற இத்தாலிய வாசனைத் திரவிய தயாரிப்பாளர் கோலன் என்ற மிக பழமையான நகரத்தில் யூ டி கோலன் (EAU DE COLONGE) என்ற வாசனைத் திரவியத்தை அறிமுகப்படுத்தினார்.
இதன் மணத்திற்கு மிகப் பெரிய வரவேற்பு கிடைத்தது. அன்றைய காலக்கட்டத்தில் மிகப்பெரிய பணக்காரர்கள் மட்டுமே இதை பயன்படுத்தி உள்ளார்கள்.
பிரான்ஸில் கிராஸ் (GRASS) என்ற நகரம் உள்ளது. இந் நகரம் உலகின் வாசனைத் திரவியங்களின் தலைநகரம் என்று அழைக்கப்படுகிறது.

செயற்கைப் பொருட்கள் இல்லாமல் இயற்கை பொருட்களை கொண்டு இப்பகுதியில் தயாரிக்கப்படுவது கூடுதல் சிறப்பு.
பிரான்ஸில் வாசனைத் திரவியங்களை வைத்து நிறைய நாவல்களும் திரைப்படங்களும் எடுக்கப்பட்டுள்ளன.
கிட்டத்தட்ட 600 தொழிற்சாலைகள் இங்கு உள்ளது. உலக அளவில் உற்பத்தியிலும் தரத்திலும் முதலிடத்தில் வகிக்கிறது.
இங்குள்ள மொத்த தொழிற்சாலைகளின் ஆண்டு பரிவர்த்தனை 6000 லட்சம் யூரோவிற்கு மேல் என்று சொல்கிறார்கள்.

மத்திய தரைக்கடல் ஒட்டிய பகுதி என்பதால் மல்லிகை போன்ற மலரை அதிகம் வளர்க்க முடிகின்றது. ரோஜா, லில்லி ஆகிய மலர்களை கொண்டும் இங்கு வாசனைத் திரவியங்களை தயாரித்து வருகிறார்கள்.
பொதுவாக நாம் வாசனை திரவியங்களை அதிக பணம் கொடுத்து வாங்குவதில்லை. ஆனால் சர்வதேச அளவில் பிரபலமான வாசனைத் திரவியங்களின் விலை நமக்கு வியப்பூட்டுகிறது.

இந்தியாவின் மணக்கும் நகரம்'' என்று அழைக்கப்படுவது உத்தர பிரதேச மாநிலத்தில் உள்ள கனோஜ் என்ற நகரம்தான். ஏனென்றால் உலகத்தரம் வாய்ந்த வாசனைத் திரவியங்கள் பெருமளவு இங்கு தயாரிக்கப்படுகின்றன. 600-க்கும் மேலான வாசனை திரவியங்களை தயாரிக்கும் நிறுவனங்கள் இங்கு உள்ளன.
ஒருநாள் அலீ (ரலி) அவர்கள் தம் தோழர்கள் நோக்கி,"இந்தியாவின் மண் நறுமணமுள்ளதாக இருக்கிறதே அதற்கு என்ன காரணம் ? என்று வினவினர்.
அதற்கு அவர்கள் "தெரியாது" என்று கூறவே ,
"ஆதம் அலை அவர்கள் பூமிக்கு வரும் பொழுது அவர்களின் உடலில் சுவனத்து இலைகள் ஒட்டிக்கொண்டு இருந்தன. அவை பூமியின் காற்றால் பரத்தப்பட்டு கீழே விழுந்தன. விழும் பொழுது, இவை எந்த மரத்தில் போய் விழுந்தனவோ அவை நறுமணம் பெற்றுவிட்டன" என்றார்கள்.
"அந்த சுவனத்து இலைகள் எவை ?"
"இந்தியாவின் வாசனை பொருளான ஏலம், கிராம்பு, இலவங்கப் பட்டை" ஆகியவற்றை குறிப்பிட்டார்கள்

وَالْحَبُّ ذُو الْعَصْفِ وَالرَّيْحَانُ
" உமியால் மூடப்பட்ட தானியங்களும், வாசனைப்புற் பூண்டுகளும் உண்டாகின்றன" (அல்குர்ஆன் : 55:12)
பிறரை கவர்ந்து இழுக்க வேண்டும் என்ற எண்ணத்தில் நறுமணம் பூசுவதை இஸ்லாம் மார்க்கம் தடைசெய்துள்ளது.

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள் :
"ஒரு பெண் நறுமணத்தை பூசிக்கொண்டு தன் வாடையை (பிறர்) நுகர வேண்டும் என்பதற்காக ஒரு கூட்டத்தைக் கடந்து சென்றால் , அவள் விபச்சாரியாவாள்" - அபூ மூஸா (ரலி) நூல்: நஸயீ 5036
''பிறர் நுகர வேண்டும்'' _என்பதற்காக என்று நபி (ஸல் ) அவர்கள் கூறும் வார்த்தை கவனிக்கத்தக்கதாகும். தவறான எண்ணமில்லாமல் துர்நாற்றத்தைப் போக்குவதற்காக பூசுவது தவறில்லை என்பது இதிலிருந்து விளங்குகிறது.

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள் :
"எந்தப் பெண் நறுமண புகையை பயன்படுத்தினாரோ அவர் கடைசி தொழுகையான இஷாவில் நம்மிடம் கலந்து கொள்ளவேண்டாம் "_ அபூஹுரைரா (ரலி) முஸ்லீம் 675
நபி (ஸல்) அவர்களின் காலத்தில் பெண்கள் நறுமணத்தை பயன்படுத்தியுள்ளார்கள். இஷாத் தொழுகைக்கு வரும் போது மாத்திரம் நறுமணத்தை தவிர்த்துக் கொள்ளுமாறு பெண்கள் கட்டளையிடப்பட்டிருக்கிறார்கள்.
மற்றத் தொழுகைக்கு வரும் போதோ, அல்லது தொழுகை அல்லாத மற்ற நேரங்களிலோ, பெண்கள் நறுமணம் பூசக் கூடாது என்றோ அவர்கள் தடை விதிக்கப்படவில்லை.

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் எங்களிடம் வந்து (வீட்டில்) உறங்கினார்கள். அப்போது அவர்களுக்கு வியர்வை வெளிப்பட்டது. எனது தாய் ஒரு கண்ணாடிக் குடுவையை கொண்டுவந்து, அதில் நபி (ஸல்) அவர்களின் வியர்வை சேகரித்தார்கள் என் தாய் உம்மு சுலைமிடம் கேட்டதற்கு , "இது உங்களின் வியர்வை இது நறுமணங்களில் சிறந்த நறுமணமாக இருப்பதால், இதை நாங்கள் எங்களின் நறுமணத்துடன் சேர்த்துக் கொள்வோம்." - அனஸ் பின் மாலிக் (ரலி) முஸ்லீம் 4300

நறுமணத்தை போன்றே பூக்களையும் பிறரைக் கவரும் நோக்கத்தில் பயன்படுத்தக்கூடாது. தவறான எண்ணமில்லாமல் பூவின் அழகே விரும்பியோ, அதன் வாசனையே விரும்பியோ பூக்களைச் சூடிக் கொண்டால், அதில் தவறு ஏதும் இல்லை .
ஆனால் ஆண்களின் கவனத்தை ஈர்க்கும் விதத்தில் எந்த காரியத்தையும் ஒரு பெண் செய்யக்கூடாது என்பதால், பலரது கவனத்தை ஈர்க்கும் வகையில் அமைந்த அதிக நறுமணத்தை தருகின்ற வாசனை திரவியங்களை பெண்கள் தவிர்த்துக் கொள்ள வேண்டும்.

என்னைத் தேடி வந்து புத்தகங்களை அள்ளி தந்தவர்




நண்பர் M.M.P முஹ்யீத்தின் அப்துல் காதிர் அரூஸி இவர்களின் தகப்பனார் அல்ஹாஜ் எம்.எம்.பீர்முகம்மது சாகிப் (முஸ்லிம் லீக் எங்களூர் முன்னாள் MLA ) அவர்களின் அருந்தவப் புதல்வர். தைக்கா ஷுஐபு ஆலிம் பெருமகனார் எடுத்த வளர்த்த பிள்ளை .அவங்க மதரஸாவில் ஓதி அரூஸி பட்டம் பெற்ற ஆலிம் பெருந்தகை .
.... இப்படி எத்தனையோ பெருமைக்குரிய விஷயங்கள் அமையப் பெற்ற நண்பர் M.M.P முஹ்யீத்தின் அப்துல் காதிர் ஆருஸி அவர்கள் கடந்த டிசம்பர் மாதத்தில் என்னைப் பார்க்க வந்தவர், வரும் போதே புத்தகங்கள் அடுக்கப்பட்ட சின்ன மூட்டையை சுமந்து கொண்டு வந்தார்.

புத்தக மூட்டையில் பழைய புத்தகங்கள் முதல் புதுப்புத்தகங்கள் வரை சுமார் 20 புத்தகங்களை சிரமப்பட்டு சுமந்து வந்திருந்தார்.
என்னுடைய கட்டுரைகள் தொடர்ந்து படித்து வந்திருக்கிறார். பொள்ளாச்சியில் ஒரு ஜவுளி கடையில் வேலைப் பார்த்துக் கொண்டு, என்னைப் பார்க்க வேண்டும் என்று மூன்று வருடங்களாக முயற்சித்து, இப்போது என்னைப் பார்க்கிறார்.
அவரது கண்ணில் நட்பைக் காட்டிலும் ஒரு பாசப் பிணைப்பு தெரிந்தது . ஒரு சில மணி நேரத்தில் அவசரமாக கிளம்பியும் விட்டார்.
பொள்ளாச்சிக்கு அவர் போனப் பிறகு கூட கொரியலில் புத்தகங்கள் அனுப்பிக் கொண்டே இருக்கிறார் .எப்.எம் இப்ராஹீம் ரப்பானி எழுதிய இன்னுமா உறக்கம் ? என்கிற புத்தகம் தன் நண்பர் ஒருவரிடம் இருக்க, அவரிடமிருந்து வாங்கி 200 பக்கம் Xerox எடுத்து அனுப்பி வைத்திருக்கிறார்.
1932 பிரிண்ட்டான இயேசுவின் இரகசியம், ஆத்ம சோதனை , கஷ்புல் கஸ்ஸாலீ, அவ்ராதெ ஹபீப் ... போன்ற பொக்கிஷங்களையும் தேடித்தேடி அலைந்து அதனைப் பெற்று எனக்குத் தந்திருக்கிறார் .
"உங்களது ஆக்கப் பூர்வமான சிந்தனை பதிவுகளுக்கு என்னால் இயன்றதை செய்திருக்கிறேன்" என்று சொல்லும்போது அவரது கண்ணியம் தெரிகிறது .

ஒரு மனிதன் எத்தகைய நூல்களைப் படிக்கிறான் என்பதைப் பொறுத்தே அவனது வாழ்க்கையின் பாதை நிர்ணயிக்கப்படுகிறது.
வாசிப்பு ஒருவனை எப்போதும் தயாராக இருப்பவனாக உருவாக்குகிறது என்று பிரான்சிஸ் பேகன் என்ற அறிஞர் கூறியது போல் நூல்களைத் துணையாகக் கொள்பவருக்கு நேரம் போகவில்லை என்ற பேச்சுக்கே இடம் இல்லை. நேரம் போதவில்லை என்று வேண்டுமானால் எண்ணம் வரலாம்.

எழுதப்படிக்கத் தெரியாதவராக இருந்தாலும் அக்பர் தன் அவையில் நல்ல நூல்களை வாசிக்கச் சொல்லி கேட்டதன் விளைவே அவரை சான்றோராக்கியது.
கிரேக்கநாட்டுச் சிந்தனையாளர் சாக்ரடீசுக்கு மரணதண்டனை விதிக்கப்பட்டு நஞ்சு தனக்குக் கொடுக்கப்படும் வரை படித்துக் கொண்டே இருந்தாராம்.

நேரு தன் மறைவிற்குப் பின் தன் சடலத்தின் மீது மலர்களுக்குப் பதிலாகபுத்தகங்களையே வைக்கச் சொன்னார். இது போல் பேரறிஞர் அண்ணா அவர்கள் புற்று நோயால் பாதிக்கப்பட்டு மருத்துவமனையில் அனுமதிக்கப்பட்ட சமயம் அறுவைச் சிகிச்சை அன்று தான் படித்த புத்தகத்தின் சில பக்கங்கள் பாக்கி இருப்பதால் அதை முடிக்கும் வரை உயிர் காக்கும் அறுவைச் சிகிச்சையைத் தள்ளி வைக்கச் சொன்னார்.

ஒரு முறை எட்டயபுர மகாராஜாவுடன் சென்னைக்கு சென்ற சுப்ரமணிய பாரதியார், மனைவியிடம் நான் திரும்பிவரும் போது வீட்டிற்குத் தேவையான பொருட்களை வாங்கி வருகிறேன் என்று கூறிச் சென்றார். ஆனால் ராஜா கொடுத்த பணத்தில் மூடை மூடையாய் புத்தகங்கள் வாங்கி வந்துவிட்டார். கோபமாய்ப் பார்த்த மனைவியிடம் “செல்லம்மா! அழியும் பொருளைக் கொடுத்து அழியாத செல்வத்தைக் கொண்டு வந்துள்ளேன்” என்று கூறிச் சமாதானம் செய்தார்.

அனைத்து வாழ்க்கை அனுபவங்களையும் தனிமனிதன் தானேபட்டுதான் பெறவேண்டும் என்றால் அவனது வாழ்க்கை போதுமானதாக இருக்காது. மற்றவர்களின் வாழ்க்கையில் இருந்து பாடம் பெறுவதுதான் அவர்களின் அறிவுரைகளை ஏற்று நடப்பதுதான் சிறந்த வாழ்க்கை முறையாக இருக்கும்.'துப்பாக்கியிலிருந்து வெளியேறும் தோட்டாவை விட வீரியமான ஆயுதம் புத்தகம்'என்பார் மார்டின் லூதர்கிங்.

## இஸ்லாத்தில் இசை 1



இசையைப் பற்றி கடந்த 2021- மே மாதம் FB - ல் இருபதுக்கும் மேற்பட்ட ஆய்வுப் பதிவுகள் பதிந்திருந்திருக்கிறேன். இருப்பினும், இசை, பாடல் உட்பட அழகியல் கலைகள் பற்றிய இஸ்லாமியப் பார்வையைத் தெளிவாகவும் இரத்தினச் சுருக்கமாகவும்" டாக்டர் முஹம்மத் இமாரா " ( 8 டிச 1931 - 28 பிப் 2020 ) என்கிற எகிப்து நாட்டு ஆய்வாளர் மிக அழுத்தம் திருத்தமாக அழகியல் ரீதியில் ஆய்வு செய்துள்ளார்.
எகிப்தில் பிறந்த இவர் அரபுலகின் முக்கிய இஸ்லாமியச் சிந்தனையாளர்; எழுத்தாளர்; திறனாய்வாளர்; அல்முஜ்தமஃ இஸ்லாமிய இதழின் பத்தி எழுத்தாளர். அல்அஸ்ஹர் பல்கலைக்கழகத்தின் ஆய்வுகள் ஒன்றியத்தின் முக்கிய உறுப்பினர்.

இஸ்லாத்தின் நடுநிலைச் சிந்தனையைக் கடைப்பிடிக்கும் இவர்,, இஸ்லாத்தின் பல்துறை சார்ந்து நூற்றுக்கும் மேற்பட்ட புத்தகங்களை எழுதியுள்ளார்.
இஸ்லாம் அழகியலுக்கு எதிரானதா ? பலரும் புரிந்து கொண்டிருப்பது போலல்லாமல் அழகியல் குறித்த இஸ்லாத்தின் பார்வை மிக விரிவானது; தாராளத்தன்மை வாய்ந்தது என்பதை ஆதாரப்பூர்வமான கருத்துகளின் மூல புரிந்து கொள்ள வைக்கிறார்.
இசையும் பாடலும் ஏனைய அழகியல் கலைகளும் மனிதர்களை முழுமையாக ஆக்கிரமித்துள்ளன. அவை அழிவின் பக்கம் அழைத்துச் சென்று கொண்டிருக்கும் இக்காலத்தில் அவற்றை ஆக்கப்பணிகளில் எவ்வாறு ஈடுபடுத்த முடியும் என்பதற்கான வழிகாட்டுதல்களாக இவரது ஆய்வு முன்வைக்கின்றது.
அவை முஸ்லிம்களுக்கு மட்டுமல்ல,முழு மனித குலத்துக்குமான இஸ்லாத்தின் ஒளிமிக்க வழிகாட்டுதல்கள் என்றால் அது மிகையல்ல.
அவரது புத்தகங்கள் துருக்கி, உர்து, ஆங்கிலம், ரஷ்யா, ஜெர்மன் போன்ற மொழிகளில் பெயர்க்கப்பட்டுள்ளதோடு பல விருதுகளையும் பெற்றிருக்கின்றன.
உலகளாவிய முஸ்லிம் சமுதாயத்தின் ஒற்றுமையைப் பாதுகாப்பதிலே அவரது சிந்தனைகளும், அவரது எழுத்துகளும் அதிக கவனம் செலுத்துகின்றன.
அவருடைய எழுத்துக்கள் தர்க்க ரீதியாக, ஆழமான உள்ளடக்கத்தோடு விமர்சனக் கண்ணோட்டத்தில் அமைந்திருப்பது குறிப்பிடத்தக்கது.
இவரது இசையைப் பற்றிய அரபு ஆய்வை தமிழில் அழகாக மொழியாக்கம் செய்துள்ளார் அஷ்ஷெய்க் தாரிக் அலீ.
இந்நூலிருந்தும், மேலும் இஸ்லாமிய இலக்கியக் கழகம் வெளியிட்டுள்ள இமாம் கஸ்ஸாலி (ரஹ்) அவர்களின் "இஸ்லாமும் இன்னிசையும் " தமிழில் முஹம்மது கௌஸ் எழுதியுள்ள நூலிருந்தும் ,
மற்றும் பல இசை ஆய்வாளர்களின் சொற்பொழிவிலிருந்தும் ,வலை வீசி பெறப்பட்ட வலை தளத்தின் பல விஷயங்களையெல்லாம் தொகுத்து இன்ஷா அல்லாஹ் உங்களுக்கு வழங்க இருக்கிறேன்.

**இஸ்லாத்தில் இசை 2**
**( இசை - லஹ்வு என்னும் கேளிக்கை)**



பாடல் என்பது (குரல்) பேச்சு, சந்தம், இசை ஆகியவற்றின் இணைப்பாகும். இஸ்லாமியச் சட்டப் பாரம்பரியத்தில் நபிவழியிலும் சட்ட விளக்கத்திலும் (ஃபிக்ஹ்) சிந்தனைப் பரப்பிலும் 'பாடல்' பற்றி - பல சொல்லாடல்களை அடிப்படையாகக் கொண்டு பேசப்பட்டுள்ளது. அவற்றில் லஹ்வு (கேளிக்கை) ஸமாஉ (பாடல் கேட்டல்) ஆகிய சொல்லாடல்கள் மிக முக்கியமானவை.
பாடலைக் குறிக்க "லஹ்வு" - கேளிக்கை என்ற பதத்தைப் பயன்படுத்தியிருப்பது நவீனகால மனிதர்களிடம் அதுகுறித்த எதிர்மறையான கருத்தையே உருவாக்குகிறது. அதாவது பாடல் என்பது வெறுக்கத்தக்கது (மக்ரூஹ்) அல்லது தடை செய்யப்பட்டது (ஹராம்) என்ற பதிவையே ஏற்படுத்தியிருக்கின்றது.
உண்மையில் இஸ்லாத்தின் ஆதாரப்பூர்வமான சரியான கருத்து அதுவன்று. எனவே, லஹ்வு - கேளிக்கை என்ற சொல்லின் சரியான கருத்து என்ன என்பதை நீங்கள் முதலில் அறிந்துகொள்ள வேண்டும்.
குறிப்பாகப் பாடல் குறித்து வந்துள்ள நபிமொழிகள் "லஹ்வு" என்னும் தலைப்பிலேயே நபிமொழித் தொகுப்புகளில் பதிவுசெய்யப்பட்டுள்ளன. குர்ஆனிலும் லஹ்வு என்ற பதம் கையாளப்பட்டுள்ளது. ஆனால், அதன் உண்மையான கருத்து என்ன?

அரபு மொழி வழக்கில் லஹ்வு - கேளிக்கை என்பது சிறந்தவற்றை அல்லது வணக்க வழிபாடுகளை அல்லது நன்மைகளை விட்டும் மனிதனைத் திசைதிருப்பி விடுகின்ற விஷயங்கள் எனத் திட்டவட்டமாகப் பொருள் கொள்ள முடியாது.
உண்மையில் லஹ்வு கேளிக்கை என்பது மனிதனுடைய கவனத்தை ஒன்றிலிருந்து பிறிதொன்றின்பால் திருப்பிவிடுகின்ற விஷயங்களாகும்.
இப்னு மன்ழூர் எழுதிய லிஸானுல் அரப் எனும் அகராதி இதனைப் பின்வருமாறு விளக்குகிறது: லஹ்வு என்பது உன்னை (தன்னில்) ஈடுபடுத்துகின்ற, (தன்பால்) உன்னை ஈர்த்துக் கொள்கின்ற, உனது கவனத்தைத் திருப்பிவிடுகின்ற ஆசைகள்,இன்பங்கள் போன்றவையாகும்.
அரபு மொழியில் லஹைது அனிஷ் ஷைஇ என்றால் ஒன்றைவிட்டும் கவனத்தைத் திருப்பிக் கொண்டேன். அதனை மறந்துவிட்டேன்; புறக்கணித்து விட்டேன் எனப் பொருள்படும்.
"லஹதில் மர்அது இலா ஹதீஸில் மர்அதி தல்ஹு லஹுவன்" என்றால் ஒரு பெண் இன்னொரு பெண்ணோடு பேச்சில் ஈடுபட்டு அதனால் ஈர்க்கப்பட்டாள் என்பது பொருளாகும்.
எனவே, லஹ்வு என்பது ஒன்றில் ஈடுபட்டு அதனால் கவரப்படுவதைக் குறிக்கும். மேலும் அது திருமணம், பெண்கள், குழந்தைகள் ஆகிய வாழ்வின் அலங்காரங்கள் என்ற கருத்தையும், முக்கியமாக உடலுறவு என்ற கருத்தையும் மொழி ரீதியாகத் தரும்.

குர்ஆனின் பயன்பாட்டில் 'லஹ்வு' என்பதன் கருத்து குர்ஆனிலும் இச்சொல் இவ்விதமே கையாளப்பட்டிருக்கின்றது. அதாவது ஆகுமாக்கப்பட்ட மனித நடவடிக்கைகளில் ஒன்றாகவே குர்ஆன் கேளிக்கையை நோக்குகின்றது. ஆனால், அது (லஹ்வு கேளிக்கை) மனிதனைக் கட்டாயக் கடமைகளை விட்டும் (பர்ளு. வாஜிப்) அத்தியாவசியமான திசை திருப்பிவிடக் கூடாது என்று குர்ஆன் குறிப்பிடுகிறது.
கட்டாயக் கடமைகள், அத்தியாவசியச் செயல்கள், ஆகுமாக்கப்பட்ட விஷயங்கள் ஆகியன பற்றிப் பேசுகின்ற குர்ஆன் வசனங்கள் முறையே ஜும்ஆ தொழுகை, வியாபாரம், பூமியில் திரிதல், இறை அருட்கொடைகளைத்

தேடிக்கொள்ளல், அல்லாஹ்வை நினைவுகூர்தல் (திக்ர்), கேளிக்கைகளில் ஈடுபடல் என்பன பற்றிப் பேசி இந்தச் செயல்களுக்கு அவற்றுக்குரிய பெறுமானத்தை, நேரத்தை வழங்கும்படி பணிக்கின்றன.
இவ்வாறு அவற்றுக்குரிய பெறுமானத்தை வழங்காமல் விடுவதை அல்லது கட்டாயக் கடமைகளைப் புறக்கணித்துவிட்டு ஆகுமானவற்றில் ஈடுபடுவதைக் குர்ஆன் கண்டிக்கின்றது:
" நம்பிக்கை கொண்டவர்களே! ஜும்ஆ உடைய நாளில் தொழுகைக்காக நீங்கள் அழைக்கப்பட்டால், வியாபாரத்தை விட்டுவிட்டு, அல்லாஹ்வைத் தியானிக்க (பள்ளிக்கு) விரைந்து செல்லுங்கள் - நீங்கள் அறிபவர்களாக இருப்பின் இதுவே உங்களுக்கு மிக மேலான நன்மையுடையதாகும்.
பின்னர், (ஜும்ஆ) தொழுகை நிறைவேற்றப்பட்டு விட்டதும், (பள்ளியிலிருந்து வெளிப்பட்டு) பூமியில் பரவிச் சென்று அல்லாஹ்வுடைய அருளைத் தேடிக்கொள்ளுங்கள்; அன்றியும், நீங்கள் வெற்றியடையும் பொருட்டு, அல்லாஹ்வை அதிகமதிகம் தியானம் செய்யுங்கள்.
இன்னும், (நபியே!) அவர்களில் (சிலர்) ஒரு வியாபாரத்தையோ, ஒரு வேடிக்கையையோ கண்டால், அதன்பால் சென்று விடுகின்றனர். மேலும், நின்றவண்ணமே உம்மை விட்டு விடுகின்றனர்; அல்லாஹ் இடத்தில் இருப்பது, வேடிக்கையை விடவும் வியாபாரத்தை விடவும் மிகவும் மேலானதாகும்; மேலும் அல்லாஹ் உணவளிப்பவர்களில் மிகவும் மேலானவன் என்று (நபியே!) நீர் கூறுவீராக. (குர்ஆன் 62:9-11)

வணிகத்தில் ஈடுபடுவது தடைசெய்யப்பட்டதல்ல. ஆனால், அது நம்மை ஜும்ஆ தொழுகையை நிறைவேற்றுவதை விட்டும் திசைதிருப்பி விடுவது தடைசெய்யப்பட்டதாகும்.
பூமியில் திரிந்து அல்லாஹ்வின் அருட்கொடைகளைத் தேடிக்கொள்வது இன்றியமையாத கடமைகளில் ஒன்றாகும். ஆனால், அதற்குரிய நேரம் கடமையான தொழுகைக்குரிய நேரமல்ல. வணிகமும், கேளிக்கைகளும் ஆகுமான (முபாஹ்) செயல்களாகும். ஆனால், அவை மனிதனை ஜும்ஆ தொழுகையை விட்டும் திசைதிருப்பிவிடக்கூடாது.
எனவே, லஹ்வு - கேளிக்கை அதாவது மகிழ்ச்சியை அனுபவிப்பது என்பது இங்கு வணிகம், பூமியில் திரிதல், அல்லாஹ்வின் அருட்கொடைகளைத் தேடிக்கொள்ளல் ஆகிய இன்றியமையாத, ஆகுமாக்கப்பட்ட செயல்களோடு இணைத்துக் கூறப்பட்டுள்ளது.
கேளிக்கையானது ஒன்றிலிருந்து பிறிதொன்றுக்கு மனிதனின் கவனத்தைத் திருப்பிவிடுகின்ற விஷயமாக இருந்தால், குர்ஆன் அதனைத் தடைசெய்யாது. ஏனெனில், அது தன்னளவில் ஹராமானதல்ல (தடை செய்யப்பட்டதல்ல). கடமைகளைப் புறக்கணிக்கும்படி தூண்டினால்தான் அது ஹராமாக மாறும்.
இங்கு குர்ஆன் கேளிக்கை என்பதை ஆகுமாக்கப்பட்ட (முபாஹ்), இன்றியமையாத (ழரூரா), கடமையான (பர்ளு/வாஜிப்) விஷயங்களோடு இணைத்துக் கூறியுள்ளது.
அதன்மூலம் குர்ஆன் மனித வாழ்வில் ஒரு பரந்த சமநிலையைத் தோற்றுவிக்கவே விரும்புகின்றது. அதாவது மனிதன் கடமைகளையும் இன்றியமையாத செயல்களையும் நிறைவேற்றி தனது தேவைகளை முழுமைப்படுத்திக் கொண்டு அனுமதிக்கப்பட்ட (ஆகுமாக்கப்பட்ட) இன்பங்கள் புதுப்பித்துக்கொள்ள வேண்டுமென குர்ஆன் எதிர்பார்க்கின்றது
கடமையில்லாத (உபரியான) தொழுகைகள் மனிதனை இன்றி அது மார்க்கத்தில் தீவிரத்தைக் கடைப்பிடிப்பதாக அமையும். அவ்வாறே இன்றியமையாத செயல்கள் கடமைகளை விட்டும் அவனது கவனத்தைத் திருப்பிவிடுவதும் கூட தீவிரவாதமாகும்

இறைந்தாதர் (ஸல்) அவர்கள் கூறியதாக ஜாபிர் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்: 'யார் அல்லாஹ்வையும் மறுமைநாளையும் நம்புகின்றாரோ அவர் வெள்ளிக்கிழமைகளில் ஜும்ஆ தொழுயை நிறைவேற்ற வேண்டும். ஆனால், அவர் ஒரு நோயாளியாக/பயணியாக/ பெண்ணாக/சிறுவனாக/அடிமையாக இருந்தால், அவருக்கு ஜும்ஆ கடமையில்லை.

யார் ஒரு கேளிக்கையின் காரணமாக அல்லது வியாபாரத்தின் காரணமாக ஜும்ஆ தொழுகையைப் புறக்கணிக்கின்றாரோ அல்லாஹ்வும் அவரைப் புறக்கணித்துவிடுவான். அல்லாஹ் படைப்புகளிடமிருந்து எவ்விதத் தேவைகளுமற்றவன். மிகவும் புகழுக்குரியவன்.
இந்த நபிமொழியின்படி யார்மீது ஜும்ஆ தொழுகை
கடமையாகின்றதோ அவர் வியாபாரத்தையும், கேளிக்கையையும் - ஜும்ஆ தொழுகைக்குரிய நேரத்தில் - விட்டுவிட வேண்டும். ஆனால், ஜும்ஆ தொழுகை கடமையில்லாத பெண்கள், நோயாளிகள், பயணிகள், சிறுவர்கள் ஆகியோர் அந்நேரத்தில் ஆகுமான வேறு செயல்களில் ஈடுபடலாம்.

ஆதார நூல்கள் :
1 தாரகுத்னி பதிவுசெய்துள்ளார். பார்க்க: இமாம் அல்குர்துபியின் அல்ஜாமிஉ லிஅஹ்காமில் குர்ஆன், பாகம் 18, பக்கம்: 103. கெய்ரோ: தாருல் குதுப் அல் மிஸ்ரிய்யா வெளியீடு.
2 அல்ஜாமிஉ லிஅஹ்காமில் குர்ஆன், பாகம் 18, பக்கம்: 107

## இஸ்லாத்தில் இசை 3
## ( குயிலோசையை தடுப்பது எது ? )



பாடல் என்பது சந்தங்களையும் இசைவான ஓசைகளையும் இணைத்து மெருகூட்டப்பட்ட அழகிய தொனியாகும். இஸ்லாமியச் சிந்தனையானது, பாடலை மனித இயல்பு என்றே நோக்குகிறது.
பறவைகளிலும் மரங்களிலும் அல்லாஹ் ஏற்படுத்தியுள்ள படைப்பு நுட்பங்களிலொன்றைப் பாடல் மூலம் மனிதன் பிரதிபண்ணுகிறான். மனிதனின் தொண்டையிலிருந்து வெளிவரும் அழகிய ஓசையானது குயில் போன்ற பறவைகளின் தொண்டைகளிலிருந்து வெளிவரும் அழகிய ஓசைகளை ஒத்ததாகும்.
இசைக்கருவிகளால் மனிதன் உருவாக்குகின்ற அழகிய இசைவான சந்தங்கள், காற்றும், தென்றலும் பட்டு தோட்டங்களிலும் தோப்புகளிலும் உள்ள மரங்களின் கிளைகளும் இலைகளும் உருவாக்குகின்ற இசைகளுக்கு ஒப்பானவையாகும்.
எனவே, பறவைகளின் தொண்டைகளிலிருந்து வெளிவரும் அழகிய ஓசைகள் 'தடுக்கப்பட்டவை' என்று மனித அறிவோ அவனது இயல்போ, இஸ்லாம் மார்க்கமோ கூறாதபோது மனிதனின் தொண்டையிலிருந்து வெளிவரும் ஓசைகள் மாத்திரம் தடுக்கப்பட்டவை என்று கூறுவது எப்படி நியாயமாகும்?
ஏனெனில், மனிதர்களுடைய தொண்டைகளுக்கும் பறவைகளுடைய தொண்டைகளுக்குமிடையில் எவ்வித வேறுபாடும் இல்லை.
அவ்வாறே ஒன்றுக்கொன்று முரணான, வெறுப்புக்குரிய ஓசைகளும், சந்தங்களும் தடைசெய்யப்படவில்லையென்றால், அழகாகவும், விரும்பத்தக்கதாகவும், முரண்பாடின்றியும், இசைவாகவும் இருக்கின்ற சில ஓசைகள் மட்டும் தடுக்கப்பட்டவை என்று கூறுவது எப்படி நியாயமாகும்?
இஸ்லாம், மனித இயல்புக்கேற்ற மார்க்கம் என்ற வகையில் முஸ்லிமின் அறிவானது பாடல், இசை குறித்து இத்தகையதொரு கண்ணோட்டத்துக்குத்தான் இயல்பாக வரும்.
இந்த இயல்பு நியாயத்தை இமாம் கஸ்ஸாலி (ரஹ்) - (1058 – 19 டிசம்பர் 1111),அவர்கள் பின்வருமாறு விளக்குகிறார்:
ஓசைகளின் அடிப்படை - அவை உருவாகுமிடம் - பிராணிகளின் தொண்டைகளாகும். ஊதுகுழல்கள் (இசைக்கருவிகள்) தொண்டைகள் எழுப்பும் ஓசைகள்மீது வைக்கப்பட்டுத்தான் இசையும் பாடலும் உருவாக்கப்படுகின்றன.அது அல்லாஹ் உருவாக்கிய, படைத்த ஒரு விஷயத்தோடு மனிதர்கள் ஒப்பீடு செய்யும் ஒரு முயற்சியாகும்.

அல்லாஹ்வின் அந்தப் படைப்பு நுட்பத்திலிருந்து தான் மனிதர்கள் கற்றுக்கொள்கிறார்கள். அல்லாஹ்வின் படைப்பையே மனிதர்கள் முன்மாதிரியாகக் கொள்கிறார்கள். எனவே, இத்தகைய ஓசைகள் சிறந்தவையாக, ஒழுங்கானவையாக இருக்கின்றன என்பதற்காக அவற்றைச் செவிமடுப்பது தடுக்கப்பட்டதாக இருக்க முடியாது. குயிலின் ஓசையும் ஏனைய பறவைகளின் ஓசைகளும் தடுக்கப்பட்டவையே என்று கூறுவோர் யாருமில்லை. எனவே, (பறவைகளின்) தொண்டைக்கும் (மனித) தொண்டைக்கும் இடையிலும், சடப்பொருளுக்கும் பிராணிகளுக்குமிடையிலும் இவ்விஷயத்தில் வேறுபாடுகள் இல்லை
.
ஆகையால் குயிலின் ஓசையோடு மனிதனின் தொண்டையிலிருந்தும் ஏனைய உறுப்புகளிலிருந்தும் வெளிவரும் ஓசைகளை ஒப்பிட முடியும். அதாவது மனிதத் தொண்டையிலிருந்து வெளிவரும் ஓசைகளும் தடிகள், மத்தளம், ரபான் போன்ற கருவிகள் மூலம் வெளிவரும் ஓசைகளும் ஒன்றே.
ஒரு பொருளுமற்ற குயிலின் குரலைக் கேட்டு மனிதன் இன்புறும்போது , பொருள் சுவைமிக்க , நல்லறிவு புகட்டும் ஓசையை (கவிதையை) அவன் கேட்கக் கூடாதா ?
ஆதார நூல்கள் :
1 ) இஹ்யாஉ உலூமித்தீன் , பக்கம் 1126 , கெய்ரோ , தாருஷ் ஷஃப் வெளியீடு

**இஸ்லாத்தில் இசை 4**
**நம்பிக்கையாளர்களின் தாய் ஆயிஷா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்:**

'ஒருநாள் எனது வீட்டில் இரண்டு சிறுமிகள் புஆஸ் பற்றிய பாடல்களைப் பாடிக் கொண்டிருந்தபோது, இறைத்தூதர் (ஸல்) வீட்டினுள் நுழைந்து தமது விரிப்பில் சாய்ந்து தமது முகத்தைத் திருப்பிக் கொண்டிருந்தார்கள் அப்போது அங்கே வந்த அபூபக்கர் (ரலி) என்னைக் கடிந்து, அல்லாஹ்வின் தூதருக்கு முன்னிலையில் ஷைத்தானின் இசைக்கருவிகளை இசைப்பதா? என்று கேட்டார்.
அப்போது அபூபக்கரிடம் நபியவர்கள் 'சிறுமிகள் இருவரையும் பாட்டுப்பாட விட்டுவிடுங்கள்' என்று கூறினார்கள்.
இப்போது நமக்கு எதிரில் நபியவர்களின் செயல்சார்ந்த வழி காட்டுதல் இருக்கிறது. நபிகளாரின் வீட்டில் இரண்டு யுவதிகள் பாடுவதையும், அப்பாடலை ஆண்கள் கேட்பதையும் இங்கே நபியவர்கள் அனுமதித்திருக்கிறார்கள்.
அத்தோடு அந்த யுவதிகள் இருவரும் ஜாஹிலிய்யாக் காலத்தில் நடைபெற்ற போர்களைப் பற்றிய பாடல்களையே பாடியுள்ளனர்.

அதனை அபூபக்கர் (ரலி) ஆட்சேபித்து தடைசெய்ய முற்பட்டபோது, நபியவர்கள் அவரைகளைத் தடுத்து இத்தகைய பாடல்கள் ஆகுமானவையென வலியுறுத்தியிருக்கிறார்கள்.
அப்படியானால் பாடல் இசைத்த அவ்விரு யுவதிகளை விட்டும் நபியவர்கள் தமது முகத்தைத் திருப்பிக் கொண்டது ஏன்? பார்வையைத் தாழ்த்திக்கொள்ளுதல் என்ற அடிப்படையில் செய்யப்பட்டதேயன்றி பாடல் கேட்பதைவிட்டும் தமது காதுகளை மூடிக்கொள்வதற்காக அல்ல.
அத்தோடு இந்த நபிமொழியின் அறிவிப்பாளர்களில் எந்தவொருவரைப் பற்றியும் நபிமொழித்துறை அறிஞர்கள் எவ்விதக் குறையையும் கூறவில்லையென்பதும் இங்கு கவனத்தில் கொள்ளத்தக்கதாகும்.
இதே நபிமொழியில் மேற்படி கருத்தை முழுமைப்படுத்தும் வகையில் நபியவர்களின் நடைமுறை வாழ்விலிருந்து இரண்டாவது நிகழ்வையும் ஆயிஷா (ரலி) அறிவிக்கிறார்:
'அது ஒரு பெருநாள் தினம். ஹபஷி நாட்டவர்கள் தோலினால் செய்யப்பட்ட மத்தளங்களையும்,ஈட்டிகளையும் கொண்டு பள்ளிவாசலில் சில விளையாட்டுகளில் ஈடுபட்டனர். அதுபற்றி நான் நபியவர்களிடம் சொன்னபோது, 'நீ அதைப் பார்க்க விரும்புகிறாயா ?' என்று கேட்டார்கள். நான் 'ஆம்' என்றேன். பின்னர் நபியவர்கள் எனது கன்னம் அவருடைய கன்னத்தின் மீது படும்படி என்னை அவருக்குப் பின்னால் நிற்க வைத்து அவருடைய ஆடைகளால் என்னை மறைத்துக்கொண்டார்கள்.

ஹபஷி நாட்டவர்கள் நடனமாடி விளையாடியதை நான் ஆவலுடன் பார்த்தேன். அப்போது அங்கு வந்த உமர் (ரலி) அந்த சாகசக்காரர்களை விரட்டினார்கள்.
உடனே நபியவர்கள் ஹபஷி நாட்டவர்களைப் பார்த்து, "அர்ஃபதாவின் பிள்ளைகளே! நீங்கள் பயப்பட வேண்டாம். உங்கள் சாகசங்களை நிறுத்தவேண்டாம்' என்று கூறினார்கள்.
எனவே, அவர்களின் சாகச விளையாட்டுகள் தொடர்ந்தன. அவற்றைப் பார்த்து நான் சலித்து விட்டபோது நபியவர்கள் என்னிடம் 'போதுமா ?' என்று கேட்டார்கள். நான் 'ஆம்' என்றதும் என்னை வீட்டுக்கு அனுப்பினார்கள்.
இங்கு நடைமுறை சார்ந்த ஒரு நபிவழி, விளையாட்டை -
பாட லுடன் கூடிய நடிப்பையும், நடனத்தையும் - அங்கீகரித்திருப்பதை நாம் பார்க்கிறோம். சில அறிவிப்புகளின்படி அந்த ஹபஷிகள் பின்வரும் கவிதையையும் பாடினார்கள்:
"இரவு நேரத்தில்
திரும்பிச் செல்கின்ற விருந்தாளியே!
அப்துத்தார்களின் குடும்பத்தைக்
கடந்து நீ செல்லக்கூடாதா?
அவர்களது விருந்தை நாடி
அவர்களைக் கடந்து செல்லக்கூடாதா?
அவ்வாறு சென்றால் அவர்கள் உன் களைப்பிலிருந்தும்
உன் வறுமையிலிருந்தும் உன்னைப் பாதுகாப்பார்கள்".
வேறுசில அறிவிப்புகளில் அந்த ஹபஷி நாட்டவர்கள் நடனமாடினார்கள் என்றும், இன்னும் சில அறிவிப்புகளில் அவர்கள், 'முஹம்மத் (ஸல்) சிறந்த இறை அடியார்' என்று கூறிய வண்ணம் நபியவர்களுக்கு முன்னிலையில் நடனமாடினார்கள் எனவும் அறிவிக்கப்பட்டுள்ளது.

---

ஆதாரங்கள் :
இது அவ்ஸ் கோத்திரத்தினருக்குச் சொந்தமான ஒரு கோட்டை. ஜாஹிலிய்யாக் காலப் போர்களில் ஒரு போர் இங்கு நடந்தது. அதில் அவ்ஸ் கோத்திரத்தினர் கஸ்ரஜ் கோத்திரத்தினரை வெற்றி கொண்டனர்.
இந்த நபிமொழியை இமாம் அஹ்மத் (ரஹ்) அவர்கள் அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்களிடமிருந்து பதிந்திருக்கிறார். மேலும் இமாம் நஸாஈ (ரஹ்) அவர்கள் அபூஹுரைரா (ரலி) அவர்களிடமிருந்து 'ஈட்டிகளால் விளையாடுதல்' என்ற தலைப்பின் கீழ் பதிந்திருக்கிறார்.

## இஸ்லாத்தில் இசை 5
## ( பாடுவதைக் கேட்பது )

இமாம் நஸாஈ (ரஹ்) அவர்கள் பதிவு செய்துள்ள மற்றொரு நபிமொழியில் அஸ்ஸாஇப் பின் யஸீத் (ரலி) அறிவிக்கிறார்கள் :
"நபியவர்களிடம் ஒரு பெண் வந்தாள். அப்போது நபியவர்கள் ஆயிஷா (ரலி) அவர்களைப் பார்த்து,
''ஆயிஷாவே, இது யார் என்று உனக்குத் தெரியுமா?' எனக் கேட்டார்கள்.
அதற்கு ஆயிஷா (ரலி) 'அல்லாஹ்வின் தூதரே, எனக்குத் தெரியாது' என்றார்கள்.
பின் நபியவர்கள் 'இப்பெண் ஒரு பாடகி. நீ விரும்பினால் அவர் உனக்குப் பாடிக்காட்டுவார்' என்றார். பின்னர் அப்பெண் ஒரு பாடலைப் பாடிக் காட்டினாள்.

அந்நிய ஆண்களுக்காகவும், பெண்களுக்காகவும் பாடல் இசைப்பதைத் தொழிலாகக் கொண்டிருந்த ஒரு பெண்ணை நபியவர்கள் ஆயிஷாவுக்கு அறிமுகப்படுத்தி, அவளது பாடலையும் கேட்கச் செய்திருக்கின்றார்கள். அப்பெண்ணும் நபியவர்களுக்கு முன்னிலையில் பாடிக் காட்டியிருக்கிறாள்.
எனவே, பாடல் இசைப்பது ஆகுமானது, விரும்பத்தக்கது என்ற நடைமுறை தொடக்ககால இஸ்லாமியச் சமூகத்தில் பரவலாக இருந்திருக்கின்றது.
இமாம் நஸாஈ (ரஹ்) அறிவிக்கும் மற்றொரு நபிமொழியில் ஆமிர் பின் ஸஃத் (ரலி) கூறுகிறார்கள்:
"கர்ழா பின் கஅப் (ரலி), அபூ மஸ்ஊத் அல் அன்ஸாரி (ரலி) ஆகியோரின் வீட்டுக்கு ஒரு திருமணத்திற்காகச் சென்றிருந்தேன். அப்போது அங்கே சில யுவதிகள் பாடிக் கொண்டிருந்தனர்.
உடனே நான் தோழர்களைப் பார்த்து 'நீங்கள் இருவரும் நபித்தோழர்கள். அதுமாத்திரமன்றி பத்ர் போரில் கலந்து கொண்டவர்கள். இத்தகையதொரு செயல் (பாடல் இசைத்தல்) உங்களுக்கு முன்னிலையில் நடக்க அனுமதிப்பதா?' என்று கேட்டேன்.
அப்போது அவ்விருவரும், 'நீங்கள் விரும்பினால் உட்கார்ந்த பாடலைக் கேளுங்கள்; இல்லையென்றால், இங்கிருந்து சென்றுவிடுங்கள். திருமண நிகழ்வுகளின்போது பாடல் இசைக்க நமக்குச் சலுகைக் தரப்பட்டிருக்கிறது' எனக் கூறினார்கள்.
பத்ர் போரில் கலந்துகொண்ட மூத்த நபித்தோழர்கள் ஆகுமான, அனுமதிக்கப்பட்ட பாடல்களை கேட்டு மகிழும் நடைமுறையைக் கையாண்டிருக்கிறார்கள்.
ஆதார நூல் :
இப்னு ஸஅத், கிதாபுத் தபகாதில் குப்ரா, பாகம் 3, பக்கம்: 205, கெய்ரோ: தாருத் தஹ்ரீர் வெளியீடு.

## இஸ்லாத்தில் இசை 6
## ( அர்த்தமுள்ள பாடல்கள் )

பாடல் குறித்த உமர் (ரலி) அவர்களின் மற்றொரு நிலைப்பாட்டை இமாம் ஹஸனுல் பஸரி (ரஹ்) பின்வருமாறு அறிவிக்கிறார்:
''ஒரு குழுவினர் உமர் (ரலி) அவர்களிடம் வந்து, நம்பிக்கையாளர்களின் தலைவரே! எங்களுக்குத் தொழுகை நடத்தும் இமாம் தொழுகை முடிந்தபின்னர் பாடல் இசைக்கும் வழக்கத்தைக் கொண்டிருக்கிறார்''என முறையிட்டனர்.
அப்போது உமர் (ரலி) அவர்கள் யார் அந்த இமாம் ? என்று கேட்டார்கள். அவரது பெயர் சொல்லப்பட்டதும் என்னை அவரிடம் அழைத்துச் செல்லுங்கள் என்று கூறிவிட்டு,
நபித்தோழர்கள் சிலரையும் அழைத்துக் கொண்டு அம்மனிதரிடம் சென்றார்கள். பள்ளிவாசலில் அமர்ந்திருந்த அவர் உமர் (ரலி) அவர்களைக் கண்டதும் எழுந்து வரவேற்றார். பின்னர் அவர்களிடையே இடம்பெற்ற உரையாடல் வருமாறு:

பள்ளிவாசல் இமாம்: "நம்பிக்கையாளர்களின் தலைவரே! என்ன தேவைக்காக இங்கு வந்தீர்கள்? எங்களுடைய தேவையை நிறைவேற்றி வைப்பதற்கென்றால், நாங்கள் உங்களிடம் வருவதே மிகவும் பொருத்தமானது. உங்களது தேவைக்காகவெனில் அதற்கும்கூட நாங்களே உங்களிடம் வரவேண்டும். ஏனெனில், இறைத்தூதரின் பிரதிநிதி என்ற வகையில் தாங்கள் எங்களுடைய கௌரவத்திற்குரியவராக இருக்கின்றீர்கள்.
உமர் (ரலி): "உங்களைப் பற்றி ஒரு தீய செய்தி என்னிடம் வந்திருக்கிறது".
இமாம்: "நம்பிக்கையாளர்களின் தலைவரே! என்ன அது? "
உமர் (ரலி): "வணக்க வழிபாடுகளில் ஈடுபடும்போது உமக்குப் பைத்தியம் பிடிக்கிறதா? (தொழுகை முடிந்ததும் நீர் பாடல் பாடுகிறீராமே?)"
இமாம்: "இல்லை, நம்பிக்கையாளர்களின் தலைவரே! அது எனக்கு நானே செய்துகொள்ளும் அறிவுரை "
உமர் (ரலி): "அதனை எனக்குச் சொல்லிக்காட்டுங்கள். அது நல்ல வார்த்தைகளால் இயற்றப்பட்டிருந்தால், நானும் உங்களோடு சேர்ந்து அதைச் சொல்வேன். அது தீயதாக இருந்தால் தடைசெய்வேன்.

இமாம் அந்தப் பாடலைப் பாடிக் காட்டினார். அதன் பொருள் வருமாறு:

" உள்ளம், அதனை நான் கண்டிக்கும் போதெல்லாம் பாவங்களை வெறுக்கும் போராட்டத்தில்

களைப்படைவதையே அது விரும்புகிறது

காலமெல்லாம் கேளிக்கைகளில் மூழ்கியிருப்பதில்

அது பிடிவாதமாய் இருக்கிறது.

அது என்னைக் குழப்பத்தில் ஆழ்த்திவிட்டது.

ஏய் தீமையின் நண்பனே இந்த சிறுபிராயம் என்ன,

ஆயுளும் இவ்வாறு விளையாட்டிலேயே கழிந்துவிட்டது இளமையும் என்னை மறந்து சென்றுவிட்டது.

அதில் நமது நோக்கத்தை நாம் நிறைவு செய்துகொள்ளவில்லை.அதன்பிறகு அழிவைத் தவிர வேறெதனையும்

நான் எதிர்பார்க்கவில்லை.

எனது தேவைகளை நரை குறுக்கிவிட்டது.

ஓ எனது உள்ளமே! ஒருபோதும் நான் அதனை அழகாக அடக்கமாகக் காணவில்லை.

உள்ளமே! நீ அப்படி இருக்கவில்லை. மனோ இச்சையுந்தான்.

உன் எஜமானனைப் பற்றிச் சிந்தித்து

அவனைப் பயந்து அஞ்சிக்கொள்!

பின்னர் உமர் (ரலி) அவர்களும் ''உள்ளமே நீ அப்படி இருக்கவில்லை. மனோஇச்சையும்தான்; உன் எஜமானனைப் பற்றிச் சிந்தித்து அவனைப் பயந்து அஞ்சிக்கொள்''என்று பாடிவிட்டு இப்பாடலைப் பாடுபவர் இப்படியே பாடட்டும் என்று கூறினார்.
எனவே, பாடலானது அடிப்படையில் ஆகுமானதும் அனுமதிக்கப்பட்டதுமாகும். பயன்படுத்தப்படுகின்ற நோக்கங்களைப் பொறுத்து அது தடுக்கப்பட்டதாகவோ வெறுக்கப்பட்டதாகவோ தேவையுள்ளதாகவோ பயனுள்ளதாகவோ மாறும்.
உண்மையில் அல்லாஹ்வின் பாதையில் ஜிஹாத் (பெரும்முயற்சி) செய்தல் எனும் புனிதப் போராட்டமும் இத்தகையதே. அதற்கான காரணங்களைப் பொறுத்தே அது தடுக்கப்பட்டதாகவோ அனுமதிக்கப்பட்டதாகவோ மாறும்.
பாடல் என்பது குரலும் சந்தமும் இசையுமாகும். இவற்றின் மூலம் இப்பிரபஞ்சத்தின் அற்புதப் படைப்புகளில் அல்லாஹ் தாராளமாக ஏற்படுத்தி வைத்திருக்கின்ற அழகுகளிலிருந்து இனிமையானதும் இசைவானதுமான அழகிய ஓசைகளை மனிதன் பிரதிபலிக்கின்றான், அவ்வளவே.
ஆதார நூல் :
இமாம் அஷ்ஷாதிபீ, அல் இஃதிஸாம், பாகம் 1, பக்கம்: 272-273, கெய்ரோ: மக்தபது அனஸ் பின் மாலிக் பதிப்பக வெளியீடு, 1980

**உடல் பேசும் மொழிகள் 1**

**__________________________________________**

**உடல் - உணவை கேட்கும் மொழி – பசி**




பசியைப் பற்றி விஞ்ஞானம்...
லெப்டின், க்ரேலின் போன்ற இயக்குநீர்களின் சுரப்பு உயிரினத்தை உணவு உட்கொள்ளுமாறு செய்கிறது.
ஓர் உயிரி உணவு உட்கொள்ளும்போது அடிபோசைட்டுகள் லெப்டினை உடலில் சுரக்கச் செய்கின்றன. லெப்டின் அதிக அளவு சுரந்தால் பசியைக் குறைத்து விடும்.
உணவு உண்ணாமல் இருந்த சில நேரங்களுக்குப் பிறகு லெப்டினின் அளவு குறைகிறது. லெப்டினின் குறைவான அளவு இரண்டாம் நிலை ஆர்மோனான க்ரெலினைச் சுரக்கச் செய்கிறது. இது பசியைத் தூண்டுகிறது.
க்ரெலினின் அதிகபட்ச உற்பத்தியானது உணவைப் பார்த்தவுடனேயே சாப்பிடும் விருப்பத்தைத் தூண்டுகிறது என்று சில ஆய்வுகள் காட்டுகின்றன
அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்கள்
"எனக்கு (பசியினால்) கடும் சோர்வு ஏற்பட்டது. எனவே, நான் உமர் இப்னு கத்தாப்(ரலி) அவர்களைச் சந்தித்தேன். அப்போது நான் அவர்களிடம், அல்லாஹ்வின் வேதத்திலிருந்து ஏதேனும் ஒரு வசனத்தை ஓதும்படி கேட்டேன். உடனே அவர்கள் தம் வீட்டினுள் நுழைந்து குர்ஆன் வசனத்தை எனக்கு ஓதிக் காட்டினார்கள்(அங்கிருந்து வெளியேறி) சற்று தூரம்தான் நான் நடந்திருப்பேன். அதற்குள் சோர்வினாலும், பசியினாலும் நான் முகம் குப்புற விழுந்துவிட்டேன்.

(மூர்ச்சை தெளிந்து பார்த்தபோது) என் தலைமாட்டில் இறைத்தூதர்(ஸல்) அவர்கள் நின்றிருந்தார்கள். அவர்கள் (என்னை நோக்கி), ‘அபூ ஹுரைரா!’ என்று அழைத்தார்கள்.
நான், ‘இதோ கீழ்ப்படியக் காத்திருக்கிறேன், இறைத்தூதர் அவர்களே; கட்டளையிடுங்கள்’ என்று பதிலளித்தேன். அவர்கள் என் கரத்தைப் பிடித்து என்னைத் தூக்கி நிறுத்தினார்கள். எனக்கு ஏற்பட்டிருந்த நிலையைப் புரிந்துகொண்டார்கள். என்னைத் தம்முடன் அழைத்துக்கொண்டு தம் இல்லம் சென்றார்கள். எனக்கு ஒரு பெரிய பாத்திரத்தில் பால் வழங்க உத்தரவிட்டார்கள்.
நான் அதிலிருந்து (பால்) அருந்தினேன். பிறகு நபி(ஸல்) அவர்கள் ‘இன்னும் அருந்துங்கள், அபூ ஹிர்!’ என்று கூறினார்கள். அவ்வாறே நான் மறுபடியும் அருந்தினேன்.
பிறகு ‘மீண்டும் (அருந்துங்கள்)’ என்றார்கள். நான் வயிறு நிரம்பும் வரை மீண்டும் அருந்தினேன். எனவே, வயிறு (உப்பி) பாத்திரத்தை போன்றாகி விட்டது.

பிறகு, நான் உமர்(ரலி) அவர்களைச் சந்தித்து, அவர்களிடம் எனக்கு நடந்த நிகழ்ச்சியைத் தெரிவித்தேன். ‘(என் பசியைப் போக்கும் பொறுப்பினை) உங்களை விட அதற்கு மிகவும் தகுதியுடையவரிடம் அல்லாஹ் ஒப்படைத்து விட்டான், உமரே! அல்லாஹ்வின் மீதாணையாக! உங்களை விட நான் இறைவசனத்தை நன்கு ஓதத் தெரிந்தவனாக இருந்துகொண்டே அதை எனக்கு ஓதிக் காட்டும்படி உங்களிடம் கேட்டேன்’ என்று சொன்னேன். உமர்(ரலி), ‘அல்லாஹ்வின் மீதாணையாக! நான் உங்களை (என் வீட்டிற்கு) அழைத்துச் சென்று (உங்களுக்கு உணவளித்து) இருந்தால், அதுவே எனக்கு (விலை உயர்ந்த) சிவப்பு ஒட்டகங்கள் கிடைப்பதை விட விருப்பமானதாய் இருந்திருக்கும்’ என்று கூறினார்கள். (புஹாரி 5375)
"அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்கள் முஹம்மத்(ஸல்) அவர்கள் இறக்கும் வரை அவர்களின் குடும்பத்தார் (தொடர்ந்து) மூன்று நாள்கள் வயிறு நிரம்ப உணவு உண்டதில்லை.

## உடல் பேசும் மொழிகள் 2

## _______________________________________________

## உடல் - தண்ணீரை கேட்கும் மொழி – தாகம்



மனிதர்களிலும், விலங்குகளிலும் காணப்படும் இயல்பூக்கம் தாகம் எனப்படும். தாகத்தின் விளைவாக நாம் திரவங்களைத் தேடுகிறோம். உடலில் உள்ள திரவத்தின் சமநிலையை பராமரிப்பதற்கான கருவியாக தாக உணர்வு செயல்படுகிறது.
உடலில் திரவப்பொருட்கள் குறையும் போதோ
உப்பின் அடர்த்தி அதிகமாகும் போதோ தாக உணர்வு ஏற்படுகிறது. இதுபோன்ற நிகழ்வுகளின் போது மூளை வேகமாக செயல்பட்டு தாக உணர்வை ஏற்படுத்துகிறது.
உடலில் தொடர்ந்து நீரிழப்பு இருக்குமானால் அது பலவகையான சிக்கல்களின் அறிகுறியாக இருக்கலாம். மேலும் நரம்பியல் கோளாறுகளின் விளைவாக மூளையின் செயல்திறன் குறையும்; சிறுநீரக பாதிப்புகள் ஏற்படும்.
அளவுக்கதிகமான தாக உணர்வை POLYDIPSIA என்கிறோம். அதிகப்படியாக சிறுநீர் போதல் POLYURIA எனப்படும். இது நீரிழிவு நோயின் அறிகுறியாக இருக்கலாம்.

தாக உணர்வு மைய நரம்பு மண்டலத்தினால் உணரப்படுகிறது. EXTRACELLULAR THIRST என்பது உடலில் நீரின் அளவு குறைவதால் ஏற்படும் தாக உணர்வு ஆகும்.
INTRACELLULAR THIRST என்பது உடலில் உப்பின் அடர்த்தி அதிகரிப்பதால் ஏற்படும் தாக உணர்வு ஆகும
ஒருவர் (ஒரு பாதையில்) நடந்து சென்று கொண்டிருந்தபோது அவருக்குக் கடுமையான தாகம் ஏற்பட்டது. உடனே, அவர் (அங்கிருந்த) ஒரு கிணற்றில் இறங்கி, அதிலிருந்து (தண்ணீரை அள்ளிக்) குடித்தார்.
பிறகு, (கிணற்றிலிருந்து) அவர் வெளியே வந்தபோது, நாய் ஒன்று தாகத்தால் தவித்து, நாக்கைத் தொங்கவிட்டபடி ஈர மண்ணை நக்கிக் கொண்டிருப்பதைக் கண்டார்.
அவர் (தம் மனத்திற்குள்) ‘எனக்கு ஏற்பட்டதைப் போன்ற(அ)தே (கடுமையான தாகம்) இந்த நாய்க்கும் ஏற்பட்டிருக்கிறது போலும்’ என்று எண்ணிக் கொண்டார்.
உடனே, (மீண்டும் கிணற்றில் இறங்கித் தண்ணீரைத்) தன்னுடைய காலுறையில் நிரப்பிக் கொண்டு, அதை வாயால் கவ்விக் கொண்டு, மேலே ஏறி வந்து அந்த நாய்க்குப் புகட்டினார்.
அல்லாஹ் அவரின் இந்த நற்செயலை ஏற்று அவரை (அவரின் பாவங்களை) மன்னித்தான்’ என்று இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

இதைச் செவியுற்ற நபித்தோழர்கள், ‘இறைத்தூதர் அவர்களே! கால்நடைகள் (மற்ற பிராணிகளுக்கு உதவும்) விஷயத்திலும் எங்களுக்குப் பலன் கிடைக்குமா?’ என்று கேட்டார்கள்.
நபி (ஸல்) அவர்கள், ‘(ஆம்;) உயிருடைய பிராணி ஒவ்வொன்றின் விஷயத்திலும் (அதற்கு உதவும் பட்சத்தில் மறுமையில்) அதற்கான பிரதிபலன் கிடைக்கும்” என்று கூறினார்கள்.புஹாரி : 2363 அபூஹுரைரா (ரலி).
(முன்னொரு காலத்தில்) நாய் ஒன்று ஒரு கிணற்றைச் சுற்றிச் சுற்றி வந்து கொண்டிருந்தது. அது தாகத்தால் செத்து விடும் நிலையில் இருந்தது.
அப்போது, பனூ இஸ்ராயீல் சமுதாயத்தின் விபச்சாரிகளில் ஒருத்தி அதைப் பார்த்தாள். உடனே, அவள் தன் காலுறையைக் கழற்றி (அதில் தண்ணீரை எடுத்து) அந்த நாய்க்குப் புகட்டினாள். அதன் காரணமாக அவளுக்குப் பாவ மன்னிப்பு வழங்கப்பட்டது என நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். புஹாரி : 3467 அபூ ஹுரைரா(ரலி) .

## உடல் பேசும் மொழிகள் 3
________________________________________
## உடல் - ஓய்வை கேட்கும் மொழி - சோர்வு

சிறுவர்கள் முதல் பெரியவர்கள் வரையில் யாராக இருப்பினும் உடல் சோர்வு என்பது பொதுவான பிரச்சனை. நாள் முழுவதும் விளையாடுகின்ற சிறார்கள் அல்லது நாள் முழுவதும் அலுவலகத்தில் பணி செய்து களைப்பு தட்டும் பெரியவர்கள் என எல்லோருக்கும் உடல் சோர்வு வரும்.
குறிப்பாக, இரைச்சல் மிகுந்த இன்றைய மாநகர சாலைகளில் பயணித்தாலே போதுமானது. உடல் சோர்வு நம்மை தேடி வந்துவிடும்.

பகல் நேரத்தில் ஒரு குட்டித் தூக்கம் மற்றும் இரவு முழுமையான ஆழ்ந்த உறக்கம் ஆகியவை உடல் சோர்வை போக்கி நமக்கு புத்துணர்ச்சியை தருகிறது. ஆனாலும், சிலருக்கு உடல் சோர்வு நிரந்தரமானதாக இருக்கிறது.
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
''நான் உறங்கிக்கொண்டிருந்தபோது (கனவில்) என்னை, வாளி தொங்கிக்கொண்டிருந்த ஒரு கிணற்றின் அருகில் கண்டேன். அதிலிருந்து அல்லாஹ் நாடிய அளவுக்கு(த் தண்ணீர்) இறைத்தேன்.
பிறகு அபூகுஹாஃபாவின் புதல்வர் (அபூபக்கர்) அவர்கள் அதை வாங்கி அதன் மூலம் ஒரு வாளி நீரை அல்லது இரண்டு வாளிகள் நீரை இறைத்தார். அவர் இறைத்த போது சோர்வு தெரிந்தது.அல்லாஹ் அவருக்கு மன்னிப்பருள்வானாக.

பிறகு அது மிகப் பெரிய வாளியாக மாறியது.
அப்போது அதை கத்தாபின் புதல்வர் (உமர்) அவர்கள் வாங்கினார்.
உமர் பின் அல்கத்தாப் இறைத்ததைப் போன்று இறைக்கின்ற (வலிமை மிக்க) அபூர்வத் தலைவர் ஒருவரை நான் மக்களில் பார்க்கவில்லை. மக்கள் (தங்கள் ஒட்டகங்களுக்கு நீர் புகட்டி, நீர் நிலையருகே அவற்றின்) ஓய்விடத்தில் கட்டிவைக்கும் அளவுக்கு (அவர் நீர் இறைத்தார்).அபூஹுரைரா (ரலி) முஸ்லிம் : 4763.

## உடல் பேசும் மொழிகள் 4
________________________________________
## உடல் - நுரையீரலை தூய்மை செய்யும் மொழி - தும்மல், சளி, இருமல்.



முதலில் தும்மல்
தும்மல், காற்று தவிர வேறு எந்த வெளிப் பொருளும் மூக்கில் நுழைந்தால், நமது மூக்கு அதை அனுமதிக்க மறுக்கிறது. அதற்கான அனிச்சைச் செயல்தான் தும்மல்.
மூக்குத் துவாரத்தில் சிறிய முடியிழைகள், நாம் உள்ளிழுக்கும் காற்றில் கண்ணுக்குத் தெரியாத தூசு, துகள் இருந்தால் அவற்றை வடிகட்டி அனுப்புவதுதான் இவற்றின் வேலை.
மேலும் மூக்கில் ஒரு மென்மையான சவ்வுப் படலம் உள்ளது. இது நிறமற்ற திரவத்தைச் சுரக்கிறது. அளவுக்கு அதிகமாகத் தூசியோ, துகளோ மூக்கில் நுழைந்து விட்டால், இந்தச் சவ்வுப் படலம் தூண்டப்பட்டு, அதிக அளவில் நீரைச் சுரக்கிறது.

இதன் தூண்டுதலால், நுரையீரல், தொண்டை, வாய் மற்றும் வயிற்றுத் தசைகள் ஒன்று சேர்ந்து மூச்சுப் பாதையில் உள்ள காற்றை அழுத்தமாகவும் வேகமாகவும் மூக்கு வழியாக வெளித் தள்ளுகின்றன. இதைத்தான் தும்மல் என்பர். இவ்வாறு தும்மும்போது அந்த அந்நியப் பொருள் வெளியேற்றப்படுகிறது.
ஒரு தும்மலின் வேகம் மணிக்கு 160 கி.மீ. எனக் கணக்கிட்டுள்ளனர். அமெரிக்க ஆய்வாளர்கள், நாம் தும்மும்போது நம் மூக்கு மற்றும் வாயிலிருந்து வெளிப்படும் திரவத்தின் வெவ்வேறு நுண்ணிய வடிவங்களை முதன் முறையாக வரைபடம் போல வடிவமைத்திருக்கிறார்கள்.
ஆழ்ந்த உறக்கத்தின்போது தும்மல் ஏற்படுவதில்லை. அந்நிலையில் மறி வினைக் குறிப்பலைகள் மூளைக்கு அனுப்பப்படுவதுமில்லை, இயக்க நரம்பணுக்கள் தூண்டப்படுவதுமில்லை.
மிகுதியான தூண்டல் இருந்தால் சில வேளைகளில் தூங்குபவர் விழித்துக்கொண்டு தும்முவதுண்டு. ஆனால் அப்போது அவர் முழு உறக்கநிலையில் இருக்கமாட்டார்.

வீடியோ பார்க்க COPY LINK - தும்மலைப் படம் பிடித்தனர் அமெரிக்க ஆய்வாளர்கள் (காணொளி) -
நாம் தும்மும்போது நம் மூக்கு மற்றும் வாயிலிருந்து வெளிப்படும் திரவத்தின் வெவ்வேறு நுண்ணிய வடிவங்களை ,அமெரிக்க ஆராய்ச்சியாளர்கள் முதன் முறையாக வரைபடம் போல வடிவமைத்திருக்கிறார்கள்.
அதிவேக வீடியோ காட்சிகளின் மூலம், அவர்கள் மூக்கிலிருந்தும், வாயிலிருந்தும் தும்மும்போது வெளியேறும் , சளி மற்றும் எச்சில் போன்ற திரவங்களைத் துல்லியமாகப் படம் பிடித்திருக்கிறார்கள்.
இந்த திரவம், திரைகளாக , குவியல் குவியலாக, பைகளாக, மணி மணியாக வெளியேறுவதை இந்த வீடியோ காண்பிக்கிறது.
இந்த வழிமுறை மிக முக்கியமானது ஏனென்றால் இது கடைசியாக வெளிவரும் நீர்த்திவலைகளின் பல்வேறு அளவுகளை அதுதான் தீர்மானிக்கிறது. இதை வைத்துத்தான் தும்மல் எப்படி வியாதிக்கிருமிகளை பரப்புகிறது என்பதைக் கண்டறிய முடிகிறது.
இந்த ஆய்வின் நோக்கமே, இந்த தும்மலின் திரவ வெளியேற்றத்தை வடிவமைப்பது மற்றும் அதன் பரவலைக் கட்டுப்படுத்துவதுதான். இது போஸ்டன் நகரில் அமெரிக்க உடலியல் கழகத்தின் திரவ இயங்கியல் பிரிவின் கூட்டமொன்றில் காட்டப்பட்டது.
தும்மல் உருவாக்கும் மேகம் போன்ற மண்டலத்தைப் பற்றி பல ஆய்வுகள் நடத்தப்பட்டிருந்தாலும், அவைகளின் முடிவுகள் மாறுபட்டிருந்தன, ஏனென்றால்,தும்மலின் முதல் கட்ட வெளியேற்றம் சரியாக புரிந்துகொள்ளப்படாமல் இருந்தது என்கிறார் இந்த ஆய்வை நடத்திய குழுவின் தலைவர், மசாச்சுசெட்ஸ் தொழில்நுட்பக் கழகத்தைச் சேர்ந்த , டாக்டர் லிடியா பூருபா.
"அந்தப் பகுதி இன்னும் பெரிய அளவுக்கு தெரியாத ஒன்றுதான். இந்தத் துளிகள் எப்படி உருவாகின, அவை பரவும்போது எந்த அளவுடன் பரவுகின்றன? தும்மும்போது, வாயின் அருகே என்ன நடக்கிறது என்பதைப் பார்க்க முயன்றேன்", என்றார் அவர்.
ஆனால் வீடியோவில் அவர்கள் தும்மலின்போது ஏற்படும் நீர்த்திவலைகள் வெவ்வேறு அளவுகளிலும், வடிவங்களிலும் இருப்பதை மட்டும் பார்க்கவில்லை. அவை சுவாசப் பாதைக்கு வெளியேயும் உடைந்து சிதறும் வழிமுறை தொடர்வதைப் பார்த்தார்கள்.

நீர்த்திவலைகள், அருவி நீர் போல பரவுவதைப் பார்த்தார்கள்.
இந்த திரவப் பரவல் இது போல பல்வேறு வடிவங்களை எடுப்பதை சில தொழிற்சாலை சூழல்களில் நாங்கள் பார்த்திருக்கிறோம் , ஆனால் தும்மல் போன்ற மனித உடலியல் சார்ந்த ஒரு வழிமுறையில் இது போன்ற திரவப் பரவல் ஏற்படுவதைப் பார்ப்போம் என்று எதிர்பார்க்கவில்லை, என்கிறார் அவர்.
இந்த தகவல் இப்போது கிடைத்திருக்கும் நிலையில், நோய் தொற்றல் என்பதன் "காலடிச்சுவட்டை" பற்றி கணிப்பதற்குத் தேவைப்படும் நீர்த்திவலைகளின் உருவாக்கம் பற்றிய வடிவமைப்பைச் செய்ய விஞ்ஞானிகளால் இனி முடியும்.

முதல் தும்மலின் வரலாறு...
முதல் மனிதர் நம் பாவா ஆதம் (அலை) அவர்களை படைக்கும்போது ,இறைவன் மண்ணுருவியின் தலையில் தன் ஆவியை ஊதினான் என்றும் அதன் தொப்பூழில் ஊதினான் என்றும் இரு விதமாகக் கூறப்படுகிறது ."நான் என் ரூஹி லிருந்து அவரில் ஊதினேன்" என்றே இறைவன் கூறுகிறான்.
அது தலையிலே நுழைந்தது. என்ன வியப்பு ! அது உடனே சதையும் எலும்புமாக ஆகிவிட்டது. பின்னர் அது நெற்றி, செவி, நாவு ஆகியவற்றிற்கு வந்து பின்னர் உடலிற்குள் புகுந்து, முதுகு வழியாக இடுப்புக்கு வந்தது. அதற்கு மேல் செல்ல வழியில்லாது மீண்டும் மேலே வந்து கண்களிலே இறங்கியது. அவ்வளவுதான். கண்கள் ஒளி பெற்றன. அதன் பின் மூக்கில் இறங்கியது. ஆதம் (அலை) அவர்கள் தும்மினர்கள். அப்பொழுது இறைவன் ஜிப்ரீலை நோக்கி, "ஜிப்ரீலே ..! அந்தத் தும்மலைப் பிடித்து வைத்துக் கொள்ளும் ! நான் அதைக் கொண்டு என் நல்லடியார் ஈஸாவைப் படைக்க விரும்புகிறேன்" என்று கூறினான்.
ஆதம் (அலை) தும்மும் போது "அல்ஹம்து லில்லாஹ் ! "எல்லாப் புகழும் இறைவனுக்கே " என்று கூறியதும் , "ஆதமே ! உம் மீது என் அருள்பொழியட்டும் ! " இதற்காகவே நாம் உம்மைப் படைத்தோம் " என்று கூறினான்.
ஆதமின் தும்மலிருந்த பிடித்து வைத்த ரூஹைக் கொண்டு ஈஸா (அலை ) அவர்களைப் படைக்கும் போது அவருடைய தாயிடம் ஊதப்பட்டதாக குர் ஆனில் அல்லாஹ் ..

وَالَّتِىٓ اَحْصَنَتْ فَرْجَهَا فَنَفَخْنَا فِيْهَا مِنْ رُّوْحِنَا وَ جَعَلْنٰهَا وَابْنَهَاۤ اٰيَةً لِّـلْعٰلَمِيْنَ
தன் கற்பைக் காத்துக்கொண்ட (மர்யம் என்ப)வரை(யும் நீங்கள் ஞாபகமூட்டுங்கள். நம்முடைய தூதர்) ஜிப்ரீல் மூலம் அவருடைய கர்ப்பத்தில் நாம் ஊதினோம். அவரையும் அவருடைய மகனையும் உலகத்தாருக்கு ஓர் அத்தாட்சியாகவும் ஆக்கினோம். (குர்ஆன் : 21:91)

## உடல் பேசும் மொழிகள் 5

## உடல் - நுரையீரலை தூய்மை செய்யும் மொழி : சளி, இருமல்.

தொண்டையில் உள் புறத்தில் புண் மற்றும் அரிப்பு ஆகியவை இருந்தால் தொடர்ந்து இருமல் வந்து கொண்டே இருக்கும்.
தொண்டை மற்றும் சுவாசப்பாதையில் ஏதாவது எரிச்சல் ஏற்படும்போது இருமல் அனிச்சையாக ஏற்படுகிறது. எப்போதாவது வரும் இருமல் சாதாரணமானது. மேலும், இருமல்கள் பொதுவாக உடலில் இருக்கும் சளி மற்றும் அசுத்தங்களை வெளியேற்ற உதவுகிறது.
இருமல் ஏற்படுவதற்கான பொதுவான காரணம் என்ன என கேட்டால், சிகரெட் பிடிப்பது, புகை மாசு, பாக்டீரியா தொற்று, ஒவ்வாமை, ஆஸ்துமா மற்றும் வைரஸ் நோய்கள் இருந்தால் இருமல் ஏற்படும். அவர்களுக்கு தொடர்ந்து இருமல் வந்து கொண்டே இருக்கும்.
ஆஸ்துமா அல்லது தொற்று அல்லது ஒவ்வாமையால் ஏற்படும் இருமலுக்கு ஒரு நிபுணரிடம் சென்று உரிய சிகிச்சை எடுத்துக் கொள்ள வேண்டும்.

சாதாரண இருமல் பிரச்சனையாக இருந்தால் வீட்டு வைத்தியம் மூலமே சரி செய்து கொள்ள முடியும். பல பிரச்சனைகளுக்கு வீட்டு வைத்தியத்தில் நிவாரணம் பெறுவது போலவே இருமலுக்கும் வீட்டு வைத்தியம் உண்டு. எளிமையான இந்த சிகிச்சையைப் பின்பற்றினால் உங்களுக்கு இருமல் தொல்லை இருக்காது.
தேன் : தொண்டையில் உள் புறத்தில் புண் மற்றும் அரிப்பு ஆகியவை இருந்தால் தொடர்ந்து இருமல் வந்து கொண்டே இருக்கும். அவ்வாறு இருமும்போது வலியைக் கூட உணர்வீர்கள். இத்தகைய நேரத்தில் தேன் சாப்பிட்டால் தொண்டையின் உள் புறத்தில் இருக்கும் புண் மற்றும் அரிப்பை குணமாக்கும். இருமல் மருந்துகளைவிட தேன் சரியான நிவாரணத்தைக் கொடுக்க வல்லது.

உப்பு நீரில் வாய் கொப்பளித்தல் : உப்பு நீரில் வாய் கொப்பளிக்கும்போது பாக்டீரியா அழிந்து, சளியும் தளர்ந்துவிடும். மேலும், உப்பு நீரானது சைனஸை அழிக்கவும், இருமலை குறைக்கவும் உதவுகிறது. உப்பில் இருக்கும் உவர்ப்பு தன்மை தொண்டையில் இருக்கும் பாக்டீரியாவை அழிக்கும் ஆற்றல் கொண்டது என்பதை மறந்துவிடாதீர்கள்.

இஞ்சி : வீட்டு வைத்தியத்தில் இஞ்சிக்கு முக்கிய பங்குண்டு. பல்வேறு நோய்களுக்கு மருந்தாக பயன்படும் இஞ்சி. இருமலுக்கும் மருந்தாக பயன்படுகிறது. இஞ்சியில் ஆன்டி ஆக்ஸிடன்டுகள், ஆன்டி மைக்ரோபியல் மற்றும் அழற்சி எதிர்ப்பு பண்புகள் இருக்கிறது. இதனால், குமட்டல் மற்றும் ஜலதோஷத்திற்கு சிகிச்சையளிக்க பயன்படுத்தப்படுகிறது. இஞ்சி டீ, சாறு ஆகியவற்றை குடிக்கலாம்

நீராவி : சளிப் பிடித்தால் ஆவி பிடிக்க வேண்டும் என கிராமப்புறங்களில் சொல்லப்படுவதுண்டு. கொதிக்க வைத்த நீரில் ஆவிப் பிடிக்கும்போது நாசி எரிச்சல் குணமாகும். சுவாசிப்பது எளிதாகும். மேலும் சைனஸ் வலியிலிருந்து நிவாரணம் கொடுக்கும் ஆற்றல் நீராவி பிடிப்பதற்கு உண்டு. மேலும், எப்போது தண்ணீர் பற்றாக்குறையுடன் இருக்காதீர்கள். முடிந்தளவுக்கு சரியான நேரத்தில் சரியான அளவில் தண்ணீர் பருகுங்கள்.
காற்று சுத்திகரிப்பான் (AIR PURIFIER) : அசுத்தமான காற்று இருக்கும் பகுதியில் இருந்தால் தும்மல், இருமல் மற்றும் மூக்கு ஒழுகுவதை தவிர்க்க முடியாது. இதனால் வீட்டில் காற்று சுத்திகரிப்பான் எனப்படும் ஏர் ஃபியூரிஃபையரை பொருத்திவிட்டால் பாக்டீரியா உள்ளிட்ட நச்சுகள் வடிகட்டப்பட்டு சுத்தமான காற்று வீட்டில் இருக்கும். நீங்களும் ஆரோக்கியமான சுவாசத்தைப் பெறுவீர்கள்.

அல்லாஹ்வின் மீதாணையாக! அவர் சளியைத் துப்பினால் அதை அவரின் தோழர்களில் ஒருவர் தம் கையில் ஏந்திக் கொள்கிறார். அதை அவர் தம் முகத்திலும், மேனியிலும் தேய்த்துக் கொள்கிறார்.
அவர் அவர்களுக்குக் கட்டளையிட்டால் அவரின் கட்டளையை நிறைவேற்ற அவர்கள் ஒருவரோடொருவர் போட்டி போட்டுக் கொண்டு முன்வருகிறார்கள்.
அவர் உளூச் செய்தால் அவர் உளூச் செய்து எஞ்சிய தண்ணீரைப் பெறுவதற்காக, ஒருவரோடொருவர் சண்டையிடும் அளவிற்குச் செல்வார்கள்.”
நூல்: புகாரி-2731 (2731 & 2732)

## உடல் பேசும் மொழிகள் 6



A ) உடல் - "உச்சி முதல் பாதம் வரை உள்ள கழிவுகளை வெளியேற்றுகிறேன்" என்று சொல்லும் மொழி - காய்ச்சல்
B ) உடல் - காய்ச்சலின் போது, " உணவை உண்ணாதே" என்று சொல்லும் மொழி - வாய்_கசப்பு மற்றும் பசியின்மை
C ) உடல் - காய்ச்சலின் போது, " நான் உடலை தூய்மை செய்கிறேன், நீ எந்த வேலையும் செய்யாதே" என்று சொல்லும் மொழி - உடல் அசதி

_____________________________________________

உண்மையில் காய்ச்சல் என்பது ஒரு நோய் அல்ல அது பல நோய்களுக்கான அலெர்ட் அறிகுறிகள். உடலில் கிருமி தொற்று ஏற்படும்போது, அதை எதிர்த்து போராடும் உடல் எதிர்ப்பு சக்தியின் போராட்டமே காய்ச்சல் எனப்படும். இந்த போராட்டத்தின் தன்மையைப் பொறுத்து உடலின் வெப்பம் அதிகரிக்கும். அதாவது, சராசரியாக ஒரு மனிதனின் உடல் வெப்பநிலை 98.4°F (37°C) என்று இருக்க வேண்டும். அதற்கு மேல் வெப்பம் அதிகரிப்பதை காய்ச்சல், ஜுரம் என்கிறோம்.

காய்ச்சலில் பல வகைகள் இருக்கின்றன. இது சாதாரண காய்ச்சலாக இருந்தால் சில ஆன்டிபயாடிக் மாத்திரைகளிலேயே சரியாகி விடும்.
‘காய்ச்சலும் தலைவலியும் தனக்கு வந்தால்தான் தெரியும்’ காய்ச்சலின் கொடுமையை உணர்த்தும் பழமொழி இது.
காய்ச்சல் வந்தாலே உடல் சோர்வடைந்து, உடம்பு நெருப்பாய் கொதிக்கும், எதுவும் சாப்பிடப்பிடிக்காது, பசியின்மை, அடித்துப் போட்டதுபோல் உடம்பு வலி என சில நாள்கள் ஆளை படுத்த படுக்கை ஆக்கி, பாடாப்படுத்தி விடும்.

சாதாரண காய்ச்சலுக்கே இந்த நிலை என்னும்போது, இந்த காலகட்டத்தில் வைரஸ் காய்ச்சல், மலேரியா, சிக்கன் குனியா, பன்றிக் காய்ச்சல், டெங்கு காய்ச்சல் என நித்தம் ஒரு புது பெயரில் காய்ச்சல் வருகின்றன. இதுமட்டுமல்லாது, இன்னமும் பெயர் வைக்காத காய்ச்சல் வகைகளும் உள்ளன. இப்படி பரவக்கூடிய காய்ச்சல்களில் உயிருக்கு உலை வைக்கும் அபாயகரமான காய்ச்சல்களும் உள்ளன. எனவே காய்ச்சல் வந்ததும் மருத்துவரை உடனே சந்தித்து சிகிச்சைப் பெற வேண்டும்.

நோயைச் சகித்துக் கொள்வது என்பது மனிதர்களை சோதிப்பதற்காக இறைவன் தருவது.
அதற்கு பகரமாக மறுமையில் அவர்களுக்கு அனைத்து சுகங்களும் தரப்படும். அதே போல் இன்று தமிழகத்தில் பரவி வரும் டெங்கு, சிக்குன் குன்யா, மற்றும் விஷக் காய்ச்சல் எல்லாம் அல்லாஹ்வின் சோதனையாகும். இந்த சோதனையின் போது பொறுமையை மேற்கொள்ள வேண்டும்.

ஓரளவு அச்சத்தாலும், பசியாலும் செல்வங்கள், உயிர்கள், மற்றும் பலன்களைச் சேதப்படுத்தியும்உங்களைச் சோதிப்போம். பொறுத்துக் கொண்டோருக்கு நற்செய்தி கூறுவீராக. ( குர்ஆன் : 2:155 )
நான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் (பிளேக், காலரா போன்ற) கொள்ளை நோய் பற்றிக் கேட்டேன் அதற்கு அவர்கள், “அது, தான் நாடியவர்கள் மீது அல்லாஹ் அனுப்புகின்ற வேதனையாகும். அல்லாஹ் அதை இறை நம்பிக்கையாளர்களுக்கு கருணையாக ஆக்கியுள்ளான்” என்று தெரிவித்தார்கள்.
மேலும், “கொள்ளை நோய் பரவிய இடத்தில் இருப்பவர் எவராயினும் அவர் பொறுமையுடனும், இறைவெகுமதியை விரும்பியவராகவும் அல்லாஹ் நமக்கு எழுதியுள்ள(விதிப்படி நம்மைப் பீடிக்க விருப்ப)தைத் தவிர வேறெதுவும் நம்மைப் பீடிக்காது என்னும் நம்பிக்கை கொண்டவராகவும் தன் ஊரிலேயே தங்கியிருப்பாராயின் இறைவழியில் உயிர்த் தியாகம் செய்தவர் பெறுவதைப் போன்ற நற்பலன் அவருக்கும் நிச்சயம் கிடைக்கும்” என்று கூறினார்கள்.

அறிவிப்பவர் : ஆயிஷா (ரலி), புகாரி 3474, 5734

எவரொருவருக்கு ஓர் இரவு காய்ச்சல் வந்து, அவர் அதைப் பொறுமையுடன் இருந்து அந்தக் காய்ச்சலிலும் அவர் அல்லாஹுதஆலாவுடன் திருப்தி கொண்டவராக இருந்தாரென்றால், பிறந்த பாலகனைப் போன்று தன் பாவங்களை விட்டும் பரிசுத்தமாகி விடுகிறார்" என ரஸூலுல்லாஹி (ஸல்) அவர்கள் கூறியதாக ஹஜ்ரத் அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
(இப்னு பித்துன்யா, தர்கீப்)

யாரேனும் ஒரு முஃமினான ஆணுக்கோ, பெண்ணுக்கோ நிரந்தரமான உள் காய்ச்சலோ, தலைவலியோ இருந்தால், அது அவரது பாவங்களில் கடுகளவையும் விட்டுவைக்காது. அவரது பாவம் உஹுத் மலையளவு இருந்தாலும் சரியே!" என்று நபி (ஸல்) அவர்கள் கூறியதாக ஹஜ்ரத் அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
(அபூயஃலா, மஜ்மஉஸ்ஸவாயித்)
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கடும் காய்ச்சலால் சிரமப்பட்டுக் கொண்டிருந்தபோது நான் அவர்களிடம் சென்று அவர்களை என் கையால் தொட்டு, "அல்லாஹ்வின் தூதரே! தாங்கள் கடும் காய்ச்சலால் சிரமப்படுகிறீர்களே!" என்று கேட்டேன்.
அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "ஆம்; உங்களில் இருவர் காய்ச்சலால் அடையும் துன்பத்தைப் போன்று நான் (ஒருவனே) அடைகிறேன்" என்று சொன்னார்கள்.
நான், "(இந்தத் துன்பத்தின் மூலம்) தங்களுக்கு இரு (மடங்கு) நன்மைகள் கிடைக்கும் என்பதா இதற்குக் காரணம்?" என்று கேட்டேன்.
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "ஆம்' என்று கூறிவிட்டுப் பிறகு, "ஒரு முஸ்லிமுக்கு ஏற்படும் நோயாயினும், அது அல்லாத வேறு துன்பமாயினும் (அதற்கு ஈடாக), மரம் தன் இலைகளை உதிர்த்துவிடுவதைப் போன்று அவருடைய பாவங்களை அல்லாஹ் உதிர்க்காமல் விடுவதில்லை" என்று சொன்னார்கள். (அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி),புகாரி 5660)

ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
(ஒரு முறை) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், (உடல் நலிவுற்றிருந்த) உம்முஸ் ஸாயிப் அல்லது உம்முல் முசய்யப் எனும் பெண்மணியிடம் (உடல்நலம் விசாரிக்கச்) சென்றார்கள்.
அப்போது "உம்முஸ் ஸாயிபே! அல்லது உம்முல் முசய்யபே! உமக்கு என்ன நேர்ந்தது? ஏன் நடுங்கிக்கொண்டிருக்கிறாய்?" என்று கேட்டார்கள்.
அதற்கு அப்பெண், "காய்ச்சல். அதில் அல்லாஹ் வளம் சேர்க்காமல் இருக்கட்டும்!" என்று கூறினார்.
அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "காய்ச்சலை ஏசாதே! ஏனெனில் அது, கொல்லனின் உலை இரும்பின் துருவை அகற்றிவிடுவதைப் போன்று, ஆதமின் மக்களின் (மனிதர்களின்) தவறுகளை அகற்றி விடுகிறது" என்று கூறினார்கள். (முஸ்லிம் 5031)

## உடல் பேசும் மொழிகள் 7




A) உடல் - எனக்கு செரிமானம் ஆகாத உணவை நான் வெளியேற்றுகிறேன் என்று சொல்லும் மொழி - வாந்தி
B) உடல் - நான் குடல்களில் உள்ள கழிவுகளை வெளியேற்றுகிறேன் என்று சொல்லும் மொழி - பேதி

---

வாந்தி என்றால் உடலுக்கு ஒப்புக் கொள்ளாத,தேவையில்லாத விஷமான ஒன்றை இரைப்பைக்குள் உறிஞ்ச விடாமல், உணவுக் குழாய்க்குள் மேலும் கீழும் செல்லவிடாமல் தடுக்கும் ஓர் அற்புதமான தற்காப்பு செயலே! இது எத்தனை பேருக்குத் தெரியும்?
அதனால்தான் சில வேளைகளில் வாந்தி எடுத்த பின், உபாதைகள் நீங்கி நலமாக ஆகிவிட்டது போல தோன்றும். வாந்தி நின்றுவிட்டாலே மருத்துவத்தையோ, மருத்துவரையோ தேட மாட்டார்கள்.
இதனால் வாந்தியை மீறி உணவுக்குழாய்க்குள் செல்லும் கிருமிகளோ, வேண்டாத உணவோ உணவுக் குழாயின் மற்றொரு நோயாக வயிற்றுப் போக்குப் பேதியை உருவாக்கும்.
இந்தியா போன்ற கோடை நாடுகளில் பயணத்தின் போது ஏற்படும் வைரஸ் கிருமிகளாலான TRAVALER'S DIARRHEA சில வேளைகளில் தானாகவே நின்று விடும்.

பெரும்பாலான நேரங்களில் கையை சுத்தமாக கழுவாதவர்கள், சரியாகக் கழுவி பராமரிக்கப்படாத பாத்திரங்கள்,
சுகாதாரமற்ற உணவுத் தயாரிப்பு, காய்கறிகள், இறைச்சி, முறையாக தேக்கி வைத்து சுத்தமாக சமைக்கப்படாதது,
சமைக்கப்பட்ட உணவு சுத்தமாக பராமரிக்கப்பட்டு, பாதுகாக்கப்பட்டு பரிமாறப்படாதது,
பரிமாறுபவர்களின் சுத்தம், சுகாதாரம் இல்லாமை என அனைத்து நிலைகளிலும் உணவில் கிருமிகள் கலக்கலாம்.
வாந்தியுடன் கூடிய பேதிக்கு வாந்தியை நிறுத்த ONDANSETRON மருந்துகள் வாந்தியின் போது தண்ணீர் இல்லாமலே வாயிலேயே கரையும் மருந்துகளாக, சொட்டு மருந்துகளாக, மாத்திரையாகக் கிடைக்கிறது.
இந்த மருந்துகளை எடுத்து ஒரு மணி நேரம் எதுவும் எடுத்துக் கொள்ளாமல் இருந்தால் வாந்தி நின்று விடும். வாந்தி மட்டுமே இருந்தாலும் இம்மருந்தால் குணமானாலும் அடுத்து சில மணி நேரங்களில் வரப்போகும் பேதிக்காக மருத்துவரை அணுகி தேவையான மருந்துகளை உட்கொள்ள வேண்டியது அவசியம்.

வாந்தியுடன் திரவ உணவுகளை முழுங்க முடிந்து திட உணவுகளை முழுங்க முடியாமல் இருந்தால் ? குழாய் கேன்சராக இருக்கலாம்.
இரண்டு அல்லது மூன்று முறைக்கு மேல் நீராக ரத்தமின்றி, ரத்தமுடன் முழுமையாக ஜீரணமாகாத உணவுடன், வயிற்றுவலியுடனோ வலி இல்லாமலோ பேதியானால் மருத்துவரை உடனே அணுகுவது நல்லது.
காரணமே இல்லாது, ஒப்புக்கொள்ளாத உணவு அல்லது அதிகப்படியான உணவு காரணமாக ஏற்படும் வயிற்றுப்போக்கு இரு முறைக்கு மேல் இருந்தால் - வயிற்றுப்போக்கை நிறுத்தும் மருந்தை எடுத்து நன்றாக ஆகிவிட்டதுபோல ஓர் உணர்வு இருந்தால்கூட மருத்துவரிடம் சென்று நோய்க்கான காரணத்துக்கு மருந்துகள் வாங்குவது நல்லது.
காரணம்... பேதியாவதற்கு முக்கிய காரணிகளான வைரஸ், பாக்டீரியா, புரோட்டோசோவா, காளான் (Fungus), புழு (Worms) போன்ற கிருமிகள். குடல் அசைவைத் தடுக்கும் மருந்துகளை
உட்கொண்டு பேதியாவதை தற்காலிகமாக நிறுத்தி வைத்தாலும் கூட, நோய் முற்றிய உடலில் நீர் இழந்த நிலையில் மருத்துவரை நாட வேண்டியது வரும்.

பேதியாவதற்கு மேலே கூறிய காரணங்களைத் தவிர பாலுக்கு ஒவ்வாமை (Lactose Intolerance) இருந்தாலும், அதிகமாக கிருமி மருந்துகளை உட்கொள்ளுவதாலும், பேதியாவது சகஜம்.
மேலும் மருந்துகளை அடிக்கடி உட்கொள்வதாலும், குடலில் நன்மை செய்யும் நுண்ணுயிரிகள் கொல்லப்படுவதாலும், ஹைப்பர் தைராய்டிஸம் என்ற பிரச்னையாலும் குடல் கேன்சரினாலும் |கூட பேதியாவது சகஜம்.
முதியவர்களுக்கு மலச்சிக்கலும் பேதியும் மாறி மாறி வருவதாக இருந்தால் குடல் கேன்சராக இருக்கலாம்.
பேதியாகும் போது கிருமிகள் தாக்கத்தால் குடலிலிருந்து நீர் வெளியேறுவதும், கிருமிகள் இருக்கும் இடங்களில் அப்போது குடல் சுருங்குவதால் அதனால் ஏற்படும் வலியும், சிலவேளைகளில் ரத்தப்போக்கு இருக்கலாம், வயிற்றுப் போக்கின் நோய் அறிகுறிகளை விளக்குவதால் வெறும் பேதியை நிறுத்தும் மருந்தால் நோயிலிருந்து முழு நிவாரணம் அடைய முடியாது. பேதி என்பது முழுக்க முழுக்க குடலிலிருந்து கிருமிகளின் தாக்கத்தால் நீர் வெளியேறுவது.
அதனால் உடலிலிருந்து நீருடன் சில உப்புகளும் வெளியேறுவதுதான் உடலைப் பாதிக்கும் ஒரு முக்கியமான நோயின் தாக்கமாகும்.
அதனால், உடலுக்கு நீர் தருவது, தேவையான அளவு உப்புக்கரைசலுடன் தருவது (ORS Oral Rehydration Salts) மிக முக்கியமான சிகிச்சை. நம் மக்கள் பேதியோ, ஜுரமோ, பச்சைத் தண்ணீர் கூட பல்லிலே படாமல் இருந்தால் சரியாகி விடும் என்ற தவறான எண்ணத்தில் இருக்கின்றனர்.

பேதியாகும் போது எவ்வளவு நீர் வெளியேறுகிறதோ, அந்த அளவுக்கு வீட்டில் தயாரிக்கும் அளவான உப்புடன் தாராளமான நீருடன் அரிசி நொய் கஞ்சி எடுப்பது மிகச் சிறந்த மருந்தாகும். அதற்கு அடுத்தது புளிக்காத மோர், இளநீர், எிஸிஷி பவுடர் கரைசல்கள், பழச்சாறு போன்றவையும் கொடுக்கலாம்.
இதற்குப் பிறகு மருத்துவரைஅணுகும் முன், அவசரத்துக்கு பிரயாணத்தின் போது, மருத்துவர் பரிந்துரைக்கும் பேதியை நிறுத்தும் குடல் அசைவைத் தடுக்கும் மருந்துகளை (Anti Motlity Drugs) எடுத்துக் கொள்ளலாம். அது வேலை செய்யும் 6 - 8 மணி நேரத்துக்குள் மருத்துவரைச் சந்தித்து கிருமிகளுக்கான நீர் வெளியேற்றத்தைத் தடுக்கும் மருந்து எடுத்துக் கொள்வது அவசியம்.
பேதியை நிறுத்தும் மருந்துகளை அடுத்த வேளை பேதி இல்லாத போது எடுத்துக் கொண்டால் மலச்சிக்கலை உருவாக்கும். அடிக்கடி பேதியானால் மட்டுமே, மருத்துவர் பரிந்துரைக்கும் போது எடுத்துக் கொள்ளவும்.
15 வயதுக்கு கீழ் உள்ள குழந்தைகளுக்கு இதை கொடுப்பது தடை செய்யப்பட்டுள்ளது. குழந்தைகளுக்கு கொடுக்கும் போது குடல் விரிந்துவிட (Paralytic Ileus) வாய்ப்பு இருக்கிறது. ஆகவே, இந்த மருந்துகளை கொடுக்க வேண்டாம்.

Loperamide, Codeine போன்ற மருந்துகளை குழந்தைகளுக்கு கண்டிப்பாக கொடுக்கக் கூடாது. மூத்த குடிமக்கள் 12 மணி நேரத்துக்கு ஒரு முறை தேவைப்பட்டால் மட்டுமே எடுத்துக் கொள்ளலாம்.
பேதி நின்றாலும் நோய் காரணிக்கான மருந்துகளை உட்கொள்வது, சில நேரங்களில் ஈரலில் ஏற்படும் சீழ் கட்டிகள் மற்றும் அப்பெண்டிசைடிஸ் போன்ற அறுவை சிகிச்சை நோய்களுக்குக் கூட ஆரம்ப கட்டவைத்தியத்தினால், மருந்தினால், அறுவை சிகிச்சை இல்லாமல் பூரண குணமாக வாய்ப்புஇருக்கிறது.
வாந்தியுடன் திரவஉணவுகளை முழுங்க முடிந்து திட உணவுகளை முழுங்க முடியாமல் இருந்தால் உணவுக்குழாய் கேன்சராக இருக்கலாம். பேதி நின்றாலும் நோய் காரணிக்கான மருந்துகளை உட்கொள்வது, ஈரலில் ஏற்படும் சீழ் கட்டிகள் மற்றும் அப்பெண்டிசைடிஸ் போன்ற நோய்களுக்குக் கூட அறுவை சிகிச்சை இல்லாமலே குணமாகும் வாய்ப்பை அளிக்கும்.
நபி (ஸல்) அவர்கள் கூறினர்கள்: "தன் அன்பளிப்பைத் திரும்பப் பெறுபவன் வாந்தியெடுத்த பிறகு, அதை மீண்டும் தின்கின்ற நாயைப் போன்றவன் ஆவான். இதை அவர் அவர்கள் அறிவிக்கின்றார்கள். ஸஹீஹ் புகாரி : 2589.

**உடல் பேசும் மொழிகள் 8**
**உடல் - இரத்தத்தில் உள்ள நச்சை நான் தோல் வழியாக வெளியேற்றுகிறேன் என்று சொல்லும் மொழி – வியர்வை**



நமது உடலில் இரண்டு வகையான வியர்வை சுரப்பிகள் இயங்குகின்றன. ஒன்று, உடல் முழுவதும் இருக்கும் வியர்வை சுரப்பிகள். அது வியர்வை மட்டும் சுரக்கும்.
மற்றொன்று தலை, அக்குள், மர்ம உறுப்புகள் போன்ற இடங்களில் மட்டும் சுரக்கும். இந்த வியர்வை சுரப்பிகள், எண்ணெய் சுரப்பிகளுடன் சேர்ந்து மயிர்கால் வழியாக வியர்வையை சுரக்கும்.

நம் உடலில் வெப்ப நிலையை சீராக வைத்துக்கொள்ள வியர்வை பணியாற்றுகிறது. மேலும் உடலில் ஏற்படும் கழிவு பொருட்களை சிறுநீரகத்திற்கு தோழனாக நின்று வெளியேற்றுகிறது.
வியர்வை வழியாக தாது உப்புகள், உடலில் உள்ள நச்சுகள் வெளியேற்றப்படும். வியர்வை வெயிலில் காயும்போது வெண்மையாக உப்பு படர்வதை அனைவரும் உணரலாம்.
வியர்வையின் பணிகளை ஆளுமை செய்வது மூளையும், நரம்புகளும் தான். எனவே ஒவ்வொருவரின் உடல் இயக்கத்தை மையமாக கொண்டும் மனதை மையமாக கொண்டும் வியர்வை சுரக்கிறது.
வியர்வையின் தன்மைகள் ஆளுக்கு ஆள் மாறுபடும். ஒரு சிலர் சிறிய வேலை செய்தாலோ, மனதில் பயம் ஏற்பட்டாலோ, வியர்வையில் குளித்துவிடுவார்கள். ஒரு சிலர் தனக்கு வியர்வையே வராது என்று கூறுவதையும் கேள்விப்பட்டிருப்போம்.

சிலருக்கு முகத்தில், தலையில், மார்பில், உள்ளங்கால்களில் மட்டும் அதிகமாக சுரக்கும். மாணவர்களில் சிலருக்கு உள்ளங்கை யில் வியர்வை அதிகமாகி, தேர்வு எழுதும்போது அவஸ்தைப்படு கிறார்கள். அதனால் விடைத்தாள்கள்கூட நனைந்துவிடலாம்.
பொதுவாக வியர்வை வாடையை பலராலும் சகித்துக்கொள்ள முடியும். ஆனால் ஒரு சிலருக்கு வியர்வை துர்நாற்றமடிப்பது உண்டு. இதற்கு சருமத்தில் இருக்கும் நோய் நுண்கிருமிகள் மற்றும் உடலில் உள்ள நோய்களை குறிப்பிடும் தன்மையும் அடிப்படை காரணம்.

ஒருவர் காய்ச்சலில் படுத்திருக்கும்போது தோன்றும் வாடை, அவரது உடலில் இருந்து நோய்கிருமிகளின் கழிவுகள் துர்நாற்றத்துடன் வெளிப்படுவதை உணரச்செய்கிறது.
வியர்வை நிறமற்றது. ஆனால் ஒரு சிலருக்கு வியர்வை மஞ்சள் நிறத்தில் இருக்கும். அக்குள், மர்ம உறுப்புகளில் சுரப்பது தனித்தன்மையை காட்டுகிறது. ஒரு சிலருக்கு அணியும் துணிகள், உள்ளாடைகள் மஞ்சள் நிறத்தில் மாறுவதற்கு வியர்வை காரணமாக இருக்கும்.
சிலருக்கு வித்தியாசமாக ஒரு பகுதியில் மட்டும் வியர்வை ஏற்படும். ‘இதோ பாரு அவருக்கு மூக்கில் வேர்க்கிறது. கோபம் வருகிறது…! என்று மனதுடன் ஒருமைப்படுத்தி சிலர் பேசுவதை கேட்டிருக்கலாம்.

உடலில் வியர்க்காத உறுப்பு என்றால் அது உதடுகள் தான். உதட்டில் வியர்வை சுரப்பி இல்லை.
காய்ச்சல் ஏற்பட்டால் ஏற்படும் வியர்வை ‘சூடாக’ இருக்கும். மனப் பயம், மயக்கம் ஏற்படும்போது அதுவே ‘குளிர்ச்சியாக’ இருக்கும்.
அதுவும் ஒருநபர் மரண படுக்கையில் இருக்கும்போது சருமம் ‘களிமண்’ போல காட்சியளித்து, குளிர்ந்த வியர்வை அரும்புகள் தென்படும். அவருக்கு அவசர சிகிச்சை தேவைப்படுகிறது என்பதை அறிவுறுத்தும்.
தூங்கும் போது வியர்வை ஏற்பட்டால் அது உடல் இயக்க கோளாறுகளை பிரதிபலிக்கும். உடல் இயக்க கோளாறுகளான உடல் பருமன், ரத்த கொதிப்பு, நீரிழிவு நோய்களால் பாதிக்கப்பட்டவர்களுக்கு இவ்வாறு ஏற்படலாம்.

அக்குள், மர்ம உறுப்புகளில் தோன்றும் எண்ணெய் பசையுடன் கூடிய வியர்வைக்கு ஆண், பெண் இருபாலருக்கும் பால் உணர்வை தூண்டும் சக்தி உள்ளது. இது விலங்கினங்களில் அதிகமாக இருக்கும். இதன் அடிப்படையில்தான் ஆண், பெண் இருபாலருக்கும் பிரத்யேக வாசனை திரவியங்கள் விற்பனை செய்யப்படுவதை விளம்பரங்களில் பார்க்கலாம்.
அனஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் ஒளிரும் வெண்ணிறம் கொண்டவர்களாக இருந்தார்கள். அவர்களின் வியர்வைத் துளிகள் முத்துகளைப் போன்றிருந்தன. அவர்கள் நடந்தால் (பள்ளத்தில் இறங்குவதைப் போன்று முன்பக்கம்) சாய்ந்து நடப்பார்கள்.
அவர்களது உள்ளங்கையைவிட மென்மையான அலங்காரப் பட்டையோ சாதாரணப் பட்டையோ நான் தொட்டதில்லை.

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களது (உடல்) வாசனையைவிட சுகந்தமான கஸ்தூரியையோ "அம்பரை"யோ நான் நுகர்ந்ததேயில்லை. முஸ்லிம் : 4654.

அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள் (என் தாயார்) உம்மு சுலைம் (ரலி) அவர்களின் இல்லத்துக்கு வந்து, அங்கு உம்மு சுலைம் (படுத்து) இராதபோது அவர்களது விரிப்பில் படுத்து உறங்குவார்கள்.
ஒரு நாள் நபி (ஸல்) அவர்கள் வந்து உம்மு சுலைமின் விரிப்பில் படுத்துறங்கினார்கள். அப்போது அங்கு வந்த உம்மு சுலைம் (ரலி) அவர்களிடம், "இதோ நபி (ஸல்) அவர்கள் உங்கள் வீட்டில் உங்கள் விரிப்பில் உறங்கிக் கொண்டிருக்கிறார்கள்" என்று சொல்லப்பட்டது.

உடனே உம்மு சுலைம் (ரலி) அவர்கள் வந்(து பார்த்)தார்கள். நபி (ஸல்) அவர்களுக்கு வியர்த்திருந்தது. அவர்களது வியர்வை, படுக்கையில் ஒரு துண்டுத் தோலில் திரண்டிருந்தது.
உடனே உம்மு சுலைம், தமது நறுமணப் பெட்டியைத் திறந்து, அந்த வியர்வைத் துளிகளைத் துடைத்து தமது கண்ணாடிக் குடுவையொன்றில் அதைப் பிழிந்து சேகரிக்கலானார்கள்.
நபி (ஸல்) அவர்கள் திடுக்கிட்டு விழித்து, "உம்மு சுலைமே! என்ன செய்கிறாய்?" என்று கேட்டார்கள்.
அதற்கு அவர், "அல்லாஹ்வின் தூதரே! அதன் வளத்தை எங்கள் குழந்தைகளுக்காக எதிர்பார்க்கிறோம். (அதனால் தான் அதைச் சேகரிக்கிறோம்)" என்று கூறினார்கள்.
நபி (ஸல்) அவர்கள் "நீ செய்தது சரிதான்" என்று சொன்னார்கள். முஸ்லிம் : 4656.

**உடல் பேசும் மொழிகள் 9**
**உடல் - நான் வெப்பநிலையை சீர் செய்து இரத்தத்தில் உள்ள நச்சை முறிக்கப்போகிறேன் என்று சொல்லும் மொழி-உறக்கம்**



தூக்கம் மனிதனுக்கு அவசியத் தேவை. ஒருவருடைய ஆழ்ந்த தூக்கமே அவரை எப்போதும் விழிப்பு உடையவராக இருக்கச் செய்யும்.
ஆழ்ந்த தூக்கம் தான் மனிதனை ஆரோக்கியத்துடன் இருக்கச் செய்யும். இந்தத் தூக்கம் தான் உடலில் வளர்சிதை மாற்றம் நன்கு நடைபெற்று உடல் வளர்ச்சி அடைய பெரிதும் உதவுகிறது.
அனைத்து உறுப்புகளும் புத்துணர்வும் பலமும் பெற ஏதுவாகிறது. நோய் எதிர்ப்பு சக்தியை அதிகப்படுத்துகிறது. நரம்பு, தசை, எலும்பு சம்பந்தப்பட்ட மண்டலங்களைப் பலப்படுத்துகிறது.

மகிழ்ச்சியான வாழ்க்கைக்கு எது சரியில்லாமல் போனாலும் முதலில் பறி போவது தூக்கம் தான்.
தூக்கம் என்பது மனிதர்களுக்கு மிகவும் அவசியமான ஒன்று. ஒரு நாளின் வெற்றி என்பது அதற்கு முந்தைய இரவில் நாம் எவ்வளவு நேரம் தூங்கினோம் என்பதைப் பொருத்தே அமைகிறது.
இரவு சரியாக தூங்கவில்லையெனில் அடுத்த நாள் முழுவதும் பதட்டத்துடனும், கோபத்துடனும் பெரும்பாலானவர்களுக்கு அந்த நாள் செல்கிறது.
அன்றைய நாளின் சோர்வுக்கு மருந்தாகவும், அடுத்த நாள் வேலைக்கு விதையாகவும் இருப்பது நிம்மதியான தூக்கம் தான். தூக்கம் இரத்தத்திலுள்ள நஞ்சுப் பொருட்களை நீக்கி இரத்தத்தை சுத்தப்படுத்தும்.
தூக்கம் போனாலே நிம்மதி போய் விடும். ஆரோக்கியம் போய் விடும்.இன்றும் லட்சக்கணக்கானோர் தூக்கத்தைத் தொலைத்த வாழ்வை வாழ்ந்து வருகின்றனர்.
நிம்மதியான ஆழ்ந்த தூக்கத்திற்குப் பல வழிமுறைகள் உள்ளன. அவை.
இரவு தூக்கம் தான் நல்லது. பகலில் சாப்பிட்டப் பிறகு 20 நிமிடங்களுக்குத் தூங்கலாம். ஆனால், நீண்ட நேரம் தூங்கக் கூடாது.

மனித ஆரோக்கியத்தையே ஆட்டிப் பார்க்கும் தூக்கத்தைப் பெற முறையான உணவும், உடற்பயிற்சியும் அவசியம் என்கின்றனர் மருத்துவர்கள்.
நிம்மதியான தூக்கத்தைப் பெற நினைப்பவர்கள், அமைதியான, காற்று வசதி நன்கு கொண்ட அறையில் தூங்க வேண்டும்.
மெத்தை மற்றும் தலையணைகள் சரியான நிலையில் இருக்க வேண்டும்.காலையில் எழும் போது முதுகு வலி, கழுத்து வலி, உடல் வலி போன்ற தொந்தரவுகள் ஏற்பட்டால் உங்கள் படுக்கை சரியில்லை என அர்த்தம்.
சத்தம் இல்லாத சுற்றுச்சூழலில் தூங்குவதும் முக்கியம்._
_விளக்கு வெளிச்சத்தில் தூங்காமல், இருள் நிறைந்த அறையில் தூங்க வேண்டியது அவசியம்.
இரவு நேரத்தில் அதிக நீர் அருந்துவது உங்கள் தூக்கத்தை கெடுக்கக் கூடியது. தாகத்தால் தூக்கம் கெடாமலிருக்க தூங்குவதற்கு முன்னரே போதுமான அளவு தண்ணீர் குடித்து விட வேண்டும்.
அதே நேரம் இரவில் உடலில் அதிகமாக சேர்ந்துள்ள சிறுநீரை வெளியேற்ற நீங்கள் எழ வேண்டியிருக்கும்._
உடலின் கடிகாரத்தை முதலில் சீராக்குங்கள். சாப்பிடுவது, படுக்கைக்குச் செல்வது, எழுவது என அனைத்தையும் குறிப்பிட்ட நேரத்தில் செய்வதை வழக்கமாக்குங்கள்.

நேரத்திலேயே உறங்கி நேரத்திலேயே எழும் பழக்கத்தை உருவாக்குங்கள்.
முறையான நேரப்படி, சரியான உணவுகளைத் தேர்ந்தெடுத்து சாப்பிட்டால் தூக்கமின்மை தொந்தரவு தீரும்.
மன அழுத்தத்தையும் குறைக்க வேண்டும். இல்லை என்றால் தூக்கமின்மை தீராத துன்பத்தைக் கொண்டு வந்து சேர்த்து விடும்.

மனித வாழ்வில் மூன்றில் ஒரு பகுதி தூக்கம் தான். நாம் பகல் நேரத்தில் சுறுசுறுப்பாக இருக்க உதவுவது , இரவில் நாம் மேற்கொள்ளும் ஆழமான தூக்கம் தான்.
உடலும் ,மனமும் ஒருங்கே ஓய்வு எடுத்தால் தான் சிறந்த தூக்கம் உண்டாகும் .களைப்புற்ற உடல் உறுப்புகள் மற்றும் மனதிற்கு இயற்கை கொடுத்த ஓய்வு தான் தூக்கம் என்பது.
எல்லாவற்றிற்கும் மேலாக ஒழுக்கமும் , சுயகட்டுப்பாடும் இருக்கும் ஒருவருக்கு தூக்கம் என்பது ஒரு ஆனந்தமான பயணம்.இந்த ஆனந்தத்தினால் நல்ல ஆரோக்கியம் .
அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.
நீங்கள் தூக்கத்திலிருந்து எழுந்து உளூச் செய்தால் மூன்று முறை (நீர் செலுத்தி) நன்கு மூக்கைச் சிந்தி (தூய்மைப்படுத்தி)க் கொள்ளுங்கள். ஏனெனில், நீங்கள் (தூங்கும் போது) மூக்கின் உட்பகுதிக்குள் ஷைத்தான் தங்கியிருக்கிறான். என அபூ ஹுரைரா(ரலி) புகாரி : 3295.

## உடல் பேசும் மொழிகள் 10
## உடல் - நான் முறித்த நச்சை இதோ வெளியேற்றுகிறேன் என்று சொல்லும் மொழி - சிறுநீர் கழித்தல்




சிறுநீர் கழிப்பது பற்றி தெரியாத சில உண்மைகள்
நம் உடலில் தேவையானவற்றை ஊட்டச்சத்தாக, கொழுப்பாக பிரித்து எடுத்த பிறகு, வேண்டாதவைகள் உடலிருந்து சிறுநீராகவும் மலமாலவும் வெளியேற்றுகிறது.
மலம், மற்றும் சிறுநீர் உடலுக்கு வேண்டாதவை என்ற போதலும், ஒருவரது உடல் நலம் எப்படி இருக்கிறது?அவரது ஆரோக்கியம் சீர்குலைந்து வருகிறதா? என்பதை ஆராய்ந்து ,
ஒருவரது உடலில் என்ன நோய் தொற்று அல்லது நோய் தாக்கம் ஏற்பட்டுள்ளது என்பதை மலம் மற்றும் சிறுநீரில் ஏற்படும் மாற்றங்களை வைத்து கண்டறிய முடியும்!

ஒருநாளுக்கு ஒருவர் 7 முறை வரை சிறுநீர் கழிப்பது சாதாரணமாகும். இதை காட்டிலும், மிக குறைவாக அல்லது அதிகமாக சிறுநீர் கழிப்பது உங்கள் ஆரோக்கியத்தில் ஏதோ மாற்றம் ஏற்பட்டுள்ளது என்பதன் அறிகுறி.
நீங்கள் ஆரோக்கியமாக இருக்கிறீர்கள் என்றால் குறைந்தபட்சம் 7 நொடிகளாவது சிறுநீர் கழிப்பீர்கள். மிக அவசரமாக சிறுநீர் கழிப்பது போன்ற உணர்வு இருந்தும் 2 நொடிகள் மட்டும் சிறுநீர் கழிக்கிறீர்கள் என்றால் நீங்கள் ஏதோ தொற்றால் பாதிக்கப்பட்டுள்ளீர்கள் என அர்த்தம்.
உங்கள் சிறுநீரின் நிறத்தை வைத்தே உங்கள் உடல்நிலையை பற்றி அறிந்துக் கொள்ள முடியும்.
வெள்ளை (சுத்தமாக) - நீர்ச்சத்து அதிகமாக இருக்கிறது.
வெளிறிய மஞ்சள் - போதுமான அளவு நீர்ச்சத்து
மஞ்சள் - உடலில் நீரச்சத்து குறைந்து வருகிறது.
பிரவுன் - கல்லீரல் தொற்று / பழைய இரத்தம்.
சிவப்பு / பின்க் - தூய இரத்தம் சிறுநீரில் கலந்துவருகிறது / சிறுநீரக கோளாறு / புற்றுநோய்.
நீலம், பச்சை - தவறான மருந்துகள் உட்கொள்ளுதல்

உணவில் அதிகப்படியான சாயம் கலப்பு சிறுநீர் கழிக்கும் போது இனிப்பு வாசனை வருகிறது எனில், உங்களுக்கு நீரிழிவு / சர்க்கரை நோய் ஏற்பட்டுள்ளது என்பதன் அறிகுறி.
சிறுநீர் மிகவும் துர்நாற்றம் வீசுகிறது எனில், சிறுநீரகத்தின் வழியாக க்ளூகோஸ் மற்றும் புரதம் அதிகப்படியாக வெளியேறுகிறது என்று அர்த்தம்.

மருத்துவர்கள் ஒளிகுர்யா (OLIGURIA) எனும் ஓர் நிலை இருக்கிறது. இது, நீங்கள் போதுமான அளவு சிறுநீர் கழிப்பது இல்லை என்பதை வெளிக்காட்டுகிறது என்கின்றனர்.
நாம் கழிக்கும் சிறுநீரில் சோடியம், பொட்டாசியம் மற்றும் க்ளோரைட் போன்ற 3000 வகையிலான கூறுகள் இருக்கின்றன.
டூனா, காரமான உணவுகள், காபி போன்ற உணவுகளை அதிகமாக உட்கொள்வதால் உங்கள் சிறுநீரின் நாற்றத்தில் மாற்றம் உண்டாக்கும்.
300-500 மி.லி. அளவிலான சிறுநீரை அடக்கி வைத்துக் கொள்ள இயலும். ரோமர்கள் அவர்களது சிறுநீரைக் கொண்டு வாய் கொப்பளிக்கும் பழக்கம் கொண்டிருந்தனர்.சிறுநீரில் இருக்கும் அமோனியா பற்களை வெள்ளையாக வைத்துக் கொள்ள உதவும் என அவர்கள் எண்ணினார்கள்.
காட்டில் அல்லது ஆட்கள் இல்லாத இடத்தில் தொலைந்து போனாலோ, கையில் நீர் இல்லாத சமையத்தில் சிறுநீரை அருந்தலாம் என சிலர் கூறுவதுண்டு. ஆனால், இது தவறு. சிறுநீரில் இருக்கும் அதிகப்படியான உப்பு, உடலில் நீர் வறட்சி உண்டாக காரணியாக அமையும்.
PARAURESIS எனப்படுவது சிறுநீர் கழிக்க வெட்கப்படும் நிலை ஆகும். அருகில் யாரேனும் இருந்தால் சிலர் சிறுநீர் கழிக்க சங்கோஜப்படுவார்கள்.

குழந்தைகள் கருப்பையில் இருக்கும்போதே சிறுநீர்கழிக்க துவங்கி விடுவார்கள்.
நீச்சல் குளத்தில் குளிக்கும் போது கண்கள் சிவப்பது குளோரின் காரணத்தால் அல்ல. நீச்சல் குளத்தில் அதிகமாக சிறுநீர் கலப்பு ஏற்பட்டிருக்கிறது .
இதனால்தான் நபி (ஸல்) அவர்கள் :
ஓடாமல் தேங்கி நிற்கும் தண்ணீரில் உங்களில் எவரும் சிறுநீர் கழித்துவிட்டுப் பின்னர் அதில் குளிக்க வேண்டாம்' என்று இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்: என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார். புகாரி : 239.

## உடல் பேசும் மொழிகள் 11
## உடல் - உணவில் உள்ள சத்தை பிரித்து இரத்தத்தில் கலந்து, சக்கையை வெளியேற்றுகிறேன் என்று சொல்லும் மொழி - மலம் கழித்தல்.



மலம் எல்லோரும் கழிப்பது தான். இது இயற்கையில் நிகழ்வது. இதில் என்ன இருக்கப் போகிறது என்று நீங்கள் கேட்கலாம். இதில் உடல் நலமாக உள்ளதா என்ற அறிகுறிகள் நிறையவே தென்படும்.
பொதுவாக தினமும் மலம் கழிப்பது நம் உடல் நலத்திற்கு நல்லது. தினமும் மலம் வரவில்லை என்றால் உங்கள் உடலை கூர்ந்து கவனியுங்கள். மேலே கூறிய கூற்றில் உங்களுக்கு மலச்சிக்கல் உள்ளதா, இல்லையா என்று தெரிந்துக் கொள்ளலாம்.
நீங்கள் சற்றே குனிந்து உங்கள் மலத்தின் தன்மையையும், நிறமும் எப்படி இருக்கிறது என்று பாருங்கள். உங்கள் ஆரோக்கியத்தின் கண்ணாடி அதில் இருக்கிறது.
மலத்தில் ஏழு வித தன்மை
மலம் வெளியேறும் போது ஏழு வித தன்மை கொண்டு வெளியேறுகிறது. மலத்தின் ஒவ்வொரு தன்மையும் உங்கள் உடல் நலத்தின் நிலையை குறிக்கிறது.

முதல் தன்மை : மலம் சிறு சிறு பந்துகள் போல வெளியேறும். அப்படி வெளியேறும்போது சிறிது கஷ்டத்தை கொடுத்து வெளியேறும்.

அறிகுறி – உங்களுக்கு நாள்பட்ட மலச்சிக்கல் இருக்கலாம். உங்கள் உடலுக்கு நார்ச்சத்து மிக அதிகமாக தேவைப்படுகிறது.
இரண்டாம் தன்மை : மலம் சிறு சிறு உருண்டையாக இருக்கும். ஆனால் ஒன்றோடு ஒன்று ஒட்டிக்கொண்டு இருக்கும். மலம் கழிக்கும் போது லேசான அசௌகரியம் இருக்கும்.
அறிகுறி – உங்களுக்கு மிதமான மலச்சிக்கல் இருக்கலாம். உங்கள் உடலுக்கு நிறைய நார்ச்சத்து தேவைப்படுகிறது. நார்ச்சத்து உள்ள உணவுகளை இன்னும் அதிகமாக எடுத்துக் கொள்ள வேண்டும் என்றே குறிக்கிறது.
மூன்றாவது தன்மை : சாசேஜ் வடிவத்தில்மலம்வெளியேறும். அதன் மேல் வெடிப்புகள் காணப்படலாம். மலம் வெளியேறும் போது இலகுவாகவே வெளியேறும். நீங்கள் முக்கவோ முனகவோ வேண்டிய அவசியம் இருக்காது.
அறிகுறி – உங்கள் உடல் நலம் பொதுவாக நான்றாக இருக்கிறது என்று அர்த்தம்.
நான்காவது தன்மை : உங்கள் மலம் பாம்பு போல நீளமாக வெளியேறும். அதன் மேற்புறம் வழவழப்பாக இருக்கும். அவை வெளியேறும்போது மிகவும் சுலபமாக வெளியேறும். இதை தான் கச்சிதமான மலம் என்று கூறுவார்கள்.
அறிகுறி – உங்கள் உடல் ஆரோகியம் மிக நன்றாக இருக்கிறது என்று அர்த்தம்.
ஐந்தாவது தன்மை: உங்கள் மலம் மென்மையாக இருக்கும். நீளமாக இருந்தாலும், விட்டு விட்டு வெளியேறும் தன்மையோடு இருக்கும்.
அறிகுறி – உங்கள் உடல் நலத்தில் பெரிய சிக்கல் ஒன்றும் இல்லை தான். ஆனாலும் உங்கள் உணவு சரியான விகிதத்தில் அனைத்து சத்துகளும் உள்ளடங்கியதாக இருக்கிறதா என்று சரிபார்த்துக் கொள்ளுங்கள்.
ஆறாவது தன்மை : மலம் திடமும், திரவமும், கலந்த நிலையில் வெளியேறும். திடமாக வெளியேறும் மலம் சீரான மேற்பரப்பு இல்லாமல் இருக்கும்.

அறிகுறி – உங்களுக்கு மிதமான பேதி இருக்கலாம். நீங்கள் என்ன சாப்பிடுகிறீர்கள் என்பதில் சில நாட்களுக்கு கவனமாக இருங்கள். பேதி தொடர்ந்து ஏற்பட்டால் மருத்துவரை நாடுங்கள்.
ஏழாவது தன்மை : உங்கள் மலம் முழுவது திரவ நிலையில் இருக்கும். நீங்கள் மலம் கழிப்பது உங்கள் கட்டுப்பாட்டில் இல்லாமல் போகும். போய் உட்கார்ந்தவுடன் திறந்துவிட்ட அணைபோல பீய்ச்சி அடிக்கும். அடிக்கடி இப்படி கழிசலாக போனால் உங்கள் உடலில் உள்ள நீர்ச்சத்து குறையலாம்.
அறிகுறி – உங்களுக்கு மோசமான பேதி, அல்லது சீதபேதி இருக்கலாம். உடனே மருத்துவரை அணுகுங்கள். இந்த நிலையில் வரும் மலம் உங்கள் உடல் மோசமான நிலையில் உள்ளது என்பதை குறிக்கிறது.
ஆறு நிறங்களில் மலம்
நமது உடலில் இருந்து வெளியேறும் மலம் ஆறு நிறங்களில் இருக்கலாம். ஒவ்வொரு நிறமும் உங்கள் உடல் நிலை பற்றிய கதையை சொல்கிறது.
மஞ்சள் நிறத்தில் உள்ள மலம்
மஞ்சளும் களிமண் நிறமும் கலந்த நிறத்தில் உள்ள மலம்
நம் மனித மலத்தின் இயற்கையான நிறம் இது தான். இந்த நிறத்தில் உள்ள மலம், சிறிது வெளிறியோ, அடர்த்தியான நிறத்திலோ இருக்கலாம். ஈரலால் சுரக்கப்படும் பித்தநீரின் நிறத்தை இது பிரதிபலிக்கிறது. இந்த நிறத்தில் மலம் வந்தால் பொதுவாக உங்கள் உடல் நலமோடு இருக்கிறது என்று அர்த்தம்.
பச்சையான நிறத்தில் உள்ள மலம்

நீங்கள் சாப்பிட்ட உணவு, சரியாக செரிக்காமல், மிக துரிதமாக, உங்க செரிமான உறுப்புகளில் நகர்கிறது என்றால் உங்கள் மலம் இந்த நிறத்தில் இருக்கலாம்.
அதிகமான அளவில் கீரை சாப்பிட்டாலும், மலம் பச்சை நிறத்தில் இருக்கலாம். ஒருக்கால் கீரை சாப்பிடாமலே பச்சை நிறத்தில் உங்கள் மலம் இருக்குமானாலோ, தொடர்ந்தாற் போல பச்சை நிறத்தில் வருகிறது என்றாலோ, மருத்துவரை நாடுங்கள்.
முழுவதும் மஞ்சள் நிறத்தில் உள்ள மலம்
உங்கள் மலத்தில் அதிகமான கொழுப்பு இருக்கிறது என்று அர்த்தம். அவை எண்ணெய் போன்று இருந்தாலோ, நாற்றம் அதிகம் உடையதாக இருந்தாலோ, ஒழுங்காக உடலில் சத்து சேரவில்லை (MAL-ABSORPTION) என்பதை குறிக்கிறது. அடிக்கடி இப்படி தான் மலம் கழிக்கிறீர்கள் என்றால் மருத்துவரை நாடி பரிசோதித்துக் கொள்ளுங்கள்.
கருமையான நிறத்தில் உள்ள மலம்
உள்ளுறுப்புகளில் ரத்தக்கசிவு இருந்தால் கருமை நிறத்தில் உங்கள் மலம் இருக்கும். அநேகமாக இரைப்பைப்புண் (PEPTIC ULCER) காரணமாகவே இந்த நிறத்தில் மலம் இருக்கும்.
சிலருக்கு உள்ளுறுப்புகளில் புற்றுநோய் இருந்தால் ஏற்படும் ரத்தக் கசிவு காரணமாகவும் இந்த நிறத்தில் மலம் இருக்கலாம். நீங்கள் ஒருக்கால் இரும்பு சத்து மாத்திரைகளை எடுத்துக் கொண்டு இருந்தாலும், உங்கள் மலம் கருமை நிறத்தில் இருக்கலாம். இரும்பு சத்து மாத்திரை எடுக்காமல் மலம் கருமை நிறத்தில் இருக்கிறதென்றால், உடனே மருத்துவரை அணுகுங்கள்.
ரத்தத் திட்டுகளுடனோ, சிவப்பான நிறத்திலோ உள்ள மலம்

மலத்தில் ரத்தக்கசிவு காணப்பட்டால், மூலம், பவுத்திரம் போன்ற காரணங்களால் இருக்கும். சில நேரத்தில் மலக்குடலில் ஏற்பட்டு இருக்கும் புற்றுநோயின் காரணமாகக் கூட மலம் சிவப்பாக இருக்கலாம். எப்படி இருந்தாலும் மருத்துவரை அணுகி மலம் சிவப்பாக இருப்பதற்கான காரணத்தை கண்டுபிடியுங்கள்.
முக்கியமான விஷயம்
ரத்தம் கருப்பாக இருந்தால் வயிறு அல்லது சிறுகுடலின் முன்பகுதியில் ஏதோ பிரச்சனை இருக்கிறது என்று அர்த்தம். ரத்தம் சிவப்பாக இருக்கிறது என்றால், மலக்குடலின் கடை பகுதியில் பிரச்சனை இருக்கிறது என்று அர்த்தம்.

வெண்மை கலந்த வெண்களிமண் போன்ற நிறத்தில் உள்ள மலம்
உங்கள் பித்தநீர் சுரப்பில் ஏதாவது அடைப்பு ஏற்பட்டால் இது போன்ற வெளிர் நிறத்தில் மலம் வெளியேறுவது உண்டு. பித்தநீர் சரியானபடிக்கு வயிற்றுக்கு வந்து சேரவில்லை என்றால் உடனே காலம் தாழ்த்தாமல் மருத்துவரை நாடுங்கள்.
பித்தநீர் கற்கள் தடையை ஏற்படுத்தி இருந்தால் பித்தநீர் வயிற்றுக்கு இறங்காமல் மலத்திற்கு இந்த வெளிர் நிறத்தை கொடுக்கும். உடனே பரிசோதித்து பார்த்து விடுவது மிகவும் நல்லது.
கழிப்பிடத்திற்குச் சென்றபோது, (அல்லாஹும்ம இன்னி அவூதுபிக்க மினல் குபுஸி வல் கபாயிஸி)
’இறைவா! அருவருக்கத் தக்க செயல்கள், இழிவான பண்பாடுகள் ஆகியவற்றைத் தூண்டும் ஷைத்தானைவிட்டு உன்னிடம் பாதுகாவல் தேடுகிறேன்’ என்று கூறும் வழக்கமுடையவர்களாக நபி(ஸல்) அவர்கள் இருந்தார்கள்’ என அனஸ்(ரலி) அறிவித்தார். ஸஹீஹ் புகாரி

கழிவறைக்குள் ஸலாம் & பதில் ஸலாம்..
இப்னு உமர் (ரலி) அவர்கள் கூறியதாவது: அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் சிறுநீர் கழித்துக்கொண்டிருந்தபோது அவர்களைக் கடந்துசென்ற மனிதர் ஒருவர் சலாம் சொன்னார். அவருக்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் பதில் சலாம் சொல்லவில்லை. ஸஹீஹ் முஸ்லிம்
கழிவறையிலிருந்து வெளியேறும் போது ஓத வேண்டியவை..
நபி (ஸல்) அவர்கள் கழிப்பறையிலிருந்து வெளியேறும் போது ”குஃப்ரானக்க” என்று கூறுவார்கள்.. ஆயிஷா (ரலி) திர்மிதி

## இரு நபிமார்களின் அந்தஸ்துகள் 1




கிருஸ்துவ பாதரும், என் நண்பருமான (தன் பெயரையோ புகைப்படத்தையோ வெளியிட வேண்டாம் என்று கேட்டுக் கொண்டதற்கு இணங்க ) இந்த பாதர் கடந்த 4 ஆண்டுகள் ரொம்பவும் பிரியமான நன்பரானார்.
அடிக்கடி என் நிறுவனத்திற்கு வந்து நபிமார்கள் வரலாறு பற்றி நிறைய கேட்பார். ஜகரிய்யா (அலை) அவர்களின் மகன் யஹ்யா (அலை) அவர்களை 'எலியா ' என்பார்.
மேலும் ஆதம் (அலை) அவர்கள் முதல் எல்லா நபிமார்களையும் ஒருமையில்தான் அவர்களின் பைபிளின் படி உச்சரிப்பார்.
நபி இப்ராஹீம் (அலை) அவர்களை ஆப்ரஹாம் என்றும் , மூஸா (அலை) அவர்களை மோஸே என்றும் சிறப்பு அடைமொழி ஏதும் இல்லாமல் அழைப்பார் .

எல்லா நபிமார்களையும் தீர்க்கதரசி என்று குறிப்பிட்டாலும் ஒருமையில் தான் அழைப்பார். அவர் ஈஸா (அலை) அவர்களை மட்டும் ' கர்த்தரின் மகன் ' என்று குறிப்படுவார்.
கொரோனா காலத்தில் எங்கள் சந்திப்பு இல்லை. அவர் நேற்று வந்து சந்தித்த போது பேச்சு கொரோனா பக்கம் திசை திரும்பி , பைபிளும் விஞ்ஞானம் பற்றி கூறி உள்ளது. அதுவும் இறுதி கால முன்னறிவிப்புகளை கூறுகிறது என்று கீழ்க்கண்டவாறு எழுதி, இறுதியில் பைபிளின் ஒரு வசனத்தையும் சுட்டிக்காட்டினார்.

A=1, B=2, C=3 , D= 4 , E= 5, F= 6 , G=7, H=8, I=9, J=10,K= 11, L=12, M=13 N=14, 0=15, P=16, Q=17, R=18, S=19, T=20, U=21, V=22, W=23, X = 24, Y=25, Z=26

__________________________________________________

C= 03
O = 15
R = 18
O = 15
N = 14
A = 01
- - - - - - - - - - -
6 = 66 = 666 (ANTI CRISHT = தஜ்ஜால் )
தஜ்ஜாலின் படைதான் CORONA . கொரோனாவின் அழிச்சாட்டியம் தான் பைபிளின் இந்த வசனம்.
வெளிப்படுத்தின விஷேசம் 9 வது அதிகாரம்
வசனம்: 4 பூமியின் புல்லையும் பசுமையான எந்தப் பூண்டையும் எந்த மரத்தையும் சேதப்படுத்தாமல், தங்கள் நெற்றிகளில் தேவனுடைய முத்திரையைத் தரித்திராத மனுஷரை மாத்திரம் சேதப்படுத்த அவைகளுக்கு உத்தரவு கொடுக்கப்பட்டது.
பைபிளில் அந்த வசனத்தை தேடியபோது அது வெட்டுக்கிளி படையை குறிப்பிடுவதாக இருந்தது. சரி இருக்கட்டும்.
பாதர் மட்டும் அல்ல மற்ற கிருஸ்துவ சகோதரர்களும் திருக்குர்ஆனை பைபிளுக்கு பிறகு வந்த வேதம் என்பதை மறைமுகமாக ஏற்றுக்கொள்ளவில்லை .
மேலும் நபிமார்களின் அந்தஸ்துகள் பெரிதாக தெரிந்திருந்தாலும் அவர்கள் அனைவருமே ஒருமையில்தான் அழைக்கிறார்கள் .
திருக்குர்ஆன் ஷரீபில் இயேசுவைப் (ஈஸா அலைஹி வஸல்லம் ) பற்றி மிகவும் உன்னதமான நல்ல வார்த்தைகள் உபயோகப்படுத்தப்பட்டிருக்கின்றது என்றும்,
நமது நபிகள் நாயகம் (ஸல்) அவர்களைப் பற்றி அவ்வாறு சிலாகித்து சொல்லப்படவில்லை என்றும்,
ஏசுநாதர் அனேக வித அரிய பெரிய அற்புதங்களை எல்லாம் செய்தி காட்டினார் என்றும்,
நமது நபி பெருமானார் (ஸல்) அவர்கள் அப்படிப்பட்ட முஃஜிஜாத்துகளை செய்து காட்டவில்லை என்றும் அவர்கள் வீண் பெருமை பாராட்டுகின்றனர்.
மேலும் அதை பொது இடங்களிலும் பரப்பி வருகின்றனர். இதனை இஸ்லாமியர்கள் சிலரும் நம்புகின்றனர்.
இதனை தெளிவாக்கும் பொருட்டு "இரு நபிமார்களின் அந்தஸ்துகள் " என்ற தொடர் ஆரம்பிக்க வேண்டிய கட்டாயம் ஏற்பட்டுள்ளது .

## இரு நபிமார்களின் அந்தஸ்துகள் 2
## ( நபிமார்களின் தர்ஜாவை நிரூபிக்க வேண்டிய காலத்தின் கட்டாயம் )

تِلْكَ اٰيٰتُ اللّٰهِ نَـتْلُوْهَا عَلَيْكَ بِالْحَـقِّ وَاِنَّكَ لَمِنَ الْمُرْسَلِيْنَ
(நபியே!) இவை அல்லாஹ்வின் வசனங்களாகும்; இவற்றை நாம் உண்மையைக் கொண்டு உமக்கு ஓதிக் காண்பிக்கின்றோம்; நிச்சயமாக நீர் (நம்மால் அனுப்பப்பட்ட) தூதர்களில் ஒருவர் தாம். (குர்ஆன் : 2:252)
تِلْكَ الرُّسُلُ فَضَّلْنَا بَعْضَهُمْ عَلٰى بَعْضٍ ۘ مِنْهُمْ مَّنْ كَلَّمَ اللّٰهُ وَرَفَعَ بَعْضَهُمْ دَرَجٰتٍ وَاٰتَيْنَا عِيْسَى ابْنَ مَرْيَمَ الْبَيِّنٰتِ وَاَيَّدْنٰهُ بِرُوْحِ الْقُدُسِ وَلَوْ شَآءَ اللّٰهُ مَا اقْتَتَلَ الَّذِيْنَ مِنْ بَعْدِهِمْ مِّنْ بَعْدِ مَا جَآءَتْهُمُ الْبَيِّنٰتُ وَلٰـكِنِ اخْتَلَفُوْا فَمِنْهُمْ مَّنْ اٰمَنَ وَمِنْهُمْ مَّنْ كَفَرَ وَلَوْ شَآءَ اللّٰهُ مَا اقْتَتَلُوْا وَلٰـكِنَّ اللّٰهَ يَفْعَلُ مَا يُرِيْدُ
அத்தூதர்கள் - அவர்களில் சிலரைச் சிலரைவிட நாம் மேன்மையாக்கி இருக்கின்றோம்; அவர்களில் சிலருடன் அல்லாஹ் பேசியிருக்கின்றான்; அவர்களில் சிலரைப் பதவிகளில் உயர்த்தியும் இருக்கின்றான்;

தவிர மர்யமுடைய மகன் ஈஸாவுக்கு நாம் தெளிவான அத்தாட்சிகளைக் கொடுத்தோம்; இன்னும், ரூஹுல் குதுஸி (எனும் பரிசுத்த ஆத்மாவைக்) கொண்டு அவருக்கு உதவி செய்தோம்;
அல்லாஹ் நாடியிருந்தால், தங்களிடம் தெளிவான அத்தாட்சிகள் வந்த பின்னரும், அத்தூதுவர்களுக்குப் பின் வந்த மக்கள் (தங்களுக்குள்) சண்டை செய்து கொண்டிருக்க மாட்டார்கள்;
ஆனால் அவர்கள் வேறுபாடுகள் கொண்டனர்; அவர்களில் ஈமான் கொண்டோரும் உள்ளனர்; அவர்களில் நிராகரித்தோரும் (காஃபிரானோரும்) உள்ளனர்; அல்லாஹ் நாடியிருந்தால் அவர்கள் (இவ்வாறு) சண்டை செய்து கொண்டிருக்க மாட்டார்கள்; ஆனால் அல்லாஹ் தான் நாடியவற்றைச் செய்கின்றான். (குர்ஆன் : 2:253)

இவ்வசனங்களில் சொல்லப்பட்ட விஷயங்கள் பின்வரும் காலங்களில் நபிமார்களின் அந்தஸ்துகளுக்கிடையே கருத்து வேறுபாடு வரும் என்பதை சூசதமாக இறைவன் கூறிவிட்டான் போலும்.
இப் பூவுலகில் நமது நபிபெருமானார் திரு அவதாரம் புரியுமுன் பல்வேறு கூட்டத்தாரிடத்திலும், பல்வேறு காலத்திலும், பல்வேறு தேசத்திலும் பல்லாயிரக்கணக்கான நபிமார்கள் அனுப்பப்பட்டிருக்கிறார்கள் என்றும், அந்நபிமார்கள் 1,24 ,000 என்றும் ,
அவர்கள் எல்லோருமே இறைவனால் அனுப்பப்பட்ட பரிசுத்தம் நிறைந்த தீர்க்கதரிசிகளே என்றும் ஒத்துக்கொள்ள வேண்டியது ஒவ்வொரு முஸ்லிமுக்கும் மிக முக்கியக் கடமையாயிருந்து வருகின்றது.

பண்டைக் காலங்களிலே பல்லாயிரம் நபிமார்கள் தோன்றி மறைந்ததன் பின் இறுதியாக 1,400 வருடங்களுக்கு முன் வெவ்வேறு கூட்டத்தாருக்கு வெவ்வேறு நபிமார் அவதரிக்கவேண்டிய காலமெல்லாம் மலையேறிப்போய், உலகத்துக்கெல்லாம் பொதுவாகவும், எல்லாக் காலத்துக்கும் எல்லா கூட்டத்தாருக்கும் பொருத்தமாகவும் இருக்கக்கூடிய ஒரு விசுவமஹா நபி அவதரிக்க வேண்டிய காலம் உதயமாயிற்று.
அப்பொழுதுதான் சர்வலோகத்தும் சற்குருவாகிய முஹம்மத் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் திரு நபியவர்கள் அரப் தேசத்தின் தலைநகராகிய திரு மக்கா ஷரீபிலே அவரித்தார்கள்.
உலகத்து மனித இனங்கள் தனித்தனியாக இல்லாது ஒரே கூட்டத்தாராக ஐக்கியப்பட்டு விடக்கூடிய காலம் அப்பொழுது கிடைத்ததால் , உலகத்துக்கெல்லாம் ஒரே நபியாக நம் பெருமானார் முஹம்மத் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் திரு நபியாக அனுப்பப்பட்டார்கள்.

இவ்வுலகினில் இதுவரை தோன்றி மறைந்திருக்கும் எல்லா நபிமார்கள் மீதும் ஈமான் (உறுதி) கொள்ள வேண்டுவது நம்முடைய ஒரு முக்கியக் கடமையாயிருத்தலினால், முஸ்லிம்கள் நபிமார்களுக்குள் ஒருவரோடொருவரை ஒப்பிட்டுக் காட்டி, இன்னார் பெரியவரென்றும், இன்னார் சிறியவரென்றும் வித்தியாசம் பாராட்டுவதை தவறான காரியம் என்று கருதி வந்தனர்.
ஏனெனின், இறைவனால் அனுப்பப்பட்ட பரிசுத்த தீர்க்கதரிசிகளை ஒருவரோடொருவர் ஒப்பிட்டுப் பார்ப்பது கூடாத காரியமென்று மார்க்கக் கட்டளையும் வந்திருக்கின்றது.
உண்மையாகவே இவ்விஷயத்தைப் பற்றி நமது நபிபெருமானாரவர்கள் ஓர் உத்தரவும் பிறப்பித்திருக்கிறார்கள்:
"நபிமார்களைப் பற்றிப் பேசும்போது ஒருவரோ டொருவரை ஒப்பிட்டுக் காட்ட எத்தனிப்போமாயின், அவ்வாறு எத்தனித்துச் செய்யும் தர்க்க ஆவேசத்தில் நபிமார்களைப் பற்றிச் சொல்லத்தகாத வார்த்தைகளை எல்லாம் சொல்லும்படி ஒருகால் நேரிடக் கூடுமாதலினால், அப்படிப்பட்ட குதர்க்கத்தை அனாவசியமாகச் செய்யக்கூடாது" என்று கட்டளையிட்டிருக்கிறார்கள்.

இக்காரணத்தால்தான் எம்பெருமானாரவர்களை மற்ற நபிமார்களுடனே சாதாரணமாக ஒப்பிட்டுக் காட்டி, அதன்பின் இவர்களுடைய இனியில்லா மேன்மையையும் சிறப்பையும் பற்றி அல்லாஹுத் தஆலா மேற்கூறிய வேதவாக்கியத்தில் உறுத்திச் சொல்லவில்லை !
இதனால்தான் உண்மையில் நமது நபிகள் பெருமானார் (ஸல்) அவர்களின் உன்னதமான அற்புதங்களைப் பற்றியும், பரிசுத்தமான பராக்ரமம் பொருந்திய பராசக்தியைப் பற்றியும் பேசும்போதெல்லாம் நம் முஸ்லிம்கள், நம் பெருமானாரவர்களை வேறு ஒவ்வொரு நபிமாருடனும் ஒப்பிட்டுக்காட்டி, அவர்களுடைய சீரையும், சிறப்பையும் காட்டினும், நமது முஹம்மத் முஸ்தபா ரஸூல் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களின் சங்கையான சீரும் சிறப்பும் மேம்பட்டவை என்று உறுத்திக் காட்டுவதில் முனைப்பாக இருப்பதில்லை.
முஸ்லிம்களுக்கு இடப்பட்டிருக்கும் கட்டளையின்படி நாங்கள் எல்லா நபிமார்களின் மீதும் ஈமான் கொண்டிருப்பதால், அவர்களுள் சிலர் மேலானவர்கள் என்றும் மற்றும் சிலர் கீழானவர்கள் என்றும் வித்தியாசம் பாராட்டுவதில்லை;

ஆனால், நபிமார்களுக்குள் பல்வேறு வகையான படித்தரங்கள் உண்டென்று மட்டும் நமது குர் ஆன் ஷரீபு கூறுகின்றது:
“இதர ரசூல்மார்களை மிகைக்கும் படியாக இந்த ரஸூல்மார்களுள் சிலரை நாம் அமைத்திருக்கிறோம்"-(குர்ஆன், 2:253).
ஒரு நபியைக் காட்டினும் மற்றொரு நபி தர்ஜாவில் (படித்தரத்தில்) உயர்ந்தவர் என்று சொல்லுவதில் ஒன்றும் குற்றமில்லை; ஆனால் ஒரு நபியைப் பற்றிக் குறைவாகப் பேசுவதுதான் குற்றமாகக் கருதப்படுகின்றது.
மனிதர்களை எல்லாம் நல்வழிபடுத்தற்காகவே எல்லா நபிமார்களும் அல்லாஹுத்தஆலாவினால் பரிசுத்தமாகவே அனுப்பப்பட்டிருக்கிறார்கள்; ஆனால், அந்தந்த நபிமார்களும் செய்யவேண்டிய வேலைக்குத் தகுந்த வண்ணமாகவும் அவரவரின் தர்ஜாவும் வெவ்வேறு வகைப்பட்டிருந்தன.
ஆனால், எந்த ஒரு நபியையும் நம் முஸ்லிம்கள் தூஷிப்பதில்லை. இக் காரணத்தால்தான் எந்த நபியைப் பற்றியும் தாழ்ச்சியான அபிப்பிராயத்தைப் போதிக்கத் தக்க மார்க்கத்தை (உதாரணமாக, கிறிஸ்து மார்க்கத்தை) அனுஷ்டிக்க முஸ்லிம்கள் ஒருபோதும் இணங்குவதில்லை;
ஆனால், நமது நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் வேறு
நபிமார்களுடனே ஒப்பிட்டுக் காட்டி, அவர்களை (அஹ்மத் நபியை)த் தாழ்ந்தவர்களென்று எண்பிப்பதற்காக எதிர் மதவாதிகள் கேட்கும் குதர்க்க யுக்தியான வினாக்களுக்கு இப்பொழுது விடையளிக்க வேண்டிய அவசியம் நேரிட்டிருப்பதனால்,

நாமும் நமது திரு நபி (ஸல்) அவர்களை வேறு நபிமார்களுடனே ஒப்பிட்டுக்காட்டி (ஆனால், எந்த நபியைப் பற்றியும் குற்றம் கூறாமல்) அவர்களெல்லாரைக் காட்டினும், நம் பெருமானார் (ஸல்) அவர்களே தர்ஜாவில் மிகவும் மேம்பட்டவர்கள் என்றும் , நிரூபிக்க வேண்டிய அவசரமும், அவசியமும் ஏற்பட்டிருக்கின்றது.

**இரு நபிமார்களின் அந்தஸ்துகள் 3**
**(ஏன் நபி ஈஸா (அலை) அவர்கள் உயர்த்தப்பட வேண்டும் ? )**



பொதுவாகவே அனைத்து கிருத்துவ சகோதார்களும் ஈஸா (அலை ) அவர்களை எல்லோரைவிடவும் குறிப்பாக நபி (ஸல்) அவர்களை விடவும் உயர்ந்தவர் என்ற எண்ணம் இருக்கவேதான் செய்கிறது,
ஈசா (அலை) அவர்களை நம்பாமல் ஒரு முஸ்லிம் இருக்கவே முடியாது, ஆனால் கிருத்துவ சகோதார்கள், முஹம்மத் (ஸல்) அவர்களை குறிப்பிடவே மாட்டார்கள்,
நபி ஈஸா (அலை) அவர்கள் சிலுவையில் அறைந்து கொல்லப்பட்டார் என பைபிள் கூறுகிறது. நபி ஈஸா (அலை) அவர்கள் கொல்லப்படவில்லை, சிலுவையில் அறையப்படவில்லை என அல்குர்ஆன் கூறுகிறது. இரண்டு செய்திகளின் நம்பகத்தன்மையில் மிகப் பெரிய அளவில் வித்தியாசம் உள்ளன.
ஈஸா (அலை) அவர்களின் பிறப்பின் அற்புதம் குறித்தும் இரு வேதங்களுக்கும் முரண்பாடுகள் உள்ளன. பாலின சேர்க்கையின்றி இறைவனின் அத்தாட்சியாக நபி ஈஸா (அலை) பிறந்தார்கள். தொட்டில் பருவத்தில் பேசினார்கள் என்றெல்லாம் ஈஸா நபியின் பிறப்பின் அற்புதங்கள் பற்றி குர்ஆன் கூறுகிறது.
முடிவில் - இறுதி நாளின் அத்தாட்சியாக ஈஸா (அலை) அவர்கள் மீண்டும் திரும்பப் பூமிக்கு வரவிருக்கிறார்கள் என்பதையும் குர்ஆன், சுன்னா சுட்டிக் காட்டியுள்ளது.

ஈஸா (அலை) அவர்களின் பிறப்பு, யூதர்கள் அவரைக் கொலை செய்ய முயலும்போது, இறைவன் அவரைக் கைப்பற்றித் தன்னளவில் உயர்த்திக்கொண்டது, இன்னும் அவர்கள் உயிருடன் வாழ்வது, இறுதி நாளின் சமீபத்தில் மீண்டும் பூமிக்கு இறங்கி வந்து வாழ்ந்து மரணிப்பது...
இவையெல்லாம் இறைத்தன்மைக்கு மட்டும் உரிய தனிச் செயலாகும். இதற்கான காரணங்கள் என்ன ? என்று அவனை யாரும் கேள்வி கேட்க முடியாது!
அவன் செய்பவை பற்றி எவரும் அவனைக் கேட்க முடியாது. ஆனால், அவர்கள் தாம் (அவர்கள் செய்யும் செயல்கள் பற்றி) கேட்கப்படுவார்கள். (அல்குர்ஆன் 21:23)

நபி ஈஸா (அலை ) வானுலகுக்கு உயர்த்தப்பட்டது ஏன் ? என்று கிறிஸ்தவர்கள் கேட்பதற்கு ஒரே ஒரு காரணம் மட்டுமே இருக்க முடியும். நபி ஈஸா
'இறைமகன்' என்று அவர்களில் ஒருசாரார் நம்புவதால், மகனைக் காப்பாற்றி இறைவன் தன்னளவில் உயர்த்திக்கொண்டான் என்பதை நிறுவிட இது போன்ற சம்பங்களை சான்றாகக் காட்டுவர்.
குர்ஆன் மீது நம்பிக்கை கொள்ளாதவர் ஈஸா இறைமகன் என்பதற்கு குர்ஆனிலிருந்து சான்றுகள் தந்தால் அது எவ்வாறு இருக்கும் என்பதை படிப்பவர்களின் சிந்தனைக்கே விட்டுவிடுவோம்.
மேலும், ஈஸா நபியின் பிறப்பு மற்றும் வரலாற்றின் காரணம் இன்னதென்றுக் குறிப்பிட்டுச் சொல்ல முடியாது என்றாலும், நபி ஈஸா (அலை) அவர்களை யூதர்கள் கொன்றுவிட்டனர் என்று சொல்லிவந்தது அப்பட்டமான பொய் என்று குர்ஆன் மறுக்கிறது.

நபி ஈஸா (அலை) அவர்களின் மரணம்.

இறைத்தூதர் ஈஸா (அலை) அவர்கள் மீது யூதர்களுக்கு கடுமையான - அளவு கடந்த வெறுப்பு இருந்தது. பழமையில் ஊறி, மக்கிப் போனவர்களுக்கு சத்தியத்தை எடுத்துக் கூறுபவர்கள் மீது ஏற்படும் ஆத்திரமும், வெறுப்பும் வழக்கமாக ஈஸா நபியின் மீது யூதர்களுக்கு ஏற்பட்டது.

நபி ஈஸா (அலை) அவர்களின் அன்னை மரியமின் மீது அவதூறு சுமத்தி, நபி ஈஸா (அலை) அவர்களை வேசியின் மகன் என்று யூதர்கள் இழிவுபடுத்தினார்கள். ஈஸா இறைத்தூதர் அல்ல என்றும் நிராகரித்தனர்.
சத்தியத்தை ஓதும் நபி ஈஸா (அலை) அவர்களின் மீது ஆத்திரம் கொண்ட யூதர்கள் தங்கள் அதிகாரத்தைப் பயன்படுத்தி ஈஸா நபியைக் கொன்றுவிட திட்டம் வகுத்தார்கள். அத்திட்டம் அவர்கள் அறியாமலேயே இறைவனால் முறியடிக்கப்பட்டது.
முஹம்மது நபி (ஸல்) அவர்கள் இஸ்லாம் மார்க்கதைப் பிரச்சாரம் செய்த காலத்தில் - திருக்குர்ஆன் அருளப்பட்டுக் கொண்டிருந்த காலத்தில் - யூதர்கள் மர்யமின் மகன் ஈஸாவை நாங்கள் தான் கொன்றோம் என்று செல்லிக் கொண்டிருந்தார்கள். மர்யமின் மகன், இறைத்தூதர் ஈஸா கொல்லப்பட்டு விட்டார் என்றே யூதர்கள் நம்பிக் கொண்டிருந்தனர். இதை மறுத்து இறைவசனம் அருளப்பட்டது
"அவர்கள் (ஏக இறைவனை) மறுத்ததாலும், மர்யமின் மீது மிகப் பெரும் அவதூறை அவர்கள் கூறியதாலும், அல்லாஹ்வின் தூதரான மர்யமின் மகன் மஹீஹ் எனும் ஈஸாவை நாங்களே கொன்றோம் என்று அவர்கள் கூறியதாலும், (இறைவன் முத்திரையிட்டான்) அவரை அவர்கள் கொல்லவில்லை. அவரைச் சிலுவையிலும் அவர்கள் அறையவில்லை.

மாறாக அவர்களுக்கு ஆள் மாறாட்டம் செய்யப்பட்டது. இதில் முரண்பட்டோர் சந்தேகத்திலேயே உள்ளனர். ஊகத்தைப் பின்பற்றுவதைத் தவிர அவர்களுக்கு இது குறித்து அறிவு இல்லை. அவரை அவர்கள் உறுதியாகக் கொல்லவே இல்லை. (திருக்குர்ஆன், 4:156,157)
இறைத்தூதர் ஈஸா (அலை) அவர்களை யூதர்கள் கொன்றார்கள் என்ற சம்பவத்தை திட்டவட்டமாக திருக்குர்ஆன் மறுத்துப் பேசுகின்றது. நபி ஈஸா (அலை) அவர்களை யூதர்கள் உறுதியாகக் கொல்லவில்லை என்று மறுப்பதுடன் சிலுவையிலும் அவரை அறையவில்லை என்றும் உரைக்கின்றது. யூதர்கள் நபி ஈஸாவைக் கொன்றதாகச் சொல்வது வெறும் யூகத்தைத் தவிர அதில் உண்மை இல்லை எனவும் இறைவசனம் கூறுகின்றன.
ஏன் மறுக்கின்றது?

நபி ஈஸா (அலை) அவர்களின் மரணத்தை இஸ்லாம் ஏன் மறுக்க வேண்டும்? மறுப்பதால் இஸ்லாத்திற்கு என்ன? இந்தக் கேள்விகள் எழுவதைத் தவிர்க்க இயலாது!
''அல்லாஹ்வின் வசனங்களை மறுப்போராக அவர்கள் இருந்தும், நியாயமின்றி நபிமார்களைக் கொன்றதும் இதற்குக் காரணம்'' (திருக்குர்ஆன், 2:61,91. இன்னும் பார்க்க:. 3:21,112,181. 4:155. 5:70)
நபி ஈஸாவைக் கொன்றதாகச் சொல்லும் யூதர்கள், ஈஸாவுக்கு முன்பும் நபிமார்களைக் கொன்றிருக்கிறார்கள் என இறைவசனம் கூறுகின்றது. எத்தனையோ நபிமார்களை நியாயமின்றி கொலை செய்த யூதர்கள், ஈஸாவையும் கொன்றார்கள் என்று எடுத்துக்கொள்ளாமல், யூதர்கள் ஈஸாவைக் கொன்றார்கள் என்பதை மட்டும் இறைமறை மறுக்கிறதென்றால் ஈஸா (அலை) கொல்லப்படாமல் இன்றும் உயிரோடு இருக்கிறார் என்று அடுத்த வசனம் விளக்குகின்றது.
''மாறாக அவரை அல்லாஹ் தன்னளவில் உயர்த்திக் கொண்டான். அல்லாஹ் மிகைத்தோனும், ஞானமுடையோனாகவும் இருக்கிறான்'' (திருக்குர்ஆன் 4:158)
நபி ஈஸாவை உயிருடன், தூல உடலோடு இறைவன் தன்னளவில் உயர்த்திக்கொண்டான். இன்றளவும் அவர் உயிருடன் இருக்கிறார். அதாவது பூமியில் மனிதர்கள் உண்டு, உறங்கி மலஜலம் கழித்து, வாழ்க்கையை சுகித்து வாழ்வது போல் அல்லாமல் ஈஸாவுக்கென இறைவன் அமைத்த தனி உலகில் அவர் உயிருடனிருக்கிறார். அதை இறைவனைத் தவிர எவரும் அறிந்துகொள்ள இயலாது, இறைவன் அறிவித்ததைத் தவிர.
மீள் வருகை
''அவர் (ஈஸா) இறுதி நாளின் அடையாளமாவார்''
(குர்ஆன், 43:061)

''என் உயிர் எவன் கையில் உள்ளது அ(ந்த இறை)வன் மீது சத்தியமாக! விரைவில் (உலக அழிவுக்கு முன்) மர்யமின் மைந்தர் (ஈஸா-அலை) உங்களிடையே இறங்கவிருக்கிறார். அவர் சிலுவையை உடைப்பார், பன்றிகளைக் கொல்வார், ஜிஸ்யா (எனும் காப்பு) வரியை வாங்க மறுப்பார்.
அப்போது செல்வம் (பெருகி) வழிந்தோடும். எந்த அளவுக்கென்றால் அதை வாங்கிக்கொள்ள எவரும் இருக்கமாட்டார்'' என்று இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள். (தமிழ் புகாரி, 2222, 2476, 3446. தமிழ் முஸ்லிம், 242-246. திர்மிதீ, இப்னுமாஜா)
இன்னும், தன்னை இறைவன் என்று வாதிட்டு, மக்களை வழிகெடுக்கும் மஸுஹு தஜ்ஜால் (ANTI CHRIST) என்ற மகாப் பொய்யன். இவன் உலக அழிவு நாளின் நெருக்கத்திற்கு முன்னர் வெளிப்படுவான். இறுதி நாளின் அத்தாட்சியாக, விண்ணிலிருந்து இறங்கவிருக்கும் நபி ஈஸா (அலை) அவர்கள் இவனைக் கொல்வார்கள் என்றும் நபி முஹம்மது (ஸல்) அவர்களால் பல முன்னறிவிப்புகள் செய்யப்பட்டுள்ளன.
மதீனாவில் இப்னு ஸய்யாத் என்றச் சிறுவனை தஜ்ஜால் என்று சந்தேகிக்கும் சூழ்நிலையில் நபித்தோழர் உமர் (ரலி) அவர்கள், ''அல்லாஹ்வின் தூதரே! இவனைக்கொல்ல எனக்கு அனுமதி வழங்குங்கள்'' என்று கேட்கிறார்.

அதற்கு, இவன் அவனாக (தஜ்ஜலாக) இருந்தால் இவனைக் கொல்லும் அதிகாரம் உமக்கு வழங்கப்படவில்லை. இவ் அவனாக (தஜ்ஜலாக) இல்லையென்றால் இவனைக் கொல்வதில் உமக்கு எவ்விதப் பயனுமில்லை என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.
(நபிமொழியின் சுருக்கம். புகாரி, முஸ்லிம். தஜ்ஜாலைத் தீர்த்துக்கட்டும் பணியை ஈஸா நபியிடம் இறைவன் ஒப்படைத்திருக்கிறான் என்ற கருத்தில் அமைந்துள்ள நபிமொழி)

ஈஸா நபி மரணிக்கவில்லை!
ஈஸா நபியை இறைவன் தன்னளவில் உயர்த்திக்கொண்டான்!
ஈஸா நபி இன்றும் தமது இறைவனிடத்தில் உயிருடன் இருக்கிறார்!
எதிர்காலத்தில் மர்யமின் மகன் ஈஸா (அலை) அவர்கள் விண்ணிலிருந்து இப்புவிக்கு இறங்கிவருவார்!
மக்களிடையே நேர்மையுடன் தீர்ப்பளிக்கும் நீதிபதியாகத் திகழ்வார்.
சிலுவையை உடைப்பார், பன்றிகளைக் கொல்வார், ஜிஸ்யா வரியை வாங்க மறுப்பார்.
இத்தருணத்தில் தஜ்ஜால் - (ANTI CHRIST) - வெளிப்படுவான்.
இஸ்ரேலின் தலைநகருக்கு அருகேயுள்ள லுத்து எனும் இடத்தில் வைத்து மர்யமின் மகன் ஈஸா தஜ்ஜாலைக் கொல்வார்.

இவையெல்லாம் எதிர்காலத்தில் நிகழவிருக்கும் சம்பவங்களைக் குறித்து இஸ்லாத்தின் முன்னறிவிப்புகள். ஈஸா நபி மீண்டும் இப்புவிக்கு இறங்கி வரும்போது அவர் கொல்லப்பட்டார் என்ற யூதர்களின் கூற்று உண்மையல்ல என்றாகிவிடும். எனவே, ஈஸா நபியை யூதர்கள் கொல்லவில்லை, அவரைச் சிலுவையில் அறையவுமில்லை, இறைவன் அவரை தன்னளவில் உயர்ததிக்கொண்டான் என ஈஸாவின் மரணத்தை ஆணித்தரமாக இஸ்லாம் மறுக்கிறது.

மறுப்பதால் இஸ்லாத்திற்கு என்ன?
நபிமார்களிடையே வேற்றுமை இல்லை. அதே நேரத்தில் இறைவன் நபிமார்களில் சிலரைவிடச் சிலரை மேன்மையாக்கியிருக்கிறான்.
நபி ஈஸா (அலை) அவர்களின் சிறப்பு, ஆண் மகனின் மரபணு இன்றி இறைவனின் கட்டளைப்படி, கன்னி மர்யமின் மைந்தராகப் பிறந்தார். தொட்டில் குழந்தையாக இருக்கும்போது பேசினார். அவர் இறைத்தூதர் என்பதற்கான பல அற்புதங்களை இறைவனின் அனுமதியோடு நிகழ்த்திக்காட்டினார். இன்றுவரை மரணிக்காமல் உயிருடன் இருக்கிறார். இவையெல்லாம் ஈஸா நபியைக் குறித்து உயர்வாகச் சொல்லப்பட்டவை. மாறாக களங்கப்படுத்தும் நோக்கமல்ல!
இதுவரை மரணிக்காமல் இருக்கும் மனிதரைப் பற்றி அவர் மரணிக்கவில்லை என்று எவ்வாறு அறிந்து கொள்வது? என்ற சந்தேகம் நீங்க அவர் மறுபடியும் இவ்வுலகிற்கு வரவிருக்கும் சம்பவமே நிரூபணமாகும்! எதிர்காலத்தில் ஈஸா நபி இவ்வுலகிற்கு வரும்போது அவர் கொல்லப்படவில்லை என்ற இஸ்லாத்தின் மறுப்பு உண்மையாகும்... அதை உண்மைப்படுத்த எதிர்காலத்தில் நிகழவிருக்கும் பலச் செய்திகளை இஸ்லாம் முன்னறிவிப்புச் செய்துள்ளது.
ஆனால், ஈஸா நபி இவ்வுலகிற்கு மீண்டும் வரும்போது, ஈஸா நபி கொல்லப்பட்டார் - நாங்கள்தான் அவரைக் கொன்றோம் என்ற யூதர்களின் கூற்று உண்மையல்ல வெறும் யூகம்தான் என்றாகிவிடும்.
குறிப்பு: திருக்குர்ஆன் பைபிளிலிருந்து காப்பியடிக்கப்பட்டது என்ற கருத்துடையவர்கள், நபி ஈஸாவின் மரணம் குறித்து இரண்டும் எவ்வளவு எதிரும் புதிருமாகக் கூறுகின்றன என்பதைப் படித்தாவது உணர வேண்டும் எனக் கோருகிறேன்.

## இரு நபிமார்களின் அந்தஸ்துகள் 4



நபி ஈஸா (அலை) மாத்திரம் அல்லாஹ்வின் அதிசயம் மூலம் பிறந்தார்கள் இது ஏன்?
இயேசுவின் வாழ்க்கையைப் பற்றி முழுமையான தெரிந்துக் கொள்ள வேண்டுமானால் அவர் எந்த சமுதாயத்திற்கு வந்து தம் பணியை சிறப்பாக செய்தாரோ அந்த சமுதாயம் பற்றி ஓரளவு தெரிந்துக் கொள்ள வேண்டும்.
இயேசுவின் வருகைக்கு ஏறத்தாழ 2000 - 2500 வருடங்களுக்கு முன் அப்ரஹாம் (இப்ராஹீம்) என்ற தீர்க்கதரிசி (இன்றைய இராக்கில்) தோன்றினார். அவருக்கு சாராள் (சபுரா) ஆகார் (ஹாஜரா) என்று இரு மனைவிகள். இதில் ஆகார் என்ற இரண்டாவது மனைவியான ஹாஜராவிற்கு இஸ்மவேல் என்ற இஸ்மாயீல் முதல் மகனாக பிறக்கிறார்கள். இஸ்மவேலையும் (இஸ்மாயீல்) அவர் தாயார் ஆகார் (ஹாஜராவையும்) ரையும் இறைப்பணிக்காக அரபு தேசத்தில் (சவூதி அரோபியாவில்) இருக்கும் மக்கா என்ற ஊரில் ஆப்ரஹாம் கொண்டு போய் விட்டு விடுகிறார்கள்.

இந்த விபரம் குர்ஆனிலும் இறைத்தூதர் முஹம்மத் (ஸல்) அவர்களின் வாழ்க்கையை போதிக்கும் புகாரி என்ற பெரு நூலிலும், பைபிளின் பழைய ஏற்பாட்டின் ஆதியாகாமத்தின் அதிகாரங்கள் 12, 13. 14, 15, 16. 17 ஆகியவைகளிலும் விரிவாக கூறப்பட்டுள்ளது.
(முக்கிய குறிப்பு) கிறிஸ்துவ மத குருமார்கள்; இயேசுவிற்குப் பிறகு எந்த நபியும் இல்லை என வாதிக்கிறார்கள். இதற்கு காரணம் ஆப்ரஹாமின் முதல் மகன் இஸ்மவேலின் வரலாற்றை அவர்கள் கண்டுக் கொள்ளாததேயாகும். இரண்டாவது மகனான ஈசாக்குவின் பக்கமே அவர்களின் கவனம் செலுத்தப்படுகிறது. அதனால் இஸ்மவேலைப் பற்றி பைபிள் என்ன சொல்கிறது என்பதை உரிய இடத்தில் பார்ப்போம்
ஆப்ரஹாம் (இப்ராஹீம்) அவர்களின் முதல் மனைவியான சாராள் என்ற சபுராவிற்கு ஈசாக்கு என்ற இஸ்ஹாக் அவர்கள் இரண்டாவது குழந்தையாக பிறக்கிறார்கள். இவர்களின் சந்ததி பல கிளைகளாக பிரிந்து பெருகி பல இடங்களில் வாழ்ந்தார்கள். இவர்களில் ஒவ்வொரு சந்ததியினருக்கும் நேர்வழிக் காட்ட இறைவன் புறத்திலிருந்து தீர்கதரிசிகள் - இறைத்தூதர்கள் வந்துள்ளார்கள்.
ஈசாக்(இஸ்ஹாக்)குடைய மகனாக யாகோப்(யஃகூப்) என்ற தீர்கதரிசி பிறக்கிறார்கள். இவர்களே 'இஸ்ராயீல்' என்றும் அழைக்கப்பட்டார்கள். இவர்களின் சந்ததியில் வந்தவர்கள்கள் தான் யூதர்கள் என்று அழைக்கப்படக் கூடிய இஸ்ரவேலர்கள்.

அப்ரஹாம்(இப்ராஹீம்) அவர்கள் தம் மக்களுக்கு செய்த உபதேசத்தையே அவர்களின் மகன் ஈசாக்(இஸ்ஹாக்) அவர்களும், அவர்களுக்கு பின் மகன் வழி பேரன் யாகோப்(யஃகூப்) அவர்களும் செய்கிறார்கள். இந்த விபரங்கள் அனைத்தும் குர்ஆனில் வருகிறது.
'(ஆப்ரஹாம் ஆகிய) அவருக்கு அவருடைய இறைவன் ''எனக்கு நீர் கீழ்படியும்'' என்று கூறியதும் ''அகிலத்தாரின் இரச்சகனுக்கு நான் கீழ்படிந்து விட்டேன்'' என்று கூறினார் (அல் குர்ஆன் 2:131)
இதையே தம் மக்களுக்கு அவர்கள் நல்லுரையாகவும் கூறினார்கள்.
(இஸ்ரவேலாகிய) யஃகூபும் '' என் மக்களே! நிச்சயமாக இறைவன் இ(ஸ்லா)ம் மார்க்கத்தையே உங்களுக்கு தேர்ந்தெடுத்துள்ளான். எனவே நீங்கள் (அந்த ஏக இறைவனுக்கு) முற்றிலும் கீழ் படிந்தவர்களாக அன்றி மரணித்து விட வேண்டாம்'' என்கிறார்கள். (அல் குர்ஆன் 2:132)
யாகோபிற்கு மரணம் நெருங்கியதும் அவர் தம் மக்களிடம் கேட்கிறார் ''எனக்கு பின் நீங்கள் யாரை வணங்குவீர்கள்?''

மக்கள் பதில் சொல்கிறார்கள் ''நீங்கள் வணங்கிய அந்த வணக்கத்திற்குறியவனும் உங்கள்(குடும்ப) முன்னோர்களான அப்ரஹாம்(இப்ராஹீம்) இஸ்மவேல்(இஸ்மாயீல்) ஈசாக்(இஸ்ஹாக்) ஆகியோர் வணக்கத்திற்குறியவனாக ஏற்று வணங்கிய அந்த ஒரே இறைவனையே வணங்குவோம்'' ( குர்ஆன் 2:133)

இப்படி பல இறைத்தூதர்களிடமிருந்து அறிவுரைகளைப் பெற்ற யூதர்கள் பின்னாளில் கடின சித்தம் உள்ளவர்களாகவும் எத்தகைய கொடுமையை செய்வதற்கும் அஞ்சாதவர்களாகவும் மாறிப்போனர்கள். இத்தயை மக்களிடம் தான் இயேசு(ஈஸா) அவர்கள் பிரசாரம் செய்வதற்காக வருகிறார்கள் கடைசியாக.
இயேசுவிற்கு முன்னால் மோஸே (மூஸா) அவர்கள் அதே மக்களை வந்து சந்திக்கிறார்கள்.
''நாம் மூஸாவிற்கு திட்டமாக வேதத்தை கொடுத்தோம். அவருக்கு பின்னால் தொடர்ச்சியாக இறைத்தூதர்களை அனுப்பிக் கொண்டிருந்தோம். மரியாளின் (மர்யமின்) குமாரர் இயேசு(ஈஸா)விற்கு தெளிவான அத்தாட்சிகளை வழங்கியும் பரிசுத்த ஆத்மாவைக் கொண்டு அவரை பலப்படுத்தியும் வைத்தோம்.
(யூதர்களே) உங்கள் மனம் விரும்பாததை (நம்முடைய) எந்த தூதர் உங்களிடம் கொண்டு வந்தாலும் நீங்கள் பெருமையடிக்கிறீர்கள். ஒரு சாராரை பொய்படுத்தினீர்கள் ஒரு சாராரை கொலையும் செய்தீர்கள்.'' (அல் குர்ஆன் 2:87)
மோஸே அவர்களுக்க பிறகு இறைவன் தொடர்சியாக யூதர்களுக்காக தீர்கதரிசிகளை அனுப்பிக் கொண்டிருந்தான். அப்படி அனுப்பப்பட்ட தீர்கதரிசிகள் யூதர்களால் ''பொய்பிக்கப்பட்டார்கள்'' அல்லது ''கொலை செய்யப்பட்டார்கள்'' என்ற விபரம் மேற்கண்ட வசனத்தில் கிடைக்கின்றன. பொய்பிப்பதற்கும் கொலை செய்யப்பட்டதற்கும் என்ன காரணம்?

அதே வசனத்தில் விடையும் கிடைத்து விடுகிறது. 'உங்கள் மனம் விரும்பாததை எந்த தூதர் உங்களிடம் கொண்டு வந்தாலும்..' என்ற இறைவனின் வார்த்தைகள், யூதர்கள் அவர்களின் மன விருப்பத்திற்கு மாற்றமாக - அவர்களை நல்வழிப்படுத்தக் கூடிய எந்த செய்தியையும் ஏற்றுக் கொள்ளும் நிலையில் இல்லை.
ஒரு கொள்கை நமக்கு பிடிக்காவிட்டால் அதை விட்டு நாம் ஒதுங்கிப் போகலாம் அல்லது அதை விமர்சிக்கலாம் இதை நாம் உலகில் இன்றும் பார்க்கிறோம். ஆனால் தாம் விரும்பாத ஒரு கொள்கையை - செய்தியை சொல்பவர்களை கொலை செய்யும் மனப்பக்குவம் பெற்றவர்களை கண்டிருக்கிறோமா... யூதர்கள் அந்த காரியத்தில் ஈடுபட்டார்கள். இதையும் அந்த வசனத்திலிருந்தே அறியலாம்.
இந்த சூழலில் தான் அந்த சமூகத்திற்கு வழிகாட்ட இயேசு (ஈஸா) தேர்ந்தெடுக்கப்படுகிறார்கள்.
இறைவனின் இந்த ஏற்பாட்டின் அடிப்படையில்தான் யூத வம்சத்தில் பிறந்த இயேசு(ஈஸா) அவர்களின் பாட்டி - அதாவது மரியாள்(மர்யம்) உடைய தாயார் - நல்லவர்களாக இருந்திருக்கிறார்கள். இறைவனுக்கு அஞ்சி அவனுக்கு மட்டும் வழிபட்டு நடந்த அந்த அம்மையாரின் பிரார்த்தனைக்காகவும்,
'இயல்பாக' சராசரியாக வந்த தூதர்கள் அனைவரும் பொய்பிக்கப்பட்டு கொலை செய்யப்பட்டதால் 'பிறப்பிலேயே அற்புதம் மிக்க ஒரு இறைத்தூதரை யூதர்களுக்காக அனுப்புவோம்' என்ற இறைவனின் ஏற்பாட்டின் படியுமே இயேசு(ஈஸா) அவர்களின் பிறப்பு நிகழ்கிறது.

இயல்பாக அனுப்பப்பட்ட இறைத்தூதர்கள் பொய்பிக்கப்பட்டு பலர் கொலையும் செய்யப்பட்டதால் கடின சித்தம் படைத்த யூதர்களை நல்வழி படுத்த இயல்புக்கு மாற்றமாக ஒரு அத்தாட்சி மிக்க இறைத்தூதரை அனுப்புவோம் என்ற இறைவனின் ஏற்பாட்டாலும், தன் வயிற்றிலும் சந்ததியிலும் சிறந்த குழந்தை உருவாக வேண்டும் என்ற இயேசுவின் தாய் வழி பாட்டியார் செய்த பிரார்த்தனையாலும் இயேசுவை இறைவன் தேர்ந்தெடுக்கிறான்.
(இயேசுவாகிய) அவர் (நம்முடைய) அடியாரேயன்றி வேறில்லை. அவர்மீது நாம் அருள் புரிந்து இஸ்ராயீலின் மக்களுக்கு அவரை ஓர் உதாரணமாக்கினோம் (குர்ஆன் 43:59) என்ற வசனம் பிரத்யேகமாக யூதர்களுக்கு இறைவன் வழங்கிய அத்தாட்சியை - நமது இரண்டாவது கூற்றை - மெய்ப்பிக்கிறது.
நிச்சயமாக இறைவன் ஆதாமையும், நோவாவையும், ஆப்ரஹாமின் சந்ததியினரையும், இம்ரானுடைய குடும்பத்தினரையும் அகிலத்தாரை விட மேலாக தேர்ந்தெடுத்துள்ளான். (அல் குர்ஆன் 3:33)
அவர்களில் அனைவரும் முந்தியவர்களின் சந்ததியினர்தான். (குர்ஆன் 3:34)
3:33 வது வசனத்தில் ஆதாம், நோவா, இப்ராஹிமுடைய சந்ததி என்றெல்லாம் இறைவன் குறிப்பிடுவதை நாம் அறிவோம். அதன் தொடர்ச்சியாக 'இம்ரானின் குடும்பத்தினர்' என்று இறைவன் கூறுகிறான். இந்த இம்ரான் குடும்பத்தில் ஒருவராகத்தான் இயேசு அவர்கள் பிறக்கிறார்கள்.
இயேசுவின் தாய் வழி பாட்டி - மரியாளின் தாய் - செய்த பிரார்த்தனை இயேசுவின் வருகைக்கு ஒரு முன்னுரையாக அமைந்தது.
மரியாளின் தாயார் கர்ப்பம் தரித்திருந்த போது ''இறைவா என் வயிற்றில் உள்ள குழந்தையை உனக்காக நேர்ந்து விட்டேன். அது முழுமையாக உனக்காக அர்ப்பணிக்கப்படும். இதை என்னிடமிருந்து நீ ஏற்றுக் கொள்வாயாக. நீயே செவியுறுபவனாகவும் அறிந்தவனாகவும் இருக்கிறாய்'' என்று இம்ரானின் மனைவி பிரார்த்தித்தார். (அல் குர்ஆன் 3:35)

அவர் குழந்தையை ஈன்றெடுத்த போது 'இறைவா.. நான் பெண்குழந்தையைப் பெற்று விட்டேனே..' என்றார். அவர் எத்தகையதை ஈன்றெடுத்தார் என்பதை இறைவன் நன்கறிவான். 'ஆண் பெண்ணைப் போன்றவனல்ல. நான் இவளுக்கு மரியம் (மரியாள்) என்று பெயரிட்டுள்ளேன். சபித்து துரத்தப்பட்ட (தீய சக்தியான) ஷைத்தானை விட்டு இவளுக்கும் இவளின் வழிதோன்றல்களுக்கும் உன் பாதுகாப்பை வேண்டுகிறேன்' என்று அவர் (மரியாளின் தாயார்) கூறினார் (குர்ஆன் 3:36)
இஸ்ரவேலர்களில் விதிவிலக்காக இறைவனை நம்பி - அவனுக்கு எதையும் இணையாக்காமல் கட்டுபட்டு நடக்கும் ஒரு நல்ல பெண்ணாக மரியாளின் தாயார் வாழ்ந்துள்ளார் என்பதை இந்த வசனங்களின் மூலம் விளங்கலாம்.

இவர் வாழ்ந்த காலகட்டத்தில் அந்த சமூகத்தின் மனப்பான்மை எப்படி இருந்தது என்பதை 2:87 வசனத்தின் மூலம் முதல் தொடரில் அறிந்தோம்.
இறைத்தூதர்கள் பொய்பிக்கப்பட்டு சிலர் கொலை செய்யப்பட்ட மட்டமான - மோசமான சூழ்நிலை நிலவி வருவதை மரியாளின் தாயார் கண்டு அனுபவிக்கிறார்கள். இந்த கொடுமையை எதிர்க்க தன் புறத்திலிருந்து ஏதாவது செய்ய வேண்டும் என்ற எண்ணம் கூட அவர்கள் இப்படி ஒரு பிரார்த்தனையை செய்ய தூண்டி இருக்கலாம்.

இங்கு தொடரும் அவலங்கள் சீக்கிரம் ஒரு முடிவுக்கு வராது என்பதை உணர்ந்தும், தான் ஒரு பெண் என்பதால் தன்னால் களத்தில் நின்று இந்த கொடுமையாளர்களை எதிர்க்க முடியாது என்பதாலும் தன் வயிற்றில் வளரும் குழந்தை பிறந்து வளர்ந்து இறை வழியில் தன்னை அர்ப்பணித்து இவர்களுக்கு பாடம் புகட்டட்டும் என்ற சிந்தனையாலும் அவர்கள் இந்த பிரார்த்தனையை வைத்திருக்கலாம்.
'என் வயிற்றில் உள்ளதை உனக்காக அர்ப்பணிக்கிறேன்' என்ற கூற்றை சிந்திக்கும் போது நாம் எழுதியவாறு உள்ள எண்ண ஓட்டங்கள் அந்த தாயின் மனதில் எழுந்திருக்கலாம் என்று யூகிக்க முடிகிறது.
அவர் ஒரு குழந்தையை பெற்றெடுக்கிறார் அது பெண் குழந்தையாகி விடுகிறது. அவர் எதிர்பார்த்த ஆண் குழந்தை கிடைக்கவில்லை. தன் எண்ணம் நிறைவேறாமல் போய்விடுமோ என்ற கவலையில் தான் 'நான் ஒரு பெண் குழந்தையை பெற்று விட்டேனே..' என்கிறார்.
ஆண் பெண்ணைப் போன்றவனல்ல.. என்ற அந்த தாயின் கூற்றும் 'இறைவனுக்காக தன்னை அர்ப்பணித்து போராட்ட களம் காணும் தகுதி ஆணுக்கு தான் இருக்க முடியும் ஆனால் பிறந்தது பெண்ணாகி விட்டதே..' என்ற கவலையின் சாயலில் தான் வெளிப்படுகிறது.

இருந்தும் அவர் தன் நம்பிக்கையை தளர்த்திக் கொள்ளாமல் குழந்தைக்கு மரியம் (மரியாள்) என்று பெயரிட்டு அதை இறைவனின் பாதுகாப்பில் ஒப்படைக்கிறார்கள்.
அவரை (மரியாளை) இறைவன் அழகிய முறையில் எடுத்துக் கொண்டான். அவரை அழகிய முறையில் வளர்த்தான். அவருக்கு ஜகரிய்யாவை பொறுப்பாளியாக்கினான்.(குர்ஆன் 3:37)
(உள்ளத் தூய்மையோடும் உயர்ந்த நோக்கத்திற்காகவும் இறைவனிடம் செய்யும் முறையீடுகள் (பிரார்த்தனைகள்) எத்தகைய மாற்றத்தை ஏற்படுத்தும் என்று முஸ்லிம்களுக்கு இதில் படிப்பனையுள்ளது.)
பைபிளின் புதிய ஏற்பாட்டின் நான்கு சுவிசேஷக்காரர்களான மாற்கு, மத்தேயு, லூக்கா, யோவான் இவர்களில் யாரும் குர்ஆனில் வரும் மரியாளின் தாயார் பற்றிய சம்பவங்களை குறிப்பிடவே இல்லை.
ஜகரிய்யா பொறுப்புதாரியாக்கப்பட்டார் என்பதிலிருந்து மரியாளின் தாயார் மரியாளை பெற்றவுடன் மரணித்து இருக்கக் கூடும் என்பதை யூகிக்கலாம்.
ஜகரிய்யா அவர்களிடம் வளரும் மரியாளுக்கு அவ்வப்போது சிற்சில அற்புதங்கள் நிகழ்கின்றன.
மரியாள் தங்கிக் கொள்ளும் அறைக்கு ஜகரிய்யா அவர்கள் செல்லும் போதெல்லாம் மரியாளிடம் இருக்கும் உணவு வகைகளை கண்டு 'மர்யமே! இது உனக்கு எங்கிருந்து கிடைத்தது? என்று கேட்கிறார்கள். அதற்கு மரியாள் இது இறைவன் கொடுக்கிறான். அவன் தான் நாடுவோருக்கு கணக்கின்றி வழங்குவான் என்கிறார்கள். (அல் குர்ஆன் 3:38)

இறைவனிடமிருந்து மரியாள் பெற்ற அறிவிப்பு.
மரியமே! இறைவன் உம்மை தேர்வு செய்து தூய்மையாக்கி அகிலத்தின் பெண்களை விட உன்னை சிறப்பித்துள்ளான் என்று வானவர்கள் நற்செய்திக் கூறுகிறார்கள். (குர்ஆன் 3:42)
மரியமே! உனது இறைவனுக்கு பணிந்து நடப்பாயாக, அவனுக்காக தலை தாழ்த்தி வணங்குவாயாக. குனிந்து வணங்குவோருடன் குனிந்தும் வணங்குவாயாக என்றும் வானவர்கள் கூறினார்கள். (குர்ஆன் 3:43)
இவை மறைவனா செய்திகளாகும். (முஹம்மதே.. இறைவனாகிய) நாமே இதை உமக்கு அறிவிக்கிறோம்.
மர்யமை யார் பொறுப்பேற்றுக் கொள்வது என்று முடிவு செய்ய அவர்கள் எழுதுகோல்களைப் போட்ட போதும், இது குறித்து அவர்கள் சர்ச்சை செய்த போதும் நீர் அவர்களுடன் இருக்கவில்லை. (அல் குர்ஆன் 3:44)
மரியாளை இறைவன் அகிலத்தின் பெண்களை விட தூய்மைப்படுத்தியதாகவும், அவரை இறைவன் தேர்ந்தெடுத்துக் கொண்டதாகவும் இந்த வசனங்களில் கூறப்படுகின்றன. கிறிஸ்துவ பிரச்சாரர்களால் இந்த வசனங்கள் தவறாக சித்தரிக்கப்பட்டு வருவதை நாம் பார்க்கிறோம்.
இறைவன் என்பவன் தனித்தவன், பெறப்படாதவன், யாரையும் பெற்று தாயாகவோ தந்தையாகவோ ஆகாதவன், எத்தகைய தேவையும் அற்றவன், அவனுக்கு நிகராக எதுவுமில்லாதவன் என்றெல்லாம் இஸ்லாம் இறைவனுக்கு இருக்க வேண்டிய தனித்தகுதிகளை - இறைவனைத் தவிர பிறருக்கு இருக்கவே முடியாத தகுதிகளை - உலகில் முழங்கி அந்த சத்தியத்தின் பக்கம் மக்களை ஈர்த்து வளர்ந்துக் கொண்டு வருவதை அறியாதவர்களல்ல இவர்கள். இருப்பினும் இவர்களின் 'திரித்துவ' கொள்கையை மக்களிடம் - குறிப்பாக முஸ்லிம்களிடம் - திணிக்க திரித்தல் கலையை கையாண்டு வருகிறார்கள்.

யூதர்களின் கொடுமையை கண்டு அதை எதிர்க்க தன் பங்களிப்பாக தன் வயிற்றில் வளர்வதை இறைவனுக்கு அர்ப்பணிக்க முடி செய்து அதை கர்த்தரிடம் அறிவிக்கவும் செய்கிறார். ஆனால் கர்த்தர் கொடுத்ததோ பெண் குழந்தை.

'நான் ஒரு பெண்ணை பெற்றுவிட்டேனே...' என்று அவர் மனம் நொந்துப்போனாலும் கர்த்தரின் திட்டம் வேறு விதமாக இருந்தது. ஆண் பெண்ணைப் போன்றவனல்ல என்று அந்த தாய் நினைத்தாலும் பெண்ணாலும் இறைவழியில் பெரும் தியாகம் செய்ய முடியும் என்பதை உலகிற்கு உணர்த்துவதற்காக மரியாளை தேர்ந்தெடுப்பது இறைவனின் திட்டமாக இருந்தது.
கர்த்தருக்கான அர்ப்பணத்திற்கு ஒரு முன்னுதாரணமாகத்தான் அந்த பெண் தேர்ந்தெடுக்கப்படுகிறாரே தவிர வேறு எந்த நோக்கமும் இல்லை.
மரியாளின் தாயார் செய்த பிரார்த்தனைக்கு களம் அமைக்கும் விதமாகவே அவர் தேர்ந்தெடுக்கப்படுகிறார். தாயாரின் மறைவுக்கு பிறகு அவரை வளர்ப்பது யார் என்ற பிரச்சனையும் அவர் குறித்த சர்ச்சையும் கிளம்பியதாக இறைவன் 3:44 வசனத்தில் குறிப்பிடுகிறான். இதிலிருந்து அவர் தனித்துவம் வாய்ந்த பெண்ணாக வளர்ந்துள்ளார் என்பதை விளங்கலாம்.
பிற்காலத்தில் இறைவனால் ஏற்படப்போகும் ஒரு மகத்தான சோதனைக்கு அவரை மனோவியல் ரீதியில் தயார் படுத்துவதற்காக அவரை வளர்க்கும் பொறுப்பை இறைவன் இறைத்தூதர் ஜகரிய்யா அவர்களிடம் ஒப்படைக்கிறான்.

மரியாளை பொறுப்பேற்று வளர்க்கும் போது ஜகரிய்யா அவர்களுக்கு குழந்தை இல்லை. வயதானாலும் குழந்தைக்காக ஏங்கும் இதயம் மட்டும் அவர்களுக்கு ஓயவில்லை. மரியளை குழந்தைக்கு குழந்தையாக வளர்த்து வணக்க வழிபாட்டின் மூலம் அவர்களை பக்குவப்படுத்திக் கொண்டிக்கும் வேளையில் தான் மரியாளுக்கு இறைவன் புறத்திலிருந்து உணவுகள் வழங்கப்படுவதை ஜகரிய்யா அவர்கள் பார்க்கிறார்கள்.
இது எப்படி உனக்கு கிடைத்தது? என்ற கேள்விக்கு கணக்கின்றி கொடுக்கும் ஆற்றல் உள்ள இறைவன் தான் இதை எனக்கு கொடுக்கிறான் என்று மரியாளிடமிருந்து பதில் வருகிறது.
எதற்கும் ஆற்றல் உள்ள இறைவன் தனக்கு ஏன் ஒரு வாரிசை - மகனை கொடுக்க மாட்டான் என்ற அசைக்க முடியாத நம்பிக்கையில், 'இறைவா உன்னிடமிருந்து எனக்கொரு தூய குழந்தையை கொடுத்தருள்' என்று பிரார்த்திக்கிறார்கள். இறைவன் அதை ஒப்புக் கொள்கிறான்.

இறைவன் ஒப்புக் கொண்டாலும் ஜகரிய்யா அவர்களால் இதை நம்ப முடியவில்லை ஏனெனில் அவர் தள்ளாத முதுமையை அடைந்து விட்டார்கள். அவர்களின் மனைவியும் குழந்தைப்பேறைப் பெரும் மாதவிடாய் தகுதிகளையெல்லாம் இழந்து மலடு தட்டி விடுகிறார்கள். குழந்தை உருவாவதற்கான இயற்கை விதிகள் கடந்து போயிருந்தாலும் அவர்களுக்கு குழந்தை பாக்கியம் கிடைக்கின்றது.
யஹ்யா என்ற மகனை இறைத்தூதரைப் பெற்று எடுக்கிறார்கள் இந்த விபரங்கள் அனைத்தும் 3:38 - 39 - 40 வசனங்களிலும் மரியாள்(மரியம்) என்ற 19வது அத்தியாயத்தின் ஆரம்ப ஆறு வசனங்களிலும் கிடைக்கின்றன.
மரியாளை மனோரீதியாக உருவாக்க வேண்டிய நிலையில் ஜகரிய்யா அவர்களின் வழியாக இறைவன் அந்த பாடத்தை போதிக்கிறான்.

## இரு நபிமார்களின் அந்தஸ்துகள் 5
## (இறைவனின் எல்லா படைப்புகளும் அதிசயமே )

எல்லா நபிமார்களும் தாய்,தந்தை மூலம் பிறந்தார்கள் ஆனால் நபி ஈஸா(அலை) மாத்திரம் அல்லாஹ்வின் அதிசயம் மூலம் பிறந்தார்கள் (தாய் மட்டும்) இது ஏன்?
இந்த கேள்வியை பொறுத்தவரை ஈஸா ( அலை) அவர்களின் பிறப்பு ஆதமின் பிறப்பு போன்றுதான் என்று மிக தெளிவாக அல்லாஹ் தன்னுடைய திருமறையில் குறிப்பிட்டுள்ளான்.
"நிச்சயமாக அல்லாஹ்விடம் ஈசாவுக்கு உதாரணம் ஆதமுடைய உதாரணத்தைப் போன்றதே! அவன், அவரை மண்ணால் மண்ணால் படைத்து பின் அதற்க்கு (மனிதனாக) "ஆகுக" என்று கூறினான், அவர் அவ்வாறு ஆகிவிட்டார்.( 3 : 59 )
மேலே குறிபிட்டுள்ள வசனத்தின் படி, தந்தையும் தாயும் இல்லாமல் ஆதமை படைக்க அல்லாஹ்வினால் முடியும் என்பதை தெளிவாக அறியலாம்.
அதை போல ஹவ்வாவையும் எந்த ஒரு பெண்ணின் துணையின்றி ஒரு ஆணிலிருந்து அதாவது ஆதமிலிருந்து படைத்தான். அவரிலிருந்தே அவரது மனைவியைப் படைத்தோம் என்று குர்ஆனில் கூறுகிறான்.
நாம் ஒன்றை மட்டும் நம் நினைவில் வைத்துக்கொள்ள வேண்டும் ஈஸா (அலை) அவர்களின் பிறப்பு மட்டும் அதிசயம் அல்ல, இந்த உலகத்தில் படைக்கப்படுகின்ற ஒவ்வொரு உயிரினகளும் அதிசயம்தான். யாரை எப்படி படைக்க வேண்டும் என்று அல்லாஹ் விரும்புகின்றானோ அவர்களை அப்படியே படைகின்றான். இது அல்லாஹ்வின் உரிமை. இதில் நாம் தலைவிடுவதற்க்கு எந்தவிதத்திலும் உரிமையும் இல்லை.
(மேலும், மரியமை நோக்கி) மலக்குகள் "மரியமே! நிச்சயமாக அல்லாஹ் தன்னுடைய (ஆகுக! என்ற) ஒரு வார்த்தையைக் கொண்டு உங்களுக்கு (ஒரு குழந்தையை அளிக்க ) நற்செய்தி கூறுகின்றான்" என்றும் அதன் பெயர் மஸிஹ் ஈஸா இப்னு மர்யம்" என்பதாகும்.
அவர் இம்மை மறுமையில் மிக்க சிறப்பிற்குரியவராகவும் (இறைவனுக்கு) மிக்க நெருங்கியவர்களில் ஒருவராகவும் இருப்பார்" என்றும் கூறினார்கள். அன்றி அவர் தொட்டிலில் (குழந்தையாக) இருக்கும் பொழுது (தன் தாயின் பரிசுத்தத் தன்மையைப்பற்றியு)ம். (தன் நபித்துவத்தைப்பற்றி) வாலிபத்திலும் மனிதர்களுடன் பேசுவார்.

தவிர நல்லோழுக்கம்முடையோரில் உள்ளவராகவும் இருப்பார் (என்றும் கூறினார்கள்). (அதற்கு மரியம்) " என் இரட்சகனே! எந்த ஒரு மனிதருமே என்னை தீண்டாதிருக்க எனக்கு எவ்வாறு ஒரு மகன் உண்டாக முடியும்? என்று கூறினார்.
(அதற்கு)" இவ்வாறே அல்லாஹ் தான் நாடியதைப் படைகின்றான். அவன் ஒரு பொருளை (படைக்க) நாடினால் அதனை 'ஆகுக' என அவன் கூறியவுடனே அது ஆகிவிடும்" என்று கூறினான். (3 : 45 - 49 )

மேலே உள்ள வசனத்திலிருந்து தெளிவாக ஒரு விசயத்தை புரிந்து கொள்ள முடியும் அதாவது அல்லாஹ் ஒரு காரியத்தை செய்ய நாடினால் "ஆகுக" என்ற ஒரு வார்த்தைதான் அது ஆகிவிடும்.
அதுமட்டும் அல்லாமல் அல்லாஹ் படைத்திருக்கும் முறையை சற்று சிந்தித்துப் பார்த்தால் அல்லாஹ்வின் வல்லமை நமக்கு புரியும். அதாவது முதன் முதலில் அல்லாஹ் முதல் மனிதரான ஆதமை தாய் தந்தை துணையின்றி படைதான் அதாவது ஆண், பெண் துணையின்றி மண்ணிலிருந்து படைத்தான்.
அடுத்து ஒரு பெண்ணை, பெண்ணின் துணையின்றி வெறும் ஆணிலிருந்து மட்டும் படைதான் அவர்தான் ஹவ்வா (அலை) . அடுத்ததாக ஏனைய மனிதர்களை ஒரு ஜோடி ஆண்
பெண்ணிலிருந்து படைதான். கடைசியாக ஈஸா(அலை) அவர்களை ஒரு ஆணின் துணையின்றி ஒரு பெண்ணிலிருந்து படைதான்.
மண்ணிலிருந்து -> ஒரு ஆண் (ஆதம்)
ஆணிலிருந்து -> ஒரு பெண் ( ஹவ்வா)
ஆண் + பெண் -> ஏனைய மனிதர்கள்
கடைசியாக ஒரு பெண்ணிலிருந்து -> ஒரு ஆண், ஈஸா(அலை)
ஆக அல்லாஹ் தன்னுடைய ஆற்றலை தனக்கே உரிய பாணியில் இந்த மனித சமுதாயத்திற்கு வெளிப்படுத்தியுள்ளான்.இவை அனைத்துமே அதிசயம்தான்.
அந்த அல்லாஹ்தான் படைப்பவன். (அவனே) படைப்புகளை ஒழுங்கு செய்பவன்; (அவனே) படைப்புகளின் உருவத்தையும் அமைப்பவன். (குர்ஆன் : 59:24)

## இரு நபிமார்களின் அந்தஸ்துகள் 6



( ஈஸா (அலை) வானுலகம் உயர்தப்பட்டமைப் பற்றி அவர்களின் கையிலுள்ள பைபிள் கூறுவதை அவர்கள் பார்க்கவில்லையா ? )
முஸ்லிம்களை பொறுத்தவரை ஈஸா (அலை) அவர்கள் கொல்லப்படவில்லை. ஈஸா (அலை) அவர்களை அல்லாஹ் தன் அளவிலே உயர்திகொண்டான். இன்ஷா அல்லாஹ் திரும்பவும் இந்த உலகத்திற்கு முஹம்மது (ஸல்) அவர்களின் உம்மத்தாக வருவார்கள் என்பதில் மிக தெளிவாக உள்ளோம்.
காரணம்,
அல்லாஹ் தன்னுடைய திரு மறையில்
وَّقَوْلِهِمْ اِنَّا قَتَلْنَا الْمَسِيْحَ عِيْسَى ابْنَ مَرْيَمَ رَسُوْلَ اللّٰهِ وَمَا قَتَلُوْهُ وَمَا صَلَبُوْهُ وَلٰـكِنْ شُبِّهَ لَهُمْ وَاِنَّ الَّذِيْنَ اخْتَلَـفُوْا فِيْهِ لَفِىْ شَكٍّ مِّنْهُ مَا لَهُمْ بِهٖ مِنْ عِلْمٍ اِلَّا اتِّبَاعَ الظَّنِّ وَمَا قَتَلُوْهُ يَقِيْنًا ۙ
இன்னும், “நிச்சயமாக நாங்கள் அல்லாஹ்வின் தூதராகிய - மர்யமின் குமாரராகிய-ஈஸா மஸீஹை கொன்றுவிட்டோம்” என்று அவர்கள் கூறுவதாலும் (அவர்கள் சபிக்கப்பட்டனர்); அவர்கள் அவரைக் கொல்லவுமில்லை, அவரை அவர்கள் சிலுவையில் அறையவுமில்லை.

ஆனால் அவர்களுக்கு (அவரைப் போன்ற) ஒருவன் ஒப்பாக்கப்பட்டான்; மேலும் இ(வ் விஷயத்)தில் அபிப்பிராய பேதம் கொண்டவர்கள், அதில் சந்தேகத்திலேயே இருக்கின்றார்கள்- வெறும் யூகத்தைப் பின்பற்றுவதேயன்றி அவர்களுக்கு இதில் எத்தகைய அறிவும் கிடையாது; நிச்சயமாக அவர்கள், அவரைக் கொல்லவே இல்லை (குர்ஆன் : 4:157)

بَلْ رَّفَعَهُ اللّٰهُ اِلَيْهِ وَكَانَ اللّٰهُ عَزِيْزًا حَكِيْمًا
ஆனால் அல்லாஹ் அவரைத் தன் அளவில் உயர்த்திக் கொண்டான் - இன்னும் அல்லாஹ் வல்லமை மிக்கோனாகவும் ஞானமுடையோனாகவும் இருக்கின்றான். (குர்ஆன் : 4:158)

وَاِنْ مِّنْ اَهْلِ الْكِتٰبِ اِلَّا لَيُـؤْمِنَنَّ بِهٖ قَبْلَ مَوْتِهٖ ‌ۚ وَيَوْمَ الْقِيٰمَةِ يَكُوْنُ عَلَيْهِمْ شَهِيْدًا
வேதமுடையவர்களில் எவரும் தாம் இறப்பதற்கு முன் அவர் (ஈஸா) மீது ஈமான் கொள்ளாமல் இருப்பதில்லை; ஆனால் மறுமை நாளில் அவர் அவர்களுக்கு எதிராக சாட்சி சொல்பவராக இருப்பார். (குர்ஆன் : 4:159)

وَمَكَرُوْا وَمَكَرَ اللّٰهُ‌ ؕ وَاللّٰهُ خَيْرُ الْمٰكِرِيْنَ
(ஈஸாவை நிராகரித்தோர் அவரைக் கொல்லத்) திட்டமிட்டுச் சதி செய்தார்கள்; அல்லாஹ்வும் சதி செய்தான்; தவிர அல்லாஹ் சதி செய்பவர்களில் மிகச் சிறந்தவன் ஆவான். (குர்ஆன் : 3:54)

اِذْ قَالَ اللّٰهُ يٰعِيْسٰۤى اِنِّىْ مُتَوَفِّيْكَ وَرَافِعُكَ اِلَىَّ وَمُطَهِّرُكَ مِنَ الَّذِيْنَ كَفَرُوْا وَجَاعِلُ الَّذِيْنَ اتَّبَعُوْكَ فَوْقَ الَّذِيْنَ كَفَرُوْۤا اِلٰى يَوْمِ الْقِيٰمَةِ‌ ۚ ثُمَّ اِلَىَّ مَرْجِعُكُمْ فَاَحْكُمُ بَيْنَكُمْ فِيْمَا كُنْتُمْ فِيْهِ تَخْتَلِفُوْنَ
“ஈஸாவே! நிச்சயமாக நான் உம்மைக் கைப்பற்றுவேன்; இன்னும் என்னளவில் உம்மை உயர்த்திக் கொள்வேன்; நிராகரித்துக் கொண்டிருப்போருடைய (பொய்களில் நின்றும்) உம்மைத் தூய்மைப்படுத்துவேன்; மேலும் உம்மைப் பின்பற்றுவோரை கியாம நாள் வரை நிராகரிப்போருக்கு மேலாகவும் வைப்பேன்;
பின்னர் உங்களுடைய திரும்புதல் என்னிடமே இருக்கிறது; (அப்போது) நீங்கள் தர்க்கம் செய்து கொண்டிருந்தது பற்றி நான் உங்களிடையே தீர்ப்பளிப்பேன்” என்று அல்லாஹ் கூறியதை (நபியே! நினைவு கூர்வீராக)!
(குர்ஆன் : 3:55)

(ஈஸாவை நோக்கி) " ஈஸாவே! நிச்சயமாக நான் உம்மை கைப்பற்றிக் கொள்பவனாகவும், உம்மை என்னளவில் உயர்த்திகொள்பவனாகவும், நிராகரிப்போரி(ன் அவதூறி)லிருந்து உம்மை பரிசுத்தமாகிவைபவனாகவும், உம்மை பின்பற்றுவோரை, நிராகரிப்போர் மீது மறுமை நாள் வரையில் மேலாக ஆக்குபவனாகவும் இருக்கின்றேன்.
அதன் பின்னர் உங்களுடைய திரும்புதல் என்னிடமே இருக்கிறது. அப்போது அதில் நீங்கள் மாறுப்பட்டவர்களாக இருந்திர்களோ அதில் உங்களுக்கிடையில் தீர்ப்பளிப்பேன்' என்று அல்லாஹ் கூறியதை (நினைவு கூர்விராக!)
(3 : 55 )

ஆக அல்லாஹ் ஈஸா (அலை) அவர்களை தன் அளவில் உயர்த்தியதற்கு காரணம் மேலே உள்ள வசனங்களிலிருந்து விளங்கி கொள்ளலாம்.
பெரும்பான்மையான கிறிஸ்துவர்கள் இறை வசனத்தை ஏற்றுக் கொள்ள மாட்டார்கள் காரணம் குர்ஆன்னை இறை வேதமாக நினைப்பதில்லை. அவர்களுடைய வேத புத்தகமே போதும் என்றும் கூறுவார்கள்.
அப்படிப்பட்டவர்களுக்கு அவர்களுடைய வேத
புத்தகத்திலிருந்தே ஈஸா (அலை) அவர்கள் மேலே உயர்த்தப்பட்டதற்கு ஒரு சில வசனங்களை நாம் காட்டலாம்.
லூக்கா 22 : 39 - பின்பு அவர் புறப்பட்டு வழக்கத்தின்படியே ஒலிவமலைக்குப் போனார், அவருடைய சீஷரும் அவரோடே கூடப் போனார்கள்.
லூக்கா 22 : 40 - அவ்விடத்தில் சேர்ந்தபொழுது, அவர் அவர்களை நோக்கி நீங்கள் சோதனைக்குட்படாதபடிக்கு ஜெபம்பண்ணுகள் என்று சொல்லி,
லூக்கா 22 : 41 அவர்களை விட்டுக் கல்லெறிதூரம் அப்புறம்போய், முழங்கால்படியிட்டு.
லூக்கா 22 : 42 - பிதாவே, உமக்கு சித்தமானால் இந்த பாத்திரம் என்னைவிட்டு நீங்கும்படி செய்யும்.ஆயினும் என்னுடைய சித்தத்தின்படியல்ல, உம்முடைய சித்தத்தின்படியே ஆகக் கடவது என்று ஜபம் பண்ணினார்.
லூக்கா 22 : 43 - அபொழுது வானத்திலிருந்து ஒரு தூதன் தோன்றி, அவரை பலப்டுதினான்.
லூக்கா 22 : 44 - அவர் மிகவும் வியாகுலப்பட்டு அதிக ஊக்கதோடே ஜெபம் பண்ணினார், அவருடைய வேர்வை இரத்தத்தின் பெருந்துளிகளாய்த் தரையிலே விழுந்தது.
மேலே குறிபிட்டுள வேதகாமம் வசனத்தின் படி ஈஸா (அலை) அவர்கள் தன்னுடைய இறைவனிடத்திலே தன்னை காக்கும் படி அழுது அழுது மன்றாடியுள்ளார்கள். எந்த அளவிற்கு என்றால் தன்னுடைய ஒவ்வொரு வேர்வை துளியும் இரத்த துளிகளாக தரையிலே விழும் அளவிற்கு வேண்டியிள்ளார்.
கேளுங்கள், அப்பொழுது உங்களுக்கு கொடுக்கப்படும் , தட்டுங்கள் அப்பொழுது உங்களுக்கு திறக்கப்படும் என்று மத்தேயுலே கூறியுள்ளபடி, இறைவன் அவருடைய பிராத்தனையை அங்கீகரித்துக்கொண்டு அவரை தன்னளவிலே உயர்த்திக் கொண்டான்.
பார்க்க....
மத்தேயு 7 : 7 - கேளுங்கள், அப்பொழுது உங்களுக்கு கொடுக்கப்படும், தேடுங்கள், அப்பொழுது கண்டடைவீர்கள் தட்டுங்கள் அப்பொழுது உங்களுக்கு திறக்கப்படும்.

மத்தேயு 7 : 8 - ஏனென்றால் ,கேட்கின்றவன் எவனும் பெற்றுக் கொள்கின்றான், தேடுகின்றவன் கண்டடைகின்றான், தட்டுகின்றவனுக்கு திறக்கப்படும்.
மத்தேயு 7 : 9 - உங்களில் எந்த மனுஷனானாலும்
தன்னிடத்தில் அப்பத்தை கேட்கின்ற தன் மகனுக்கு கல்லை கொடுப்பானா?
மத்தேயு 7 : 10 - மீனை கேட்டால் அவனுக்கு பாம்பை கொடுப்பானா?
மத்தேயு 7 : 11 - ஆகையால் பொல்லாதவர்களாகிய நீங்கள் உங்க பிள்ளைகளுக்கு நல்ல ஈவுகளை கொடுக்க அறிந்திருக்கும்போது, பரலோகதிலிருகின்ற உங்கள் பிதா தம்மிடத்தில் வேண்டிக் கொள்ளுகிறவர்களுக்கு நன்மையானவைகளைக் கொடுப்பது அதிக நிச்சயம் அல்லவா?
ஆக சாதாரன மனிதர்களுக்கே கேட்பதை கொடுக்கின்ற இறைவன் தன்னுடைய தூதர்களின் பிராத்தனையை ஏற்றுகொள்ள போதுமானவன்.

யூதர்களை பொறுத்தவரை ஒரு மனிதனக்கு கேவலமாக, கொடூரமாக தண்டனை கொடுக்க வேண்டும் என்றால் அவனை சிலுவையில் அறைந்து, அவர்களின் மறைவிடங்கள் தெரியும்படி ஒரு சிறு துண்டை ஆடையாக அணிவித்தோ அல்லது அதுகூட இல்லாமல் சிலுவையில் அறைந்து மெதுமெதுவாக சாகும் படி செய்வார்கள். இதை யூதர்களின் வரலாற்று குறிப்பில் காணலாம்.
எந்த இறைவன் இப்ராஹீம் (அலை) அவர்களை நெருப்பு குன்றத்திளிருந்து பாதுகாதானோ, எந்த இறைவன் மூஸா(அலை) மற்றும் அவர்களின் சமூகத்தாரை கடலை பிளக்க செய்து பாதுகாதானோ, அதே இறைவன் தான் நபி ஈஸா(அலை) அவர்களை கேவலமான, கொடூரமான கொலையிளிருந்தும் காப்பாற்றினான்.
ஈஸா (அலை) அவர்களை மேலே உயர்த்திகொண்டதால் ஈஸா(அலை) அவர்கள் இறைவனும் அல்ல, ஏனைய நபிமார்கள் உயிருடன் உயர்த்திக் கொள்ளபடாததால் அவர்கள் இறைவனுக்கு நெருக்கமானவர்கள் அல்ல என்பதும் கிடையாது.

இரு நபிமார்களின் அந்தஸ்துகள் 7

நமது நபிகள்நாயகம் (ஸல்) அவர்களை நபி ஈஸா (அலை) (இயேசு கிறிஸ்து நாதருடன்) ஒப்பிட்டு, இயேசுவின் சீரையும் சிறப்பையும் அதிகப்படுத்திக் காட்ட வேண்டு என்னும் பேரவா கிறிஸ்துவ சகோதார்களிடம் பெரிதும் குடிகொண்டிருப்பதை நாம் அடிக்கடி காண்கின்றோம்.

கிறிஸ்துவர்கள் எப்பொழுதும் எழுத்தை மட்டுமே பற்றிக் கொண்டிருக்கிறார்களே யொழியக் கருத்தை ஒருபோதும் உற்றுணர்ந்து பார்ப்பதில்லை; வெறும்வார்த்தைகளை மட்டுமே கவனிக்கிறார்கள் அல்லாது, ஒருவர் செய்யும் வேலையைச் சிறிதும் சீர்தூக்கிப் பார்ப்பதில்லை. அவர்களின் பார்வையெல்லாம் வெளித் தோற்றத்தைக் கண்ட மாத்திரத்திலே மயக்கம் கொண்டு விடுகிறது.

ஒரு மனிதரைப் பற்றி நம்பத்தகாத கட்டுக் கதைகளை எல்லாம் கட்டிவிட்டு, அளவுக்கு மீறிய ஸ்தோத்திரப் பதங்களை எல்லாம் அவர் மீது பொழிந்துவிட்டால், அவரே பெரியவர் என்று அம்மதத்தினர் கூறுவர்.
ஆனால், அம்மனிதர் என்ன வேலையைச் செய்து முடித்திருக்கிறார் என்று சற்றும் நிதானித்துப் பார்ப்பது வழக்கமில்லை. இக்காரணத்தால்தான் இயேசுநாதர் தம்மைப்பற்றி அப்படிச் சொல்லிக் கொண்டார் என்றும் இப்படிச் சொல்லிக் கொண்டார் என்றும்,
முஹம்மத் நபி (ஸல்) அவர்கள் தங்களைப் பற்றி அப்படி இப்படிச் சொல்லிக்கொள்ள வில்லை என்றும், கிறிஸ்து மதத்தை நிலைநாட்டியவர் மட்டும் அனேக அற்புதங்களை எல்லாம் செய்து காட்டினார் என்றும், இஸ்லாம் மார்க்கத்தை நிலைநிறுத்தியவர் அப்படி ஒன்றும் அற்புதம் செய்து காட்ட வில்லை என்றும் அக்கிறிஸ்துவ நண்பர்கள் வாதாடுகின்றனர்.

அவர்கள் ஒரு சிறிதும் உட்பொருள்களின் உண்மைக்கருத்தை உணராமல் வெறும் சொற்கள் மட்டுமே பற்றிப் பிடிப்பவராக இருத்தலினால், அவர்களுடைய பார்வையில் அதிக பலமான சாக்ஷியமாகக் காணப்படுவது பின்வரும் விஷயமேயாகும்
அது குர்ஆன் ஷரீபில் இயேசுவைப் பற்றி மிகவும் உன்னதமான நல்ல வார்த்தைகள் உபயோகப்படுத்தப்பட்டிருக்கின்றது என்றும், நமது நபிகள் (ஸல்) அவர்களைப் பற்றி அவ்வாறு சிலாகித்து சொல்லப்படவில்லை என்றும், இயேசுநாதர் அனேகவித அரியபெரிய அற்புதங்களை எல்லாம் செய்து காட்டினார் என்றும், நமது நபி பெருமானார் (ஸல்) அவர்கள் அப்படிப்பட்ட முஃஜிஜாத்துக்களை செய்து காட்டவில்லை என்றும் அவர்கள் வீண் பெருமை பாராட்டுகின்றனர்.

குர்ஆன் ஷரீபில் ஈஸா நபி (அலை) யைப்பற்றி மரியாதையான சில நல்ல வார்த்தைகளும் வாசகங்களும் உபயோகப்படுத்தப்பட்டிருப்பதனால், அல்லாஹுத் தஆலா நமது முஹம்மத் முஸ்தபா ரஸூல் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களைக் காட்டினும் நபி ஈஸா (அலை) அவர்களையே மேன்மைப்படுத்தியிருக்கிறான் என்று அக் கிறிஸ்துவர்கள் தவறாக நினைக்கின்றார்கள். அவர்கள் கேட்கும் கேள்விகளினாலேயே அவர்களுடைய தப்பபிப்பிராயம் செம்மையாக வெளியாகின்றது.

குர்ஆன் ஷரீபில் இயேசுவின் சிறப்பைப் பற்றிச் சில வாக்கியங்கள் வந்திருப்பதன் காரணமாக அவர் நமது நபிகள் பெருமானாரவர்களைக் காட்டினும் சிரேஷ்டர் என்பது கிறிஸ்துவ நேயர்களின் தவறான கொள்கையேயாகும்.
ஆனால், குர்ஆன் ஷரீபானது ஒருவரைப்பற்றிச் சொல்லும் ஸ்தோத்திரத்தினாலாவது அவர் செய்யும் அற்புதத்தினாலாவது அவர் பெரியவராய் விடுவார் என்று கூறவில்லை; ஆனால், அவரவர் செய்யும் காரியத்தின் பெருமையால் மட்டுமேதான் அவரவருக்கும் பெருமை உண்டென்று குர்ஆன் கூறுகின்றது .
ஆதலின், இயேசு நாதர் பைபிள் ஷரீபில் தம்மைப்பற்றிச் சொல்லிக்கொள்ளுவது போல வெறும் ஸ்தோத்திரமான பதங்களையெல்லாம் நமது குர்ஆனெ கரீம் வேதமானது நம் பெருமானார் (ஸல்) அவர்கள் மீது வீணாகப் பொழிவதில்லை.

இப்பூவுலகத்தில் நமது நபிகள் நாயகமவர்கள் (ஸல்) அவர்கள் செய்திருக்கும் நாகரிகப் பிறழ்ச்சியைப்பற்றிக் கூறும்போது, அல்லாஹுத் தஆலா தன்னுடைய ரஸூலின் பெருமையைப்பற்றிப் பன்முறையும் அவ்வேதத்தில் கூறியிருக்கின்றான்.
சில அருமையான இடங்களில் அல்லாது, இறைவன் நம் பெருமானார் (ஸல்) அவர்களின் அரிய பெரிய அற்புதங் களைப்பற்றி அனாவசியமாய்க் கூறுவதில்லை. ஆனால்,
அப்படிப்பட்ட அளவற்ற அற்புதங்கள் திரு நபியவர்களின் சரித்திரத்திலே காணப்படுகின்றன.
இவ்வுலகத்தில் அஞ்ஞான அந்தகாரத்தை நீக்கிச் மெஞ்ஞானப் பேரொளியை நாட்டக்கூடிய அந்த அருமையான அற்புதத்தைப் பற்றியும், மிகத் தாழ்ந்த அநாகரிக நிலைமையிலிருந்த மனிதர்களை மிகவும் உன்னத நாகரிக நிலைமைக்கு உயரும்படியாகவும்,
இன்னும் மனிதனால் எய்தக்கூடிய எல்லா உன்னத நிலைமைகளையும் அடையும்படியாகவும், செய்யத்தக்க அந்த ஆச்சரியகரமான அற்புதத்தைப் பற்றியும் மட்டுந்தான் குர்ஆன் ஷரீபானது அடிக்கடி வெளியில் எடுத்துக் காட்டுகின்றது.

இது தான் அற்புதங்களுக்கு எல்லாம் மிகப்பெரிய அற்புதமாக இருக்கின்றது; இதனுடன் ஏனைய அற்புதங்களை யெல்லாம் ஒப்பிட்டுப் பார்ப்போமாயின், அவையெல்லாம் மிக மிகச் சாதாரணமாகத்தான் புலப்படும்.
குர்ஆன் ஷரீபானது இவ்வுலகினில் செய்திருக்கும் அற்புத மாறுதல்களை நோக்கும்போது, வேறு அற்புதங்களெல்லாம் சூரியன் முன்னே மின்மினியேபோல ஒளி மழுங்கி
விடுகின்றன

அற்புதங்கள் ஏன் உலகத்தில் செய்து காட்டப்படுகின்றன ? அற்புதங்கள் செய்யும்போது அவற்றில் ஒன்றும் அதிசய மில்லை; ஆனால், அந்த அற்புதங்கள் உலகத்திலுள்ள மனிதர்களின் ஆத்ம சக்தியை அதிகப்படுத்தி, அவர்களை எல்லாம் ஞானப் பேரொளியின் முகட்டிலே கொண்டுபோய் விடுதற்கு உபகரணமாக இருக்கும் பொருட்டே அற்புதங்கள் நிகழ்த்தப்படுகின்றன.
இக்காரணத்தால்தான் குர் ஆன் ஷரீபானது நமது நாயகம் (ஸல்) அவர்களின் சொந்த அற்புதங்களைப் பற்றி அதிகமாகச் சொல்லாமலும், அவர்களுக்காக அதிகமாக ஸ்தோத்திரம் செய்யாமலும், அவர்கள் இவ்வுலகினில் செய்து வைத்த நாகரிக வெற்றியான மார்க்கப் பிறழ்ச்சியைப் பற்றி மட்டுமே அடிக்கடி கூறுகின்றது.
எங்கள் நபி பெருமானார் (ஸல்) அவர்கள் செய்திருக்கும் பிறழ்ச்சியின் வெற்றியைப் பற்றி அனேக கிறிஸ்துவ நிபுணர்கள் கூசாமல் ஒத்துக்கொண்டிருக்கிறார்கள்.

இயேசுநாதர் செய்ததாக பைபிள் ஷரீபில் எழுதி வைக்கப்பட்டிருக்கும் எல்லாவகை அற்புதங்களைக் காட்டினும் நம் பெருமானார் (ஸல்) அவர்களின் அற்புதமே இவ்வுலகத்துக் கெல்லாம் போதுமானதாயிருக்கின்றது.

**இரு நபிமார்களின் அந்தஸ்துகள் 8**




மனிதகுல வரலாற்றில் முஹம்மது நபியின் தாக்கத்தை - செல்வாக்கை - எப்படிக் கணக்கிடுவது?- மைக்கேல் ஹெச். ஹார்ட்

ஏனைய சமயங்களைப் போன்றே இஸ்லாமும் அதனைப் பின்பற்றுவோரின் வாழ்க்கைகளில் மிகப் பெருந் தாக்கத்தை உண்டு பண்ணி, ஆதிக்கம் செலுத்துகின்றது. இதன் காரணமாகத்தான், உலகப் பெரும் சமயங்களை நிறுவியவர்கள் இந்நூலில் முக்கியமாக இடம் பெற்றுள்ளனர்.

உலகத்தில் முஸ்லிம்களை விடக் கிறிஸ்தவர்கள் ஏறத்தாழ இருமடங்கினராக இருப்பினும்கூட. முஹம்மது நபியவர்களை ஏசுநாதரை விட முதன்மையாக இடம்பேறச் செய்திருப்பது, எடுத்த எடுப்பில் புதுமையாகத் தோன்றலாம். முடிவுக்கு இரண்டு காரணங்களுண்டு.

ஒன்று: கிறிஸ்துவ வளர்ச்சிக்கு ஏசுநாதர் ஆற்றிய பணியைவிட, இஸ்லாமிய வளர்ச்சிக்கு மிகவும் முக்கியத்துவம் வாய்ந்த பணியினை முஹம்மது நபியவர்கள் ஆற்றினார்கள்.

கிறிஸ்துவத்தின் முக்கியமான அறநெறி, ஒழுக்க இயல் ஆகியவற்றுக்கு (அவை யூத சமயத்திலிருந்து வேறபட்ட அம்சங்களைப் பொறுத்தவரை) ஏசுநாதரே இருந்தாலும், அதன் இறைமையியலை (THEOLOGY) உருவாக்கியதில் முதன்மையானவரும், அதன்பால் மக்கள் வருவதற்கு முக்கிய காரணமாக இருந்தவரும், புதிய ஏற்பாட்டின் பெரும் பகுதியின் ஆசிரியரும் தூய பவுல்தான். (ST. PAUL).

ஆனால் இஸ்லாத்தின் இறைமையியல் (THEOLOGY), அதன் அறநெறி, ஒழுக்க இயல் யாவற்றுக்குமே பொறுப்பானவர் முஹம்மது நபிதான். அன்றியும் அச் சமயத்தை மக்களிடையே பரப்புவதிலும் இஸ்லாமிய அனுஷ்டான மரபுகளை வகுப்பதிலும் அவர்கள் மூலாதாரமான பொறுப்பினை மேற் கொண்டிருந்தார்கள்.

மேலும் இறைவனிடமிருந்து தங்களுக்கு நேரடியாய் அருளப்பட்டதாக அவர்கள் நம்பிய திருவெளிப்பாடான புனித குர்ஆனின் போதகரும் அவர் தாம்.

முஹம்மது வாழ்நாளிலேயே இவ்விறை வெளிப்பாடுகள் பற்றுறுதியுடனும், கடமையுணர்வுடனும், பதிவு செய்யப்பட்டன:

நபியவர்கள் காலமான சிறிது காலத்துக்குள் ஆதாரபூர்வமாக அவை ஒரு சேரத் தொகுக்கப்பட்டன. எனவே, முஹம்மது நபியின் கருத்துகளும் போதனைகளும், கொள்கைகளும் குர்ஆனுடன் நெருக்கமானவை. ஆனால் ஏசுநாதரின் இது போன்ற விரிவான போதனைகள் அடங்கிய எதுவும் மூலாதாரத்துடன் எஞ்சவில்லை.

கிறிஸ்தவர்களுக்கு பைபிளைப் போன்று, முஸ்லிம்களுக்கு குர்ஆன் முக்கியம் வாய்ந்ததாகும். குர்ஆன் வாயிலாக முஹம்மது நபி உண்டு பண்ணிய தாக்கம், மிகப் பெரும் அளவினதாகும்.

கிறிஸ்தவத்தின் மீது ஏசுநாதரும், தூய பவுலும் ஒருங்கிணைந்து உண்டு பண்ணிய தாக்கத்தைவிட, முஹம்மது நபி இஸ்லாத்தின் மீது உண்டு பண்ணிய தாக்கம் மிகுந்ததே என்று சொல்லலாம். சமய அடிப்படையில் மட்டும் பார்க்கப் போனால் மனித வரலாற்றில் ஏசுநாதருக்கு இருந்த செல்வாக்கைப் போன்றே முஹம்மதுக்கும் இருந்தது என்றும் சொல்லலாம்.

இரண்டாவது: மேலும், ஏசுநாதரைப் போலில்லாமல், முஹம்மது நபி சமயத் தலைவராக மட்டுமின்றி, உலகியல் துறைகளிலும் தலைவராக இருந்தார்கள். உண்மையில், அரபுகளின் வெற்றிகளுக்கு, பின்னிருந்து இயக்கிய உந்து

சக்தியான அன்னார் எல்லாக் காலத்துக்கும் தாக்கத்தை உண்டு பண்ணும், செல்வாக்கு மிக்க தலைவராக இடம் பெறலாம்.
வரலாற்று நிகழ்ச்சிகளில் முக்கியம் வாய்ந்த பல, தவிர்க்க முடியாமல் நிகழக் கூடியவை தாம்; அவற்றை நடத்துவதற்குரிய குறிப்பிட்ட தலைவர் ஒருவர் இல்லாவிடினும் சரியே என்று சொல்லக் கூடும்.
சான்றாக ஸைமன் பொலிவர் பிறந்திருக்காவிட்டாலும் கூட, ஸ்பெயினிடமிருந்து தென் அமெரிக்கக் காலனிகள் தங்கள் விடுதலையைப் பெற்றுத்தானிருக்கும்.
( ஸைமன் பொலிவர் (SIMON BOLIVAR) 1783-1830 வெலிஸுலா, பெரு ஆகிய நாடுகளின் தலைவராக இருந்த இவர், விடுதலை. வீரராகவும், தென் அமெரிக்காவின் வாஷிங்டன எனவும் கருதப்படுபவர் )
ஆனால் அரேபிய வெற்றிகளைப் பற்றி இவ்வாறு சொல்ல முடியாது, ஏனெனில் முஹம்மது காலத்துக்கு முன், இப்படி எதுவும் நிகழ்ந்ததில்லை; எனவே அன்னார் இல்லாமலே இத்தகு வெற்றிகளைப் பெற்றிருக்கும் என நம்புவதற்கும் நியாயமில்லை.

மனித வரலாற்றில் இவ்வெற்றிகளுக்கு ஒத்தவையாக எவற்றையும் பற்றிச் சொல்ல முடியுமானால் அவை செங்கிஸ்கான் தலைமையில் மங்கோலியர்கள் பதின்மூன்றாம் நூற்றாண்டில் அடைந்த வெற்றிகளாகும்.
ஆனால் இவ்வெற்றிகள் அரபு வெற்றிகளை விட, பரப்பளவில் மிகுந்திருந்தாலும் -நிலைத்திருக்கவில்லை, இன்று மங்கோலியர்கள் வசமுள்ள நிலப்பகுதி செங்கிஸ்கானுக்கு முன்னர் அவர்களிடமிருந்தது தான்.
ஆனால், அரபுகளின் வெற்றிகளோ பெரிதும் வேறுபட்டவையாகும். இஸ்லாத்தின் மீது மக்கள் கொண்டுள்ள நம்பிக்கையால் மட்டுமல்ல, அரபு மொழி, வரலாறு, பண்பாடு ஆகியவற்றாலும் இணைக்கப்பட்டு, இராக்கிலிருந்து மொரோக்கோ வரை ஒரு சங்கிலித் தொடர்போல் அரபு நாடுகள் விரிந்து கிடக்கின்றன.
குர்ஆன் இஸ்லாமிய சமயத்தின் மூலாதாரமாக அமைந்திருப்பதும், அது அரபு மொழியில் இருப்பதுமாகிய காரணங்கள் தாம் பதின் மூன்று நூற்றாண்டுகளுக்கிடையில் அம்மொழி ஒன்றுக்கொன்று விளங்கா வட்டார மொழிகளாகச் சிதறிச் சிதைந்து போகாமல் தடுக்கப்பட்டது என்று சொல்லலாம்.

இந்த அரபு நாடுகளுக் கிடையே, கணிசமான வேறுபாடுகளும் பிரிவுகளும் காணப்படுகின்றன என்பதும் உண்மைதான். எனினும், பகுதியளவிலான இவ்வொற்றுமைக் குறைவு, இந்நாடுகளுக்கிடையே நிலவிவரும் ஒற்றுமையின் முக்கியம் வாய்ந்த அம்சங்களே நம் கண்களிலிருந்து மறைந்துவிடக் கூடாது.
சான்றாக 1973-74 எண்ணை ஏற்றுமதித் தடையில் அரபு நாடுகள் மட்டுமே கலந்து கொண்டன. ஈரானும், இந்தோனேஷியாவும்-அவை இஸ்லாமிய நாடுகளாக இருப்பினும் இதில் கலந்து கொள்ளவில்லை.
ஆக ஏழாம் நூற்றாண்டில் தொடங்கிய அரபு வெற்றிகள் மானுட வரலாற்றில் இன்றும் முக்கியமான பங்கு வகித்து வருவதைக் கண்கூடாகக் காண்கிறோம்.

சமயத் துறையிலும், உலகியல் துறையிலும் முஹம்மது ஒரு சேரப்பெற்ற ஈடில்லாத செல்வாக்குத் தான் மனித வரலாற்றில் மிகப் பெரும் தாக்கத்தை ஏற்படுத்திய ஒரே தனிமனிதர் என்னும் தகுதிக்கு அவரை உரித்தாக்குகிறது என நான் கருதுகின்றேன்.
ஆதாரம் : மைக்கேல் ஹெச். ஹார்ட் எழுதிய "புதிய வரலாறு படைத்தோரின் வரிசைமுறை 100 பேர் "

## இரு நபிமார்களின் அந்தஸ்துகள் 9
## ( பாவத்தின் சம்பளம் மரணமா ? )



பாவத்தின் சம்பளம் மரணம் -ரோமர் ( 6 : 23) என்கிறது பைபிள்
பாவம் செய்த ஆத்மாவே சாகும் என்று பைபிள் (எசக்கியேல் 18;20) கூறுகிறது.
கிருஸ்துவர்கள் தங்கள் மதபோதனையில் குர்ஆனிலிருந்தே கீழ்க்கண்ட வசனங்களை குறிப்பிட்டு முஹம்மது நபி பாவம் செய்தவர் என்று கூறுகின்றனர் (நவுதுபில்லாஹ் )
(தவறுகளுக்காக) நீர் அல்லாஹ்விடம் மன்னிப்புக் கோரும், நிச்சயமாக அல்லாஹ் மன்னிப்பவனாகவும் மிக்க கருணை உடையவனாகவும் இருக்கின்றான். (குர்ஆன் : 4:106)
(நபியே!) அல்லாஹ் உம்மை மன்னித் தருள்வானாக! அவர்களில் உண்மை சொன்னவர்கள் யார், பொய்யர்கள் யார் என்பதை நீர் தெளிவாக அறிவதற்குமுன் ஏன் அவர்களுக்கு (போருக்கு புறப்படாதிருக்க) அனுமதியளித்தீர்? (குர்ஆன் : 9:43)
இன்னும், “என் இறைவனே! நீ என்னை மன்னித்துக் கிருபை செய்வாயாக! நீ தான் கிருபையாளர்களிலெல்லாம் மிக்க மேலானவன்” என்று (நபியே!) நீர் பிரார்த்திப்பீராக! (குர்ஆன் : 23:118)
உம்முடைய இறைவனின் புகழைக் கொண்டு (துதித்து) தஸ்பீஹு செய்வீராக; மேலும் அவனிடம் பிழை பொறுக்கத் தேடுவீராக - நிச்சயமாக அவன் “தவ்பாவை” (பாவமன்னிப்புக் கோருதலை) ஏற்றுக் கொள்பவனாக இருக்கின்றான்.(குர்ஆன் : 110:3)

அடுத்து
(மேலும் அந்தத்தாய் சொன்னாள்:) “அவளுக்கு மர்யம் என்று பெயரிட்டுள்ளேன்; இன்னும் அவளையும், அவள் சந்ததியையும் விரட்டப்பட்ட ஷைத்தானி(ன் தீங்குகளி)லிருந்து காப்பாற்றத் திடமாக உன்னிடம் காவல் தேடுகின்றேன். (குர்ஆன் : 3:36)
3: 36 இயேசு ஷைத்தானால் தீண்டப்படாதவர் என்று சொல்கிறது. இவ்விரண்டையும் எடுத்துக் காட்டி முஹம்மது நபியை விட இயேசு சிறந்தவர் என்று சில கிறித்தவர்கள், முஸ்லிம்கள் மத்தியில் குழப்பம் ஏற்படுத்துகின்றனர். திருக்குர்ஆனே இயேசுவை உயர்த்திச் சொல்கிறது என்று வாதிடும் கிறித்தவர்கள் திருக்குர்ஆன் இறை வேதம் என்று நம்பி இப்படிக் கேட்பதில்லை. விதண்டாவாதமாகவே இவ்வாறு கேட்கின்றனர்.
திருக்குர்ஆனை ஆதாரமாகக் கொண்டு வாதிடுவது என்றால் திருக்குர்ஆனில் உள்ள அனைத்தையும் அவர்கள் நம்ப வேண்டும். இயேசு இறைவனின் அடிமைதான். மகனல்லர் என்றும், இயேசு கொல்லப்படவுமில்லை; உயிர்த்தெழவும் இல்லை என்றும், ஒருவர் பாவத்தை இன்னொருவர் சுமக்க முடியாது என்றும் திருக்குர்ஆன் கூறுவதை இவர்கள் ஏற்றுக் கொள்வதில்லை.

திருக்குர்ஆன் முஹம்மது நபியின் கற்பனை என்பது தான் அவர்களின் நம்பிக்கை. முஹம்மது நபியே கற்பனை செய்தார் என்றால், அவர் தன்னைப் பரிசுத்தவானாக, ஒரு பாவமும் செய்யாதவராக சித்தரிக்கும் வசனங்களை உருவாக்க எவ்வளவு நேரமாகும்? இயேசு பாவியாக இருந்தார் என்று ஒரு வசனத்தையும் அவரால் சேர்த்துச் சொல்வது எளிதானதுதான்.

ஆனால் திருக்குர்ஆனில் முஹம்மது நபி பாவம் செய்பவர் தான் என்று கூறப்படுகிறது என்றால் இது முஹம்மது நபியின் கூற்று அல்ல என்பது உறுதியாகிறது. திருக்குர்ஆன் இறைவேதம் என்பதற்கான மகத்தான சான்றுகளாக இவ்வசனங்கள் உள்ளன என்பதை அவர்கள் உணர வேண்டும்.
பாவம் என்றால் கொலை, கொள்ளை, விபச்சாரம், திருட்டு போன்றவை மட்டும் தான் என்று இவர்கள் விளங்கிக் கொண்டு இப்படி கேட்கிறார்கள். இது போன்ற பாவங்களை முஹம்மது நபியும் செய்ததில்லை. ஈஸா நபியும் செய்ததில்லை.
பாவம் என்பது விரிந்த பொருள் உடையது. இறைவன் பொருந்திக் கொள்ளாத செயல்கள், பேச்சுக்கள் அனைத்துமே பாவங்கள்தான்.
முதல் மனிதர் ஆதம் அவர்கள் பாவம் செய்தார்கள் என்று முஸ்லிம்களும் நம்புகின்றனர். கிறித்தவர்களும் நம்புகின்றனர். அந்தப் பாவம் தலைமுறை தலைமுறையாகத் தொடர்கிறது என்று கிறித்தவர்கள் கடுமையான விஷயமாக இதைக் கருதுகிறார்கள்.

ஆதம் செய்தது கொலையோ, கொள்ளையோ, விபச்சாரமோ அல்ல. தடுக்கப்பட்ட ஒரு மரத்தைச் சுவைத்தது தான். இது போன்ற பாவங்களைத் தான் இறைத்தூதர்களும் செய்வார்கள். ஆதம் (அலை) அவர்கள் செய்த இந்தப் பாவம் குறித்து ..
நபி ஆதம் அலை அவர்கள் சுவனத்தின் வாயிலின் மேலே இறைவனின் திருப்பெயருடன் மற்றொருவரின் பெயர் பொறிக்கப்பட்டிருப்பதை கண்டு,
" இறைவா !.உன்னுடைய திருப்பெயருடன் மற்றொருவரின் பெயரையும் நான் காண்கிறேனே,அவர் யார் ? எனக்கு முன் நீ அவரைப் படைத்து உள்ளாயா ? என்று வியப்புடன் கேட்டார்கள்
"ஆதமே.!.. அவர் உன் மகனாவார் இறுதி மா நபியாக உலகில் பிறப்பார். அவரின் ஆன்மாவை அண்ட கோளங்களைப் படைப்பதற்கு 60 ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்பே நான் படைத்துள்ளேன் என்று கூறினான்
அது கேட்டு மகிழ்ந்த ஆதம் அலை அவர்கள், "இறைவா நான் என் மகனார் முஹம்மதின் மார்க்கத்தில் இருப்பதாக எழுது ! நான் அவருக்கு தந்தை என்றும் எழுது "என்று கூறினார்கள்
மீண்டும் ஆதம் (அலை) அவர்களை நோக்கி, " ஆதமே நீர் ஒரு தவறிழைப்பீர்.அந்த தவறினை நான் இவரின் பொருட்டால் மன்னிப்பேன்" என்று கூறினான்.
பைபிள் அடிப்படையில் பார்த்தால் கூட இயேசு பாவம் செய்துள்ளார் என்பது உறுதியாகிறது.
பாவம் செய்த ஆத்மாவே சாகும் என்று பைபிள் (எசக்கியேல் 18;20) கூறுகிறது.
பின்னர் அவர் இரண்டு திருடர்களுக்கு இடையில் தூக்கிலிடப்பட்டார், மேலும் மாற்கு நற்செய்தியின் படி , நாளின் 9 வது மணி நேரத்தில் (பிற்பகல் 3:00 மணியளவில்) இறந்தார்.
இயேசுவின் மரணத்திற்குப் பிறகு, ஒரு சிப்பாய் ( லாங்கினஸ் என்று பெயரிடப்பட்டவர்) ஒரு ஈட்டியால் அவரது பக்கவாட்டில் குத்தினார் , அவர் இறந்துவிட்டார் என்பதை உறுதிப்படுத்திக் கொண்டார்,
பாவம் செய்யும் யாராக இருந்தாலும் அவர்கள் செத்துப் போவார்கள் என்ற பைபிள் கோட்பாட்டின்படி இயேசு மரணித்ததால் அவர் பாவம் செய்தார் என்பது உறுதியாகிறது.
இஸ்லாமிய நம்பிக்கைப்படியும் இயேசு இனிமேல் மரணிக்க இருக்கிறார் என்பதால் இயேசுவும் மரணிப்பவர் என்று ஆகிறது.

பிசாசு என்று கிறித்தவர்களும், ஷைத்தான் என்று முஸ்லிம்களும் நம்புகின்ற தீய சக்தியின் ஆதிக்கத்தினால் தான் மனிதன் பாவம் செய்கிறான்.
இயேசுவும் பிசாசினால் சோதிக்கப்பட்டார் என்று பைபிள் (மத்தேயு 4:1-10) கூறுகிறது.
இயேசு பிசாசினால் சோதிக்கப்பட்டதில் இருந்து அவர் பாவம் செய்தார் என்பது உறுதியாகிறது. பாவமே செய்யாதவர் என்ற அர்த்தத்தில் ஒருவர் இயேசுவைக் குறிப்பிட்ட போது இயேசு அதை மறுத்துள்ளார்.
அதற்கு இயேசு நீ என்னை நல்லவன் என்று சொல்வானேன்? தேவன் ஒருவர் தவிர நல்லவன் ஒருவனுமில்லையே என்றார். (மாற்கு 10:18)

எந்த மனிதரும் நூறு சதவிகிதம் நல்லவனாக இருக்க முடியாது. நானும் அது போன்றவன்தான் என்று இயேசு கூறியது அவர் பாவம் செய்பவர் என்பதைக் காட்டவில்லையா?
தேவனிடம் நல்லவர் செய்யக் கூடிய எந்தப் பிரார்த்தனையும் நிராகரிக்கப்படுவதில்லை. பாவிகளின் கோரிக்கைக்கு தேவன் செவி கொடுப்பதில்லை என்பது பைபிளின் (யோவான் 9:31) போதனை.
ஆனால் இயேசு சிலுவையில் அறையப்படும் போது தன்னைக் காப்பாற்றுமாறு மன்றாடினார். (மத்தேயு 26:38-45 மாற்கு 14:36, லூக்கா 22:44) ஆனால் அவரது கோரிக்கையை கர்த்தர் ஏற்கவில்லை.
இயேசு மிக உரத்த குரலில், “ ஏலி! ஏலி! லாமா சபக்தானி ” என்று கதறினார். இதற்கு “என் தேவனே, என் தேவனே ஏன் என்னைக் கைவிட்டீர்?” என்று பொருள்.
பாவம் செய்யாதவராக இயேசு இருந்திருந்தால் அவரது கோரிக்கை கர்த்தரால் ஏற்கப்பட்டு இருக்கும்.
ஒரு பெண் விபச்சாரம் செய்த போது சட்டப்படி கல் எறிந்து கொல்லுமாறு மக்கள் கேட்டனர். அதற்கு இயேசு விபச்சாரம் செய்யாதவன் எவனோ அவன் அவளைத் தண்டிக்கட்டும் என்று கூறினார். (யோவான் 8:3-11)
இயேசு பாவம் செய்யாதவராக இருந்தால் அவராவது அவளைத் தண்டித்து இருக்கலாமே? நியாயப் பிரமாணத்தை மீறுவதும் பாவமாகும். நியாயப் பிரமாணத்தில் விபச்சாரம் செய்தவருக்கு கல்லெறி தண்டனை அளிக்க

வேண்டும் என்று கூறியிருக்க அதைச் செயல்படுத்தாமல் இருந்தது மட்டுமின்றி அதை நியாயப்படுத்தியதும் மற்றொரு பாவமாகும்.
பாவம் செய்தவர்கள் ஞானஸ்னானம் பெற வேண்டும் என்பது பைபிள் கோட்பாடு. (மத்தேயு 3:6)
எல்லோரும் ஞானஸ்னானம் பெற்றதுபோல் இயேசுவும் ஞானஸ்னானம் பெற்றார் என்று மத்தேயு 3:13 கூறுகிறது.
எனக்கும் போதனை செய்யுங்கள் என்று இயேசுவிடம் ஒரு அன்னிய இனத்துப் பெண் கேட்டார். இஸ்ரவேலர்கள் மட்டுமே மனிதர்கள் என்றும், மற்றவர்கள் நாய்கள் என்றும் பொருள்படும் வகையில் பிள்ளைகளின் அப்பத்தை எடுத்து நாய்களுக்குப் போடுவது அழகல்ல என்று இயேசு சொல்வது (மத்தேயு 15:26, மாற்கு 7:27) பாவம் இல்லையா?
அத்தி மரத்தில் கனிகள் இல்லை என்பதற்காக கோபத்தில் மரத்தைச் சபித்தது பாவம் அல்லவா? பார்க்க : மத்தேயு 21:19
இப்படி பைபிளைப் புரட்டினால் இயேசு நிறையப் பாவங்கள் செய்துள்ளார் என்பது தெரிகிறது.
பைபிளை நம்பினால் இயேசு பாவம் செய்தார் என்றும் நம்ப வேண்டும்.இயேசுவை ஷைத்தான் தீண்டவில்லை என்று இஸ்லாம் கூறுவதை ஒருவர் சான்றாகக் காட்டினால் அதற்கான அர்த்தத்தை இஸ்லாத்தில் இருந்து பெற வேண்டும். ஷைத்தான் தீண்டவில்லை என்பதற்கான அர்த்தம் என்ன என்பதையும் நபிகள் நாயகம் (ஸல்) அவர்களே விளக்கி விட்டார்கள்.
(புதிதாகப்) பிறக்கும் குழந்தை எதுவாயினும் பிறக்கும் போதே ஷைத்தான் அதைத் தீண்டுகிறான். ஷைத்தான் தீண்டுவதால் அக்குழந்தை உடனே கூக்குரலெழுப்பும். (ஆனால்,) மர்யமையும் அவருடைய புதல்வரையும் தவிர என்று நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கூறினார்கள். நூல் : புகாரீ 4548
குழந்தை பிறக்கும் போது ஷைத்தானால் தீண்டப்பட்டு குழந்தைகள் அழும். அதில் இருந்து இயேசு பாதுகாக்கப்பட்டார் என்று தான் இஸ்லாம் கூறுகிறது. அதன் பிறகு அவர் பாவம் செய்ய மாட்டார் என்று இஸ்லாம் கூறவில்லை. எல்லா மனிதர்களும் பாவம் செய்பவர்கள் என்று இஸ்லாம் தெளிவான அடிப்படைக் கொள்கையை வகுத்திருக்கிறது.
பாவத்தின் சம்பளம் மரணமா ? நீங்கள்தான் சொல்ல வேண்டும்

## இரு நபிமார்களின் அந்தஸ்துகள் 10

#சுவனத்தின் பேரரசி அன்னை ஃபாத்திமா ரலியல்லாஹு அன்ஹா அவர்களின் அருமை மகனார்,,,
#இமாம்_ஹுஸைன் ரலியல்லாஹு அன்ஹு அவர்களின் அருமை பேரர் இமாம் ஜஃபர் சாதிக் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள்.
#ஒரு_முறை_ஹஜ்ரத்_இமாம்_ஜஃபர்_சாதிக்_رضي الله عنه அவர்கள் ஒரு ஊருக்கு போய்க்கொண்டு இருந்த போது,,,
மாபெரும் கிறிஸ்தவ பாதிரிமார்கள் கூட்டம் நடந்து கொண்டு இருந்ததைப் பார்த்து,,,
ஆர்வமிகுதியால் அங்கு சென்றார்கள்...!!
சுமார் ஆயிரம்பாதிரியார்கள் கலந்து கொண்ட கூட்டம் அது,,
முஸ்லிம் ஒருவர் வருவதை
உணர்ந்த தலைமை பாதிரியார்,,,
இமாம் அவர்களை அழைத்து அவர் முஸ்லிமா என்று கேட்டு
உறுதிப்படுத்திக் கொண்டார்.
பின்னர் அவரிடம் இஸ்லாம் கூறும் சொர்க்கத்தின் அமைப்பில் தனக்கு மூன்று சந்தேகங்கள் இருப்பதாலும் அதனை இமாம் அவர்கள் தீர்த்து வைக்க வேண்டும் என்றும் கேட்டார்..!!
இமாம் அவர்கள் அதற்கு ஒப்புக்கொண்டார்கள்..!
1) முதல் சந்தேகம்.:-
சொர்க்கத்தில் ஒரு மரம் இருப்பதையும் அதில் அனைத்து சொர்க்கவாசிகளும் எவ்வளவு கனிகளைப்பறித்தாலும் கனிகள் குறைவதே இல்லை என்று உங்கள் மதம் கூறுகிறதே,,அது நம்பும்படியாகவா
இருக்கிறது,,,,,,?
அல்லாஹ்வால் முடியும் என்று கூறாமல்,
புரியும்படியாக தகுந்த
சாத்தியங்களுடன் பதில் கூறுங்கள் என்றார் பாதிரி,,,,
இமாம்அவர்கள் அமைதியாக கூறினார்கள்
மிக எளிமையான பதில்தான்,,
*ஒருமெழுகுவர்த்தியில்
எத்தனை மெழுகுவர்த்திக
ளை ஒளி ஏற்றினாலும் முதல் மெழுகுவர்த்தியில்
ஒளி குறைவதில்லையே*,,,
பாதிரியார்
புன்முறுவலுடன் ஏற்றுக்
கொண்டார்,,,,
2) அடுத்த கேள்வி :-

சொர்க்கத்தில் உள்ள சொர்க்கவாசிகள் எதை
உண்டாலும் எவ்வளவு உண்டாலும் மலஜலம்
கழிப்பதில்லையாமே
அதெப்படி சாத்தியம்..!!
இமாம் அவர்கள் பதிலளித்தார்கள் தாயின்
வயிற்றிலிருக்கும்
சிசுவுக்கும் உணவளிக்கப்படுகிறது
அது மலஜலம் கழிக்கிறதா என்ன..?
உலக உதாரணங்களைக்
கொண்டு பதிலளிக்கப்படுவதில் தலைமை பாதிரிக்கு திருப்தி
முகத்தில் சந்தோஷம்....! சரி,,,
3) மூன்றாவது சந்தேகத்தையும் தீர்த்து வையுங்கள்:-
சொர்க்கத்தில் ஒரு சுனை இருக்கிறதாமே..., அதில் அறுசுவை நீரும் கிடைக்குமாமே ஒரே சுனையில் அதெப்படி முடியும்...?
இமாம் சொன்னார்கள்,
மனிதனின் கண்ணீர் உவர்ப்பு,, உமிழ்நீர் இனிப்பு,,,
சிறுநீர் காரம்,,, மலம் வேறு சுவை,,,இதெப்படி ஒரே ஒரே உடலில் சாத்தியமோ அப்படித்தான் இதுவும்...!!
பதில்களைக்கேட்ட
அத்தனை பாதிரிகளுக்கும்
ஆச்சர்யம், திருப்தி..!!
சபையில் ஒரே ஆரவாரம் தலைமை பாதிரி கூறினார்,,,
''#லாஇலாஹ_இல்லல்லாஹ்_முஹம்மதுர்_ரஸுலுல்லாஹ்''
அவ்வளவுதான் ஒருவர் பின்
ஒருவராக ஆயிரம் பாதிரிகளும் ஈமான்
கொண்டார்கள்...!!
இஸ்லாம் வாளால் பரவவில்லை....!! இப்படி இமாம்களாலும்,,
இறைநேசர்களாலுமே
பரவியது.....!!!
இஸ்லாம் அறிவு பூர்வமான மார்க்கம் என்பதை அல்லாஹ் குர்ஆனில்
فَاَقِمْ وَجْهَكَ لِلدِّيْنِ حَنِيْفًا ؕ فِطْرَتَ اللّٰهِ الَّتِىْ فَطَرَ النَّاسَ عَلَيْهَا ؕ لَا تَبْدِيْلَ لِخَـلْقِ اللّٰهِ ؕ ذٰ لِكَ الدِّيْنُ الْقَيِّمُ ۙ وَلٰـكِنَّ اَكْثَرَ النَّاسِ لَا يَعْلَمُوْنَ ۙ
(நபியே! இப்ராஹீமுடைய) நேரான மார்க்கத்தை நோக்கி நீங்கள் உங்களுடைய முகத்தை உறுதியான ஓர்மைப்பாட்டுடன் திருப்புங்கள். (அதுவே) மனிதர்களுக்காக அல்லாஹ் ஏற்படுத்திய இயற்கை மார்க்கமாகும். அவன் படைத்த (மார்க்கத்)தை (எவராலும்) மாற்றிவிட முடியாது. இதுதான் நிலையான மார்க்கம். எனினும், மனிதரில் பெரும்பாலானவர்கள் (இதனை) அறிந்துகொள்ளவே மாட்டார்கள். (அல்குர்ஆன் : 30:30)
ஸுபுஹானல்லாஹ்
அல்ஹம்துலில்லாஹ்
அல்லாஹு அக்பர்.
(நூல்:வலிமார்கள் வரலாறு)
🌹ஸல்லல்லாஹு அலா முஹம்மது ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்🌹
🌹ஸித்றத்துல் முன்தஹா பதிவிலிருந்து... 🌹

## இரு நபிமார்களின் அந்தஸ்துகள் 11

அண்ணலெம் பெருமானார் (ஸல்) அவர்களின் 12-வது தலைமுறையில் உதித்த
*#கௌதுல்_அஃளம்_முஹிய்யத்தீன்_ஆண்டகையின்_அற்புதம்_கேளுங்கள்*

பக்தாது நகரிலே அறிவில் சிறந்த கிறிஸ்தவ மத பாதிரி ஒருவர் இருந்தார். அதிகமான மக்கள் அவரை பின்தொடரும் அளவுக்கு ஆளுமைமிக்க பாதிரி அவர். அவர் குர்ஆனையும் இஸ்லாத்தின் கொள்கைகளையும் நன்கு அறிந்து வைத்திருந்தார். இஸ்லாத்தின் மீதும் நபிகள் நாயகம் ﷺ அவர்களின் மீதும் உயர்வான அன்பும் ஈர்ப்பும் கொண்டிருந்தார்.
அவர் இஸ்லாத்தை தழுவ தயாராக இருந்தபோதிலும் ஒரே ஒரு காரணத்திற்காக மட்டும் அவர் இஸ்லாத்தை தழுவாமல் இருந்தார். அதாவது அண்ணல் நபி நாயகத்தின் புனித மிஃராஜ் நிகழ்வை அவரால் புரிந்து கொள்ள முடியவில்லை. ஏழு வானம் கடந்து சரீர உடலுடன் நபிகள் நாயகம் ﷺ அவர்கள் விண்ணை கடந்து சென்றதை அவரது மனம் ஏற்றுக்கொள்ளவில்லை. வினா கேட்டு நின்றார்.

பாதிரியாரின் சந்தேகத்தை போக்க பக்தாது நகர கலீபா அவர்கள், பக்தாதில் உள்ள பல தலைசிறந்த ஆலிம்களையும் மேதைகளையும் அவரிடம் பேச வைத்து விளக்கம் கொடுக்க வைத்தார். எனினும் மிஃராஜ் சம்பந்தமாக எவராலும் அவரது சந்தேகத்தை தீர்த்து வைக்க முடியவில்லை.
பிறகு இறுதியாக, கலீபா அவர்கள், கௌதுல் அஃளம் முஹிய்யத்தீன் ஆண்டகையிடம் கடிதம் எழுதி அந்த பாதிரியாரின் சந்தேகத்தை தீர்த்து வைக்கும்படி அன்னவர்களை வேண்டினார்.
அதன்படி ஷெய்க் முஹிய்யத்தீன் அப்துல் காதிர் ஜீலானி நாயகம் அவர்கள் அரண்மைக்கு வந்த போது, கலீபா மற்றும் பாதிரியார் இருவரும் அங்கே சதுரங்கம் விளையாடி கொண்டிருப்பதை கண்டார்கள்.
அப்போது அந்த பாதிரியார், தன் சதுரங்கத்தில் உள்ள காயை நகர்த்தி கொண்டிருந்தவராக, கௌது நாயகத்தின் வல்லமை மிக்க பார்வையின் முன் படுகிறார். அவர் கௌது நாயகத்தை பார்த்த அந்த அசைவில் பாதிரியாரின் கண் இமைப்பொழுதில் மூடிக்கொண்டது.

பிறகு அவர் தன் கண்ணை திறந்து பார்த்தபோது வேறு ஒரு நாட்டில் அந்த பாதிரியார் ஒரு ஆற்றில் நிர்வாணமாக மிதந்து கொண்டிருப்பதை கண்டார். அந்நிலையில், தன்னை யாராவது வந்து காப்பாற்றமாட்டார்களா என்று கூக்குரலிட்டு அவர் உதவி தேடுகிறார்.
அச்சமயம் ஒரு ஆட்டிடையர் அங்கே உடனே வந்து அவரை அந்த ஆற்று வெள்ளத்தில் இருந்து காப்பாற்றி கரைசேர்க்கிறார். இப்போது அந்த பாதிரியார் தான் முற்றிலும் இளம்பெண்ணாக உருமாறி இருப்பதை உணர்கிறார் !

இந்நிலையில் அந்த ஆடு மேய்ப்பவர் அந்த பெண்ணிடத்தில், நீங்கள் எங்கிருந்து வருகிறீர்கள் என்று கேட்ட போது, அவள் தான் பக்தாதில் இருந்து வருவதாக கூறினாள்.
அதற்கு அந்த ஆடு மேய்ப்பர் சொல்கிறார், இங்கிருந்து பக்தாது செல்வதற்கு சில மாதங்கள் போகும் அளவுக்கு நீண்ட தொலைதூரம் ஆகும் என்கிறார்.
பின்னர் அந்த ஆட்டிடையர் அந்த பெண்ணை பாதுகாத்து உதவினார். அந்த பெண்ணும் வேறுவழியின்றி எங்கும் செல்ல முடியாததால் அந்த ஆட்டிடையர் அந்த பெண்ணையே திருமணம் செய்து கொள்கிறார். சிறிது காலம் சென்று அவர்களுக்கு மூன்று குழந்தையும் பிறந்து வளர்ந்தும் விட்டது.
ஒருநாள் அந்த பெண், (பல வருடங்களுக்கு முன் தான் பெண்ணாக உருமாறி தோன்றிய) அதே ஆற்றில் சலவை செய்து கொண்டிருக்கும் போது, அவள் ஆற்றில் தடுமாறி கீழே விழுகிறாள்.
அக்கணம் அவள் தன் கண்ணை திறந்து பார்த்த போது, (இப்பொழுது அவள் முன்பிருந்த உலகத்தில் அதே நிகழ்வில் அதே வினாடியில் பாதிரியாராக...) பாதிரியார் நேர் எதிரே கலீபா அமர்ந்து சதுரங்க காயை பிடித்து நகர்த்தி கொண்டிருப்பதை காண்கிறார். அங்கே பாதிரியார் இன்னும் தொடர்ந்து கௌது நாயகத்தின் திருமுகத்தை பார்த்த வண்ணம் உள்ளார்.
(உம்முடைய இறைவனிடம் ஒரு நாள் என்பது, நீங்கள் கணக்கிடுகிற ஆயிரம் ஆண்டுகளைப் போலாகும். (குர்ஆன் 22:47))

அவரிடத்தில் கௌது நாயகம் கூறினார்கள். பாதிரியாரே நீங்கள் இன்னும் (மிஃராஜை) நம்பிக்கை கொள்ளவில்லையா என்று ?
அந்த பாதிரியாருக்கு அக்கணம் தன்னை சுற்றி என்ன நடக்கிறது என்று புரியாமல், தான் கண்டது கனவா அல்லது நனவா என்று சந்தேகத்துடன் விழித்து ஆச்சர்யத்துடன் நிற்கிறார்.
கௌது நாயகம் அவர்கள் அவரிடத்தில் மீண்டும். ஒருவேளை நீங்கள் உங்கள் குடும்பத்தை நேரடியாக பார்த்தால் நம்புவீர்களா என்று கேட்டார்கள். உடனே அன்னவர்கள் கதவை திறந்த போது, என்னே அற்புதம்! அங்கே அந்த ஆட்டிடையரும் அவரது மூன்று குழந்தைகளும் வந்து நின்றனர்!
இதை பார்த்த பாதிரியார் அதிசயித்து உடனே கௌது நாயகத்தின் திருக்கரம் பற்றி ஈமான் கொண்டார்.
பாதிரியாரை தொடர்ந்து அவருடன் இருந்த அவரது சகாக்களான ஐந்தாயிரம் கிறிஸ்தவர்களும் வரிசை வரிசையாக வந்து கௌதுல் அஃளம் முஹிய்யத்தீன் ஆண்டகை நாயகத்தின் திருக்கரம் பிடித்து இஸ்லாத்தை தழுவி முஸ்லிமாயினர்.
சுப்ஹானல்லாஹ் !
அல்ஹம்துலில்லாஹ் !
அல்லாஹு அக்பர் !
யா கௌஸுல் அஃளம் இரட்சகரே!
யா குத்புல் அக்தாப் நாயகமே!
யா ஷைகு முஹிய்யத்தீன் ஆண்டகையே! அல்மதது அல்மதது அல்மதது.
ஸல்லல்லாஹு அலா முஹம்மது ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம்!
VAITIYAR MALICK அவர்களின் பதிவலிருந்து ...

## இரு நபிமார்களின் அந்தஸ்துகள் 12

மகான் ஹளரத் அபூயஸீத் பிஸ்தாமி [ரஹிமஹுல்லாஹு] அவர்கள் மிகப்பெரிய மெஞ்ஞானி..!!
அல்லாஹ்வின் அருள் பெற்ற இந்த இறைநேசரிடம் ஒரு நாள் ஒரு பாதிரியார் தனது சீடர்கள் புடைசூழ பந்தாவாக வந்தார்...!!
பிஸ்தாமி ரஹிமஹுல்லாஹு அவர்களை பயந்து பின் வாங்கச் செய்யும் பல புதிர் கேள்விகளை பாதிரியார் மிக கம்பீரமாக கேட்டார்.

அவர் கேட்ட அத்தனை கேள்விகளுக்கும் பதறாமல் சட்டென்று பதில் கூறி பாதிரியாரை வியக்க வைத்தார்கள் பிஸ்தாமி ரஹிமஹுல்லாஹு அவர்கள்..!!
1, ஒன்று தான் உள்ளது. இரண்டு இல்லை. அது என்ன?
அல்லாஹ் ஒருவன்.
قل هو الله احد நபியே கூறுங்கள் [அந்த] அல்லாஹ் ஒருவன் தான். [அல்குர்ஆன் :112 ;1]
2, இரண்டு தான் இருக்கிறது. மூன்று இல்லை. அது என்ன?
இரவும் பகலும்.
وجعلنا الليل والنهار ايتين நாம் இரவையும் பகலையும் இரு அத்தாட்சிகளாக ஆக்கினோம். [அல்குர்ஆன் :17 ;12]
3, மூன்று தான். நான்கு இல்லை. அது என்ன?
கிள்ரு நபி [அலைஹிஸ்ஸலாம்] அவர்கள், மூஸா நபி [அலைஹிஸ்ஸலாம்] அவர்களுக்கு நடத்திய பாடத்தின் தலைப்புகள் மூன்று தான்.
1] கப்பல் சேதம்.
2] சிறுவன் கொலை.
3] சுவர்.
4, நான்கு தான். ஐந்து இல்லை. அது என்ன?
வேதங்கள் நான்கு. தவ்ராத்,ஸபூர்,இன்ஜீல்,குர்ஆன்.
5, ஐந்து தான். ஆறில்லை. அது என்ன?
ஒரு நாளைக்கு கடமையான தொழுகைகள் ஐந்து தான்.
6, ஆறு தான். ஏழில்லை. அது என்ன?
வானத்தையும்,பூமியையும் அல்லாஹ் படைத்த நாட்கள் ஆறு.
وَلَقَدْ خَلَقْنَا السَّمَاوَاتِ وَالْأَرْضَ وَمَا بَيْنَهُمَا فِي سِتَّةِ أَيَّامٍ وَمَا مَسَّنَا مِنْ لُغُوبٍ நிச்சயமாக நாம் தான் வானங்களையும்,பூமியையும் அதற்கு மத்தியிலுள்ளவை களையும் ஆறே நாட்களில் படைத்தோம்.அதனால் நமக்கு யாதொரு களைப்பும் [சோர்வும்] ஏற்பட்டு விடவில்லை. [அல்குர்ஆன் :50 ;38]
பாதிரி : இந்த வசனத்தின முடிவில் “அதனால் நமக்கு யாதொரு களைப்பும் ஏற்பட வில்லை” என்று ஏன் சொல்லி முடித்தான்?
பிஸ்தாமி ரஹிமஹுல்லாஹு ; யூதர்களுக்கு மறுப்பு கூறுவதற்காக அவ்வாறு சொல்லி முடித்தான்.ஏனெனில் அவர்கள் சொன்னார்கள் ; அல்லாஹ்
வானங்களையும்,பூமியையும் ஆறு நாட்களில் [ஞாயிறு முதல் வெள்ளி வரை] படைத்த போது அவனுக்கு களைப்பு ஏற்பட்டது.எனவே ஒரு நாள் ஓய்வு எடுத்துக் கொண்டான்.அது சனிக்கிழமை,ஏழாம் நாள். இதை மறுப்பதற்காக மேற்கண்டவாறு “நமக்கு எந்த களைப்பும் ஏற்பட வில்லை” எனக்கூறினான்.

7, ஏழு தான். எட்டு இல்லை. அது என்ன?
வாரத்தின் நாட்கள் ஏழு.
8, எட்டு தான். ஒன்பது இல்லை. அது என்ன?
அர்ஷை சுமக்கும் மலக்குகள் எட்டு பேர்.
وَيَحْمِلُ عَرْشَ رَبِّكَ فَوْقَهُمْ يَوْمَئِذٍ ثَمَانِيَةٌ அந்நாளில் உங்கள் இறைவனின் அர்ஷை எட்டு மலக்குகள் தங்களுக்கு மேலாகச் சுமந்து கொண்டு நிற்பார்கள். [அல்குர்ஆன் :69 ;17]
9, ஒன்பது முஃஜிஸாக்கள். அது என்ன?
அது மூஸா நபி [அலை] அவர்களின் முஃஜிஸாக்கள்.
1]கை. 2]கைத்தடி. 3]தம்ஸ் – பொருள் நாசமாகுதல். 4] [மழையுடன் கூடிய] புயல் காற்று. 5]வெட்டுக்கிளி. 6]பேன்.
7]தவளை. 8]இரத்தம். 9]பஞ்சம். [காண்க :7 ;133, 10 ;88, 17 ;101, 27 ;10,12]
10, கூடுதலை ஏற்றுக் கொள்ளும் பத்து. அது என்ன?

مَنْ جَاءَ بِالْحَسَنَةِ فَلَهُ عَشْرُ أَمْثَالِهَا எவரேனும் ஒரு நன்மையை செய்தால் அவருக்கு அதைப்போல் பத்து பங்கு [நன்மை கூடுதலாக] உண்டு. [அல்குர்ஆன் :6 ;160]
11, பதினோறு பேர். அவர்கள் யார்?
யூசுஃப் நபி [அலை] அவர்களின் சகோதரர்கள். [காண்க :12 ;04]
12, பன்னிரண்டிலிருந்து உண்டான முஃஜிஸா எது?
وَإِذِ اسْتَسْقَى مُوسَى لِقَوْمِهِ فَقُلْنَا اضْرِبْ بِعَصَاكَ الْحَجَرَ فَانْفَجَرَتْ مِنْهُ اثْنَتَا عَشْرَةَ عَيْنًا மூஸா தன் இனத்தாரு [டன் தீஹ் என்ற மைதானத்திற்கு சென்ற சமயத்தில் தண்ணீர் கிடைக்காமல் தாகத்தால் கஷ்டடப்பட்டுக் கொண்டிருந்த அவர்களு]க்கு தண்ணீர் தேடிய போது [நாம் அவரை நோக்கி] நீங்கள் உங்களது தடியால் இக்கல்லை அடியுங்கள் என்று கூறினோம்.[அவர் அவ்வாறு அடித்ததும்] உடனே அதிலிருந்து பன்னிரண்டு ஊற்றுகள் உதித் தோடியன. [அல்குர்ஆன் :2 ;60]
13, பதிமூன்று பேர். அவர்கள் யார்?
யூசுஃப் நபியுடைய சகோதரர்கள் மற்றும் அவர்களின் தாயும் தந்தையும். [11 + 2] 13 பேர்களாகும்.
14, மூச்சு விடும்.ஆனால் அதற்கு உயிர் இல்லை. அது என்ன?
و الصبح اذا تنفس மூச்சு விடும் [உதயமாகும்] காலையின் மீதும் சத்தியமாக. [அல்குர்ஆன் :81 ;18]
15, கப்று கொண்டு நடந்தவர் யார்?
யூனுஸ் நபி [அலைஹிஸ்ஸலாம்] அவர்கள்.
فَلَوْلَا أَنَّهُ كَانَ مِنَ الْمُسَبِّحِينَ لَلَبِثَ فِي بَطْنِهِ إِلَى يَوْمِ يُبْعَثُونَ நிச்சயமாக அவர் [யூனுஸ் நபி] நம்மைத் துதி செய்பவர்களில் ஒருவராக இல்லாதிருந்தால் [மறுமையில்] எழுப்பப்படும் நாள் [வரும்] வரையில் அவர் அதன் வயிற்றில் தங்கியிருப்பார். [அல்குர்ஆன் :27; 143,144]
16, உண்மை சொன்னார்கள். ஆனால் நரகம் சென்றார்கள். அவர்கள் யார்?
யூதர்களும்,கிறிஸ்தவர்களும்.
وَقَالَتِ الْيَهُودُ لَيْسَتِ النَّصَارَى عَلَى شَيْءٍ وَقَالَتِ النَّصَارَى لَيْسَتِ الْيَهُودُ عَلَى شَيْءٍ وَهُمْ يَتْلُونَ الْكِتَابَ “கிறிஸ்தவர்கள் எ[ந்த மார்க்கத்]திலுமில்லை” என யூதர்கள் கூறுகின்றனர். [அவ்வாறே] “யூதர்கள் எ[ந்த மார்க்கத்]திலுமில்லை” எனக் கிறிஸ்தவர்களும் கூறுகின்றனர். ஆனால் இவ்விருவருமே [தங்களின் கூற்றுக்கு ஆதாரமாக பைபிளின் பழைய ஏற்பாடாகிய தவ்ராத் என்னும் ஒரே] வேதத்தையே ஓதுகின்றனர். [அல்குர்ஆன் :2 ;113]
17, பொய் சொன்னார்கள்.ஆனால் சொர்க்கம் சென்றார்கள். அவர்கள் யார்?
யூசுஃப் நபி [அலைஹிஸ்ஸலாம்] அவர்களின் சகோதரர்கள்.[“யூசுஃப் நபியை ஓநாய் கடித்து தின்று விட்டது” என்று பொய் சொல்லி, பிறகு தௌபா செய்து [பாவ மன்னிப்பு] திருந்தி இறை நேசரானார்கள்]
18, அல்லாஹ் படைத்த அந்த படைப்புகளுக்கு தந்தையும் இல்லை,தாயும் இல்லை. அவர்கள் யார்?
மலக்குகள் – வானவர்கள்.
19, பன்னிரண்டு கிளைகளைக் கொண்ட ஒரு மரம். அதில் ஒவ்வொரு கிளையிலும் முப்பது இலைகள். ஒவ்வொரு இலையிலும் ஐந்து பழங்கள்.அதில் மூன்று நிழலிலும் இரண்டு சூரிய வெயிலிலும் இருக்கிறது. இது என்ன?
இந்த மரம் என்பது வருடம். இதில் பன்னிரண்டு மாதங்கள். முப்பது இலைகள் என்பது முப்பது நாட்கள். ஐந்து கனிகள் என்பது ஒவ்வொரு நாளும் ஐவேளைத் தொழுகை.இதில் மக்ரிப்,இஷா, ஃபஜ்ரு நிழலிலும் லுஹர்,அஸர் சூரிய வெயிலிலும் உள்ளது…!!!

பாதிரியாரிடம் அபூ யஸீது பிஸ்தாமி [ரஹிமஹுமுல்லாஹு ] அவர்கள் கேட்ட ஒரே ஒரு கேள்வி…!!
இதுவரை பாதிரியாரிடம் கேட்ட அனைத்து புதிர்களுக்கும் நல்ல புரிதல்களுடன் கூடிய பொருத்தமான பதில்களை பட்டென்று பதிலளித்த மகான் பிஸ்தாமி [ரஹிமஹுமுல்லாஹு ] அவர்கள் நிறைவாக,,,, நான் ஒரே ஒரு கேள்வி உங்களிடம் கேட்கிறேன்.அதற்கு நீங்கள் எனக்கு பதிலளிக்க வேண்டும் என்றார்கள்…!
என்ன கேள்வி யா முஹம்மது? என எடுப்பாக கேட்ட பாதிரியாரிடம், சொர்க்கத்தின் திறவுகோள் என்ன என எதார்த்தமாகக் கேட்டார்கள்…!!
அப்போது பாதிரி பதிலளிக்காமல் உறைந்து போய் மௌனமானார்.! அவர் கூட வந்திருந்த அவருடைய கிருஸ்தவ சீடர்கள் ; எங்களின் தந்தையே! நீங்கள் அவர்களிடம் இவ்வளவு கேள்விகள் கேட்டீர்கள். அதற்கு அவர்கள் உங்களுக்குப் பதிலளித்தார்கள்.இப்போது அவர்கள் உங்களிடம் ஒரு கேள்வி தானே கேட்டுள்ளார்கள்.அதற்கு நீங்கள் பதிலளிக்க மாட்டீர்களா? என ஆவலாய் பேசினார்கள்.
அதற்குப் பாதிரியார் ; எனது பிள்ளைகளே! நான் உங்களைத் தான் பயப்படுகிறேன் என்று தயங்கிய போது, வேண்டாம் எங்களைப் பயப்பட வேண்டாம். தாராளமாகப் பதிலளியுங்கள் என்று ஆர்வமூட்டினார்கள்.இறுதியாக பாதிரியார் அவர்கள் உறுதியாக சொன்ன பதில் என்ன தெரியுமா?
சொர்க்கத்தின் திறவுகோள் لا اله الا الله محمد رسول الله [லாயிலாஹ இல்லல்லாஹு முஹம்மதுர் ரசூலுல்லாஹ்] என்பதாகும். அனைவரும் இறைகலிமாவை மொழிந்து இஸ்லாத்தில் நுழைந்தனர்..!!
இறுதியில் தேவாலயம் ஏக இறைவனாம் அல்லாஹ்வை வணங்கும் மஸ்ஜிதாக மாறியது…!!
VAITIYAR MALICK பதிவலிருந்து …

## இரு நபிமார்களின் அந்தஸ்துகள் 13

#முன்னால்_கிருத்தவ_கன்னியாஸ்திரி
#Irena_Handono
*#இஸ்லாத்தை_ஏற்ற_வரலாறு*




இது முன்னாள் ரோமன் கத்தோலிக்க கிறிஸ்தவ கன்னியாஸ்திரி Irena Handono அவர்கள் நான் ஏன் இஸ்லாத்தை தழுவினேன் என்று விளக்கிய வீடியோ தொகுப்பிலிருந்து எழுத்தாக்கம் செய்யப்பட்டதாகும்.
நான் ஆறு வயதாக இருக்கும் போது கிறிஸ்தவ தேவாலயத்தைச் சேர்ந்த பள்ளி ஒன்றுக்கு கத்தோலிக்க கிறிஸ்தவத்தைப் பற்றி பயில்வதற்காக அனுப்பப்பட்டேன்....
என்னுடைய படிப்பிற்கான முழு செலவுகளையும் அந்த தேவாலய நிர்வாகமே பொறுப்பு ஏற்றுக் கொணடிருந்தது. ஏனென்றால் என்னுடைய பெற்றோர்கள் இந்தோனேசியாவில் உள்ள மிகப்பெரிய சர்ச்சுகளில் ஒன்றின் அமைப்பாளர்கள் (Organisors) ஆவார்கள்.
பின்னர் பருவ வயதில் தேவாலயத்தைச் சேர்ந்த Liaision Maria என்ற கல்வி நிறுவனத்தில் சேர்ந்தேன்.
Maria என்பது ஈஸா (அலைஹி வ ஸல்லம்)அவர்களின் தாயார் மர்யம் (அலைஹி வ ஸல்லம்) அவர்களைக் குறிக்கும்.

இந்த நிறுவனத்தின் முக்கிய குறிக்கோள் என்னவெனில் Stray Sheeps என்று சொல்லப்படக் கூடிய காணாமல் போன ஆடுகளை தேடுவதாகும்.
காணாமல் போன ஆடுகள் என்று அவர்கள் குறிப்பிடுவது, நம்முடைய உணவுக்காகவும் ஈதுல்-அல்ஹா பெருநாள் குர்பானி கொடுப்பதற்காக அறுக்கிறோமே அந்த ஆடுகளை அல்ல !!!
மாறாக காணாமல் போன ஆடுகள் என்று அவர்கள் குறிப்பிடுவது, கிறிஸ்தவர்களல்லாத மற்றவர்களை !!!
அதாவது இந்த பள்ளி வாசலில் குழுமியிருக்கும் நம்மைப் போன்ற முஸ்லிம்களை அவர்கள் காணாமல் போன ஆடுகள் என்று குறிப்பிடுகிறார்கள்....
நம்மையெல்லாம் கிறிஸ்தவர்களாக்கும் ஒரு மிகப்பெரும் செயல் திட்டம் அவர்களிடம் இருந்துக் கொண்டிருக்கிறது !!!
ஒரு வருடம் கழித்த பிறகு நான், இந்தோனேசியாவில் மிக அதிக அளவில் உறுப்பினர்களையுடைய ஒரு கிறிஸ்தவ அமைப்பின் தலைவியானேன்....
பின்னர் கன்னியாஸ்திரி ஆவதற்காக ஒரு கிறிஸ்தவ தேவாலயத்தில் சேர்ந்தேன்....

சகோதர சகோதரிகளே!
நான் ஒரு முஸ்லிம் ஆக வேண்டும் என்ற எண்ணம் எனக்கு ஒரு போதும் இருந்ததில்லை.....
நான் கன்னியாஸ்திரியாக வேண்டுமென்ற என்ற என்னுடைய எண்ணம் நிறைவேறியது..
கன்னியாஸ்திரியாக வேண்டுமென்ற என்னுடைய எண்ணம் நிறைவேறியதிலிருந்து, அல்லாஹ் அவனுடைய அடிமையாகிய எனக்கு நேர்வழி காட்ட ஆரம்பித்தான் !!!
பின்னர் கிறிஸ்தவ பாதிரியார்கள் படிக்கும் மேற்படிப்பாகிய மதங்கள் மற்றும் தத்துவங்களைப் பற்றிய (Theology & Philosophy) உயர்ந்த படிப்பைப் படிப்பதற்காக நான் அனுப்பப்பட்டேன்.

அங்கு நான் மதங்களைப் பற்றிய ஒப்பாய்வு (COMPARATIVE RELIGION) பாடங்களைப் படித்தேன்.இஸ்லாத்தைப் பற்றி பயிற்றுவிக்கப்பட்டேன்...
ஆனால் உண்மையான இஸ்லாத்தைப் பற்றி அல்ல!
இஸ்லாம் என்பது மிக மோசமான மதம் என்று பயிற்றுவிக்கப்பட்டேன்...
இஸ்லாத்தைப் பற்றி நீங்கள் தெரிந்துக் கொள்ள வேண்டுமானால் இந்தோனேசியாவிலுள்ள முஸ்லிம்களைப் பாருங்கள் என்று எங்களுக்கு விளக்கினார்கள் !!!

இந்தோனேசியாவில்,
ஏழைகளாக இருக்கிறார்களே, அவர்களுடைய மதம் என்ன? - இஸ்லாம்
# முட்டாள்களாக இருக்கிறார்களே, அவர்களுடைய மதம் என்ன? - இஸ்லாம்
# வெள்ளிக் கிழமை தொழுகையின் போது தங்களின் காலனிகளை தொலைக்கிறார்களே, அவர்களுடைய மதம் என்ன? - இஸ்லாம்
# ஒற்றுமையாக இருப்பதற்கு மறுக்கிறார்களே, அவர்களுடைய மதம் என்ன? - இஸ்லாம்
# தீவிரவாதிகளாக இருக்கிறார்களே, அவர்களுடைய மதம் என்ன? - இஸ்லாம்
இவர்களுடைய இத்தகைய தவறான போதனையினால் என்னுடைய நண்பர்கள் அனைவரும் இஸ்லாம் என்பது ஒரு மிக மோசமான மதம் என்ற தீர்மானத்திற்கு வந்தார்கள்...
ஆனால் அதே சமயத்தில் நான் அவர்கள் எடுத்திருக்கின்ற முடிவு உண்மைக்கு புறம்பானது என்றும் தவறானது என்றும் அவர்களிடம் கூறினேன்...
நான் அவர்களிடம், நாம் இந்தோனேசியாவை மட்டும் பார்க்கக் கூடாது, மற்ற நாடுகளில் உள்ள நிலவரங்களையும் நாம் பார்க்க வேண்டும் என்று கூறினேன்....

உதாரணமாக,
பிலிப்பைன்ஸ் நாட்டில், ஏழைகளாகவும், படிப்பறிவில்லாதவர்களாகவும் இருக்கிறார்களே! அவர்களுடைய மதம் இஸ்லாம் அல்ல!.
அவர்களெல்லாம் கத்தோலிக்க கிறிஸ்தவர்கள்....
மெக்ஸிகோ ஒரு ஏழை நாடு.... அந்நாட்டில், குற்றவாளிகளாகவும், திருடர்களாகவும், குடிகாரர்களாகவும், கற்பழிப்பு செய்பவர்களாகவும், சூதாட்டக்காரர்களாகவும் இருக்கிறார்களே! அவர்களில் ஒருவர் கூட இஸ்லாமியர் அல்லர்.....
#அவர்கள்_அனைவரும்_கத்தோலிக்க_கிறிஸ்தவர்கள் !!!

அயர்லாந்து குடியரசு நாடு.
இந்த நாடு வடக்கு மற்றும் தெற்குப் பகுதிகளுக்கிடையே தீர்க்க இயலாத உள் நாட்டு பிரச்சனையில், சச்சரவில் சிக்கித் தவிக்கும் ஒரு நாடு....
இந்தச் சச்சரவில் ஒரு முஸ்லிம் கூட இல்லை !!!
இந்தப் சச்சரவு நடப்பது கத்தோலிக்க மற்றும் புரோட்டஸ்டன்ட் கிறிஸ்தவர்களுக்கிடையில் தான்!!!
அவர்கள் தமக்குள்ளாகவே சண்டையிட்டுக் கொண்டு கொலை செய்கின்றார்கள்.
ஐரோப்பிய சமூகம் அவர்களை அயர்லாந்தின் தீவிரவாதிகள் என்று கருதுகிறது..
அவர்கள் ஐரோப்பிய தீவிரவாதிகள் என்றும் வகைப்படுத்தப்படுகிறார்கள்.

இத்தாலியைப் பாருங்கள்! போதைப் பொருள் கடத்துபவர்கள், சூதாட்டக்காரர்கள் - இவர்களில் ஒருவர் கூட இஸ்லாமியர் அல்லர் !!!
அனைத்து மாஃபிய்யாக் கும்பல்களும் கத்தோலிக்க கிறிஸ்தவர்கள் தான் !!!
அப்போது நான் என்னுடைய மேலதிகாரியான பாதிரியாரிடம், இஸ்லாம் ஒரு மோசமான மதம் என்று நிரூபிக்கப்படவில்லையே எனக் கூறினேன்.
அப்போது நான், இஸ்லாத்தை, இஸ்லாமியர்களிடமிருந்தே படிக்க வேண்டும் என்ற ஒரு கோரிக்கையை முன் வைத்தேன்..
அப்போது நான் இஸ்லாத்தின் பலவீனங்களைப் பற்றி மட்டும் படிக்க வேண்டும் என்ற கட்டுப்பாட்டுடன் அனுமதியளிக்கப்பட்டேன்.
நான் குர்ஆனைப் படித்த போது, அது குறிப்பாக இறைவன் ஒருவனே! ஒரே ஒருவன் தான் என்று வலியுறுத்தியது.
அது நான் கிறிஸ்தவ தேவாலயங்களில் பயின்ற திரித்துவக் கடவுள் கொள்கைக்கு (TRINITY OF GOD) முற்றிலும் மாற்றமானதாக இருந்தது !!!
ஆனால் இரவில் நான் குர்ஆனைப் படித்தபோது (சூரா இக்லாஸ்), இறைவன் ஒருவனே! என்றிருக்கிறது.
ஆனால் அன்று காலையிலோ தேவாலயத்தில் மதங்களைப் பற்றிய பாடத்தை பாதிரியார் அவர்கள் போதித்த போது கடவுள் ஒருவரே! ஆனால் மூவரில் இருக்கிறார் (திரித்துவம் - TRINITY என்று போதித்தார்.
அதனால் அந்த இரவில் ஒரு சக்தி என்னை மேலும் குர்ஆனைப் படிக்க உந்தியது....
என் ஆழமான உள் மனது இறைவன் ஒருவனே!
என்றும் மேலும் இது (குர்ஆன்) உண்மையானது தான் என்றும் கூறிற்று....

மறு நாள் காலையில் தேவாலயத்தில் நான் என்னுடைய பாதிரியாரிடம், விவாதித்தேன்.
கடவுளின் திரித்துவக் கொள்கை (TRINITY OF GOD) என்பது பற்றி எனக்கு சரியாக விளங்கவில்லை என்று அவரிடம் நான் கூறினேன்....

கிறிஸ்தவ கன்னியாஸ்திரியாகிய நான் இதுவரைக்கும் கடவுளின் திரித்துவக் கொள்கையைப் பற்றி எப்படி விளக்கம் பெறாமல் இருக்கமுடியும் என்பதைப் பற்றி அந்த பாதிரியார் மிகவும் ஆச்சரியமடைந்தார் !!!
அந்தப் பாதிரியார் முன் வந்து ஒரு முக்கோணத்தை வரைந்தார். பின்னர் அவர், ஒரு முக்கோனத்திற்கு மூன்று மூலைகள் (THREE CORNERS) இருப்பதைப் போல, ஒரு கடவுள் மூன்று பேரில் இருக்கிறார் என்று கூறினார்...
அதற்கு நான், உலகம் வேகமாக வளர்ச்சியடைந்து கொண்டிருக்கும்.
எனவே கடவுள் மூவரை வைத்து சமாளிப்பது என்பது கடினம்.
எனவே கடவுள் மற்றொருவருக்கு தேவையுடைவராக இருக்க சாத்தியக்கூறு இருக்கிறதல்லவா? இது சாத்தியம் தானே? என்று கேட்டேன் ?
அதற்கு நன்கு கற்றறிந்த என்னுடைய பாதிரியார் இதற்கு சாத்தியமே இல்லை என்று கூறினார்.
அதற்கு நான், இது சாத்தியமானதே! என்று கூறி முன்னாள் வந்து, ஒரு சதுரத்தை வரைந்தேன். முக்கோணத்திற்கு மூன்று கோணங்கள் இருப்பதைப் போன்று சதுரத்திற்கு நான்கு மூலைகள் (FOUR CORNERS) இருக்கின்றனவே என்று கூறினேன்.

அதற்கு நன்கு கற்றறிந்த என்னுடைய பாதிரியார், முடியாது என்று கூறினார். முன்பு இதற்கு சாத்தியமே இல்லை என்று கூறிய அவர், தற்போது முடியாது என்று மட்டும் கூறினார்.
அது ஏன்? என்று நான் பாதிரியாரிடம் கேட்டேன்.
அதற்கு பாதியார், இது நம்பிக்கை. நீ புரிந்துக் கொண்டாயோ இல்லையோ அப்படியே ஏற்றுக்கொள், அப்படியே இதை விழுங்க விடு இதைப் பற்றி கேள்விகள் எதுவும் கேட்காதே!
கடவுளின் திரித்துவக் கொள்கையைப் பற்றி கேள்விகள் எதுவும் கேட்காதே!
இதைப் பற்றி சந்தேகப்பட்டு கேள்வி கேட்டால் நீ பாவம் செய்தவளாகி விடுவாய்! என்று கூறினார்.
இந்த மாதிரியான பதில் எனக்கு கிடைக்கப் பெற்றும் அன்று இரவு குர்ஆனை தொடர்ந்து படிக்க வேண்டும் என்ற உறுதியான ஆர்வம் எனக்கு ஏற்பட்டது...
ஏகத்துவம் குறித்த கடவுள் கொள்கையைக் குறித்து கற்றறிந்த என்னுடைய பாதிரியாருடன் விவாதம் செய்ய விரும்பினேன்.

ஒரு சமயம் நான் என்னுடைய பாதிரியாரிடம், இந்த மேசைகளை உருவாக்கியது யார் என்று கேட்டேன்...
அதற்கு பாதிரியார் பதிலளிக்க விரும்பாமல் என்னையே பதிலளிக்குமாறு கூறினார்.
அதற்கு நான் இந்த மேசைகளை உருவாக்கியது தச்சர்கள் (CARPENTERS) என்றேன்.
அது எப்படி? என்று பாதிரியார் கேட்டார்.
அதற்கு நான் இந்த மேசைகள் ஒரு வருடத்திற்கு முன்பாகவோ அல்லது நூறு வருடத்திற்கு முன்பாகவோ உருவாக்கப்பட்டவைகள்...
இவைகள் இன்னமும் மேசைகளாகவே இருக்கின்றன. இந்த மேசைகள் எப்போதும் தச்சார்களாக (CARPENTERS) மாறமுடியாது. மேலும் ஒரே ஒரு மேசை கூட தச்சராக (CARPENTER) மாறுவதற்கு ஒருபோதும் முடியாது.
அப்போது நீ என்ன சொல்ல வருகிறாய்? என்றார் பாதிரியார்.
அதற்கு நான், இந்த பிரபஞ்சத்திலே உள்ள மனிதன் உட்பட உயிருள்ள மற்றும் உயிரற்ற ஒவ்வொன்றையும் கடவுளே படைத்தார். ஒரு வருடத்திற்கு முன்னாள் ஒரு மனிதன் பிறந்தால் அடுத்து வரக் கூடிய நூறு வருடங்களாயினும் அவன் மனிதனாகவே இருப்பான். உலக முடிவு நாள் வரைக்கும் கூட அவன் மனிதனாகவே தான் இருப்பான். ஒரே ஒரு மனிதன் கூட கடவுளாக அவதாரம் எடுக்க முடியாது! மேலும் கடவுளை மனிதனோடு ஒப்பிட முடியாது.

அதற்கு நான் ஒரு உதாரணமும் கூறினேன். ஒரு இராணுவத்தில் உள்ள அனைவரும் ஒன்று சேர்ந்து தங்களில் ஒருவரை தேர்தெடுத்து அவரை தங்களின் ஜெனரலாக தேர்தெடுத்தால் அந்த தேர்வு மறுக்கப்பட்டுவிடும்.
அவர்களில் 99 சதவிகிதத்தினர் அவரை தேர்வு செய்திருப்பினும் சரியே!
நீ என்ன சொல்ல வருகிறாய்? என்று மீண்டும் கேட்டார் பாதிரியார்.
அதற்கு நான், மனிதன் உட்பட இந்த பிரபஞ்சத்திலுள்ள அனைத்தையும் கடவுள் படைத்தார்...
மனிதர்கள் அனைவரும் ஒன்று சேர்ந்து ஒருவரைத் தேர்ந்தெடுத்து அவரை கடவுள் என்று ஆக்கினால் அந்த தேர்வு ஏற்றுக் கொள்ள முடியாத ஒன்று என்று நான் அந்த பாதிரியாரிடம் விளக்கினேன்.
பின்னர் நான் தொடர்ந்து படித்து வந்தேன். ஒருநாள் நான் என்னுடைய பாதிரியாரிடம், என்னுடைய ஆராய்ச்சிகளின் படியும், மதங்களைப் பற்றிப் வகுப்புகளில் படித்ததிலிருந்தும் கி.பி. 325 ஆம் ஆண்டில் தான் முதன் முதலாக இயேசு கடவுளாக கருதப்பட்டார் என்று கூறினேன்.

இப்படி பலவிதமான விவாதங்களை அந்தப் பாதிரியாரிடம் அவர் செய்ததாகக் குறிப்பிடுகிறார்.

மதங்கள் பற்றிய பலவிதமான ஆராய்ச்சிகளுக்குப் பின்னர் இஸ்லாமே ஏகத்துவத்தை வலியுறுத்தும் உண்மையான மார்க்கம் என்று ஏற்றுக் கொண்டு இஸ்லாத்தை தன்னுடைய வாழ்க்கை வழிகாட்டியாக ஏற்றுக் கொண்டார் முன்னாள் ரோமன் கத்தோலிக்க கிறிஸ்தவ மதத்தைச் சேர்ந்த கன்னிகாஸ்திரி IRENA HANDONO அவர்கள்.
முழு மூச்சுடன் இஸ்லாமியப் பிரச்சாரம் செய்யும் சகோதரி IRENA HANDONO அவர்கள் தற்போது இந்தோனேசியாவில் இருக்கும் CENTRAL MUSLIM WOMEN MOVEMENT என்ற அமைப்பின் தலைவியாக இருக்கிறார்..
சகோதரி IRENA HANDONO அவர்களுக்கு அல்லாஹ் இன்னும் அதிகமான மார்க்கத் தெளிவை கொடுப்பானாக!
VAITHIYER MALIK பதிவலிருந்து ...

## இரு நபிமார்களின் அந்தஸ்துகள் 14

( அந்த பேரொளியே " நூரே முஹம்மதிய்யா " எனும் அருட்பெரும் ஜோதி )
அல்லாஹ் படைத்தவற்றில் முதலாவதாக என்னுடைய பேரொளியாகும்
அப்பேரொளியிலிருந்துதான் இறைவன் தன் படைப்புகள் அத்தனையும் படைத்தான்
எனவேதான் "லவ்லாக லமா ஹலக்துல் அஃப்லாக்
நீர் இல்லையாயின் வானங்களைப் படைத்திருக்கமாட்டேன்"
"நான் இறைவனுடைய ஒரு தனிப்பட்ட நேரத்தில் இருந்தேன். அப்பொழுது எந்த ஒருவரும் வானவரும், உலகில் அனுப்பட்ட எந்த ஒரு நபியும் படைக்கப்பட்டிருக்கவில்லை - ஹதீஸ் குத்ஸி
பைபிள் - யோவான் (1 முதல்10 ) வரை உள்ள வசனங்கள்
ஆதியிலே வார்த்தை இருந்தது.
அந்த வார்த்தை தேவனிடத்தில இருந்தது.
அந்த வார்த்தை தேவனாயிருந்தது.
அவர் ஆதியிலே தேவனோடு இருந்தார்.
சகலமும் அவர் மூலமாய் உண்டாயிற்று.
உண்டானதொன்றும் அவரேலேயல்லாமல் உண்டாகவில்லை.
அவருக்குள் ஜீவன் இருந்தது.
அந்த ஜீவன் மனுஷருக்கு ஒளியாய் இருந்தது .
அந்த ஒளி இருளிலே பிரகாசிக்கிறது.
இருளானது அதைப்பற்றிக் கொள்ளவில்லை .
உலகத்திலே வந்த எந்த மனுஷனையும் பிரகாசிப்பிக்கிற ஒளியே அந்த மெய்யான ஒளி.
அவர் உலகத்தில் இருந்தார்.
உலகம் அவர் மூலமாய் உண்டாயிற்று.
உலகமோ அவரை அறியவில்லை.
அந்த பேரொளியே " நூரே முஹம்மதிய்யா " எனும் அருட்பெரும் ஜோதி

## இரு நபிமார்களின் அந்தஸ்துகள் 15

(முஹம்மத் நபி (ஸல்) அவர்களின் கிறிஸ்துவர்களுக்கான
உடன்படிக்கை)
கடிதங்கள் எழுதும்போது நபியவர்கள், "பிஸ்மில்லாஹ்" எழுதிய பிறகு, அனுப்புநரின் பெயரை எழுதச் சொல்வார்கள். பிறகு பெறுநரின் பெயரை எழுதிவிட்டு, அதன் பிறகு எழுத வேண்டிய விஷயங்களை எழுதச் சொல்வார்கள்.
உதாரணத்திற்கு நபியவர்கள் சொல்லச் சொல்ல நபித்தோழர் ஒருவரால் எழுதப்பட்ட ஒரு வரலாற்று கடிதம்.
முஹம்மத் நபி (ஸல்) அவர்களின் கிறிஸ்துவர்களுக்கான
உடன்படிக்கை -
கிருஸ்த்துவ மடத்திலிருந்து எடுக்கப்பட்டுள்ள கடிதம் .
முஸ்லிம்கள், கிருத்துவர்களை எப்படி நடத்த வேண்டும்?
‘
நபி (ஸல்) அவர்களால் எழுதப்பட்டதாக நம்பப்படும் இந்த கடிதத்தின் சுருக்கம்:
இன்று உலகில் முஸ்லிம்,கிறிஸ்துவ மக்களுக்கு இடையேயான உறவு பலவீனப்பட்டுள்ள நிலையில்,கிறிஸ்துவ சகோதர(ரி)களுக்கு நாம் சொல்லிக் கொள்வது என்னவென்றால்,
ஒரு உண்மையான முஸ்லிம் எந்த விதத்திலும் அவர்களை துன்புறுத்த மாட்டான் என்பதை இந்த கடிதத்தின் மூலம் அறிந்து கொள்ளலாம்,
மேலும் முஹம்மத் நபி (ஸல்) தன்னுடைய ஆளுமையின் கீழ் உள்ள சிறுபான்மையினரை எப்படி நடத்தினார்கள் என்பதற்கும் இது ஒரு வரலாற்றுச் சான்று.
பல ஆதாரப்பூர்வமான வரலாற்று பதிவுகள், ST.CATHERINE (EGYPT) நூலகத்தில் வைக்கப்பட்டுள்ளது. அதில் சில பதிவுகள், இஸ்லாமிய நீதிபதிகளால் வரலாற்று நம்பகத்தன்மை வாய்ந்ததாக ஏற்றுக்கொள்ளப்பட்டுள்ளது.

துருக்கிய இஸ்லாமிய படைகள், எகிப்தை வெற்றிக் கொண்டபோது, அங்கே உள்ள மடத்திலிருந்து எடுக்கப்பட்டு, இஸ்தான்பூல் அரண்மனையில் பாதுகாப்புடன் வைக்கப்பட்டது. இதனுடைய மூல பிரதி,இன்றும் இஸ்தான்பூல் அருங்காட்சியத்தில் உள்ளது.
கடிதத்தின் சுருக்கம்:
" அப்துல்லாஹ்வின் மகன் முஹம்மத் இடமிருந்து, அருகில், மேலும் தொலைவில் உள்ள கிருத்துவர்களுக்கு இந்த உடன்படிக்கையின் மூலம் சொல்வது என்னவென்றால், நாங்கள் உங்களோடு இருக்கின்றோம்.
நிச்சயமாக, நான், இறை அடியார்கள், என் உதவியாளர்கள் மற்றும் என்னை பின்பற்றுபவர்கள், கிருத்துவர்களை பாதுகாப்போம், ஏனென்றால் அவர்கள் என் குடிமக்கள்; மேலும் அல்லாஹ்வின் மீது ஆணையாக அவர்கள் விரும்பாததை விட்டும் நான் தடுத்துக்கொள்வேன் .
அவர்களின் மீது எந்த கட்டாயமும் இல்லை. அவர்களின் நீதிபதிகள், பொறுப்பிலிருந்து நீக்கப்படமாட்டார்கள் துறவிகள் மடத்திலிருந்து நீக்கப்படமாட்டார்கள்.
கிறிஸ்துவர்களின் ஆலயங்களை இடிப்பதற்கோ, சேதப்படுத்துவதற்கோ யாருக்கும் அனுமதி இல்லை.
ஆலயங்களிலிருந்து எதையும் முஸ்லிம்கள் எடுத்துச் செல்லக் கூடாது, யாராவது மீறி செய்தால் அல்லாஹ்வின் கட்டளைக்கும், அவன் தூதருக்கும் மாறு செய்தவராவார்.

உண்மையிலேயே, கிருத்துவர்கள் என்னுடைய நண்பர்கள், மேலும் அவர்கள் வெறுப்பதிலிருந்து விலகிக்கொள்ள என்னுடைய அனுமதி பட்டயத்தை பெற்றுள்ளனர்.
அவர்களை யாரும் பயணம் செய்யுமாறும் கட்டாயப்படுத்தக் கூடாது. தங்களை பாதுகாத்துக்கொள்ள, முஸ்லிம்கள் தான் போரிட வேண்டுமே தவிர, கிறிஸ்துவர்களை தங்களோடு சேர்ந்து போரிடுமாறு கட்டாயப்படுத்தக்கூடாது.
கிறிஸ்துவப் பெண்ணின் சம்மதம் இல்லாமல் முஸ்லிம் திருமணம் செய்யக்கூடாது, அவள் தன்னுடைய ஆலயத்திற்கு சென்று வழிபடுவதை தடுக்கக்கூடாது.
அவர்களுடைய ஆலயங்கள் கண்ணியப்ப்படுத்தப்பட வேண்டும். அவைகள் பழுது பார்க்கப்படுவதை விட்டும் தடுக்கக்கூடாது.
இறுதிநாள் வரை உள்ள முஸ்லிம்கள் இந்த உடன்படிக்கையை மீறக்கூடாது "

## இரு நபிமார்களின் அந்தஸ்துகள் 16


( கிருஸ்துவ அஸ்ஹமா நஜ்ஜாஷி மன்னர் இஸ்லாத்தை ஏற்றுக் கொண்ட வரலாறு )
மக்கத்து குறைஷிகளின் அச்சுறுத்தலிருந்து விடுபட தாயகம் துறந்து, அபீசீனியாவிற்கு நபித்தோழர்கள் அடைக்கலம் சென்றனர்.
அப்துல்லாஹ் பின் அபீ ரபீஆ இப்னுல் முகீரா அல்மக்ஸூம்மிய்யி என்பவரையும், அம்ருப்னுல் ஆஸ் இப்னு வாயில் அஸ்ஸஹ்மிய்யி என்பவரையும் தூதுக்குழுவாக மக்கத்துக் காஃபிர்கள் அபீசீனியாவிற்கு அனுப்பி வைத்தார்கள்.
மக்காவில் முஸ்லிம்களைத் துன்புறுத்தியது மட்டுமல்லாமல் அபிசீனியா வரை சென்றும் தொந்தரவு கொடுத்தனர் இந்தக் காஃபிர்கள்.
கீழுள்ள அதிகாரிகளுக்கு காணிக்கைகளைக் கொடுத்து முன்கூட்டியே அவர்களைச் சரிக்கட்டி வைத்துக் கொண்டு, பிறகு அங்குள்ள மன்னரிடம் பேசுவதாகவும், காணிக்கைகள் பெற்றுக் கொண்ட அதிகாரிகள் நமக்குச் சாதகமாகப் பேசுவார்கள் என்பதுதான் இந்த மக்கத்து காஃபிர்களின் திட்டம்.
பிறகு அரசரிடம் மக்கத்து காஃபிர்கள் பேசுகிறார்கள்:

" மன்னரே! எங்களது ஊரிலிருந்து சில முட்டாள் சிறுவர்கள் வந்திருக்கிறார்கள். அவர்கள் எங்களது மார்க்கத்தையும் விட்டு விட்டார்கள். உங்களது மார்க்கத்திலும் சேராமல் இருக்கிறார்கள். இதுபோன்ற ஒரு பிரிவினர் உங்களது ஊருக்கு வந்திருக்கிறார்கள்; இவர்கள் புதிதாக ஒரு மார்க்கத்தைக் கொண்டு வந்துள்ளார்கள். அதனை நாங்களும் அறியவில்லை. உங்களுக்கும் அது தெரியாது என்றும் இவர்கள் நம்மைக் கெடுக்க வந்திருக்கிறார்கள்

மக்கத்துக் காஃபிர்கள் நம்மை இங்கிருந்து மக்கா கொண்டு செல்வதற்காக மன்னனிடம் பேசியிருக்கிறார்கள் என்கிற செய்தி ஜஃபர் பின் அபீதாலிபுக்குக் கிடைக்கிறது.
ஜஃபர் பின் அபீதாலிப் (ரலி) அவர்கள் தான் இந்தக் கூட்டத்திற்கு தலைவராக இருக்கிறார். மன்னர் நம்மிடம் விசாரணை செய்தால் என்ன சொல்வது? என்று அவர் தலைமையில் ஆலோசனை நடக்கிறது.
அப்போது ஜஃபர் பின் அபீதாலிப் (ரலி) அவர்கள், எதையெல்லாம் இதுவரை நாம் சொல்லிக் கொண்டிருந்தோமோ அதையே இங்கேயும் சொல்வோம். அதில் ஒளிவு மறைவு தேவையில்லை. என்ன விளைவுகள் வந்தாலும் பரவாயில்லை என்கிறார்.

மார்க்கத்தில் இரகசியம் என்பது கிடையாது. அவ்வாறு நபியவர்கள் நம்மை வழி நடத்தவில்லை என்று முடிவு செய்தார்கள்.
மன்னர் நபித்தோழர்களை அழைத்து விசாரிக்கிறார்.
அவரிடம், மன்னரே! நாங்கள் எதையும் அறியாத மக்களாக இருந்தோம்.சிலைகளை வணங்கிக் கொண்டிருந்தோம்.
செத்த பிணங்களைச் சாப்பிட்டுக் கொண்டிருந்தோம். அசிங்கமான மானக்கேடான காரியங்களைச் செய்துகொண்டிருந்தோம்.
சொந்த பந்தங்களான உறவுகளைப் பகைத்துக் கொண்டிருந்தோம்.அண்டை வீட்டார்களுக்குத் தொந்தரவு செய்து வந்தோம்.பலமானவர்கள் பலவீனமானவர்களைச் சுரண்டி வாழ்ந்து வந்தோம்.
இந்நிலையில் எங்களுக்கு ஒரு தூதரை அல்லாஹ் அனுப்பினான். அவரது பாரம்பரியத்தை நாங்கள் அறிவோம். அவரது உண்மையையும் நாங்கள் அறிவோம். அவரது நேர்மையும் பரிசுத்தமான வாழ்க்கையும் எங்களுக்குத் தெரியும்.
அவர் அல்லாஹ்வை மட்டும் வணங்க வேண்டும் என எங்களுக்குச் சொன்னார். மற்றவைகளை விடச் சொன்னார். மரம் செடி கொடிகள் சிலைகள் போன்ற எதையும் வணங்கக் கூடாது என்று சொன்னார்.
உண்மையை மட்டும் பேச வேண்டும் என்று ஏவினார்.
அமானிதத்தைக் காப்பாற்றச் சொன்னார்.
சொந்தபந்தங்களைச் சேர்த்து வாழவேண்டும் என்றார்.
அண்டை வீட்டாருடன் நெருக்கத்தை ஏற்படுத்த ஏவினார்.
இறைவனால் தடை செய்யப்பட்டதைத் தவிர்க்கச் சொன்னார்.
உயிரைக் கொலை செய்யக் கூடாது என்றார்.
அசிங்கமான காரியத்தைத் தடுத்தார்.
பொய் சொல்லக் கூடாது என்றார்.
அனாதை சொத்தைச் சாப்பிடக் கூடாது என்றார்.
பெண்கள் மீது அவதூறு சொல்லக் கூடாது என்று எங்களுக்கு ஏவினார். தொழச் சொன்னார்.ஜகாத் கொடுக்கச் சொன்னார்.

நோன்பு வைக்கச் சொன்னார் என்று அப்படியே பட்டியல் போட்டு பேசுகிறார்.
இதை நாங்கள் நம்பியதாலும், செயல்படுத்தியதாலும் எங்களை இந்த மக்காவாசிகளான காஃபிர்கள் கடும் துன்பத்திற்கு ஆளாக்கி விட்டனர். அதனால்தான் நாங்கள் எங்கள் ஊரிலிருந்து உங்கள் நாட்டுக்கு வந்துவிட்டோம்.
உங்களைத் தேர்ந்தெடுத்து விட்டோம். உங்களது அடைக்கலத்திற்குத்தான் நாங்கள் ஆசைப்படுகிறோம். மன்னரே! உங்களது ஆட்சியில் எங்களுக்கு அநீதியிழைக்கப்படக் கூடாது என்பதற்காகத்தான் நாங்கள் உங்களிடம் வந்திருக்கிறோம் என்று கூறினார்கள்.
இப்படியெல்லாம் நஜ்ஜாஷி மன்னரிடம் ஜஃபர் பின் அபீதாலிப் அவர்கள் பேசியதும், அவர் மக்காவிலிருந்து வந்தவர்களிடம் நான் விசாரித்து விட்டுத்தான் சொல்ல முடியும் என்று சொல்லி விடுகிறார். உங்களிடம் இவர்களை ஒப்படைக்க முடியாது என்று மறுத்து விடுகிறார்.
மறுநாள் மன்னரிடம் மக்கா காஃபிர்கள், நீங்கள் நம்பும் ஈஸாவைப் பற்றி இவர்களிடம் விசாரியுங்கள் என்று கேட்டுக் கொள்கிறார்கள். அது போன்றே ஈஸாவைப் பற்றி நீங்கள் என்ன சொல்கிறீர்கள்? என்று மன்னர் நஜ்ஜாஷி நபித்தோழர்களிடம் கேட்டதற்கு,
ஈஸா என்பவர் அல்லாஹ்வின் தூதர்,
அல்லாஹ்வின் மகனாக அவர் இல்லை,
அல்லாஹ்வின் வார்த்தையினால் உருவானவர்,
அவர் அல்லாஹ்வின் மார்க்கத்தை மக்களுக்கு எடுத்துச் சொன்னார் என்றார்கள்.

உடனே நஜ்ஜாஷி மன்னர், உங்கள் நபி முஹம்மதுக்கு இறைவனிடமிருந்து வேதம் வருவதாகச் சொன்னீர்களே, அதை வாசித்துக் காட்ட முடியுமா? என்று கேட்கிறார்.
அப்போது ஜஃபர் பின் அபீதாலிப் (ரலி) அவர்கள், காஃப், ஹா, யா, ஐன், ஸாத். (இது) உமது இறைவன் தனது அடியார் ஸக்கரிய்யாவுக்கு செய்த அருளைக் கூறுதல்! என்ற சூரத்துல் மர்யம் என்ற 19 வது அத்தியாத்தை ஓதிக் காட்டுகிறார்.

அதைக் கேட்டதும் மன்னர் நஜ்ஜாஷி அவர்களின் கண்களில் இருந்து கண்ணீர் வழிந்தோடுகின்றது. இது மூஸா நபிக்கு யாரிடமிருந்து வந்ததோ அவரிடமிருந்தே இவருக்கும் வந்ததைப் போன்றுள்ளது என்று கூறிவிடுகிறார். மேலும் நீங்கள் எங்களது நாட்டில் அடைக்கலம் பெற்று விட்டீர்கள். உங்களது மார்க்கத்தின் பிரகாரம் இங்கே நடந்து கொள்ளலாம் என்றும் அனுமதியளித்து விடுகிறார்.

நபி (ஸல்) அவர்களின் கடிதத்தை அம்ரு இப்னு உமைய்யா, நஜ்ஜாஷியிடம் ஒப்படைத்தார். அதை நஜ்ஜாஷி பெற்று, தனது கண்ணில் ஒத்திக் கொண்டார். தனது சிம்மாசனத்தை விட்டும் கீழே இறங்கி, பூமியில் உட்கார்ந்து, ஜஅஃபர் இப்னு அபூதாலிபின் கையில் இஸ்லாமைத் தழுவினார். பின்பு நபியவர்களுக்கு ஒரு கடிதம் எழுதி அனுப்பினார். அதன் வாசகமாவது:
“அளவற்ற அருளாளனும், நிகரற்ற அன்புடையோனுமாகிய அல்லாஹ்வின் பெயரால் ஆரம்பிக்கிறேன்.
அல்லாஹ்வின் தூதர் முஹம்மதுக்கு அஸ்ஹமா நஜ்ஜாஷி எழுதுவது.
"அல்லாஹ்வின் நபியே! அல்லாஹ்வின் புறத்திலிருந்து உங்களுக்கு ஈடேற்றமும், அவனது கருணையும், அருள்களும் உண்டாகட்டும். அல்லாஹ்வைத் தவிர வணக்கத்திற்குரிய இறைவன் வேறு யாருமில்லை.
அல்லாஹ்வின் தூதரே! ஈஸாவைக் குறித்து தாங்கள் வரைந்த தங்களின் மடல் எனக்குக் கிடைத்தது. வானம், பூமியின் இறைவன் மீது சத்தியமாக! ஈஸாவும் நீங்கள் கூறியதைவிட பேரீத்தம் பழத்தின் நார் அளவுகூட அதிகமாகத் தன்னைப் பற்றிக் கூறியதில்லை. நிச்சயமாக ஈஸா நீங்கள் கூறியவாறுதான் (அல்லாஹ்வின் வார்த்தையால் படைக்கப்பட்டவர்).

நீங்கள் எங்களுக்கு அனுப்பிய விஷயங்களை நாங்கள் அறிந்து கொண்டோம். உங்கள் தந்தையின் சகோதரன் மகனுக்கும், உங்களது தோழர்களுக்கும் விருந்தோம்பல் செய்தோம்.
நிச்சயமாக நீங்கள் உண்மையானவர். உண்மைப் படுத்தப்பட்டவர் நீங்கள். அல்லாஹ்வின் தூதர் என்று சாட்சி கூறுகிறேன். நான் உங்களிடமும் உங்களது தந்தையின் சகோதரன் மகனிடமும் சத்திய வாக்குறுதி செய்து கொள்கிறேன்.அகிலத்தார்களின் இறைவனுக்கு அடிபணிந்து இஸ்லாமை ஏற்றுக் கொள்கிறேன் என்று அவரிடம் வாக்குப் பிரமாணம் செய்து கொடுக்கிறேன்.”

ஜஅஃபர் (ரழி) அவர்களையும் அவர்களுடன் இருக்கும் முஹாஜிர்களையும் தன்னிடம் திரும்ப அனுப்புமாறு நபி (ஸல்) நஜ்ஜாஷியிடம் கேட்டுக் கொண்டதற்கிணங்க, அவர் அம்ர் இப்னு உமய்யா ழம்யுடன் அவர்கள் அனைவரையும் இரு கப்பல்களில் அனுப்பி வைத்தார். அம்ர், அவர்களை அழைத்துக் கொண்டு நபி (ஸல்) அவர்களிடம் வந்து சேர்ந்தார்கள். அப்போது நபி (ஸல்) கைபரில் இருந்தார்கள். (இப்னு ஹிஷாம்)
தபூக் போர் நடைபெற்ற பின் ஹிஜ்ரி 9, ரஜப் மாதத்தில் இந்த நஜ்ஜாஷி மன்னர் இறந்தார். இறந்த செய்தியை நபிகள் நாயகம் அறிவித்தபோது உங்கள் சகோதரருக்காகப் பாவமன்னிப்புத் தேடுங்கள் என்று கூறினார்கள்.
அபூ ஹுரைரா (ரலி), நூல்: புகாரி-1327

## இரு நபிமார்களின் அந்தஸ்துகள் 17

( புனித பைபிள் ஆண்டவனால் அருளப்பட்டதா ? ஆசிரியர் பழனி பாபா )



GULF AIRLINES) கல்ப் ஏர்லைன்சில் நான் கொழும்பு விமான நிலையத்திலிருந்து பஹ்ரின் செல்கிறேன். நான் முதல் வகுப்பில் ஏறுகிறேன்.மூன்றாம் வகுப்பு முழுவதுமிலங்கையிலிருந்து வேலை பெற்றுஅ செல்லும் பணியாட்கள். முதல் வகுப்பு காலியாக உள்ளது.
கடந்த 22 வருடங்களாக பைபிளையும் மற்ற வேதங்களையும் ஆராய்ந்து, பல மதத்தவர்களுடன் நெருங்கிப் பழகி வாதிட்டு அவர்கள் கூறும் விளக்கங்களையும் அடக்கத்துடன் கூர்ந்து ஏற்று என் அறிவுப்பசிக்குத் தீனி தேடிக் கொண்டவன்.
பைபிளை எடுத்து வைத்துப் படிக்கிறேன். நான் பெரும்பாலும் அரபி உடைகளையே விரும்பி அணிவேன். மேலொட்டமாய்ப் பார்த்தாலும் கிறிஸ்துவ தோற்றம். தலையை மூடியிருப்பதைக் கண்டால் முஸ்லிமின் வடிவம்.
20 நிமிலம் கழித்து பயணிகள் அதிகமில்லாததால் பணிப்பெண் வந்து பணிவிடைகளை முடித்து விட்டு என் தேவைகளுக்காக நின்றவர் நீண்ட நேரம் குழம்புகிறார். பின்னர் மெதுவாய் பாதர் நீங்கள் கிறிஸ்துவரா? முஸ்லிமா? என்று நான் தெரிந்து கொள்ளலாமா? என்கிறார்.

"ஆட்சேபகரமற்று நான் ஒரு முஸ்லிம்" என்றேன்.
"முஸ்லிம் கையில் பைபிளா? ஏனிந்த மாற்றம்? எப்படி வந்தது இந்த ஆகர்ஷனம் (ATTRACTION? பைபிளின் புனிதம் இப்படி மாற்றங்களை ஏற்படுத்துவதுதான்! தேவனின் மகிமையை என்னென்பேன். ஓ! ஜீஸஸ்" கண்களில் நீர்த்துளிகள். மெய்சிலிர்க்கப் பேசுகிறார்.
அவரின் ஆதங்கம் தணியும் வரை நான் மவுனமாயிருக்கிறேன். பிறகு மெதுவாய்ப் பேசினேன்.
"சகோதரியே! உங்கள் வயது?"
"22 வயது"
" எனக்கு 38 வயது ஆகிறது. நீங்கள் பைபிளை எத்தனை வருடமாய் படிக்கிறீர்கள்?"
" சிறு வயது என்றால், சுமாராக எத்தனை வயதில்?"
" 12 வயது முதல்!"
" அப்படியானால் 10 வருடமாய் படிக்கிறீர்கள்- நான் எனது 15 வயது முதல் இன்று 23 ஆண்டுகளாய் படிக்கிறேன்.!"
" நானும் ஐந்து ஆறு வருடமாய் தீவிரமாய் படிக்கிறேன்!"
" நீங்கள் - புராட்டஸ்டண்டா - கத்தோலிக்ரா? பியூரிட்டடா - கிறிஸ்துவரின் எப்பிரிவு?
" நான் ரோமன் கத்தோலிக்!"
" வெரிகுட்! உங்களுக்குள் இத்தனைப் பிரிவுகளும் ஒரே பைபிளை கடைப்பிடிக்கிறீர்களா?"
" இல்லை. நான் தேர்ந்தெடுத்தது K.J.V (KING JAMES) வர்ஷன்."
" பைபிளை எழுதியது யார்?"
" யார் சொன்னது எழுதியது என்று? பைபிள் ஆண்டவனால் அருளப்பட்டது?".
" யார் மூலமாக?"
" ஏசுநாதர் (ஈஸா நபி) மூலமாக!"
" அப்படி என்றால் அதற்கு முன் பைபிள் இல்லையா ?"
" அதன் பெயர் பழைய ஏற்பாடு (OLD TESTAMENT) "
" ஏசுநாதர் தான் இதை அருளினார் என்று பைபிளில் எங்கே போட்டுள்ளது? நான் தான் கடவுள்; என்னையே வணங்குங்கள்; என்று ஏசு எங்காவது ஓரிடத்தில் சொல்லி உள்ளாரா?"
" பார்த்துத்தான் சொல்ல வேண்டும்."
" சரி போகட்டும் என் சகோதரியே!
ஒரு புனித நூல் என்றால் - கடவுளிடமிருந்து இறங்கியது என்றால், அதில் முரண்பாடுகள் இருக்கக் கூடாதல்லவா?"
" கட்டாயமாக!"

" இறங்கியது முதல் அது உருமாறாது யாராலும் திருத்தப்படாது, அப்பழுக்கற்று அப்படியே இருக்க வேண்டுமல்லவா?"
" நிச்சயமாக!"
" சகோதரியே! எல்லா சுவரிலும் எல்லாச் சர்ச்சுகளிலும் பொதுவாக என்ன எழுதி உள்ளது? ஏசு எதற்காக இப்பூவுலக்கு வந்தார்?"
" ஏசு சமாதானத்தை போதிக்க வந்தார் என்று எழுதியுள்ளது. ஏசு சமாதானத்தையே விரும்பினார் என்று நாங்களனைவரும் ஏற்றுக் கொள்கிறோம்."
" சகோதரியே, பைபிளில் என்ன போட்டுள்ளது பாருங்கள்."
என்கையிலுள்ள பைபிளை தருகிறேன்.
49. பூமியின் மேல் அக்கினியைப் போட வந்தேன், அது அப்பொழுதே பற்றி எரிய வேண்டுமென்று விரும்புகிறேன்.
51. நான் பூமியிலே சமாதானத்தை உண்டாக்க வந்தேன் என்று நினைக்கிறீர்களோ? சமாதானத்தை அல்ல. பிரிவினையையே உண்டாக்க வந்தேன் என்று உங்களுக்குச் சொல்கிறேன்.
52. எப்படியெனில், இது முதல் ஒரே வீட்டில் ஐந்து பேர் பிரிந்திருப்பார்கள், இரண்டு பேருக்கு விரோதமாய் மூன்று பேரும் மூன்று பேருக்கு விரோதமாய் இரண்டு பேரும் பிரிந்திருப்பார்கள்.
53. தகப்பன் மகனுக்கும், மகன் தகப்பனுக்கும், தாய் மகளுக்கும், மகள் தாய்க்கும், மாமி மருமகளுக்கும், மருமகள் மாமிக்கும் விரோதமாய்ப் பிரிந்திருப்பார்கள் என்றார்.
லூக்கா - 12:49,51,52,53

34. பூமியின்மேல் சமாதானத்தை அனுப்ப வந்தேன் என்று எண்ணாதிருங்கள். சமாதானத்தையல்ல, பட்டயத்தையே அனுப்ப வந்தேன்.
35. எப்படியெனில், மகனுக்கும் தகப்பனுக்கும் மகளுக்கும் தாய்க்கும் மருமகளுக்கும் மாமிக்கும் பிரிவினையுண்டாக்க வந்தேன். மத்தேயு - 10:34,35
ஏசுவின் வரிகளைச் சுட்டிக்காட்டியதும், பைபிளை என் கையிலிருந்து பிடுங்கி மேற்படி வசனங்களை திரும்பத் திரும்ப படிக்கிறார்.
முகம் சிவக்க, மனம் குழப்ப, புருவம் நெளிய தயவுடன் கொஞ்சம் இருங்கள்!(EXCUSEME) எனக்கூறிவிட்டு நெரெ(CABINCREW) பணிப்பெண்கள் அறை நோக்கிச் சென்று தனது பைபிளை எடுத்து புரட்டுகிறார்.
அட்டை, விலாசம்,அடிக்கப்பட்ட இடம் இவைகளை சரிப்பார்க்கிறார். இரண்டும் ஒன்று தான். வாசகங்களும் ஒன்றே! ஒரு பாட்டில் நீர் கொண்டுவந்து முழுவதும் குடிக்கிறார், வியர்வைத் துடைக்கிறார், சோர்ந்து அமர்கிறார், தன் கண்களையே நம்ப முடியாது தவிக்கிறார்.
அவரின் குழப்ப நிலையைக் கண்ட நான் " என்ன அன்புச் சகோதரியே! தங்கள் மனம் புண்படும்படி நான் ஏதாவது கூறியிருந்தால் மன்னியுங்கள். எனக்கு உங்கள் வயதில் சகோதாரிகளுண்டு.என் கருத்தை நான் கூறவில்லை. பைபிளில் உள்ளதையே எடுத்து வைத்தேன்! பாவம் உங்கள் 10 ஆண்டு பைபிளின் பாசத்தை நான் சிதைத்து விட்டேனா?"

''இல்லை சார், எனக்கு அதிர்ச்சியாய் உள்ளது! எப்படி இப்படி எழுதப்பட்டுள்ளது? யார் இப்படி செய்தது? என்னால் நம்ப முடியவில்லை!'
" சகோதரியே, அதை முஸ்லிம்களோ, இந்துக்களோ செய்யவில்லை, செய்யவும் முடியாது. இதை சரிபார்த்தவர்கள் லிஸ்ட்டில் 32 மேதாவிகள் (BIBLE SCHOLARS AND 52 DEMOMINATIONS) 52 - உயர் பாதிரிஸ்தானிகர்கள் கூடி சரிப்பார்க்கப்பட்டு வெளியிடப்பட்டது.
அதனால் மொழிபெயர்ப்பில் கோளாறு இல்லை. அப்படிக் கருத்தில் கொண்டாலும் இதோ தமிழ் பிரதி, இதுவும் அப்படியே! இதோ அரபிப்பிரதி" (தனக்கும் அரபி தெரியும் என்று வாங்கிப் படிக்கிறார்) ஆமோதிக்கிறார்.
" சகோதரியே! ஏசுநாதர் பேசிய மொழி என்ன?"
" அராமிக் (ARAMIC)"
" பைபிளிம் மூலப்பிரதி எந்த மொழியில் இருந்தது?"
" ஹிப்ரு (HEBREW)"
" தற்போது அராமிக் மொழியும் வழக்கில் இல்லை, மூலப்பிரதியும் காணாது போய்விட்டது."
" அராமிக் வழக்கில் இல்லை - பைபிளின் மூலப்பிரதி காணாது போய்விட்டது என்று யார் சொன்னது?"
" பைபிளே சொல்கிறது."
கடைசியில் திறந்து SUMMARY OF THE BOOK OF THE BIBLE ( நூல் வரலாறு) K.J.V என்ற தலைப்பின் கீழ்: அதில் உள்ள வாசகம் இதோ!
NEW TESTAMENT
THE NEW TESTAMENT, WHICH HAS A TOTAL OF TWENTY SEVEN BOOKS, BEING WITH THE FOUR GOSPELS, WHICH RECORD THE LIFE AND TEACHINGS OF CHRIST FROM FOUR DIFFERENT VIEW POINTS ALTHOUGH THE ORIGINAI AUTOGRAPH NO LONGER EXIST.
27 புத்தகங்களைக் கொண்ட புதிய ஏற்பாடானது 4 சுவிஷேஷங்களைக் கொண்டு ஆரம்பிக்கப்பட்டு, ஏசுநாதரின் வாழ்க்கை மற்றும் போதனைகளை நாலு கோணங்களில் பதிவு செய்கிறது. அதன் மூலப்பிரதி காணாமல் போய்விட்டதால்...

" சகோதரியே, நிலைமை இப்படி இருக்க நீங்கள் எதைவைத்து இதை நிருபிப்பீர்கள்? கடவுளால் அருளிய வேதம் காணாமல் போனதா? எப்படிச் சகோதரியே நம்புவது? காலம் காலமாய் கடைசி நாள் கியாமத் (DAY OF JUDGEMANT) வரை வழிகாட்ட வேண்டிய நூல் எங்கோ வழி தவறினால், அதைப் பின்பற்றினால் என்ன நிலைமை?
குருடன் குருடனுக்கு வழிக்காட்டினால் நீங்கள் ஏற்றுக் கொள்ள முடியுமா? அதுவும் வழிகாட்ட வந்த முதல் குருடனே காணாது போன பின், அடுத்தவன் அழைக்கிறான் - வாருங்கள் அவன் காட்டிய பாதையில் நான் கூட்டிச் செல்கிறேன், " ஏசு அழைக்கிறார்" என்று கூப்பாடு போட்டால் - எப்படியம்மா ஏற்றுக் கொள்வது? நான் பரந்த மனதுடனே கேட்கிறேன் எது சரி - சகோதரியே?
பிறகு, "ஏசுவை நீங்கள் என்னவென்று நினைக்கிறீகள்?" என்றேன்.
" அவரே கடவுள் என்று எண்ணி வழிபடுகிறேன்" என்றார்.
" சரி - அவர் கடவுள் என்றால் , எதை வைத்து அவரைக் கடவுள் என்கிறீர்கள்?"
" ஒரே வரி உலகில் யாருமே உடலுறவற்று பிறக்கவில்லை. அவரே - அவர் மட்டும் தந்தையற்று பிறந்துள்ளார்".
" தந்தை இல்லாது பிறந்ததனால் மட்டுமே அவர் இறைவன் என்றால் அதே பைபிளில் வரும் ஆதம் - ஏவாள் (ADAM & EVE) தாயுமற்று தந்தையுமற்று பிறந்துள்ளானரே! அவர்களை எப்படி அழைப்பது SUPER GOD என்றா? "
ஆரம்பமும் அற்று முடிவும் அற்று, தாயும் இன்றி தகப்பனும் இன்றி, வம்ச வரலாறு, வம்ச வழியும் இன்றி, சமாதானத்தின் ராஜா மெல்கிதேக்கு (KINGS OF PEACE) என்றழைக்கப்படும் தீர்க்கதரிசி பற்றி பைபிளின் எபிரெயருக்கு எழுதின நிருபத்தில் வருகிறதே - அதிகாரம் 7:2 முதல் 4வது வசனம் வரை - அவரை ஏன் கடவுளாக ஏற்றுக் கொள்ளவில்லை?

ஏசுநாதரே கடவுள் என்றால், அவர் இறந்து கிடந்ததாகக் கூறப்படும் 3 நாள் இப்பூலகையும், கோள்களையும் வான்களையும் ஜீவராசிகளையும் யார் கவனித்துக் கொண்டது?
அவரது தாயின் வயிற்றில் 10 மாத வளர்ச்சியின் போது உலகையாரம்மா கவனித்துக் கொண்டது?
நாத்திகனுக்கு இவைகள் நல்ல பிடியாகி விட்டதே!
ஏசுநாதரின் கடைசி வார்த்தைகள் என்ன என்று பைபிள் சொல்கிறது?
ஒன்பதாம் மணி நேரத்தில் இயேசு " ஏலோயீ! ஏலோயீலாமா சபக்தானி" என்று மிகுந்த சப்தமிட்டுக் கூப்பிட்டார். அதற்கு 'என் தேவனே! என் தேவனே! ஏன் என்னைக் கைவிட்டீர்?" என்று அர்த்தமாம். (மாற்கு 15:34)
அவரே தேவன் (கடவுள்) என்கிறீர்கள். ஆனால் அவரே 'என் தேவனே! என் தேவனே!! ஏன் என்னைக் கைவிட்டீர்' என்கிறார். யாரையம்மா அழைத்தார்? தன்னைத் தானே அழைத்தாரா? ஏனிந்த குழப்பம்?"
மவுனம் பதிலாய் உள்ளது.

" கேளுங்கள் தரப்படும், தட்டுங்கள் திறக்கப்படும், தேடுங்கள் கிடைக்கப்பெறும் என்று மத்தேயூ, - 7:7ல் கூறியுள்ளப்படி நாம் கேட்டு கடவுளிடமிருந்து கிடைப்பது ஒரு பக்கமிருக்கட்டும். இவர் கேட்டே கிடைக்கவில்லையே! எப்படியம்மா இவர் பேச்சை நாம் கேட்பது என்று எந்த பாமர மகனும் யோசிப்பானல்லவா?"
இதற்கும் அச் சகோதரியிடமிருந்து மவுனமே பதிலாய் வந்தது.
" ஒரு புனித நூல் அனாச்சாரங்களுக்கும் அசிங்கங்களுக்கும் அப்பாற்பட்டு இருக்க வேண்டுமல்லவா? யாரோடும் ஆண், பெண் பேதமின்றி, பகிர்ந்து அர்த்தத்துடன் படிக்க வேண்டுமல்லவா? ஒரு புனித நூலை ஓதும்போது மனது கலக்கமோ, தயக்கமோ இன்றி உள்ளம் தெளிவடைய வேண்டுமல்லவா? மாறாக குழப்பமோ குதர்க்கமோ ஏற்பட்டால் அது புனித நூலாகாதல்லவா?"
" ஆமாம்!"
" சரி, சகோதரியே! நீங்கள் குளிக்கும்போது நான் மாடியிலிருந்து பார்ப்பது கூடுமா?"
" தண்டனைக்குரிய குற்றம்"
" சாதாரண மனிதனான எனக்கே கூடாது என்றால் இறைநேசச் செல்வர்கள் இதைச் செய்யலாமா?"
" யார் செய்தாலும் மிகப் பெரிய தண்டனை தரப்பட வேண்டும்".
" அப்படியானால் டேவிட்டை ஏன் தன்டிக்கவில்லை?"
" எந்த டேவிட்?"
(DAVID தாவூது) பைபிளில் வரும் ஏசுவின் முன்னோர்கள், ஏசுவின் பரம்பரை பட்டியலில் முதல் இடம் வகிப்பவர்!" (GENEALOGY)
" எங்கே போட்டுள்ளது?"
" இதோ - சாமுவேல் - அதிகாரம் - 11"
II SAMUEL - CHAPTER II VERSION: 2 TO 5
அதிகாரம் பதினொன்று சாமுவேல்
2. ஒரு நாள் சாயங்காலத்தில் தாவீது ( டேவிட் ) தன் படுக்கையிலிருந்து எழுந்து அரண்மனை உப்பரிகையின் மேல் உலாத்திக் கொண்டிருக்கும் போது ஸ்நானம் பண்ணுகிற ஒரு ஸ்திரீயை உப்பரிகையின் மேலிருந்து கண்டான். அந்த ஸ்திரீ வெகு சௌந்தரவதியாயிருந்தாள்.
3. அப்போது தாவீது அந்த ஸ்திரீ யார் என்று விசாரிக்க ஆள் அனுப்பினான். அவள் எலியாமின் குமாரத்தியும், எத்தியனான உரியாவின் ம்னைவியுமாகிய பத்சேபாள் - என்றார்கள்.
4. அப்போது தாவீது ஆள் அனுப்பி அவளை அழைத்து வரச் சொன்னான், அவள் அவனிடத்தில் வந்தபோது அவளோட சயனித்தான். பிற்பாடு அவள் தன் தீட்டு நீங்கும்படி சுத்திகரித்துக் கொண்டு தன் வீட்டுக்குப் போனாள்.

5. அந்த ஸ்திரீ கர்ப்பம் தரித்து தான் கர்ப்பவதியென்று தாவீதுக்கு அறிவிக்கும்படி ஆள் அனுப்பினான்.
" போதும் நிறுத்துங்கள் சகோதரியே! ஒரு நபி - ஒழுக்கத்தை போதிக்க வேண்டியவரே - விபச்சாரம் அதுவும் பிறன் மனைவி என்று விசாரித்து தெரிந்து இந்தத் தவறை செய்துள்ளார்.
" அதன் பின்னால் உரியாவை ( பத்சேபாளின் கணவனை) பின்னர் கொலை செய்ய திட்டமிட்டு முடிக்கிறார்.
" இந்த உரியாவின் மனைவியும் தாவீதும் செய்தது பச்சை விபச்சாரம் - இவர்களுக்குப் பிறந்தது தான் சாலமோன் - இவர் வம்சத்தில் வந்தவர் ஏசு என்கிறீர்கள்".
" ஆனால் பழைய வேதத்தின் கூற்றுப்படி விபச்சாரத்தில் பிறந்தவன் 10 (BASTARD) தலைமுறையானாலும் அவன் கர்த்தரின் சபைக்கு உட்படலாகாதே - ஏசு எப்படி இச்சபைக்கு வந்தார் என்று எந்த நாத்திகனும் கேட்டால் என்னம்மா பதில் சொல்வாய்?
" சரி போகட்டும் உங்களுக்கு சகோதரர்கள் உண்டா?"
" ஆமாம் 2 தம்பிகள் உண்டு!"
" அவர்கள் ஒரு பெண்ணை கற்பழித்தால் கண்டிப்பீர்களா?"
" ஒரு பெண்ணை காதலித்தால் வரவேற்பேன். காமமுற்றால் கண்டிப்பேன். காதலும் காமமும் வேறு (LUST AND LOVE IS DIFFERENT)"
" உங்கள் சகோதரன் ( இப்படிக் கேட்பதற்காக என்னை மன்னிக்கவும் என்றபடி) உங்களையே கற்பழித்தால்...?"
" அயோக்கியத்தனம்! அறிவீனம் (NONSENSE IDIOT) காட்டு மிராண்டி! அவனை சுட வேண்டும். நீங்கள் என்ன பேச்சு பேசுகிறீர்கள்? பண்பாடு அற்றவன், மிருகம்."
சகோதரியே! சாந்தமாகுங்கள்! இதை நான் சொல்லவில்லை. உங்கள் புனித வேதாகமத்தில் புனித ஆவிகள் புகுந்து எழுதி உள்ளன - இதோ அதைப் படியுங்கள்.
சாமுவேல் - 13வது அதிகாரம் வசனம் 1 முதல் 14 வரை
1. இதற்குப் பின்பு தாவீதின் குமாரனாகிய அப்சலோமுக்குத்தாமார் என்னும் பேருள்ள சவுந்தரியமுள்ள ஒரு சகோதரி இருந்தாள். அவள் மேல் தாவீதின் குமாரன் அம்னோன் மோகங்கொண்டான்.
2. தன் சகோதரியாகிய தாமாரினிமித்தம் ஏக்கங் கொண்டு வியாதிக்கப்பட்டான். அவள் கன்னியாஸ்திரீயாயிருந்தாள், அவளுக்குப் பொல்லாப்புச் செய்ய அம்னொனுக்கு வருத்தமாய்க்கண்டது.
3. அம்னோனுக்குத் தாவீதுடைய தமயன் சிமியாவின் குமாரனாகிய யோனதாப் என்னும் பேருள்ள ஒரு சிநேகிதன் இருந்தான். அந்த யோனதாப் மகா தந்திரவாதி.
4. அவன் இவனைப் பார்த்து 'ராஜகுமாரனாகிய நீ நாளுக்கு நாள் எதனாலே இப்படி மெலிந்து போகிறாய் எனக்குச் சொல்ல மாட்டாயா? என்றான் அதற்கு அம்னோன் என் சகோதரன் அப்சலோமின் சகோதரியாகிய தாமாரின் மேல் நான் ஆசை வைத்திருக்கிறேன் என்றான்.
5. அப்பொழுது யோனதாப் அவனைப் பார்த்து நீ வியாதிக்காரனைப் போல் உன் படுக்கையின் மேல் படுத்துக்கொள் உன்னைப் பார்ப்பதற்கு உன் தகப்பனார் வரும்போது நீ என் சகோதரியாகிய தாமார் வந்து எனக்குப் போஜனம் கொடுத்து அவள் கையினாலே சாப்பிடும்படிக்கு நான் பார்க்க, என் கண்களுக்கு முன்பாக சமைக்கும்படிக்கு தயவு செய்ய வேண்டும் என்று சொல் என்றான்.
6. அப்படியே அம்னோன் வியாதிக்காரன் போல் படுத்துக் கொண்டு ராஜா தன்னைப் பார்க்க வந்தபோது ராஜாவை நோக்கி என் சகோதரியாகிய தாமார் வந்து நான் அவன் கையினாலே சாப்பிடும்படிக்கு என் கண்களுக்கு முன்பாக இரண்டு பணியாரங்களைப் பண்ணுப்படி உத்தரவு கொடுக்க வேண்டும் என்றான்.
7. அப்பொழுது தாவீது தாமாரிடத்தில் ஆள் அனுப்பி ' நீ உன் சகோதரனாகிய அம்னோன் வீட்டுக்குப் போய் அவனுக்குச் சமையல் பண்ணிக்கொடு' என்று சொல்லச் சொன்னான்.
8. தாமார் தன் சகோதரனாகிய அம்னோன் படுத்துக் கொண்டிருக்கிற வீட்டுக்குப் போய் மாவெடுத்து பிசைந்து அவன் கண்களுக்கு முன்பாகத் தட்டி பணியாரங்களைச் சுட்டு.
9. சட்டியை எடுத்து அவனுக்கு முன்பாக அவைகளை வைத்தாள் ஆனாலும் அவன் சாப்பிடமாட்டேன் என்றான், பின்பு அம்னோன் எல்லோரும் என்னைவிட்டு வெளியே போகட்டும் என்றான். எல்லோரும் அவனை விட்டு வெளியே போனார்கள்.
10. அப்பொழுது அம்னோன் தாமாரைப் பார்த்து நான் உன் கையினாலே சாப்பிடும்படிக்கு அந்தப் பலகாரத்தை அறை வீட்டிலே கொண்டுவா எண்றான். அப்படியே தாமார் தான் செய்த பணியாரங்களை அறைவீட்டில் இருக்கிற தன் சகோதரனாகிய அம்னோனிடத்தில் கொண்டு போனான்.
11. அவன் சாப்பிடும்படிக்கு அவள் அவைகளைக் கிட்ட கொண்டு வருகையில் அவன் அவளைப் பிடித்து, அவளைப் பார்த்து என் சகோதரியே, நீ வந்து என்னோட சயனி என்றான்.
12. அதற்கு அவள் வேண்டாம் என் சகோதரனே! என்னை அவமானப்படுத்தாதே, இஸ்ரவேலிலே இப்படிச் செய்யத்தகாது, இப்படிப்பட்ட மதிகேடான காரியத்தைச் செய்ய வேண்டாம்.
13. நான் என் வெட்கத்தோட எங்கே போவேன்? நீயும் இஸ்ரவேலிலே மதிகெட்டவர்களில் ஒருவனைப்போல ஆவாய், இப்போதும் நீ ராஜாவோட பேசு, அவர் என்னை உனக்குத் தராமல் மறுக்கமாட்டார் என்றாள்.

14. அவன் அவள் சொல்லைக் கேட்க மாட்டேன் என்று அவளைப் பலவந்தமாய்ப் பிடித்து, அவளோட சயனித்து, அவளைக் கற்பழித்தான்.

" என் சகோதரியே! அண்ணனே தங்கையைக் கற்பழிக்கலாமா? அந்த சகோதரி தாமார் வேண்டாம் என் சகோதரனே, இது மதிகேடான விஷயம் என்பது வரை படிக்கும்போது தாமாரின் மீது மதிப்பும் மரியாதையும் கூடுகின்றன.

ஆனால் அடுத்த வரியிலேயே இப்போதும் நீ ராஜா வோட (தாவீதுராஜா - அவர்களின் தந்தையுடன்) பேசு , அவர் என்னை உனக்குத்தராமல் மறுக்கமாட்டார்" என்று கூறும் போது தந்தையை மகள் கணித்துள்ள இடம் மிகமிக வேதனையளிப்பதாக உள்ளதல்லவா?
இவர்கள்தான் ஏசுநாதரின் முன்னோர்களா? இவர்களின் வம்ஸா வழியிலே ஏசுவை திணிக்கலாமா?
சகோதரியே, இம்மாதிரி குற்றங்களுக்கு திருக்குர்-ஆனில் 100 கசையடிகள் தர வேண்டும் எனக் கூறி விபச்சாரம் தேசிய குற்றமாக்கப்பட்டது.மேலும் சகோதரியே, "லோத்" (Lot - லூத் நபி) பற்றிய வரலாறு பைபிளின் முதல் பாகத்தில் வருகிறதே அதைப் படியுங்கள்
ஆதியாகமம்(GENESIS)19-வது அதிகாரம் வசனம் 31 முதல் 38 முடிய ( சத்தமாக படிக்கும்படி சொன்னேன். முதல் இரண்டு வசனத்தை சப்தமிட்டுப் படித்துவிட்டு - மவுனமாய் படிக்கிறார்.)
31. அப்பொழுது மூத்தவள் இளையவளைப் பார்த்து நம்முடைய தகப்பன் முதிர்வயதானார். பூமியெங்கும் நடக்கிற முறைமயின் படியே நம்மோட சேர பூமியிலே ஒரு புருஷனும் இல்லை.
32. நம்முடைய தகப்பனால் சந்ததி உண்டாகும்படிக்கு அவருக்கு மதுவைக் குடிக்கக் கொடுத்து, அவரோட சயனிப்போம் வா என்றாள்.
33. அப்படியே என்று இரவிலே, தங்கள் தகப்பனுக்கு மதுவைக் குடிக்கக் கொடுத்தார்கள். மூத்தவள் போய் , தன் தகப்பனோட சயனித்தாள். அவள் சயனித்ததையும் எழுந்திருந்ததையும் அவன் உணராதிருந்தான்.
34. மறுநாளிலே மூத்தவள் இளையவளைப் பார்த்து நேற்று ராத்திரி நான் தகப்பனோட சயனித்தேன். இன்று ராத்திரியும் மதுவைக் குடிக்கக் கொடுப்போம், நம்முடைய தகப்பனால் சந்ததி உண்டாகும்படி நீ போய் அவரோட சயனி என்றாள்.
35. அப்படியே அன்று ராத்திரியிலும் தங்கள் தகப்பனுக்கு மதுவைக் குடிக்கக் கொடுத்தார்கள். அப்பொழுது இளையவள் எழுந்துபோய் அவனோட சயனித்தாள்; அவள் சயனித்ததையும் எழுந்திருந்ததையும் அவன் உணராதிருந்தான்.
36. இவ்விதமாய் லோத்தின் குமாரத்திகள் இருவரும் தங்கள் தகப்பனாலே கர்ப்பவதியானார்கள்.
37. மூத்தவள் ஒரு குமாரனைப் பெற்று, அவனுக்கு மோவாப் என்று பெயரிட்டாள். அவன் இந்நாள்வரைக்கும் இருக்கிற மோவாபியாருக்குத் தகப்பன்.
38. இளையவளும் ஒரு குமாரனைப் பெற்று, அவனுக்குப் பென்னம்மி என்று பேரிட்டாள். அவன் இந்நாள்வரைக்கும் இருக்கிற அம்மோன் புத்திரருக்குத் தகப்பன்.
" ஏன் மவுனமாய்ப் படித்தீர்கள்?"
" எனக்கு அருவருப்பாயிருந்தது" என்றார்.(I Felt Embarassed)
" ஏனம்மா அருவருப்பு ? புனித வேதநூல் - இதை தலையில் வைத்துப் படுத்தால் உடல் நோய் தீரும் - என்றெல்லாம் உபதேசிக்கப்படுகிறதே!

ஒரு புனித நூல் அனாச்சரங்களுக்கும் அசிங்கங்களுக்கும் அப்பாற்பட்டு இருக்க வேண்டும்! யாரோடும் ஆண் பெண் பேதமின்றி பகிர்ந்து, அர்த்தத்துடன் படிக்க வேண்டுமல்லவா? ஒரு புனித நூலை ஓதும்போது மனது கலக்கமோ தயக்கமோ இன்றி உள்ளம் தெளிவடைய வேண்டுமல்லவா? மாறாக குழப்பமோ குதர்க்கமோ ஏற்பட்டால் அது புனித நூலாகாதல்லவா என்று நான் கேட்ட போது ஆமோதித்தீர்கள் அல்லவா, பின் ஏன் மௌனமாய் படித்தீர்கள்? (Delegacy) இடர்பாடு ஏற்படும் அளவுக்கு அதிலுள்ள அசிங்கங்கள் சாதாரண வயதுப் பெண்ணாக இருந்தாலும் வயசானவராயிருந்தாலும் ஜீரணிக்க முடியவில்லையே ஏன்?
ஒரு குடிக்காரனை ஏன் வெறுக்கின்றோம்?

நிதானமற்று குடித்துவிட்டு தாய் தங்கை என்றுகூட உணர முடியாது அவன் தவறுதலாக நடக்கக் கூடுமல்லவா? ராஜா தாவீதின் மகன் நிதானத்தோடே திட்டமிட்டுத் தங்கையைத் தனிமைப்படுத்தி, நிர்பந்தித்துக் கற்பழிக்கின்றான்!
தூங்கி எழுந்து தாவீது ராஜாவோ மாற்றான் மனைவி மீது மைய்யலுற்று கற்பழிக்கின்றார்.
மேலும், மாமனார் மருமகளை கற்பழிப்பதை ஆதியாகமம் (Genesis) 38:13ல் காணலாம். அந்த தீர்க்கதரிசியின் பெயர் ஜூடா (Judaha) இவர்தான் எனப்படும் யூத இனத்தை தோற்றுவித்தவர். இவர் தமது மகனின் மனைவி "தமார்" என்பவளை கற்பழித்த கதையையும் படித்துப் பாருங்கள்.
என் சகோதரியே! மேலும் நீங்கள் படிக்கத் தயங்கிய லோத்தின் குமாரத்திகள் கதையை எந்த டாக்டரிடமும் அனுப்பி வல்லுனர் கருத்து (EXPERT OPINION) கேட்போம்.

வயதானவர் - மது அருந்தி மயக்க நிலையில் மகளால் கற்பழிக்க முடியுமா? இன்னும் எளிதாக சொல்லப்போனால், ஒரு பெண்ணுக்கு மதுவைக் கொடுத்து மயக்கமூட்டி ஆணால் கற்பழிக்க முடியும். ஆனால் ஆண் மயக்கமுற்ற நிலையில் பெண் எப்படி உடலுறவு கொள்ள இயலும்?
திருமணமானவர்களைக் கேட்டுப்பாருங்கள் புரியும். அநேகமாய் உங்களுக்கும் ( எனக்கும் ) திருமணமாகவில்லை - அதனால் குழப்பமே. குடும்பஸ்தார்களிடம் நான் விசாரித்ததில் ஆணின் மர்மஸ்தானத்துக்கு (இதை உங்களோடு பேச வெட்கப்படுகிறேன், வேதனைப்படுகிறேன். இருப்பினும் உண்மையை தோலுரிக்கும்போது இதை பொருட்படுத்தமாட்டீர்கள் என்று பணிவோடு கேட்டுவிட்டு) ஒரு விறைப்புத்தன்மை தேவை (ERRECTION)என்றார்கள்.
இந்த ஒரு சாதாரண உண்மை சர்வலோக ரட்சகனுக்கு எப்படி தெரியாது போயிற்று?
இது கடவுளால் அருளப்பட்ட வேதமா? என்ன தான் முஸ்லிம்கள், யூதர்களின் எதிரிகளாக இருந்தாலும் எந்த தீர்க்கதரிசிகள் மீதும், இப்படி ஒரு கேவலத்தைச் சுமத்தமாட்டார்கள். பெயரைக்கூட சொல்லும் போது (மோசா) மூஸா (அலைஹிஸ்ஸலாம்) அவர் மீது என்றென்றும் ஆண்டவனின் அருள் பொழியட்டும் என்றே கூறுவர்.
சகோதரியே, என் நாவு கூசுகிறது. நீங்கள் வீட்டில் போய் (EZEKIEL-23) ஏசேக்கேல் 23வது அதிகாரத்தைப் படித்துப் பாருங்கள். தற்போது தென் ஆப்பிரிக்கா (SOUTH AFRICA) அரசின் (PUBLICATION BOARD) வெளியீடுகள் இதை தடை செய்துவிட்டன. இந்தக் கமிட்டியின் 5 அங்கத்தினர்களில் 2 பேர் கிறிஸ்துவ கத்தோலிக்க பாதிரிமார்கள்!
சார்! நீங்கள் சற்றுமுன் சொல்லும் போது JUDAH தான் யூதகுலத்தை தோற்றுவித்தவர் என்றீர்கள். அப்படியானால் மோசஸ் (மூஸா) அப்ரஹாம் (இப்ராஹீம்) இவர்களும் யூதர்கள் அல்லவா?
" இல்லை என் சகோதரியே! திருக்குர் ஆனில் அப்ரஹாம் (இப்ராஹீம்) யூதரும் அல்ல, கிறிஸ்தவருமல்ல; அவர் ஒரு நேர்மையானவர்; இறைவனுக்கு தன்னைத்தானே அர்பணித்தவர், சிலை வணக்கமே செய்யாதவர் (குர்-ஆன் 3:67) என்றுள்ளது. அதையே அளவுகோலாக வைத்து பைபிளை ஆராய்ந்தபோது கீழ்கண்ட முடிவுக்கு வரவேண்டியவராகிறோம்.

தயவு செய்து ஆதியாகமம் GENESIS 11:31 படியுங்கள்!
11:31 தேராகு தன் குமாரனாகிய அபிராமையும் ஆரானுடைய குமாரனும் தன் பேரனுமாயிருந்த லோத்தையும் தன் குமாரன் ஆபிராமுடைய மனைவியாகிய தன் மருமகள் சாராளையும் அழைத்துக்கொண்டு அவர்களுடனே "ஊர்" என்ற " கல்தே" யருடைய பட்டணத்தை விட்டு "காணான் " (CACAAN) தேசத்துக்கு புறப்பட்டான்> ஆரான் (HARAN) வந்த போது அங்கேயே இருந்து விட்டனர் ஆதியாகமம் 11:31
எனவே, சகோதரியே ஆப்ரஹாம் பிறந்தது " ஊர் " என்கிற கல்தேயருடைய (CHADES) பட்டணம். எனவே அவர் யூதரல்ல காரணம் கல்தேயருடைய பட்டணம் மெஸப்படோமியாவில் (MESOPOTAMIA) உள்ளது (தற்போதைய ஈராக்கின் ஒரு பகுதி) அவர், அரபியர் 2வது " ஜூ யூதர் என்பதே இப்ராஹிமின் கொள்ளுப்பேரனான ஹீதா என்பவருக்குப் பின் ஏற்பட்டது.

மேற்கூறிய பைபிள் வசனங்களின் படி மூஸாவும் அப்ரஹாமும் யூதர்கள் அல்ல. பைபிளை ஆராயாது படித்ததனால் நீங்கள் இப்படிச் சொல்கிறீர்கள்".
" கேட்கவே அதிசயமாயுள்ளது " என்கிறார்.
" சகோதரியே! நீங்கள் கோவிலில் (CHURCH) நுழைந்ததும் எதை வணங்குகிறீர்கள்?"
" சிலுவையிலுள்ள ஏசுவை, மேரி மாதாவை, ஜோஸப்பை!"
" அப்படியானால், ஏசு சொன்ன வாக்கியங்களான " நான் பழைய வேதத்தை (தௌராத்-OLD TESTAMENT) மெய்ப்பிக்கவே வந்தேன்" எனும் வசனத்தை நீங்கள் நம்புகிறீர்களா?"
" நிச்சயமாக! "

சரி - பழைய ஏற்பாட்டில்.
அந்நிய தேவர்களின் பேச்சைச் சொல்ல வேண்டாம்.
அது உன்வாயிலிருந்து பிறக்க கேட்கப்படவும் வேண்டாம்.
யாத்திராகமம் 23:13
3. என்னையன்றி உனக்கு வேறு தேவர்கள் உண்டாயிருக்க வேண்டாம்.
4. மேலே வானத்திலும் கீழே பூமியிலும் பூமியின் கீழ் தண்ணீரிலும் உண்டாயிருக்கிறவைகளுக்கு ஒப்பான ஒரு சொரூபத்தையாகிலும் யாதொரு விக்கிரகத்தையாகிலும் நீ உன்க்கு உண்டாக்க வேண்டாம்.
5. நீ அவைகளை நமஸ்கரிக்கவும் சேவிக்கவும் வேண்டாம்.
யாத்திராகமம் 21:3,4,5.
22. யாதொரு சிலையையும் நிறுத்த வேண்டாம்; உன் தேவனாகிய கர்த்தர் அதை வெறுக்கிறார்; (உபாகமம் 16:22)
இன்னும் பல உள்ளன, ஆக சிலைகளை வணங்குவதை - பைபிளில் சிலைவணக்கம் தடை செய்யப்பட்டுள்ள போது அதை மெய்ப்பிக்க வந்த ஏசுவையும் சிலுவையையும் நீங்கள் ஏன் வணங்குகிறீர்கள்? "
" I AM CONFUSED நான் குழம்பிவிட்டேன்" என்றார்.
என் கையில் அன்றைய தினசரி இருந்தது. அதில் சிரியன் கத்தோலிக்க வங்கி SYRIAN CATHOLIC BANK என்று போட்டு வட்டி விகிதாச்சாராங்கள் இருந்தன!
அதைக்காட்டி, " ஏம்மா கிறிஸ்தவர்கள் வட்டி வாங்கலாமா?" என்றேன்.
" தெரியாது சார்".

" உபாகமம் 16:19ல் பரிதானம் வாங்காமல் இருப்பாயாக - பரிதானம் (வட்டி) ஞானிகளின் கண்களை குருடாக்கி நீதிமான்களின் நியாயங்களை தாறுமாறாக்கும்" என்றுள்ளதே. இஸ்லாமும் வட்டிக்கு விரோதமானது தான்.
சரி பன்றி இறைச்சியையும் மற்ற பிராணிகளின் ரத்தத்தையும் உண்பீர்களா?"
" தினமும் உண்போம் "
பன்றியும் புசிக்கத்தகாது, அது விரிகுளம்புள்ளதாயிருந்தும் அசைபோடாதிருக்கும். அது உங்களுக்கு இவைகளின் மாமிசத்தைப் புசியாமலும் இவைகளின் உடலைத் தொடாமலும் இருப்பிர்களாக.
உபாகமம் 14:8

இரத்தத்தை மாத்திரம் புசிக்காதபடிக்கும் எச்சரிக்கையாயிரு.
உபாகமம் 12:23
(ரத்தம்) அதை சாப்பிடாது தண்ணிரைப் போல தரையில் ஊற்றிவிடவும். உபாகமம் 12:16,24
நீ கர்த்தரின் பார்வைக்கு செம்மையானதைச் செய்வதினால் நீயும் உனக்குப் பின் வரும் உன் பிள்ளைகளும் நன்றாயிருக்கும் படிக்கும் நீ அதை (ரத்தத்தை) சாப்பிடலாகாது
உபாகமம் 12:25
" இதே கருத்தை உபாகமம் 12:27லும் காணலாம். இருப்பினும் நீங்கள் அதைச் செய்யலாமா?
" நீங்கள் முஸ்லிம் நாடுகளில் பார்த்திருப்பீர்களே, அவைகள் ஹராம் (விலக்கப்பட்டது) ஆக்கி வைத்திருப்பதை."
" ஆமாம்" என்றார்
.
" சகோதரியே, இஸ்லாமும், இன்ஜீலும் தௌராத்தும் ஒன்றையே கூறின. ஆனால் இஸ்லாம் தவிர ஏனைய மார்க்கங்களில் மனிதக் கைகள் ஊடாடி சிதைந்து உருத்தேய்ந்து உருமாறி விட்டன.
" உதாரணமாக- புதிய ஏற்பாட்டில் லூக்கா (LUKE)10:5ஐ படியுங்கள்."
" ஒரு வீட்டில் பிரவேசிக்கிறபோது இந்த விட்டுக்கு சமாதானம் உண்டாவதாகவென்று முதலாவதாக சொல்லுங்கள்" என்று படிக்கிறார்.
அதன்பின் என்னிடமுள்ள ஆங்கில மொழிபெயர்ப்பு குர்-ஆனில் 24:27 எடுத்து தருகிறேன்.அதே கருத்து சொல்லப்பட்டுள்ளது. மேலே சொல்லப்பட்ட பன்றி மாமிசம், ரத்தம் இவைகள் அல்லாது இறந்துபோன மிருகங்களையும் சரிபார்க்கிறார். வியப்பால் விழிகள் மலர்கின்றன. மிகமிக நேசத்துக்குரியவராய் கருதப்படுகிறேன்.

## இரு நபிமார்களின் அந்தஸ்துகள் 18

( தம் குழந்தைகளை சந்தேகமில்லாமல் அறிவதைப் போல், வேதங் கொடுக்கப் பெற்றவர்கள் நபி (ஸல் ) அவர்களை அறிவார்கள்)
اَ لَّذِيْنَ اٰتَيْنٰهُمُ الْـكِتٰبَ يَعْرِفُوْنَهٗ كَمَا يَعْرِفُوْنَ اَبْنَآءَهُمْ‌ۘ اَ لَّذِيْنَ خَسِرُوْۤا اَنْفُسَهُمْ فَهُمْ لَا يُؤْمِنُوْنَ
எவரும் தம் குழந்தைகளை (சந்தேகமில்லாமல் அறிவதைப் போல், வேதங் கொடுக்கப் பெற்றவர்கள், (நம் தூதராகிய இவரை, இறைவனுடைய தூதர் தாம்) என்று நன்கறிவார்கள். எவர்கள் தமக்குத் தாமே நஷ்டமிழைத்துக் கொண்டார்களோ அவர்கள் தாம் இவரை நம்பமாட்டார்கள். (குர்ஆன் : 6:20)
நபி (ஸல்) அவர்களுக்கு 12 வயதாகும் போது அபூதாலிப் வியாபாரத்திற்காக 'ஷாம்' தேசம் சென்றார். அப்போது நபியவர்களையும் தன்னுடன் அழைத்துச் சென்றார். அவர்கள் ஷாம் நாட்டின் புஸ்ரா நகரை வந்தடைந்தனர். அங்கு 'பஹீரா' ( கிருஸ்துவ பாதிரியார் புஹைரா ) என்ற பிரபலமான துறவி ஒருவர் இருந்தார். அவரது பெயர் 'ஜர்ஜீஸ்' என்று சொல்லப்படுகிறது. அவர் எங்கும் வெளியில் செல்ல மாட்டார். எனினும், இந்த வியாபாரக் கூட்டம் புஸ்ரா சென்றதும் அவர்களை சந்திக்க வந்தார்.

வணிகக் கூட்டத்தைப் பிளந்துகொண்டு வந்து சிறுவரான நபி (ஸல்) அவர்களின் கரத்தைப் பற்றிக்கொண்டு "இதோ உலகத்தாரின் தலைவர்! இதோ உலகத்தாரின் இறைவனுடைய தூதர்! இவரை அல்லாஹ் அகிலத்தாருக்கு அருட்கொடையாக அனுப்புவான்" என்று கூறினார்.
அவரிடம் அபூதாலிபும் குறைஷிப் பெரியவர்களும் "இது எப்படி உமக்குத் தெரியும்?" என வினவினர்.
கிருஸ்துவ ஞானி புஹைரா பற்றி...
சூபி ஞானி புஹைரா அவர்கள் ஒரு பகுதியில் ஆசிரமம் அமைத்து தவம் செய்து வந்தார்கள்....
இவர்கள் குர்ஆன் வருவதற்கு முன் உள்ள வேதங்களை நன்கு படித்து ஆராய்ச்சி செய்து அதன் பிரகாரம் ஏக இறைவனை பிராத்தித்து வந்துள்ளவர்கள்..

அந்த வேதங்களில் சொல்லப்பட்ட இந்தப் பகுதியில் இந்த வழியாகத்தான் பிரபஞ்சத்தின் அருட்கொடை நபிகள் நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் வருவார்கள் என்று இறைவன் கூறியுள்ளதை முழுமையாக நம்பி, அந்தப் பகுதியில் நபிகளாரின் வருகைக்காகவே ஆசிரமம் அமைத்து எதிர்பார்த்து காத்திருந்தார்கள் !!!
அந்த நாளும் வந்தது .ஏக இறைவனின் அருட்கொடை பிரபஞ்சத்தின் பேரின்பம் வருவதை தன்னுடைய கூடாரத்திலிருந்து துல்லியமாக கண்டு கொண்டார்கள்...

மேகம் தாழ்வாக இறங்கி அந்தக் கூட்டத்தினருக்கு குடை பிடித்து வந்தது ! இந்த கூட்டத்தார் நின்றால் அந்த மேகமும் அங்கே நின்றது.
மரங்கள் தலை கவிழ்த்து பூரண கும்ப மரியாதை (ஸஜ்தா) செய்தன...
இதை கண்ணுற்ற புஹைரா அவர்கள் இதுவரை யாருக்காக தவத்தில் இருந்தார்களோ அவர்களே நேரில் வந்ததை உணர்ந்து அந்த மாபெரும் நபி, நபிமார்களுக்கெல்லாம் அரசர் ஆகிய பூரண ஜோதி கண்மணி நாயகம் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களை சந்தித்தார்கள்
அவர் “நீங்கள் கணவாய் வழியாக வந்தபோது கற்களும் மரங்களும் சிரம் பணிந்தன. அவை இறைத்தூதர்களுக்கே தவிர வேறு எவருக்கும் சிரம் பணியமாட்டா. மேலும், அவரது புஜத்துக்குக் கீழிருக்கும் ஆப்பிளைப் போன்ற இறுதித் தூதரின் முத்திரையைக் கொண்டும் நான் அவரை அறிவேன். எங்களது வேதங்களில் அது பற்றி குறிப்பிடப்பட்டுள்ளது” என்று கூறினார்.
மேலும் பாதிரியார் புஹைரா முன் வேதங்களை எல்லாம் நன்கு அறிந்திருந்தார் என்றும், பிற்காலத்தில் ஒரு தீர்க்கதரிசி தோன்றுவார் என்பதற்கான அறிகுறிகளை அவ்வேதங்களில் இருந்து நன்கு விளங்கி இருந்தார் என்றும்,

அவர் நபிகள் நாயகம் ஸல் அவர்களை கண்ணுற்றதும் நபி ஈஸா (அலை) அவர்களால் முன்னறிவிப்பு செய்யப்பட்ட இறைத்தூதர் இவர்கள்தான் என்று கூறி இவர்களுக்கு யாதொரு இடையூறும் நிகழா வண்ணம் நன்கு பாதுகாத்து வருமாறு அபூதாலிப் அவர்களுக்கு எச்சரிக்கை செய்தார் என்றும் கூறப்படுகிறது
பிறகு அவர்களுக்கு விருந்தளித்து உபசரித்தார். இச்சிறுவரை ஷாமுக்கு அழைத்துச் சென்றால் அங்குள்ள ரோமர்கள் மற்றும் யூதர்களால் இவருக்கு ஆபத்து ஏற்படலாம். எனவே, இவரை இங்கிருந்தே மக்கா திருப்பி அனுப்பி விடுங்கள் என்று பஹீரா அபூதாலிபிடம் கூறினார்.
அதற்கிணங்க அபூதாலிப் நபி (ஸல்) அவர்களை சில வாலிபர்களுடன் மக்காவுக்கு அனுப்பி வைத்தார்.
(ஸுனனுத் திர்மிதி, தபரீ, முஸன்னஃப் அபீஷைபா, இப்னு ஹிஷாம், பைஹகீ)
நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் மக்காவிலிருந்து மதீனா முனவ்வராவிற்கு வந்தபோது, ஹளரத் உமர் ரலியல்லாஹுதஆலா அன்ஹு அவர்கள் யூதர்களின் மத தலைராக இருந்த அப்துல்லாஹ் இப்னு ஸலாமை நோக்கி,

"அல்லாஹுத்தஆலா தனது நபிக்கு இந்த வசனத்தை அருளியுள்ளான். உங்களுக்கு இருக்கிற இவ்வறிவு எப்படி?” என்று வினவினார்கள்.
அதற்கவர் “உமரே!, அவர்களை நான் பார்த்த போது, எனது புதல்வனை நான் அறிவதுபோல் உங்களில் அவர்களை நான் அறிந்து கொண்டேன். தவிரவும், பெண்கள் என்ன செய்தார்கள் என்று நான் அறியமாட்டேன்.
ஆதலால், எனது புதல்வனைப் பார்க்கினும் முஹம்மதை நான் அதிகமாகவே அறிந்திருக்கிறேன். இன்னும், அவர் அல்லாஹ்விடமிருந்து அனுப்பப்பட்ட உண்மையானவர் என்று சாட்சி கூறுகிறேன்" என்று கூறினார்
அதற்கு ஹளரத் உமர் ( ரலி ) அவர்கள் இப்னு ஸலாமை உமக்கு இறைவன் தௌஃபீக் செய்யட்டும்" என்று கூறினார்கள்.

## இரு நபிமார்களின் அந்தஸ்துகள் 19

( அண்ணல் நபியவர்களை அகில உலகுக்கு அறிமுகப்படுத்திய கிருஸ்துவ ஞானி வரக்கா )
ஹிராமலையில் நடந்த அற்புத நிகழ்ச்சிகள் அத்தனையையும் ஒன்று விடாமல் தம் மனைவிக்கு எடுத்துரைத்தனர் அண்ணல் நபி (ஸல்) அவர்கள். எடுத்துரைத்துக் கொண்டு வரும்பொழுதே அவர்களின் உடல் முழுவதும் நடுங்கியது.
"அபுல் காசிம்!ஏன் பயந்து நடுங்குகின்றீர்கள் தைரியத்துடனும், மகிழ்ச்சியுடனும் இருங்கள்! அல்லாஹ் உங்களுக்கு யாதொரு தீங்கும் செய்யமாட்டான். நீங்களோ உண்மையாளர். உறவினர்களை ஆதரிப்பவர்கள், இன்னா செய்தார்க்கும் இனியவை செய்யும் பண்பினர். சங்கைக் குணமும், சற்குணமும், ஈகைக் குணமும், இரக்க குணமும் உள்ளவர்கள்.

இப்படிப்பட்ட தங்களுக்க இறைவன் தீங்கு செய்வான்? ஒரு போதும் செய்ய மாட்டான். தங்களை யாதோ பெரும் செயலைச் சாதிப்பதற்காகத் தேர்ந்தெடுத்துள்ளான்” என்று ஆறுதல் கூறினார் அம்மையார்.
அவர் அவ்வாறு கூறி வாய்மூடுவதற்குமுன் அண்ணல்
அவர்களை அச்சமும் திடுக்கமும் கௌவிப் பிடித்துக் கொண்டன. அவர்களின் உடம்பெல்லாம் நடுங்கியது.
"என்னைப் போர்த்துங்கள்! என்னைப் போர்த்துங்கள்!" என்று சப்தமிட்டார்கள்
கதீஜா நாயகி ஓடோடிப் போய்த் தமமுடைய கம்பளிப் போர்வையை எடுத்து வந்து அண்ணல் அவர்களை மூடினார். அண்ணல் அவர்களும் போர்வைக்குள்ளே கூனிக் குறுகிப் படுத்துக்கொண்டார்கள். அம்மையார் அண்ணல் அவர்களின் அருகே அமர்ந்திருந்தார். சற்று நேரத்தில் அண்ணல் அவர்களை உறக்கம் ஆட்கொண்டது.
அவர்கள் உறங்கிக் கொண்டிருக்கிறார்களா, விழித்துக்
கொண்டிருக்கிறார்களா என்னும் ஐயம் அம்மையாருக்கு ஏற்பட்டது. போர்வையைச் சற்று நீக்கிப் பார்த்தார்.
அண்ணல் அவர்கன் அயர்ந்து தூங்கினார்கள்.

இச்செய்தியைத் தம் பெரிய தந்தையின் மகன் வரகா இப்னு நௌபலிடம் தெரியப்படுத்தி அவருடன் கலந்துரையாடி ஐயத்தெளிவு பெறலாமே, அவர் முன் வேதங்களை நன்கு உணர்ந்தவராயிற்றே; உருவ வழிபாட்டை
விட்டொழித்தவராயிற்றே என்னும் எண்ணங்கள் அம்மையாரின் மனத்திலே ஒன்றின்பின் ஒன்றாது தோன்றின அவருடைய கால்கள் வரகா இப்னு நௌபலின் வீட்டை நோக்கி அடியெடுத்து வைத்தன.நிகழ்ந்தவற்றை அணுவேனும் விடாது அமுத மழை கொட்டினாற் போன்று எடுத்துரைத்தது.
இதைக் கேட்டதும் வரகாவின் தலை சுழன்றது. ஒருவித
மயக்கம் அவரை ஆட்கொண்டது. பைபிளின் பக்கங்கள் தாமாகவே திறந்து, திறந்து அவரின் மனக்கண் முன்னே காட்சியளித்துப் பேசின !
"இப்ராஹீம் என்னும் தீர்க்கதரிசிக்கு இறைவனளித்த வாக்குறுதியாகிய 'இஸ்மவேலுக்காகவும் நீர்செய்த விண்ணப்தைக் கேட்டேன். நான் அவரை வாழ்த்தி அவரை மிகவும் அதிகமாகப் பல்கவும் பெருகவும் பண்ணுவேன் [ஆதியாகமம் 16:20] என்பதானது அவருடைய செவிகளில் ஒலித்தது,
உன்னைப்போல ஒரு தீர்க்கதரிசியை நான் அவர்களுக்காக அவர் உடன் பிறந்தாரிலிருந்தும் எழும்பப் பண்ணி, என் வார்த்தைகளை அவர் வாயில் அருளுவேன், நான் அவருக்குக் கற்பிப்பதையெல்லாம் அவர்களுக்குச் சொல்லுவார். (உபாகமம் 18:8)

...என்று மூஸா என்னும் தீர்க்க தரிசிக்கு இறைவன் கூறிய மொழிகள் அவருடைய செவிகளில் கணீரென்று முழங்கியது.
" நீங்கள் என்னிடத்தில் அன்பாயிருந்தால் என் கற்பனைகளைக் கைக்கொள்ளுங்கள். நான் பிதாவை வேண்டிக்கொள்வேன். அப்பொழுது என்றென்றைக்கும் உங்களுடனே கூட இருக்கும்படிச் சத்திய ஆவியாகிய வேறொரு தேற்றரவாளனை அவர் உங்களுக்குத் தந்தருளுவார். உலகம் அந்தச் சத்திய ஆவியானவரைக் காணாமலும் அறியாமலும் இருக்கிறபடியால், அவரைப் பெற்றுக்கொள்ளமாட்டாது. அவர் உங்களுடனே வாசம் பண்ணி உங்களுக்குள்ளே இருப்பதால் நீங்கள் அவரை அறிவீர்கள்'-(யோவான் 14: 5 -17)
"என் நாமத்தினாலே தந்தை அனுப்பப்போகிற தூய ஆவியாகிய தேற்றரவாளனே எல்லாவற்றையும் உங்களுக்குப் போதித்து நான் உங்களுக்குச் சொன்ன எல்லாவற்றையும் நினைப்பூட்டுவார்!'' - ( யோவான் 14:26)
"நான் உங்களுக்கு உண்மையைச் சொல்கிறேன்; நான் போகிறது உங்களுக்குப் பயன்படுவதாயிருக்கும்: நான் போகாதிருந்தால் தேற்றரவாளன் உங்களிடத்தில் வரார்: நான் போவேனாகில் அவரை உங்களிடத்திற்கு அனுப்புவேன்,'' (யோவான் 16:7)

''இன்னும் அனேக காரியங்களை நான் உங்களுக்குச் சொல்ல வேண்டியிருக்கிறது; அவற்றை நீங்கள் இப்பொழுது தாங்கமாட்டீர்கள். சத்திய ஆவியாகிய அவர் வரும்பொழுது சகல சத்தியத்திற்குள்ளும் உங்களை நடத்துவார்' (யோவான் 16: 12, 13)
"வேத நூலானது கல்வி அறிவற்ற அவருக்கு அளிக்கப்பட்டு, 'ஓதுவீராக!' என்று கூறப்பட்ட அவ்வசனங்களை ஓதுமாறு வேண்டிக்கொள்ளப்பட்ட காலை எனக்கு ஓதத்தெரியாதே என்று கூறுவார்." (ஏசாயா 39 : 12)
...என்ற வாசகங்கள் பொறிக்கப்பட்டிருந்த பக்கம் திடீரெனத் திறந்து ஒளிமயமாக அவர்களின் மனக்கண் முன் தோற்றம் வழங்கியது: அதைப் பின்தொடர்ந்து மடமடவென்று பக்கங்கள் புரண்டன
''அரேபியாவின் பாரம் திதானியராகிய பயண கூட்டங்களே ! நீங்கள் அரேபியாவின் காடுகளில் இராத்தங்குவீர்கள். தேமா தேசத்தின் குடிகளே, நீங்கள் தாகமாயிருக்கிறவர்களுக்குத் தண்ணீர் கொண்டுபோய், தப்பி ஓடுகிறவர்களுக்கு அப்பங் கொடுக்க எதிர்கொண்டு செல்லுங்கள்.
அவர்கள் பட்டயங்களுக்கும், உருவின கட்கத்துக்கும் நாணேற்றின வில்லுக்கும், யுத்தத்தின் கொடுமைக்கும் தப்பி ஓடுகின்றார்கள்.
''கர்த்தர் சீனாயிலிருந்து அவர்களுக்குமுன் சீரிலிருந்து எழும்பினார். அவர் பாரானிலிருந்து விளங்கினார், அவர் பதினாயிரம் பக்தர்களுடன் வந்து சேர்த்தார். அவரது வலக் கையிலிருந்து அவர்களுக்காக ஒளிபோன்ற சட்டமும் வெளியாயிற்று' என்று உபாகமத்தில் கூறப்பட்டிருக்கும் முன்னறிவிப்பானது வரகாமுன் வந்துநின்று புன்முறுவலுடன் காட்சி வழங்கியது.

அவ்வளவுதான். வரக்காவுக்கு மயக்கம் தெளிந்தது. அவருடைய 'உடல் சிலிர்த்தது: பகுத்தூஸுன்! குத்து ஸுன்!!" (புனிதமானது! புனிதமானது!!) என்று கூறிக் கொண்டே மகிழ்ச்சிக் கூத்தாடினார் அவர், நிச்சயமாக இவர் தாம் மூஸாவுக்கும் ஈசாவுக்கும் 'வஹீ'' கொணர்ந்த நாமூஸுல் அஃலமாவார். நாமூஸுல் அஃலம்-ஜிப்ரீல் என்னும் வானவரின் மறுபெயர்.
இதுவரை உலக மக்கள் எதிர்பார்த்துக் கொண்டிருந்த உலக மாநபி உங்களுடைய கணவர் முஹம்மதேயாவார். வந்த வான தூதுவர் அவரிடம் வேறு யாதேனும் கூறினரா? பிரச்சாரம் செய்யுமாறு அருளிச் செய் தனரா? கூறுங்கள்! கூறுங்கள்! எனக்கு அதைப் பற்றி அறியப் பெரிதும் ஆவலாக இருக்கிறது. அவர் அவ்விதம் கூறிச் சென்றிருப்பாராயின் அவருடைய மதத்தில் எல்லோருக்கும் முதலாக நான் சேரத் தயாராயுள்ளேன்.
விரைந்து வீட்டுக்குச் செல்லுங்கள்! சென்று உங்களுடைய கணவரைக் கவனியுங்கள்! நீங்களும் உங்களுடைய ஐயங்களையும் அச்சங்களையும் அப்புறப்படுத்திவிட்டு அவரையும் தைரியமாகவும், உற்சாகமாகவும் இருக்குமாறு கூறுங்கள்! என்று மகிழ்ச்சி மிகுதியால் திணறிக் கொண்டு கூறினார் வரகா,

கதீஜா நாயகியும் வீட்டிற்கு ஓடோடி வந்தார்கள். அண்ணல் அவர் கள் அப்பொழுது அயர்ந்து நித்திரை செய்து கொண்டிருந்தனர், அவர்களின் முகத்தையே அங்கு நீண்ட நேரம் உற்று நோக்கிக் கொண்டிருந்தனர் அம்மையார். அப்பொழுது அண்ணல் அவர்கள் அசைந்தாற்போன்று தோன்றியது. அவர்களின் 'நெற்றியில்' வியர்வைத் துளிகள் அரும்பின. அவர்களின் மூச்சு வெகு சிரமத்துடன் வெளிவந்தது. வான தூதுவர் மறுபடியும் திரும்பி வந்து விட்டார்.
"போர்வையால் போர்த்திக் கொண்டிருப்பவரே. எழுந்து நின்று [மக்களுக்கு] எச்சரிக்கை செய்யும்! உமது இறைவனைப் பெருமைப்படுத்தும்! உம்முடைய உடைகளைத் தூய்மையாக வைத்துக் கொள்ளும்! தூய்மையல்லாதவற்றை விட்டுத் தூரவிலகிவிடும் ! பிறருக்கு நன்றி செய்து அதைவிட அதிகமான பலனை அவரிடமிருந்து பெற்றுக் கொள்ள எண்ண வேண்டாம். உம்முடைய இறைவனுக்காக வேண்டி இன்னல்களைப் பொறுத்திரும்!'
என்னும் இறைவனின் உத்திரவு அவர்களுக்கு அருளப்பட்டது. அருளப்பட்ட அடுத்த கணமே அதனை மளமளவென்று மனைவியிடம் ஒப்புவித்தார்கள் அண்ணல் .
இதைக் கேட்டதும் கதீஜா நாயகிக்கு அண்ணல் மீது ஏற்பட்ட அன்பும் மரியாதையும் அதிகமாயின

## இரு நபிமார்களின் அந்தஸ்துகள் 19

சங்கை மிக்க நபி ஈஸா அலைஹிஸ்ஸலாம் அவர்களே எங்கள் நபிகள் நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் பரிசுத்த நூரில் ஜோதியில் இருந்துதான் பிறந்தார்கள் !
இருலோக இரட்சகர் நபிகள் கோமான் எம் பெருமான் முஹம்மது முஸ்தபா ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்களின் வயது என்ன ?
நம்மில் அனேகமானோர் காலா, காலமாக நபிகள் கோமான் எம் பெருமான் முஹம்மது முஸ்தபா ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்களுக்கு வயது 63 என்று எண்ணிக் கொண்டிருக்கிறோம்.....
இந்த உலகில் அவர்கள் வாழ்ந்த வாழ்க்கையின் காலத்தின் அளவீடுதான் அந்த 63 வருடங்களாகும்.....
ஆனால் அதற்கும் மேலே நாமறியாத சில விடயங்கள் இருக்கின்றன.....
அவற்றைப் பின் வரும் ஹதீதுகளைக் கொண்டு நோக்குவோம்.

جابر بن عبد الله قال: قلت يا رسول الله بأبي أنت وأمي أخبرني عن أول شيء خلقه الله تعالى قبل الأشياء. قال: «يا جابر إن الله خلق قبل الأشياء نور نبيّك من نوره فجعل ذلك النور يدور بالقدرة حيث شاء الله ولم يكن في ذلك الوقت لوح ولا قلم ولا جنّة ولا نار ولا مَلَك ولا سماء ولا أرض ولا شمس ولا قمر ولا جني ولا إنسي» .
ஹஜ்ரத் அப்துல்லாஹ் இப்னு ஜாபிர் ரலியல்லாஹூ அன்ஹூ அவர்கள் பெருமானார் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களிடம் "அல்லாஹ்வின் திருத்தூதரே ! என் தாய் தந்தையர் தங்களுக்கு அர்ப்பணமாகட்டும்.
அல்லாஹ் முதன் முதலில் எதைப் படைத்தான் என்பதை அறிந்து கொள்ள நான் ஆசைப்படுகிறேன்" என்று கேட்டார்கள்..
"அல்லாஹ் முதன் முதலில் தன்னுடைய நூரிலிருந்து உன்னுடைய நபியின் நூரைப் படைத்தான்..
பின்னர் அந்த நூர் அல்லாஹ்வின் நாட்டத்திற்கிணங்க அவன் வல்லமையைக் கொண்டு, உலா வந்து கொண்டிருந்தது.
அப்போது லவ்ஹூ என்ற பலகையோ, கலம் என்னும் எழுதுகோலோ, சொர்க்கமோ, நரகமோ, மலக்குகளோ, இல்லை.
வானம் இல்லை, பூமியும் இல்லை, சூரியனுமில்லை, சந்திரனுமில்லை, ஜின் வர்க்கமுமில்லை, மனித இனமுமில்லை," என்று நபிகள் நாயகம் ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள் .
(நூல் - இமாம் பைஹகியின் தலாயிலுந் நுபுவத், இமாம் இப்னு ஹஜர் மக்கி அவர்களின் அப்ஸலுல் குரா, இமாம் இப்னு ஹஜர் அஸ்கலானி அவர்களின் மவாஹிப், அல்லாமா காஸி அவர்களின் மதாபி உல் மஸர்ராத், அல்லாமா அப்துல் ஹக் முஹத்திஸ் தெஹ்லவி அவர்களின் மதரிஜூன் நுபுவத்.)
நபிகள் கோமான் எம் பெருமான் முஹம்மது முஸ்தபா ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்களுக்கு வயது 63 - தானே ?

இந்த ஹதீஸில் நபி ஆதம் அலைஹி வஸல்லம் அவர்களும் படைக்கப்படுவதற்கு முன்பே நபிகள் நாயகம் ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்களின் நூர் சிருஷ்டிக்கப்பட்டு விட்டது என்று கூறப்பட்டுள்ளதே ! அவ்வாறாயின் படைப்பினங்களின் அருட் கொடை ஸல்லல்லாஹூ அலைஹிவஸல்லம் அவர்களின் உண்மை வயது தான் என்ன ? அவர்களது ஆரம்பம் தான் என்ன ? என்னும் கேள்வி நம் மனதில் தோன்றக் கூடும்.
عن ابى هريرة انه عليه السلام سال جبريل عليه السلام فقال « يا جبريل كم عمرك من السنين » فقال يا رسول الله لست اعلم غير ان فى الحجاب الرابع نجما يطلع كل سبعين الف سنة مرة رأيته اثنين وسبعين الف مرة فقال عليه السلام « يا جبريل وعزة ربى انا ذلك الكوكب »

ஒரு முறை வானவர் கோமான் ஹஜ்ரத் ஜிப்ரயீல் அலைஹிஸ்ஸலாம் அவர்களிடம் உங்களது வயது என்ன? என்று நபிகள் கோமான் ஸல்லல்லாஹூ அலைஹிவஸல்லம் அவர்கள் கேட்ட போது,
"என் வயதைப் பற்றி எதுவும் நான் அறியேன்.எனினும் ஒரு விபரம் கூறுகிறேன்.அதைக் கொண்டு தாங்கள் எனது வயதைக் கணித்துக் கொள்ளுங்கள்.....
நான்காவது வானத்தில் ஒரு நட்சத்திரம் இருக்கிறது.அந்த நட்சத்திரம் எழுபதாயிரம் வருடங்களுக்கு ஒரு முறை தோன்றும் அதை நான் எழுதபதாயிரம் தடவைப் பார்த்திருக்கிறேன் என்று கூறினார்கள்.....

அதற்கு நபிகள் நாயகம் ஸல்லல்லாஹூ அலைஹிவஸல்லம் அவர்கள்,
"ஜிப்ரயீலே ! அல்லாஹ்வின் மீது சத்தியமாக அந்த நட்சத்திரம் நானே என்றார்கள் !!!
[ ஆதாரம் = தப்ஸீர் ரூஹுல் பயானில் –

لَقَدْ جَاءَكُمْ رَسُولٌ مِنْ أَنْفُسِكُمْ عَزِيزٌ عَلَيْهِ مَا عَنِتُّمْ حَرِيصٌ عَلَيْكُمْ بِالْمُؤْمِنِينَ رَءُوفٌ رَحِيمٌ
என்ற திருவசத்திற்கு அளிக்கப்பட்டுள்ள விரிவுரை ]
எனவே எம்மைப் போன்ற சாதாரண மனிதர்களுக்கு சில உதாரணங்களோ, சில விளக்கங்களோ சொன்னால் தான் புரியும்.
அந்த அடிப்படையில் தான் நம்மைப் போன்ற பாமரர்கள் நபிகள் நாயகம் ஸல்லல்லாஹூ அலைஹிவஸல்லம் அவர்களுக்கு வயது 63 என்று சொல்லப்படுகிறது.
ஹஜ்ரத் அப்துல்லாஹ் அலைஹிவஸல்லம் அவர்களின் மகனாக ஹஜ்ரத் ஆமீனா அலைஹிவஸல்லம் அன்ஹுமா அவர்களின் வயிற்றில் உதித்து, பின்பு இவ்வுலகில் மனித ரூபமெடுத்து வல்லோன் அல்லாஹ்வின் நபி ரஸூலாக பிரகனப்படுத்தப்பட்ட சர்வரே காயினாத் முஹம்மத் முஸ்தபா ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்களுக்குத் தான் வயது 63 ஆகும்.
அதே நேரம் பெருமானார் முஹம்மத் முஸ்தபா ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்களின் மூலமாகிய "நூரே முஹம்மதியாவின்" வயது எவ்வளவு என்ற பரம ரகசியத்தை அந்த அல்லாஹ்வே நன்கறிவான் .
والذي بعثني بالحق بشيرا لم يعلم حقيقتى غير ربى
"உண்மையாகவே என்னை நன்மாராயம் சொல்வோனாக அனுப்பி வைத்தவனின் மீது சத்தியமிட்டு சொல்கிறேன்.என் யதார்த்தத்தை என் ரப்பைத் தவிர வேறெவரும் அறியமாட்டார்கள் !" [ ஆதாரம் குர்ரத்துல் அலிப் =24 ]
انى لست مثلكم
"நிச்சயமாக நான் உங்களை போன்றவன் அல்ல என்று நபி முஹம்மத் முஸ்தபா ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள் [ புகாரீ - பாகம்- 2 ,பக்கம் 1084 கிதாபுல் இஃதாஸாம் ]
ليت كأحد منكم
நான் உங்களில் யாரும் போன்றும் அல்ல என்று முஹம்மத் முஸ்தபா ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள் [ முஸ்லிம் ,புகாரி - பாகம் - 1 ,பக்கம் - 263 ,கிதாபுஸ் ஸவ்மி - மிஷ்காத் பக்கம் - 111 ]
لست كهئتكم
நான் உங்களின் அமைப்பைப் போன்றவனல்ல என்று முஹம்மத் முஸ்தபா ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் கூறினார்கள் [ புகாரி - பாகம் - 1 ,பக்கம் - 264 - கிதாபுஸ் ஸவ்மி ]
لست كهئتك يا رسول الله

முஹம்மத் முஸ்தபா ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்களைப் பார்த்து நபியே நாங்கள் உங்களுடைய அமைப்பைப் போன்றவர்கள் அல்ல என்று ஸஹாபாக்கள் கூறினார்கள் [ புகாரி - பாகம் - 1 , பக்கம் - 7 ,கிதாபுல் ஈமான் ]
எனவே முஹம்மத் முஸ்தபா ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்களின் உண்மை நிலையை வல்ல அல்லாஹ் ஒருவன் தான் நன்கறிவான். இதே போன்று வல்லோன் அல்லாஹ்வின அகமியத்தை நன்கறிந்தவர்கள் முஹம்மத் முஸ்தபா ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்களே என்பதை அறிந்து இம்மையில் உண்மை முஸ்லிமாக வாழ்ந்து மறுமையில் சகலபாக்கியங்களையும் பெறுவோமாக..! ஆமீன்..! - நன்றி நஸ்ருதீன் காசிம் தகவல் இறை அருள் வைத்தியர் மாலிக்

## இரு நபிமார்களின் அந்தஸ்துகள் 20

கேள்வி : இயேசுவின் பிறப்பைப் பற்றி அவருடைய தாய் மர்யமுக்கு ஒரு தேவதூதர் (ஜிப்ரயீல் அலை) மூலம் முன்னறிப்பு செய்ததாக உங்கள் வேதம் திருக்குர்ஆனே சொல்கின்றது.
இப்படிப்பட்ட முன்னறிப்பு ஒன்றும் உங்கள் நபி முஹம்மதுவின் பிறப்புக்கு முன் இறைவனிடமிருந்து இறங்கவில்லையே.. இதனால் முஹம்மது நபி (ஸல்) அவர்களை விட எங்கள் இயேசுவாகிய ஈஸா (அலை) மிகவும் சிறப்பானவரல்லவா ?
___________________________________________
திருமணமாகாத ஒரு கன்னி பெண்ணிடம் போய் உனக்கு ஒரு மகன் பிறப்பான் என்று கூறினால் , அக்கன்னிப் பெண் பதறுவாள் தானே ?
لِأَهَبَ لَكِ غُلٰمًا زَكِيًّا قَالَ اِنَّمَاۤ اَنَا رَسُوْلُ رَبِّكِ
“நிச்சயமாக நான் உம்முடைய இறைவனின் தூதன்; பரிசுத்தமான புதல்வரை உமக்கு நன்கொடை அளிக்க (வந்துள்ளேன்”) என்று கூறினார்.(குர்ஆன் : 19:19)
قَالَتْ اَنّٰى يَكُوْنُ لِىْ غُلٰمٌ وَّلَمْ يَمْسَسْنِىْ بَشَرٌ وَّلَمْ اَكُ بَغِيًّا
அதற்கு அவர் (மர்யம்), “எந்த ஆடவனும் என்னைத் தீண்டாமலும், நான் நடத்தை பிசகியவளாக இல்லாதிருக்கும் நிலையிலும் எனக்கு எவ்வாறு புதல்வன் உண்டாக முடியும்?” என்று கூறினார். (குர்ஆன் : 19:20)
எனவே இறைவன் புறத்திலிருந்து அக்கன்னிப் பெண்ணுக்கு திருமணம் ஆகாமல் மகன் பிறப்பதை முன்னறிவிப்பு செய்ய வேண்டிய கட்டாயம் ஏற்பட்டது. ஆனால் முஹம்மது நபி (ஸல்) அவர்களின் தாய் தந்தையர் இருந்தனர். எனவே மகனார் பிறப்பதை முன்னறிப்பு செய்யயப்படவில்லை.

பிறப்பை முன்னறிவிப்பு செய்தததால்தான் இயேசு சிரேஷ்டமானவர் என்றால், அவரைப் போலவே குர்ஆனில் முன்னறிவிப்பு செய்யப்பட்ட மற்றவர்களும் சிரேஷ்டமானவர்தானே ? அதையும் சொல்றேன்.
யோவான் என்கிற எஹ்யா (அலை) அவர்களைப் பற்றி நமது குர்ஆன் ஷரீஃபிலும் அவர்களது பைபிள் ஷரீஃபிலும் முன்னறிவிப்பு செய்யப்பட்டுள்ளது. ஆதலின் ஈஸா அலைஹிஸ்ஸலாம் இவ்விஷயத்தில் எஹ்யா (அலை) அவர்களைக் காட்டினும் எவ்வாறு சிறந்தவர் என்பது நமக்கு புலப்படவில்லை.
ஈஸா (அலை) பிறப்பை பற்றி முன்னறிவிப்பானது அவரது தாயாராகிய ஒரு சாதாரண பெண் பிள்ளைக்கு அனுப்பப்பட்டது. ஆனால் நமது நபிகள் பெருமானார் முஹம்மது முஸ்தபா ரசூலே கரீம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் திரு அவதாரம் சம்பந்தமான சந்தோஷ சமாச்சாரம் மிகப்பெரிய நபிமார்களுக்கு முன்னெறிக்கையாக கொடுக்கப்பட்டிருக்கிறதே அதை என்ன சொல்வது ?
وَاِذْ اَخَذَ اللّٰهُ مِيْثَاقَ النَّبِيّٖنَ لَمَاۤ اٰتَيْتُكُمْ مِّنْ كِتٰبٍ وَّحِكْمَةٍ ثُمَّ جَآءَكُمْ رَسُوْلٌ مُّصَدِّقٌ لِّمَا مَعَكُمْ لَتُؤْمِنُنَّ بِهٖ وَلَـتَـنْصُرُنَّهٗ‌ قَالَ ءَاَقْرَرْتُمْ وَاَخَذْتُمْ عَلٰى ذٰ لِكُمْ اِصْرِىْ‌ قَالُوْۤا اَقْرَرْنَا‌ قَالَ فَاشْهَدُوْا وَاَنَا مَعَكُمْ مِّنَ الشّٰهِدِيْنَ
(நினைவு கூறுங்கள்:) நபிமார்(கள் மூலமாக அல்லாஹ் உங்கள் முன்னோர்)களிடம் உறுதிமொழி வாங்கியபோது, “நான் உங்களுக்கு வேதத்தையும், ஞானத்தையும் கொடுத்திருக்கின்றேன். பின்னர் உங்களிடம் இருப்பதை மெய்ப்பிக்கும் ரஸூல் (இறைதூதர்) வருவார். நீங்கள் அவர்மீது திடமாக ஈமான் கொண்டு அவருக்கு உறுதியாக உதவி செய்வீர்களாக” (எனக் கூறினான்).

“நீங்கள் (இதை) உறுதிப்படுத்துகிறீர்களா? என்னுடைய இந்த உடன்படிக்கைக்குக் கட்டுப்படுகிறீர்களா?” என்றும் கேட்டான்;”நாங்கள் (அதனை ஏற்று) உறுதிப்படுத்துகிறோம்” என்று கூறினார்கள்; (அதற்கு அல்லாஹ்) “நீங்கள் சாட்சியாக இருங்கள்; நானும் உங்களுடன் சாட்சியாளர்களில் (ஒருவனாக) இருக்கிறேன்” என்று கூறினான்.
(குர்ஆன் : 3:81)
" நான் என் தந்தையான இப்ராஹீம் (அலை) அவர்களின் பிரார்த்தனையாலும், நபி ஈஸா (அலை) அவர்களின் சந்தோஷ சமாசாரத்தாலும் , என் தாயின் முன்னறிக்கையைக் கொண்டும் வந்திருக்கிறேன்" (நபிமொழி)
“எங்கள் இறைவனே! எங்கள் இருவரையும், உனக்கு முற்றிலும் வழிபடுபவர்களாக ஆக்கி வைப்பாயாக! எங்கள் வழித்தோன்றல்களிலிருந்து முற்றிலும் உனக்குக் கீழ்ப்படிந்து வாழும் ஒரு சமூகத்தைத் தோற்றுவிப்பாயாக! மேலும், இந்த மக்களுக்காக இவர்களிலிருந்தே ஒரு தூதரை தேர்ந்தெடுப்பாயாக! அவர் உன்னுடைய வசனங்களை மக்களுக்கு ஓதிக் காட்டுபவராகவும், வேதத்தையும், ஞானத்தையும் கற்றுக் கொடுப்பவராகவும், அவர்களை தூய்மைப்படுத்துபவராகவும் திகழச் செய்வாயாக”. (குர்ஆன்) நபி இப்ராஹீம் (அலை) மற்றும் அவரது மகன் நபி இஸ்மாயில் (அலை) செய்த பிரார்த்தனை இது."

இப்ராஹீம் (அலை) அவர்களைக் குறித்து இறைவன் ..
ما كان إبراهيم يهودياً ولا نصرانياً ولكن كان حنيفاً مسلماً وما كان من المشركين
இப்ராஹீம், யூதராகவோ,கிறித்தவராகவோ இருந்ததில்லை. மாறாக அவர் உண்மை வழியில் நின்ற முஸ்லிமாக இருந்தார். இணை கற்பித்தவராக அவர் இருந்ததில்லை.(குர்ஆன் 3:67)
(ஆகவே, அவர்களில்) எவர்கள் எழுதப் படிக்கத் தெரியாத (நம்) தூதராகிய இந்த நபியைப் பின்பற்றுகிறார்களோ அவர்கள் தங்களிடமுள்ள தவ்றாத்திலும், இன்ஜீலிலும் இவருடைய பெயர் எழுதப்பட்டிருப்பதைக் காண்பார்கள். (இத்தூதரோ) அவர்களை நன்மையான காரியங்களைச் செய்யும்படி ஏவி, பாவமான காரியங்களிலிருந்து விலக்குவார். நல்லவைகளையே அவர்களுக்கு ஆகுமாக்கி வைப்பார். கெட்டவற்றை அவர்களுக்குத் தடுத்து விடுவார்.

அன்றி, அவர்களது சுமையையும் அவர்கள் மீதிருந்த (கடினமான சட்ட) விலங்குகளையும் (இறைவனின் அனுமதி கொண்டு) நீக்கிவிடுவார்.
ஆகவே, எவர்கள் அவரை உண்மையாகவே நம்பிக்கை கொண்டு, அவரை பலப்படுத்தி அவருக்கு உதவி செய்து, அவருக்கு இறக்கப்பட்ட பிரகாசமான (இவ்வேதத்)தைப் பின்பற்றுகிறார்களோ அவர்கள்தான் வெற்றி பெற்றவர்கள்.
(குர்ஆன் : 7:157)

ரோமபுரி ஹெர்குலிஸ் மன்னர் "இன்றிரவு நான் நட்சத்திர மண்டலத்தை ஆராய்ந்தபோது, "விருத்தசேதனம் செய்யப்பட்டவர்களின் மன்னர் தோன்றிவிட்டதாக ஜென்ம நட்சத்திரத்தின் மூலம் அறிந்தேன்" என்று கூறி அண்ணலெம் பெருமானார் நபி முஸ்தபா ஸல்லல்லாஹு அலா முஹம்மது ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் பிறப்பை பதிவு செய்யவில்லையா ? புகாரி பாகம் 1 - ஹதீஸ் 07
ஆக இத்தனை முன்னறிவிப்புகள் இறக்கப்பட்டு
நமது நபிகள் பெருமானார் முஹம்மது முஸ்தபா ரசூலே கரீம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் அவதரித்துள்ளார்கள்.

## இரு நபிமார்களின் அந்தஸ்துகள் 21



எந்த நபிக்கும் ஈடு இணையில்லாத அண்ணலம் பெருமானார் முஹம்மது முஸ்தபா ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் 1
_____________________________________________
இன்ஸி, .மலகி, #ஹக்கீ என்ற முப்பெரும் சக்திகளால் திகழ்பவர்கள் அண்ணலம் பெருமானார் முஹம்மது முஸ்தபா ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம்.
அண்ணலம் பெருமானார் முஹம்மது முஸ்தபா ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களிடம், ஹக்கியத் - தெய்வீகத் தன்மை, மலக்கியத் - மலக்குகளின் தன்மை, இன்ஸியத் - மனிதத் தன்மை, இம்மூன்று தன்மைகளுமிருந்தன என்பதை மார்க்க மேதைகள் ஆராய்ந்து அறிவித்துள்ளார்கள்.
'தப்ஸீர் ரூஹுல் பயான்' நூலில், காப், ஹா, யா, அஃய்ன், ஸாத் என்ற வசன விளக்கத்தில் பெருமானார் முஹம்மது முஸ்தபா ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களுக்கு இப்படி மூன்று தன்மைகளுமிருந்து செயல் பட்டுக்கொண்டிருந்தன எனக் குறிப்பிட்டுள்ளார்கள்.
ஒன்று மனிதத் தன்மை; அதாவது "நான் உங்களைப் போன்ற மனிதனே" என்ற திருவசனத்தில் வந்திருப்பது போலாகும்.
இரண்டாவது மலகீ-மலக்குகளின் தன்மையில் இயங்குவது, பெருமானார் முஹம்மது முஸ்தபா ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் இப்படி அறிவித்திருக்கிறார்கள்: நான் உங்களில் யாரைப் போன்றுமில்லை. நான் என் ரப்பு இடமே தங்கியிருக்கிறேன்.
மலக்குகளின் தன்மை மண்ணுலகம் முழுவதையும் சுற்றி வர, வினாடிப் பொழுதில் ஆஜராக ஆற்றலளிக்கப்பட்டவர்கள். உதாரணமாக, இஸ்ராயீல் (அலைஹிஸ்ஸலம்) அவர்கள் உலகினில் எங்கும் உயிரினங்களின் உயிரை வாங்க செல்லவும், வாங்கப்பட்ட அந்த உயிரை-ரூஹை சேர்க்க வேண்டிய இடத்தில் சேர்க்க விண்ணுலகம் ஏகவும் ஆற்றலுள்ளவர்கள். அவர்களுக்கு உலகில் இரும்புக் கோட்டையும்கூட தடையாக முடியாது.
பெருமானார் முஹம்மது முஸ்தபா ஸல்லல்லாஹு அலைஹிவசல்லம் அவர்கள் இப்படி அறிவித்துள்ளார்கள் : "(முஃமீன்களே!) உங்களில், மலக்குகள் இரவும் பகலும், மாறி மாறி வந்து கொண்டிருக்கிறார்கள்" .
அதாவது அடியார்கள் பால் பகலில் சாட்டப்பட்டிருக்கும் மலக்குகள், மாலையில் விண்ணகம் பயணமாகியும், இரவில் சாட்டப்பட்ட மலக்குகள் காலையில் விண்ணகம் பயணமாகியும், இப்படியே எல்லா ஒவ்வோர் மனிதனுக்காகவும் வந்து சென்று கொண்டே இருப்பார்கள்.
இதேபோல் பேரொளியாம் பெருமானார் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களும் விண்ணுக்கும் மண்ணுக்கும் சென்று வரக் கூடியவர்கள்.
மூன்றாவது ஹக்கீ-தெய்வீகத்தன்மை. அதாவது தனது மனித ஆதிக்கம் அடங்கியோ, அல்லது மறைந்தோ, தனியோனான அல்லாஹுதஆலாவின், குணம், பலம், ஆதிக்கம் மேவி மிகைத்து நிற்கும் தன்மையாகும்.
பெருமானார் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் இப்படி அறிவித்துள்ளார்கள்: எனக்கு அல்லாஹ் உடன் ஒரு நேரமுண்டு, அந்நேரத்தில் எவ்வளவு நெருக்கமான மலக்கோ, நபியோ, ரஸூலோ, என்னிடத்தில் இடம் பெற மாட்டார்கள்.

அதாவது எனக்கும் இறைவனுக்கும் மட்டுமே சொந்தமான சந்திப்பாகும். அத்தகைய விஷேச சந்திப்பின்போது உலகில் எந்த மனிதனுக்குமோ அல்லது எந்த மலக்கிற்குமோ வெளியாக்கப்படாத பரம ரகசியங்களை எனக்கு என்னிறைவன் அறிவித்துத் தருகிறான்.
இந்த மலகீ தன்மையும், ஹக்கீ - தெய்வீகத்தன்மையும் பெருமானார் முஹம்மது முஸ்தபா ஸல்லல்லாஹு அலைஹிவசல்லம் அவர்களிடமிருந்ததால்தான், உலகினில் யாருக்குமே நடைபெறாத மிஃராஜ் - விண்ணுலகப் பயணம் நடைபெற முடிந்தது.

ஷெய்கு முஹ்யித்தீன் பின் அரபி (ரஹ்மத்துல்லாஹி அலைஹி) அவர்கள் கீழ்காணும் கருத்தை - உண்மையை வெளியிட்டார்கள்: - மா நபி முஹம்மது முஸ்தபா ஸல்லல்லாஹு அலைஹிவசல்லம் அவர்கள் மிஃராஜ் 34 தடவைகள் சென்று வந்துள்ளார்கள்.
அதில் ஒன்று மட்டுமே நுபுவ்வத் திலிருந்து 12 ம் ஆண்டு ரஜப் மாதம் பிறை 27 திங்கள் கிழமையில், தங்களின் முபாரக்கான பூத உடலுடன் மிஃராஜ் சென்று வந்தார்கள்.
மலக்குகளின் கோமான் ஹலரத் ஜிப்ரீல் அவர்கள், உலகப் பெருந்தலைவர் உம்மி நபி முஹம்மது முஸ்தபா ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களை, தாங்களின் 52ம் வயதில் தங்களின் பூத உடலுடன், புனித கஃபாவிலிருந்து ஜெரூசலத்திற்கும் - மஸ்ஜிதுல் அக்ஸாவிற்கும், பின் அங்கிருந்து விண்ணை நோக்கி ஏழு வானங்களுக்கும்; பின் சுவர்க்கம், நரகம் போன்ற ஒவ்வோர் உலகங்களுக்கும் அழைத்துச் சென்றார்கள் என்ற வரலாறு எல்லா தப்ஸீர்களிலும், ஹதீதுகளிலும் காணலாம்.
மாநபி முஹம்மது முஸ்தபா ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களுக்கு மலகீ தன்மை இல்லாதிருந்தால் ஒரு மலக்குடன் விண்ணகப் பயணம் மேற் கொள்ளவே முடியாது என்பது தெள்ளத் தெளிவான விஷயமாகும்.
மஸ்ஜிதுல் அக்ஸா - பள்ளிவாசலுக்குள் சென்றதும், மலக்குகள் ஆஜராகி நன்நபி முஹம்மது முஸ்தபா ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களுக்கு ஸலாம் கூறியும், சுபசோபனம் கூறி வாழ்த்தியும், தாங்களே முதலாவதாக படைக்கப்பட்டவர்கள், முதன்மையானவர்கள், தாங்களே இறுதி நபியாக திகழ்பவர்கள், தாங்கள்தான் அடியார்களுக்காக பரிந்து பேசும் ஷாபிஃ என்றெல்லாம் போற்றிப் புகழ்ந்து வரவேற்றார்கள்.
இதையடுத்து நன்நபி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களை நோக்கி ஜிப்ரீல் (அலைஹிஸ்ஸலாம்) அவர்கள் இவ்வாறு வேண்டுகிறார்கள்: இதோ சமூகம் வந்திருக்கும் தாங்களின் சகோதரர்களான நபிமார்களுக்கு இமாமாக நின்று இரண்டு ரக்அத்கள் தொழுகை நடத்துவீர்களாக !
அதன்படி முதலணியில் ரஸூல்மார்களும் பின்பு நான்கு அணிகளில் மற்ற நபிமார்களும் நிற்க முஹம்மது முஸ்தபா ஸல்லல்லாஹு அலைஹிவசல்லம் அவர்கள் தொழுகையை நிறைவேற்றினார்கள். -நூல்: ரூஹுல் பயான்

இவ்வாறு மலக்குகள் , நன்நபி முஹம்மது முஸ்தபா ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களைப் போற்றி புகழ்ந்து வரவேற்றதும், எல்லா நபிமார்களுக்கும் இமாமத் செய்ததும் தாஹா நபி ஸல்லல்லாஹு அலைஹிவசல்லம் அவர்களுக்குரிய தலைமைத்தனத்தையும் தனிப்பெரும் சிறப்பையும் எடுத்துக் காட்டுகிறது.
இவ்விருவர்களும் ஏழுவானங்களையும் கடந்து ஸித்ரதுல் முன்தஹா எனுமிடம் அடைகிறார்கள். அங்கு வேந்தர் நபி ஸல்லல்லாஹு அலைஹிவசல்லம் அவர்கள் வானவர்கள் அனைவருக்கும் இமாமாக நின்று தொழுகை நடத்தினார்கள்.
பூமியில் நபிமார்கள் அனைவருக்கும், வானில் வானவர்கள் அனைவருக்கும் இமாமாக நின்று தொழுகை நடத்தியிருப்பது, மண்ணிலும் விண்ணிலுமிருப்பவர்கள் அனைவரிலும் அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களே மேன்மைக்கும் சிறப்பிற்குமுரியவர்கள் என்பதை தெளிவாக்குகிறது.
ஸித்ரதுல் முன்தஹா என்பது ஏழுவானங்களுக்கும் அப்பால் சுவனபதியின் இறுதிப்பகுதியிலிருக்கும் பெரும் ஆலவிருட்சமாகும்.

பூமியில் வாழும் நல்லோர்கள், ஷுஹதாக்கள், இறை நேசச் செல்வர்கள், இவர்களின் நல்ல அமல்களை அமரர்கள் எடுத்துக்கொண்டு இங்குதான் வந்து சேர்வார்கள். மண்ணில் வாழும் மானிடர்களுக்குத் தேவையான சட்ட திட்டங்கள், தீர்ப்புகள், விதிவசக் கட்டளைகள், அருட் கொடைகள், ஆக்கல், அழித்தல் அனைத்து அறிக்கைகளும் இறை அர்ஷிலிருந்து இங்குதான் வெளியாக்கப்படும். அதன் பின்புதான் தாழுலகின்பால் அவரவர்களுக்கு வந்தடையும்.
நூல் : ரூஹுல்பயான்.

ஹலரத் ஜிப்ரீல் ( அலைஹிஸ்ஸலாம்) அவர்கள், இந்த ஸித்ரதுல் முன்தஹா உடன் தங்களின் பயணத்தை நிறுத்தி விடுகிறார்கள். அப்போது நன்நபி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் இப்படிப்பட்ட தனித்த இடத்தில் ஒரு நண்பர் நண்பரை விட்டும் விலகுகிறாரே! எனக் கேட்க
ஜிப்ரீல் (அலைஹிஸ்ஸலாம்) அவர்கள் அதற்கு இப்படி பதிலளிக்கிறார்கள்: - இவ்விடத்திற்கு மேல் உள்ளே பிரவேசிக்க எனக்கு அனுமதி கிடையாது . அது மட்டுமல்ல அதனை விட்டும் முன்னே ஒரு விரலளவும் கூட எடுத்துவைப்பேனானால் நான் கரிந்து நாசமாகிவிடுவேன் என. நூல்: ரூஹுல்பயான் , தப்ஸீர் நயீமி.
வல்லவனின் வஹியினை வாங்கி வருபவரும், மகீன், அமீன் என்ற சிறப்பு விருதுகள் பெற்றவரும், 600 இறக்கைகள் கொண்ட பெரும் படைப்புடையவரும், அவர்களது இறக்கைகளிலிருந்து ஒளிக்கதிர்கள் சிந்திக் கொண்டிருக்கும்

சிறப்புடையவரும், இவைகளுக்கெல்லாம் மேலாக வானவர்களுக்கெல்லாம் வேந்தர் என்ற சிறப்பை பெற்ற வருமான ஜிப்ரீல் (அலைஹிஸ்ஸலாம்) அவர்கள்...
இந்த ஸித்ரதுல் முன்தஹா விருட்சத்துடன் தமது பயணத்தை நிறுத்திக் கொண்டு அதற்கு மேல் ஒரு விரலளவும், முன்னால் காலடி எடுத்து வைக்க இயலாது என்று கூறியிருப்பதும், அதற்கப்பால் ஈருலக வேந்தர் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களை மட்டும், பரமனை பேட்டி காண, பரமானந்தப் பயணம் அனுப்பி வைத்திருப்பதும், பல உண்மைகளை நமக்கு உணர்த்திக் கொண்டிருக்கிறது.

மலகீ சக்தி ஒரு எல்லை வரைதான் செயல்படக் கூடியதும், கட்டுப்பாட்டிற்குள்ளடங்கியதுமாகும் என்றும், இன்ஸீ - மனித சக்தி எப்படி மண்ணகத்தில் பல கட்டுப்பாட்டிற்குள் அடங்கியதாக இருக்கிறதோ அது போல் விண்ணகத்தில் அம்மலக்குகளால் செல்லவோ, பார்க்கவோ, கேட்கவோ முடியாத இடங்களும், படைப்பினங்களுமிருக்கின்றன என்றும்,
இந்த இடங்களுக் கெல்லாம், ஹக்கீ தெய்வீக சக்தியால்தான் செல்லவும், பார்க்கவும், கேட்கவும் முடியுமென்றும், அத்தகைய ரகசிய ஸ்தலங்களுக்கெல்லாம், ஈருலக வேந்தர் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் தன்னந்தனியாகச் சென்று கண்டுகளித்து வந்திருக்கிறார்கள் என்பதால் அப்பெருமானார் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களின் ஹக்கீ - தெய்வீக சக்தியே மிகைத்து மிளிர்ந்து நிற்கின்றது என்றும் புலப்படுத்துகின்றன.

ஈருலக வேந்தர் நபி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் தங்களின் ஹக்கி சக்தியால் புறக்கண்களைக் கொண்டு காண வேண்டியவைகளை யெல்லாம் கண்டும், அடைய வேண்டியவைகளை எல்லாம் அடைந்தும், கடக்க வேண்டியவைகளை யெல்லாம் கடந்தும் அப்பால் கர்த்தனை காண முடுகுகிறார்கள். (தொடரும்)
தகவல் : வைத்தியர் மாலிக்

## இரு நபிமார்களின் அந்தஸ்துகள் 22



எந்த நபிக்கும் ஈடு இணையில்லாத அண்ணலம் பெருமானார் முஹம்மது முஸ்தபா ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் 2
அல்லாஹு தஆலா அருள் மறையில் அறிவித்துள்ளான்: - (ரஹ்மதுல்லில் ஆலமீன் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் ரப்புல் ஆலமீனான) அல்லாஹ்வை நெருங்கினார்கள். மேலும் முடுகினார்கள். அந்த முடுகுதல் ஒரு வில்லின் இரு முனைகளைப் போலவோ அதனை விடவும் நெருக்கமாகவோ சமீபித்திருந்தது. அல்லது மனிதனுடைய இரு கரங்களின் நெருக்கத்தைப்போல நெருங்கினார்கள். அந்தத் தனிச் சந்திப்பின் போது அல்லாஹு தஆலா அவர்களுக்கு அறிவிக்க வேண்டியவைகளை யெல்லாம் அறிவித்தான் ( குர்ஆன்: 53-8, 9, 10 )
அல்லாஹ் - ரப்புல் ஆலமீன் தனது தனிமை வாய்ந்த தர்பாரில் வைத்து ரஹ்மதுல்லில் ஆலமீன் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களுக்கு, உலகினில் யாருக்குமே அளித்திடாத தனிச் சந்திப்பையளித்து பெருமைப்படுத்தியிருப்பதையும்,

அந்நேரம் அவ்விருவருக்குமிடையே நடைபெற்ற
உரையாடல்களில் பரம இரகசியங்களுமிருந்தன என்பதையும், இந்தப் பேட்டி ஹபீப் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களுக்குரிய ஹக்கீ சக்தியின் உச்சகட்டமென்பதையும், இந்த வசனங்கள் கோடிட்டுக் காட்டுகின்றன.
அவ்விருவருக்குமிடையே தனிமையான பேட்டியின் போது நடந்த பேச்சு வார்த்தைகளில் ஒன்றில் இவ்விதம் அறிவித்துள்ளார்கள்: முன்னோர், பின்னோர் அனைவர்களுடைய அறிவு ஞானங்களையும் அல்லாஹ் எனக்கு அனந்தரமாக்கித் தந்தான். பல துறைகளில் கல்வி ஞானங்களையும் கற்றுத் தந்தான் .
அதில் ஒரு வகை, தனக்கும் தன்னிறைவனுக்கும் மட்டுமே தெரிந்த ரகசியமாகும். உலகில் வேறு யாருக்குமே வெளியாக்கப்படக் கூடாது. அந்த மறைமுக இரகசிய அறிவிப்பிற்குத் தகுந்தார் போல் தனக்கு மட்டும் அமல் செய்து கொள்ள வேண்டும். ஏனென்றால் அந்த ரகசியத்தை என்னல்லாத யாருமே தாங்கிக் கொள்ள மாட்டார்கள். அதனை சகித்துக் கொள்ள சக்திபெற மாட்டார்கள்.

உதாரணமாக கியாமத் நாள் எப்போது வரும் என்ற ஞானமும், லைலத்துல் கத்ரு மாதிரி, பிரார்த்தனைகள் ஒப்புக் கொள்ளப்படும் நேரம் பற்றிய ஞானமும் போன்ற மறைமுக ஞானங்கள் அனைத்தையும் நன்நபி ஸல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் மட்டுமே அறிந்தவர்களாவார்கள்.
இரண்டாம் வகை ஆத்மார்த்த மெஞ்ஞானமாகும். அதனை நான் விரும்பியவர்களுக்கு வழங்கிட உரிமை அளிக்கப்பட்டுள்ளேன். அந்த ஆத்மீக ஞானத்தைப் பெற்றுக் கொண்டு பணிபுரிவதற்கு தகுந்த பாத்திரம் யாரிடமிருக்கிறது என நான் அறிகிறேனோ அவர்களுக்கு மட்டுமே அதனை வாரி வழங்குவேன்.
ஹலரத் ஸையித்ததுனா அலி கரமல்லாஹு வஜ்ஹகு அவர்கள், ஹலரத் அபூஹுரைரா ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் போன்றோருக்கு மெஞ்ஞானங்களை வாரி வழங்கினார்கள்.

மூன்றாம் வகை அதனை உலகமக்கள் மனு, ஜின் இரு வர்க்கத்தார் அனைவருக்குமே பகிரங்கமாக போதிக்கும்படி கட்டளையிடப்பட்டுள்ளேன். இந்த மூன்றாம் வகை ஷரீயத் - மார்க்க அனுஷ்டான சட்டங்களாகும்.
அதனடிப் படையில் எழுந்ததுதான் ஹனபீ, ஷாபீ, மாலிகீ, ஹன்பலீ என்ற நான்கு மத்ஹப்களாகும். இந்த நான்கு மத்ஹப்களைச் சார்ந்தவர்களுக்கே அஹ்ல ஸுன்னத் வல் ஜமாஅத் என்று சொல்லப்படுகிறது.
இந்த மூன்று வகையான அறிவு ஞானத்திற்கும், ஆதாரங்களும், சம்பவங்களும் அதிகமதிகமிருக்கின்றன. விரிவையஞ்சி விடப்படுகின்றது.
மேலே கூறப்பட்ட ஆதாரங்களிலிருந்து ஈருலக வேந்தர் நபி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களிடம், இன்ஸீ, மலகீ, ஹக்கீ, இந்த மூன்று சக்திகளுமே செயல்பட்டுக் கொண்டேயிருந்தன என்பதை தெரிந்து கொள்கிறோம்.
"நான் உங்களைப் போன்று மனிதன்தான்" என்று இன்ஸீ இனத்தை மட்டும் கூறப்பட்டிருப்பதால் மற்ற இரண்டும் அவர்களிடத்தில் இல்லாமலாகிவிடாது.
உங்களுக்கு அல்லாஹு தஆலாவிடமிருந்து ஒளியும், தெளிவான வேதமும் வந்திருக்கின்றன. - அல்குர் ஆன்: 5-15 என இறைவன் கூறியிருக்கும் இந்த வசனத்தில் ஒளிவு என்பதன் கருத்து ஒரு பொருள் தானும் பிரகாசமானது, தன்னல்லாதவைகளையும் பிரகாசமாக்கக் கூடியது.

இத்தகைய பொருளை தாங்கிய ஒளி - நூர் என்பதை தாஹா நபி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களை குறித்து கூறியுள்ளான். அப்படியானால் தாஹா நபி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் தாமும் பிரகாசமானவர்கள். பிறரையும் பிரகாசமாக்குபவர்கள். அப்படிப்பட்டவர்கள், உங்களுக்கு வருகை தந்திருக்கிறார்கள் என்பதாக இந்த வசனத்தின் கருத்தாகும்.
இந்த வசனத்தில் 'நூர்' என நன்நபி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களை குறித்து அறிவிக்கப்பட்டிருப்பதால் நன்நபி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் ஒளிவே தவிர மனிதரல்ல என யாரும் வாதிட முடியாது.

திருமறை குர்ஆனில் , ஓரிடத்தில் ஈருலக வேந்தர் நபி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களைப் பற்றி அவர்கள் உங்களைப் போன்று மனிதர்தான் என்றும் மற்றோரிடத்தில், அவர்கள் 'நூர்' ஒளிமயம் என்றும் கூறப்பட்டிருப்பதால் இவ்விரண்டும் முரண்பட்டிருக்கிறது என யாரும் வாதிடமுடியாது.
பத்து ரூபாய் வைத்திருப்பவன் என்னிடம் ஒரு ரூபாயிருக்கிறது எனக் கூறினால் அது பொய்யாகிடாது. அதுபோல்தான் இந்த இருவசனங்களிலும் கூறப்பட்டிருப்பதுமாகும்.
இந்த வசனத்தில் கூறப்பட்டிருக்கும் 'நூர்' என்பதில், மலகீ ஹக்கீ இவ்விரண்டுமடங்கும், நன்நபி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களிடத்திலிருக்கும் அந்த மூன்றினங்களில் இன்ஸீ மனிதத்தன்மை மட்டுமே சடப்பொருளின் சக்தியாகும் மலகீயும், ஹக்கீயும் சடமற்ற சக்தியாகும். அப்படியானால் சடமற்ற சக்தியே அவர்களிடத்தில் மிகைத்து மெஜாரிட்டியாக இருக்கிறது என்பதை அறிகின்றோம்.
மாற்றுக் கொள்கையுடையவர்கள் நான் உங்களைப் போன்று மனிதன்தான் என வந்திருக்கும் வசனத்தை மட்டும் எடுத்துக் கொண்டு, முஹம்மது முஸ்தபா ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களின் மகிமைக்குப் பங்கம் கற்பிக்கிறார்கள்.

அதனால் 'நூர்' என முஹம்மது முஸ்தபா ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் குறித்து வந்திருக்கும் வசனத்தையும் அவ்வசனத்திற்கு ஒத்த ஹதீதுகளையும், அதனடிப் படையில் மிஃராஜ் பயணம் சென்று வந்த ஆதாரங்களையும் இவைகளையெல்லாம் மறுத்தவர்களாக ஆகிறார்கள்.
அந்தப் பேரொளி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் தோற்றத்தில் மட்டும் மனிதனுக்கு ஒப்பில்லாது முற்றிலும் ஒளிமயமாகவே இருந்திருப்பார்களானால் அந்தப் பேரொளியை யாராலும் பார்த்திருக்க முடியாது. பார்க்க சக்தியும் கிடையாது. 'மலகீ' சக்தி மட்டுமிருக்கும் அமரர்களில் யாரையுமே மலக்காகவே பிற எந்தத் தோற்றமில்லாமல், இதுவரை மனிதன் பார்த்ததே இல்லை. மலகீயும், ஹக்கீயும் சேர்ந்திருக்கும் பேரொளியை யார்தான் காணமுடியும்.

சுடரும் சூரியனின் பிம்பத்தை இந்தப் புறக்கண்ணால் பார்க்க முடியவில்லை என்றாலும் அதனை சற்று மேகம் மறைக்குமானால், அதனிடையாக சூரியனை பார்க்க முடிகிறது . அதுபோல்,
ஒளிமயமாம் ஒப்பற்ற நபிகள் நாயகம் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களை மனித தோற்றம் என்ற மேகம் மூடியிருப்பதால் அது அந்த ஒளியின் வேகத்தை சற்று மறைக்க அதனூடே அப் பேரொளி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களைப் பார்க்க முடிகிறது. பார்க்க வகைப்படுத்தி படைத்தவன் தந்திருக்கிறான்.
ஞானவான்கள் இப்படி ஒரு கருத்தை தருகிறார்கள்: ஒளியின்றி மனிதனின் கண்ணொளியால் மட்டும் எப்பொருளையும் பார்க்க முடியாது என்பது எவ்வளவு அப்பட்டமான உண்மையோ அதுபோல் அந்த நூர் முஹம்மதிய்யாவின் பேரொளியில்லாமல் இறைநேசரின் அகக்கண்களால் மட்டும் எந்த இரகசியங்களையும் பார்க்கமுடியாது.

மலகீ சக்தி மட்டும் பெற்றிருக்கும் இஸ்ராயீல் போன்ற மலக்குகள் ஜீவராசிகளின் ரூஹ்களை கைப்பற்ற தங்கு தடையின்றி இப்பூவுலகினில், எங்கும் சென்றுவர ஆற்றல் பெற்றிருக்கிறார்கள் என்றால்...
அந்த மலகீ சக்தியும் அதனை விட வீரியம் செறிந்த ஹக்கீ - தெய்வீக சக்தியும் பெற்றிருக்கும் பேரொளி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் இப்பாருலகில் பரந்து வாழும் தங்களின் உம்மத்களைக் காண, சந்தித்து ஆணையிட வல்லமையுள்ளவர்கள் என்பதில் சற்றும் ஐயமில்லை. ஏனென்றால் மலக்குகளால் செல்லமுடியாத ஸித்ரதுல் முன்தஹாவிற்கப்பாலும் சென்று வந்தவர்களாயிற்றே.
மனித-இன்ஸீ சக்தியால் உலகோர்க்கு வழிகாட்டியாக - முன்மாதிரியாக வாழ்ந்து காட்டினார்கள். ஹக்கீ தெய்வீக சக்தியால் வஹியினைப் பெற்றும், மிஃராஜில் ரப்பு உடன் உரையாடியும் வந்தார்கள்.
மலகீ சக்தியால் உம்மத்களின் அமல்களெல்லாம் அவர்களின் முன் சமர்ப்பிக்கப்படுவதும் இறைவனால் அருளப்படும் அனைத்து பாக்கியங்களையும் உம்மத்துகளுக்கு பங்கீடு செய்வதுமாக இருக்கிறார்கள். இம்மூன்று சக்திகளும் சதா அவர்களில் செயல்பட்டுக்கொண்டேயிருக்கின்றன.
முற்றிலும் பஷரீ-இன்ஸீ சுத்த சடப்பொருளாக இருக்கும் இந்த மனிதன், இவனை விட்டும் முற்றிலும் வேறுபட்ட இனமாக இருக்கும், மலகீயையும், ஹக்கீயையும், இவ்விரண்டின் உண்மை நிலை, அசலை புரிந்து கொள்ள சக்தியற்றவனாகவே இருக்கிறான்.எப்படி அவனால் அறிந்து கொள்ள முடியும்.
மார்க்க அனுஷ்டானத்தில் மனிதனுக்கு நிகராக இருக்கும் ஜின்வர்க்கத்தினரைக் கூட பார்க்க முடியாதவன் மனிதன் அந்த ஜின்வர்க்கமோ நெருப்பினால் படைக்கப் பட்டவைகள். அந்நெருப்பு மனிதனின் நான்கு மூலப் பொருள்களில் ஒன்றாகும்.

ஆக மனிதனுடைய மூலப் பொருள்களில் ஒன்றாக அங்கம் வகிக்கும் நெருப்பினால் படைக்கப்பட்டிருக்கும் இனத்தைக் கூட மனிதன் தெரிந்துகொள்ள முடியவில்லையெனும் போது, இந்த நான்கு பூதங்களை விட்டும் முற்றிலும் வேறுபட்ட நூர் ஒளியினால், மலகீ, ஹக்கீயைப் பற்றி எப்படி தெரிந்து கொள்ள முடியும்.
புரிந்துகொள்ளவே முடியாது என்ற கருத்தை புண்ணிய புர்தாவில் இப்படி பாடியுள்ளார்கள்.
" அஃயல் வரா பஹ்மு மஃனாஹுப லைஸ யுரா லில் குர்பி வல் புஃதி பீஹி ஙைர முன் பஹ்மி"
ஒளிக்கடலாம் உத்தமர் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களின் உண்மை நிலையை அறிந்து கொள்ள யாருக்கும் முடியாமலாகி விட்டது.

அவர்களை விட்டும் தொலைவிருப்பவருக்கும் முடியவில்லை. அடுத்திருப்பவருக்கும் முடியவில்லை.
கஷ் ஷம்ஸி தல் ஹரு லில் அய்னைனி மின் புஃதின் ஸரதன் வ துகில்லுத்தர்ப மின் அமமி.
சூரியனை தூரத்திலிருந்து பார்த்தால் அது சிறியதாக தெரியும். அடுத்திருந்து பார்த்தால் கூச்சத்தால் கண்களை திறக்க முடியாமலாகிவிடும். ஆக எந்த வகையிலும் அதன் முழுமையான உருவத்தைப் பார்க்க முடியாது.
வ கைப யுத்ரிகு பித்துன்யா ஹகீகதஹு கவ்முன் நியாமுன் தஸல்லவ் அன்ஹுபில்ஹுலுமி.
எவ்வகையில், இவ்வுலகில் வைத்து அப்பேரொளி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களின் எதார்த்த உண்மை நிலையை அடைந்து கொள்ள முடியும்.
இவர்களோ, பேரொளி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களைக் கனவிலாவது கண்டு தம்மை சமாதானம் செய்து கொள்பவர்கள்.
அதைப்போல் ஒளிக்கடலாம் உத்தமர் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களின் முழுமையான ஆற்றல் வல்லமைகளை அறிந்து கொள்ள உலகில் யாராலும் முடியாது.
நன்நபி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் இப்படி அறிவித்தார்கள்: அபூபக்கரே! என்னுடைய எதார்த்த உண்மை நிலையை அல்லாஹ்வைத் தவிர வேறுயாரும் அறியமாட்டார்கள். -நூல்: மதாலியுல் மஸர்ராத்

நபிமார்களுக்குப் பின் அபூபக்கரே (ரலியல்லாஹு அன்ஹு) மேலானவர்கள் என்றும் உலக முஃமின்களின் மொத்த ஈமானைவிட அவர்களின் ஈமானே வலுவானதாகும் என்றும் சிறப்பிக்கப்பட்டவர்கள்.
அத்தகைய சிறப்பிற்குரியவர் கூட அருள் ஜோதி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களின் தத்துவ சக்திகளை புரிந்து கொள்ள முடியவில்லை எனும்போது எத்தனையோ கீழ்மட்டத்திலிருப்பவர்களுக்கு அவர்களின் ஆற்றலை புரிந்துகொள்ள எங்ஙனம் சாத்தியமாகும்.
அவ்வாறு தெரிந்துகொள்ள அவசியமில்லையென்றாலும் அப்பேரொளி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களிடத்தில், மற்றவர்களிடமில்லாத ஏதோ அபாரமான சக்தியிலிருந்து இயங்கிக் கொண்டிருக்கிறது என்றாவது புரிந்து கொள்ளவேண்டாமா?

இவைகளையெல்லாம் உதாசீனம் செய்துவிட்டு, அப்பேரொளி (ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம்) அவர்கள் நம்மை போன்ற மனிதர் தான் வேறு எந்த தனி விஷேசமும் இல்லை என்றும், அவர்கள் இறந்து, உணர்வுகளறுந்து மாய்ந்து விட்டதே. அவர்களை யா ரஸூலல்லாஹ் என்று ஏன் அழைக்க வேண்டும் உதவி தேடவேண்டும் என்றும் அது பலனற்ற வேலை என்றும்,
அது மட்டுமல்ல அது அல்லாஹ்விற்கே இணைவைத்து வணங்கும் ஷிர்க்காகும் என்றும் உளறித் திரியும் உன்மத்தர்களை நாம் என்னவென்று சொல்வது. இத்தகையவர்களுக்கு உத்தமர் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களின் உயர்ந்த அந்தஸ்துக்களை - பெருமைகளை - அகமியங்களை விளக்க முற்படுவது ஒன்றாம் படிவபாலகனுக்குப் பாடங்கள் நடத்துவது போலாகும்.
ஸல்லல்லாஹு அலா முஹம்மத்

ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம்

ஸல்லல்லாஹு அலா முஹம்மத்

ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம்

ஸல்லல்லாஹு அலா முஹம்மத்

யாரப்பி ஸல்லி அலைஹிவஸல்லம்

நூல்: தாஹா நபி ﷺ அவர்களின் தனிப்பெரும் சிறப்புகள்.#இன்ஸீ, #மலகி, #ஹக்கீ என்ற முப்பெரும் சக்திகளால் திகழ்பவர்கள் அண்ணலம் பெருமானார் முஹம்மது முஸ்தபா ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம்.
தகவல் : வைத்தியர் மாலிக்

## இரு நபிமார்களின் அந்தஸ்துகள் 23




சங்கையான நபி ஈஸா (அலை ) அவர்களின் புனித வாழ்வு பற்றி திருக்குர்ஆன்
யஹோஷுவா என்பதே ஈஸா என்பதன் மூலம் என்று கூறப்படுகிறது. இதன் பொருள் யஹோவா(கடவுள்) காப்பாற்றுகிறார் என்பதாகும். பைளாவி இமாமோ இது ஹீப்ருமொழி சொல் என கூறுகிறார்கள். ஆனால் ஏனையோர் இது வெள்ளை என்று பொருள்படும் ஈஸ் என்னும் அரபிச் சொல்லிலிருந்து தோன்றியது என்று சொல்கின்றனர்.

ஈஸா மஸீஹ் எனும் பெயர் ஈஸா அலைஹிஸ்ஸலாம் அவர்களுக்கு மட்டுமே சொல்லப்படுகிறது.
கிரேக்கமொழியில் ‘ஜீஜஸ் கிறைஸ்ட்’என்று ஆகி தமிழில் ஏசு கிறிஸ்து என்று மருவியுள்ளது. மஸஹ் என்றால் தடவுதல் என்று பொருள்படும். இவர்கள் நோயாளிகளைத் தம் கைகளால் தடவி அவர்களின் நோயை நீக்கியதால் மஸீஹ் என்னும் பட்டம் ஏற்பட்டதென்று சொல்லுவார்கள். அதுவே கிரேக்க மொழியில் கிரைஸ்ட் ஆகியிருக்கிறது.
ஹழ்ரத் மர்யம் அலைஹிஸ்ஸலாம் அவர்களுக்கு வயது 20இருக்கும்போது தங்களது சிற்றன்னை நபி ஜகரிய்யா அலைஹிஸ்ஸலாம் அவர்களின் மனைவி ஈஷாஉ அவர்கள் வீட்டிற்குச் சென்று ஒரு மறைவான இடத்திற்குச் சென்று குளிப்பதற்காக உடைகளை மாற்றி உடுத்திக் கொண்டிருக்கும்போது நடைபெற்ற சம்பவத்தை பற்றி அல்லாஹ் தனது திருமையில் கூறுகிறான்.

وَاذْكُرْ فِي الْكِتَابِ مَرْيَمَ إِذِ انتَبَذَتْ مِنْ أَهْلِهَا مَكَانًا شَرْقِيًّا. فَاتَّخَذَتْ مِن دُونِهِمْ حِجَابًا فَأَرْسَلْنَا إِلَيْهَا رُوحَنَا فَتَمَثَّلَ لَهَا بَشَرًا سَوِيًّا . قَالَتْ إِنِّي أَعُوذُ بِالرَّحْمَٰنِ مِنكَ إِن كُنتَ تَقِيًّا. قَالَ إِنَّمَا أَنَا رَسُولُ رَبِّكِ لِأَهَبَ لَكِ
غُلَامًا زَكِيًّا .قَالَتْ أَنَّىٰ يَكُونُ لِي غُلَامٌ وَلَمْ يَمْسَسْنِي بَشَرٌ وَلَمْ أَكُ بَغِيًّا . قَالَ كَذَٰلِكِ قَالَ رَبُّكِ هُوَ عَلَيَّ هَيِّنٌ ۖ وَلِنَجْعَلَهُ آيَةً لِّلنَّاسِ وَرَحْمَةً مِّنَّا ۚ وَكَانَ أَمْرًا مَّقْضِيًّا. فَحَمَلَتْهُ فَانتَبَذَتْ بِهِ مَكَانًا قَصِيًّا
இவ்வேதத்தில் (ஈஸா நபியின் தாயாராகிய) மர்;யமைப் பற்றியும் (சிறிது) கூறும். அவர் தம் குடும்பத்தினரை விட்டு விலகி,கிழக்குத் திசையிலுள்ள (தம்) அறைக்குச் சென்று, (குளிப்பதற்காகத்) தம் ஜனங்களின் முன் திரையிட்டுக் கொண்ட சமயத்தில், (ஜிப்ரயீல் என்னும்) தம்முடைய தூதரை அவரிடம் அனுப்பி வைத்தோம். அவர் சரியான ஒரு மனிதருடைய கோலத்தில் அவர் முன் தோன்றினார்.(மர்யம் அவரைக் கண்டதும்) ‘நிச்சயமாக நான், உம்மிடமிருந்து என்னை இரட்சித்துக் கொள்ளுமாறு ரஹ்மானிடம் பிரார்த்திக்கிறேன். நீர் நன்னடத்தையுடையவராக இருந்தால்... (இங்கிருந்து அப்புறப்பட்டுவிடும்)’ என்றார்.
அதற்கவர், ‘பரிசுத்தமான ஒரு மகனை உமக்களி(க்கப்படும் என்பதை உமக்கு அறிவி)ப்பதற்காக நான் உம் இறைவனால் அனுப்பப் பெற்ற (மலக்காகிய) ஒரு தூதன்தான் என்றார்.
அறத்கவர் ‘எனக்கு எவ்வாறு சந்ததி ஏற்படும்? எம்மனிதனும் என்னைத் தீண்டியதில்லையே’ என்று கூறினார்.
அதற்கவர், ‘அவ்வாறே (நடைபெறும்) அது எனக்கு எளிது. அவரை மனிதர்களுக்கு ஒரு திருஷ்டாந்தமாகவும்,நம்முடைய அருளாகவும் நாம் செய்வோம். இது முடிவாகக் கற்பனை செய்யப்பட்டு விட்ட ஒரு விஷயம்’ என்றுஉமதிறைவன் கூறுகிறான்’ என்றார். பின்னர் (தானாகவே) மர்யமுக்குக் கர்ப்பமேற்பட்டுக் கர்ப்பத்துடன் (அவர் இருந்த இடத்திலிருந்தே வெளியேறித்) தூரத்திலுள்ள ஓர் இடத்தைச் சென்றடைந்தார்.’
– அல்-குர்ஆன் 19:16-22

இச்சம்பவத்தை அல்லாஹ் திருக்குர்ஆனில் மற்றுமோர் இடத்தில்;
وَيُكَلِّمُ النَّاسَ فِي الْمَهْدِ وَكَهْلًا وَمِنَ الصَّالِحِينَ . قَالَتْ رَبِّ أَنَّىٰ يَكُونُ لِي وَلَدٌ وَلَمْ . إِذْ قَالَتِ الْمَلَائِكَةُ يَا مَرْيَمُ إِنَّ اللَّهَ يُبَشِّرُكِ بِكَلِمَةٍ مِّنْهُ اسْمُهُ الْمَسِيحُ عِيسَى ابْنُ مَرْيَمَ وَجِيهًا فِي الدُّنْيَا وَالْآخِرَةِ وَمِنَ الْمُقَرَّبِينَ
يَمْسَسْنِي بَشَرٌ ۖ قَالَ كَذَٰلِكِ اللَّهُ يَخْلُقُ مَا يَشَاءُ ۚ إِذَا قَضَىٰ أَمْرًا فَإِنَّمَا يَقُولُ لَهُ كُن فَيَكُونُ
‘(மேலும் மர்யமை நோக்கி) மலக்குகள் (ஆகுக! என்ற) ஒரு சொல்லைக் கொண்டு உனக்கு (ஒரு மகவை அளிக்க) நன்மாரயங் கூறுகின்றான். அதன் பெயர், ‘மர்யமுடைய மகன் ஈஸா மஸீஹ்’ என்பதாகும். இவர் இம்மை-மறுமையில் மிக்க கம்பீரமானவராகவும், (இறைவனுக்கு) மிக்க நெருங்கியவர்களில் ஒருவராகவும் இருப்பார்’ என்று கூறினார்.
அன்றி, ‘அவர் தொட்டிலில் (குழந்தையாக) இருக்கும்போது (தம் தாயின் பரிசுத்தத் தன்மையைப் பற்றி)யும், (தம் நபித்துவத்தைப் பற்றி) வாலிபத்திலும் மனிதர்களுடன் பேசுவார். தவிர நல்லொழுக்கமுடையோரில் உள்ளவராகவுமிருப்பார்'(என்றும் கூறினார்கள்)
(அதற்கு மர்யம் தம் இறைவனை நோக்கி) ‘என் இறைவனே! எந்த ஒரு மனிதரும் என்னைத் தீண்டாதிருக்கும்போது,எனக்கு எவ்வாறு சந்ததி ஏற்பட்டுவிடும்’ என்று கூறினார். (அதற்கு) ‘இவ்வாறே,அல்லாஹ் தான் நாடியதைப் படைக்கிறான். அவன் ஒரு பொருளை(ப் படைக்க) நாடினால்,அதனை ‘ஆகுக’ என அவன் கூறுவதுதான் (தாமதம்) உடனே அது ஆகிவிடும்’ என்று கூறினான்.’
-அல்-குர்ஆன் 3: 45-47

அதன்பின் மர்யம் அலைஹிஸ்ஸலாம் அவர்களின் சட்டையில் ஜிப்ரயீல் அலைஹிஸ்ஸலாம் அவர்கள் ஊதினார்கள். உடனே கர்ப்பம் உண்டாயிற்று. இவ்வாறு அவர் இறைவனுடைய ஆவியை ஊதி இவர்கள் பிறந்ததினால் ரூஹுல்லாஹ்’ என்னும் சிறப்புப் பெயரால் அழைக்கப்பட்டனர்.
சில காலத்திற்குப் பின் மர்யம் அலைஹிஸ்ஸலாம் அவர்களின் உடம்பில் மாறுதல் உண்டானது. கர்ப்பிணிக்குரிய அடையாளங்கள் தென்பட்டன. இதனைக் கண்ட ஜகரிய்யா நபி அலைஹிஸ்ஸலாம் அவர்கள் பெரும் கவலை கொண்டார்கள். இதனை தமது மனைவியிடம் மெதுவாக சொன்னார்கள்.

சிறிது நேர யோசனைக்குப் பிறகு ஜகரிய்யா நபி அவர்களின் மனைவியார்,”நல்ல செய்தியைச் சொன்னீர்கள். இதற்காக ஏன் வருத்தப்பட வேண்டும்?”என்ற கேட்டார்கள்.
ஜகரிய்யா அலைஹிஸ்ஸலாம் அவர்கள் நான் எவ்வளவு பெரிய அவமானச் செய்தியை உன்னிடம் கூறுகிறேன். நீ அதிர்ச்சியடைவாய் என்று பார்த்தேன். ஆனால் நீ ஆனந்தப்படுகிறாயே! என்று கூறினார்கள்.
உடனே ஈசாஉ அவர்கள், ‘தகப்பன் இல்லாமல் ஒரு நபி பிறப்பார். அவர் மக்களுக்கு நேர்வழி காட்டுவதோடு, அவர்களின் பிணிகளையும் நீக்குவார். மரித்தவர்களை உயிர்ப்பிப்பார். அவரால் மற்றும் பல அற்புதங்களும் நிகழும் என்று நீங்கள் தவ்ராத் வேதத்தில் படித்ததில்லையா? என்றும், அந்த நபியின் கரு இதுவாகத்தான் இருக்கும் என்றும் என் மனசாட்சி கூறுகிறது. எனவே மர்யமை என்னிடம் அழைத்து வாருங்கள் என்று கூறினார்கள்.

மர்யம் அலைஹிஸ்ஸலாம் அவர்கள் அழைத்து வரப்பட்டதும்,நீ ரெம்ப அதிர்ஷ்டசாலிதான். உன் வயிற்றில் உள்ள குழந்தை பிறந்து பல்வேறு அற்புதங்களை செய்யப் போகிறது என்று சொன்னார்கள்.
மர்யம் அலைஹிஸ்ஸலாம் அவர்களோ இது உண்மைதானா? என்று கேட்டார்கள். ஆம் அவற்றையெல்லாம் நான் தவ்றாத்தில் படித்துள்ளேன் என்று சொன்னார்கள். இந்த குழந்தை அந்த நபிதான் என்று எப்படி நம்புவது? அதற்கு ஆதாரம் என்ன? என்று கேட்டார்கள்.

அல்லாஹ்வின் மீது ஆணையிட்டுக் கூறுகிறேன். உனது வயிற்றிலிருக்கும் குழந்தை அந்தநபியேதான். இதற்குரிய இப்பொழுதைய ஆதாரம் என்னவென்றால்,நான் உன்னைச் சந்தித்ததுமே எனது வயிற்றிலிருக்கும் குழந்தை உனது வயிற்றிலிருக்கும் குழந்தைக்குத் தலை தாழ்த்துவது போன்ற உணர்வு எனக்கு ஏற்பட்டது' என்றார் ஈஷாஉ.
அச்சமயத்தில் நபி யஹ்யா அலைஹிஸ்ஸலாம் அவர்கள் ஈசாஉ அவர்களின் கர்ப்பத்தில் இருந்தார்கள்.
அதேசமயம் ஹழ்ரத் மர்யம் அலைஹிஸ்ஸலாம் அவர்களும், 'அச்சமயத்தில் எனது கருவிலிருக்கும் குழந்தையும் அசைவதை நான் உணர்ந்தேன்;' என்றார்கள்.
மர்யம் அலைஹிஸ்ஸலாம் அவர்களின் சிற்றன்னையின் மகன் ஒருவர் யூசுஃபுந் நஜ்ஜார் என்பவர் ஒருவர் இருந்தார். அவர் தச்சுச்தொழில் செய்து கொண்டு,மீதியுள்ள நேரத்தில் இறைவனை வணங்கி வந்தார். அவருக்கு இச்செய்தி கிடைத்ததும்,மர்யம் அலைஹிஸ்ஸலாம் அவர்களி;டம் அவர்கள் கர்ப்பமான விசயத்தை பற்றி கேட்டார்.
அதற்கு மர்யம் அலைஹிஸ்ஸலாம் அவர்கள் தான் சுத்தமானவள் என்றும்,இது அல்லாஹ்வின் நாட்டம் என்றும் கூறினாள்.
ஹழ்ரத் மர்யம் அலைஹிஸ்ஸலாம் அவர்களுக்கு பிரவச காலம் நெருங்கியது. அனைவரும் ஆலோசனை செய்து,யூசுஃப் நஜ்ஜார் உடன் வெளியூருக்கு அனுப்பி வைத்தார்கள். பைத்துல் லஹ்ம் என்னும் இடத்தை அடைந்ததும் பிரவச வேதனை ஏற்பட்டு அங்கு ஈஸா அலைஹிஸ்ஸலாம் அவர்களை ஈன்றெடுத்தனர்.
கவலை மிகுதியால் மர்யம் அலைஹிஸ்ஸலாம் அவர்கள் அழ,இறைவன் அசரீரி மூலமாக ஆறுதல் கூறி அங்கு நின்று கொண்டிருந்த ஒரு பட்டுப்போன பேரீத்தம் பழ மரத்தின் கிளைகளைப் பிடித்து உலுக்குமாறு கூற, அவர்களும் அவ்விதமே செய்ய,கனிகள் உதிர்ந்தன. அருகில் நீருற்றும் உருவாயிற்று. பேரீத்;தங்கனிகளை உண்டும்,அங்கிருந்த நீரை அருந்தியும் வாழ்ந்து வந்தனர்.
அவர்கள் பிறந்தத எட்டாம் நாள் அவர்களுக்கு விருத்தசேதனம் (கத்னா) செய்து 'ஈஸாஹ்' என்று பெயர் வைக்கப்பட்டதாகவும் ஒரு குறிப்பில் காணப்படுகிறது.

மர்யம் அலைஹிஸ்ஸலாம் அவர்கள் அந்த குழந்தையை எடுத்துக் கொண்டு யூசுப் நஜ்ஜாருடன் தங்கள் வீடு வந்து சேர்ந்ததும் உறவினர்கள்,ஜனங்கள்,எல்லோரும் ஒன்று திரண்டு படையெடுத்து வந்தது அந்த குழந்தையைப் பற்றி கேள்விகள் கேட்க ஆரம்பித்தனர்.
இந்த குழந்தை எப்படிப் பிறந்தது? இதற்கு தந்தை யார்? நல்ல குடும்பத்தில் பிறந்த நீ இப்படி செய்வது உனக்கு வெட்கமில்லையா? போன்ற அடுக்கடுக்கான கேள்விகளைத் தொடுத்தனர்.
இச்சமயம் மர்யம் அலைஹிஸ்ஸலாம் அவர்கள் குழந்தைக்கு பாலூட்டிக் கொண்டிருந்தார்கள். அவர்கள் இந்தக் கேள்வவிகளுக்கெல்லாம் எவ்விதப் பதிலும் கொடுக்காமல் குழந்தையை ஜாடை காட்டி குழந்தையிடம் கேளுங்கள் என்று சைகை மூலம் அறிவித்தார்கள்.
அச்சமயம் ஹழ்ரத் மர்யம் அலைஹிஸ்ஸலாம் அவர்கள் அல்லாஹ்வின் உத்திரவுபடி நோன்பு நோற்றிருந்தார்;கள். அக்காலத்தில் நோன்பு நோற்பவர்கள் பிறருடன் பேசுவதையும் தடைபடுத்திக் கொண்டிருந்தனர்.
தங்களுடைய கேள்விகளுக்கு பதில் கூறாது குழந்தையிடம் கேட்கும்படி ஜாடை காட்டுகிறார்களே! என்று குழந்தை எப்படி பேசும்? நாங்கள் பைத்தியக்காரர்களா? என்று அகங்காரத்துடன் வந்திருந்தவர்கள் கடும்கோபம் கொண்டனர்.
உடனே பால்குடித்துக் கொண்டிருந்த அக்குழந்தைத பால் குடிப்பதை நிறுத்திவிட்டு அக்கூட்டத்தினரைப் பார்த்து, 'நிச்சயமாக நான் அல்லாஹ்வின் அடியானாக இருக்கிறேன். அல்லாஹ் எனக்கு இன்ஜீல் என்ற வேதத்தை அருளி,என்னைத் தனது நபியாகவும் ஆக்குவான். நான் எங்கிருந்த போதிலும்,என் மீது பேரருள் புரிந்து கொண்டே இருப்பான்.

நான் இவ்வுலககில் இருந்து வரும்வரை,தொழுது கொண்டும்,ஏழை வரியைக் கொடுத்துக் கொண்டும் வருமாறு என்னை ஏவியுள்ளான். எனது தாய்க்கு நன்றி செலுத்தி வருமாறும் கூறியுள்ளான். என்னை அவன், என் வாழ்நாள் முழுவதும் வழி தவறச் செய்ய மாட்டான். என்மீது என்றென்றும் அவனது சாந்தியும்,சமாதானமும் நிலைத்து நிற்கும்' என்று பேசினார்கள். அப்போது அவர்களது வயது நாற்பது நாட்கள்தான்.
இந்தச் சம்பவங்களை அல்லாஹ் தனது திருமறையில்:
فَحَمَلَتْهُ فَانتَبَذَتْ بِهِ مَكَانًا قَصِيًّا
அப்பால்,மர்யம் ஈஸாவை கருக்கொண்டார்; பின்னர் கர்ப்பத்துடன் தொலைவிலுள்ள ஓரிடத்தை சென்றடைந்தார்.
فَأَجَاءَهَا الْمَخَاضُ إِلَىٰ جِذْعِ النَّخْلَةِ قَالَتْ يَا لَيْتَنِي مِتُّ قَبْلَ هَٰذَا وَكُنتُ نَسْيًا مَّنسِيًّا
பின்பு (அவருக்கு ஏற்பட்ட) பிரசவ வேதனை அவரை ஒரு பேரீத்த மரத்தின்பால் கொண்டு வந்தது: "இதற்கு முன்பே நான் இறந்து,முற்றிலு மறிக்கப் பட்டவளாகி இருக்கக் கூடாதா"என்று கூறி(அரற்றி)னார்.

فَنَادَاهَا مِن تَحْتِهَا أَلَّا تَحْزَنِي قَدْ جَعَلَ رَبُّكِ تَحْتَكِ سَرِيًّا

(அப்போது ஜிப்ரீல்) அவருக்குக் கீழிருந்து: "(மர்யமே!) கவலைப்படாதீர்கள்! உம்முடைய இறைவன் நிச்சயமாக உமக்கு கீழாலேயே ஒரு சின்ன ஆற்றை உண்டாக்கியிருக்கின்றான்"என்று அழைத்து கூறினார்.

وَهُزِّي إِلَيْكِ بِجِذْعِ النَّخْلَةِ تُسَاقِطْ عَلَيْكِ رُطَبًا جَنِيًّا

"இன்னும், இந்த பேரீச்ச மரத்தின் கிளையைப் பிடித்து உம் அருகில் இழுத்துக் குலுக்கும்; (கொய்வதற்குப்) பக்குவமான பழங்களை உம் மீது அது உதிர்க்கும்.

فَكُلِي وَاشْرَبِي وَقَرِّي عَيْنًا ۖ فَإِمَّا تَرَيِنَّ مِنَ الْبَشَرِ أَحَدًا فَقُولِي إِنِّي نَذَرْتُ لِلرَّحْمَٰنِ صَوْمًا فَلَنْ أُكَلِّمَ الْيَوْمَ إِنسِيًّا

"ஆகவே, (அவற்றை) உண்டு, (ஆற்று நீரைப்) பருகி கண் குளிர்ந்து இருப்பீராக! பின்னர் எந்த மனிதரையேனும் நீர் பார்க்க நேரிட்டால்,"மெய்யாகவே அர்ரஹ்மானுக்காக நான் நோன்பிருப்பதாக நேர்ந்திருக்கின்றேன்; ஆதலின் இன்றைய தினம் எந்த மனிதருடனும் பேச மாட்டேன்"என்று கூறும்.

فَأَتَتْ بِهِ قَوْمَهَا تَحْمِلُهُ ۖ قَالُوا يَا مَرْيَمُ لَقَدْ جِئْتِ شَيْئًا فَرِيًّا

பின்னர் (மர்யம்) அக்குழந்தையைச் சுமந்து கொண்டு தம் சமூகத்தாரிடம் வந்தார்; அவர்கள் கூறினார்கள்: "மர்யமே! நிச்சயமாக நீர் ஒரு விபரீதமான பொருளைக் கொண்டு வந்திருக்கிறீர்!"

يَا أُخْتَ هَارُونَ مَا كَانَ أَبُوكِ امْرَأَ سَوْءٍ وَمَا كَانَتْ أُمُّكِ بَغِيًّا

"ஹாரூனின் சகோதரியே! உம் தந்தை கெட்ட மனிதராக இருக்கவில்லை; உம் தாயாரும் நடத்தை பிசகியவராக இருக்கவில்லை" (என்று பழித்துக் கூறினார்கள்).

فَأَشَارَتْ إِلَيْهِ ۖ قَالُوا كَيْفَ نُكَلِّمُ مَن كَانَ فِي الْمَهْدِ صَبِيًّا

(ஆனால்,தம் குழந்தையிடமே கேட்கும் படி) அதன் பால் சுட்டிக் காட்டினார்; "நாங்கள் தொட்டிலில் இருக்கும் குழந்தையுடன் எப்படிப் பேசுவோம்?"என்று கூறினார்கள்.

قَالَ إِنِّي عَبْدُ اللَّهِ آتَانِيَ الْكِتَابَ وَجَعَلَنِي نَبِيًّا

"நிச்சயமாக நான் அல்லாஹ்வுடைய அடியானாக இருக்கின்றேன்; அவன் எனக்கு வேதத்தைக் கொடுத்திருக்கின்றான்; இன்னும்,என்னை நபியாக ஆக்கியிருக்கின்றான்.

وَجَعَلَنِي مُبَارَكًا أَيْنَ مَا كُنتُ وَأَوْصَانِي بِالصَّلَاةِ وَالزَّكَاةِ مَا دُمْتُ حَيًّا

"இன்னும்,நான் எங்கிருந்தாலும்,அவன் என்னை முபாரக்கானவனாக (நற்பாக்கியமுடையவனாக) ஆக்கியிருக்கின்றான்; மேலும்,நான் உயிருடன் இருக்கும் காலமெல்லாம் தொழுகையையும்,ஜகாத்தையும் (நிறை வேற்ற) எனக்கு வஸீய்யத் செய்து (கட்டளையிட்டு) இருக்கின்றான்.

وَبَرًّا بِوَالِدَتِي وَلَمْ يَجْعَلْنِي جَبَّارًا شَقِيًّا

"என் தாயாருக்கு நன்றி செய்பவனாக (என்னை ஏவியிருக்கின்றான்;) நற்பேறு கெட்ட பெருமைக்காரனாக என்னை அவன் ஆக்கவில்லை.

وَالسَّلَامُ عَلَيَّ يَوْمَ وُلِدتُّ وَيَوْمَ أَمُوتُ وَيَوْمَ أُبْعَثُ حَيًّا

. "இன்னும்,நான் பிறந்த நாளிலும்,நான் இறக்கும் நாளிலும் (மறுமையில்) நான் உயிர் பெற்று எழும் நாளிலும் என் மீது சாந்தி நிலைத்திருக்கும்"என்று (அக்குழந்தை) கூறியது.

ذَٰلِكَ عِيسَى ابْنُ مَرْيَمَ ۚ قَوْلَ الْحَقِّ الَّذِي فِيهِ يَمْتَرُونَ

இ(த்தகைய)வர் தாம் மர்யமுடைய புதல்வர் ஈஸா (ஆவார்); எதைக் குறித்து அவர்கள் சந்தேகம் கொண்டிருக்கிறார்களோ அதுபற்றிய உண்மையான சொல் (இதுவே ஆகும்).

-அல்-குர்ஆன் 19:23-34

பிறந்து நாற்பதே நாள் ஆன குழந்தை பேசியதும் வந்தவர்களிடையே ஒரே குழப்பம் ஏற்பட்டது.
ஜகரிய்யாவையும்,யூசுஃபுந் நஜ்ஜார் ஆகியோர்தான் இதற்கு காரணம். அவர்களை கொன்று விட வேண்டும். அதுதான் சிறந்த பரிகாரம் என்று தமக்குள் பேசிக் கொண்டனர்.
இதற்கிடையே வானஇயல் நிபுணர்கள் வானத்தில் புதிதாக தோன்றிய ஒரு நட்சத்திரத்தைக் கண்டு, 'இது உலகில் ஒரு நபி தோன்றியிருப்பதற்கான அடையாளமாக இருக்கிறது' என்றார்கள்.

பனீஇஸ்ரவேலர்களின் மதகுருமார்கள் வேதங்களைப் புரட்டிப் பார்த்து,இச்சமயத்தில் எங்களுக்கு வழிகாட்டக்கூடிய ஒரு தேவத் தூதர் பெத்லஹேமில் பிறந்து விட்டார்' என்று மகிழ்ச்சி அடைந்தனர்.
ஆனால் அந்நாட்டு மன்னனான ஐரதூஸ் இச்செய்தி கேட்டு ஆத்திரப்பட்டான். அந்த குழந்தையால் தனது ஆட்சிக்கு ஆபத்து ஏற்படக் கூடும் என்று எண்ணி அக்குழந்தையை கொன்றுவிட அவன் தீர்மானித்தான்.
அரசனின் இந்த எண்ணத்தை வஹீ மூலம் அல்லாஹ் மர்யம் அலைஹிஸ்ஸலாம் அவர்களுக்கு தெரிவத்து, உடனே அந்நாட்டை விட்டு வெளியேறி எகிப்துக்குச் சென்றுவிட கட்டளையிட்டான்.
யூசுபு நஜ்ஜாரின் துணையைக் கொண்டு அவர்கள் அந்த நாட்டை விட்டு வெளியேறி எகிப்து சென்று அங்கு நூல் நூற்று அதிலிருந்து கிடைக்கும் சொற்ப வருவாயைக் கொண்டும்,வயல்களில் உதிர்ந்து கிடக்கும் தானியங்களைப் பொறுக்கி உணவு சமைத்தும் மிகவும் கஷ்ட வாழ்க்கை நடத்திக் கொண்டிருந்தார்கள்.
அவர்களுக்கு யூசுப் நஜ்ஜாரும் காடுகளுக்கு சென்று விறகு வெட்டி விற்று,அதில் கிடைக்கும் சொற்ப வருவாயை ஹழ்ரத் மர்யம் அலைஹிஸ்ஸலாம் அவர்களிடம் கொடுத்து உதவி செய்து வந்தார்.
ஈஸா அலைஹிஸ்ஸலாம் அவர்களுக்கு மூன்று அல்லது நான்கு வயது ஆனதும் அவர்களை அன்னை மர்யம் அலைஹிஸ்ஸலாம் அவர்கள் கல்வி கற்க ஒரு ஆசிரியரிடம் சேர்த்தார்கள். ஆசிரியர் கல்வியைக் கற்றுக் கொடுக்க ஆரம்பித்ததும் , ஈஸா அலைஹிஸ்ஸலாம் அவர்கள் அதனை முழுமையாக சொல்ல ஆரம்பித்துவிட்டார்கள்.
அதனைக் கண்ட ஆசிரியர் அவர்கள்,இந்த குழந்தை அறிவில் என்னைவிட பன்மடங்கு சிறந்ததாக இருக்கிறது. எனவே அதற்கு நான் கற்றுக் கொடுக்க வேண்டியது ஒன்றுமில்லை என்று சொன்னார்கள். அதற்கு மர்யம் அலைஹிஸ்ஸலாம் அவர்கள், 'நீங்கள் கற்றுக் கொடுக்காவிட்டாலும் இவனை உங்கள் அருகிலேயே சிறிது காலம் இருக்கவிடுங்ககள்' என்று கூறி பாலகரான ஈஸா அலைஹிஸ்ஸலாம் அவர்களை அந்த ஆசிரியரிடமே விட்டுச் சென்றார்கள். இப்படியே சில காலம் சென்றது.

வாலிபரான ஈஸா அவர்கள்,மக்களை நேர்வழிபடுத்த எவ்வளவோ முயன்றார்கள். அவர்களைக் கண்டாலே மக்களுக்கு கடும்கோபம் ஏற்பட்டது. தகப்பனில்லாது பிறந்த நீரா எமக்கு புத்தி சொல்ல வந்தீர்? காலம் காலமாக நமது மூதாதையர்கள் வணங்கி வந்த தெய்வங்களை நிந்திக்க உமக்கு என்ன உரிமை இருக்கிறது?' என்று சொன்னதோடு, அவர்களை தீர்த்துக் கட்டவும் முயன்றார்கள்.

பனீ இஸ்ரவேலர்களிடம் தான் நபி என்பதை அறிவித்ததோடு,அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களது வருகையைப் பற்றிக் குறிப்பட்டதைத் திருக்குர்ஆனில் அல்லாஹ் பின்வருமாறு குறிப்பிடுகிறான்:

وَإِذْ قَالَ عِيسَى ابْنُ مَرْيَمَ يَا بَنِي إِسْرَائِيلَ إِنِّي رَسُولُ اللَّهِ إِلَيْكُم مُّصَدِّقًا لِّمَا بَيْنَ يَدَيَّ مِنَ التَّوْرَاةِ وَمُبَشِّرًا بِرَسُولٍ يَأْتِي مِن بَعْدِي اسْمُهُ أَحْمَدُ ۖ فَلَمَّا جَاءَهُم بِالْبَيِّنَاتِ قَالُوا هَٰذَا سِحْرٌ مُّبِينٌ
'மர்யமுடைய மகள் ஈஸா (இஸ்ராயீலின் சந்ததிகளை நோக்கி) 'இஸ்ராயீலின் சந்ததிகளே! மெய்யாகவே நான்,உங்களிடம் அனுப்பப்பட்ட அல்லாஹ்வுடைய ஒரு தூதன். நான் எனக்கு முன்னுள்ள தவ்ராத்தை உண்மைப்படுத்துகிறேன். எனக்குப் பின்னர், 'அஹ்மத்'என்னும் பெயர் கொண்ட ஒரு தூதர் வருவதைப் பற்றியும் நான், (உங்களுக்கு) நன்மாராயம் கூறுகிறேன்' என்று கூறியதை (நபியே! நீர் அவர்களுக்கு) ஞாபகமூட்டும். (அவர் அறிவித்தவாறு அத்தூதர்) தெளிவான அத்தாட்சிகளுடன் அவர்களிடம் வந்த சமயத்தில், (அவரை விசுவாசிக்காது) 'இது தெளிவான சூனியம்!' என்று அவர்கள் கூறினர்.'
-அல்-குர்ஆன் 61:6

ஒரு சமயம் ஹழ்ரத் ஈஸா அலைஹிஸ்ஸலாம் அவர்கள் எகிப்திலுள்ள நைல் நதியோரமாகச் சென்று கொண்டிருந்தார்கள். நதி கரையோரத்தில் சில சலவைத் தொழிலாளிகள், அழுக்கு துணிகளை மூட்டை மூட்டையாகக் குவித்து வைத்துக் கொண்டு துவைத்துக் கொண்டிருந்தார்கள்
அவர்களிடம் சென்று லாஇலாஹ இல்லல்லாஹ் என்ற கலிமாவைக் கொண்டு உங்கள் உள்ளத்தைப் பரிசுத்தப்படுத்துங்கள் என்று உபதேசம் செய்தார்கள். இவர்களின் உபதேசத்தைக் கேட்டு சலவைத் தொழிலாளிகள் சிந்திக்கத் தொடங்கி, அவர்கள் மீது விசுவாசம் கொண்டார்கள்.
துணிக்கு சாயம் ஏற்றும் தொழில் செய்பவரிடம் சென்று மர்யம் அலைஹிஸ்ஸலாம் அவர்கள் தொழில் கற்க ஈஸா அலைஹிஸ்ஸலாம் அவர்களை அழைத்துச் சென்றார்கள். அவனும் அதற்கு ஒத்துக் கொண்டு, ஒவ்வொரு பானையிலும் சாயத்திற்கு ஏற்றவாறு துணிகளை போட்டு சாயம் ஏற்றச் சொன்னார்கள்.
ஆனால் ஈஸா அலைஹிஸ்ஸலாம் அவர்கள் அனைத்து துணிகளையும் ஒரே பானையில் போட்டு சாயத்தில் ஏற்றினார்கள். சாயக்காரர் வந்து, மிகவும் கோபப்பட்டு, துணிக்காரர்களுக்கு என்ன பதில் சொல்லப் போகிறேன் என்று அங்கலாய்த்தார்.

அதற்கு ஈஸா அலைஹிஸ்ஸலாம் அவர்கள் லாஇலாஹ இல்லல்லாஹ் என்று சொல்லி ஒவ்வொரு துணியாக எடுங்கள். நீங்கள் நினைத்த சாயம் அந்தந்த துணிகளில் இருக்க காண்பீர்கள் என்று சொன்னார்கள். அதன்படி அவன் செய்ய, அவ்வாறே வந்தது. இதைக் கண்டு அவன் ஈஸா நபி அலைஹிஸ்ஸலாம் அவர்கள் மீது ஈமான் கொண்டான்.
மன்னன் ஐரதூஸ் இறந்த சேதி ஹழ்ரத் மர்யம் அலைஹிஸ்ஸலாம் அவர்களுக்குத் தெரிய வந்தது. ஹழ்ரத் ஈஸா அலைஹிஸ்ஸலாம் அவர்களையும், யூசுப் நஜ்ஜார் அவர்களையும் அழைத்துக் கொண்டு பைத்துல் முகத்தஸ் திரும்பினார்கள்.

வழியில் அவர்கள நாசரேத் என்ற ஊரில் சிறிது காலம் தங்கியிருந்தார்கள். இந்த நாசரேத் என்ற ஊரில் அவர்கள் தங்கியிருந்ததன் காரணமாகத்தான் அல்லாஹ் திருக்குர்ஆனிலல் கிறித்துவர்களை 'நஸரா' என்று குறிப்பிட்டுள்ளான்.
ஹழ்ரத் ஈஸா அலைஹிஸ்ஸலாம் அவர்களுக்கு வயது 30 ஆகியது. ஒலிவ இலைகளைச சேகரித்து வருவதற்காக அவாக்ள் தங்கள் தாயுடன் ஒரு மலைமீது ஏறினர். சில இலைகளைப் பறித்துத் தாயிடம் ஒப்படைத்து விட்டு,அந்த மலையின் ஓரிடத்தில் அமர்ந்து இறைதியானத்தில் ஈடுபட்டார்கள்.
அச்சமயத்தில் அவர்களின் முன் ஒரு பேரொளி தோன்றியது. திடுக்கிட்ட அவர்கள் அதனைக் கூர்ந்து கவனித்துப் பார்த்துக் கொண்டிருக்கையில் அவ்விடத்தில் ஜிப்ரயீல் அலைஹிஸ்ஸலாம் அவர்கள் தோன்றி, ஈஸா அலைஹிஸ்ஸலாம் அவர்கள் கையில் ஒரு புத்தகத்தைக் கொடுத்து இது இன்ஜீல் வேதமாகும். அல்லாஹ் பனீ இஸ்ரவேலர்களுக்கு நேர்வழிக்காட்டக் கூடிய தூதராக உங்களை நியமித்துள்ளான். அவர்களை விக்கிரக ஆராதனையை விட்டு விலக்கி, அல்லாஹ்வை மட்டும் வணங்கிவர வைப்பீர்களாக!' என்று கூறிவிட்டு மறைந்து விட்டார்கள்.

ஈஸா அலைஹிஸ்ஸலாம் அவர்களின் தாய் பாஷையான சுர்யானீ (அரேமிய பாஷை) பாசையில் வேதம் இறக்கப்பட்டிருந்தது. அதில் கூறப்பட்டிருந்த உபதேசங்களெல்லாம் அவர்களது நெஞ்சத்தில் ஆழப் பதிந்து விட்டன. இந்த இன்ஜீல் வேதம் இறக்கபட்டது ரமலான் மாதம் 18 அன்று.
தாவூத் அலைஹிஸ்ஸலாம் அவர்களுக்கு அருளப்பட்ட ஜபூர் வேதம் இறக்கப்பட்ட 1,200 வருடங்களுக்குப் பிறகுதான் இந்த இன்ஜீல் வேதம் இறக்கப்பட்டதென்று ஒரு குறிப்பு காணப்படுகிறது.
அதன்பிறகு ஈஸா அலைஹிஸ்ஸலாம் அவர்கள் தம் தாயிடம் தான் நபியாக அனுப்பப்பட்ட விசயத்தையும்,அதனால் தங்களுக்கு சேவை புரிவதில் அதிகமாக ஈடுபட முடியாது என்பதையும் எடுத்துச் சொன்னார்கள்.
அதற்கு மர்யம் அலைஹிஸ்ஸலாம் அவர்கள் உன்னுடைய இந்த நிலையைப் பற்றி அல்லாஹ் நீ பிறக்கும் முன்பே எனக்கு அறிவித்து விட்டான். அதனால் நீ எதற்கும் கவலைப்படாமல் அல்லாஹ்வின் கட்டளையை நிறைவேற்றுவதில் கவனம் செலுத்தி வா என்று சொன்னார்கள்.

மலையிலிருந்து ஈஸா அலைஹிஸ்ஸலாம் அவர்கள் இறங்கி நடந்து வந்து கொண்டிருக்கையில் வழியில் ஒரு குஷ்டரோகி தென்பட்டான். அவனை ஈஸா நபியவர்கள் தடவி இறைவனிடம் நோயை குணமாக்கும்படி இறைஞ்சினார்கள். அல்லாஹ்வின் கிருபையால் அவன் பரிபூரணமாக குணமடைந்தான். அவன் இச்செய்தியை பைத்துல்முகத்தஸ் சென்று மக்களிடம் சொன்னான். இச்செய்தி காட்டுத்தீ போல நகரெங்கும் பரவி விட்டது. ஈஸா அலைஹிஸ்ஸலாம் அவர்கள் நகருக்குள் நுழைந்ததும், பிறவிக் குருடர்கள், ஊமையர்கள், முடவர்கள், குஷ்டரோகிகள் ஆகியோர் அவர்கள் முன்னால் கூடிநின்று தங்களையும் குணப்படுத்துமாறு வேண்டிநின்றனர். ஈஸா நபியவர்கள் அவர்கள் அனைவரையும் குணப்படுத்தினார்கள்.

இப்பெரும் கூட்டத்தினரிடையே ஈஸா அலைஹிஸ்ஸலாம் அவர்கள் ஏகத்துவத்தை எடுத்தியம்பினார்கள். விக்கிரக வணக்கத்தை விட்டு விலகுமாறு வேண்டினார்கள். பனீ இஸ்ரவேலர்கள் அல்லாஹ் அவர்கள் மீது செய்துள்ள கிருபைகளையும்,உதவிகளையும் மறந்து விக்கிரகத் தொழும்பர்களாக மாறிவிட்டதையும் மதகுருமார்கள் இறைப் பணியை மறந்து விட்டு பேராசை பிடித்து வீண் ஆடம்பரவாழ்வில் அலைக்கழிந்து கிடப்பதையும் கடுமையாக சாடினார்கள்.

இதனால் பனீ இஸ்ரவேலர்களில் ஒரு பகுதியினரும் மதகுருமார்களும் அவர்களுக்கு பரமவிரோதிகளாக மாறினர். ஹழ்ரத் ஈஸா அலைஹிஸ்ஸலாம் அவர்கள் ஒரு சனிக்கிழமை அன்று குளக்கரையில் அமர்ந்து கொண்டு,களிமண்ணால் பறவைகளைப் போன்று உருவங்களைச் செய்து கொண்டிருந்தார்கள். இது அவர்களுக்கு கோபத்தை உண்டு பண்ணியது. ஈஸா நபியின் இச்செயலை அவர்கள் கடுமையாக ஆட்சேபித்தனர். இதைப் பற்றி அல்லாஹ் திருக்குர்ஆனில் கூறுகிறான்:

وَرَسُولًا إِلَىٰ بَنِي إِسْرَائِيلَ أَنِّي قَدْ جِئْتُكُم بِآيَةٍ مِّن رَّبِّكُمْ ۖ أَنِّي أَخْلُقُ لَكُم مِّنَ الطِّينِ كَهَيْئَةِ الطَّيْرِ فَأَنفُخُ فِيهِ فَيَكُونُ طَيْرًا بِإِذْنِ اللَّهِ ۖ وَأُبْرِئُ الْأَكْمَهَ وَالْأَبْرَصَ وَأُحْيِي الْمَوْتَىٰ بِإِذْنِ اللَّهِ ۖ وَأُنَبِّئُكُم بِمَا تَأْكُلُونَ وَمَا تَدَّخِرُونَ فِي بُيُوتِكُمْ ۚ إِنَّ فِي ذَٰلِكَ لَآيَةً لَّكُمْ إِن كُنتُم مُّؤْمِنِينَ
இஸ்ராயீலின் சந்ததியினருக்குத் தூதராகவும் (அவரை ஆக்குவான்; இவ்வாறு அவர் ஆகியதும் இஸ்ரவேலர்களிடம் அவர்:) "நான் உங்கள் இறைவனிடமிருந்து ஓர் அத்தாட்சியுடன் நிச்சயமாக வந்துள்ளேன்; நான் உங்களுக்காக களிமண்ணால் ஒரு பறவையின் உருவத்தை உண்டாக்கி நான் அதில் ஊதுவேன்; அது அல்லாஹ்வின் அனுமதியைக் கொண்டு (உயிருடைய) பறவையாகிவிடும்.

பிறவிக் குருடர்களையும், வெண் குஷ்டரோகிகளையும் குணப்படுத்துவேன்; அல்லாஹ்வின் அனுமதியைக் கொண்டு இறந்தோரையும் உயிர்ப்பிப்பேன்; நீங்கள் உண்பவற்றையும்,நீங்கள் உங்கள் வீடுகளில் சேகரம் செய்து வைப்பவற்றையும் பற்றி நான் உங்களுக்கு எடுத்துக் கூறுவேன். நீங்கள் முஃமின்கள் (நம்பிக்கையாளர்) ஆக இருந்தால் நிச்சயமாக இவற்றில் உங்களுக்குத் திடமான அத்தாட்சி இருக்கிறது" (என்று கூறினார்).
– அல்குர்ஆன் 3:49

அப்படியானால் எலும்பில்லாத ஒரு பறசையைச் செய்து அதனைப் பறக்கச் செய்யுங்கள் பார்ப்போம் என்று கிண்டலாகக் கூறினர். ஹழ்ரத் ஈஸா அலைஹிஸ்ஸலாம் அவர்கள் வவ்வாலைப் போன்று ஒரு பறவையைக் களிமண்ணில் செய்து,அதன்மீது ஊதினார்கள். உடனே,அது உயிர்ப்பெற்று பறக்க ஆரம்பித்தது.
இவ்வளவு மகத்தான அற்புதத்தை ஹழ்ரத் ஈஸா அலைஹிஸ்ஸலாம் அவர்கள் செய்து காட்டியும்,அந்தப் பனீ இஸ்ரவேலர்கள் அவர்களை அல்லாஹ்வின் தூதர் என்று ஏற்றுக் கொள்ளாது,இது ஒரு கண்கட்டு வித்தை. கொஞ்சம் முயற்சி எடுத்தால் யாரும் இதைப் போல் செய்யலாம் என்றனர்.
அவர்கள் இப்படிச் சொன்னதும்,ஈஸா அலைஹிஸ்ஸலாம் அவர்கள் ‘ என்னை நம்புங்கள். நான் அல்லாஹ்வின் தூதனே! இதனை நிரூபிப்பதற்காக அல்லாஹ்வின் உத்திரவைக் கொண்டு இது போன்ற இன்னும் பல அற்புதங்களை செய்து காட்டுவேன். பிறவிக் குருடர்களுக்கும்,பார்வை வரச் செய்வேன். குஷ்டரோகத்தையும் குணப்படுத்துவேன்’ என்று கூறினார்கள்.
அவர்கள் இப்படிச் சொன்னதும்,இதனைப் பரிசோதிப்பதற்காக வேண்டி,அப்பகுதியிலிருந்த அத்தனைப் பிறவிக் குருடர்களையும்,குஷ்டரோகிகளையும் அழைத்துக் கொண்டு அவர்கள் முன் நிறுத்தினார்கள். அவர்கள் அனைவரையும் அதிசயிக்கத்தக்க விதத்தில் அனைவரும் குணமாயினர். ஒரு நாளில் மட்டும் 50,000 பேர் குணமடைந்ததாக ஒரு குறிப்பில் காணப்படுகிறது.

இச்செய்தி வெளியில் தெரிய ஆரம்பித்ததும் பல்லாயிரக்கணக்கானோர் அவர்களை நாடி வந்தனர். அவர்கள் அனைவரின் நோய்களையும் குணப்படுத்தினார்கள். இவ்வளவு செய்தும் பனீ இஸ்ரவேலர்கள் அவர்களை நபி என்று நம்ப மறுத்தனர். மாறாக,இவர் பெரிய சூனியக்காரர் என்றே கூறி வந்தனர்.
ஈஸா நபியவர்கள் அவர்களை நோக்கி ‘நான் எத்தகைய அற்புதத்தை செய்து காட்டினால் என்னை நபி என்று நம்புவீர்கள்’ என்று கேட்டனர். அதற்கு பனீ இஸ்ரவேலர்கள் ‘இறந்தவர்களை உயிர்ப்பிக்க முடியுமா? என்று கேட்டார்கள். அதற்கு அவர்கள் ‘சரி’ யென்று சொன்னார்கள்.
இதனால் ஆச்சரியத்தில் மூழ்கிய அம்மக்கள், அக்காலத்தில் மிகப் பெரிய அறிவாளியாகவும்,மருத்துவ நிபுணராகவும் இருந்த ஜாலினூஸ் என்பவரிடம் வந்து,இது பற்றி கேட்டனர். அவர் ஈஸா அவ்வாறு இறந்தவர்களை உயிர்ப்பிக்ச் செய்தால் அவர் அல்லாஹ்வின் தூதர் என்பதை ஏற்றுக் கொண்டுதான் ஆக வேண்டும்’ என்றார்கள். உடனே அவர்கள் ஈஸா நபி அவர்களிடம் வந்து மூன்று நாட்களுக்கு முன்னர் ஆஸர் என்பவர் இறந்துவிட்டார். அவரது சடலத்தை உயிர்ப்பித்து காட்டுங்கள் என்றனர்.
அவர் அடக்கப்பட்ட இடத்திற்கு என்னை அழைத்துச் செல்லுங்கள் என்றனர் ஈஸா நபி அவர்கள். அங்கு அவர்கள் அந்த சமாதிக்கருகில் சென்று, ‘அல்லாஹ்வின் உத்திரவு கொண்டு எழுந்திரும்’ என்று சொன்னார்கள். என்ன ஆச்சரியம். அவர் தூங்கியெழுந்தவரைப் போன்று சோம்பலை முறித்துக் கொண்டே எழுந்து வெளியே வந்தார். பனீ இஸ்ரவேலர்களுக்கு அதை நம்பவே முடியவில்லை. இப்பவாது என்னை அல்லாஹ்வின் தூதர் என்று நம்புகிறீர்களா? என்று கேட்டார்கள் ஈஸா நபியவர்கள்.
அதற்கு என்ன பதில் சொல்வது? என்று புரியாமல் நழுவிவிட்டனர். புதிதாக இறந்தவரைத்தான் உயிர்ப்பித்து விட்டார். இறந்து நீண்ட காலமாகிவிட்டவர்களை இவரால் எழுப்ப முடியுமா? என்ற கேள்வியை எழுப்பிக்கொண்டு பனீ இஸ்ரவேலர்கள் மீண்டும் ஹழ்ரத் ஈஸா அலைஹிஸ்ஸலாம் அவர்களை அணுகி,புதிதாக இறந்துவிட்டவரைத்தான் நீங்கள் உயிர்ப்பித்து விட்டீர்கள். இறந்து நீண்ட காலமாகிவிட்டவரை உங்களால் உயிர்ப்பிக்க முடியுமா என்று கேட்டார்கள்.

அல்லாஹ் நாடினால் எதுதான் நடக்காது? என்று ஈஸா அலைஹிஸ்ஸலாம் அவர்கள் மறுமொழி பகர்ந்தனர். பனீ இஸ்ரவேலர்கள் மிகவும் சிதிலமடைந்து போயிருந்த ஒரு சமாதியைக் காட்டி,இங்கு அடக்கமானவர் நான்காயிரம் வருடங்களுக்கு முன் ஹழ்ரத் நூஹ் அலைஹிஸ்ஸலாம் அவர்கள் காலத்தில் வாழ்ந்தவர். இவர் பெயர் ஸாம் என்றனர்.
உடனே ஹழ்ரத் ஈஸா அலைஹிஸ்ஸலாம் அவர்கள் முன் கூறியது போலவே அல்லாஹ்வின் உத்திரவைக் கொண்டு எழுந்திரும்’ என்று சொன்னார்கள். அதிலிருந்து ஒரு மனிதர் எழுந்து ஈஸா அலைஹிஸ்ஸலாம் அவர்களுக்கு ஸலாம் சொன்னார்.
இம்மாதிரி இறந்து போன பலரை உயிர்ப்பித்து காட்டியும் பனீ இஸ்ரவேலர்களுக்கு அவர்கள் மீது நம்பிக்கை ஏற்படவில்லை. ஆனால் அவர்களில் 12 பேர் மட்டும் அவர்கள் மீது விசுவாசம் கொண்டனர். இவர்களுக்கு ஹவாரிய்யூன்கள் என்று கூறப்படுகிறது. இதில் பெரும்பான்மையோர் சலவைத் தொழிலாளியாக இருந்தனர். இந்த ஹவாரிய்யூன்கள்தாம் ஹழ்ரத் ஈஸா அலைஹிஸ்ஸலாம் அவர்களின் பிரதம சீடர்களாகச் செயல்பட்டு வந்தனர். ஈஸா அலைஹிஸ்ஸலாம் அவர்களுடன் கூடவே சென்று வருவார்கள். அவர்கள் காடு,மேடு,பள்ளம்,மலை,பாலைவனம் போன்ற இடங்களில் சுற்றித்திரிந்து மக்களுக்கு நற்போதனை புரிந்து கொண்டிருந்தார்கள். அப்போதெல்லாம் சீடர்கள் ஈஸா அலைஹிஸ்ஸலாம் அவர்களுக்கு பணிவிடை செய்து வந்தார்கள்.

தமது சீடர்களுக்கு பசி ஏற்படின் அல்லாஹ்வின் திருநாமத்தைக் கொண்டு தரையில் தட்டுவார்கள். அதிலிருந்து ரொட்டி வரும். அதை பங்கிட்டுக் கொடுப்பார்கள். தண்ணீரையும் அவ்வாறே பெற்றுக் கொடுத்தனர்.
ஹழ்ரத் ஈஸா அலைஹிஸ்ஸலாம் அவர்கள் நெட்டையாகவும் இல்லாது,குட்டையாகவும்இல்லாது நடுத்தர உயரமுடையவர்களாக இருந்தார்கள். அதிக வெண்மையும்,அதிக கறுப்புமில்லாது பொதுநிறமாக இருந்தார்கள்.கம்பளியால் தயாரிக்கப்பட்ட உடையையும் தொப்பியையும்அணிந்து வந்தார்கள். அவர்களது

உடையில் பல ஒட்டுகள் இருந்தன. கிழிபடும் உடைகளை அவ்வப்போது தைத்துக் கொண்டனர். அதற்காக ஊசியையும்,நூலையும் தம் சட்டையில் வைத்துக் கொண்டனர். அவர்களின் கரத்தில் எப்போதும் ஒரு கம்பு இருந்து கொண்டே இருக்கும். அவர்கள் சுற்றுப்பிராயணம் செய்யும் போது எவ்விடத்தில் இரவு வருகிறதோ அங்கேயே இரவை கழித்துக் கொள்வார்கள். படுக்கையில் மிருதுவான விரிப்புகளை விரிப்பதில்லை. அடிக்கடி நோன்பு நோற்பவர்களாக இருந்தனர்.
ஹழ்ரத் ஈஸா அலைஹிஸ்ஸலாம் அவர்கள் தங்களது சீடர்களில் இருவரை அந்தாக்கியா நகருக்கு சென்று அங்குள்ள மக்களுக்கு நல்லுபதேசம் செய்யுமாறு அனுப்பி வைத்தனர். அவ்விருவரும் அந்நகருக்கு அருகில் சென்றபோது,ஆடுகளை மேய்க்கும் வயோதிகன் எதிர்ப்பட்டான். அவர்கள் இருவரையும் விசாரித்தான்.
அதற்கு அவர்கள் நாங்கள் ஹழ்ரத் ஈஸா அலைஹிஸ்ஸலாம் அவர்களின் பிரதிநிதிகளாக வந்திருக்கிறோம் என்று கூறினர்.

நீங்கள் உண்மையாளர்கள் என்பதற்கு என்ன ஆதாரம்? என்று கேட்டார்.
அதற்கு நாங்கள் அல்லாஹ்வின் கிருபையால் கொடிய நோயையும் குணப்படுத்துவோம் என்று கூறினர். என் மகன் தீராத நோயால் அவதிப்படுகிறான். அவனை எல்லா மருத்துவர்களும் கைவிட்டு விட்டனர். முதலில் என் மகனின் நோயை குணப்படுத்துங்கள், நான் உங்களை ஏற்றுக் கொள்கிறேன்’ என்று கூறினார்.
அதன்பிறகு அவர்கள் அந்த முதியவரின் மகன் இருக்கும் இடத்திற்கு சென்று அவனை குணப்படுத்தினர். உடனே அவர் மகிழ்ச்சியடைந்தவராக முஸ்லிமாகி விட்டார். இச்செய்தி காட்டுத்தீ போல் ஊரெல்லாம் பரவி விட்டது. பல்வேறு நோயாளிகள் அவர்களைத் தேடிவந்து நலம் பெற்று சென்றனர்.
இச்செய்தி அந்நகர் அரசனுக்கு எட்டியது. அந்த அரசன் விக்கிரகத் தொழும்பனாக இருந்தான்.
அவ்விருவர்களையும் கைது செய்து சிறையில் அடைக்குமாறு உத்தரவிட்டான். இது ஈஸாஅலைஹிஸ்ஸலாம் அவர்களுக்கு மிகவும் வருத்தத்தை தந்தது. அவ்விருவரும் தொடர்ந்து தங்கள் பணியைச் செய்ய ஷம்ஊன் என்பவரை அந்தாகிய்யா அனுப்பி வைத்தார்கள். இதைப் பற்றி அல்லாஹ் தன் திருமறையில்:
وَاضْرِبْ لَهُم مَّثَلًا أَصْحَابَ الْقَرْيَةِ إِذْ جَاءَهَا الْمُرْسَلُونَ . إِذْ أَرْسَلْنَا إِلَيْهِمُ اثْنَيْنِ فَكَذَّبُوهُمَا فَعَزَّزْنَا بِثَالِثٍ فَقَالُوا إِنَّا إِلَيْكُم مُّرْسَلُونَ
(நபியே! நம்) தூதர்கள் ஓர் ஊர்வாசிகளிடம் வந்த(போது நிகழ்ந்த)தை அவர்களுக்கு உதாரணமாகச் சொல்வீராக. நாம் அவர்களிடம் தூதர்கள் இருவரை அனுப்பிய போது அவ்விருவரையும் அவர்கள் பொய்யாக்கினார்கள்; ஆகவே (அவர்களை) மூன்றாவது தூதரைக் கொண்டு வலுப்படுத்தினோம்; ஆகவே,“நிச்சயமாக நாங்கள் உங்களிடம் அனுப்பப்பட்ட தூதர்கள் ஆவோம்”என்று அவர்கள் கூறினார்கள்.
-அல்-குர்ஆன் 36:13,14

ஷம்ஊன் அந்தாகியா சென்றார். அங்கு தான் எந்த நோக்கத்திற்காக வந்திருக்கிறேன் என்பதை தெரியப்படுத்தவே இல்லை.
அவர் அரண்மனைச் சேவகர்களை தொடர்பு கொண்டு அவர்களையும்,பின்பு மந்திரிகளையும்,அடுத்து அரசனையும் தொடர்பு கொண்டு நல்லவிதமாக நட்பு கொண்டு அனைவரின் அன்பையும் பெற்றுக் கொண்டார். அவரது நுண்ணறிவையும்,தீட்சண்யத்தையும் பார்த்து அரசன் அவரை தம்முடைய அந்தரங்க ஆலோசகராக நியமித்துக் கொண்டான். அவரைக் கேட்காமல் எந்த காரியத்தையும் அரசன் செய்ய மறுத்து வந்தான்.
ஒருசமயம் சிறைக் கைதிகளை அரசன் பார்வையிட்டுக் கொண்டே வரும்போது அவனுடன் ஷம்ஊனும் சென்றார். ஈஸா நபியின் சீடர்கள் இருக்கும் இடம் வந்ததும், ‘இவர்கள் கொலைகாரர்களாகவோ,திருடர்களாகவோ எனக்குத் தெரியவில்லையே! ஏன் இவர்கள் சிறையில் இருக்கிறார்கள் என்று அரசரிடம் கேட்டார்.
அதற்கு அரசர் அவர்கள் அவ்வாறு செய்திருந்தால் பரவாயில்லை. இவர்கள் எங்கள் கடவுளர்களை தூஷிப்பவர்களாக இருப்பது மட்டுமில்லாமல் புதுவிதமான மார்க்கத்தை கொண்டு மக்களிடம் புகுத்த பார்த்தார்கள்.

இதுபற்றி அவர்களிடம் விசாரிக்க வேண்டும் என்று ஷம்ஊன் சொன்னார்.
அவ்விருவரையும் சிறைக்கதவை திறந்து வெளியே கொண்டு வருமாறு அரசன் உத்தரவிட்டான். அவ்விருவர்களும் சிறையை விட்டு வெளியே வந்தார்கள். ஷம்ஊன் அவர்களிடம் கண்சாடை காட்டிக் கொண்டு கேள்விகளை கேட்க ஆரம்பித்தார். அவர்கள் மிகத் தெளிவாக அல்லாஹ்வின் சக்தியைப் பற்றியும், ஈஸா நபியின் தூதுத்துவம் பற்றியும் சொன்னார்கள். நோயாளிகளை குணமாக்குவது பற்றியும் சொன்னார்கள்.
பிறவிக் குருடன் ஒருவரை வரவைத்து அவனை குணமாக்கும்படி சொன்னார் ஷம்ஊன். அவர்களும் அல்லாஹ்விடம் கையேந்தி துஆ செய்தார்கள். அந்தக் குருடன் பார்வை பெற்றான்.
உடனே ஷம்ஊன் அரசனிடம் சென்று அவன் காதருகில் இவர்கள் அல்லாஹ்விடம் வேண்டி பிறவிக் குருடனை பார்வை பெறச் செய்து விட்டனர். நாமும் நம் கடவுள்களிடம் சொல்லி ஏதாவது அற்புதத்தை நிகழ்த்திக் காட்ட வேண்டும் என்று சொன்னார். நமது கடவுள்கள் கல்லால் ஆனவர்கள் அவர்களால் எவ்வித பிரயோசனமும் இல்லை என்பதை உணர்ந்து வெட்கத்தால் அரசன் முகம் சிவந்தான்.
அதேபோல் இளவயதில் இறந்து போன அரசனின் மகளை உயிர்ப்பித்துக் காட்டினார்கள். உடனே அரசன் மிக்க மகிழ்ச்சி கொண்டு, உடனே முஸ்லிமானார். அந்தாகியா மக்களையும் முஸ்லிம் மார்க்கத்தை தழுவும்படி சொன்னார். அந்நாட்டு மக்கள் அனைவரும் முஸ்லிமாயினர்.
ஹழ்ரத் ஈஸா அலைஹிஸ்ஸலாம் அவர்கள் செய்து காட்டிய அற்புதங்களை கண்டு சிலர் முஸ்லிமாயினர். சிலர் இது வெறும் சூன்யம் என்று சொல்லி அல்லாஹ்தான் ஹழ்ரத் ஈஸா அலைஹிஸ்ஸலாம் அவர்கள் உருவில்

வந்துள்ளான் என்றனர். சிலர் அல்லாஹ்வின் மனைவிதான் மர்யம் என்றனர்.இப்படிப் பலர் பலவிதமாக கற்பனை செய்து கொண்டிருந்தனர்.

இவற்றைக் கண்டித்து அல்லாஹ் தனது திருமறையில்,
يَا أَهْلَ الْكِتَابِ لَا تَغْلُوا فِي دِينِكُمْ وَلَا تَقُولُوا عَلَى اللَّهِ إِلَّا الْحَقَّ ۚ إِنَّمَا الْمَسِيحُ عِيسَى ابْنُ مَرْيَمَ رَسُولُ اللَّهِ وَكَلِمَتُهُ أَلْقَاهَا إِلَىٰ مَرْيَمَ وَرُوحٌ مِّنْهُ ۖ فَآمِنُوا بِاللَّهِ وَرُسُلِهِ ۖ وَلَا تَقُولُوا ثَلَاثَةٌ ۚ انتَهُوا خَيْرًا لَّكُمْ ۚ إِنَّمَا اللَّهُ إِلَٰهٌ وَاحِدٌ ۖ سُبْحَانَهُ أَن يَكُونَ لَهُ وَلَدٌ ۘ لَّهُ مَا فِي السَّمَاوَاتِ وَمَا فِي الْأَرْضِ ۗ وَكَفَىٰ بِاللَّهِ وَكِيلًا
வேதத்தையுடையோரே! நீங்கள் உங்கள் மார்க்கத்தில் அளவு கடந்து செல்லாதீர்கள். அல்லாஹ்வைப் பற்றி உண்மையைத் தவிர (வேறெதையும்) கூறாதீர்கள்; நிச்சயமாக மர்யமுடைய மகனாகிய ஈஸா மஸீஹ் அல்லாஹ்வின் தூதர் தான்; இன்னும் ("குன்"ஆகுக என்ற) அல்லாஹ்வின் வாக்காக (அதனால் உண்டானவராகவும்) இருக்கின்றார்; அதை அவன் மர்யமின்பால் போட்டான்; (எனவே) அவரும் அவனிடமிருந்து (வந்த) ஓர் ஆன்மா தான்; ஆகவே,அல்லாஹ்வின் மீதும் அவன் தூதர்கள் மீதும் ஈமான் கொள்ளுங்கள்; இன்னும், (வணக்கத்திற்குரிய இறைவன்) மூன்று என்று கூறாதீர்கள் – (இப்படிக் கூறுவதை விட்டு) விலகிக் கொள்ளுங்கள்; (இது) உங்களுக்கு நன்மையாகும் – ஏனெனில் வணக்கத்திற்குரிய இறைவன் அல்லாஹ் ஒருவன் தான்; அவனுக்கு எவரும் சந்ததியாக இருப்பதிலிருந்து அவன் தூய்மையானவன். வானங்களிலும்;, பூமியிலும் இருப்பவையெல்லாம் அவனுக்கே சொந்தம். (காரியங்கள் அனைத்துக்கும்) பொறுப்பேற்றுக் கொள்வதற்கு அல்லாஹ்வே போதுமானவன்.
-அல்குர்ஆன் 4:171

لَّقَدْ كَفَرَ الَّذِينَ قَالُوا إِنَّ اللَّهَ هُوَ الْمَسِيحُ ابْنُ مَرْيَمَ ۚ قُلْ فَمَن يَمْلِكُ مِنَ اللَّهِ شَيْئًا إِنْ أَرَادَ أَن يُهْلِكَ الْمَسِيحَ ابْنَ مَرْيَمَ وَأُمَّهُ وَمَن فِي الْأَرْضِ جَمِيعًا ۗ وَلِلَّهِ مُلْكُ السَّمَاوَاتِ وَالْأَرْضِ وَمَا بَيْنَهُمَا ۚ يَخْلُقُ مَا يَشَاءُ ۚ وَاللَّهُ عَلَىٰ كُلِّ شَيْءٍ قَدِيرٌ
திடமாக எவர் மர்யமுடைய குமாரர் மஸீஹ் (ஈஸா) தான் அல்லாஹ் என்று கூறுகிறாரோ,அத்தகையோர் நிச்சயமாக நிராகரிப்போர் ஆகிவிட்டனர். "மர்யமுடைய குமாரர் மஸீஹையும் அவருடைய தாயாரையும் இன்னும் பூமியிலுள்ள அனைவரையும் அல்லாஹ் அழித்துவிட நாடினால், (அதிலிருந்து அவர்களைக் காக்க) எவர் சிறிதளவேனும் சக்தியோ அதிகாரமோ பெற்றிருக்கிறார்"என்று (நபியே!) நீர் கேளும்;
வானங்களிலும்,பூமியிலும்,அவற்றிற்கு இடையேயும் உள்ள (பொருட்கள் அனைத்)தின் மீதுமுள்ள ஆட்சி அல்லாஹ்வுக்கே சொந்தம்; அவன் நாடியதைப் படைக்கிறான்; இன்னும் அல்லாஹ் எல்லாவற்றின் மீதும் ஆற்றலுடையவனாக இருக்கின்றான்.
-அல்-குர்ஆன் 5:17மற்றும்

لَقَدْ كَفَرَ الَّذِينَ قَالُوا إِنَّ اللَّهَ هُوَ الْمَسِيحُ ابْنُ مَرْيَمَ ۖ وَقَالَ الْمَسِيحُ يَا بَنِي إِسْرَائِيلَ اعْبُدُوا اللَّهَ رَبِّي وَرَبَّكُمْ ۖ إِنَّهُ مَن يُشْرِكْ بِاللَّهِ فَقَدْ حَرَّمَ اللَّهُ عَلَيْهِ الْجَنَّةَ وَمَأْوَاهُ النَّارُ ۖ وَمَا لِلظَّالِمِينَ مِنْ أَنصَارٍ
"நிச்சயமாக மர்யமுடைய மகனாகிய மஸீஹ் (ஈஸா) தான் அல்லாஹ்"என்று கூறுகிறவர்கள் உண்மையிலேயே நிராகரிப்பவர்கள் ஆகிவிட்டார்கள்; ஆனால் மஸீஹ் கூறினார்: "இஸ்ராயீலின் சந்ததியினரே! என்னுடைய இறைவனும்,உங்களுடைய இறைவனுமாகிய அல்லாஹ்வை வணங்குங்கள்"என்று. எனவே எவனொருவன் அல்லாஹ்வுக்கு இணை கற்பிப்பானோ அவனுக்கு அல்லாஹ் சுவனபதியை நிச்சயமாக ஹராமாக்கிவிட்டான்,மேலும் அவன் ஒதுங்குமிடம் நரகமேயாகும்,அக்கிரமக்காரர்களுக்கு உதவிபுரிபவர் எவருமில்லை.

لَّقَدْ كَفَرَ الَّذِينَ قَالُوا إِنَّ اللَّهَ ثَالِثُ ثَلَاثَةٍ ۘ وَمَا مِنْ إِلَٰهٍ إِلَّا إِلَٰهٌ وَاحِدٌ ۚ وَإِن لَّمْ يَنتَهُوا عَمَّا يَقُولُونَ لَيَمَسَّنَّ الَّذِينَ كَفَرُوا مِنْهُمْ عَذَابٌ أَلِيمٌ
நிச்சயமாக அல்லாஹ் மூவரில் மூன்றாமவன் என்று கூறியவர்கள் காஃபிர்களாக (நிராகரிப்பவர்களாக) ஆகிவிட்டார்கள்; ஏனென்றால் ஒரே இறைவனைத் தவிர வேறு நாயன் இல்லை; அவர்கள் சொல்வதை விட்டும் அவர்கள் விலகவில்லையானால் நிச்சயமாக அவர்களில் காஃபிரானவர்களை துன்புறுத்தும் வேதனை கட்டாயம் வந்தடையும்.

أَفَلَا يَتُوبُونَ إِلَى اللَّهِ وَيَسْتَغْفِرُونَهُ ۚ وَاللَّهُ غَفُورٌ رَّحِيمٌ
இவர்கள் அல்லாஹ்வின் பக்கம் திரும்பி தவ்பா செய்து,அவனிடம் மன்னிப்புத் தேடமாட்டார்களா? அல்லாஹ் மிக்க மன்னிப்பவனாகவும் பெருங்கருணையாளனாகவும் இருக்கிறான்.

مَّا الْمَسِيحُ ابْنُ مَرْيَمَ إِلَّا رَسُولٌ قَدْ خَلَتْ مِن قَبْلِهِ الرُّسُلُ وَأُمُّهُ صِدِّيقَةٌ ۖ كَانَا يَأْكُلَانِ الطَّعَامَ ۗ انظُرْ كَيْفَ نُبَيِّنُ لَهُمُ الْآيَاتِ ثُمَّ انظُرْ أَنَّىٰ يُؤْفَكُونَ
மர்யமுடைய குமாரர் மஸீஹ் இறை தூதரேயன்றி வேறில்லை.இவருக்கு முன்னரும் தூதர்கள் பலர் வந்து சென்றுவிட்டனர். இவருடைய தாயார் மிக்க உண்மையானவர்; இவ்விருவரும் (மற்ற மனிதர்களைப் போல்) உணவு உண்பவர்களாகவே இருந்தனர்; அவர்களுக்கு நம்முடைய அத்தாட்சிகளை கொண்டு எவ்வாறு தெளிவாக்கினோம் என்பதை (நபியே!) நீங்கள் கவனிப்பீராக! அவர்கள் எவ்வாறு திசை திருப்பப்படுகிறார்கள் என்பதையும் கவனிப்பீராக!
-அல்-குர்ஆன் 5:72-76 வரை உள்ள வசனங்களில் குறிப்பிட்டுக் காட்டுகிறான்.
சிலர்,அல்லாஹ்விடம் நாங்கள் முழு நம்பிக்கை கொள்ள வேண்டுமெனில் எங்களுக்கு வானததிலிருந்து உணவுத் தட்டை இறக்க ஏற்பாடு செய்யுங்கள் என்றனர்.
அதற்கு ஈஸா அலைஹிஸ்ஸலாம் அவர்கள் அதற்குப் பிறகும் நீங்கள் சந்தேகப்படுவீர்களானால் அல்லாஹ்வின் கோபத்திற்கு ஆளாக நேரிடும் என்று எச்சரிக்கை செய்தனர். அதன்பின் அவர்கள் சொன்னபடி அவர்கள் 30 நாட்கள் நோன்பிருந்து தொழுது துஆ செய்து வந்தார்கள்.

ஈஸா அலைஹிஸ்ஸலாம் அவர்கள் சொன்ன நாளும் வந்தது. அன்று ஞாயிற்றுக் கிழமை. நபியவர்கள் அல்லாஹ்விடம் கையேந்தி உணவுத் தட்டை இறக்க வேண்டினார்கள். அல்லாஹ்வின் பெயரைக் கொண்டு அதைத் திறந்தார்கள். அதில் பொரித்த மீன் ஒன்று இருந்தது. அதில் நெய் ஓடிக் கொண்டிருந்தது. தலை மீது உப்பும்,வால் மீது காடியும் இருந்தது. அதனைச் சுற்றி ஐந்து ரொட்டிகள் வைக்கபட்டிருந்தன. ஒன்றின் மீது ஜைத்தூண் எண்ணெய்யும், இன்னொன்றின் மீது தேனும்,இன்னொன்றின் மீது பன்னீரும் இன்னொன்றின் மீது நெய்யும் இன்னொன்றின் மீது பொரித்த இறைச்சியும் வைக்கப்பட்டிருந்தது.
உணவுத் தட்டை விரும்பியவர்களிடம் நீங்கள் விரும்பியவாறு உணவுத்தட்டு இறங்கிவிட்டது. இதனை உண்டு அல்லாஹ்விற்கு மாறு செய்யாமலிருங்கள் என்று சொன்னார்கள்.
உணவுத்தட்டிலுள்ள பொரித்த மீனை உயிர்ப்பெற்று எழுமாறு அவர்கள் வேண்டினார்கள். அல்லாஹ்விடம் நபியவர்கள் கையேந்தஅது உயிர்ப்பெற்று எழுந்தது.
இம்மாதிரி உணவுத் தட்டு 40 நாட்கள் இறங்கிக் கொண்டிருந்தது என்றும்,காலையில் விண்ணிலிருந்து இறங்கிய இந்தத் தட்டுகள், மாலையானதும் மேலேறி விண்ணுக்குச் சென்று விடும் என்றும் ஒரு குறிப்பில் காணப்படுகிறது.
விண்ணிலிருந்து இறங்கும் தட்டுகளிலுள்ள இந்த உணவை ஏழைகள்,அனாதைகள்,நோயாளிகளைத் தவிர வேறு யாரும் உண்ணக் கூடாது என்று அல்லாஹ்விடமிருந்து உத்திரவு வந்தது. இது நல்ல ருசியாகவும்,மணமுள்ளதாகவும் இருந்ததால் வசதி படைத்த செல்வந்தர்களும் இதை உண்ண ஆரம்பித்தார்கள். மேலும் ஈஸா அலைஹிஸ்ஸலாம் அவர்கள் மீது முழு நம்பிக்கையும் கொள்ளவில்லை.
எனவே உணவுத் தட்டு இறங்குவது நின்று விட்டது. இதனால் அவர்கள் ஈஸா அலைஹிஸ்ஸலாம் அவர்களை பொய்யர் என்றும், சூனியக்காரர் என்றும் நிந்தித்தனர். இதனால் மனம் வேதனையடைந்த நபியவர்கள் அல்லாஹ்விடம் அவர்களைத் தண்டிக்குமாறு வேண்டினர்.
அல்லாஹ் அவர்களை பன்றிகளாக உருமாற்றினான். ஒரு நாளில் மட்டும் 5000 பேர் இவ்வாறு உருமாற்றப்பட்டனர். மூன்று நாட்கள் வரை அந்த விலங்கு போல வாழ்ந்து அதன்பிறகு இறந்துவிட்டார்கள்.

இதனைப் பற்றி அல்லாஹ் தன் திருமறையில்,
إِذْ قَالَ الْحَوَارِيُّونَ يَا عِيسَى ابْنَ مَرْيَمَ هَلْ يَسْتَطِيعُ رَبُّكَ أَن يُنَزِّلَ عَلَيْنَا مَائِدَةً مِّنَ السَّمَاءِ ۖ قَالَ اتَّقُوا اللَّهَ إِن كُنتُم مُّؤْمِنِينَ
“மர்யமுடைய மகன் ஈஸாவே! உங்கள் இறைவன் வானத்திலிருந்து எங்களுக்காக உணவு மரவையை (ஆகாரத் தட்டை) இறக்கி வைக்க முடியுமா?”என்று ஹவாரிய்யூன் (சீடர்)கள் கேட்டபோது அவர், “நீங்கள் முஃமின்களாக இருந்தால்,அல்லாஹ்வை அஞ்சிக் கொள்ளுங்கள்”என்று கூறினார்.
قَالُوا نُرِيدُ أَن نَّأْكُلَ مِنْهَا وَتَطْمَئِنَّ قُلُوبُنَا وَنَعْلَمَ أَن قَدْ صَدَقْتَنَا وَنَكُونَ عَلَيْهَا مِنَ الشَّاهِدِينَ
அதற்கவர்கள்,“நாங்கள் அதிலிருந்து புசித்து எங்கள் இதயங்கள் அமைதி பெறவும்,நிச்சயமாக நீங்கள் எங்களுக்கு உண்மையையே கூறினீர்கள் என்பதை அறிந்து கொள்ளவும்,இன்னும் நாங்கள் அதைப்பற்றி சாட்சி கூறக் கூடியவர்களாகவும் இருக்க விரும்புகின்றோம்”என்று கூறினார்கள்.
قَالَ عِيسَى ابْنُ مَرْيَمَ اللَّهُمَّ رَبَّنَا أَنزِلْ عَلَيْنَا مَائِدَةً مِّنَ السَّمَاءِ تَكُونُ لَنَا عِيدًا لِّأَوَّلِنَا وَآخِرِنَا وَآيَةً مِّنكَ ۖ وَارْزُقْنَا وَأَنتَ خَيْرُ الرَّازِقِينَ
மர்யமுடைய மகன் ஈஸா,“அல்லாஹ்வே! வானத்திலிருந்து எங்கள் மீது ஓர் உணவு மரவையை இறக்குவாயாக; அது எங்களுக்கு – எங்களில் முன்னவர்களுக்கும்,எங்களில் பின் வருபவர்களுக்கும் ஒரு பெருநாளாகவும்,உன்னிலிருந்து ஓர் அத்தாட்சியாகவும் இருக்கும்; இன்னும் எங்களுக்கு உணவுப் பொருட்களை அளிப்பாயாக; நீயே உணவளிப்பவர்களில் மேலானவனாக இருக்கிறாய்”என்று (பிரார்த்தித்துக்) கூறினார்.
قَالَ اللَّهُ إِنِّي مُنَزِّلُهَا عَلَيْكُمْ ۖ فَمَن يَكْفُرْ بَعْدُ مِنكُمْ فَإِنِّي أُعَذِّبُهُ عَذَابًا لَّا أُعَذِّبُهُ أَحَدًا مِّنَ الْعَالَمِينَ
அதற்கு அல்லாஹ்,“நிச்சயமாக நான் அதை உங்களுக்கு இறக்கிவைக்கிறேன்; ஆனால்,அதன்பின் உங்களில் எவரேனும் ஒருவர் நிராகரித்தால்,உலகத்தாரில் எந்த ஒருவருக்கும் செய்திராத வேதனையைக் கொண்டு அவரை வேதனைப்படுத்துவேன்”என்று கூறினான்.
-அல்-குர்ஆன் 5:112-115

ஈஸா அலைஹிஸ்ஸலாம் அவர்கள் மக்களுக்கு நல்லுபதேசம் செய்தவாறே பைத்துல் முகத்தஸ் வந்து சேர்ந்தார்கள். எவ்வளவுக்கெவ்வளவு தீவிரமாக பிரச்சாரம் செய்தார்களோ அவ்வளவுக்கு அவ்வளவு அவர்களுக்கு எதிர்ப்பும் பலமாக இருந்தது.

ஒரு நாள் மக்களை நோக்கி,ஓ! மக்களே! நீங்கள் இதுவரை தவ்ராத் வேதத்திலுள்ள சட்டங்களைப் பின்பற்றி வந்தீர்கள். இப்போது நான் அல்லாஹ்வின் தூதனாக வந்துள்ளேன். எனவே அந்த சட்டங்களை விட்டுவிட்டு என்னுடைய புதிய விதிமுறைகளை பின்பற்றி நடந்து கொள்வீர்களாக!’ என்று உபதேசித்தார்கள்.
இதனால் பனீ இஸ்ரவேலர்கள் வெகுண்டார்கள். அவர்கள் ஈஸா நபியவர்களையும், அவர்களது தாயார் மர்யம் அலைஹிஸ்ஸலாம் அவர்களையும் வாய்க்கு வந்தவாறு பேசினர். அவதூறுகளை சொன்னார்கள். இதனால் மனம் வெறுத்த நபியவர்கள் அத்தகையவர்களை தண்டிக்குமாறு அல்லாஹ்விடம் வேண்டினார்கள்.
அத்தகையவர்களை அல்லாஹ் குரங்குகளாக மாற்றினான். மூன்று தினங்களுக்குப் பின் அவர்கள் செத்தொழிந்தார்கள்.
இந்நிகழ்ச்சிக்குப் பிறகு பனீஇஸ்ரவேலர்கள் நபியவர்களுக்கு ஜன்மவிரோதிகளாக மாறினர். அவர்களை எப்படியாவது ஒழித்துக் கட்டிவிட வேண்டுமென்று கங்கணம் கட்டிக் கொண்டனர். ஈஸாஅலைஹிஸ்ஸலாம் அவர்களை ஏற்றுக் கொண்டவர்களில் ஒருவரான யஹூதா என்பவனை தங்கள் வலையில் சிக்க வைத்து

அவனுக்கு காசுகள் கொடுத்து தங்கள் உளவாளியாக நியமித்தனர் அவன் ஈஸா அலைஹிஸ்ஸலாம் நடவடிக்கைகள் பற்றிய தகவல்களை அவர்களுக்கு தெரிவித்து வந்தான்.
இஸ்ரவேலர்கள் சூழ்ச்சிகள் செய்து நபியவர்களை ஒரு வீட்டிற்குள் சிறைப்பிடிக்கச் செய்தனர். அவர்களை எப்படிக் கொல்வது என்று ஆலோசித்தனர். இறுதியில் முச்சந்தியில் பலர் முன் சிலுவையில் அறைந்து கொன்று விடுவது என்று முடிவெடுத்தனர்.

ஒருநாள், விடியற்காலை நேரத்தில் யஹூதாவை அனுப்பி ஈஸா அலைஹிஸ்ஸலாம் அவர்களை தங்கள் முன் இழுத்து வரும்படி ஏவினர். அவ்வாறே யஹூதா நபியவர்கள் இருந்த வீட்டிற்கு கதவைத் திறந்து கொண்டு உள்ளே நுழைந்தான். அச்சமயத்தில் அல்லாஹ்வின் பெரும்கருணையால் ஹழ்ரத் ஜிப்ரயீல் அலைஹிஸ்ஸலாம் அவர்கள் மூலமாகக ஹழ்ரத் ஈஸா அலைஹிஸ்ஸலாம் அவர்களை அல்லாஹ் வானத்திற்கு உயர்த்திக் கொண்டான் அவர்களை இழுத்துக் கொண்டு செல்ல வந்த யஹூதாவின் முகத்தோற்றத்தை ஈஸா அலைஹிஸ்ஸலாம் அவர்களின் தோற்றத்திற்கு மாற்றினான்.
சற்றுநேரம் என்ன செய்ய வேண்டும் என்று தெரியாது திக்பிரமை பிடித்தபடி அவன் வீட்டை விட்டு வெளியே வந்தான்.

இச்சம்பவத்தைப் பற்றி அல்லாஹ் தனது திருமறையில்,
وَقَوْلِهِمْ إِنَّا قَتَلْنَا الْمَسِيحَ عِيسَى ابْنَ مَرْيَمَ رَسُولَ اللَّهِ وَمَا قَتَلُوهُ وَمَا صَلَبُوهُ وَلَٰكِن شُبِّهَ لَهُمْ ۚ وَإِنَّ الَّذِينَ اخْتَلَفُوا فِيهِ لَفِي شَكٍّ مِّنْهُ ۚ مَا لَهُم بِهِ مِنْ عِلْمٍ إِلَّا اتِّبَاعَ الظَّنِّ ۚ وَمَا قَتَلُوهُ يَقِينًا
இன்னும்,“நிச்சயமாக நாங்கள் அல்லாஹ்வின் தூதராகிய – மர்யமின் குமாரராகிய-ஈஸா மஸீஹை கொன்றுவிட்டோம்”என்று அவர்கள் கூறுவதாலும் (அவர்கள் சபிக்கப்பட்டனர்); அவர்கள் அவரைக் கொல்லவுமில்லை, அவரை அவர்கள் சிலுவையில் அறையவுமில்லை. ஆனால் அவர்களுக்கு (அவரைப் போன்ற) ஒருவன் ஒப்பாக்கப்பட்டான்; மேலும் இ(வ் விஷயத்)தில் அபிப்பிராய பேதம் கொண்டவர்கள், அதில் சந்தேகத்திலேயே இருக்கின்றார்கள் – வெறும் யூகத்தைப் பின்பற்றுவதேயன்றி அவர்களுக்கு இதில் எத்தகைய அறிவும் கிடையாது; நிச்சயமாக அவர்கள், அவரைக் கொல்லவே இல்லை.

بَل رَّفَعَهُ اللَّهُ إِلَيْهِ ۚ وَكَانَ اللَّهُ عَزِيزًا حَكِيمًا
ஆனால் அல்லாஹ் அவரைத் தன் அளவில் உயர்த்திக் கொண்டான் – இன்னும் அல்லாஹ் வல்லமை மிக்கோனாகவும் ஞானமுடையோனாகவும் இருக்கின்றான்.
– அல்குர்ஆன் 4:157,158.

அப்போது பனீ இஸ்ரவேலர்களும் அவனைத் தேடி அங்கு வந்தனர். ஈஸா அலைஹிஸ்ஸலாம் அவர்கள் தோற்றத்திலிருந்த யஹூதாவை பரபரவென்று இழுத்துச் சென்று உதைத்து அவன் கதறியும் விடாமல், உண்மையை விசாரித்து தண்டிக்குமாறு ஆளுநரிடம் அனுப்பி வைத்தனர். அவரும் விசாரித்து உண்மையான குற்றவாளி என்று சொல்லி சிலுவையிலறைந்து கொல்லும்படி தீர்ப்பு வழங்கினார்.
இதன்படி ஒரு பெரிய சிலுவையை தயாரித்து, அதனை யஹூதாவை சுமக்கச் செய்து கல்வாரி மலை மீது ஏற்றினார்கள். ஒரு குறிப்பிட்ட இடம் வந்ததும் அந்த சிலுவை நட்டப்பட்டு அதில் அவனை பெரும் பெரும் ஆணிகொண்டு அடித்து விட்டார்கள். அவன் மரணமடைந்தான்.
இச்சம்பவத்தை அல்லாஹ் தனது திருமறையில்
وَمَكَرُوا وَمَكَرَ اللَّهُ ۖ وَاللَّهُ خَيْرُ الْمَاكِرِينَ
(ஈஸாவை நிராகரித்தோர் அவரைக் கொல்லத்) திட்டமிட்டுச் சதி செய்தார்கள்; அல்லாஹ்வும் சதி செய்தான்; தவிர அல்லாஹ் சதி செய்பவர்களில் மிகச் சிறந்தவன் ஆவான்
– அல்குர்ஆன் 3:54
ஈஸா அலைஹிஸ்ஸாம் அவர்கள் விண்ணகத்தில் நான்காம் வானத்திற்கு உயர்த்தப்பட்டது கி.பி. 33ஆம் ஆண்டு> ஏப்ரல் 3ஆம் தேதி> வெள்ளிக்கிழமை. அவர்கள் விண்ணகத்திற்கு சென்ற ஆறு ஆண்டுகளுக்குப் பின் அவர்களது தாயார் ஹழ்ரத் மர்யம் அலைஹிஸ்ஸலாம் அவர்கள் காலமானார்கள்
நன்றி : Sufi Mansil

## இரு நபிமார்களின் அந்தஸ்துகள் 24




முஹம்மது நபி (ஸல்) அவர்களைக் குறித்து இயேசு (ஈஸா (அலை ) அவர்கள் முன்னறிவிப்புச் செய்யும் பைபிள் கண்டுபிடிப்பு!
அங்காரா:இஸ்லாத்தின் இறுதி தூதரான முஹம்மது நபியை குறித்து இயேசு (ஈஸா நபி) முன்னறிவிப்புச் செய்யும் 15 நூற்றாண்டுகள் பழமையான பைபிள் துருக்கியில் கண்டெடுக்கப்பட்டது.
பர்ணபாஸின் சுவிசேஷம் என்று அழைக்கப்படும் இந்த நூல் 12 ஆண்டுகளாக துருக்கியில் ரகசியமாக பாதுகாக்கப்பட்டு வந்துள்ளது.பைபிளில் கூறப்படும் பர்ணபாஸ் இயேசுவின் முக்கிய சீடராவார்.
இந்த நூலை பார்ப்பதற்கு 16-வது போப் பெனடிக்ட் விருப்பம் தெரிவித்துள்ளார்.
இறுதி தூதர் முஹம்மது நபியின் வருகையை குறித்தும், இயேசுவின் இஸ்லாம் குறித்த பார்வையை விளக்கும் இந்த நூலின் உள்ளடக்கம், தற்போது நடைமுறையில் இருக்கும் பைபிளில் காணப்படும் கருத்துக்களுடன் முரண்படுவதால், கிறிஸ்தவ தலைமை இந்நூலை மூடி மறைத்துள்ளது என்று துருக்கியின் கலாச்சார-சுற்றுலா துறை அமைச்சர் உர்த்துக்ரூல் குனாய் செய்தியாளர்களிடம் கூறினார்.
யேசு ஆரம்ப காலக்கட்டத்தில் கூறிய கட்டளைகளும், முன்னறிவிப்புகளும் விலங்கின் தோலில் எழுதப்பட்டுள்ள இந்நூலில் அடங்கியுள்ளன. இதில் மிகவும் முக்கியத்துவம் வாய்ந்ததுதான் முஹம்மது நபி(ஸல்) அவர்கள் குறித்த முன்னறிவிப்பாகும்.
யேசு பேசிய மொழியான அராமிக்கில் எழுதப்பட்டுள்ள இந்த நூல் 12 ஆண்டுகளுக்கு முன்பு கள்ள கடத்தல் காரர்களை கைது செய்யும் நடவடிக்கையின் போது துருக்கி போலீஸ் கண்டுபிடித்தது. இந்த புத்தகத்தின் மதிப்பு 22 மில்லியன் ஆகும். இந்த நூலின் ஒரு பக்கத்திற்கான நகலுக்கு 2.4 மில்லியன் டாலர் மதிப்பாகும்.
யேசு (இறைத்தூதர் ஈஸா(அலை) அவர்கள் ) இறுதி தூதர் முஹம்மது நபி(ஸல்) அவர்களை குறித்து தனது சீடர்களிடம் முன்னறிவிப்பு செய்துள்ளார். இறுதி தூதர் வரும்வேளையில் அவரை நம்பி ஏற்றுக்கொள்ள வேண்டும் என்று யேசு கூறியுள்ளார் என்று முஸ்லிம்கள் நம்புகின்றார்கள்.

## இரு நபிமார்களின் அந்தஸ்துகள் 25
## ( அல்ஜசிரா தொலைக்காட்சி வெளியிட்ட தகவல் )

எனது அருமை கிறிஸ்த்துவ சகோதரர்களே !
உங்கள் அனைவருக்கும் நன்கு தெரிந்தவர். உலகிலுள்ள 120 கோடி ரோமன் கத்தோலிக்க பிரிவைச் சேர்ந்த கிறிஸ்தவர்களுக்குத் தலைமையேற்று வழிநடத்தக் கூடிய போப் ஆண்டவர் பதினாறாம் பெனடிக்ட் சில நாட்களுக்கு முன்னாள் தனது வயதை காரணம் காட்டி போப் ஆண்டவர் பதவியை ராஜினாமா செய்தார்.
இவரது பதவி விலகலின் உண்மை காரணம் தற்பொழுது வெளியாகி உள்ளது.
இவர் சில வருடங்களாக இஸ்லாமிய புத்தகங்களை படித்தும் குர்ஆனை ஆராய்ந்தும் வந்தார். முக்கிய விஷயம் அவர் பார்த்தது குர்ஆன் மட்டும் அல்ல , 1500 வருடங்களாக துருக்கியில் மறைத்துவைக்கப்பட்டு இருந்த பைபிள் அராமிக் என்னும் மொழியில் உள்ளன அதை வாடிகன் நகரத்துக்கு தெரியபடுத்தப்பட்டுள்ளது , அதை ஆராய்வதற்காக அங்கு எடுத்து வரப்பட்டுள்ளது ,
அதில் நபி (ஸல்) அவர்கள் வருகையை குறித்து எழுதப்பட்டு இருந்ததை கண்டு வாடிகன் அதிர்ந்தது , அதன் தாக்கம்தான் தற்பொழுது அவர் போப் பதவியை ராஜினாமா செய்து உள்ளார்.
( பெனடிக்ட் பற்றிய சிறு குறிப்பு :- திருத்தந்தை பதினாறாம் ஆசீர்வாதப்பர் (Pope Benedict XVI, திருத்தந்தை பதினாறாம் பெனடிக்ட் (16 ஏப்ரல் 1927 – 31 டிசம்பர் 2022),
ரோமன் கத்தோலிக்க திருச்சபையின் 265 வது திருத்தந்தையாக இருந்தவர். இவர் பவேரியா, ஜெர்மனியில் பிறந்தார். இவரது இயற்பெயர் ஜோசப் ராட்ஸிங்கர் என்பதாகும்.

2005 ஏப்பிரல் திங்கள் 19 ஆம் நாள் தனது 78 அகவையில் திருத்தந்தையாகப் பொறுப்பேற்றார். தமக்கு முன்னிருந்தவர்களைப்போலவே திருத்தந்தையாகத் தேர்வு செய்யப்பட்டவுடன் பெயர்மாற்றம் செய்துகொண்டார்.
கத்தோலிக்க கிறித்தவர்களின் தலைமைப் பொறுப்பான போப் பதவியை சுமார் 8 ஆண்டுகள் வகித்த 16-வது பெனடிக்ட், 2013-ம் ஆண்டில் உடல்நிலையை காரணம் காட்டி, இவர் 28 பெப்ரவரி 2013 ல் ரோம் நேரம் இரவு 8 மணிக்கு தனது திருத்தந்தை பதவியிலிருந்து விலகினார்.
இதன் மூலம் 1415-ம் ஆண்டு 12-வது கிரிகோரிக்குப் பிறகு ஏறத்தாழ 600 வருடங்கள் கழித்து ,போப் பதவியில் இருந்து விலகிய முதல் நபரானார் )
அவர் தற்பொழுது இஸ்லாமியராக உள்ளதாகவும், அதை பற்றி பகிரங்கமாக அறிவிக்க முடியாமலும் அறிவித்தால் அவருக்கு ஆபத்து வரும் என்று கருதுவதாகவும். அவருக்கு நெருக்கமான வட்டாரங்கள் சொல்கிறார்களாம். இந்த செய்தியை அல்ஜசிரா தொலைக்காட்சி வெளியிட்டு உள்ளது. அல்ஹம்துலில்லாஹ்
இதை பற்றி மக்களுக்கு தெரிந்தால் சாரை சாரையாக இஸ்லாத்திற்கு மக்கள் வருவதை தடுக்கு இயலாது. அல்லாஹ்வுக்கே எல்லா புகழும்.
கிறிஸ்துவ மக்களே சிந்தியுங்கள். நீங்கள் எந்த அளவிற்கு உண்மையான கிறிஸ்துவராக இருப்பீர்கள் என்று எனக்கு தெரியாது ஆனால் இந்த போப் ஆண்டவர் பதவி வகித்தவர் எப்படி என்று நாம் அனைவருக்கும் நன்றாக தெரியும் அவரே தற்பொழுது குர்ஆனை ஆராய்ந்து பார்த்து இஸ்லாத்தின் பால் தனது பார்வையைத் திருப்பி உள்ளார்.
உங்கள் அனைவரையும் இஸ்லாத்தின் பால் அழைக்கிறோம் வாருங்கள் இணைவோம் ஓரிறை கொள்கையில். இஸ்லாத்திற்கு வரவும். இஸ்லாத்தை பற்றி தெரிந்து கொள்ளவும். இலவச குர்ஆன் தேவைப்படுபவர்களும் தயவு செய்து எனக்கு மெசேஜ் செய்யுங்கள். உங்களுடன் பேச ஆவலாக உள்ளேன்.
My dear Christian Brothers.
Everyone who knows you well. 120 crore in the world that can lead to the Roman Catholic Church Pope Benedict XVI Pope a few days earlier resigned, citing his age.
The real reason for his resignation is now released.
For some years he was reading the Quran, Islamic books, that he was exploring the impact that the current trend is to resign.
He is currently also the Muslims. If you are unable to declare publicly announced that it will also be considered. Colkirarkalam sources close to him. this news present al Jazeera chanal Alhamtulillah.
If people knew about this line to prevent the coming of Islam can not be produced. All praise to Allah.
Think Christian people.
We would like to invite all of you to come back at us unite orirai policy.
Switch back to Islam. They need to know about. you need a free quran please message me. I am eager to talk with you.

## இரு நபிமார்களின் அந்தஸ்துகள் 26
( இறந்தவரை உயிர்த்தெழுதல் )

''சரீருல் மஸாலிக்கின்" எனும் நூலில் எழுதப்பட்டுள் ஹஜ்ரத் கௌதுல் ஆலம் அவர்கள் ஒருநாள் தெருவில் சென்று கொண்டிருந்தார்கள்.அங்கு இருவர் காரசாரமாக விவாதித்துக் கொண்டிருப்பதைப் பார்த்தார்கள்.
அவர்களில் ஒருவர் முஸ்லிம், மற்றவர் கிறிஸ்தவர். முஸ்லிம்
'' என்னுடைய நபி இறைவனால் சிறப்பாகத் தேர்ந்தெடுக்கப்பட்ட அடியார் ஆவார்கள். அவர்களுக்கு மிஃராஜ் செல்லும் வாய்ப்பு ஏற்பட்டது. எனவே எல்லா நபிமார்களிலும் எங்கள் நபிதான் மிகச் சிறப்பானவர்கள்."
கிறிஸ்தவர் தன்னுடைய நபியின் உயர்வையும்,சிறப்பையும் விளக்கிக் கொண்டிருந்தார். இவ்விருவரின் விவாதத்தையும் கேட்டுக் கொண்டிருந்த கௌதுல் ஆலம் அவர்கள்
கிறிஸ்தவரிடம் கூறினார்கள் : 'உம்முடைய நபியின் உயர்வும், சிறப்பும் எந்த ஆதாரத்தால் நிரூபணமாகின்றது ?"
அதற்கு கிறிஸ்தவர் : "என்னுடைய நபி இறைவனின் சிறப்புக்குரிய நல்லடியார் ஆவார். அவர்கள் காட்டிய அற்புதங்கள் பிரபலமானவை. அவர்கள் விரும்பும் போதெல்லாம் அல்லாஹ்வின் உத்திரவு கொண்டு எழுவாயாக'' என்று கூறி இறந்தவர்களை உயிர்ப்பித்துக் கொண்டிருந்தார்கள்".
ஹஜ்ரத் குத்பு கௌது நாயகம் அந்தக் கிறிஸ்தவரிடம் : ''நான்
ஒரு நபியல்ல; மாறாக அந்த நபியின் உம்மத்தைச் சார்ந்த
சாதாரண அடியான் நீர் விரும்பினால், இப்போதும் கூட இறந்து போனவர்களில் பலரை என்னால் உயிர்த்தெழச் செய்யமுடியும் "எழுந்திரும்" என்ற வார்த்தையை நான் சொல்வேனாகில் மண்ணறையில் புதைந்து கிடப்பவர்கள் உயிர்பெற்று வெளியில் வருவார்கள். வேண்டுமென்றால் இப்போதே என்னை தூர்ந்துபோன ஒரு மண்ணறைக்கு அழைத்துச் செல்லுங்கள். நான் உமக்கு என்னுடைய நபியின் சிறப்பைக் காண்பிக்கின்றேன்' என்றார்கள்
இதைக் கேட்ட கிறிஸ்தவர் கௌதுல் ஆலம் அவர்களை சோதிப்பதற்காக தூர்ந்துபோன ஒரு மண்ணறைக்கு அவர்களை அழைத்துச் சென்றார்.
மேலும் அவர் கூறினார்: "எங்களின் நபி ஹஜ்ரத் ஈஸா அல்லாஹ்வின் ஆன்மா ஆவார். அவர் அல்லாஹ்வின் கட்டளைக் கொண்டு எழுவீராக! என்று கூறி இறந்தவர்களை உயிர்ப்பித்துக் கொண்டிருந்தார்கள்.''
இதைக் கேட்ட ஹஜ்ரத் கௌது நாயகம் அவர்கள் "நீங்கள் காட்டிய மண்ணறை இது ஒரு பாடகனின் மண்ணறை ஆகும். இதோ பாருங்கள். இப்பொழுதே அவர் மண்ணறையிலிருந்து பாடல் இசைத்தவாறு நான் எழுப்புகின்றேன்"

இவ்வாறு மண்ணறையின் அருகில் தம்முடைய பொன்னான நாவிலிருந்து 'எழுவீராக' எனும் வார்த்தையை மட்டும் உச்சரித்தார்கள்,
அவ்வளவுதான், உடனே மண்ணறைப் பிளந்தது மிக வேகமாக அதிலிருந்து பாடகர் கைதட்டிக் கொண்டும் ராக இசைத்தவாறும் வெளியேறி வந்தார்.
முஹம்மத் (ஸல்) அவர்களி உம்மத்தைச் சார்ந்த ஒருவர் நிகழ்த்திக் காட்டிய அற்புதத்தை கண்டு அந்தக் கிறிஸ்தவர் உளமார இஸ்லாத்தைத் தழுவினார். கௌது நாயகம் அவர்களின் சீடர்களில் ஒருவராகி விட்டார்.

இரு நபிமார்களின் அந்தஸ்துகள் 27
HTTPS://YOUTUBE.COM/WATCH?V=CN0C580LTYU&FEATURE=SHARES
ONLY VIDEO
நபி ஈஸா மர்மம் அலைஹி வ ஸல்லம் அவர்களின் வரலாறு

இரு நபிமார்களின் அந்தஸ்துகள் 28
( புதிய ஏற்பாட்டின் வரலாறு )



ஹஜ்ரத் ஈஸா (அலை) அவர்களுக்குப் பின்னர், அவர்களுடைய சீடர்கள், ஷாம். கிரேக்கம், ஆப்ரிக்கா முதலிய நாடுகளுக்குச் சென்று மார்க்கப் பிரச்சாரம் செய்து கொண்டிருந்தார்கள்.
இதனால் யூதர்கள் அவர்கள்மீது கடும் சீற்றம் கொண்டனர். அத்துடன் விக்கிரக ஆராதனை புரிந்து கொண்டிருந்த ரோமாபுரி மன்னன் கைசர், ஈஸா நபியின் சீடர்கள் மீது கொடிய பகைகொண்டு அவர்களில் அநேகரைக் கொன்று விட்டான்.
கிறிஸ்தவர்களைப் பலவகையிலும் இம்சை செய்து கொண்டுமிருந்தான். அப்படியிருந்தும் கிறிஸ்தவ மார்க்கம் வேகமாகப் பரவிக்கொண்டே வந்தது. இதனைச் சகிக்காத யூதர்களில் ஒருவர், தந்திரமான முறையில் அம்மார்க்கத்தை நசுக்கிவிடத் திட்டமிட்டார். தந்திரமும் உருவாயிற்று.
"ஏசு (ஈஸா)வின் தரிசனம் எனக்குக் கிட்டியது. அவர் எனக்கொரு வேதத்தை வழங்கிச் சென்றார்"` என்று கிறிஸ்தவர்களிடையே ஒரு பிரகடனம் செய்தார்.
இதனால் அவரைப் பொதுமக்கள் நம்பி விட்டனர். ஈஸா நபியின் பிரதம சீடர்களில் அவரையும் ஒருவராகச் சேர்த்து விட்டார்கள். இதைத்தான் அவரும் எதிர்பார்த்தார். உள்ளேயே இருந்து கொண்டு அவர்களது மார்க்கத்தை ஒழித்துவிட வேண்டுமென்பதுதான் அவரது சூழ்ச்சித் திட்டம்.
தன்மீது எவரும் சந்தேகம் கொள்ள முடியாத வகையில் நடந்து கொண்ட அவர், பொதுமக்களிடையே இனிய முறையில் பிரசாரம் செய்ய ஆரம்பித்தார்.
“ஈஸா (ஏசு) இறைவனாகயிருந்தார். இறைவன் மனித உருவத்தில் தோன்றினார். நம் எல்லோரின் பாவ விமோசனத்திற்காக அவர் சிலுவையில் அறையப்பட்டார் என்று நீங்கள் விசுவாசங் கொண்டால் போதும். மார்க்கச் சட்டம் வேண்டிய தில்லை. மார்க்கச் சட்டம் அதன்படி நடந்தால் சாபத் தீட்டே ஏற்படும். இதுவரை

இதனை நீங்கள் உணராது போய் விட்டீர்கள்" என்று பொது மக்களைக் கவரக்கூடிய முறையில் புதிய கொள்கை ஒன்றை அவர்களிடையே புகுத்தி விட்டார்.
இந்தப் பிரச்சாரம் பலனளித்து விட்டது. மற்றைய சீடர்கள் இக்கொள்கையைப் பற்றிச் சரிவரப் பரிசீலனை செய்யுமுன்பே, அவருடைய இக்கொள்கையை ஆதரித்து அநேகர் அவரைப் பின்தொடர்ந்து விட்டனர். அவர் தமது அந்தரங்க சதித்திட்டத்தில் வெற்றி கண்டு ஈஸா நபியின் மார்க்கத்தையே தலைகீழாகப் புரட்டி விட்டார்.
இவரேதான்
" பவுல் " எனப்படுவர். இவரது பிரச்சாரத்தால் அசல் இன்ஜீல் வேதமே இல்லாது போயிற்று.
தவிர 300 ஆண்டுகளாக யூதர்கள், இன்ஜில் கற்றறிருந்த கிறிஸ்தவர்களைத் தேடி துன்புறுத்தி அநேகரைக் கொலை செய்து விட்டனர். இதனால் இன்ஜீல் வேதம் பற்றித் தெரிந்து கொள்ள வாய்ப்பில்லாது போயிற்று.
சற்று அமைதி ஏற்பட்ட பின்னர் தோன்றிய கிறிஸ்தவர்கள், ஹஜ்ரத் ஈஸா நபியின் பல வரலாறுகளைச் சரிதைகள் போன்று தங்கள் கைப்பட எழுதிவைத்துக் கொண்டு அவற்றை இன்ஜீல்கள் என்று கூறினர்.
பொய்யும் மெய்யும் கலந்து தயாரிக்கப்பட்ட சுமார் 80 க்கு மேற்பட்ட இன்ஜீல்கள் மக்களிடையே பிரபலமாயின. எனினும், தற்போது கிறிஸ்தவர்களிடமிருந்து வரும் இன்ஜீல்களில் நான்குதான் பிரபலமானவையாக இருக்கின்றன.

(1) இன்ஜீல் மாற்கு,
(2) இன்ஜில்
(3) இன்ஜீல் மத்தேயு,
(4) இன்ஜீல் யோவான்.

இந்த நான்குடன், முன்னர் கூறப்பட்ட பவுல் முதலானோரால் எழுதப்பட்ட கடிதங்களையும் சேர்த்துக் கொண்டு எல்லாவற்றையும் ஹஜ்ரத் ஈஸா (அலை) அவர்களின் இன்ஜீல் என கிறிஸ்தவர்கள் கூறுகின்றனர்,
ஆதார நூல்: ஹக்கானீ
வலை தளத்தில் பவுல் பற்றிய செய்திகள்
புனித பவுல் தன்னைப் பற்றி விவிலியத்தில் எழுதியுள்ள படி, அவர் சிசிலியா நாட்டின் தர்சு பட்டணத்தில் பிறந்தார். அவரது தந்தை ஒரு ரோம குடிமகனாவார். அவரது குடும்பம் மிகவும் செல்வந்தக் குடும்பமாகும். இஸ்ரவேலின் பெஞ்சமின் கோத்திரத்தை சேர்ந்த ஒரு பரிசேயராவார்.
இளமையில் யூத மத சட்டங்களை கற்று தேர்ந்தார்
அப்போது கிறிஸ்தவம் பரவத் தொடங்கிய காலமாகும். பல கிறிஸ்தவர் தமது நம்பிக்கை காரணமாகக் கொலை செய்யப்பட்டனர். பவுல் கிறிஸ்தவரை அழிக்க திட்டங்கொண்டு ஆட்சியாளரிடம் அதற்கான ஆணையைப் பெற்றுக்கொண்டு கிறிஸ்தவரைத் துன்புறுத்தினார்
கிறிஸ்தவர் இவரது பெயரைக் கேட்டாலே அஞ்சினார்கள். இவ்வாறு செய்து கொண்டிருக்கும் போது தமஸ்குவில் கிறிஸ்தவர் இருப்பதாக கேள்விப்பட்டார். அங்கிருக்கும் கிறிஸ்தவரை கைது செய்து எருசலேம் நகருக்கு அழைத்து வரும்படி தமஸ்குவிற்கு புறப்பட்டார்.
தமஸ்குவுக்குச் சமீபித்தபோது, திடீரென வானத்திலிருந்து ஒரு ஒளி அவரைச் சுற்றிப் பிரகாசித்தது. சவுல் தரையிலே விழுந்தார். அப்பொழுது: சவுலே, சவுலே, நீ என்னை ஏன் துன்பப்படுத்துகிறாய் என்று தன்னுடனே பேசுகிற ஒலியைக் கேட்டார்.
அதற்கு சவுல்: ஆண்டவரே, நீர் யார், என்றார். அதற்குக் கர்த்தர்: நீ துன்பப்படுத்துகிற இயேசு நானே. முள்ளில் உதைக்கிறது உனக்குக் கடினமாம் என்றார்.
சவுல் நடுங்கித் திகைத்து: ஆண்டவரே, நான் என்னசெய்யச் சித்தமாயிருக்கிறீர் என்றார்.
அதற்குக் கர்த்தர்: நீ எழுந்து, பட்டணத்துக்குள்ளே போ, நீ செய்யவேண்டியது அங்கே உனக்குச் சொல்லப்படும் என்றார். அவரோடு பிரயாணம் செய்த மனிதர்கள் சத்தத்தைக் கேட்டும் ஒருவரையுங் காணாமல் பிரமித்து நின்றார்கள்.

சவுல் தரையிலிருந்து எழுந்து, தன் கண்களைத் திறந்தபோது பார்வையற்று இருந்தார்.கூட இருந்தவர்கள் சவுலை கைலாகுகொடுத்து, தமஸ்குவுக்குக் கூட்டிக்கொண்டு போனார்கள்.
சவுல் மூன்று நாள் பார்வை இல்லாதவராய்ப் புசியாமலும் குடியாமலும் இருந்தார். பின்பு கர்த்தர் அன்னியா என்பவரை சவுலிடம் அனுப்பினார்.
அப்பொழுது அன்னியா போய், சவுல் இருந்த வீட்டுக்குள் பிரவேசித்து, அவர்மேல் கையை வைத்து: சகோதரனாகிய சவுலே, நீ வந்தவழியிலே உனக்குத் தரிசனமான இயேசுவாகிய கர்த்தர், நீ பார்வையடையும்படிக்கும் பரிசுத்த ஆவியினாலே நிரப்பப்படும்படிக்கும் என்னை அனுப்பினார் என்றான்.
உடனே அவன் கண்களிலிருந்து மீன் செதில்கள் போன்றவைகள் விழுந்தது. அவன் பார்வையடைந்து, எழுந்திருந்து, ஞானஸ்நானம் பெற்றான். பின்பு அவன் உணவுண்டு பலப்பட்டான்.
சவுல் தமஸ்குவிலுள்ள சீடருடனே சிலநாள் இருந்து, தாமதமின்றி, கிறிஸ்து தேவனுடைய குமாரனென்று ஆலயங்களிலே பிரசங்கித்தான்.
கேட்டவர்களெல்லாரும் ஆச்சரியப்பட்டு: எருசலேமில் இந்த நாமத்தைத் தொழுகொள்ளுகிறவர்களை நாசமாக்கி, இங்கேயும் அப்படிப்பட்டவர்களைக் கட்டிப் பிரதான ஆசாரியர்களிடத்திற்குக் கொண்டுபோகும்படி வந்தவன் இவனல்லவா என்றார்கள்.

படம் : புனித பவுல் தமாஸ்கு நகரின் அன்னியா வழியாய் பார்வையடைதல். 1631 ஆண்டு பியெர்த்ரோ கொர்டோனாவின் ஓவியம்.

## இரு நபிமார்களின் அந்தஸ்துகள் 29



அகிலத்தின்_பேரொளியை தன் மணிவயிற்றில் சுமந்த அன்னை ஆமினா அம்மையார் வரலாறு ! (பாகம் 1)
அகிலத்தின்_பேரொளியை கண்மணி ரஸூலுல்லாஹ் ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்களை தன் மணிவயிற்றில் சுமந்த அன்னை ஆமினா அம்மையார் ரலியல்லாஹூ அன்ஹா அவர்கள் பாக்கியம் பெற்றவர்கள்..!!
பெருமானார்_ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்களின் தந்தையரான ஹஸ்ரத் அப்துல்லாஹ் ரலியல்லாஹூ அன்ஹூ அவர்கள் மக்கமா நகருக்கும் அண்மையில் இருக்கும் பகுதிகளுக்கும் அரசர்போல் செல்வாக்கு பெற்றவர்கள்.
யத்ரிப் (மதினா) நகரில் ஜொஹ்ரா என்னும் உயரிய குடும்பத்தார் மிகவும் செல்வாக்குடன் வாழ்ந்து வந்தார்கள். அவர்களின் தலைவராக வஹப் இப்னு அப்துல்மனாஃப் இப்னு ஜுஹ்ரா இப்னு கிலாப் இருந்தார்கள்.
வஹப்_இப்னு அப்துல் முனாப் அவருக்கும் பர்ரா பின்து ஜூஹ்ரா இருவருக்கும் மகளாக பிறந்தார்கள் அன்னை ஆமினா அம்மையார்.
தந்தை இறந்து விட்ட நிலையில் தனது சிறிய தந்தை உஹைபின் பாதுகாப்பில் ஆமினா அம்மையார் இருந்து வந்தார்கள்.
நபி ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்களின் பாட்டனார் அப்துல் முத்தலிப் (ரலியல்லாஹூ அன்ஹூ) அந்த நேரத்தில் தனது அருமை மகன் அப்துல்லாஹ்விற்கு பெண் கேட்டார்கள்.
இரு வீட்டாரும் சம்மதத்தின் படி திருமணம் இனிதே சிறப்பாக நடந்தது.
அழகிலும் ஆற்றலிலும் தனக்கு நிகர் யாருமில்லை என்னுமளவுக்கு உயர்ந்த நிலையில் இருந்த இளைஞர்களின் இளவரசன் அப்துல்லாஹ் (ரலியல்லாஹூ அன்ஹூ) திருமண செய்தியை கேள்விபட்ட சில பெண்கள அவர்களை_தங்கள் உள்ளத்தில் உள்ளறைகளில் வைத்து பூசித்தும் நேசித்தும் வந்த எத்தனையோ பெண்கள் ஏமாற்றத்துக்குள்ளாயினர்.

திருமணம்_முடிந்து மூன்று நாட்கள் தன் தாய் வீட்டில் இருந்த அன்னை ஆமினா அம்மையார் தன் கணவரின் ஊரான மக்காவிற்கு தன் கணவரோடு வந்து சேர்ந்தார்கள்.
அன்னை ஆமினா அம்மையார் அவர்கள் இல்லாள் என்ற முறையில் குடும்ப விளக்காக குடும்பத்திற்குள் புகுந்து குறையறச் சுடர் விடும் முழுமதியாகவே இருந்தார்கள்.!!!
ஒளிமிக்க மாணிக்கமாக விளங்கினார்கள். அதுமட்டுமா..?
தனியா சிறப்புக்கள் பல கொண்ட தங்க கொடி போன்றவர்களாக மாசறு மங்கையர்களின் கற்பெல்லாம் ஒருங்கு திரண்டிருந்த பொற்பீடமாக இருந்தார்கள்....!!
உலகிற்கு ஒளியூட்ட வந்த உத்தம கண்மணியை தன் மணிவயிற்றில் சுமந்த பாக்கியம் பெற்றவர்கள்.
அன்னையவர்கள் அறத்திற்கு இருப்பிடம் போன்றவர்கள்.
அருளுக்கு தாய் போன்றவர்கள்.பொறுமையில் பூமியிலும் எண்மடங்கு மிக்க உயர்வானவர்..
பெருமையுடைய பெருங்குடும்பத்திற்கு ஒப்பில்லாத கண்மணி போன்றவர்கள்.அன்னை ஆமினா அம்மையார் அவர்கள் சிறப்புக்கு அளவே இல்லை என்று சொல்லலாம்.

குறைஷியர் குலம் ஒரு பெருங்கடல். அந்த பெருங்கடல் தன்னுள் உள்ள செல்வங்களை அலைகளின் மூலம் வீசுகிறது.
அத்தகைய அலைகளின் நடுவே தாழ்ந்து விடாது சிறப்புடன் எடுப்பாக நிற்கிற செம்பளக் கொம்பு போன்றவர்கள். எத்தனை பெரிய சிறப்பு பெற்றிருந்தாலும் அன்னை ஆமினா அம்மையார் அவர்கள் குறைசி குலத்தில் இருக்கிறார்கள் என்பதே மிகப் பெரிய சிறப்பானதாக இருக்கிறதாம்.
சொல்லொணாச் சிறப்புகளுடைய சுடரொளியான அன்னை ஆமீனா அம்மையாரும் அழகும் அறிவும் நிறைந்த ஹஸ்ரத் அப்துல்லாஹ் ரலியல்லாஹூ அவர்களும் இனிதே இல்லறம் நடத்தி வந்தார்கள்...
சிறிது காலத்தில் அன்னையார் அவர்கள் கண்மணி ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்களை தனது மணி வயிற்றில் கருவுற்றார்கள்.
அன்னை ஆமினா அம்மையார் ரலியல்லாஹு அன்ஹா அவர்கள் திருமணம் முடிந்த இரண்டாம் மாதத்தில் கருவுற்றார்கள்.
அவர்கள் கருவிலே இருப்பவர்கள் தரணியை சன்மார்க்கத்தின் பால் அழைத்துச் சாந்தி வழி புகுத்த வரும் இருலோக இரட்சகர் எம்பெருமானார் ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்கள் அல்லவா.
கர்பப்பைகளில் மகா பாக்கியம் பெற்றதாகிய அன்னை ஆமீனா மாதாவின் கர்பப்பை யில் முத்து முஹம்மதராக (ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம்) உருப்பெற்ற முதல் ஆரம்பத்தில்,,,,
அன்னையவர்கள் சொல்கிறார்கள்,,, எனக்கு மாதவிடாய் நின்றதை தவிர்த்து வேறு எந்த இயற்கை இன்னல்கள் எதுவும் ஏற்பட வில்லை..என்று சொல்கிறார்கள்.
முதல் ஆரம்பத்தில் ஆதிபிதா ஆதம் அலைஹிஸ்ஸலாம் அவர்கள் கனவில் தோன்றி,,"மகளே நீங்கள் இந்த அண்ட கோளங்களின் காரணக் கருவான கண்ணியமான பிள்ளையை சுமந்து இருக்கிறீர்",,என்று நன்மாறாயம் அறிவித்து சென்றார்கள்.!

இரண்டாம்_மாதத்தில் கனவில் தோன்றிய நபி இத்ரீஸ் அலைஹிஸ்ஸலாம் அவர்கள்,," மகளே மாண்புகளான மாண்புகள் அனைத்திற்கும் ஏகபோக சொந்தகாரரான தகுதிகள் அனைத்தையும் தன்னகத்தே கொண்ட தவத்திருவேந்தரை நீங்கள் கற்பத்தில் சுமந்திருக்கிறீர்" என்று நன்மாறாயம் கூறி சென்றார்கள்.!

மூன்றாம் மாதத்தில் கனவில் நபி நூஹ் அலைஹிஸ்ஸலாம் அவர்கள்,," மகளே அல்லாஹ்வின் அனைத்து அருட்களுக்கும் அதிபதியான-உண்மையின் வெற்றி வேந்தரான உத்தம மகனை நீங்கள் கருவில் சுமந்து இருக்கிறீர்"என்று கூறி சென்றார்கள்.!

நான்காம்_மாதத்தில் தோன்றிய கலீலுல்லாஹ் நபி இப்றாகீம் அலைஹிஸ்ஸலாம் அவர்கள்"மகளே! சிறப்பின் சிகரமான-அந்தஸ்துகள் அனைத்துடைய ஏகபோக அதிபதியான அற்புதரை நீங்கள் கருவில் சுமந்திருக்கிறீர்",, என்று கூறி சென்றார்கள் !

ஐந்தாம்_மாதத்தில் தோன்றிய தபீஹூல்லாஹ் இஸ்மாயில் அலைஹிஸ்ஸலாம் அவர்கள்,,"மகளே உன்னதங்களின் உறைவிடமான சன்னிதானங்களின் சன்னதியான உண்மையாளரை உங்கள் மணிவயிற்றில் சுமந்திருக்கிரீர் என்று கூறி சென்றார்கள்.!!
ஆறாம்_மாதத்தில் தோன்றிய கலீமுல்லாஹ் மூஸா அலைஹிஸ்ஸலாம் அவர்கள்,,"மகளே நீங்கள் பதவி பவுசுகளின் ஏகபோக சொந்தக்காரரான தலைமை தனங்களின் தயாரிப்பு தளமான தயாளரை கருவுற்றிரீர்கள்" என்று சொல்லி சென்றார்கள் !

ஏழாம்_மாதத்தில் தோன்றிய நபி தாவூத் அலைஹிஸ்ஸலாம் அவர்கள்,"மகளே மகாமுன் மஹ்முத் என்ற சுவனத்தின் சிம்மாசனத்திற்குச் சொந்தம் பெற்ற லிவாவுல் ஹம்து என்ற சுவனத்தின் கொடிக்கு உரியவராக தேர்வு பெற்ற "ஹவ்லுல் கவ்தர்" என்ற சுவர்க்கத்து தடாகத்தின் ஆதிபத்யம் பெற்ற,வள்ளல் தன்மை தயாளகுணம் ஆகியவற்றின் ஊற்றுக் கண்ணாகிய உன்னதரை நீங்கள் கருவில் சுமந்திருக்கிரீர் என்று கூறி சென்றார்கள்.

எட்டாம்_மாதத்தில் தோன்றிய நபி ஸுலைமான் அலைஹிஸ்ஸலாம் அவர்கள்," மகளே நீங்கள் நபித்துவத்தின் முத்திரையான கடைசி திருத்தூதரை கருவுற்றிருக்கிறீர்",, என்று சொல்லி சென்றார்கள்.
ஒன்பதாம் மாதத்தில் தோன்றிய நபி ஈஸா அலைஹிஸ்ஸலாம் அவர்கள்," தங்கையே நீங்கள் நித்திய மார்க்கமாம் சத்திய தீனுல் இஸ்லாத்தினை சம்பூரணம் பெறச்செய்திடும் சத்தியவான நாகரீகமான நாவன்மைக்குச் சுரங்கமான நபிகள் நாயகத்தை பரிசுத்தமான பாரம்பரியச் சிறப்புடைய பைகம்பரை கருவுற்றிருக்கிறீர்" என்று கூறி சென்றார்கள்...!!!
இப்படி கனவில் வந்து சுபச் செய்தி சொன்ன அனைத்து நபிமார்களும் நேர்வழி- வெற்றி ஆகியவற்றின் உதய சூரியனாக திகழப்போகும் அந்த நேர்த்திமிகு நேர்மையாளரை நீங்கள் பெற்றெடுத்து அவருக்கு முஹம்மது என்று பெயர் சூட்டுங்கள்" என்று கூறி சென்றார்கள்....!!!
ஸல்லல்லாஹு அலா முஹம்மது ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் (ஸித்றத்துல் முன்தஹா பதிவிலிருந்து )

**இரு நபிமார்களின் அந்தஸ்துகள் 30**



அகிலத்தின்_பேரொளியை தன் மணிவயிற்றில் சுமந்த அன்னை ஆமினா அம்மையார் வரலாறு ! (பாகம் 2)
ஹழரத் அப்துல்லாஹ் இப்னு அப்துல் முத்தலிப் ரலியல்லாஹூ அன்ஹூ அவர்களின் தாயார் பெயர் ஃபாத்திமா பின்த் அம்ரு இப்னு ஆயித்.
அன்பே_உருவாய் அருள் நபியவர்கள் அன்னை ஆமினா அம்மையாரின் மணி வயிற்றில் வளர்ந்து வந்தார்கள்.
வையகம் சிறக்க வந்த திரு நபியவர்கள் அன்னை ஆமீனா அம்மையாரின் மணி வயிற்றில் வளர்ந்து வந்த ஆறாம் மாதத்தில் அவர்கள் தந்தை அப்துல்லாஹ் ரலியல்லாஹூ அன்ஹூ அவர்கள் தனது தந்தையாரின் வேண்டுதலுக்கு இணங்க வர்த்தகம் பண்ண ஷாம் நகர் நோக்கி சென்றார்கள்.
வணிகம் பண்ணசென்ற தந்தை அப்துல்லாஹ் ரலியல்லாஹூ அன்ஹூ அவர்கள் வணிகம் சிறப்புற நடந்தது.
குறைசியரின் ஒரு வியாபார குழுவுடன் திரும்ப வரும்போது நோய்வாய்ப்பட்டு மதீனாவில் தங்கினர்.
மீண்டும் மக்கமாநகர் நோக்கி வரும் போது இடையில் அபுவாபு என்ற ஊரை அடைந்தனர்.நோய்_அதிகரித்து இறை நாட்டபடி அங்கேயே மரணடைந்தார்கள்.அப்போது அவர்களுக்கு 25 வயது.
அவர்களை அபுவாபு என்ற ஊரில் நாபிகா என்பவரின் இல்லத்தில் நல்லடக்கம் செய்யப்பட்டது.
நபிகள் பெருமானாரின் தந்தை காலமான செய்தியை அவர்களுடன் சென்ற உற்றாரும் உறவினரும் மக்கமா நகர் வந்து தந்தை அப்துல் முத்தலிபு ரலியல்லாஹூ அவர்கள் இடம் தெரிவித்தபோது அவர்கள் அடைந்த துயர் அளவில்லை.
இச்செய்தி கேட்ட கேட்ட அன்னை ஆமினா அம்மையார் அவர்கள் அடைந்த துயரத்தை வார்த்தைகளால் விவரிக்க முடியாதது.கர்ப்பிணியான தனது மருமகளின் தாங்கி கொள்ள முடியாத சோகத்தை கண்ட அப்துல் முத்தலிப் ரலியல்லாஹூ அவர்கள் ஆறுதல் கூறினர்.

ஆற்றமுடியாத வேதனையை மனதில் சுமந்த அன்னை ஆமீனா அம்மையாரின் மனம் இது இறைவனின் நாட்டம் என்று மனதை தேற்றி கொண்டார்கள்.
அப்துல்லாஹ் ரலியல்லாஹூ அன்ஹூ அவர்கள் இறக்கும் போது தனது குடும்பத்துக்கு வைத்து சென்றது,,,
ஐந்து ஒட்டைகள், சிறிய ஆட்டுமந்தை,, மற்றும் உம்மு ஐமன் என்ற "பரகா" நீக்ரோ அடிமை பெண் அவர்கள் விட்டு சென்றது.
அன்னையாரின் மணி வயிற்றில் வளரும் அண்ணல் நபியவர்கள் அவனியில் அவதரிக்க வேண்டிய பொன்னான நேரமும் வந்தது.
ஈருலகிற்கும் இரட்சகராக ரஹ்மத்துலில் ஆலமீனாக இலங்கும், நூருக்குள் நூராக வந்துதித்த, உயிரிலும் மேலான கண்மணி ஹபீப் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களை ஈன்றெடுத்த அருமைத் தாயார் அன்னை ஆமினா ரழியல்லாஹு அன்ஹா அவர்கள் கூறிகிறார்கள்,
கண்மணி நாயகம் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களை அன்னை ஆமினா அம்மையார் கருவில் சுமந்த போது கடினத்தையோ, கஷ்டத்தையோ அவர்கள் உணரவில்லை.
அவர்கள் வானத்திலும், பூமியிலும் சிறப்பு மிக்க ஒருவரையல்லவா கருவில் சுமந்திருக்கின்றார்கள்
அவர்கள் வருகை நெருங்கிய போது அவர்களது ஒளியில் உலகம் பிரகாசிக்கவிருக்கும் நேரத்தில் பிரசவத்திற்குக் கொஞ்ச நேரமே எஞ்சியிருக்கையில்,

கண்கள் சிறிது உறக்கத்தைத் தழுவியதும் கனவில் ஒருவர் தோன்றி,, ஆமினாவே! மக்களில் சிறந்தவரை, நேரான வழியின் கதிரவனைச் சுமந்திருக்கின்றீர்! பிள்ளை பெற்றதும் முஹம்மது (ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்) என்று பெயர் வையுங்கள் என்று அவர்கள் கூறினார்கள்.
மேலும் அன்னையார் கூறுகின்றனர்,,,
"நான் நபி (ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்) அவர்களைப் பெறும் வேளையில் பிரசவ வேதனை ஏற்பட்ட போது, ஓர் காட்சியைக் கண்டேன்.
வானத்து நட்சத்திரங்கள் என் மேல் விழுந்து விடும் என்று நான் சொல்லும் அளவுக்குக் கீழே இறங்கக் கண்டேன்.
பிள்ளை பெற்றதும் என்னை நோக்கி வந்த ஒளியினால் நாங்கள் இருந்த வீடு பிரகாசித்தது.
நான் காணும் பொருளெல்லாம் ஒளியாகவே காட்சியளித்தது'' என்று அன்னை ஆமினா அம்மையார் எனது தாயாரிடம் கூறியதாக எனது தாயார் எனக்கு அறிவித்தார் என்று உஸ்மான் பின் அபுல் ஆஸ் (ரலியல்லாஹு அன்ஹு) கூறுகின்றார்கள்.
(நூல்: தப்ரானி)

நான் அல்லாஹ்வின் அடியான். நபிமார்களின் முத்திரையாவேன். (அப்போது) நிச்சயமாக பாவா ஆதம் தனது களி மண்ணுக்கிடையில் இருந்தார்.
இதைப்_பற்றி நான் உங்களுக்கு அறிவிக்கின்றேன். நான் இப்ராஹீம் (அலைஹிஸ்ஸலாம்) அவர்களின் பிரார்த்தனையும், ஈஸா (அலைஹிஸ்ஸலாம்) அவர்களின் நற்செய்தியும், என் தாய் கண்ட காட்சியும் ஆவேன். அவ்வாறு தான் நபிமார்களின் அன்னையர் காண்பார்கள். நிச்சயமாக அல்லாஹ்வின் தூதரை அவர் பெற்ற போது ஓர் ஒளி அவருக்குப் பிரகாசித்தது.
அதில் சிரியாவின் கோட்டைகள் தெரிந்தன.
அறிவிப்பவர்கள். : இர்பாள் பின் சாரியா (ரலியல்லாஹு அன்ஹு) நூல்: அஹ்மத் 16525.
யா ரஸூலல்லாஹ்! உங்களின் விஷயத்தின் துவக்கம் எப்படி?'' என்று நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களிடம் கேட்ட போது,,,
"நான் இப்ராஹீம் நபியின் பிரார்த்தனையும், ஈஸா நபியின் நற்செய்தியுமாவேன். எனது_தாயார் (நான் பிறக்கும் போது) ஒளி தோன்றக் கண்டார்கள். அந்த ஒளியின் வெளிச்சத்தில் சிரியாவின் கோட்டைகள் தெரிந்தன'' என்று பதிலளித்தார்கள்.
அறிவிப்பவர்கள் : அபூ உமாமா ரலியல்லாஹு அன்ஹு
நூல்: அஹ்மத் 21231.
ஸல்லல்லாஹு அலா முஹம்மது ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் ( ஸித்றத்துல் முன்தஹா பதிவிலிருந்து )

இரு நபிமார்களின் அந்தஸ்துகள் 31

اللهم صل على محمد وآل محمد

அகிலத்தின் பேரொளியை தன் மணி வயிற்றில் சுமந்த அன்னை ஆமினா அம்மையார் வரலாறு. பாகம் 3
கண்மணி நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் பிறப்பின் சிறப்பு உலகில் அவர்களுக்கு மட்டுமே உள்ள தனிச்சிறப்பு.

கண்மணி நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் நூரை சுமந்த அவர்களின் பெற்றோர்களான அன்னை ஆமினா ரலியல்லாஹு அன்ஹா , தந்தை அப்துல்லாஹ் ரலியல்லாஹு அன்ஹு அவர்களையும் அல்லாஹு ஆலா மிகவும் சிறப்பாக கண்ணியப்படுத்தி இருக்கிறான்.
பாவா நபி ஆதம் அலைஹி வஸல்லம் அவர்களில் இருந்து தொடரான பரம்பரையாக,,நூரெ முஹம்மதியாவைகொண்டு,, நபி இப்ராஹீம் அலைஹிஸ்ஸலாம் அவர்கள் வம்சம் தொடர்ந்து,,
வந்த அனைத்து குடும்பங்களையும் பாட்டனார் அப்துல் முத்தலிப் ரலியல்லாஹு அன்ஹு வரை பரிசுத்தமாக்கி கண்ணியப்படுத்தி இருக்கிறான்.ஸூப்ஹானல்லாஹ்.

நபிகளார் கண்மணி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் பிறந்த பொழுது அப்துர் ரஹ்மான் இப்னு அவ்ஃப் ரலியல்லாஹு அன்ஹு அவர்களின் தாயார் கண்ட அதிசயக் காட்சியைஅவர்களே வர்ணிக்கிறார்கள்:
குழந்தை பிறந்து என் கரத்தில் வந்தபோது அந்த இல்லத்தின் மூலையிலிருந்து ஒரு அசரீரி முழங்கியது:
“உம் இறைவன் உமக்கு அருள் புரிவானாக!''அதன்பின் அங்கு பிரகாசம் தோன்றியது.அதன் ஒளியில் சிரியாவின் கோட்டைகளெல்லாம் காட்சி அளித்தது.ஸுப்ஹானல்லாஹ்

அன்னை ஆமினா அம்மையார் பிரசவத்தை நேரில் கண்ட ஒரு பெண்மணியின் வாக்கு மூலம்: அன்று இரவில் இல்லத்திலிருந்த அனைத்தும் ஒளிர்ந்தன; விண்மீன்கள் எங்கே அவை என்மீது விழுந்து விடுமோ என்று நான் எண்ணுகிற அளவுக்கு மிக நெருக்கமாகவந்தன

عن عثمان بن أبي العاص ، قال : حدثتني أمي ، أنها شهدت ولادة آمنة بنت وهب رسول الله صلى الله عليه وسلم ، ليلة ولدته . قالت: » فما شيء أنظر إليه في البيت إلا نور ، وإنيلأنظر إلى النجوم : تدنو حتى إني لأقول : ليقعن علي «
நபியவர்களோ விழி திறந்தவர்களாக வானை நோக்கியவர்களாக இருப்பதைக் கண்டு அதிசயப்பட்டனர்.
காலிரண்டும் முந்தினதாகவும், வானத்தை

பார்த்தவர்களாகவும்,புன் சிரிப்புடையவர்களாகவும்
கண்களில் சுருமாவும் எண்ணையும் போடப்பட்டவர்களாகவும்
அவர்கள் உதித்தார்கள்.
இன்னும் மற்றவர்கள் காணக்கூடாதென்பதற்காக அவர்களின் இடது கரத்தால் தன்இரகசிய இடத்தை மறைத்தவர்களாவும்,
கத்னா செய்யப்பட்டவர்களாகவும் இன்னும் அல்லாஹ் ஒருவனே என்று சைக்கினை செய்வதற்காக தன் வலது கரத்தின் கலிமா விரலை உயர்த்தினவர்களாகவும்
அவர்கள் பிறந்தார்கள்.

அன்னை ஆமினா அம்மையார் அவர்கள் கூறுகையில் : பிரசவிக்கும் நேரம் வந்துற்ற போது எனக்கு எவ்வகையான,நோவினைகளும் ஏற்படவில்லை..!
அன்று இரவு நான் உறங்கிக்கொண்டிருக்கும்போது,,
வெள்ளை உடை அணிந்த உருவம் என் முன் தோன்றி,,
"எவ்வகை தேவைகளுமற்ற பரிசுத்தமான அல்லாஹ்விடம் நீ காவல் தேடிக்கொள், "பொறாமைக்காரர்களின் சகலவிதமான ,
தீங்குகளை விட்டும் " என்று கூறியது..!
நானும் அவ்வாறே பாதுகாவல் தேடினேன் ! அப்போது எனது அறையில் ஒளிவெள்ளமாக பிரகாசித்தது..!அப்போது அங்கே நான் கண்ட காட்சி என்னை ஆனந்த பரவசத்தில் ஆழ்த்தியது !
பிர்அவ்னின் மனைவியும் நபி மூஸா அலைஹிஸ்ஸலாம் அவர்களை வளர்த்த ஆசியா அம்மையாரும் ஈஸா நபி அலைஹிஸ்ஸலாம் அவர்களின் தாயாருமான
பரிசுத்தத்தமான மர்யம் அம்மையாரும், அங்கே காட்சியளித்ததோடு ஹூருல்ஈன் எனும் சுவர்க்கத்து ரம்பையர் கூட்டம் கூட்டமாக காட்சியளிக்கக் கண்டேன் !
அதை கண்ணுற்ற கொஞ்சநேரத்தில் எனக்கு பிரசவம் ஆனது..! நான் பிரசவித்த அந்த என் செல்வ குழந்தையை அனைவரும் எடுத்து முத்தி மோகனம் பெற்றனர் !
அந்த நேரம்,ஒரு பேரொளிக் கீற்று தோன்றி மறைந்தது !
அந்த ஒளிவெள்ளத்தில் உதயகிரி முதல் அஸ்தகிரி வரையிலுள்ள அகிலத்தின் காட்சிகள் அனைத்தையும் கண்டேன்..!
பிறந்த சிறிது நேரத்தில் மலக்குகள் வந்து எனது அந்த அற்புத குழந்தையை சுவனத்தின் சுந்துஸ் இஸ்தப்ரக் எனும் பட்டுத் துணிகளால் பொதிந்து,தூக்கிச் சென்று அகிலமனைத்தையும் வலம் சுற்றியதை என் கண்களால் கண்டு வியந்தேன் !
இத்தகு அற்புதங்களை கண்ட போதுதான் நான் கர்ப்பம் முற்றிருக்கும் போது மாதந்தோறும் ஒவ்வொரு நபியாக என்னிடம் தோன்றி எனது மகனை குறித்து முன்னறிவிப்பு செய்த அந்த மகிமைகளை உணர்ந்தேன்.
சிறிது நேரத்தில் பாட்டனார் அப்துல் முத்தலிப் ரலியல்லாஹு அவர்கள் ரஸூல்லுல்லாஹ் ஸல்லல்லாஹூ அலைஹிவஸல்லம் அவர்கள் வந்து பிறந்த தனது பேரப்பிள்ளையை தம் கரங்களில் ஏந்தி முத்தமிட்டு...,,,
தூக்கி கொண்டு கஃபாவை தவாஃபு செய்து இறைவனுக்கு நன்றி செலுத்தி துஆ செய்தார்கள்.!கருணை உள்ள ரப்பே இந்த குழந்தைக்கு நீதான் முழுப்பாதுகாப்பு அளிக்க வேண்டும் என்று... மனமுருக பிரார்த்தித்தார்கள்.!
ஆடு அறுத்து அகீகா கொடுத்து மக்காவில் உள்ள உறவினர் அனைவருக்கும் பெரிய விருந்து வைத்து மகிழ்ந்தார்கள்.!

பிறந்த பிள்ளைக்கு அகீகா கொடுத்த
முஹம்ம (ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம்) என்று பெயர் சூட்டினார்கள்.!
தூய்மையான இந்தக்குழந்தையை எங்களுக்கு அளித்த அல்லாஹ்வுக்கே எல்லா புகழும் அல்ஹம்துலில்லாஹ் என்று புகழ்ந்து கஃபாவை தவாஃபு செய்தார்கள்..!!
நபி_ஈஸா அலைஹிஸ்ஸலாம் இந்த பூவுலகிலிருந்து வானுலகுக்கு உயர்த்தப்பட்டு 570 ஆண்டுகளுக்குப் பிறகு, ஒரு ரபியுல்-அவ்வலிலே, எங்கள் உயிரினும் மேலான உத்தம நபி ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அன்னவர்கள், இந்த அவனியிலே வந்தெழுந்தார்கள்.
ஸையிதா அன்னை ஆமினா ரலியல்லாஹு அன்ஹா, தன் அருள் மிகுந்த ஆருயிர் மகனார் ﷺ அன்னவர்களை, ஸையுதுனா அப்துல் முத்தலிப் ரலியல்லாஹ் அவர்களின் இல்லத்தில் ஈன்றெடுத்து இந்த அவனிக்குத் தந்தார்கள்..
நபிகளார் ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அன்னவர்கள் பிறந்த அன்று மக்காவில் வாழ்ந்த ஒரு யூதன்,கண்மணி நபிகள் நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்
அவர்கள் பிறந்த அன்றிரவு குறைஷிகளின் கூட்டத்தில் வந்து
இன்றிரவு உங்களில் யாருக்காவது ஒரு குழந்தை பிறந்துள்ளதா? என்று கேட்க, அல்லாஹ்வின் மீது ஆணையாக அப்படி ஒன்றும் நாங்கள் அறியவில்லையே
என்றார்கள் குறைஷிகள்.
அவன் கூறினான்: நான் கூறுவதை நன்றாகக் கவனியுங்கள்.
இன்றிரவு உங்களில் ஒரு நபி பிறந்துள்ளார்.

அவரின் இரு புஜங்களுக்கிடையில் ஒரு அடையாளம் இருக்கும். அதில் சில ரோமங்கள் இருக்கும்.இதைக்கேட்டு அவர்கள் ஆச்சரியத்துடன் கலைந்து சென்றனர்.
தங்கள் இல்லம் சென்று மனைவிமார்களிடம் இதுபற்றி
விசாரித்தபோது அப்துல்லாஹ்விற்கு ஒரு ஆண்குழந்தை பிறந்திருப்பதாகவும் முஹம்மது என்று பெயர் வைக்கப் பட்டிருப்பதாகவும் தெரிவித்தனர் அந்த யூதனிடம் தெரிவிக்கப்பட்ட போது அவன் வந்து பார்த்தான்.
பிறந்த குழந்தையின் முதுகில் நபித்துவ முத்திரையின் அடையாளம் இருப்பதைக் கண்டு மயக்கம் போட்டு விழுந்தான்.மயக்கம் தெளிந்து எழுந்து கூறினான்;
அல்லாஹ்வின்மீது ஆணையாக! நபித்துவம் பனூ இஸ்ரவேலர்களிடமிருந்து எடுபட்டுவிட்டது.
குறைஷிகளே! உங்களுக்கு மகத்தான ஆட்சி அதிகாரம்
கிடைக்கப்போகிறது;அந்த செய்தி கிழக்கிலிருந்து
மேற்குவரை பரவப் போகிறது.

நபி ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அன்னவர்களின் நட்சத்திரம் உதயமானதைக் கூட நன்கு
அறிந்திருந்ததனர்
யூத அறிஞர்கள்...!!
عن حسان بن ثابت ، قال : » إني لغلام يفعة ابنسبع سنين أو ثمان ، أعقل كل ما رأيت وسمعت ، إذا يهودي بيثرب يصرخ ذات غداة )1( : يا معشر يهود فاجتمعوا إليه وأنا أسمع ، قالوا : ويلك ما لك ؟
قال: طلع نجم أحمد الذي ولد به في هذه الليلة «)المطالب العالية لابن حجر العسكلاني
ஹஸ்ஸான் இப்னு தாபித் (ரலியல்லாஹு தஆலா அன்ஹு)

அவர்கள் கூறுகிறார்கள்: நான் ஏழு எட்டு வயது சிறுவனாக
சொல்வதைப் புரிந்து கொள்ளக் கூடிய பருவத்தில் இருக்கும் போது ஒருநாள் ஒரு யூதன் யத்ரிபின் (மதீனாவின்) வீதியில் நின்று அலறினான்...
''ஓ யூதர்களே..!"என்ன ஆயிற்று உனக்கு? (ஏன் இப்படி கத்துகிறாய்?) என்று மற்ற யூதர்கள் ஒன்று கூடி வினவினர்.
''இந்த இரவில் பிறக்கும்' அந்த குழந்தைக்கான' வின்மீண் வானில் தோன்றிவிட்டது''என்றான
நபிகளார் ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அன்னவர்கள் பிறந்தவுடன்,இணை வைப்போர்களால் வணங்கப்பட்ட சிலைகள் குப்புற வீழ்தன...!!
சைத்தான்களின் தலைவன் இப்லீஸின் சிம்மாசனம் உடைந்தது.அவன் தன்தலையில் மண்ணைவாரி போட்டுக் கொண்டான்

உண்மை வந்துவிட்டது என அறிவிக்கும் சைகையாக முஸ்லிம்களால் பயன்படுத்தப்பட்ட, வற்றிருந்த. ஸமாவா எனும் சிற்றாறு பொங்கி ஓடத் துவங்கியது...!!!
பொய் அழிந்து விடும் என அறிவிக்கும சமிக்கையாக காபிர்களால் பயன்படுத்தப்பட்ட, ஸாவா விலிருந்த ஓடிக்கொண்டிருந்த புஹைரா எனும் சிறு கடல் வற்றியது...!!!
ஆட்சி கைமாறி விட்டது என அறிவிக்கும் சைக்கினையாக
கிஸ்ரா வின் கோட்டைகளும்14 கொத்தளங்களும் தரையில்
உடைந்து வீழ்ந்தன.
ஆயிரக்கணக்கான வருடங்களாக அணையாமல் இருந்த, பாரிஸீகளால் வணங்கப்பட்டுக் கொண்டிருந்த தீ அணைந்து விட்டது.
சாஸ்திரிகளின் தவம் இயற்றும் மாளிகைகள் உடைந்தன....!!
சைத்தானும் அதன் குட்டிகளும் தன் சக்தியை இழந்தன..
"ஸுப்ஹானல்லாஹ்"
ஆமினா அம்மையார் கருவுற்றிருக்கும் போது,,, ஆண்குழந்தை பிறக்கும் என்றும்,, அஹ்மது (புகழ்பவர்) என்று பெயரிடுமாறு காணபட்டது.அதன்படி தனது ஆருயிர் மகனுக்கு அஹமத் (புகழ்பவர்) என்று பெயரிட்டார்கள்..!!

## இரு நபிமார்களின் அந்தஸ்துகள் 32

அகிலத்தின்_பேரொளியை தன் மணி வயிற்றில் சுமந்த அன்னை ஆமினா அம்மையார் வரலாறு. (பாகம் 4)
கண்மணி ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அன்னவர்களின் பாட்டனார் அப்துல் முத்தலிப் ரலியல்லாஹ் அவர்கள் மக்காவின் தலைவராக இருப்பதால் அனைத்து தலைவர்களை அழைத்து விருந்து வைத்து பெயர் வைத்தார்கள்..!!
விருந்து மண்டபத்தில் நடக்கும் மகிழ்ச்சி ஆரவாரங்கள் வீட்டினுள் இருக்கும் அன்னை ஆமினா அம்மையார் அவர்கள் செவிகளில் விழுந்தாலும் அவர்களின் மனம் சொல்ல முடியாத வேதனையில் மூழ்கி இருந்தது.

ஓராண்டுக்கு முன் இம்மாதிரியான இரவில் தாம் பட்டாடையுடுத்தி பல நகைகள் அணிந்து நறுமணம் பூசி மணப்பெண்ணாய் இருந்ததையும் இன்று இன்று விதவையாக இருப்பதையும் எண்ணி அவர்களின் மனம் புண்ணாகியது.

கண்கள் கண்ணீரை சிந்தியது. எனினும் தன் கவலை தீர்க்க தன் அருமை மகனையாவது அல்லாஹ் தந்தானே என்று மனம் ஆறுதல் அடைந்தார்கள். தன்_அருமை குழந்தையை உச்சி முகந்து உள்ளந்தழுவி மார்போடணைத்து கொஞ்சுவதே அவருடைய துன்பம் தீர்க்கும் மருந்தாக இருந்தது.
இதற்கிடையில் அன்னை ஆமினா அம்மையார் அவர்கள் சகோதரர்கள் தன் தங்கையை அணுகி பிறந்த உனது மகன் பிற்காலத்தில் அரசராகவும் மாபெரும் மதத்தலைவராகவும் வருவார் என்று ஆறுதல் கூறியும் உறவினர்கள் எவ்வளவோ ஆறுதல் சொல்லியும் அன்னை ஆமினா அம்மையார் உள்ளம் மகிழ்வெய்த வில்லை.
தன் அன்புக்கணவரையும் தந்தையை இழந்த தனது அருமை பிள்ளையையும் நினைத்து துன்பத்தோடு இருந்ததால் ஏழு நாட்களுக்கு மேல் தாய்பால் ஊட்ட முடியவில்லை...

அரபு_நாட்டு வழக்கப்படி உயர்குடியில் பிறந்த பிள்ளைகள் எல்லாம் செவிலித் தாய்மார்கள் மூலமாக பாலூட்டி வளர்க்குமாறு ஒப்படைக்க படுவது வழக்கமாக இருந்தது.
அவ்விதமே அன்னை ஆமினா அம்மையார் தனது அருமை மகவை பனீ ஸஅது குலத்தை சேர்ந்த ஹலீமத்து ஷஃதியா (ரலியல்லாஹுஅன்ஹா) என்ற பெண்மணியிடம் ஒப்படைத்தார்கள்.
தன் அருமை குழந்தையை ஹலீமா ரலியல்லாஹுஅன்ஹா அவர்கள் இடம் பாலூட்ட ஒப்படைத்து இரண்டு வருடங்கள் ஆனதும் மக்காவுக்கு அழைத்து வந்தனர்.
ஆனால் மக்கா வந்ததும் பிள்ளையை இன்னும் கொஞ்ச நாட்கள் நமது நம்மிடம் இருந்தால் பரகத்தாக இருக்குமே என்று எண்ணிய, ஹலீமா அம்மையாருக்கு பிரிய மனமில்லாமல் அன்னை ஆமினா அம்மையார் இடம் வேண்டிக் கொண்டனர்.

அந்த நேரத்தில் மக்காவில் காலரா நோய் ஏற்பட்டு இருந்ததாலும் அவர்கள் இடமே திரும்ப ஒப்படைத்து அனுப்பி வைத்தார்கள்.
நான்கு வயதான போது கண்மணி ஸல்லல்லாஹுஅலைஹி வஸல்லம் அவர்களை ஹலீமா ரலியல்லாஹு அன்ஹா அவர்கள் தாயார் அன்னை ஆமினா அம்மையார் அவர்கள் இடம் ஒப்படைத்து விட்டனர்.
தன் அருமை மகனோடு அம்மையார் வாழும் காலங்களில் தன் மகனை பார்த்து தன்னை விட்டு பிரிந்த தனது கணவரின் நினைவால் சில சமயங்களில் கண்ணீர் விடுவார்கள்.

தன் ஆருயிர் மகன் தனது தந்தை இல்லாமல் அனாதை ஆகி விட்டார்களே என்று அவர்கள் மனதில் நினைத்து மனம் கலங்கினார்கள்.இதுவும் இறைநாட்டம் என்று மனம் பொருந்திக் கொண்டார்கள்.
தனது மகனை வயிற்றில் சுமந்த போதும் பிறந்த போதும் நடந்த அதிசயங்களை நினைத்து தனது மகன் எதிர்காலம் சிறப்பானதாக இருக்கும் என்று மன ஆறுதல் அடைந்தார்கள்.
பாட்டனார் அப்துல் முத்தலிப் ரலியல்லாஹுஅவர்கள் தனது பேரரின் மீது மற்ற அனைவரையும் விட பாசத்தோடு நேசத்தோடு கவனித்து பராமரித்தது அம்மையார் அவர்களுக்கு ரொம்பவும் ஆறுதலாக இருந்தது.
இந்த நேரத்தில் கண்மணி ஸல்லல்லாஹுஅலைஹி வஸல்லம் அவர்கள் தன் அருமை அன்னையிடம் வளர்ந்து ஆறு வயதாகும் போது அன்னை ஆமினா அம்மையார்,,

"எனது அருமை மகனே..!! மதீனாவிலுள்ள நமது சொந்தங்களை உனக்கு அறிமுகப்படுத்தித் தரட்டுமா?
என்று கூறி,மறைந்த தனது ஆருயிர்க் கணவர் அப்துல்லாஹ் ரலியல்லாஹ் கப்ரை ஜியாரத் செய்ய எண்ணி, தானும் கண்டு, தனது பிள்ளைக்கும் காட்டிட விரும்பிய ஆமினா அம்மையார் மதினாவுக்கு அழைத்து சென்றார்கள்.
தன் ஆருயிர் மகனையும் துணைக்கு தனது அடிமை பெண்ணாக இருந்த உம்மு ஐமன் ரலியல்லாஹுஅன்ஹா அவர்களை அழைத்து கொண்டு மதீனா நோக்கி பயணம் புறப்பட்டார்கள்.
ஸல்லல்லாஹுஅலா முஹம்மது ஸல்லல்லாஹுஅலைஹி வஸல்லம் ( ஸித்றத்துல் முன்தஹா பதிவிலிருந்து )

## இரு நபிமார்களின் அந்தஸ்துகள் 33

அகிலத்தின் பேரொளியை தன் மணி வயிற்றில் சுமந்த அன்னை ஆமினா அம்மையார் வரலாறு.( பாகம் 5)
தனது ஆருயிர் செல்வ மகனை அழைத்துப் போய் யத்ரிபில் வசிக்கும் தம் உற்றார் உறவினரிடம் காண்பித்து வரவும்,தனது அன்புக்கணவர் அப்துல்லாஹ்வின் அடக்கஸ்தளத்தை தரிசித்து வரவும் அன்னை ஆமினா அம்மையார் எண்ணங்கொண்டார்.
எனவே, தமது பணிப்பெண்ணான பரகா என்ற உம்மு ஐமனையும் பாலகர் முஹம்மதையும் (ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்) அழைத்துக் கொண்டு அப்துல் முத்தலிபிடம் விடைபெற்று யத்ரிபுக்குப் பயணமானார்கள்.

மதினா சென்று தம் உற்றார் உறவினர்களைச் சந்தித்து உரையாடி நலம் கேட்டுத் தம் மாணிக்க மைந்தர் முஹம்மதுவையும் (ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்) அவர்களுக்கு அறிமுகப்படுத்தினார். தனயனை அழைத்துச் சென்று, தம் கணவர் நோயுற்றுக் காலமான தம் சகோதரன் இல்லத்தையும் காண்பித்தார். தனது அருமை கணவர் அடக்கமான இடத்தையும் ஜியாரத் செய்தார்கள்.

தாயார் சொன்ன செய்திகளும் அடையாளம் காட்டிய இடங்களும் பாலகர் முஹம்மதுவின் (ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்) பிஞ்சு உள்ளத்தில் பசுமரத்தாணியெனப் பதிந்து என்றும் நினைவில் நின்று வந்தன.
ஒருமாத காலம் யத்ரிபில் தங்கிய பின்னர், அன்னை ஆமினா தம் பாலகரையும், பணிப்பெண்யையும் அழைத்துக் கொண்டு உறவினரிடம் பிரியா விடை பெற்று மக்காவை நோக்கிப் பயணமானார்கள்..
பயணம் தொடர்ந்த சில தினங்களில் பயணிகள் மூவரும் யத்ரிபுக்கும் மக்காவுக்கும் இடையிலுள்ள அபுவா என்ற சிற்றூரை அடைந்தனர்.மக்காவை நெருங்க இரண்டு இரவுகளே உள்ள நிலையில் தாயார் ஆமினா அம்மையாருக்கு காய்ச்சல் முற்றுகிறது..

சிறுவரான ஆறு வயதே ஆன நபி (ஸல்லல்லாஹுஅலைஹி வஸல்லம் ) அவர்களுக்கு தெரியவில்லை அது தாயின் சக்கராத்தென்று
கண்மணி நபிகளார் பார்க்கபோகும் முதல் மரணம் அது..
ஆனால் அந்த தாயிக்கு புரிந்துவிட்டது இது தன் கடைசி நேரமென்று.தன் மகனின் மடியில் படுத்தவாறே அவர் கண்ணத்தை தடவியபடியே கூறுகிறார்கள்.."மகனே ! பொறுமையாக இரு..
இவ்வுலகில் வந்த ஒவ்வொரு உயிரும் மரணமடைந்தே தீரும்..
அல்லாஹ் யாரையும் விடமாட்டான்.ஒவ்வொரு வாலிபமும் வயோதிகமாகும்.ஒவ்வொரு இன்பமும் அழியும்.மகனே! பொறுமையாக இரு!"எனக்கூறி
தனது அடிமைபெண் பராக்காவிடம் "பரக்கா! எனது இவ்வுலக வாழ்க்கை முடியப்போகிறது. என் மகன் முஹம்மதை உன் பொறுப்பில் அளிக்கிறேன். என் வயிற்றில் இருக்கும்போதே தன் தந்தையை இழந்த சிறுவன் இதோ இப்போது தன் கண்ணெதிரே தாயையும் இழக்கப்போகிறான். ஒரு தாயாய் அவனைக் கவனித்துக் கொள் பராக்கா. அவனை விட்டு விலகாதே.”
அதை பராக்காவால் தாங்கிக்கொள்ள முடியவில்லை. நெஞ்சம் வெடித்துவிடும் போலிருந்தது அவருக்கு.புலம்பி அழ ஆரம்பித்துவிட்டார்.
அதைக் கண்ட சிறுவர் முஹம்மது ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் விஷயம் முழுதாய்ப் புரியாவிட்டாலும் ஏதோ துக்கம் என்று தெரிந்து கொண்டு விம்ம அழ ஆரம்பித்து விட்டார்கள்.
தம் அன்னையின் கைகளுக்குள் புதைந்து கழுத்தை இறுக கட்டிக் கொண்டார்கள். அன்னை ஆமினாவிடமிருந்து ஓர் இறுதி முனகல் வெளிப்பட்டு அடங்கியது.

ஆறு வயதுப் பாலகன் முற்றிலும் நிராதரவரானார்..!!(இன்னாலில்லாஹி வ இன்னா இலைஹி ராஜிஊன்)
கண்மணி நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் பிறக்கும் முன்பே தந்தையை இழந்து தாயின் அரவணைப்பில் வளர்ந்து வந்தார்கள்.அவர்களுக்கு 6 வயதான போது தாயார் ஆமினா அம்மையார் அவர்களும் தனது 26 ம் வயதில் இறைவனடி சேர்ந்து விட்டார்கள்.
துக்கத்தை அடக்க முடியாமல் அழுதார் பராக்கா என்ற உம்மு ஐமன். உடலும் கண்களும் களைத்துப் போகும் வரை அழுதார்.

கண்மணி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அன்னவர்கள் பிற்காலத்தில் உம்மு ஐமன் ரலியல்லாஹு அன்ஹா அவர்களை என்னை வளர்த்த அன்னை என்று அதிக பிரியத்துடன் சொல்லி இருக்கிறார்கள்.
அந்த காட்டில் அந்த சிறிய மலைகுன்றில் மனித நடமாட்டம் இல்லாத இடத்தில் உதவிக்கு யாரும் இல்லை. பிறகு தம் கையாலேயே குழிதோண்டி, தம் எசமானி ஆமினா அம்மையார் அவர்களை நல்லடக்கம் செய்துவிட்டு, அழுது கொண்டிருக்கும் சிறுவர் முஹம்மது ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அன்னவர்களை அணைத்து ஆறுதலாக அவர்களின் கைகளை பற்றிக்கொண்டு மக்காநோக்கி நடக்கிறார்,சிறிது தூரம்கூட செல்லவில்லை. அவர் கைகளை உதறிவிட்டு ஓடிச்சென்று தனது தாயின் கபுரின் மேல்படுத்து அழுகிறார் சிறுவரான கண்மணி நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்.
"தாயே..! உங்களை விட்டு போகமாட்டேன். நீங்கள் எனக்கு தேவை" என தேம்பி தேம்பி அழுகிறார்கள். மக்கா வரை அழுதுகொண்டே செல்கிறார்கள்.
அன்னை ஆமினா அம்மையார் அவர்களை அப்வாவில் நல்லடக்கம் செய்து விட்டு பணிப்பெண் உம்மு ஐமன் பாலகர் முஹம்மதை (ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்) அழைத்துக் கொண்டு மக்கா நகர் வந்து சேர்ந்தார்.
நடந்த விபரங்களைப் பாட்டனார் அப்துல் முத்தலிபிடம் எடுத்துரைத்து குழந்தையை அவரிடம் ஒப்படைத்தார்.
இளம் வயதில் பெற்றோரை இழக்குமாறு பேரர் முஹம்மதுவுக்கு நேர்ந்த நிலையை எண்ணி அப்துல் முத்தலிப் ரலியல்லாஹு அவர்கள் அளவற்ற துயரமும் வேதனையுமடைந்து அழுது கண்ணீர் வடித்தார்கள்...!!
தனது பெற்றோரை இழந்த தனது கண்மணியான பேரரை நேசத்தோடு,உயிராக வைத்து கண்ணும் கருத்துமாக வைத்து வளர்த்தார்கள்.

பாலகர் முஹம்மது ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் தமது ஆறாண்டு வாழ்விலேயே அருமைத் தந்தையும், அன்புத் தாயுமற்று அநாதையாகி,நின்ற இந்நிலையைத்,தாங்களே வாழ்வில் அனுபவித்து அறிந்ததின் காரணமாகவே பிற்காலத்தில் பெருமானார் ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அன்னவர்கள்,,, அநாதைகள் மீது அளவற்ற கருணையோடு ஆதரவளித்து வந்தார்கள்.
கண்மணி ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்கள் வாழும் காலங்களில் சில காலம் செல்கிறது.இப்போது கண்மணி நபி ஸல்லல்லாஹூ அலைஹிஸ்ஸலாம் வஸல்லம் அன்னவர்களுக்கு வயது 63.
தனது_முதலும் கடைசிமான ஹஜ்ஜை நிறைவேற்ற மக்கா நோக்கி புறப்படுகிறார்கள். தனதுஅன்புத்தாய் அடக்கமாகியுள்ள அபுவா குன்றின் வழியாக தனது பயணத்தை அமைத்து கொண்டு,அந்த_இடம் வந்ததும் பயணக்கூட்டத்தை அன்று இரவு அங்கேயே தங்கச் சொல்லி விட்டு தான் மட்டும் மலைக்கு மேல் ஏறி தனது தாயின் கபுரின் முன்பு இருகால்களையும் கைகளால் கட்டிக்கொண்டு அமருகிறார்கள்..
6 வயதில் விட்டுசென்ற தாயை 63 வயது ஆனபோதும் தாயை மறக்கவில்லை.இடையில் 57 வருடங்களில் நபிபட்டம் கிடைத்த போதும் தன் தாயை மறக்கவில்லை.பத்ர் உட்பட பல போர்களின் வெற்றியிலும்- தன் தாயை மறக்கவில்லை.சித்றத்துல் முன்தஹா வரை விண்ணுலக பயணம் சென்று வந்தார்கள்.கண்மணி ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்கள் தாயை மறக்கவில்லை.

தனது_தாயின் கபுரை பார்த்து அழுது கொண்டே சொல்கிறார்கள்.. எனது_அருமை தாயே! நீங்கள் உயிரோடு இருந்திருந்தால் உங்களுக்கு எவ்வளவு பணிவிடைகளை செய்திருப்பேன் தெரியுமா...!!
நான் தொழுகையில் இருக்கும் போது நீங்கள்,, முஹம்மது முஹம்மது! என்று அழைத்திருந்தால் இதோ,, வந்துவிட்டேன் தாயே என்று தொழுகையை விட்டுவிட்டு உங்களுக்கு பணிவிடை செய்ய வந்திருப்பேனே..! அந்த பாக்கியம் எனக்கு கிடைக்கவில்லையே தாயே" என அழுது அழுது மனம் வருந்தினார்கள்.கண்ணீர் விட்டு துஆ செய்தார்கள்...!!
இதன்மூலம் யுக முடிவுநாள் வரையுள்ள அனைத்து மனிதர்களுக்கும் கண்மணி ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்கள் ஒரு செய்தியை தருகிறார்கள்.
நீ எத்தனை ஹஜ்ஜுக்கு போனாலும்.. எவ்வளவு தானதர்மங்கள் செய்தாலும்.. எத்தனை அமல்கள் செய்தாலும்.. பெற்றோர் உயிரோடு இருந்து அவர்களை கண்ணியப்படுத்தாவரை அவரின் எந்த அமலும் ஏற்றுக் கொள்ளப்படாது..
தாய் – தந்தையரிடம் மிக கண்ணியமான முறையில் நடந்து கொள்ளுங்கள்.பெற்றோரில் ஒருவரோ இருவருமோ முதுமை அடைந்துவிட்ட நிலையில் உம்மிடம் இருந்தால் அவர்களை"சீ,, என்றுகூடக் கூறாதீர்.மேலும் அவர்களைக் கடிந்து பேசாதீர். மாறாக அவர்களிடம் கண்ணியமாகப் பேசுவீராக. ( குர்ஆன் 17:23 ).
அகிலத்தின் பேரொளியை தன் மணி வயிற்றில் சுமந்த அன்னை ஆமினா அம்மையார் அவர்கள் வரலாறு நிறைவு பெற்றது.

யா அல்லாஹ் எங்களின் இருகண்களும் குளிர்ந்த கண்மணி ரஸூலுல்லாஹ் ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அன்னவர்கள் அவர்கள் குடும்பத்தினர்களான அஹ்லுல் பைத்தினர்கள்,அவர்களை பின்தொடர்ந்த ஸஹாபாக்கள் தாபியீன்கள் இறைநேசர்கள் அனைத்து நல்லோர்கள் பொருட்டால் எங்கள் பாவங்களை மன்னித்து எங்களுக்கு கிருபை செய்வாயாக. ஆமீன்.
ஸல்லல்லாஹூ அலா முஹம்மது ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் ( ஸித்றத்துல் முன்தஹா பதிவிலிருந்து )

## இரு நபிமார்களின் அந்தஸ்துகள் 34

( தாஹா நபியின் தனிப்பெரும் சிறப்பு )

ஹளரத் இப்னு அப்பாஸ் ரழியல்லாஹு அன்ஹுமா அறிவிக்கின்றார்கள்.
நமது உயிரினும் மேலான கண்மணி றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களின் தோழர்களில் சிலர் ஒன்றுகூடி உரையாடிக் கொண்டிருந்தனர்.
அப்போது கண்மணி நபிகளார் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லமவர்கள் வீட்டிலிருந்து வெளியேறி அவர்களைக் கடந்து செல்லுகையில்,
சஹாபாக்களில் ஒருவர் ‘நிச்சயமாக நபி இப்றாஹீம் அலைஹிஸ்ஸலாம் அவர்களை அல்லாஹுத்தஆலா நண்பனாக ஏற்றுக்கொண்டான் என்றார்கள்.
நபி மூஸா அலைஹிஸ்ஸலாம் அவர்களுடன் அல்லாஹ் வசனித்துள்ளான் என்று மற்றுமொருவர் கூறினர்.
நபி ஈஸா அலைஹிஸ்ஸலாம் அவர்கள் அல்லாஹ்வின் கலிமாவாகவும், அவனது றூஹாகவும் உள்ளார்கள் என்றார்கள் மூன்றாம் நபர்.
நான்காம் நபர் நபி ஆதம் அலைஹிஸ்ஸலாம் அவர்களை அல்லாஹ் ஆதி நபியாகத் தேர்ந்தெடுள்ளான் என்றார்கள்.
இவர்களின் இந்த உரையாடல் நபியவர்கள் ஸல்லல்லாஹு அலைஹிவசல்லம் அவர்கள் செவியில்பட்டதும், அவர்களைப் பார்த்து நபியவர்கள் இவ்வாறு நவின்றார்கள்.
‘நீங்கள் நபிமார்களின் சிறப்புக்களை வியந்து பேசியவைகளை நான் செவியேற்றேன்.
நீங்கள் கூறியது போன்று நபி இப்றாஹீம் அலைஹிஸ்ஸலாம் கலீலுள்ளாஹ் என்பது உண்மைதான்!
நபி மூஸா அலைஹிஸ்ஸலாம் அல்லாஹ்வுடன் வசனித்தார் என்பதும் உண்மைதான்!

நபி ஈஸா அலைஹிஸ்ஸலாம் அல்லாஹ்வின் றூஹும், அவனது கலிமா என்றும் நீங்கள் கூறியதும் உண்மைதான்!
பாவா ஆதம் அலைஹிஸ்ஸலாம் ஆதி நபி என்பதும் உண்மைதான்!
இப்போது நான் கூறுவதை நன்றாக அறிந்து கொள்ளுங்கள்! ‘நான் அல்லாஹ்வின் ஹபீப் நேசர் ஆவேன்! இதைப் பெருமைக்காகக் கூறவில்லை.
மறுமையில் ‘லிவாஉல் ஹம்து' என்ற கொடி எனது கரத்தில்தான் இருக்கும். இதனைப் பெருமைக்காக்க் கூறவில்லை.
சொர்க்கத்தின் தலைவாசலின் கதவுப் பிடியை முதலில் அசைப்பவரும் நானே!
சொர்க்கத்தின் கதவை அல்லாஹ் எனக்காகத் திறந்து அதில் என்னை அவனே முதலில் நுழைவிப்பான்.
ஏழை முஃமின்கள் என்னுடன் இருப்பார்கள். இதனால் மட்டும் எனக்குப் பெருமை கிடையாது.
முன்னோர், பின்னோர் யாவரிலும் நானே மிகச் சிறப்பானவன், இதுவும் பெருமைக்காகக் கூறப்பட்டவில்லை என்று கூறினார்கள்.
(நூல்: திர்மிதி, தாரமி, மிஷ்காத் பாகம் 2, பக்கம் 212)
ஸல்லல்லாஹுஅலா முஹம்மது ஸல்லல்லாஹுஅலைஹி வஸல்லம். (ஸித்றத்துல் முன்தஹா பதிவிலிருந்து)
" இரு நபிமார்களின் அந்தஸ்துகள் " என்கிற இத் தொடர் பதிவு இத்துடன் நிறைவு பெறுகிறது .

## அறிவு என்னும் அற்புதம் 1

( அறிவு - பர்ளு கிபாயா )



அறிவு பாராட்டப்படுவது போல், பிறருக்கு அறிவுறுத்துவதும் பாராட்டப்படுகிறது. கல்விக்கு பெருமை கொடுத்த இஸ்லாம் கற்பிக்கும் அறிஞர்களுக்கும் பெருமை கொடுத்திருக்கிறது
இஸ்லாம் பொதுவாக கல்விக்கும் கல்வியாளர்களுக்கும் அதிகமான முக்கியத்துவமளித்த மார்க்கமாகும். சிந்திப்பது, ஆராய்ச்சி செய்வது, கற்பது, வாசிப்பது போன்ற செயற்பாடுகளை அது ஒரு வாஜிபாகவே கருதுகின்றது.
குர்ஆனின் முதல் வசனம் ஓதுவீராக! வாசிப்பீராக! என்ற பொருள்களைத் தரும் 'இக்ரஃ' எனும் சொல்லாகும்.பேனாவின் மீது சத்தியமாக! என்று இன்னுமொரு மக்கீ வசனம் ஆரம்பிப்பதிலிருந்தும் இந்த உண்மையைப் புரியமுடியும்.
அறிவு தேடுவது ஒவ்வொரு முஸ்லிமின் மீதும் கடமை.
(இப்னு மாஜா)
( நபியே ) இவர்களுடைய அறிவு பறந்து விடக்கூடிய நாளை இவர்கள் சந்திக்கும் வரையில் நீங்கள் இவர்களை விட்டு விடுங்கள் குர்ஆன் (52:45)
'அறிவு (உலகிலிருந்து) உயர்த்தப்படுவது மறுமை நாளின் அடையாளங்களில் ஒன்றாகும்'(புகாரீ,முஸ்லிம்) போன்ற ஹதீஸ்களும் அறிவின்
முக்கியத்துவத்துக்கான சான்றுகளாகும்.
இறைவன் கூறுகிறான் : "உங்களில் நம்பிக்கை கொண்டவர்களுக்கும், அறிவு பெற்றவர்களுக்கும் இறைவன் பல படித்தரங்களைக் கொடுக்கிறான்"
"நம்பிக்கையாளர்களை விட அறிஞர்கள் உயர்ந்தவர்கள். இவ்விரு சாராருக்கும் இடையே உள்ள தூரம் மிக நீளமானது என்பது இப்னு அப்பாஸ் (ரலி) அவர்களின் கருத்து
இதோ மனிதனைப் பார்த்து இறைவன் கேட்கிறான் : "அறிந்தவர்களும் அறியாதவர்களும் சமமாக முடியுமா ?குர்ஆன் ( 39 : 9 )

"இறைவனுக்கு அஞ்கிறவர்கள் அறிஞர்களே !" என்னும் கருத்து திருக்குர்ஆனில் வேறு ஒரு இடத்தில் காணப்படுகிறது
"மானிடர்களே உங்கள் மானத்தை மறைத்துக் கொள்வதற்கு நாம் உடைகளை கொடுத்தோம் " என்ற இறை வசனத்தில் ' உடை ' என்பது ஒரு குறியீடு. உடை என்னும் வார்த்தை அறிவையே குறிக்கிறது.
அது அறியாமை என்னும் அவமானம் ஏற்படாதபடி தடுக்கிறது. மனிதனுக்கு உடையினால் பெருமை கிடைப்பது போல அறிவினாலும் பெருமை கிடைக்கிறது
எனவே, மனித சமூகத்தின் ஈருலக விமோசனத்துக்குத் தேவையானது என கருதப்படும் எந்தவொரு அறிவும் பயனுள்ளதாகவே அமையும்.
அது மார்க்கத்துடன் நேரடியாக சம்பந்தப்பட்டதாகவோ உலக விவகாரங்களுடன் நேரடியாக சம்பந்தப்பட்டதாகவோ அமைந்திருந்தாலும் சரியே. அந்த அனைத்து கல்வி ஞானங்களிலும் ஈடுபடுவதும், கற்பதும், கற்பிப்பதும் தவிர்க்க முடியாத 'பர்ளு கிபாயா' வாக அமையும்.
அந்தவகையில், குர்ஆன், சுன்னா, பிக்ஹ், அகீதா, ஸீரா போன்ற மார்க்கத்துடன் நேரடியாகத் தொடர்பான துறைகளில் நிபுணத்துவம் மிக்க உலமாக்களை உருவாக்குவது போலவே,
மருத்துவர்கள், பொறியியலாளர்கள், சட்ட அறிஞர்கள், தொழிநுட்பவியலாளர்கள், விஞ்ஞானிகள், ஊடகவியலாளர்கள் போன்ற உலக விவகாரங்களோடு தொடர்பான அறிவுகளில் ஆழமான அறிவு கொண்டவர்களை உருவாக்குவதும் 'பர்ளு கிபாயா'வாகவே கருதப்படும்.
மருத்துவம், விவசாயம், பொறியியல், கணிதம், தொழிநுட்பம், தகவல் தொழிநுட்பம், தாவரவியல், விலங்கியல், வானவியல், புவியியல், வர்த்தகம், நிதியியல், உளவியல் போன்ற இன்னோரன்ன உலக அறிவுகள் மனித வாழ்வின் இயக்கத்துக்கு இன்றியமையாதவைகளாகும்.

உணவு, உடை, உறையுள், பாதுகாப்பு போன்ற மனித அடிப்படைத் தேவைகளை சிறப்பாக அமைத்துக்கொள்ளவும் அறிவீனம், வறுமை, நோய் போன்றவற்றை இயன்றவரை தவிர்க்கவும், பொருளாதார ரீதியாக, நாகரீக ரீதியாக முன்னிலை பெறவும் சுயகௌரவத்தோடு வாழவும் இந்த கலாஞானங்கள் அவசியப்படுகின்றன.
மார்க்கக்கல்வி என்று மக்களால் அடையாளப்படுத்தப்படும் கலாஞானங்களைப் பொறுத்தவரையில் கூட அவற்றைப் படிப்பதும் 'பர்ளு கிபாயா'வாகும். ஏனெனில்,மார்க்கக் கல்வி மனித வாழ்வுக்கு இன்றியமையாததாகும்.
மார்க்கக்கல்வி மூலம் ஒருவர் தான் யார்? தன்னைச் சூழவுள்ள பிரபஞ்சம் ஏன் படைக்கப்பட்டது? தனது வாழ்வின் இலட்சியம் யாது? தன்னைப் படைத்தவன் யார்? போன்ற அடிப்படையான கேள்விகளுக்கு விடையைப் பெற்றுக் கொள்கிறார்.

அவருக்கு உலகக் கல்விகளில் இவற்றுக்கான விடைகள் கிடைக்கமாட்டாது. மனிதனின் உரிமைகள், கடமைகள் யாவை என்பதை மார்க்கக் கல்வியின் மூலமே அறிய முடியும். குப்ர், ஷிர்க், நிபாக், பெரும்பாவங்கள், நன்மை, தீமை, ஒழுக்க விழுமியங்கள் போன்றவற்றை அறிவதற்கும் மார்க்கக் கல்வியே துணை செய்கிறது
அந்தவகையில், மார்க்கக் கல்வியை கற்பது ஒரு வாஜிபாகவும் மாறுகிறது. இஸ்லாமிய வரலாற்றில் தோன்றிய இமாம்களான தபரீ, குர்துபீ, புகாரி, முஸ்லிம், மாலிக், ஷாபி, அபூஹனீபா, அஹ்மத் போன்ற ஆயிரக்கணக்கான மேதைகள் சன்மார்க்கப் பணிக்காகத் தம்மை அர்ப்பணித்து அறிவுப் பணியைத் தம் வாழ்வின் அச்சாணியாக அமைத்ததால்தான் நாம் இன்றும்கூட முஸ்லிம்களாக வாழ்ந்து வருகிறோம்.
இந்த மார்க்கக் கல்வியைக் கற்பதற்காக ஒரு குழுவினர் தம்மை அர்ப்பணிப்பது அவசியம் என்ற கருத்து பின்வரும் குர்ஆன் வசனத்திலிருந்து தெரிய வருகிறது:

وَمَا كَانَ الْمُؤْمِنُوْنَ لِيَنْفِرُوْا كَافَّةً فَلَوْلَا نَفَرَ مِنْ كُلِّ فِرْقَةٍ مِّنْهُمْ طَآئِفَةٌ لِّيَتَفَقَّهُوْا فِى الدِّيْنِ وَ لِيُنْذِرُوْا قَوْمَهُمْ اِذَا رَجَعُوْۤا اِلَيْهِمْ لَعَلَّهُمْ يَحْذَرُوْنَ
'விசுவாசிகள் அனைவருமே (மதீனாவிலிருந்து) யுத்தத்திற்காகச் செல்ல வேண்டியதில்லை. அவர்களது ஒவ்வொரு குழுவிலிருந்தும் ஒரு சாரார் மார்க்கத்தில் ஆழமான விளக்கத்தைப் பெற்றுக்கொள்வதற்காக வெளியேறிச் சென்றிருக்கக்கூடாதா?
அவர்களது சமூகத்தவர்கள் (ஜிஹாதிலிருந்து) அவர்களிடம் திரும்பி வந்தவுடன் அவர்களுக்கு அச்சமூட்டி எச்சரிக்கை செய்வதற்காக இவ்வாறு செய்திருக்கலாமல்லவா? (இதன் மூலம்) அவர்கள் (அந்த அவர்களது சமூகம்;) எச்சரிக்கையாக நடந்துகொள்ளலாம் குர்ஆன் (9:122)
மேற்படி வசனம் இறக்கப்பட்ட சந்தர்ப்பம் பற்றி நாம் அறிந்திருக்க வேண்டும். அறப்போரில் பங்கெடுப்பதன் சிறப்புக்கள் பற்றி அதிகமாக அறிந்த நபித்தோழர்கள் அதற்காகச் செல்வதற்கு போட்டி போட்டதுடன் நபி(ஸல்) அவர்களை மதீனாவில் தனியாக விட்டுவிட்டு அதற்குப் போகவும் முயற்சித்தனர்.
எனவே, யுத்தத்திற்காக ஒரு குழுவினர் செல்ல பிறிதொரு குழுவினர் மதீனாவில் தங்கியிருந்து, நபி(ஸல்) அவர்கள் கூறும் ஹதீஸ்களை செவிமடுத்து, ஜிஹாதுக்காகச் சென்றவர்கள் திரும்பி வந்தவுடன் அவர்களுக்கு அவற்றை எத்திவைக்கும்படி கட்டளையிடும் மேற்படி வசனம் இறக்கப்பட்டது.
அறிவு பாராட்டப்படுவது போல், பிறருக்கு அறிவுறுத்துவதும் பாராட்டப்படுகிறது. கல்விக்கு பெருமை கொடுத்த இஸ்லாம் கற்பிக்கும் அறிஞர்களுக்கும் பெருமை கொடுத்திருக்கிறது

---

அறிவு'-ஆம், அது நாம் வானுலகு ஏறுதற்குரியவனின் சிறகு. -ஷேக்ஸ்பியர்

## அறிவு என்னும் அற்புதம் 2

( அறிவு - மார்க்கத் தூண் )



படைப்பினங்கள் அனைத்துமே அறிஞனுக்குப் பிரார்த்திக்கின்றன "என்றும் நபி (ஸல்) அவர்கள் குறிப்பிட்டிருக்கிறார்கள். இது மிகப்பெரும் பேறு என்பதை நான் சொல்லித்தானா நீங்கள் தெரிந்து கொள்ள வேண்டும்?

"அறிவு என்பது மனிதனின் சிறப்பைப் பல மடங்கு உயர்த்துகிறது" என்பதும் நபி (ஸல்) அவர்களின் கருத்துத்தான்
"வஞ்சகனிடம் உண்மையான அறிவு இருக்க முடியாது" என்பதும் நபி (ஸல்) அவர்கள் கூறியதுதான்.
இதைப் படிக்கும் நீங்கள், 'அறிஞர்களில் சிலர் வஞ்சகத்துடன்
செயல்படுகிறர்களே?" என்று கேட்காதீர்கள். அவர்களுக்கு அறிஞர்கள் என்று பெயரிடப்பட்டாலும், உண்மையில் அவர்கள் அறிஞர்கள் அல்லர். அறிஞர்களுக்கு எது இருக்க வேண்டுமோ அது அவர்களுக்குக் கிடையவே கிடையாது.
எனவே உண்மையளவில் அவர்களை அறிஞர்கள் என்று குறிப்பிட முடியாது. இம்மையை விட மறுமை சிறந்தது என்பதை உணர்ந்து அதற்குத் தகுந்தபடி
செயலாற்றாதவர்களை நம்மால் அறிஞர்கள் என்று குறிப்பிட முடியாது. இந்தப் புனித உணர்வு வலுவடைந்து விட்டால் அப்புறம் வஞ்சகத்துக்கே இடம் இல்லாமற் போய்விடும்.
“நம்பிக்கை என்பது நிர்வாணமானது. அதற்கு ஆடை போன்றது இறையச்சம். அதிலிருந்து உருப்பெறும் பயன் அறிவு” என்பதும் அறிவை உயர்த்திக் காட்டும் நபி (ஸல்) அவர்களின் கருத்துத்தான்.
“நபித்துவத்தின் படித்தரத்திற்கு அருகிலிருப்பது அறிவு'' என்று பெருமானார் (ஸல்) மற்றோரிடத்தில் கூறியிருக்கிறார்கள்.
இதற்குரிய காரணத்தையும் அவர்கள் விளக்கி இருக்கிறார்கள்:
"திருத்தூதர்கள் கொண்டு வந்த அறிவுக்கு அறிஞர்களே விளக்கம் கொடுத்திருக்கிறார்கள்."
அடுத்து வரும் நபி (ஸல்) அவர்களின் கருத்து அறிஞனின் சிறப்புக்குச் சரியாக விளக்கம் கொடுக்கிறது:
"அறிஞனின் மரணத்தை விடச் சமுதாயத்தின் மரணம் சாதாரணமானது.
இதோ மீண்டும் பேசுகிறார்கள்: "வெள்ளி- தங்கச் சுரங்கங்களைப் போன்றவர்கள் மனிதர்கள். இஸ்லாத்திற்கு முன்னர்ச் சிறந்து விளங்கியவர்கள் இன்றைக்கும் சிறப்பிற்குரியவர்களே. ஆனால், அவர்கள் மார்க்கத்தைத் தெரிந்து கொள்ள வேண்டும்."

"தியாகிகளின் உதிரமும் அறிஞர்களின் பேனாவிலிருந்து இறங்கிய சாயமும் ஒன்று" என்ற கருத்துப்படும்படி பெருமானார் மற்றொரு சமயம் பேசியிருக்கிறார்கள்.
அடுத்து வருவது பிறிதொரு சமயம் பெருமானார் (ஸல்) அவர்களிடமிருந்து உதிர்ந்த கருத்து.
“ஒருவன் மார்க்க ஞானம் பெற்றுவிட்டால் போதுமானது, அவனுடைய காரியங்களையெல்லாம் இறைவன் முடித்துக் கொடுப்பான்.'
"மண்ணகத்துக்கு இறைவனின் பிரதிநிதி அறிஞன்.”

"என் சமுதாயத்தில் இரண்டு சாரார் இருக்கிறார்கள். அவர்கள் சீராக நடந்து கொண்டால் மக்கள் அனைவரும் சீர்பட்டு விடுவார்கள். அவர்கள் சீர்கேடான வழியில் இறங்கினால் மக்கள் அனைவரும சீர்கேட்டில் இறங்கிவிடுவார்கள்.

அறிஞர்கள், அரசியல் அதிகாரிகள்." -
அறிஞர்களுக்கு இருக்கும் பொறுப்பு இங்குத் தெளிவு படுத்தப்படுகிறது. அரசியல் அதிகாரிகள் ஒரு விதத்தில் பொறுப்பாளிகளாக இருந்தால், வேறொரு விதத்தில் அறிஞர்கள் பொறுப்பாளிகளாக இருக்கிறார்கள் என்பது கருத்து.
'என்னுடைய அறிவில் முன்னேற்றம் ஏற்படாதபடி ஒருநாள் கழிந்துவிட்டால் அந்த நாளில் மங்களத் தன்மை கிடையாது.
"நமது மார்க்கத்திற்கு தூண் போன்றது அறிவு.''
___________________________________________
தான் தானாகவே இருக்க அறிவதே உலகில் பெரிய விஷயம்.
-மான்டெய்ன்

## அறிவு என்னும் அற்புதம் 3
( அறிஞர்களோ அரசர்களையே ஆள்கிறார்கள் )


அறிவைப் பற்றி பெருமானாரின் மருமகனாரான அலீ(ரலி) அவர்கள் அறிவுரை கொடுக்கிறார்கள்.
"பணத்தைவிட அறிவு சிறந்தது. ஏனெனில், பணத்தை நீ பாதுகாக்க வேண்டும்; ஆனால் அறிவு உனக்குப் பாதுகாப்பு அளிக்கும். எனவே அறிவு என்பது அதிகாரிக்கு நிகரான ஒன்று. அதற்கு முன்னால் பணம் அடிமையின் நிலையில்தான் இருக்கிறது. செலவு செய்தால் குறையக்கூடியது பணம் செலவு செய்யச் செய்யப் பெருகக் கூடியது அறிவு. எனவே பணத்தை விட அறிவு எல்லா விதத்திலும் சிறந்தது.
அபுல் அஸ்வத் கூறுகிறார்: "அறிவைவிடச் சிறந்தது. எதுவுமில்லை. அரசர்கள் மக்களை ஆள்கிறார்கள். அறிஞர்களோ அரசர்களையே ஆள்கிறார்கள்."
இப்னு அப்பாஸ் ( ரலி) அவர்கள் : அறிவு, பணம், ஆட்சி இந்த மூன்றில் எது வேண்டும் என்று நபி சுலைமான் (அலை) அவர்களிடம் கேட்கப்பட்டபோது, அறிவையே தேர்ந்தெடுத்தார்கள். எனவே அவர்களுக்கு அறிவுடன் பணமும் ஆட்சியும் கொடுக்கப்பட்டன.
“மனிதன் என்றால் யார்?” என்ற வினாவுக்கு அறிஞர் இப்னு முபாரக் (ரஹ்) , "விஷயம் தெரிந்தவன்” என்று விடையளித்தார்.
இப்னு முபாரக் (ரஹ்) அவர்களின் கருத்தில் மிகப் பெரும் உண்மை ஒன்று மறைந்திருக்கிறது. மனிதனுக்கும் மிருகத்துக்குமிடையிலுள்ள திரைதான் அறிவு என்பதை அவர் நாசூக்காகச் சுட்டிக் காட்டுகிறார்.
மற்ற அனைத்தையும்விட மனிதன் உயர்ந்தவன் என்பது எல்லோருக்கும் தெரிந்த ஒன்று. இந்த உயர்வு அவனுக்கு எதனால் கிடைத்தது? பருத்த உடலும், வலிமை பொருந்திய கரங்களும் அவனுக்கு இருக்கின்றன என்பதுதான் காரணமா? இருக்கமுடியாது.
ஏனெனில் அவனைவிட ஒட்டகமும் யானையும் பலத்தில் சிறந்தவை. ஒருகால் அவனுடைய வீரம்தான் காரணமோ? இதுவும் சரியில்லை. வனவிலங்குகள் அவனைவிட வீரத்தில் சிறந்து விளங்குகின்றன. அவன் செய்யத்துணியாத பல காரியங்களை அவை தினம் செய்கின்றன.
சமயோஜிதம் புத்திசாலித்தனம் மனிதனுக்கு இருக்கிறது என்றால்,மனிதனை காட்டிலும் பூனைக்கு தன் குட்டியை பாதுகாப்பதில் சமயோஜிதம் அதன் சக்திக்கு மீறி இருக்கிறது
இவற்றில் எதுவும் சரியான காரணமல்ல. அவன் பெற்றிருக்கும் அறிவினால்தான் அவனுக்குப் பெருமை கிடைக்கிறது. இதற்காகவே அவன் படைக்கப்பட்டிருக்கிறான்.

'ஒரு மனிதனுக்கு அறிவு கிடைத்துவிட்டால் வேறு எதுவுமே கிடைக்க வேண்டியதில்லை. ஒரு மனிதனுக்கு அது கிடைக்கவில்லை என்றால் வேறு எது கிடைத்தாலும் பிரயோசனமில்லை" என்கிறார் ஓர் அறிஞர்.
அறிஞர் முசிலி (ரஹ்) அவர்கள் இங்குத் தர்க்க ரீதியாக ஓர் உண்மையை விளக்குகிறார்.
நோயாளி ஒருவனை எடுத்துக் கொள்ளுங்கள். அவனுக்கு உணவோ தண்ணீரோ மருந்தோ கொடுக்கப் படவில்லை என்றால் அவன் இறந்து விடுவானல்லவா?" என்று கேட்டார் தமது நண்பர்களிடம்.
''ஆம்!" என்று தலையசைத்தார்கள் நண்பர்கள்.
அறிஞர் நேரடியாகப் பிரச்சனைக்கு வந்தார். "மனிதனின் உடல் நிலையைப் போன்றதுதான் அவன் உள்ளமும். அதற்குத் தொடர்ந்து அறிவு கிடைக்க வேண்டும். இல்லையேல் அது விரைவில் தன்னுடைய ஆற்றல்களை எல்லாம் இழந்துவிடும்."
இந்தக் கூற்று மறுக்க முடியாதது மட்டுமல்ல, மணியான அறிவுரையும்கூட. மனிதனின் சிறப்புக்கு அவன் பெற்றிருக்கும் அறிவே அடிப்படைக் காரணம் என்று நான் குறிப்பிட்டேனல்லவா?

அறிவு மனிதனின் உள்ளத்தில் தோன்றுகிறது. எனவே மனிதனின் உள்ளத்திற்கு எப்போதும் அறிவு கிடைத்துக் கொண்டிருக்க வேண்டும். இல்லையேல் அது நோயுற்றுவிடும்.
இந்த நிலைமை ஒரு மனிதனுக்கு ஏற்படும்போது அதனை அவனாலேயே உணர்ந்து கொள்ள முடியாது. மக்களில் பலர் இதே நிலையில்தான் இருக்கிறார்கள். அவர்கள் தமது எதிர்காலத்தை எண்ணியும் பார்க்காமல் தூங்கிக் கொண்டிருக்கிறார்கள். மரணம் வரும்போதுதான் அவர்களுக்குத் தெளிவு பிறக்கும். அனைவரையும் இறைவன் காப்பாற்றுவானாக!

அறிவின் சிறப்புக்கு அறிஞர் ஹஸன் ( ரஹ்) விரிவுரை கொடுக்கிறார்: "தியாகிகளின் உதிரமும் அறிஞர்களின் பேனாச் சாயமும் நிறுக்கப்பட்டால், முன்னதைவிடப் பின்னதே சிறந்து விளங்கும்.'
'இறைவனே! எங்களுக்கு இம்மையிலும் மறுமையிலும் நல்லது செய்வாயாக!" என்ற பிரார்த்தனை உங்கள் மனத்தைக் கவர்ந்திருக்கலாம். இதில் 'நல்லது' எனும் வார்த்தைக்கு 'அறிவு' என்று பொருள் கொடுக்கிறார் ஞானி ஹஸன்( ரஹ்) மீண்டும் கூறுகிறார்:
"இம்மையைப் பொறுத்த மட்டில் நல்லது என்றால் அறிவையும் இறை வணக்கத்தையும் குறிக்கும். மறுமையைப் பொறுத்த மட்டில் நல்லது என்றால் சுவர்க்க வாழ்வு என்று அர்த்தம்.
சுபைர் பின் அபூபக்ருக்கு ( ரலி )அவருடைய தந்தையிடமிருந்து ஒரு கடிதம் வந்தது. அடியில் இடம் பெறும் கருத்து அந்தக் கடிதத்தில் ஒரு பகுதி:

"உனக்கு எப்போதும் அறிவு தேவை. இதனை நீ அலட்சியம் செய்துவிட முடியாது. நீ அறிவு பெற்றுவிட்டால், உனக்குத் தேவை ஏற்படும்போது அது செல்வத்தைப் போல் பயன்படும். இது வறுமையின்போது ஏற்படும் நிலை. செல்வம் வந்துவிட்டால் உன் அறிவு உனக்கு அழகைக் கொடுக்கும்."
இதோ அறிஞர் லுக்மான் ( அலை) தமது குமாரனுக்கு அறிவுரை கூறுகிறார். இது உங்களுக்கும் எனக்கும் அறிவுரைதான்: "என் அன்பு மகனே! அறிஞர்களுடன் நெருங்கிப் பழகு. அவர்களிடம் அறிவு இருக்கிறது. அது உன் உள்ளத்தில் புத்துயிரைத் திணிக்கக் கூடும்.
- இப்படி அறிவுக்குக் கிடைத்திருக்கும் ஆதரவுக் கருத்துக்கள் எண்ணற்றவை.

---

நூல் அறிவு பேசும் ; மெய்யறிவு கேட்கும்
- ஹோம்ஸ்

## அறிவு என்னும் அற்புதம் 4
( குர்ஆன் கூறும் கல்வியறிவு )


அண்ணலாருக்கு இறங்கிய முதல் வசனமே "இக்ரா" ஓதுவீராக".
கல்வியின் மூல ஆதாரம் (FOUNTAIN) திருக்குர்ஆன்தான். "அளவிலாக் கருணையுள்ள இறைவன் இந்தக் குர்ஆனை கற்றுத் தந்தான்" (55:1-2)

வாழ்க்கையின் நோக்கமும் அதனை அடையும் வழிமுறைகளுக்கான அடிப்படை கல்வியை பெறுவது ஒவ்வொரு ஆண், பெண் மீது கட்டாய கடமை.
இறைவன் நமக்களித்த அருட்கொடைகளில் மிகப்பெரும் அருட்கொடை கல்வியாகும். முதல் மனிதரான ஆதம் நபி(அலை) அவர்களை அல்லாஹ் படைத்தவுடன் மலக்குகளை அவருக்கு சஜ்தா செய்யச் சொன்னான். மலக்குகள் அந்த மனிதப் படைப்பின் சிறப்பை அறிய விரும்பிய போது எல்லா பொருட்களின் பெயர்களையும் சொல்லும்படி அல்லாஹ் ஏவினான். அவரும் அந்தப் பெயர்கள் அத்தனையையும் கூறினார்கள் .
ஆக மனிதனைப் படைக்கும்போதே அவனுக்குக் கல்வியையும் கொடுத்து அல்லாஹ் படைத்தான். அப்படிப்பட்ட கல்வி ஞானத்தைக் கொடுத்துதான் தன் பிரதிநிதியாக மனிதனை இந்த உலகில் அனுப்பியிருக்கிறான்.
இந்தப் பரந்து, விரிந்த உலகில் மனிதனுக்கு என்னென்ன தேவையோ அவை அத்தனையும்; இறைவன் முழுமையாக கொடுத்திருக்கிறான். அது போலவே அறிவாற்றலையும் அவனுக்கு வழங்கியிருக்கிறான்.
ஒரு கொள்கை கோட்பாட்டில் ஒருவன் நிலைத்து நிற்க வேண்டுமென்றால் அதைப்பற்றிய முழுமையான அறிவு அவனுக்கு வேண்டும். இல்லையென்றால் ஏதாவது ஓர் இக்கட்டான சூழ்நிலையில் அதை விட்டும் அவன் விலகிவிடநேரிடும். ஏனெனில் தெரியாத ஒரு விசயத்தில் மனிதன் இருப்பதற்கு சக்தி பெறமாட்டான்.
திருக்குர்ஆனில் மூஸா நபியைப் பார்த்து கிள்ரு அவர்கள் கேட்பதாக ஒரு வசனத்தை அல்லாஹ் கூறுகிறான். "மேலும் உமக்கு சரியாகத் தெரியாத விசயத்தில் எவ்வாறு உம்மால் பொறுமையாய் நிலைத்திருக்க முடியும்".(18:68). ஆக அறிவு ஞானம் இல்லாத ஒன்றில் நிலைத்து நிற்கவோ, சரிவர இயங்கவோ முடியாது.
கல்வியறிவு என்பது மனிதனை மனிதனாக, மனித
நேயமுள்ளவனாக, சீரான நேரான வளர்ச்சி பெற்றவனாக அவனை மாற்ற வேண்டும். அவனுடைய ஆளுமையை வெளிக் கொண்டு வரவேண்டும். அந்த ஆளுமை ஈமானில் தோய்த்து எடுக்கப்பட்டதாயிருக்க வேண்டும். அல்லாமல் வெறுமனே பொருள் சம்பாதிப்பதை மட்டும் குறிக்கோளாகக் கொண்ட கல்வியாக இருக்கக் கூடாது. நாம் கற்கும் கல்வி ஆன்மிகத்தையும், அறிவையும் ஒருங்கே பெற்றுத் தரவேண்டும்.
அடுத்தவரை அழிப்பதற்கு இந்தக் கல்வி பயன்படாமல் அவர்களுக்கு உதவுவதற்குப் பயன்படவேண்டும். ஆக்கப்பூர்வமானப் பணிகளுக்கு பயன்பட வேண்டுமே தவிர அழிபாதைக்கு இட்டுச் செல்லக்கூடாது.
கல்வியில் உலகக்கல்வி என்றும், மார்க்கக்கல்வி என்றும் எந்தப் பிரிவினையும் கிடையாது. நபி(ஸல்) அவர்கள் இறைவனிடம் பயனற்ற கல்வியை விட்டும் பாதுகாப்பு தேடினார்கள் என்ற அடிப்படையில் பயனுள்ள கல்வி, பயனற்ற கல்வி என்று வேண்டுமானால் பிரித்துக் கொள்ளலாம்.

எல்லாக் கல்வி ஞானமும் இறைவனிடமிருந்து வந்தவைதாம். இறைவன்தான் ஒவ்வொருவருக்கும் ஒவ்வொரு விதமான ஞானத்தைக் கொடுக்கின்றான். எனவே எல்லாவிதமான பயனுள்ள கல்வியையும் கற்பதற்கு முயலவேண்டும். இதுபோன்ற பயனுள்ள கல்வியைக் கற்பதற்கு முயலாமல் அதில் பொடுபோக்காக இருந்த காரணத்தினால்தான் இன்றும் முஸ்லிம் சமுதாயம் முன்னேறாமல் இருக்கின்றது.
இன்றைய உலகில் மக்கள் கல்விநிலையில் பல பிரிவுகளாக உள்ளனர். ஒரு பிரிவினர் முழுமையான அறியாமையில் இருக்கிறார்கள். அறிவைத் தேடவேண்டும் என்ற சிந்தனையே இல்லாமல் இருக்கிறார்கள்.

மற்றொரு பிரிவினருக்கு அறிவு ஞானம் கொடுக்கப்படுகிறது. ஆனால் அவர்கள் அதைப் புறக்கணித்து விடுகிறார்கள்.
அல்லாஹ் குர்ஆனில் “அவர்களின் இறைத்தூதர்கள் அவர்களிடம் தெளிவான சான்றுகளைக் கொண்டு வந்தபோது தங்களிடம் என்ன ஞானம் இருந்ததோ அதிலேயே அவர்கள் மகிழ்ந்து போயிருந்தார்கள்".(40:83) எனக் கூறுகிறான்.
இந்த நிலைமை இன்று முஸ்லிம்களிடமும் இருக்கிறது. முஸ்லிம் நாடுகளின் தலைவர்கள் தங்கள் நாடுகளில் கொண்டு வரும் மேனாட்டுச் சட்ட திட்டங்கள், முற்றிலும் இஸ்லாத்திற்கு எதிரான பொருளாதாரத் திட்டங்கள், நாடு முன்னேற வேண்டுமானால் இஸ்லாமியச் சட்டங்களைக் கைவிட்டு மேலை நாடுகளின் சட்டங்களை செயல்படுத்த வேண்டும் என்ற இவர்களின் சிந்தனை. இவர்கள்தாம் குர்ஆன், ஹதீஸ் எனும் ஞானம் கொடுக்கப்பட்டும் அதைப் புறக்கணித்து விட்டவர்கள்.

மக்களின் இன்னோர் பிரிவினரும் உண்டு. ஒருவருக்கு ஒருவர் தர்கித்துக் கொண்டு தாங்கள் சொல்வது மட்டும்தான் சரி மற்றவையெல்லாம் தவறு என்ற சிந்தனையில் இருக்கிறார்கள்.
அல்லாஹ் கூறுகிறான்: "மனிதர்களில் சிலர் இவ்வாறு இருக்கிறார்கள். அவர்கள் ஞானம் இல்லாமல் அல்லாஹ்வைப் பற்றி தர்க்கம் செய்கிறார்கள். மூர்க்கத்தனம் கொண்ட ஒவ்வொரு ஷைத்தானையும் பின்பற்றுகிறார்கள்."
குர்ஆன் (22:03) ஆக இப்படியும் ஒரு பிரிவினர் மனித சமுதாயத்தில் எல்லா காலகட்டத்திலும் இருந்து வருகிறார்கள்.
மற்றோர் பிரிவினரும் உண்டு. இவர்கள் உண்மையான சத்தியத்தைத் தேடுகிறோம் என்ற பெயரில் அசத்தியத்தில் சென்று கொண்டிருக்கிறார்கள். இருளிலே சென்று சத்தியத்தின் ஒளியைத் தேடுகிறார்கள். இறுதியாக யூகத்தின் அடிப்படையில் தம் மனம் சொல்கின்றபடி ஒரு கொள்கையில் சென்று விடுகிறார்கள். இவர்களைப் பற்றியும் அல்லாஹ் சொல்கிறான். "நீங்கள் கற்பனையின் அடிப்படையிலேயே செயல்பட்டுக் கொண்டிருக்கிறீர்கள்".(6:148). எனவே இவர்கள் தாங்களாகவே ஒரு கொள்கையை வகுத்துக் கொண்டு அதிலேயே சென்று கொண்டிருக்கிறார்கள்.
இவர்களல்லாமல் மேலும் ஒரு பிரிவினர் உண்டு. இவர்கள் உண்மையிலேயே அறிவு ஞானம் பெற்றவர்கள். அறிவு ஞானம் பெற்றவர்கள் அதிக நன்மை பெற்றவராவார்கள்.

அல்லாஹ் கூறுகிறான், "தான் நாடுகின்றவர்களுக்கு அல்லாஹ் ஞானத்தை வழங்குகிறான். எவருக்கு ஞானம் வழங்கப்படுகிறதோ அவர்(மெய்யாகவே) எராளமான நன்மைகள் வழங்கப்பட்டவராவார். (இவற்றிலிருந்து) நல்லறிவுடையோர் தவிர வேறெவரும் சிந்தித்துப் படிப்பினை பெறமாட்டார்கள்." குர்ஆன் (2-269)
எனவே அல்லாஹ்விடமிருந்துதான் ஞானம் கிடைக்கிறது. அவனிடம் பெறப்படும் அறிவு ஞானம் மட்டுமே சரியானது, நிலையானது. அப்படியான அறிவு ஞானம் பெற்றவர் உண்மையிலேயே அதிக நன்மைகள் பெற்றவராவார். எனவே அறிவு ஞானம் என்பது கட்டாயமாகப் பெறவேண்டிய ஒன்றாகும்.
கல்வியறிவு இல்லாதவர்கள் குருடர்களைப் போலத்தான். அல்லாஹ் சொல்கிறான், "மேலும் பார்வையற்றவனும், பார்வையுள்ளவனும் சமமாக முடியாது".(40:58)

இந்த வசனத்தில் அறிவு ஞானம் இல்லாதவரையே பார்வையற்றவர் எனச் சொல்லப்படுகிறது.எனவே கண்டிப்பாகக் கல்வி ஞானம் நமக்கு வேண்டும்.
அறிவு ஞானத்தைக் கட்டாயமாகப் பெற்றுக் கொள்ள வேண்டும் என்பதற்காக அதைப் பற்றி நபி(ஸல்) அவர்கள் அதிகம் வலியுறுத்தியுள்ளார்கள்.

"இரவின் ஒரு சிறுபகுதியில் கல்வி கற்பது, இரவு முழுவதும் விழித்திருந்து இறைவணக்கம் புரிவதை விடச் சிறந்ததாகும்" என நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்.(நூல்: மிஷ்காத், அறிவிப்பவர் இப்னு அப்பாஸ்(ரலி))
"அறிவு நுட்பம் என்பது அறிவாளியின் கை விட்டுப்போன பொருளாகும். அதை எங்கு கண்டாலும் அதை பெற்றிட அவர் உரிமையுள்ளவராவார்" என நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள். (நூல்: திர்மிதி, அறிவிப்பவர்: அபூஹுரைரா(ரலி).

மேலும் கூறினார்கள், "இறைவன் ஒருவனுக்கு நல்லதை நாடிவிட்டால் அவனுக்கு தீனை(வாழ்க்கை நெறியை)ப் புரிந்து கொள்ளும் கல்வியை அவனுக்கு கொடுக்கிறான்". (நூல்: புகாரி, முஸ்லிம் அறிவிப்பவர்: முஆவியா(ரலி).
"எவரொருவர் கல்வியைத் தேடிச் செல்கிறாரோ அவருக்கு சொர்க்கம் செல்லும் பாதையை அல்லாஹ் லேசாக்கிவிடுகிறான்" என நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள். (நூல்:முஸ்லிம், அறிவிப்பவர்: அபூஹுரைரா(ரலி).
மேலும் மற்றொரு அறிவிப்பில், "கல்வியைத் தேடி எவர் செல்கிறாரோ அவருக்கு சுவனத்திற்குச் செல்லும் பாதையை அல்லாஹ் லேசாக்குகிறான். மேலும் அவருக்காக வானவர்கள் இறைஞ்சுகிறார்கள். அவர்களின் இறக்கைகளை பணிக்கிறார்கள். சுவனவாசிகள் அவருக்காகப் பிரார்த்திக்கிறார்கள் கடலில் வாழம் மீன்கள் உள்பட அவருக்காக பாவமன்னிப்பு தேடுகின்றன". (அறிவிப்பவர்: அபூஹுரைரா(ரலி), நூல்: திர்மிதி)
நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள், "இறைவனின் ஞானம் இந்த பூமியில் மழையைப் போல பொழிகின்றது. மழை நீரை பெற்றுக் கொள்ளும் ஒரு பூமி மிகக் கடினமுடையதாக, பாறைபாங்கானதாக உள்ளது. எனவே அது அந்த நீரை தன்னுள் எடுத்துக் கொள்ளாது, அதை தன் மேல் தேக்கியும் வைத்திருக்காது, எனவே அந்த நீர் நேராகக் கடலில் சென்று கலந்து விடும்.

மற்றொரு பூமி தன்னுள் அந்த நீரை எடுத்துக் கொள்ளாமல் அப்படியே தன்மேல் தேக்கி வைத்துக்கொள்ளும். அந்த நீரிலிருந்து அதைச் சுற்றியுள்ள தாவரங்கள், கால்நடைகள், மனிதர்கள், பயன்பெறுகின்றனர்.
மூன்றாவது பூமி வளமான பூமி! அது தன்னுள் அந்த நீரை எடுத்துக்கொண்டு அதன் மூலம் புற்பூண்டுகளையும், மரம், செடி, கொடிகளையும் முளைக்கச் செய்து மற்றவர்களுக்கு அது பலாபலன்களைக் கொடுக்கிறது. இது போலவே மூன்று விதமான மனிதர்கள் உள்ளனர்.
முதல் வகையினர்: கல்வி ஞானத்தைப் தாங்களும் பெற்றுக் கொள்வதில்லை. மற்றவர்களுக்கும் இவர்களால் பயன் இல்லை.
இரண்டாம் வகையினர்: கல்வி ஞானத்தைப் பெற்றிருந்தும் தாம் பயன் அடையாமல்; மற்றவர்களுக்குப் பயன் தருபவர்கள்.
மூன்றாவது வகையினர்: இவர்கள் கல்வி ஞானத்தின் மூலம் தாங்களும் பயன் பெறுவார்கள். மற்றவர்களுக்கும் பயன் அளிப்பார்கள்".

ஆக நாம் இந்த மூன்றாவது பிரிவினர்களாக இருக்கவேண்டும். நாமும் பலன் பெற வேண்டும். நம் மூலம் மற்றவர்களும் பலன் பெறவேண்டும். நாம் இப்போது இது போன்ற கல்வியை யாரிடமிருந்து பெற்றுக் கொள்ளவேண்டும்?
அல்லாஹ் கூறுகின்றான்: "நம் வேதவசனங்களை ஓதி உணர்த்துபவரும், உங்க(ள் வாழ்க்கை நடைமுறைக)ளைத் தூய்மைப்படுத்துபவரும், உங்களுக்கு வேதத்தையும், ஞானத்தையும் கற்பிப்பவரும், நீங்கள் அறியாதவற்றை உங்களுக்குக் கற்றுக்கொடுப்பவருமான ஒரு தூதரை உங்களிலிருந்தே உங்களிடம் அனுப்பிவைத்த போது நீங்கள் பெற்ற அருட்கொடையைப் போன்றதாகும் இந்தக் கொடை". குர்ஆன் (2:151)
நாம் பெற வேண்டிய ஞானத்தைப் பெற்றுக் கொள்ளும் முதல்வழி நபி(ஸல்) அவர்கள்தான். அவர்கள் சொல்லித் தந்த விசயங்கள், நடைமுறைப் படுத்தியவை எல்லாவற்றையும் அவர்களிடமிருந்து நாம் கற்றுக் கொள்ள வேண்டும்.
எனவே நாம் செய்ய வேண்டியது, வஹியின் முலம் நபி(ஸல்) அவர்கள் எவற்றைப் பெற்றார்களோ அவற்றைக் கற்றுக் கொள்ள நாம் முயலவேண்டும். இறைவனிடம் அதிகமாக துஆச் செய்யவேண்டும்.
"என் இறைவனே! எனக்கு அதிகமான ஞானத்தை வழங்குவாயாக என்றும் இறைஞ்சுவீராக" (20:-114) என அல்லாஹ் சொல்வது போல் நாம் பிரார்த்தனை புரிய வேண்டும்.

---

உண்மை ஞானம் கண் முன் இருப்பதைக் காண்பதன்று, பின் வருவதை முன் அறிவதாகும்.-டெரன்ஸ்

## அறிவு என்னும் அற்புதம் 5

( அறிவு என்பது ஒரு பொதுச் சொத்து)



அறிவு என்பது ஒரு பொதுச் சொத்து. அது பொது மக்கள் அனைவருக்கும் பயன்பட வேண்டும். அதனைத் தனிப்பட்ட உரிமை எனக் கருதுவது தவறு. தவறு செய்கிறவர்களுக்கு விசாரணை இருக்கத்தான் செய்யும். ‘அறிவையும் வேதத்தையும் கற்றுக் கொடுப்பார்கள்” என்று இறைவனே பாராட்டுகிறான்.

நபிதோழர் முஆது (ரலி) அவர்களைப் பெருமானார் யமன் தேசத்துக்கு அனுப்பியபோது, இப்படிக் கூறினார்கள். “உம்மால் ஒரே மனிதன் நேர்வழிக்குத் திரும்பிவிட்டால் போதுமானது. உலகிலுள்ள அனைத்தையும்விட இது மேலானது.

தீய வழியில் சென்று கொண்டிருப்பவர்களைத் திருத்த வேண்டுமானால் போதனை செய்துதான் ஆக வேண்டும்.
“மக்களுக்குக் கற்றுக் கொடுக்கும் எண்ணத்துடன் ஒருவன் ஒரே ஒரு பாடத்தைப் படித்துக் கொண்டாலும் போதும், அவனுக்கு எழுபது மேதைகளின் அந்தஸ்து கிடைக்கும்." இதுவும் நபி (ஸல்) அவர்களின் கருத்துத்தான்.
“கல்வி பெற்ற ஒருவன் அதனை மற்றவர்களுக்குக் கற்றுக் கொடுத்து அதன்படி தானும் நடந்து கொண்டால், அவன் மிக உயர்ந்த கண்ணியத்துக்குத் தகுதியுள்ளவன்" என்று ஈஸா நபி கூறுகிறார்கள்.
'அன்பளிப்புகளில் சிறந்தது அறிவு" என்று மற்றோரிடத்தில் பெருமானார் கூறியிருக்கிறார்கள்.
ஒரு சமயம் பெருமானார் (ஸல்) அவர்கள் சென்று கொண்டிருந்தார்கள். எதிரில் இரண்டு கூட்டங்கள் காணப்பட்டன. ஒரு சாரார் இறைவனிடம் பிரார்த்தனை செய்து கொண்டிருந்தார்கள். மறுசாரார் அறிவுப் பாதையில் ஈடுபட்டிருந்தார்கள்.

பெருமானார் (ஸல்) அவர்கள் தமது கருத்தைச் சுத்தமாகத் தெரிவித்தார்கள்: "இவர்கள் இறைவனிடம் பிரார்த்தனை செய்கின்றார்கள்.இவர்களின் பிரார்த்தனையை இறைவன் நிறைவேற்றித்தான் ஆக வேண்டும் என்று சொல்ல முடியாது. நிறைவேற்றுவதும் நிறைவேற்றாமல் இருப்பதும் இறைவனின் உரிமைகள். அவன் விரும்பினால் நிறைவேற்றலாம்; இல்லையேல் பிரார்த் தனையைப் புறக்கணிக்கலாம்...
அதோ பாருங்கள். அவர்கள் அறிவுக்காக நேரத்தைச் செலவிடுகிறார்கள். இந்த வேலைக்காகவே நான் அனுப்பப்பட்டிருக்கிறேன்" - இப்படிக் கூறிய பெருமானார் பின்னவர்களுடன் உட்கார்ந்து கொண்டார்கள்.
"மக்களின் அறியாமையைத் துடைக்க முயற்சி செய்கிறவனுக்கு எல்லாப் பொருள்களும் பிரார்த்தனை செய்கின்றன" என்பது நபிதோழர் இப்னு அப்பாஸ் (ரலி) அவர்களின் கருத்து.
"அறிஞர்கள் இல்லையேல் மற்றவர்கள் அனைவரும் மிருகங்களின் நிலையிலேயே இருப்பார்கள்" என்று கூறுகிறார் அறிஞர் ஹஸன் (ரஹ்) .

அதாவது அடித்தளத்தில் கிடக்கும் மனிதர்களை அறிஞர்களே தமது போதனையினால் உண்மையான மனிதர்களாக மாற்றுகிறார்கள் என்பது கருத்து.
புகழ்பெற்ற முதுமொழியொன்று அடுத்து இடம் பெறுகிறது: "தெரியாதவர்களுக்குக் கற்றுக் கொடு; தெரிந்தவர்களிடம் கற்றுக்கொள். இப்படி நீ நடந்து கொண்டால் உனக்குத் தெரியாததைத் தெரிந்து கொள்ளலாம்; தெரிந்ததைப் பசுமைப்படுத்திக் கொள்ளலாம்.’
நன்மைக்கு வழி வகுப்பவன் இறைவன் ஒருவனே.

---

நீ எண்ணுவது எல்லோருக்கும் சொந்தம், நீ உணர்வதே உனக்குச் சொந்தம். - ஷில்லர்

## அறிவு என்னும் அற்புதம் 6

(சீன சென்றேனும் சீர் கல்வியைக் கற்றுக் கொள்)



"சீன சென்றேனும் சீர் கல்வியைக் கற்றுக் கொள்" - நபிமொழி
நபிகளாரின் காலத்தில் சீனா தேசத்தில் எந்த மத்ரஸாவும் இருக்கவில்லை ; இறைதூதர்களும் இருக்கவில்லை. எனில் அங்கே சென்று அறிவு பெறுவது என்பதன் அர்த்தம் என்ன?

சீன மொழி சாதாரணமாக ஒரு எழுத்துக்கு ஒரு பொருள் இருக்கிறது. எனவே ஒரு பொருளுக்கு ஒரு எழுத்து இருக்கிறது. அதனால் எழுத்துக்கள் எண் மொத்தம் 50,000 க்கும் மேலாக உள்ளது.
சீன எழுத்துக்கள் (漢字), சீன மொழியில் ஹான்சு (HÀNZÌ), கொரிய மொழியில் ஹான்ஜா (HANJA), ஜப்பானிய மொழியில் கன்ஜி (KANJI) பண்டைய காலத்தில் சீனாவில் ஆக்கப்பட்ட எழுத்துக்கள் ஆகும்.
தொடக்கத்தில் சீன மொழியை எழுதுவதற்காகப் பயன்பட்டது. ஆனால் பின்னர் கொரியா, ஜப்பான், வியத்னாம் முதலிய வெளிநாடுகளில் சிறிது மாற்றி அமைக்கப்பட்டு பயன்பட்டு வந்தது.
இந்த நாடுகள் சாதாரணமாக "ஹன் எழுத்து எல்லை" என்று அடிக்கடி அழைக்கப்பட்டுள்ளன. இந்த நாடுகளுள் சீனாவைத் தவிர பிற நாடுகளிலும் ஒவ்வொரு பண்பாட்டிற்கு உரிய புதிய ஹன்ஜி எழுத்துக்கள் சில ஆக்கப்பட்டன.

சீனத்தின் எழுத்து இரண்டு பிரிவுகளைக் கொண்டது. மரபுவழி எழுத்து முறை, எளிமைப்படுத்தப்பட்ட எழுத்து முறை. எளிமைப்படுத்தப்பட்ட எழுத்து முறையே இன்று சீனாவில் நியமப்படுத்தப்பட்டுள்ளது. இது நியம மாண்டரின் பேச்சை அடிப்படையாகக் கொண்டது.
சீனப் பேச்சு மொழி இடத்துக்கிடம் வேறுபடும். ஒரு நிலப்பகுதியில் இருக்கும் மக்களின் பேச்சு மொழி வேற்று நிலப்பகுதி மக்களின் பேச்சு மொழியை விளங்கிக் கொள்ள முடியாமல் இருக்கலாம். அப்படி இருக்கையில் அதை வேறு மொழியாகவும் வகைப்படுத்தும் முறையும் இருக்கின்றது.
பேச்சிலும் எழுத்திலும் சீனம் பல வடிவங்களைக் கொண்டிருக்கின்றது.பேச்சில் பல வட்டார மொழிகள் உண்டு. இவற்றைப் பேசுபவர்கள் ஒருவரை ஒருவர் இலகுவில் புரிந்து கொள்ள மாட்டர்கள் எனலாம்.
இவை வட்டார மொழிகளா தனி மொழிகளா என்பது சர்ச்சைக்குரிய விடயமாகும். மரபு நோக்கில் ஏழு வட்டார மொழிகள் உள்ளன. அண்மையில் மேலும் மூன்று வட்டார மொழிகள் அடையாளம் காணப்பட்டுள்ளன.
இவற்றுள் நியமப்படுத்தப்பட்ட மாண்டரின் சீனாவின் அதிகாரப்பூர்வப் பேச்சு மொழியாகும். இது பெய்ச்சிங்கில் பேசப்படும் மாண்டரின் வட்டார மொழியின் ஒரு பிரிவு ஆகும். பெரும்பான்மையான சீன மக்கள் இதையே பேசுகின்றார்கள்.
'இலகு படுத்துங்கள், கஷ்டப்படுத்தாதீர்கள். ஆசையூட்டுங்கள், வெறுப்படையச் செய்யாதீர்கள்' (புகாரி , முஸ்லிம்)
சீனாவிற்கும் சவுதி அரேபியாவிற்கும் இடையிலான தூரம்
சீனாவிற்கும் சவுதி அரேபியாவிற்கும் இடையிலான மொத்த நேர்கோட்டு தூரம் 6,595 கிமீ .இது ஒரு நேர் கோடு தூரம்,
சீனாவிற்கும் சவுதி அரேபியாவிற்கும் இடையிலான உண்மையான பயண தூரம் அதிகமாக இருக்கலாம் அல்லது சாலையின் வளைவு காரணமாக மாறுபடலாம்.
பூமியின் மத்தியில் அதன் சுற்றளவு 40,0607 கி.மீ . சவூதி அரேபியாவிலிருந்து சீனா, பூமியின் சுற்றளவு 6-ல் ஒரு பங்கு உள்ளது.
'ஒருவர் அறிவைத் தேடி ஒரு பாதையில் சென்றால், அல்லாஹ் அதனைக் கொண்டு அவருக்கு சுவனம் செல்லும் ஒரு பாதையை இலகுபடுத்திக் கொடுக்கின்றான்.' (முஸ்லிம்)
சீன மொழி கற்பதற்கு கடினமானது. அடுத்து சவூதியிலிருந்து சீன நாடு அக்காலத்தில் கடினமான பாதைகள் கொண்ட தொலைதூரப்பயணம். இருப்பினும் விஞ்ஞானம், தொழில்நுட்பம் மற்றும் தத்துவத்தில் மேம்பட்டு சீனா சிறந்து விளங்கியது .
...இது பற்றி ஆயத்துல்லாஹ் முதஹ்ஹரி கூறியது போன்று விஞ்ஞானத்தினதும், தொழில் நுட்பத்தினதும், தத்துவத்தினதும் அறிவு தான். ஏனெனில் அது தான் அப்போது சீனா தேசத்தில் இருந்தது.
உண்மையில் குர்ஆனிய உலக நாகரீகக் கண்ணோட்டத்தின் படி அறிவு என்பது பிளவுபடாதது. அனைத்து அறிவுகளினதும் மூலம் பிரபஞ்சத்தின் தலைவனான இறைவனே. இந்த தெளிவு எமது முஸ்லிம் அறிஞர்களுக்கு இருந்ததனால் தான் அவர்கள் கிரேக்க தத்துவத்தையும், பாரசீக மெய்யியலையும், இந்திய கணிதத்தையும் அரபியில் கொண்டு வந்தார்கள்.
அவற்றை அகவயப்படுத்திக் கொண்டு அல் குர்ஆனிய உலக நாகரீக கண்ணோட்டத்திற்கு முரண்படாமல் வார்த்து வளர்த்து எடுத்தார்கள்.

அல் குர்ஆன், ஸுன்னாவை போலவே இயற்கையும் இறைவனை காட்டும் மூலங்களில் ஒன்று தான். இதனால் தான் 'அல் குர்ஆன் பேசும் பிரபஞ்சம் ; பிரபஞ்சம் மௌன அல் குர்ஆன்' என்று கூறினார், ஷெய்க் அல் கஸ்ஸாலி.
பாரியதொரு கலாசார, விஞ்ஞான இயக்கத்தை இஸ்லாம் உலகிற்கு வழங்கியது. பல நூற்றாண்டுகளாக அதுவே கல்வி, அறிவியல், கலாசார, பண்பாட்டு துறைகளில் கொடி கட்டிப் பறந்தது. இப்னு சீனா, அல் பிரூனி, இமாம் கஸ்ஸாலி ஒமர் கைய்யாம் போன்ற மகத்தான இஸ்லாமியக் கற்றறிவாளர்களை அதுவே உருவாக்கியது.
எனவே நபிகளார் (ஸல்) அவர்கள் "சீன சென்றேனும் சீர் கல்வியைக் கற்றுக் கொள்" என்று சொல்லி இருக்கிறார்கள்
'முஃமின் தேனீயைப் போன்றவனாவான். அது நல்லதைச் சாப்பிடும், நல்லதையே வெளியேற்றும். அது ஒரு கொடியில் அமர்ந்தாலும் அதனை முறித்து விடாது.' (அத்தபரானி, அல் பஸ்ஸார்)
என் இறைவா! எனக்கு கல்வியை அதிகப்படுத்து' எனக் கூறுவீராக!
-குர்ஆன் 20:114

கல்வி ஞானத்தை அதிகப்படுத்தச் சொல்லி நாம் இறைவனிடம் கேட்க வேண்டும் என்று இறைவன் கட்டளையிடுகிறான்.
"அறிந்தோரும் அறியாதோரும் சமமாவார்களா?' என்று கேட்பீராக! அறிவுடையோர்தான் நல்லறிவு பெறுவார்கள்.- குர்ஆன் 39:9..
'தன்னை மறந்துவிட்டுப் பிற மனிதர்களுக்குப் போதிக்கும் மனிதன், பிறருக்கு ஒளியைக் கொடுத்து, தன்னை எரித்துக் கொள்ளும் திரியைப் போன்றவனாவான்.'
'கல்வியூட்டுங்கள், கடுமையாக நடத்தாதீர்கள், கல்வியூட்டுபவன் கடுமையாக நடப்பவனைவிடச் சிறந்தவன்.'
(அல்-பைஹகீ -ஷுஅபுல் ஈமான்)
______________________________________________________
எதை நாம் அறியவில்லையோ அது நம்முடைய தன்று. -கதே

**அறிவு என்னும் அற்புதம் 7**
( தேடும் கல்வி )

‘கல்வியைத் தேடுவது ஒவ்வொரு முஸ்லிம்களின் மீதும் கடமையாகும்’ என நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்.
அறிவிப்பவர்: அபுதர்(ரலி) நூல்கள்: அபுதாவூத், திர்மதீ, இப்னுமாஜா, இப்னு ஹிப்பான்.)
கல்வியை தேடும் வழியில் ஒருவன் நடந்தால் அவனுக்கு அல்லாஹ் சுவர்க்கத்திற்கு செல்லும் வழியாக அதை ஆக்குகின்றான்.

மலக்குகள், கல்வியை தேடுபவனை திருப்தியுற்று தங்களின் இறக்கைகளை தாழ்த்துகின்றனர்.
ஒருவர் கல்வியை எடுத்துக்கொண்டால் அவர் மாபெரும் பாக்கியத்தை எடுத்துக்கொண்டவராவார் என நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்.
(ஹதீஸ் சுருக்கம். அறிவிப்பவர்: அபுதர்(ரலி) நூல்கள்: அபுதாவூத், திர்மதீ, இப்னுமாஜா, இப்னு ஹிப்பான்.)
நபி(ஸல்) அவர்கள் பள்ளியில், தங்களின் சிவப்புநிறப் போர்வையில் சாய்ந்து அமர்ந்திருக்கும் போது..
அவர்களிடம் நான் :
‘இறைத்தூதர் அவர்களே! நான் கல்வியை தேடி வந்துள்ளேன் எனக் கூறினேன்.
உடனே நபி(ஸல்) அவர்கள், கல்வியை தேடுபவனுக்கு என் வாழ்த்துக்கள். கல்வியை தேடுபவனுக்கு மலக்குகள் தங்களின் இறக்கைகளால் சூழ்கிறார்கள். கல்வியைத் தேடி அவர் வந்ததற்காக அவர் மீது பிரியம் கொண்டவர்களாக, பூமியிலிருந்து வானத்தை அடையும்வரை அவர்கள் ஒருவர் மீது ஒருவராக ஏறுகிறார்கள் என்ற கூறினார்கள்.
(அறிவிப்பவர்: ஸப்வான் இப்னு அஸ்ஸால் அல் முராதீ(ரலி) நூல்கள்: அஹ்மத், தப்ரானி, இப்னு ஹிப்பான், ஹாகிம்.)

நபி(ஸல்)கூறினார்கள், அறிஞர்களை மட்டம் தட்டவோ, அறிவிலிகளிடம் பெருமையடிக்கவோ, மக்களின் கவனத்தை தன் பக்கம் ஈர்க்கவோ கல்வியை ஒருவன் தேடினால் அவனை அல்லாஹ் நரகில் நுழையச் செய்வான்.
(அறிவிப்பவர்: கஃப் இப்னு மாலிக்(ரலி) நூல்கள்: திர்மிதீ, ஹாகிம், பைஹகீ)
நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள், மிஃராஜின் போது, நான் சிலர் பக்கம் சென்றேன். அவர்களின் உதடுகள் நெருப்பிலான கத்தரியால் கத்தரிக்கப்பட்டுக் கொண்டு இருந்தது.
‘ஜிப்ரீலே! யார் இவர்கள்? என்று கேட்டேன்.
இவர்கள் தான் ‘தாங்கள் செய்யாததை (பிறருக்கு) கூறிக்கொண்டிருந்த உமது சமுதாயத்தின் பேச்சாளர்கள்’ என்று (ஜிப்ரீல் அலை அவர்கள்) கூறினார்.
(அறிவிப்பவர்: உஸாமா இப்னு ஸைது(ரலி) நூல்கள்: புகாரீ, முஸ்லிம்.)
மேலும் நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள், கடலில் வியாபாரம் பெருகும் அளவுக்கு, இறைவழியில் குதிரைகள் புறப்படும் அளவுக்கு இஸ்லாம் வெளியாகும். பின்பு எங்களைவிட படித்தவர் உண்டா? அறிந்தவர் உண்டா? மார்க்க சட்டங்களை புரிந்தவர் எவரும் உண்டா? என்று கூறி குர்ஆனை ஓதும் சில கூட்டம் வெளியாகும் என்று கூறிவிட்டு, அவர்களிடம் நற்செயல்கள் உண்டா? என தம் தோழர்களை பார்த்து நபி(ஸல்) கேட்டார்கள்.
அதற்கு அவர்கள் அல்லாஹ்வும் அவனது தூதருமே அறிந்தவர்கள் என்று சொன்னார்கள்.
அவர்களும் இந்த சமுதாயத்தை சார்ந்தவர்கள்தான். (எனினும்) அவர்களே நரகத்தின் விறகுகள் என்று நபி(ஸல்)கூறினார்கள். (அறிவிப்பவர்: உமர் இப்னு கத்தாப்(ரலி) நூல்: தப்ரானி,பஸ்ஸார்)
நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள். நரைத்த முஸ்லிமுக்கு மதிப்பளிப்பதும், குர்ஆனை சுமந்து அதில் வரம்பு மீறாத புறக்கணிக்காதவர்களுக்கு மதிப்பளிப்பதும் அல்லாஹ்விடத்தில் மதிப்புள்ளதாகும்.
அபூ மூஸா(ரலி) நூல்: அபூதாவூத்

மறுமையில் என் இரட்சகன் மக்கள் மத்தியில் என்னை அழைக்கும் போது,
இரட்சகனே! நான் கட்டுப்பட்டேன் என்று நான் கூறியவுடன்,
‘நீ அறிந்ததில் எதைச் செய்தாய் என்று? என் இரட்சகன் கேட்பதையே நான் மிகவும் அஞ்சுகிறேன் என்று அபூதர்(ரலி) கூறுவார்கள் என லுக்மான் இப்னு ஆமிர்(ரலி) கூறியுள்ளார்கள். (நூல்: பைஹகீ )

## அறிவு என்னும் அற்புதம் 8

(இரண்டு அறிஞர்களும், மூன்று வானவர்களும்)
நபி (ﷺ) அவர்கள் கூறினார்கள்:
"உங்களுக்கு முன் வாழ்ந்தவர்களில் ஒரு மனிதர் இருந்தார். அவர் தொண்ணூற்று ஒன்பது மனிதர்களைக் கொன்றுவிட்டிருந்தார்.
பிறகு அவர் அக்கால மக்களில் நன்கறிந்த அறிஞர் யார் என விசாரித்தார். அவருக்கு ஒரு வணக்கசாலி காட்டப்பட்டார். அவர் அந்தப் வணக்கசாலியிடம் சென்று,
“நான் தொண்ணூற்று ஒன்பது மனிதர்களைக் கொன்றுவிட்டேன். எனக்குப் பாவமன்னிப்புக் கிடைக்குமா?” என்று கேட்டார்.
அந்தப் வணக்கசாலி, “கிடைக்காது” என்று கூறவே, அவரையும் அந்த மனிதர் கொன்று, எண்ணிக்கையை நூறாக முழுமையாக்கிவிட்டார்.
பிறகு மீண்டும் அக்கால மக்களில் மார்க்கத்தை நன்கறிந்த அறிஞரைப் பற்றி அவர் விசாரித்தார். அப்போது மார்க்க அறிஞர் ஒருவர் அவருக்குக் காட்டப்பட்டார். (அவரிடம் சென்று) அந்த மனிதர்,
“நான் நூறு கொலைகள் செய்துவிட்டேன். எனக்குப் பாவமன்னிப்புக் கிடைக்குமா?” என்று கேட்டார்.
அதற்கு அந்த அறிஞர்,
“ஆம் (கிடைக்கும்). இறைவனுக்கும்,பாவமன்னிப்புக் கோரிக்கைக்கும் இடையே யார் குறுக்கே வந்து நிற்க முடியும்? நீ (நல்லோர் வாழும்) இன்ன ஊருக்குப் போ. அங்கு மக்கள் சிலர் இருப்பார்கள். அவர்கள் இறைவனை வழிபட்டுக் கொண்டிருப்பார்கள். அவர்களுடன் சேர்ந்து நீயும் இறைவனை வழிபடு. நீ உனது ஊருக்குத் திரும்பிச் செல்லாதே! ஏனெனில், அது தீய ஊராகும்”என்று சொன்னார்.
அவ்வாறே, அந்த மனிதர் (நல்லோர் வாழும்) அந்த ஊரை நோக்கிச் சென்றுகொண்டிருந்த போது, பாதி வழியில் இறந்துவிட்டார்.
அப்போது இறையருளைக் கொண்டுவரும் வானவர்களும், இறை தண்டனைகளை நிறைவேற்றும் வானவர்களும் அவர் விஷயத்தில் (அவரை யார் அழைத்துச் செல்வது) என்று சர்ச்சை செய்துகொண்டனர்.
அப்போது அருளின் வானவர்கள், “இவர் பாவமன்னிப்புக் கோரி பாவத்திலிருந்து மீண்டு தமது உள்ளத்தால் இறைவனை நோக்கி வந்துகொண்டிருந்தார்” என்று கூறினர்.
தண்டனையின் வானவர்கள், “இவர் சிறிதும் நன்மைகளைச் செய்யாதவர்” என்று கூறினர்.
அப்போது மற்றொரு வானவர் மனிதத் தோற்றத்தில் அங்கு வந்தார். அவரை அவ்விரு வானவர்களும் நடுவராக வைத்துக்கொண்டனர்.
அப்போது அந்த வானவர், “இவ்விரு ஊர்களுக்கு இடையிலுள்ள தூரத்தைக் கணக்கெடுங்கள். அவற்றில் எந்த ஊருக்கு மிக அருகில் அவரது உடல் இருக்கிறதோ அந்த ஊருக்குரியவராகவே அவர் இருப்பார்”என்று சொன்னார்.
அவ்வாறே கணக்கெடுத்தபோது, (அவர் வசித்துவந்த ஊரைவிட) அவர் நாடிவந்த ஊரே அவருக்கு மிகவும் சமீபமாக இருப்பதைக் கண்டனர். ஆகவே, அவரை அருளின் வானவர்கள் கைப்பற்றிக்கொண்டனர்.
இதை அபூசயீத் அல்குத்ரீ (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
ஸஹீஹ் முஸ்லிம் : 5339.
___________________________________________
மனோ விகாரங்களே வாழ்வாகிய கப்பலைச் செலுத்தும் காற்று.
அறிவே அதை நடத்தும் சுக்கான்.
காற்றின்றேல் கப்பல் நின்றுவிடும்.
சுக்கானின்றேல் தரை தட்டிவிடும் -ஷூல்ஜ்

## அறிவு என்னும் அற்புதம் 9

( காணாமல் போன அடிமை )

இமாம் ஷாபீஈ (ரஹ்) அவர்கள் ஓரிரவு ஜாமிஆ மஸ்ஜித்தில் தங்கியிருக்கும் போது, ஒரு மனிதர் அங்கு வந்து உறங்குபவர்களுடையே ஒருவரைத் தேடினார்.
இமாம் ஷாபீஈ (ரஹ்) அவர்கள் பக்கத்திலுள்ளவரை அழைத்து , "நீர் சென்று ஒரு கண் மட்டும் தெரியக்கூடிய உனது நீக்ரோ அடிமை தப்பியோடி விட்டாரே அவரையா நீங்கள் தேடுகிறிர்கள் ? என்று கேள் ".
அவரும் அவரிடம் கேட்க, "ஆமாம். இவ்வளவு துல்லியமாக அடையாளங்களை கூறும் உமக்கு அவன் இருப்பிடம் தெரியுமா.. ?
அவரை இமாம் அவர்களிடம் அழைத்து வர, இமாமவர்களிடம் கேட்டதற்கு , "சிறைக்கூடம் சென்று தேடிப்பார். அங்கு அந்த அடிமை இருப்பார் ".
அதே மாதிரி அந்த அடிமை அங்கேயே இருந்தார் . "எப்படி உங்களால் சொல்ல முடிந்தது ?"
"அவசரமாக அவர் மஸ்ஜிதினுள் நுழைந்ததும் யாரோ ஒருவரைத் தேடுகிறார் என்பதை அவரது அங்க அவயங்களின் பரபரப்பில் இருந்து உணர்ந்து கொண்டேன்.
மஸ்ஜித் நுழைந்ததும் நீக்ரோ அடிமைகள் உறங்குமிடத்திற்கு சென்று தேடினார் . ஆகையால் அவரது அடிமை நீக்ரோ என்பது தெரிந்தது

அவர் தேடுபவரின் முகத்தில் வலது கண்ணை உற்றுப் பார்த்து தேடியதில் , அவரின் அடிமைக்கு வலது கண் ஊனம் என்பது தெரிய வந்தது .
என் அனுபவத்தில் தப்பியோடும் அடிமை செலவுக்காக பணத்தையோ பசிக்காக உணவையோ திருடுவார்கள்.
அது கள்ளத்தொழிலை செய்து வரும் கன்வனைப் போல் அல்லாமல் கிடைத்ததும் திருடுவார்கள் அடிமைகள்.
ஆகையால் எளிதில் பிடிபடுவார்கள்.
அடிமைகள் திருடினால் சிறைச்சாலையில் அடைப்பார்கள் " என்று இமாம் ஷாபீஈ (ரஹ்) கூறினார் .
_______________________________________________
கண் பார்வை மூலம் சிறந்த பொருளை எடுப்பது போல பகுத்தறிவு மூலம் சிறந்த கருத்துகளை அறியலாம்!
- அரிஸ்டாட்டில்

## அறிவு என்னும் அற்புதம் 10

( காணாமல் போன ஒட்டகம் )

வளமான நாட்டில் எந்தவொரு பிரச்சனையும் இல்லாதிருந்த காலத்தில் வியாபாரி ஒருவனின் ஒட்டகம் காணாமல் போனது. பல நாட்கள் தேடியும் கிடைக்கவில்லை.
ஒரு நாள் ஒட்டகத்தைத் தேடிச் சென்ற வியாபாரி வழியில் நால்வரைச் சந்தித்தான். "எங்கே போகிறீர்கள்?" என்று கேட்டான்.
"நாங்கள் பெருத்த துயரத்தில் இருக்கிறோம். நாங்கள் எங்கள் நாட்டில் மந்திரிகளாக இருந்தோம். மக்கள் நலனில் அக்கறை கொள்ளாமல் கொடுங்கோல் ஆட்சி செலுத்தும் அரசனை விட்டு, வேறு இடம் தேடிச் சென்று கொண்டிருக்கிறோம்" என்றார் ஒருவர்.
"அப்படியா?" என்றான் வியாபாரி வருத்தத்துடன்.
"ஆமாம்.. நீங்கள்?" என்று கேட்டார் மற்றொருவர்.
"என்னுடைய காணாமல் போன ஒட்டகத்தைத் தேடிச் செல்கிறேன்" என்றான் ஆதங்கத்துடன்.
அதைக் கேட்டதும் நால்வரும் கூடிப் பேசினர்.
அவர்கள் பேசிக் கொள்வதைப் பொறுக்காமல், "நீங்கள் என் ஒட்டகத்தைப் பார்த்தீர்களா?" என்று ஆவலுடன் கேட்டான்.
உடனே முதல் நபர், "உங்களிடம் ஒன்றைக் கேட்க வேண்டும்" என்றார்.
"என்ன?"
"உங்கள் ஒட்டகம் முடமா?"
"ஆமாம்.. ஒட்டகத்தை எங்காவது பார்த்தீர்களா?"
ஒன்றும் கூறாமல் அமைதியானார் முதல் நபர்.
இரண்டாம் நபர் "ஒட்டகத்திற்கு ஒரு பக்கக் கண் பார்வை கிடையாதா?" என்று ஆரம்பித்தார்.
"ஆமாம்.. ஆமாம்.. ஒட்டகத்தை எங்காவது பார்த்தீர்களா?"
ஒன்றும் கூறாமல் அமைதியானார் இரண்டாம் நபர்.
அடுத்து முன்றாவது நபர் "உங்கள் ஒட்டகத்தின் வால் சற்றே நீளம் குறைந்ததா?" என்று கேட்டார்.
"போதும்.. போதும்.. என்னைக் கேலி செய்தது. முதலில் ஒட்டகத்தை எங்கு பார்த்தீர்கள் என்று சொல்லுங்கள்?" என்றான் வியாபாரி கோபத்துடன்.
ஒன்றும் கூறாமல் அமைதியானார் மூன்றாம் நபர்.
நான்காம் நபர் அடுத்ததாக, "ஒட்டகத்திற்கு இருமல் போன்ற உபதை இருந்ததா?" என்று ஆரம்பித்தார்.
வியாபாரி பன்மடங்கு கோபத்துடன், "ஆமாம்.. ஆமாம்.. ஆமாம்.. ஒட்டகத்தை எங்கே பார்த்தீர்கள் என்று சொல்கிறீர்களா.. இல்லையா?" என்று கத்தினான்.
முதல் நபர், "எங்களை மன்னியுங்கள். நாங்கள் யாரும்; ஒட்டகத்தைப் பார்க்கவில்லை" என்று சொன்னதுதான், உடனே வியாபாரி, "என்ன விளையாடுகிறீர்களா? ஒட்டகத்தை எங்கே ஒளித்து வைத்திருக்கிறீர்கள்?" என்று மேலும் கோபத்துடன் கேட்டான்.
"நாங்கள் யாருமே உண்மையில் ஒட்டகத்தைப் பார்க்கவில்லை" என்றார் உறுதியுடன் இரண்டாம் நபர்.
"என்ன கதை அளக்கிறீர்கள்? ஒட்டகத்தைப் பற்றி இத்தனை விவரங்கள் தெரிந்து கொண்டு, பார்க்கவில்லையென்று சொன்னால் யாராவது நம்புவார்களா? நீங்கள் பொய் சொல்கிறீர்கள். வாருங்கள்.எங்கள் அரசரிடம். அவரே தீர்ப்புச் சொல்லட்டும்.." என்று நால்வரையும் அரசரிடம் அழைத்துச் சென்றான்.
வியாபாரி நடந்த விவரங்கள் அனைத்தையும் அரசரிடம் கூறி நீதி சொல்லும்படி வேண்டி நின்றான்.
அரசனிடம் நால்வருமே, ஒட்டகத்தை ஒளித்து வைக்கவில்லை என்று உறுதி அளித்ததால், "அப்படியென்றால் ஒட்டகம் பற்றிய விவரங்கள் உங்களுக்கு எப்படித் தெரிந்தது?" என்று கேட்டார்.
முதல் நபர், "அரசே ! நான் முதலில் ஒட்டகத்தின் கால் தடத்தைக் கண்ட போது, ஒரு பாதச்சுவடு மட்டும் மற்றவற்றை விட ஆழமாக இருந்ததால், ஒரு கால் முடமாக இருக்கலாம் என்று எண்ணினேன். அதையே சொன்னேன்" என்று கூறினார்.
அடுத்து, இரண்மாவது நபர், "நான் வழியில் ஒரு பக்கமாக இருக்கும் மரங்களில் மட்டும் இலைகள் உண்ணப்பட்டு இருப்பதைக் கண்டேன். மறுபக்கம் பழங்கள் காய்த்துத் தொங்கியும் உண்ணப்படாமல் இருப்பதைக் கண்டேன். அதனால் ஒரு பக்கப் பார்வை இல்லாது இருக்கலாம் என்று எண்ணினேன்" என்று கூறினார்.

“நான் வரும் போது, வழியில் சிறு சிறு இரத்தத் துளிகள் இருக்கக் கண்டேன். ஒட்டகத்தைப் பூச்சிகள் கடித்து காயம் ஏற்பட்டு இரத்தம் சிந்தி இருக்கலாம். அதைத் தடுக்கும் விதத்தில், அவற்றை ஓட்டும் வகையில் நீளமான வால் இல்லாது இருக்கலாம் என்று எண்ணினேன்” என்றார் மூன்றாவது நபர்.
“நாங்கள் வந்த பாதையில், ஒட்டகம் நடந்த பாதச் சுவட்டில் பின்னங் கால்கள் நிலத்தில் அதிகமாகப் படியாமல் இருந்தன. அதனால் ஒட்டகத்திற்கு உடல் நலக் குறைவு இருக்கலாம் என்று எண்ணினேன்” என்று தன் கூற்றிற்கு காரணத்தை விளக்கினார் நான்காம் நபர்.
நால்வரின் அறிவார்ந்த சொற்களைக் கேட்ட அரசர்,
“அப்படியா.. வியாபாரியே இந்த நான்கு புத்திசாலிகளை அழைத்து வந்ததற்கு நன்றி. ஒட்டகத்திற்கான விலையை நான் தருகிறேன்” என்று வியாபாரியி;டம் கூறி விட்டு,
நால்வரிடமும், “நீங்கள் நால்வரும் எங்கள் நாட்டிலேயே தங்கலாம். கூர்ந்து நோக்கும் தன்மையும், புத்திச் சாதுர்யமும் மிக்க நீங்கள் எங்கள் அவையில் மந்திரிகளாக இருந்தால் நன்றாக இருக்கும்” என்று கேட்டுக் கொண்டார்.
நால்வரும் அதற்கு உடன் ஒப்புக்கொண்டு, அரசர் அவையில் பணியில் சேர்ந்து நாட்டை மேலும் சிறக்கச் செய்தனர்.
________________________________________________

முடியுமானால் பிறரைவிட அறிவாளியாயிரு.
ஆனால் அதை அவர்களிடம் கூறாதே . செஸ்டர்பீல்டு

## அறிவு என்னும் அற்புதம் 11

( பேரறிஞர்கள் வரலாறு : இமாம் புகாரி ரஹ் )




பெயர் : அபூ அப்தில்லாஹ் முகம்மது பின் இஸ்மாயில் அல் புகாரி
புகாரா என்ற ஊரைச் சேர்ந்தவர். இந்த ஊரின் பெயரே இவர்களது பெயராக அழைக்கப்பெற்றது.
16 வருடங்கள் கடின உழைப்பால் தொகுத்த ஹதீஸ் தொகுப்பு நூல் புகாரி.
ஸிஹாய் ஸித்தா (ஸஹீஹான நூல்கள்) என்று ஆறு நூல்கள் அழைக்கப்பட்டன .

1.ஸஹீஹ் புகாரி 2.ஸஹீஹ் முஸ்லிம்,3.திர்மிதி, 4.அபூதாவூத்,5.நஸாயீ,
6.இப்னு மாஜா.
இதில் மிகவும் பிரபல்யமான நூல் புகாரி

இமாம் அவர்களின் தாய் தந்தை இஸ்லாத்தில் மிகவும் பற்று உள்ளவர்களாக இருந்தார்கள். இதனால் இவர்களையும் இஸ்லாமிய பற்று உள்ளவர்களாக வளர்த்தார்கள்.
சிறு வயதாக இருக்கும் பொழுது தந்தையை இழந்தார்கள். தாய் இவர்களை மார்க்கப் பற்றுள்ளவர்களாக, இல்முடையவர்களாக வளர்த்தெடுத்தார்கள்.

சிறு வயதிலேயே கண் தெரியாதவராக இருந்தார்கள் . இவர்கள் தாயின் துஆவினால் அல்லாஹ் இவர்களுக்கு கண்பார்வையை கொடுத்தான்.
இவர்களுடைய தந்தை இஸ்மாயில் (ரஹி) அவர்கள் ஒரு ஹதீஸ் கலை அறிஞர். இமாம் மாலிக் (ரஹி ) அவர்களின் மாணவர் .
கண்பார்வை இவர்களுக்கு வந்த பிறகு அல்லாஹ் இவர்களுக்கு மனனம் செய்யும் ஆற்றலையும் அருளினான்.

10 வயதிலேயே குர் ஆனை மனனம் செய்தார்கள். ஷுயூஹுள் முஹத்தீஸீன்களிடம் (ஹதீஸ் கலை அறிஞர்கள்) புகாரா ஊரிலேயே ஹதீஸ்களை கற்றுத்தேர்ந்தார்.
முஹம்மது இப்னு அபீ ஹாத்திம் (ரஹி ) அவர்கள் புகாரி அவர்களிடம், "உங்களுக்கு எப்படி இந்த ஹதீஸ் கலையில் ஆர்வம் வந்தது" ?
அதற்கு அவர்கள் சிறு வயதிலேயே குர்ஆனையும், ஹதீஸ்களையும் படிக்க ஆரம்பித்து விட்டதனால் அப்பொழுதிலிருந்தே ஆர்வம் வந்துவிட்டது என்று கூறினார்கள்.
ஒவ்வொரு குழந்தைக்கும் முதல் பள்ளிக்கூடமாக தாய் தான் இருக்கிறார்கள். அப்படிப்பட்ட தாயாக இவர்கள் தாய் சிறு வயதிலேயே இவர்களுக்கு கல்வி ஆர்வத்தை மூட்டி வளர்த்தார்கள்.
இவர்களது தாய் ஹஜ் செய்வதற்காகவும், மகன் மக்காவிலுள்ள அறிஞர்களிடம் கல்வி கற்பதற்காகவும், இவர்களது மகன் புகாரி, அஹ்மது அவர்களை அழைத்துக்கொண்டு ஹஜ் செய்கிறார்கள்.
இமாம் புகாரி(ரஹி) அவர்கள் படிப்பின் மீது உள்ள ஆர்வத்தினால் தன் தாயிடம், இங்கேயே நான் தங்கி படிக்கிறேன் என்று கூறுகிறார்கள். அதற்கு அவர்கள் தாயும் சம்மதிக்கிறார்கள்.
கல்வி பயணத்தை மக்காவில் ஆரம்பித்து மதீனா , ஹிஜாஸ் போன்ற ஊர்களுக்கு சென்று கல்வி கற்றார்கள்.
14 ஆயிரம் மைல்கள் தூரம் அலைந்து கல்வியைத் தேடி கற்றார்கள்.
6 லட்சம் ஹதீஸ்களை மனனம் செய்துள்ளார்கள். இதில் 3 லட்சம் ஹதீஸ்கள் அறிவிப்பாளர்கள் தொடருடன் மனனம் செய்துள்ளார்கள்.

ஸஹீஹுல் புகாரி என்ற கிரந்தத்தில் இவர்கள் மனனம் செய்துள்ள அனைத்து ஹதீஸ்களும் இடம் பெறவில்லை.
புகாரி தமிழில், ஏழு பகுதிகளைக் கொண்ட புத்தகமாக பல்வேறு தலைப்புகளின் கீழ் ஏழாயிரம் ஹதீஸ்களுடன் மொழிபெயர்க்கப்பட்டுள்ளது.
அல்லாஹ் இவர்களுக்கு வழங்கிய இல்முடைய அருட்கொடையினால் இப்படிப்பட்ட சிறப்புமிக்க நூல் உருவாயிற்று
இமாம் புகாரி அவர்கள் 1080 இமாம்களிடம் கல்வியை கற்று உள்ளார்கள்.
இன்றைக்கு அல்லாஹ்வின் மாபெரும் கிருபையால் வீட்டிலிருந்தே கல்வியை கற்று வருகின்றோம். ஆனால் அன்றைய காலகட்டத்தில் ஒவ்வொரு ஹதீஸ் கற்பதற்கும் பல மைல் தூரம் , பலநாட்கள் கஷ்டப்பட்டு பயணம் செய்து கல்வியை அன்றைய கால அறிஞர்கள் கற்றார்கள்.
புகாரி அவர்கள் 16 வயதிலேயே மற்ற ஆலிம்களின் புத்தகங்களை மனனம் செய்துள்ளார்கள்.

படிப்பினை:
இன்றைய காலகட்டத்தில் கணவனை இழந்த தாய்மார்களில் சில பேர் தங்கள் குழந்தைகளை வேலைக்கு அனுப்புகிறார்கள் அல்லது ஒழுக்கம் உள்ளவர்களாக வளர்க்க முடியாமல் தடுமாறுகிறார்கள்.
ஆனால் புகாரி (ரஹி) அவர்களின் தாய் எவ்வளவு பொறுப்புடன் தங்கள் குழந்தைக்கு மார்க்கப்பற்றுடன் சிறந்த முறையில் வளர்த்தார்கள்.
குழந்தைக்கு ஏதாவது வாங்கித் தருவது என்றால் இன்றைக்கு அதனுடைய கஷ்டம் தெரியாமல் வாங்கித் தந்து விடுகிறோம் . அதனுடைய வெகுமதியும் அவர்களுக்கு தெரிவதில்லை. அதனால் பல தீமைகளும் ஏற்படுகின்றன.
இன்றைக்கு குழந்தைகளுக்கு செல்போன்களை வாங்கிக் கொடுத்து கேட்க கூடாத , பார்க்கக் கூடாத விஷயங்களை பார்ப்பது, ஒழுக்கமில்லாமல் பேசுவது போன்ற கெட்ட குணங்களை கொண்டவர்களாக வளர்கிறார்கள்.

இந்த நிலைமைக்கு காரணம் பெற்றோர்கள்தான் எனவே ஒரு குழந்தையை நல்ல முறையில் வளர்க்க கூடிய பொறுப்பாளியாக தாய் இருக்கிறார்கள். எனவே அதை தாய்மார்கள் உணர்ந்து ஆரம்ப காலத்திலேயே கவனத்துடன் மார்க்க கல்வியை கொடுத்து வளர்க்க வேண்டும்.
நாம் ஆரம்ப காலகட்டத்தில் நல்ல முறையில் வளர்த்தால் தான் பருவ வயதை அடையும் பொழுது நல்ல குழந்தைகளாக உருவெடுப்பார்கள்.
இமாம் புகாரி (ரஹி) அவர்கள் பதினெட்டு, இருபது வயதில் முழுமூச்சுடன் கல்வியை கற்றார்கள். ஆனால் இன்றைக்கு குழந்தைகள் இந்த வயதில் கெட்டுப் போகக் கூடியவர் களாக, அவர்களின் பேச்சை பெற்றோர்கள் கேட்கும் அவல நிலைக்கு தள்ளப்படுகிறார்கள்.
புகாரி அவர்களின் தாய் போல் நாமும் ஒழுக்கமுடன் குழந்தைகளை வளர்க்க வேண்டும்.
புகாரி அவர்கள் ஒரு பக்கத்தை பார்த்தால் அதை உடனே மனனம் செய்யும் ஆற்றல் பெற்றவர்களாக திகழ்ந்தார்கள்.
இமாம் புகாரி (ரஹி) அவர்கள், ஹாஷித் இப்னு இஸ்மாயில்(ரஹி ) இவர்களெல்லாம் நண்பர்கள்.

இவர்களின் நண்பர்கள் எல்லாம் மார்க்க அறிஞர்களிடம் கல்வியைக் கற்று அதை எழுதும் பழக்கம் உடையவர்களாக இருந்தார்கள். ஆனால் இமாம் புகாரி அவர்கள் எதையும் எழுதாமல் பாடத்தை கவனிக்க மட்டும் செய்தார்கள்.

ஒருநாள் ஹாஷித்(ரஹி) அவர்கள் இமாம் புகாரி இமாமிடம் "நாங்கள் எல்லாம் கற்பதை எழுதுகிறோம் ஆனால் நீ எதையும் எழுதாமல் உன் காலத்தை வீணாக்கிறாயா?" என்றார்கள் அதற்கு புகாரி அவர்கள் அமைதியாக இருந்து விடுகிறார்கள் .
இது மாதிரியான கேள்விகளை அவர்களது நண்பர்கள் கேட்டுக் கொண்டே இருக்கிறார்கள். ஒரு நாள் இமாம் புகாரி அவர்கள் நீங்கள் எழுதியதை கொண்டு வாருங்கள் என்றார்கள். அதில் மொத்தம் 18 ஆயிரம் ஹதீஸ்கள் எழுதப்பட்டிருந்தன அவற்றை சற்றும் தயங்காமல் மனனமாக எதையும் பார்க்காமல் ஒப்புவித்தாரகள்.
ஹாஷித்(ரஹி) அவர்கள் கூறுகிறார்கள் இமாம் புகாரி அவர்கள் ஒப்புவித்ததைக் கொண்டு எங்களின் எழுத்துப் பிழைகளை நாங்கள் திருத்தி கொண்டோம். என்று சொல்லும் அளவிற்கு அல்லாஹ் அவர்களுக்கு மனனம் செய்யும் ஆற்றலை தந்திருந்தான்

புகாரி (ரஹ்) அவர்களின் ஆற்றலை சோதிப்பதற்காக பாக்தாத் நகரில் 10 இமாம்கள் 100 ஹதீஸ்களை எடுத்து அதன் அறிவிப்பாளர் தொடரில் மாற்றம் செய்து கேள்விகள் கேட்டார்கள்.
அதற்கு இமாம் புகாரி அவர்கள் தெரியாது என்று பதிலையே எல்லா கேள்விகளுக்கும் கூறினார்கள். இதை கவனித்த மக்கள் இவர்களுக்கு எதுவும் தெரியாது என்று எண்ணிக் கொண்டார்கள்.
ஆனால் இமாம்களுக்கு தெரிந்துவிட்டது . இவர் நாம் தவறான கேள்விகளைக் கேட்கிறோம் என்பதை அறிந்துகொண்டு இப்படி பதில் கூறுகிறார்கள் என்று , இவர்களின் ஆற்றலை புரிந்து கொண்டார்கள்.
இறுதியில் புகாரி (ரஹி) அவர்கள் அந்த நூறு ஹதீஸ்களையும் சரியான அறிவிப்பாளர் தொடருடன் சொன்னார்கள் என்பதை இமாம் இப்னு ஹஜர் (ரஹ்) அவர்கள் அல்லாஹ் இவர்களுக்கு கொடுத்த மிகப்பெரிய ஆற்றல் இது என்று வியப்படைந்து கூறினார்கள்.
இமாம் புகாரி (ரஹி)அவர்கள் கற்ற கல்வியை தன் வாழ்நாளில் அமல்படுத்தினார்கள். தன் வாழ்நாளில் யாரையும் தவறாக விமர்சனம் செய்ததில்லை . கொள்கை ரீதியாக மாறுபட்டு சிலர் இருந்தவர்கள் கொள்கையை மட்டுமே பேசுவார்கள்.

இமாம் புகாரி(ரஹி) அவர்களின் ஹதீஸ்களை வழிகெட்ட கூட்டத்தினர் இது ஸஹீஹ் இது ளயீப் என்று சாதாரணமாக விமர்சிப்பதும் மற்றும் அவர்களை கண்ணியக் குறைவாக பேசுவதும் இன்றைய காலகட்டத்தில் சர்வசாதாரணமாக நடைபெறுகின்றது.
யாரையும் விமர்சிக்காமல் இருப்பதற்கு இமாம் புகாரி(ரஹி) கூறுகிறார்கள் : புறம் பேசக்கூடாது அல்லாஹ் அதை ஹராமாக்கியுள்ளான் என்பதை நான் எப்பொழுது தெரிந்து கொண்டேனோ அன்றில் இருந்தே நான் பேசுவதில்லை என்று கூறினார்கள்.
இன்றைக்கு நாம் இன்னொருவருடன் சேர்ந்து விட்டால் சர்வசாதாரணமாக புறம் பேசி விடுகிறோம். ஆனால் அல்லாஹ் கூறுகிறான் புறம் பேசுவது தன் சகோதரனின் மாமிசத்தை சாப்பிடுவது போன்றதாகும் இப்படிப்பட்ட மோசமான விஷயத்திலிருந்து நம்மை நாம் பாதுகாக்க வேண்டும்.

இமாம் புகாரி (ரஹி) அவர்கள் தன் வாழ்வாதாரத்திற்காக மற்றும் கல்விக்காக யாரிடமும் எந்த ஒரு எதிர்பார்ப்பும் இல்லாமல் இருந்தார்கள். அல்லாஹ் அவர்களை கண்ணியப் படுத்தினான். அவர்கள் வியாபாரம் செய்தும் தங்கள் குடும்பத்தின் ஒத்துழைப்பாலும் தங்கள் தேவையை நிறைவேற்றிக் கொண்டார்கள்.
இமாம் புகாரி (ரஹி) அவர்கள் ஒரு சமயம் கப்பலில் பயணம் செய்து கொண்டிருந்தார்கள். அப்பொழுது அவருடன் பயணம் செய்து கொண்டிருந்த ஒருவருடன் நட்பு ஏற்பட்டு தன்னிடம் பத்தாயிரம் தங்க காசுகள் இருக்கின்றது என்று சொல்லிவிடுகிறார்கள்.
இதை தெரிந்து கொண்ட அந்த மனிதர் ஒரு சூழ்ச்சி செய்கிறார் அதாவது, தன்னிடமிருக்கும் பத்தாயிரம் காசுகள் தொலைந்துவிட்டது என்று கூறுகிறார்.
உடனே அந்த கப்பலில் இருப்பவர்கள் அதை அனைவரிடமும் சோதனை செய்து பார்க்கிறார்கள் . இந்த சூழ்ச்சியை தெரிந்து கொண்ட இமாம் புகாரி (ரஹி)அவர்கள் அந்த பத்தாயிரம் தங்கக் காசுகளையும் ஒரு துணியில் கட்டி கடலில் எறிந்து விடுகிறார்கள்.
கப்பலை விட்டு இறங்கியதும் அந்த மனிதர் இமாம் புகாரி (ரஹி) அவர்களிடம் கேட்கிறார்கள் அந்த தங்ககாசுகளை என்ன செய்தீர்கள்? என்று
அதற்கு அவர்கள் நான் அதை கடலில் எறிந்து விட்டேன் என்றார் ,
ஏன் இப்படி செய்தீர்கள் அது உங்களுக்கும் பயன்படாமல் எனக்கும் பயன்படாமல் போய்விட்டதே ? என்றார்கள்.
அதற்கு இமாம் புகாரி ஒருவேளை அந்த காசு என்னிடமிருந்து நான் திருடன் என்று சொல்லிவிட்டால் நான் என் வாழ்நாளினை அர்ப்பணம் செய்து திரட்டி வந்த ஹதீஸ்களுக்கு களங்கம் ஏற்பட்டுவிடும் அதனால் அப்படி செய்தேன் என்றார்கள்.
ஹதீஸ்களை பாதுகாக்க அதனுடைய உண்மைத் தன்மைக்கு எந்த பாதிப்பும் வராமல் இருப்பதற்காக கண்ணும் கருத்துமாக அவர்கள் செயல்பட்டார்கள்.

இபாதத்திலும் சிறந்து விளங்கினார்கள். ரமலான் மாதத்தில் மூன்று நாட்களுக்கு ஒரு முறை குர்ஆனை ஓதி முடிப்பார்கள். கியாமுல் லைல் முழுக்க தொழக்கூடியவர்களாக இருப்பார்கள்.
இமாம் புகாரி அவர்கள் இரவு தூங்கும் பொழுது திடீர், திடீரென்று எழுந்து எழுதுவார்கள். இதைப்பற்றி அவர்களிடம் கேட்டபோது "ஹதீஸ்களின் அறிவிப்பாளர்கள் பற்றிய குறிப்பு எனது ஞாபகத்திற்கு வரும் அதை எழுதிக் கொள்வேன்" என்று கூறினார்கள்.
எனவே தூக்கத்தில் கூட ஹதீஸ் கலையில் அவர்களுக்கு இருந்த ஆர்வமும், பற்றும் இதன் மூலம் அறிய முடிகின்றது.

இமாம் புகாரி (ரஹி) அவர்கள் ஃபிக்ஹ் , ஹதீஸ், அகீதா என 3 துறைகளிலும் தேர்ச்சி பெற்றவர்களாக இருந்துள்ளார்கள்.
ஸஹீஹுல் புகாரியில் ஒரு ஹதீஸை சேர்ப்பதற்கு முன் இரண்டு ரகஅத் தொழுது விட்டு மற்றும் மூன்று முறை இமாம்களிடம் அந்த ஹதீஸை கொடுத்து சரி பார்த்துவிட்டு தான் சேர்ப்பார்கள்.
தங்கள் வாழ்நாளை மார்க்கத்திற்காக செலவழித்து தியாகம் செய்துள்ளார்கள்.
அல்லாஹ் தன் மார்க்கத்தை நிலை நாட்டுவதற்கு ஒருவரைத் தேர்ந்தெடுத்தான் என்றால் அவர்களுக்கு எல்லா ஆற்றலையும் கொடுத்து சிறப்பிப்பான் என்பதே இவர்களின் மூலம் நாம் அறிய முடிகின்றது.
எனவே நாமும் இமாம் புகாரி அவர்களைப் போல் கல்வியை கற்று அதை அமல்படுத்த கூடியவர்களாக இருக்க அல்லாஹ்விடம் ஆதரவு வைப்போம்.

## அறிவு என்னும் அற்புதம் 12

( பேரறிஞர்கள் வரலாறு : அறிவியல் புரட்சி செய்த ஐசக் நியூட்டன் )




உலகில் வாழ்ந்த விஞ்ஞானிகளில் மிகவும் செல்வாக்கு பெற்றவரும், அறிவியல் புரட்சியில் முக்கிய பங்காற்றிய ஒருவராகவும், விஞ்ஞானிகளுக்கு எல்லாம் விஞ்ஞானியாகவும் திகழ்ந்தவர் சர் ஐசக் நியூட்டன்.
இங்கிலாந்து நாட்டில் விவசாய குடும்பத்தில் பிறந்த நியூட்டன் பள்ளி படிப்பை படிப்பதற்கே மிகவும் சிரமப்பட்டார். சிறுவயதில் இருந்தே அறிவியல் ஆர்வம் கொண்டவராக திகழ்ந்த நியூட்டன், தண்ணீரில் வேலை செய்யும் கடிகாரத்தை அப்போதே கண்டுபிடித்தார்.
விடாது துரத்திய ஏழ்மையின் காரணமாக 14 வயதிலேயே பள்ளி படிப்பை தொடர முடியாத நிலை ஏற்பட்டது. அப்போது அவருடைய மாமா நியூட்டனின் கல்வி ஆசை நிறைவேற உறுதுணையாக இருந்து உதவினார். அதன் மூலம் பள்ளி படிப்பை முடித்து கேம்பிரிட்ஜ் பல்கலைக்கழகத்தில் உள்ள டிரினிட்டி கல்லூரியில் இளங்கலை பட்டம் பெற்றார்.

இளங்கலை பட்டம் பெற்ற இரண்டு ஆண்டுகளில் அவரது அறிவியல் சிந்தனை பல கோணங்களில் சிந்திக்க வைத்தது. நவீன கணிதத்தின் பல்வேறு பிரிவுகளை அவர் கண்டுபிடித்தார். பைனாமியல் தியரம் மற்றும் கால்க்குலஸ் எனும் நவீன கணிதத்தின் பிரிவுகளை கண்டறிந்தார்.
ஒரு முறை தோட்டத்தில் நடந்து செல்லும் போது ஆப்பிள் பழம் மரத்தில் இருந்து விழுவதை கண்டார். எல்லா காலகட்டத்திலும் வாழ்ந்த மனிதர்கள் பார்த்திருக்கும் காட்சிதான் அது. ஆனால் அது இயற்கை என்று எண்ணிவிட்டு செல்வார்கள். ஆனால் நியூட்டனோ அதை பற்றி சிந்தித்தார்.
ஏதோ ஒரு கண்ணுக்கு தெரியாத சக்திதான் ஆப்பிள் பழத்தை புவியை நோக்கி விழ செய்கிறது என்று கருதினார். விளைவு, புவி ஈர்ப்பு சக்தி என்ற ஒன்று இருப்பதால் தான், பொருட்கள் அனைத்தும் கீழே விழுகிறது என்பதை கண்டுபிடித்தார். இது அவருடைய கண்டுபிடிப்புகளில் மகத்தான சாதனையாகும்.

அதன் பிறகு நியூட்டனுக்கு டிரினிட்டி கல்லூரியில் கவுரவ பொறுப்பு வழங்கப்பட்டது. பல்வேறு ஆராய்ச்சிகளில் ஈடுபட்டார். அதன் விளைவு தொலைநோக்கிகளை கண்டுபிடித்தார்.
இன்று பயன்படுத்தப்படும் பல்வேறு நவீன தொலைநோக்கிகள் அனைத்துமே நியூட்டனின் தொலைநோக்கியை அடிப்படையாக கொண்டவை என்பது குறிப்பிடத்தக்கது.

டிரினிட்டி கல்லூரியில் பேராசிரியராக பணியாற்றும்போது உலக புகழ்பெற்ற ராயல் சொசைட்டியில் உறுப்பினராக சேர்க்கப்பட்டார்.
வண்ணங்கள் பற்றி ஆராய்ச்சி செய்யும் போது ஒரு கண்ணை மூடிக்கொண்டு மறுகண்ணை பார்க்கும் போது திடீரென்று வண்ணங்கள் மாற தொடங்கின.
அது மட்டுமல்ல, தனது ஆராய்ச்சிக்காக தன் கண்ணால் வண்ணங்களை பார்க்கும் போது மாற்றம் தெரிகிறதா? என்று அடிக்கடி சோதித்து கொண்டார். அதனால் கண்ணில் பாதிப்பு ஏற்பட்டு பல நாட்கள் சிகிச்சை எடுக்க வேண்டிய நிலை வந்தது.
ஒவ்வொரு வினைக்கும் சமமான எதிர்வினை உண்டு என்பதை நிரூபித்தார். இது நியூட்டன் விதி என்று அழைக்கப்படுகிறது.

21 முதல் 27 வயது வரை நிறைய கண்டுபிடிப்புகளை உருவாக்கினார். அதன் பிறகு 1703-ல் ராயல் சொசைட்டியின் தலைவராக நியூட்டன் தேர்ந்தெடுக்கப்பட்டார். 1705-ம் ஆண்டு இங்கிலாந்து ராணி, நியூட்டனின் ஆராய்ச்சிகளை அறிந்து வியந்தார். அவருக்கு, “சர்” பட்டம் வழங்கி கவுரவப்படுத்தினார்.
அதன் பிறகு தொடர்ந்து ஆராய்ச்சியில் ஈடுபட்டு வந்த நியூட்டன், தூக்கமின்மை, நரம்பு தளர்ச்சி போன்ற நோய்களால் அவதிப்பட்டார். 1727-ம் ஆண்டு மார்ச் மாதம் 31-ந்தேதி நியூட்டன் இறந்தார்.
அவருக்கு போப் எழுதிய இரங்கில் குறிப்பு மிகவும் முக்கியமானது. அதில் ‘இயற்கையும் அதன் விதிகளும் இருளில் கிடந்தன. கடவுள் நியூட்டன் பிறக்கட்டும் என்றார். ஒளி பிறந்தது’ என குறிப்பிட்டு இருந்தார். இந்த வாசகம் நியூட்டன் பிறந்த அறையில் பொறிக்கப்பட்டுள்ளது.
நியூட்டன் பிறவியில் ஒரு மேதை. அதனால்தான் அவரால் இயற்கையின் விதிகளை கண்டுபிடித்து சொல்ல முடிந்தது. அத்தகைய மாமேதையின் சாதனைகள் மகத்தானவை, போற்றப்படக் கூடியவை என்றால் மிகையாகாது.

அப்போது வழக்கத்தில் இருந்த ஜூலியன் நாட்காட்டியின் படி அவர் 1642-ம் ஆண்டு டிசம்பர் மாதம் 25-ந்தேதி பிறந்தார். கிரிகோரியன் நாட்காட்டியின்படி அவருடைய பிறந்த நாள் 4-1-1643 ஆகும்.
கணித கால்குலஸ்ஸின் அடிப்படையை கண்டுபிடித்தவர் மனித சரித்திரத்திலேயே மிகப்பெரிய விஞ்ஞானி என்று கருதப்படுபவர் சர் ஐசக் நியூட்டன் தன் அந்திம காலத்தில் சொன்னார் :
" நான் கடற்கரையில் விளையாடும் ஒரு சிறுவன் இங்கே ஒரு கூலாங்கல் ,அங்கே ஒரு அழகான சங்கு என்று கண்டுபிடித்து பெருமிதப்பட்டுக் கொண்டிருக்கையில் எதிரே ' உண்மை ' என்ற மாபெரும் சமுத்திரம் என்னும் கண்டறியப்படாமலேயே பரவிக் கிடக்கிறது."
இப்படி சொன்னதால்தான் இவரை அறிவியல் மேதை என்கிறார்கள்

**அறிவு என்னும் அற்புதம் 13**
( பேரறிஞர்கள் வரலாறு : இமாம் கஸ்ஸாலி ரலியல்லாஹு அன்ஹு)




அபூ ஹாமித் முஹம்மத் பின் முஹம்மத் பின் தாவுஸ் அஹ்மத் அத்தூஸி என்பதே இமாம் கஸ்ஸாலியின் முழுப் பெயர் ஆகும். எனினும் அவர் கஸ்ஸாலி என்றே அழைக்கப்பட்டார்.
தற்காலத்தில் குராசான் பகுதியிலுள்ள மஷ்ஹத் என்று அழைக்கப்படுவதும் அன்று தூஸ் என்று அழைக்கப்பட்டதுமான பிரதேசத்துக்கு அருகேயுள்ள தப்ரானில் உள்ள கஸ்ஸால் எனும் கிராமத்தில் ஹிஜ்ரி 450/கி.பி.1059 இல் பிறந்தார்.
அவரது தந்தை ஆழ்ந்த இறை பக்தியுடையவர். தனது கையால் உழைத்துப் பெற்ற உணவை மட்டுமே உட்கொண்டார். இறை நேசர்களுடன் தனது நோக்கத்தைக் கழித்தார். எனினும் கஸ்ஸாலியின் இளமைப் பருவத்தில் இறையடி எய்தினார்.
அவர் இறக்க முன் கஸ்ஸாலியையும் அவரது சகோதரரையும் வளர்க்கும் பொறுப்பை அவரது நண்பர்களில் ஒருவரான இறைநேசர் (சூபி) ஒருவரிடம் ஒப்படைத்திருந்தார். அவரின் மேற்பார்வையிலேயே கஸ்ஸாலி வளர்ந்தார்.

கஸ்ஸாலி இளமையில் தூஸ் நகரில் வாழ்ந்த சேஃ அஹ்மத் இப்னு முஹம்மத் அல் றஸ்கானி அல்தூஸி என்பவரிடம் ஆரம்பக்கல்வியைக் கற்றார். ஆதன் பின் ஜூர்ஜான் எனும் நகரில் வாழ்ந்த அபூ நஸ்மர் இஸ்மாயில் என்பவரிடம் கல்வி பயின்றார்.
அதன்பின் தூஸ் நகருக்குத் திரும்பி வந்து யூஸுப் அந்நப்பாஸ் அத்தூஸி என்பவரிடம் சூபிசக்கலையைப் பயின்றார். தனது இருபதாவது வயதில் நிசாபூரில் இருந்த நிழாமிய்யாக் கல்லூரியில் சேர்த்து இமாம் அல் ஹரமைன் என்றழைக்கப்பட்டு வரும் அஷ்அரிக் கோட்பாட்டாளருமான அபூ அல் மஆலி அல் ஜூவைரி என்பவரிடம் கல்வி பயின்றார்.
அக்கல்லூரியில் சமய இயல், ஷரீஆ, தத்துவ இயல், தர்க்கவியல் இயற்கை விஞ்ஞானம் தஸவ்வுப் முதலாம் பாடங்களைப் பயின்றார்.

மாணவர்கள் சுயமாக சிந்தித்து கருத்துக்களைக் கலந்துரையாடவும் விவாத அரங்குகளில் தத்தம் கருத்துக்களை தர்க்க ரீதியாக முன்வைக்கவும் இமாம் அல்ஹரமைன் வாய்ப்பளித்து ஊக்குவித்தார். இவ்வாய்ப்பை இளைஞர் கஸ்ஸாலி பயன்படுத்தித் தன் ஆளுமையை வளர்த்துக் கொண்டார்.
அவரது திறமைகளை அவதானித்த இமாம் அல் ஹரமைன் அவரை அறிவுக் கடல் என்று பாராட்டினார். தான் கல்வி கற்ற அதே கல்லூரியில் ஆசிரியராகக் கடமையாற்றும் வாய்ப்பையும் பெற்றார்.
நிசாப்பூரில் மாணவராக இருக்கும் போதே அபூ அலி அல் பழில் அல் பாமிதி எனும் சூபி அறிஞரிடம் சூபிசக் கலையைப் பயின்றதுடன் சூபிசப் பயிற்சிகளும் ஈடுபட்டிருந்தார்.
கஸ்ஸாலியின் இருபத்தி எட்டாவது வயதில் அவரது ஆசிரியரான இமாம் அல் ஹரமைனும் ஆன்மீக வழிகாட்டியாக செயற்பட்ட அல்பாமிதியும் காலமாயினர். இக்காலப் பகுதியில் இமாம் கஸ்ஸாலியின் புகழ் நாலாபுறமும் பரவியிருந்தது.

இதனால் செல்ஜூக் ஆட்சியாளர்களின் பிரதம அமைச்சராக கடமையாற்றிய நிதாமுல் முல்க் பக்தாதுக்கு வருமாறு அவருக்கு அழைப்புவிடுத்தார். இவ்வழைப்பை ஏற்று அங்கு சென்ற இமாம் கஸ்ஸாலி செல்ஜூக் அரசவையிலும் கல்வி அரங்குகளிலும் கலந்துகொண்டு தனது திறமையை வெளிப்படுத்தினார்.

இதன் மூலம் அவரது ஆற்றலைப் புரிந்துகொண்ட பிரதமர் நிதாமுல் முல்கி பக்தாத் நிதாமிய்யாக் கல்லூரியின் சமய இயல் துறையின் தலைவராக இமாம் கஸ்ஸாலி அவர்களை கி.பி.1091 இல் நியமித்தார். இதன் மூலம் அன்றைய சமூகத்தில் நிலவிய கல்வித்துறையின் உச்ச பதவியையும் அரச மட்டத்தில் செல்வாக்கையும் பெற்றார். இதனால் முஸ்லிம் சமூகத்திலும் அவர் பெரும் செல்வாக்கையும் பெற்றார்.

செல்ஜூக் மன்னன் மலிக்ஷா, அவரது பிரதம அமைச்சர் நிதாமுல் முல்க், பாரசீகத்தின் ஏனைய சிற்றரசுகளின் தலைவர்கள் போன்றோர் அவரைப் பெரிதும் மதித்தனர். முஸ்லிம் ஆட்சியாளர்களிடையே ஏற்பட்ட பிரச்சினைகளின் போதெல்லாம் சமாதானத் தூதுவராக சென்று சிறப்புப் பணிபுரிந்தார்.
இஸ்லாமிய சட்டவியல், சமய இயல், தத்துவ இயல் மெய்ஞ்ஞானவியல் ஒழுக்கவியல் முதலாம் துறைகளில் ஆழமான அறிவுடையவராக இருந்தார். இதன் மூலம் முஸ்லிம் உலகின் புகழ்மிகு முதல் மனிதராக கணிக்கப்பட்டார். ஆட்சியாளர்களதும் அறிஞர்களதும் பாராட்டை அவர் ஏககாலத்தில் பெற்றுக்கொண்டார்.
இதனால் ‘ஹுஜ்ஜதுல் இஸ்லாம்’ ஸைனுள் ஆப்தீன், ‘முஜத்தித்’ என்றெல்லாம் பட்டம் சூட்டி கௌரவித்தனர்.
இவ்வாறெல்லாம் அவர் புகழ் ஏணியின் உச்சத்தை அடைந்திருந்த போதும் அவரின் உள்ளம் அறிவியல் ரீதியானதும், ஆன்மீக ரீதியானதுமான உளக்கிளர்ச்சி ஒன்றுக்கு ஆளாகியது.
இயல்பாகவே அவரிடம் இருந்த விமர்சன ரீதியாக நோக்கும் மனப்பாங்கும் பல்வேறு துறைகளிலும் அவர் பெற்றிருந்த ஆழமான அறிவும் அன்றைய முஸ்லிம் சமூகத்தின் உண்மை நிலையைப் புலப்படுத்தின. இது அவரது உளக் கிளர்சிக்குக் காரணமாகியது.

கொள்கைக்கு முக்கியத்துவம் கொடுத்து ஆட்சி செய்த குலபாஉர்ராசிதீன்களின் பண்பில் இருந்து ஆட்சியாளர்கள் விலகி கோத்திர உணர்வின் வழி ஆட்சி செய்து கொண்டிருந்தனர். அவர்கள் சொகுசு வாழ்க்கையில் மூழ்கியிருந்து மட்டுமன்றி இஸ்லாமிய அறிவிலும் குன்றியிருந்தனர். தகுதியானவர்களைத் தேர்ந்து எடுத்து பதவிகளில் நியமிக்கும் ஆற்றலும் அவர்களுக்கு இருக்கவில்லை.
கஸ்ஸாலி வாழ்ந்த காலத்து முஸ்லிம் சமூகம் நபிகளார் (ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்) அவர்களும் ஸஹாபாக்களும் அமைத்துக் கொடுத்த சமூகத்தில் இருந்து வெகுதூரம் விலகி இருந்தது. சமய உட்பிரிவுகளும் அவற்றிற்கிடையே முரண்பாடுகளும் பிளவுகளும் தோன்றியிருந்தன.
பகுத்தறிவுக்கு முதன்மை கொடுத்த கிரேக்க தத்துவ இயலை அதன் அடிவருடிகள் முஸ்லிம்களிடையே தீவிரமாகப் பரப்பினர். அதனால் சமய நம்பிக்கையின் அடிப்படையே தகர்த்துவிடக் கூடியளவு முஸ்லிம்களிடையே அது ஊடுறுவியது. அக்கால முஸ்லிம் அறிஞர்களால் கிரேக்க தத்துவக் கலையின் படை எடுப்பைத் தடுத்து நிறுத்த முடியவில்லை.

சுமூகத்தின் பண்பாட்டுத்துறையும் வீழ்ச்சியடைந்திருந்தது. பலதரத்து மக்களும் குர்ஆன், சுன்னா கூறும் வழிகாட்டலை அலட்சியப்படுத்தினர். ஒரு முன்மாதிரியாக இருந்த முஸ்லிம் சமூகம் அவரது காலத்தில் பிற கலாசாரத் தாக்கங்களில் சிக்குண்டு நடுவழி பிறழ்ந்திருந்தது.
பிற கலாசாரச் செல்வாக்கின் காரணமாக முஃதஸிலா போன்ற பதினைந்துக்கும் மேற்பட்ட சிந்தனைக் குழுக்களும் நூற்றுக்கும் மேற்பட்ட அவற்றின் உபகுழுக்களும் சமூகத்தில் நிலவின. அவற்றில் சிலவற்றின் தீவிரப் போக்கு காரணமாக சமூகத்தில் அமைதி குலைந்திருந்தது.
கிலாபத் பல சிற்றரசுகளாக சிதைவடைந்து கலீபா செல்வாக்கிழந்து நடைப்பிணமாக செயற்பட்டார். மாசுபடிந்த இச்சமூகமும், குலபாஉர்ராசிதூன்கள் காலத்துச் சிறப்புற்றோங்கிய முஸ்லிம் சமூகமும் அறிஞரான இமாம் கஸ்ஸாலியின் கண்முன் நிலழாடின.
அதன் விளைவாகவே பெயரையும் புகழையும் தந்த நிதாமிய்யாக் கல்லூரியின் பேராசிரியர் பதவியையும் சமூக அரசியல் ,ஈடுபாட்டையும் உதறித்தள்ளிவிட்டு பதினொரு வருடங்களாக சமூகத்தில் இருந்து ஒதுங்கி தனித்து வாழ்ந்தார்.

சமூகத்தை விட்டு ஒதுங்கி வாழத்தான் எடுத்த முடிவுபற்றி அவர் தனது ‘அல் முன்கீத் மினல்லையல்’ (பிழையில் இருந்து விடுதலை) எனும் நூலில் பின்வருமாறு குறிப்பிட்டுள்ளார்.
‘நான் போதனாசிரியராக இருந்து போதனை செய்து வருவதில் இருந்த நோக்கத்தைக் கவனித்தேன். அது அல்லாஹ்வின் அருள் பெறும் நோக்கமாக மட்டுமன்றி உலகில் செல்வாக்கு மிக்க ஸ்தானத்தையும் பெருமையையும் புகழையும் பெற வேண்டுமென்ற நாட்டமாய் இருப்பதை கண்டேன். சரிந்து கொண்டிருக்கும் ஒரு மண்மேட்டின் சிகரத்தில் நான் நிற்பதையும், நான் உடனே திருத்திக் கொள்ளாவிடின் நரக நெருப்பில் விழலாம் என்பதையும் திண்ணமாகக் கண்டேன்.
இதுபற்றி தொடர்படியாக யோசனை செய்தேன். பக்தாதை விட்டு உடனே நீங்கி இந்தத் தடைகளை அகற்றிக் கொள்ளலாம் என்று ஒரு நாள் முடிவு கட்டுவேன். மறுநாளோ என் முடிவைக் கைவிடுவேன். ஒரு காலை முன்வைப்பேன். மறுகாலைப் பின்வைப்பேன்..... இத்தகையவிதமாய் உலக ஆசாபாச எண்ணங்களுக்கும் அமர வாழ்வு பற்றிய எண்ணங்களுக்குமிடையே அகப்பட்டு அலைக்கழிக்கப்பட்டேன்.

அல்லாஹ் என் நாவை உலர வைத்துவிட்டான். இதனால் விரிவுரை நிகழ்த்த இயலாது போயிற்று.என் மாணவர்களுக்கு போதனை புரிய இயலாதபடியாகிவிட்டது. இத்துடன் உண்ட சாப்பாட்டை அஜமிக்கச் செய்யவும்

இயலாது போயிற்று. ஏன் உடல் நிலை மோசமாயிற்று. இதைக் குணப்படுத்த முடியும் என்ற நம்பிக்கையை வைத்தியர்கள் இழந்தனர்.
இந்தக் கோளாறு மனோவியா கூலத்தால் உண்டாகியுள்ளது. அதனால் உடல் நிலை கெட்டிருக்கிறது. அந்த மனோவியா கூலம் அகன்றாலே உடல் நலம் பெறும் என்று அவர்கள் கூறிவிட்டனர். (இதன்மூலம்) என் பதவியையும் செல்வத்தையும், குழந்தைகளையும், நண்பர்களையும் விட்டு மனம் திரும்புவதை அவன் அல்லாஹ் எனக்கு இலகுவானதாக்கினான்.'

ஹிஜ்ரி 488 துல்கஃதா கி.பி. 1095 நவம்பர் மாதத்தில் பக்தாதைவிட்டு டமஸ்கஸ் சென்று அங்கு இரு வருடங்களைக் கழித்தார். அதன் பின் பைதுல் முகத்திஸிலும் மக்காவிலும், மதீனாவிலும் சில காலங்களைக் கழித்தார். அக்காலப்பகுதியில் அவர் அனுஷ்டித்த ஆன்மீகப் பயிற்சிகளால் பக்குவ நிலை அடைந்தார். அதன் பின்பே கி.பி. 1105 இல் நிசாபூருக்கு மீண்டும் திரும்பி வந்தார்.
பதினொரு வருடங்களை மெய்ஞ்ஞான அனுஷ்டானத்தில் கழித்த இமாம் அவர்கள் பக்தாதுக்குத் திரும்பி வருவதற்கும் பின்வருவன காரணங்களாய் அமைந்தன. முஸ்லிம்களின் ஈமான் பலவீனமடைந்திருந்தது. முஸ்லிம்களின் வணக்க வழிபாடும் உயிரோட்டமற்றிருந்தது. அதனால் இச்சமூகத்தை மீட்டெடுக்க முயற்சிப்பது அவசியம் என்று அவர் கருதினார்.
இக்கருத்தை சமய சிந்தனையையுடைய அவரது நண்பர்களும் ஆதரித்து எதிரான சக்திகளை எதிர்த்துப் போராட முன்வருமாறு ஆட்சியாளர்களும் அவரைக் கோரினார். இதனால் அவர் தனிமை வாழ்வைத் துறந்து கி.பி. 1105இல் மீண்டும் சமூக வாழ்வில் புகுந்தார்.

நிகாபூரில் தன் சிந்தனை வழியிலான கல்விப் போதனையை மேற்கொள்வதற்காக ஒரு பாடசாலையை நிறுவி அங்கு பாடபோதனை நடத்தினார். கலீபாவும் செல்ஜூக் ஆட்சியாளர்களும் பக்தாதுக்கு வந்து நிசாமிய்யாக் கல்லூரியின் சமய துறைப் பேராசிரியர் பதவியை ஏற்குமாறு அவரைக் கோரினார். அப்பதவியை தன்னால் ஏற்க முடியாதென்று அவர் அறிவித்தார்.

இமாம் அவர்கள் நிசாப்பூரில் தங்கி தொடர்ந்து கல்வியைத் தேடுவதிலும் மாணவர்களுக்கு பாடபோதனை செய்வதிலும் ஈடுபட்டுக் கொண்டிருந்தார்கள். சமூகம் எதிர்நோக்கிய அச்சுறுத்தல்களில் இருந்து சமூகத்தை விடுவிப்பதற்காக பல நூல்களையும் எழுதினார்கள். இத்தகு பணிகளில் ஈடுபட்டுக் கொண்டிருக்கும் போது ஹிஜ்ரி 505/கி.பி. 1111இல் இறையடி எய்தினார்கள்.
1.இஹ்யா உலூமுத்தீன் 2.முகாஸித் அல் பலாஸிபா
3.தஹாபுத் அல் பலாஸிபா 4. அல் முன்கித் மினழ்ழலல்
5.றிஸாலா அல் குத்ஸிய்யா 6. மயார் அல் இல்ம் பி பன்னில் மன்தீக் 7. புதுஹாதுல் உலூம் 8.மிஷ்காத் அல் அன்வார்
9.முகாஷபாத் அல் குலூப் 10.அல் மஉரிபாத் அல் அக்ழிய்யா
11.மின்ஹாஜ் அல் ஆபிதீன் 12.மீதான் அல் அமல்
13.பிதாயதுல் ஹிதாயா 14.நஸிஹாத் அல் முலூக்
15.அல்கிஸ்தாஸ் அல் முக்தஸீம் 16 முர்ஷிதுக் தாலிபீன்
17. கிமியா ஸஆதக்
இமாம் கஸ்ஸாலி தான் வாழ்ந்த சமூகத்தின் சமய, ஒழுக்கறியல் நிலை பற்றி விமர்சன ரீதியான மதிப்பீடு ஒன்றை மேற்கொண்டார். முஸ்லிம் சமூகத்தின் ஆட்சியாளர்கள் பிரபுக்கள், உலமாக்கள், பொதுமக்கள், முதலாம் பலதரத்து மக்களும் உலக ஆசாபாசங்களில் மூழ்கியிருப்பதை அவதானித்தார்.
உலக மக்களுக்கு ஒரு முன்மாதிரியாக இருக்க வேண்டிய இச்சமூகம் தன் தரம் குன்றியிருப்பதற்கான காரணம் பொருளாசையிலும் பதவி மோகத்திலும் மூழ்கியிருப்பதே என்று கருதினார். இப் பின்தங்கிய நிலையில் முஸ்லிம் சமூகத்தை மேம்படுத்த இச்சமூகத்தை சீர்திருத்தி இஸ்லாமிய மயப்படுத்தப்பட வேண்டும் என்று கருதியே 'இஹ்யா உலூமுத்தீன்' என்ற நூலை எழுதினார்.

இமாம் கஸ்ஸாலி தத்துவவியலடிப்படையிலான ஆய்வுகளுக்கு முரண்பட்டவரல்லர். அவரே சமய இயலாளர்களுள் தத்துவவியல் பற்றி ஆழமாக கற்ற முதல் முஸ்லிமாவார்.
அவருக்கு முன்பு வாழ்ந்த முஸ்லிம் சமயவியலாளர்களுள் ஒரு பிரிவினர் கிரேக்க தத்துவவியலை மனப்பூர்வமாக ஏற்று ஆதரித்தனர். மறு பிரிவினர் அதனைக் கடுமையாக எதிர்த்தனர். கிரேக்க தத்துவவியலை ஆதரிப்பவரோ, எதிர்பார்ப்பவரோ அக்கலையில் ஆழ்ந்த புலமை பெற்றிருக்க வேண்டும் என்ற கருத்தை இமாம் கஸ்ஸாலி கொண்டிருந்தார்.

அதனால் தத்துவ இயல் சார்ந்த புகழ்பூத்த நூல்களை வாசித்து ஆழமாக ஆராய்ந்து அறிந்து கொண்டார். அதை அடுத்தே அவர் தத்துவ இயல்பற்றிய நூல்களை எழுதினார். தத்துவ இயல் பற்றி அவர் எழுதிய பல நூல்களில் மகாஸித் அல்பலாசிபா (தத்துவவியலாளர்களின் முரண்பாடுகள்) எனும் இரண்டும் குறிப்பிடத்தக்கவையாகும். மகாஸிதுல் பலாஸிபா எனும் நூலில் தர்க்கம், பௌதீகம் METAPHYSICS என்பன பற்றி நிலவிய சித்தாந்தங்களை விளக்கியுள்ளார். இந்நூலில் அவர் அரிஸ்டோட்டல் முன்வைத்துள்ள கருத்துக்களை விமர்சித்துள்ளார்.

**அறிவு என்னும் அற்புதம் 14**

( பேரறிஞர்கள் வரலாறு : அறிவியல் மேதை ஆல்பர்ட் ஐன்ஸ்டீன் )



விஞ்ஞானி என்றதும் அனைவரது நினைவுக்கும் வரும் பெயர் ஐன்ஸ்டீன். இயற்கையில் புதைந்திருக்கும் ஏராளமான ரகசியங்களை வெளிக்கொண்டு வந்தவர்.

அறிவியல் மேதை ஐன்ஸ்டீன் நடந்து செல்லும் மனிதன், சாலையில் பயணிக்கும் கார், கடலில் செல்லும் கப்பல், வானத்தில் பறக்கும் விமானம், சூரியனைச் சுற்றும் கோள்கள், சுழன்று கொண்டிருக்கும் நட்சத்திரத் திரள்கள் என எல்லாவற்றின் இயக்கமும் சார்பானவை. தனித்தவை அல்ல.
பார்வையாளர் அல்லது உணர்பவரின் இயக்கத்தைப் பொருத்து அவர் பார்க்கும் இயக்கமும் மாறுபட்டதாகத் தோன்றும் என்பதைத்தான் சார்பு நிலை என்கிறார்கள்.
இந்தச் சார்பு நிலையை பல கோட்பாடுகளால் விவரித்தவர் ஆல்பர்ட் ஐன்ஸ்டீன். ஐசக் நியூட்டன், ஆர்க்கிமிடீஸ் போன்ற மிகச் சிறந்த விஞ்ஞானிகளுக்கு இணையாகப் போற்றப்படுபவர். கடந்த நூற்றாண்டின் மிகச் சிறந்த அறிவியல் மேதை. உலகம் நம்பிக் கொண்டிருந்த பல விஞ்ஞானத் தத்துவங்களைத் உடைத்தெறிந்தவர். மனிதகுல வரலாற்றிலேயே மிகவும் புகழ்பெற்ற,

சாதாரண மக்கள் வரை கேள்விப்பட்டிருக்கும் E = MC2 என்ற சூத்திரத்தை உருவாக்கியவர் ஐன்ஸ்டீன்.
1921-ஆம் ஆண்டு இவர் பெற்ற நோபல் பரிசு, குவான்டம் விசையியல், ஒளிமின் விளைவு போன்றவை பற்றிய இவரது கண்டுபிடிப்புகளுக்காக வழங்கப்பட்டது. ஆய்ந்து பார்த்தால் இவர் அறிவியலுக்கு ஆற்றிய பணிகள் ஏராளம்.
கடவுள் அண்டத்தை உருவாக்கினார். பொருள்கள் இருந்தன. ஐன்ஸ்டீன் வந்து அவற்றின் மீது ஒளியைப் பாய்ச்சினார் என்று கூறும் அளவுக்கு அவர் வகுத்துத் தந்த கோட்பாடுகள் அறிவியல் உலகில் புரட்சியை ஏற்படுத்தின.

1879-ஆம் ஆண்டு ஜெர்மனியில் பிறந்த ஐன்ஸ்டீன், குழந்தைப் பருவத்தில் மந்த புத்திக்காரராகவே அறியப்பட்டார். எந்தக் கேள்விக்கும் உடனடியாகப் பதிலளிக்க மாட்டார். அவசரமாகப் பதில்களை விரும்பும் ஆசிரியர்களுக்கு ஐன்ஸ்டீனைப் பிடிக்காது. பள்ளிகள் அவரைத் துரத்தின. இவருக்கும் வகுப்பறைகள் பிடித்திருக்கவில்லை. காந்த ஊசிகளை வைத்துக் கொண்டு பொழுதைப் போக்கிக் கொண்டிருப்பார்.
16 வயதில் பாலிடெக்னிக் கல்லூரிக்கான நுழைவுத் தேர்வில் தோற்றுப் போனார். இருப்பினும் மேல்நிலைப் பள்ளிப்படிப்பை முடித்து மீண்டும் பாலிடெக்னிக் கல்லூரில் சேர்ந்தார். இயற்பியலும் கணிதமும் அவருக்கு விருப்பமான பாடங்களாக இருந்தன. இயற்பியலில் தொடர்ந்து ஆய்வுக் கட்டுரைகளை எழுதத் தொடங்கினார் அவையை ஐன்ஸ்டீன் டாக்டர் பட்டம் பெறுவதற்கு உதவின.

1905-ஆம் ஆண்டு ஐன்ஸ்டீன் வாழ்க்கையில்
மட்டுமல்ல அறிவயில் உலகுக்கே அதிசயங்களை வழங்கிய ஆண்டு. ஒளிமின்விளைவு, பிரௌனியன் இயக்கம், சிறப்புச் சார்புக் கோட்பாடு, E=MC2 என்ற நிறை-ஆற்றல் சமநிலை விதி என இயற்பியல் உலகை அதிரவைத்த ஐன்ஸ்டீனின் பல முக்கியமான படைப்புகள் இந்த ஆண்டில்தான் வெளியாகின.
ஐன்ஸ்டீன் ஒரு யூதர் என்பதால் ஒரு தரப்பு விஞ்ஞானிகள் இவரது கருத்துகளை கடுமையாக எதிர்த்தனர். மற்றொரு தரப்பினர் தங்களது பழைய கோட்பாடுகளில் இருந்து விலகி வருவதில் தயக்கம் ஏற்பட்டது. ஆனால் ஐன்ஸ்டீனின் கோட்பாடுகள் எல்லாம் வெவ்வேறு தருணங்களில் நிரூபணமாகின.

தொடர்ந்து பல கோட்பாடுகளையும்,கட்டுரைகளையும் வெளியிட்டு வந்த ஐன்ஸ்டீனுக்கு உலகப் புகழ் கிடைத்ததுடன் பல புகழ்பெற்ற விஞ்ஞானிகளும் அவருடன் ஒருகிணைந்து பணியாற்ற முன்வந்தனர். போஸான் என்று குறிப்பிட்ட வகைத் துகள்களுக்கு பெயர் வருவதற்குக் காரணமான இந்திய விஞ்ஞானி சத்யேந்திர நாத் போஸும் அவர்களில் ஒருவர்.
ஜெர்மனியில் ஹிட்லர் அதிகாரத்தைக் கைப்பற்றியபோது, அமெரிக்காவில் இருந்த ஐன்ஸ்டீன் அதன் பிறகு நாடு திரும்பவே இல்லை. இந்த முடிவே இரண்டாம் உலகப் போரில் அமெரிக்காவின் கை ஓங்குவதற்கு முக்கியக் காரணமாக அமைந்தது.

ஜெர்மனியில் பேரழிவு ஆயுதங்கள் தயாரிக்கப்படுவதாக, ஐன்ஸ்டீனின் ஒப்புதலுடன் அனுப்பப்பட்ட கடிதமே அமெரிக்க அதிபர் ரூஸ்வெல்டை புதிய வியூகத்தை வகுக்கச் செய்தது. அணுகுண்டுகள் தயாரிக்கப்பட்டன. அவற்றின் மூலமே போரின் முடிவுகள் மாறின.
அறிவியல் மட்டுமல்லாமல், அரசியல், சமூகம், தத்துவம், சேவை என பல துறைகளிலும் முழு ஈடுபாட்டுடன் பணியாற்றியவர் ஐன்ஸ்டீன்.
யூதர்களின் நலனுக்காகப் குரல் கொடுத்த அவர், தாம் ஒரு பொதுவுடமைவாதி என்று வெளிப்படையாக அறிவித்தார். ஆயுதத்தின் மூலமாக அமைதியை ஏற்படுத்த முடியாது, புரிதல் மட்டுமே அமைதிக்கான நிரந்தர வழி என்று கூறினார்.
அவரது அறிவியல் கருத்துகளை ஏற்றுக் கொண்ட வல்லரசுகள், அதற்குப் பின்னணியில் உள்ள அவரது தத்துவங்களை மட்டும் புரிந்துகொள்ளவில்லை.
ஐன்ஸ்டீன் கூறிய சில தத்துவங்கள்
1.கருந்துளைகள் கடவுளை பூஜ்ஜியத்தால் வகுத்த இடங்கள்.

2.ஒரு விஷயத்தை உங்களால் ஓர் ஆறு வயதுக் குழந்தைக்கு எளிதாக விளக்க முடியவில்லையெனில், அதை நீங்கள் சரியாக கற்கவில்லை என்று அர்த்தம்.

3.எந்தவொரு அறிவுள்ள முட்டாளும் விஷயங்களை பெரிதாகவும் சிக்கலானதாகவும் செய்திட இயலும். ஆனால், ஒரு மேதையால் மட்டுமே அவற்றை எளிதாகச் செய்ய முடியும்.

4. நம்மை சீர்குலைக்கக்கூடிய புகழ்ச்சியில் இருந்து விடுபட ஒரே வழி,மீண்டும் உழைக்கச் செல்வதுதான்.

5.அறிவாற்றலை விட கற்பனைத்திறன் மிகவும் முக்கியமானது. அறிவாற்றலுக்கு எல்லை உண்டு, கற்பனைத்திறனுக்கு எல்லை கிடையாது.

6. சிறு செயல்களிலும் உண்மையைத் தீவிரமாக எடுத்துக் கொள்ளாதவர், பெரிய விஷயங்களில் நம்பத் தகுந்தவரில்லை.

7. மனிதனின் தீய குணங்களை இயல்மாற்றம் செய்வதைவிட புளுட்டோனியத்தை இயல்மாற்றம் செய்வது சுலபமானது.

8. கடவுளின் முன் நாமனைவரும் சம அளவில் புத்திசாலிகள்/
முட்டாள்கள்.

9.கடவுள் அண்டத்தைப் படைத்த போது அதை எவ்வாறு படைப்பது என்று விரும்பித் தேர்ந்தெடுக்கும் வாய்ப்பு அவருக்கு இருந்ததா?

10.தேசியம் என்பது ஒரு குழந்தைப்பருவ நோய். மனித இனத்தை பிடித்து வாட்டும் அம்மை நோய்.

11.தனி நபராகக் கருதப்படும் ஒரு கடவுளில் எனக்கு நம்பிக்கையில்லை. இந்த நம்பிக்கையின்மையை நான் என்றும் மறுத்ததும் கிடையாது. அதற்கு மாறாக அதைத் தெளிவாகவே கூறியிருக்கிறேன்.

12. வெற்றி பெற்ற மனிதராக முயற்சிப்பதை விட, மதிப்பு மிக்க மனிதராக முயற்சி செய்யுங்கள்.

13.வாழ்க்கை என்பது மிதிவண்டியை ஓட்டுவது போலத்தான். விழாமல் இருக்க வேண்டுமென்றால், நிற்காமல் நகர்ந்து கொண்டே இருக்க வேண்டும்.

14. அமைதியை வலுவாக கட்டுப்படுத்திக் கொண்டு வர முடியாது. அது புரிந்துணர்விலேயே நீடிக்கும்.

15.யோசிக்காமல் அதிகாரத்திற்கு அடிபணிந்து போவதுதான், உண்மைக்கு மிகப்பெரிய எதிரி.

16. புத்திசாலி பிரச்சினைகளை தீர்ப்பான். ஞானமுள்ளவன் பிரச்சினைகளை அண்ட விட மாட்டான்.

17. எண்ணக்கூடியனவெல்லாம் எண்ணத்தகுந்தனவல்ல. எண்ணத்தகுந்தனவெல்லாம் எண்ணக்கூடியனவல்ல.

18.தவறு செய்பவர்களை விட அதை வேடிக்கை பார்ப்பவர்களே மிகவும் கொடுமையானவர்கள்.

19.உன் முயற்சிகளை கைவிடாதவரை, நீ தோல்வி

அடைந்தவன் கிடையாது.

20.உண்மைகள் தேற்றங்களுடன் பொருந்தவில்லை என்றால்

உண்மைகளை மாற்றுங்கள்.

21.நான் எதிர்காலத்தைப் பற்றி யோசிப்பதில்லை, ஏனெனில் அது தேவையானபோது வந்தே தீரும்.

22.ஆசிரியரைப் பொறுத்தவரை நான் ஒரு முட்டாள். உங்களைப் பொறுத்தவரை நான் ஒரு அறிவாளி. என்னைப்

பொறுத்தவரை நான் யாரென்று தேடிக்கொண்டிருக்கிறேன் சரியாக புரியவில்லை.

23. வாழ்க்கையில் தவறே செய்யாதவர்கள், வாழ்க்கையில் புதிதாக எதையும் முயற்சிக்காதவர்களாகதான்

இருக்கமுடியும்.

24.அனைத்து மதங்களும் கலையும் அறிவியலும் ஒரே மரத்தின் கிளைகள்.

25. வெகு அதிகமாகப் படித்து, தன் மூளையையும் குறைவாக பயன்படுத்துபவன் சிந்தனை என்ற சோம்பேறித்தனத்துக்கு சென்றிடுவான்.

26. ஆழமான மதம் சார்ந்த கடவுள் நம்பிக்கை இல்லாதவன் நான். இது ஒரு வகையான புதிய மதம். இயற்கையிடம் நான் ஓர் அற்புதமான கட்டமைப்பைக் காண்கிறேன்; அதை மிகக்குறைந்த அளவிலேயே நம்மால் புரிந்து கொள்ள முடியும், அந்தப் புரிதல் சிந்திக்கக்கூடிய ஒவ்வொரு நபரின் உள்ளத்திலும் ஓர் உணர்வை உண்டாக்குகிறது. இது ஓர் உண்மையான மத உணர்வாகும். இதற்கும் மதவாதிகள் கூறும் மர்மமான மதப் புரிதலுக்கும் எந்தத் தொடர்பும் இல்லை.

27. மனித இனத்தை அழிவிலிருந்து காப்பாற்றுவதே விஞ்ஞானிகளின் முழு முதற் கடமை. அந்த வேலைதான் எல்லாவற்றையும் விட இப்போது தலையானது.

28. எவனும் எளிமையாக வாழக் கற்றுக்கொள்ள வேண்டும். எளிய வாழ்க்கையே சிறப்பானது. எளிமையான இல்லத்திலே, எல்லாரும் விரும்பும் எளிமை விரும்பியாக வாழ கற்றுக்கொண்டால் மக்களும் அப்படி வாழ்பவரைப் பின்பற்றத் தயங்க மாட்டார்கள்.

29. அறிவியலோடு கலக்காத மதம் குருட்டுத்தனமானது.

30.நமது எல்லையை அறியும்போது, அதைத் தாண்டி நம்மால் செல்ல முடியும்.

## அறிவு என்னும் அற்புதம் 15

(பேரறிஞர்கள் வரலாறு : இமாம் அபூ ஹனிபா ரலியல்லாஹு அன்ஹு)




இவர்களது இயற்பெயர் நுஃமான் என்பதாகும். அபூஹனீபா என்பது இவர்களது புனைப் பெயர். இவர்களின் தந்தையின் பெயர் தாபித். 'இமாமுல் அஃலம்' (கௌரவமிக்க தலைவர்) என்னும் சிறப்புப் பெயர் இவர்களுக்கு உண்டு.

இவர்கள் ஈராக் தேசத்திலுள்ள கூபாவில் ஹிஜ்ரி 80 இல் (கி. பி 699) அப்துல் மலிக் பின் மர்வானின் ஆட்சியின்போது பிறந்தார்கள். இவர்களே ஹனபி மத்ஹபின் ஸ்தாபகர். இவர்கள் நடுத்தர உயரமும், சிவப்புக் கலந்த வெண்மை நிறமும், அழகிய தோற்றமுடையவர்கள்.

இவர்களின் தவத்தையும், பூரண இறைபக்தியையும் பாராட்டாதவர்களே இல்லை. இவர்கள் இரவிலே முற்றிலும் தூங்காது அல்லாஹ்வை வணங்குவார்கள். தர்மம் செய்வதில் தலைசிறந்து விளங்கினார்கள்.
குடும்பச் செலவு போகத் தங்கள் பொருளில் எஞ்சியதைச் சேகரித்து ஏழைகள் முதலானோருக்குத் தினமும் அளித்து வந்தார்கள். இவர்கள் ஓரிடத்தில் மாத்திரம் 7000 விடுத்தம் குர்ஆன் ஓதிப் பூர்த்தி செய்திருக்கிறார்கள்.
ஒருமுறை இவருக்கும் இவரது பக்கத்து வீட்டுக்கார குடிகாரருக்கும் நடந்த சம்பவம் மிகவும் சுவாரசியமானது அந்த பக்கத்து வீட்டுக் குடிகாரர் எப்பொழுதும் குடித்து விட்டு, இரவு நேரங்களில் சப்தம் போட்டு பாடிக் கொண்டு, இவரை அதிகம் தொந்திரவு செய்து கொண்டிருந்தார்.

ஒருநாள் இரவு அந்தப் பக்கத்து வீட்டில் இருந்து எந்தப் பாட்டுச் சப்தமும் வரவில்லை, நிசப்தமாக இருந்தது. மறுநாள் காலை அவரைப் பற்றி விசாரித்த பொழுது, அவரை காவல் துறையினர் கைது செய்து சிறையில் அடைத்து வைத்திருப்பதாகத் தகவல் வந்தது.
இதனை அறிந்த மாத்திரத்தில் அபூஹனீஃபா அவர்கள் அந்தப் பகுதி கவர்னரிடம் சென்று, அந்தக் குடிகாரருக்காக வாதாடி அவருக்கு விடுதலை பெற்றுத் தந்ததோடு, அவர் சிறையில் இருந்த நாட்களில் ஏற்பட்ட பொருளாதார நஷ்டத்தை ஈடு செய்யும் அளவுக்கு பண உதவி செய்தார்.
அபூ ஹனீஃபா அவர்களின் இந்தப் பேருதவி, அந்த குடிகாரரைச் சிந்திக்க வைத்தது. இவர் மீது பெருமதிப்புக் கொள்ள வைத்தது. அடுத்த நாள் முதல் இது நாள் வரை தான் செய்து வந்த பாவச் செயலுக்கு பிராயச்சித்தமாக, இஸ்லாமியக் கல்வியைக் கற்பதில் தனது நேரத்தினைச் செலவு செய்ய முடிவெடுத்த அவர், அபூ ஹனீஃபா அவர்கள் பள்ளிவாசலில் நடத்தி வரக் கூடிய இஸ்லாமிய வகுப்பில் கலந்து கொள்ள ஆரம்பித்து விட்டார்.
இவர்களுக்கு கியாஸ் என்னும் ஒப்புமை ஆதார விதியால் சட்டங்கள் இயற்றுவதில் விசேஷ ஆற்றல் இருந்தது. இமாம் ஹம்மாத் பின் அபூஸுலைமான், இமாம் முஹம்மத் பின் முன்கதிர், இமாம் அதாஃபின் அபூரபாஹ் முதலிய சட்ட நிபுணர்களிடமிருந்து கல்வி பெற்றார்கள். ஆயிரக் கணக்கான மாணவர்கள் இவர்களிடம் கல்வி கற்றார்கள். அவர்களின் சீடர்களுள் அக்கால அப்பாஸிய்யா அரசாங்கத்தில் நீதிபதிகளாயிருந்த (காஸி) அபூயூஸுப் (ரலியல்லாஹு அன்ஹு), முஹம்மத் ஷைபானி (ரலியல்லாஹு அன்ஹு) ஆகிய இருவரும் இவர்களின் கல்வியை உலகினருக்கு அளித்துதவினர்.

ஹிஜ்ரி 17ல் இந்நகரில் 40ஆயிரம் பேர் வாழ்ந்து வந்தனர்.
கூஃபா அன்று மிகப்பெரும் கல்விக் கேந்திரமாக திகழ்ந்து வந்தது.இமாம் புகாரி (ரஹ் ) அவர்களின் புகாரி ஷரீபின் அறிவிப்பார்களின் முன்னூறுக்கு மேற்ப்பட்டவர்கள் கூஃபா வாசிகளே!.
இத்தகு கல்விக் கேந்திரத்தில்,கல்வியாளர்கள் இடையில் தான் இமாம் அபூஹனீபா (ரஹ்) அவர்கள் பிறந்து வளர்ந்து வந்தார்கள்.இமாம் அவர்கள் துவக்க காலத்தில் இல்முல் கலாம் (இஸ்லாமிய கொள்கைகள்)பற்றிய கல்வித் துறையில் ஆர்வம் கொண்டிருந்தார்கள்.இத்துறையில் இமாம் அவர்கள் பெரும்பாண்டிதியம் பெற்றவர்களாக திகழ்ந்தார்கள்
அன்றையக் கொள்கை குழப்பவாதிகளான “காரிஜிய்யா” களுடன்,பல்வேறு விவாத அரங்கு நடத்தி வெற்றி கண்டுள்ளார்கள்.”இல்முல் அதபு” -,”இல்முல் மன்திக்”ஆகிய கலைகளிலும் இமாம் அவர்கள் மிகப்பெரும் திறமைப் பெற்றவர்களாக இருந்தார்கள்.
இவர்களின் ஹனபி மத்ஹபுக்குப் பின்னரே ஏனைய பிரதான மூன்று மத்ஹபுகளும் தோன்றின. உலகில் பெரும் பகுதியான முஸ்லிம்கள் இவர்களின் மத்ஹபைப் பின்பற்றுகின்றனர். நாஸ்திகருடன் இவர்கள் விவாதித்து அன்னவர்களைத் தோல்வியுறச் செய்தார்கள். பன்முறை பரிசுத்த மக்கா, மதீனா சென்றுள்ளார்கள். இமாம் மாலிகையும் (ரலியல்லாஹு அன்ஹு) சந்தித்துள்ளார்கள்.
“எம் சமூகத்தினரின் மத்தியில் ஓர் அறிஞர் தோன்றி அவர்களைக் காப்பாற்றி ஞானம் போதிக்கும் அறிவின் சுடராய் அவர் முன்வருவார்” என நபிகள் நாயகம் (ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்) அவர்கள் கூறியிருப்பதாகச் சொல்லப்படுவது இவர்களைப் பற்றியென அறிஞர்கள் அபிப்பிராயப்படுகின்றனர்.
“நான் அலி (ரலியல்லாஹு அன்ஹு) யின் ஆசீர்வாதம் பெற்றுள்ளேன்” என இவர்கள் கூறுபவர்களாயிருந்தார்கள். ஏனெனில் இவர்களின் தந்தை தாபித் (ரலியல்லாஹு அன்ஹு), அலி (ரலியல்லாஹு அன்ஹு) அவர்களிடம் ஒருமுறை சென்றபோது அலி (ரலியல்லாஹு அன்ஹு) அவர்கள் அன்னாருக்காகவும் அன்னாரின் சந்ததிகளுக்காகவும் அல்லாஹ்வை இறைஞ்சி ஆசீர்வதித்தார்கள்.
இமாம் ஷாபியீ (ரலியல்லாஹு அன்ஹு) அவர்கள் இவர்களைப் பற்றிப் புகழும்பொழுது “இவ்வகில மக்களின் புத்தியும் விவேகமும் இமாமின் புத்தி விவேகத்திற்குச் சமமாகா” என்று வாழ்த்தினார்கள்.
இமாம் மாலிக் (ரலியல்லாஹு அன்ஹு) அவர்களும் இவர்களின் விவேகம், ஒன்றை நிரூபிக்கும் ஆற்றல் ஆகியவற்றை மிகவும் பாராட்டினார்கள்.

பட்டம், உத்தியோகப் பதவிகளினால் பெருமையடைதல் ஆகியவற்றை இவர்கள் விரும்பவில்லை. ஒருமுறை ஸிரியா நாட்டதிபதி அத்தேச பொக்கிஷப் பாதுகாவலராக இவர்களை நியமித்தார். அவர்கள் அதை மறுக்க அவ்வதிபதியின் உத்தரவுப் பிரகாரம் அவர்கள் தலைகுனிய வைக்கப்பட்டு முதுகில் கடுமையாகத் தாக்கப்பட்டார்கள்.
பனூ உமையாக்களின் கடைசி அரசரான மர்வானின் காலத்தில் இப்னு ஹுஸரா என்னும் அதிகாரி இமாமைக் கூபாவின் நீதிபதியாகவும் ‘பைதுல் மாலின்’ (அரசாங்க பொக்கிஷம்) பொறுப்பாளியாகவுமிருக்குமாறு

கட்டளையிட அவர்கள் அதையேற்காதிருந்தபோது அவர்களுக்கு 100 கசையடிகள் கொடுக்குமாறு அவ்வதிகாரி கட்டளையிட்டான்.
அங்ஙனமே நாளொன்றுக்குப் பத்துக் கசையடியாகப் பத்து நாட்களுள் அது நிறைவேற்றப்பட்டது. அதன் பின்னர் இவர்கள் சிறிதுகாலம் மக்காவில் தங்கிப் பின்னர் அப்பாஸிய்யா அரசர் மன்சூர் அரசு புரியும்போது பஃதாத் திரும்பினார்கள்.
இவ்வரசனும் அவர்களைச் சும்மாவிடவில்லை. ஈராக் தேச நீதிபதியாயிருக்க உத்தரவிடப்பட்டார்கள். அரசனுக்கும் அவர்களுக்குமிடையே நீண்ட வாக்குவாதம் நடைபெற்றது. முடிவில் கசையடியும் சிறையும் பெற்றார்கள். சிறையிலும் 12 தினங்களாய்த் தாக்கப்பட்டார்கள். அவர்களின் கால்கள் வழியாக இரத்தம் வழிந்தோடியது. கடைசியாக விஷம் கலந்த ஒரு பானத்தை அருந்தக் கொடுத்து அவர்களைக் கொல்ல முடிவு செய்யப்பட்டது. மிகவும் பொறுமையுடன் அவர்கள் அல்லாஹ்வுக்காகச் சிரங்குனிந்து ஸுஜூதில் வீழ்ந்திருக்கும்போது அவர்கள் ஆவி பிரிந்தது.
அவர்கள் ஹிஜ்ரி 150 ஆம் வருஷம் ரஜபு மாதம் (கி. பி. 772) தங்களின் 70 ஆம் வயதில் பஃதாதில் காலமானார்கள்.

இவர்களின் காலத்தில் நபிகள் நாயகம் (ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்) அவர்களின் தோழர்களில் பஸராவில் அனஸ் பின் மாலிக் (ரலியல்லாஹு அன்ஹு), கூபாவில் அப்துல்லாஹ் பின் ஔபா (ரலியல்லாஹு அன்ஹு), மதீனாவில் ஸஹ்ல் பின் ஸஃது (ரலியல்லாஹு அன்ஹு), மதீனாவில் அபுத்துபைல் ஆமிர் பின் வாஸிலா (ரலியல்லாஹு அன்ஹு) வும் இருந்தார்கள்.
அல்லாஹ் அவர்களை பொருந்தி கொள்வானாக!

## அறிவு என்னும் அற்புதம் 15




(பேரறிஞர்கள் வரலாறு : இமாம் முஸ்லிம் ரலியல்லாஹு அன்ஹு)
முஸ்லிம் இப்னு ஹஜ்ஜாஜ் ("Muslim ibn al-Hajjaj" அரபு மொழி: مسلم بن الحجاج) பொதுவாக 'இமாம் முஸ்லீம்' என அழைக்கப்படுகிறார். இவர் ஒரு இரானிய பாரசீக இஸ்லாமிய அறிஞர் ஆவார்.
“அபுல் ஹுஸைன்” என்ற குன்யத் பெயரால் அழைக்கப்பட்ட இமாம் முஸ்லிம் (ரழியல்லாஹு அன்ஹு) அவர்கள் அரபியரின் புகழ்பெற்ற ரபீஆ வம்சவழியிலிருந்து பிரிந்த குஷைர் குலத்தைச் சார்ந்தவர்களாவார்.
முஸ்லிம் இப்னு ஹஜ்ஜாஜ் இசுலாமிய நாட்காட்டி (ஹிஜ்ரி) 204இல் (கி.பி. 817இல்) ஒரு பாரசீகக் குடும்பத்தில், இஸ்லாமியப் பேணுதலுடைய ஹஜ்ஜாஜ் அல்-குஷைரீ என்பவருக்கு மகனாகப் பிறந்தார்கள்.(இன்றைய இரான் நாட்டில்) உள்ள நிசாப்பூரில் பிறந்தார். எனினும் வரலாற்றாசிரியர்கள் இடையே அவருடைய பிறந்த தேதி குறித்து கருத்துவேறுபாடுகள் உள்ளன.

மார்க்கக் கல்வி பயில்வதற்காக அரபகம், எகிப்து, சிரியா, இராக் ஆகிய நாடுகளுக்குப் பயணம் மேற்கொண்டார்கள். இமாம் இஸ்ஹாக் பின் ராஹவைஹ், இமாம் அஹ்மது பின் ஹன்பல், இமாம் உபைதுல்லாஹ் அல் கவாரீரீ, இமாம் குதைபா பின் ஸயீத், இமாம் அப்துல்லாஹ் பின் மஸ்லமா, இமாம் ஹர்மலா பின் யஹ்யா ஆகியோர் இமாம் முஸ்லிம் அவர்களின் ஆசிரியர்களாவர்.

இவர்கள் தவிர்த்து, முஹம்மது பின் யஹ்யா அத்துஹ்லீ என்பவரது மார்க்க அறிவும் தொடக்கக் காலத்தில் இமாம் முஸ்லிம் (ரழியல்லாஹு அன்ஹு) அவர்களைப் பெரிதாகக் கவர்ந்திருந்தது. ஆனால், ஒரு காலகட்டத்தில் “குர் ஆன் படைக்கப்பட்டது” என்ற துஹ்லீயின் தடுமாற்றக் கருத்துக்கு எதிராக இமாம் புகாரீ (ரழியல்லாஹு அன்ஹு) நின்றபோது இமாம் முஸ்லிம் (ரழியல்லாஹு அன்ஹு) அவர்கள் துஹ்லீயின் கருத்தை மறுதலித்து, தமது ஆசிரியரான இமாம் புகாரீ (ரழியல்லாஹு அன்ஹு) அவர்களது கருத்தையே ஆதரித்தார்கள். இமாம் புகாரீ (ரழியல்லாஹு அன்ஹு) அவர்களது இறப்பு வரைக்கும் அவர்களின் சிறப்பு மாணவராகத் திகழ்ந்தார்கள்.
இமாம் முஸ்லிம் ரழியல்லாஹு அன்ஹு அவர்கள் ஆரம்பக் கல்வியில் தேர்ச்சியடைந்த பின் தனது 16வது வயதில் ஹதீதைப் படிக்க தொடங்கினார்கள். சுய முயற்சியால் இத்துறையில் உச்சிக்குச் சென்றார்கள். குறுகிய காலத்தில் நைஸாப்பூரில் குறிப்பிடத்தக்க முஹத்திதுகளில் ஒருவராக விளங்கினார்கள்.
இமாம் முஸ்லிம் சிவப்புக் கலந்த வெண்மையான நிறமுடையவர்கள். உயர்ந்த கட்டுடல் கொண்ட அழகிய தோற்றமுடையவர்களாக விளங்கினார்கள். எப்பொழுதும் தலைப்பாகை அணிந்திருப்பார்கள். ஹதீதுக் கலையை கற்பிப்பதின் மூலம் வாழ்வாதாரத்தை ஏற்படுத்தாமல் புடவை வியாபாரத்தின் மூலமே வாழ்க்கைச் செலவை அமைத்துக் கொண்டார்கள்.
ஆதாரம் : தஹ்தீபுத் தஹ்தீபு பாகம் – 10, பக்கம் – 271

இமாம் முஸ்லிம் ரழியல்லாஹு அன்ஹு அவர்கள் எவரைப் பற்றியும் புறம் பேசியது கிடையாது. யாரையும் அடித்ததில்லை. எவரையும் ஏசியதில்லை. இது இவர்களின் வாழ்வின் விந்தையான விடயம் என்று ஷாஹ் அப்துல் அஸீஸ் முஹத்திதுத் திஹ்லவி ரழியல்லாஹு அன்ஹு தங்களது புஸ்தானுல் முஹத்திதீன் என்ற நூலில் வரைந்துள்ளார்கள்.
ஹதீதைப் படிப்பதற்காக இமாம் முஸ்லிம் ரழியல்லாஹு அன்ஹு நைஸாபூரிலுள்ள முஹத்திதீன்களிடம் கல்வி கற்றபின் ஹிஜாஸ், ஷாம், ஈராக், எகிப்து உள்ளிட்ட நாடுகளுக்குப் பயணம் ஆனார்கள்.
இமாம் முஸ்லிம் அவர்களிடமிருந்து கணக்கற்றோர் ஹதீதைப் படித்துள்ளனர். இவர்களிடமிருந்து ஹதீதை அறிவித்தவர்களின் எண்ணிக்கையை கணக்கிடுவது மிகவும் சிரமமாகும். ஹாபிழ் இப்னு ஹஜர் அஸ்கலானி ரழியல்லாஹு அன்ஹு அவர்கள் சிலரின் பெயர்களை தஹ்தீ புத்தஹ்தீபு என்ற நூலில் குறிப்பிட்டுள்ளார்கள்.
இமாம் முஸ்லிம் ரழியல்லாஹு அன்ஹு அவர்களுக்கு ஹதீதுக் கலையில் அபார ஆற்றல் காணப்பட்டது. ஹதீதில் சஹீஹ், ளயீபை குத்தாய்வதில் மகத்தான அறிவைப் பெற்றிருந்தார்கள். ஆதாரம் :புஸ்தானுல் முஹத்திதீன் பக்கம் 280

ஹதீஸ்களைச் சேகரிக்க முஸ்லிம் இப்னு ஹஜ்ஜாஜ் தற்போதைய ஈராக், சிரியா மற்றும் எகிப்து உட்பட அரேபிய தீபகற்பத்தில் உள்ள பல பகுதிகளுக்கு பல முறை பயணம் செய்தார். அவர் தனது சேகரிப்பில் மொத்தமிருந்த 3,00,000 ஹதீஸ்களில் 'ஸஹீஹ் முஸ்லீம்' நூலில் சேர்ப்பதற்காக, கடுமையான வரையறை அளவுகோல்களின் அடிப்படையில் ஆய்ந்து பிரித்து தேர்வு செய்து தனது சேகரிப்பில் சுமார் 4,000 ஹதீஸ்களை மட்டுமே சேர்த்தார். இமாம் முஸ்லிம் வாழ்நாளின் பெரும்பகுதி ஹதீஸைத் தேடி நாடுகள் நகரங்ளுக்கு பயணம் மேற்கொள்வதிலேயே கழிந்துள்ளது. இதற்கிடையில் கற்றல், கற்பித்தலிலும் அதிகம் ஆர்வம் காட்டியுள்ளதோடு பின்வரும் நூற்களையும் எழுதியுள்ளார்கள்.

1. அல்ஜாமிஉஸ் ஸஹீஹ் 2. அல்முஸ்னதுல் கபிர் 3. கிதாபுல் அஸ்மாவில்குனா 4. கிதாபுல் ஜாமிஉ அலல்பாப் 5. கிதாபுல் இலல் 6. கிதாபுல் வஹ்தான் 7. கிதாபுல் அப்றாத் 8. கிதாபுல் ஸுவாலாத் அஹ்மத் இப்னு ஹன்பல் 9. கிதாபுல் ஹதீஸ் அம்றுப்னு ஷுஐப் 10. கிதாபுல் இன்திபாஹ் பாரிபுஸ்ஸியாஃ 11. கிதாபுல் மஷாயிக் மாலிக் 12. கிதாபுல் மஷாயிக் தௌரி 13. கிதாபுல் மஷாயிக் ஸுஃபா 14. கிதாபு மன்லைஸ லஹு இல்லா றஹீன் பாஹித் 15. கிதாபுல் மஹ்முரீன் 16. கிதாபுல் அல்லாதுஸ் ஸஹாபா 17. கிதாபுல் அல்ஹாமூல் முஹத்திதீன் 18. கிதாபுல் தபகாத் 19. கிதாபுல் அப்றாதுஷ்ஷாமீன் 20. முஸ்னத் இமாம் மாலிக் 21. முஸ்னதுஸ்ஸஹாபா
ஆதாரம் : தத்கிறதுல் ஹுப்பாழ் பாகம் – 02, பக்கம் – 590

இமாம் முஸ்லிம் அவர்கள் முஸ்னது ஸஹாபாவை மிகவும் விரிவாக எழுதத் துணிந்தார்கள். அவற்றைப் பூரணப்படுத்த முன் வபாத்தாகி விட்டார்கள். அவர்கள் ஆரம்பித்தது போன்று முடித்திருந்தால் பாரிய பணி ஒன்று நிகழ்ந்திருக்கும் என்று ஹாபிழ் இப்னு ஹஜர் அஸ்கலானி ரழியல்லாஹு அன்ஹு அவர்கள் குறிப்பிடுகின்றார்கள்.

இமாம் முஸ்லிம் ரழியல்லாஹு அன்ஹு யின் மரணம் தொடர்பாக கூறப்படும் கதை விசித்திரமானதாகும் என்று ஹாபிழ் இப்னு ஹஜர் அஸ்கலானி ரழியல்லாஹு அன்ஹு கூறுகின்றார்கள்.
ஒரு தினம் ஹதீஸ் மஜ்லிஸில் ஒருவர் ஒரு ஹதீதைப் பற்றிப் கேட்க அதற்கு அவர்களால் பதில் கூற முடியாது போய்விட்டது. இல்லம் வந்து தனது நூற்களுள் அந்த ஹதீதைத் தேடினார்கள். பக்கத்தில் ஒரு கூடையில் பேரீத்தம் பழத்தையும் வைத்துக் கொண்டு பேரீத்தம் பழத்தை சுவைத்துக் கொண்டே தேடுதலில் கவனம் செலுத்தினார்கள். ஹதீதின் தேடுதலில் மூழ்கியிருந்தே இமாமவர்கள் பேரீத்தம் பழத்தை அளவுக்கு மிஞ்சி புசித்து விட்டார்கள். ஹதீஸ் கிடைக்கும்போது கூடை காலியாகி விட்டது. இதுவே அவர்களின் மௌத்திற்கு காரணமாகியது. ஹிஜ்ரி 261 ரஜப் பிறை 24இல் ஞாயிறு அன்று வபாத்தானார்கள். நைஷாப்பூரில் அடக்கம் செய்யப்பட்டார்கள்.

இமாம்கள் இபுனு அபீஹாத்தம் அர்ராஸீ, மூஸா பின் ஹாரூன், அஹ்மது பின் ஸலமா, திர்மிதீ, இபுனு குஸைமா, அபூ அவானா, ஹாபிள் தஹபீ ஆகிய ஹதீஸ் கலை மேதைகள் இமாம் முஸ்லிம் (ரஹ்) அவர்களின் மாணவர்களாவர்.

## அறிவு என்னும் அற்புதம் 16

( அறிவை வெறுக்கலாமா? பகுதி 1 )



இது இந்தக் கட்டத்திற்கு நியாயமான கேள்வி மட்டுமல்ல, முக்கியமான கேள்வியும்கூட. ஏனெனில் இந்தக் கேள்வியை மையமாக வைத்தே இந்த கட்டுரை தொடர் எழுதப்படுகிறது.
அறிவு என்பது இறைவனால் மனிதனுக்குக் கொடுக்கப்படும் செல்வம். இப்படிப் பார்க்கும்போது நம்மால் எந்த அறிவையும் குறைத்து மதிப்பிட முடியாது.
என்றாலும் எல்லா அறிவுகளும் மனிதனின் முன்னேற்றத்துக்குத் துணை புரிவதில்லை. சில அறிவுகள் மனிதனின் வாழ்க்கைத் தரத்தை உயர்த்தினால், வேறுசில அறிவுகள் அவனுடைய முன்னேற்றத்திற்கு குழி பறிக்கின்றன.
எனவே இஸ்லாம் அறிவின் சிறப்பை அதிலிருந்து கிடைக்கும் பயனை வைத்தே தீர்மானிக்கிறது.
குறிப்பிட்ட ஓர் அறிவை இஸ்லாம் எதிர்க்கிறது என்றால், அடியில் இடம் பெறும் மூன்று காரணங்களில் ஒன்று அவசியம் இருந்தாக வேண்டும்.

அறிவுகளில் சில, பொதுமக்களுக்குத் துன்பம் விளைவிக்கின்றன. செய்வினை செய்யும் அறிவு இத்தகையதுதான். இந்தத் துறையில் ஈடுபடுகிறவர்கள் அனேகமாக மற்றவர்களுக்குத் தொல்லையை ஏற்படுத்தும் எண்ணத்துடனேயே செயல்படுகிறார்கள். இந்த அறிவு பெரும்பான்மையாக இந்த நோக்கத்திற்காகவே பயன்படுத்தப்படுகிறது.
கணவன்- மனைவிக்கிடையில் பகைமையைத் தோற்றுவிப்பது, ஒன்றுபட்டு வாழும் குடும்பத்தைக் குலைப்பது, சுயநலம் பாதிக்கப்பட்டு விட்டதால் மற்றவர்களை நோயாளியாக்குவது இப்படி எத்தனையோ காரியங்கள் இந்த அறிவை வைத்துச் சாதிக்கப்படுகின்றன.
இந்தக் கலையைப் பற்றித் தெரிந்து கொள்வது குற்றமல்ல. அதை மற்றவர்களுக்கு எதிராகப் பயன்படுத்துவதுதான் குற்றம்.
நட்சத்திர ஓட்டத்தையும் கணித ஞானத்தையும் ஆதாரமாகக் கொண்டு இந்த வேலை செய்யப்படுகிறது.
குறிப்பிட்ட நட்சத்திரச் சேர்க்கையில் தயாரிக்கப்படும் ஒருவித உலோகத்துண்டில் ஒரு மனிதனின் உருவம் செதுக்கப்படுகிறது.
அதைச் சுற்றிச் சில எழுத்துக்களை எழுதுகிறார்கள். அப்போது மார்க்கத்துக்கும் பகுத்தறிவுக்கும் மாறுபட்ட வார்த்தைகள் கூறப்படுகின்றன. இதனால் தீய சக்தியுடன் தொடர்பு கொண்டு காரியம் சாதிக்கப்படுகிறது.
இப்படிப் பல வேலைகளைச் செய்து முடிக்கும்போது அந்த மனிதனின் மனநிலையிலும் சிந்தனையிலும் மாறுதல் தோன்றுகிறது. இதனால் அவன் மனம் குழப்படைந்து உடல் ஆரோக்கியத்தை இழக்கிறது.
இப்படி இந்தக் கலைக்கு எத்தனையோ பகுதிகள்
இருக்கின்றன. அவற்றைத் தெரிந்து கொள்வதில் தவறில்லை. ஆனால் அவற்றை வைத்து மற்றவர்களுக்குத் துன்பம் இழைப்பது பெரும் குற்றம். எனவே இந்த அறிவு மறுக்கப்படுகிறது.

இப்படியொரு கலை இருக்கிறதா என்று நீங்கள் சந்தேகப்பட வேண்டியதில்லை. ஏனெனில் திருக்குர்ஆனின் ஒளியில் பார்க்கும்போது, இப்படியொரு கலை அறிவு நிச்சயமாக இருக்கத்தான் செய்கிறது என்ற நம்பிக்கையே நமக்கு ஏற்படுகிறது.
இந்த அறிவை வைத்துக் கணவன்-மனைவிக் கிடையில் பகைமை தோற்றுவிக்கப்படுகிறது என்று திருக்குர்ஆன் கூறுகிறது.
ஒரு சமயம் இந்தத் தீய கலையின் ஆற்றலால் பெருமானாரே பாதிக்கப்பட்டு விட்டார்கள். வானவர் ஜிப்ரயீல் உண்மையை
அறிந்து தேவையான பரிகாரம் செய்யப்பட்டது. கிணற்றுக்குள் இந்த வேலை செய்து வைக்கப்பட்டிருந்தது.

பொதுப்படையாக இந்தக் கலையைப் பற்றித் தெரிந்து கொள்வதில் தவறில்லை என்றாலும், இதைத் தெரிந்து கொள்கிறவர்கள் மற்றவர்களுக்கு எதிராகப் பிரயோகிக்கத் தவறுவதில்லை. எனவே இந்த அறிவு வன்மையாக இகழப்படுகிறது.
இத்தகைய அறிவுகளை நாம் இகழத்தான் வேண்டும். மக்களுக்கும் மார்க்கத்துக்கும் தீங்கிழைக்கக்கூடிய எந்த அறிவுக்கும் இஸ்லாத்தில் மதிப்புக் கிடையாது.
ஆதாரம் : இமாம் கஸ்ஸாலி (ரஹ்) அவர்கள் எழுதிய
"கிதாபுல் இல்ம் ''

## அறிவு என்னும் அற்புதம் 17

( அறிவை வெறுக்கலாமா? பகுதி 2 )



நட்சத்திர ஓட்டத்தை வைத்து எதிர்காலத்தை எடைபோட முயற்சி செய்யும் அறிவையே வானசாஸ்திரம் என்று நான் குறிப்பிடுகிறேன்.
எந்த விண்மீனுடன் எந்த விண்மீன் எந்த இடத்தில் சந்தித்தால் உலகில் எந்த விளைவு ஏற்படும் என்று வானஇயல் நிபுணர்கள் கண்டுபிடிக்கிறார்கள். மூஸா (அலை) அவர்கள் காலத்தில் கடல் பிளந்தது , லூத்(அலை). காலத்தில் பூமி தலைகீழாக புரட்டப்பட்டது போன்ற நிகழ்வுகளுக்கெல்லாம் விண்மீன்களை காரணம் காட்டுகிறார்கள்.
வைத்தியன் ஒருவன் நோயாளியின் நாடித் துடிப்பைப் பார்த்து நோயைக் கண்டுபிடிப்பதுபோல, இவர்கள் விண்மீன்களின் ஓட்டத்தை வைத்து வைத்து விளைவுகளைக் கண்டுபிடிக்கிறார்கள்.
குறிப்பிட்ட விண்மீன்கள் குறிப்பிட்ட இடத்தில் சேரும் போது, உலகில் புயலோ நில நடுக்கமோ ஏற்படுகிறது என்றால், அந்த விளைவையே அந்த விண்மீன்கள்தான் ஏற்படுத்துகின்றன என்பது பொருளல்ல. உலகில் பிளவு ஏற்படும்போது விண்மீன்களின் ஓட்டத்தில் அந்த உண்மை தெரிகிறது.
இந்தத் துறையில் மும்முரமாக ஈடுபடுகிறவர்கள் உலகில் தோன்றும் சூழல்கள் அத்தனைக்கும் விண்மீன்களின் இயக்கத்தையே காரணமாகக் காட்ட ஆரம்பித்து விடுகிறார்கள்.இத்தகையவர்களின் உள்ளத்தில், 'அனைத்தையும் இயக்குகிறவன் இறைவன் ஒருவனே' என்ற இஸ்லாமியக் கொள்கை, எப்படி நிலைத்து நிற்க முடியும்?

وَاَنَّهٗ هُوَ رَبُّ الشِّعْرٰىۙ
நிச்சயமாக அவன் தான் (இவர்கள் வணங்கும்) ஷிஃரா (எனும் கோளத்திற்கும்) இறைவன்.
وَاَنَّهٗۤ اَهْلَكَ عَادَا  ۨالْاُوْلٰى ۙ
நிச்சயமாக முந்திய ஆ(து கூட்டத்)தை அழித்தவனும் அவன்தான். (குர்ஆன் : 53:49, 50)
எனவேதான் இந்த அறிவை இஸ்லாம் இகழ்கிறது. விண்மீன்களின் இயக்கத்தில் உலகம் பெரிதும் சம்பந்தப் பட்டிருக்கிறது என்பதை நாம் மறுக்கவில்லை. நட்சத்திரத்தை நம்புகிறவர்கள் அதனை இயக்கும் இறைவனை மறந்துவிடக் கூடாது என்பதே நம் கருத்து.

உண்மையில் இது சிக்கலானதொரு பிரச்சினை. இதில் யாரும் சிக்கிக் குழம்பக்கூடாது என்று எண்ணியே பெருமானார், "விண்மீன்களின் ஆற்றல் பற்றிப் பேச்சு எழுந்தால் வாயை மூடிக்கொள்ளுங்கள்" என்று கூறியிருக்கிறார்கள்.
விண்மீன்கள்தான் உலகத்தை இயக்குகின்றன என்று நம்புவது அறியாமை. மனிதனின் நாடித் துடிப்புத்தான் அவனுடைய உடலிலும் உள்ளத்திலும் நோயைத் தோற்று விக்கிறது என்று கூறுவது அறியாமையல்லவோ? நாடித் துடிப்புக்கும் நோய்க்கும் சம்பந்தம் இருப்பதுபோல், நட்சத்திர ஓட்டத்துக்கும் உலக நிகழ்ச்சிக்கும் சம்பந்தம் இருக்கிறது.

விண்மீன்களே அனைத்தையும் இயக்குகின்றன என்று என் சமூகத்தவர் நம்ப ஆரம்பித்துவிடுவார்களோ என்று நான் அஞ்சுகிறேன்" என்பது நபி கருத்து.
ஆனால் ...
فَنَظَرَ نَظْرَةً فِى النُّجُوْمِۙ
பின்னர் அவர் ( இப்ராஹீம் ) நட்சத்திரங்களை ஒரு பார்வை பார்த்தார்.
فَقَالَ اِنِّىْ سَقِيْمٌ
“நிச்சயமாக நாம் நோயாளியாக இருக்கிறேன்” என்றும் கூறினார். (குர்ஆன் : 37:88,89)
ஹளரத் இப்ராஹீம் அலைஹிஸ்ஸலாம் அவர்கள் இவ்வாறு தம்மை நோயாளி என்று கூறியது பொய்யான மொழி என்பதாகச் சிலர் கருதக்கூடும். உண்மையில் அது பொய்யல்ல.
எவ்வாறெனில், ஸக்முன் என்பது ஸ்தூலம் சம்பந்தமான வியாதிக்குப் பெயர். மனிதனது ஸ்தூலத்திலுள்ள பித்த வாத கோழைகள் யாவும் அவையவை இருக்க வேண்டிய அளவுப்படி இருப்பதில்லை. மிக அபூர்வமாகவே அவை அளவுப்படி இருக்கும்.
ஏதேனும் ஒன்று அதிகமாகவோ குறைவாகவோ மாறுபட்டிருப்பது சகஜம். இவற்றில் அதிகமான வித்தியாசமேற்பட்டால்தான் உடலில் நோய் இருப்பதை பிறர் சுலபமாகத் தெரிந்து கொள்ள முடியும். குறைவாக இருந்தால் மனிதன் ஆரோக்கியமாகவே இருப்பதாகத்தான் பிறர் கருதுவர்.

ஹளரத் இப்ராஹீம் அலைஹிஸ்ஸலாம் அவர்கள் இக்கருத்தின் படி தம்மை நோயாளி என்று கூறி இருக்கலாம். இது உண்மையில் பொய்யுமல்ல. மேலும், 'நோயாளி' என்ற பதத்துக்கு 'மனநோய்' என்றும் கருத்துரைப்பாருமுண்டு. வேறு பல கருத்துகளும் இப்பதத்துக்கு உரைக்கப்படுகிறது.
உமர் (ரலி) அவர்கள் கூறுகிறார்கள்: “கடலிலும் கரையிலும் பிரயாணம் செய்யும்போது திசையைத் தெரிந்து கொள்ளும் அளவுவான இயலைக் கற்றுக் கொள்ளுங்கள். அத்துடன் நிறுத்திக் கொள்ளுங்கள்."
வான இயலில் மற்றொரு வகையுண்டு. முதற்பிரிவைப் போல் இதில் விண்மீன்களின் இயக்கத்துக்கும் நிகழ்ச்சிகளுக்கும் முடிச்சுப் போடப்படுவதில்லை.
இப்பிரிவினர் சூரியன், சந்திரன், செவ்வாய், வியாழன், சனி முதலான விண்வெளி உலக கோளங்கள் எங்கெங்கு அமைந்திருக்கின்றன, எப்படியெப்படி அமைந்திருக்கின்றன என்பன போன்ற விவரங்கள் இங்கு ஆராயப்படுகின்றன.

இந்தத் துறையில் ஈடுபடுகிறவர்களுக்கு விண்மீன்களினால் உலகில் தோன்றும் விளைவுகள் பற்றிக் கவலையில்லை. எனவே முதற் பிரிவினருக்கு ஏற்படும் மனநிலை இரண்டாம் பிரிவினருக்கு ஏற்பட முடியாது. இந்தப் பிரிவைப் பற்றிய குறிப்புகள் திருக்குர்ஆனில் காணப்படுகின்றன. சூரியனும் சந்திரனும் இறைவனின் கட்டளைக்கு உட்பட்டே இயங்குகின்றன என்று அது தெரிவிக்கிறது.
اَلشَّمْسُ وَالْقَمَرُ بِحُسْبَانٍ
சூரியனும் சந்திரனும் (அவற்றிற்கு நிர்ணயிக்கப் பெற்ற) கணக்கின்படியே இருக்கின்றன. (குர்ஆன் : 55:5)
இந்தத் துறையில் இறங்குகின்றவர்களால் இறைவனின் பேராற்றலை நன்கு உணர்ந்து கொள்ள முடியும். எனவே இந்த அறிவினை நம்மால் இகழ்ந்து கூறமுடியாது.
ஆதார நூல்கள் : 1) தஃப்ஸீர் ஹமதிய்யா,
2) இமாம் கஸ்ஸாலி (ரஹ்) அவர்கள் எழுதிய "கிதாபுல் இல்ம் "

## அறிவு என்னும் அற்புதம் 18

( அறிவை வெறுக்கலாமா? பகுதி 3 )




விண்மீன்களின் ஓட்டத்தை வைத்து எதிர்காலத்தைக் கொஞ்சமும் பிசகாமல் தெரிந்துகொள்ள முடியும் என்று நம்புவதுதான் தவறு.
இப்படி நம்புவதைத் தவறு என்று நாம் சொல்கிறோமல்லவா? இதற்கு நம்மால் மூன்று காரணங்கள் காட்ட முடியும்.
முதற்காரணம்:-
விண்மீன்களே உலகை இயக்குகின்றன என்று நம்புவது பெரும்பாலோருக்குத் தீங்கு செய்யும் ஒன்று. இது எவ்வளவு மோசமான நம்பிக்கை என்பதை விளக்கிக் காட்ட வேண்டியதில்லை என்றே நான் நினைக்கிறேன். இந்த நம்பிக்கையினால் அவர்கள் இஸ்லாத்துக்கு முற்றிலும் மாறுபட்ட வேறொரு கொள்கையை உருவாக்கிக் கொள்கிறார்கள்.

நட்சத்திரங்கள் இயங்கியதும் உலகில் விளைவுகள் தோன்றுகின்றன என்று நம்புவதால், விண்வெளியில் ஒளி கக்கும் அந்த கோளங்களை இறையாற்றல் பொருந்தியவை என்று அவர்கள் நம்ப ஆரம்பிக்கிறார்கள்.
இதனால், இறைவனை மதிக்க வேண்டிய அவர்கள் அவனால் உருவாக்கப்பட்ட உயிரற்ற கோளங்களை மதிக்கத் துவங்குகிறார்கள். தம் வாழ்வில் குறுக்கிடும் நன்மைகளையும் தீமைகளையும் விண்மீன்களுடன் சேர்த்துவைத்து எண்ணத் தலைப்படுகிறார்கள். இத்தகையவர்களின் உள்ளத்தில் எப்படி இறையன்பு வளர முடியும் என்று நமக்குத் தெரியவில்லை.

பரந்த ஞானமும் ஆழ்ந்த உள்ளமும் பெற்றவர்களுக்கு இயலினால் எவ்விதக் குழப்பமும் ஏற்படப் போவதில்லை. ஆனால் மக்கள் திரளில் இத்தகையவர்கள் மிகக் குறைவு என்பதையும் இங்கு நாம் மறந்துவிடுவதற்கில்லை. இவர்கள் எவ்வளவுதான் குறைந்தவர்களாயிருந்தாலும், இவர்களின் சிறப்பு மிக உயர்ந்தது.
சூரியன், சந்திரன் முதலான விண்வெளிக் கோளங்களைப் பற்றி இவர்கள் நன்கு தெரிந்து கொள்கிறார்கள். தமக்குத் தாமாக இயங்கும் சுதந்திரத் தன்மை அவற்றுக்குக் கிடையாது என்றும், அவை இறைவனின் ஆணைக்குட்பட்டே
இயங்குகின்றன என்றும் இவர்கள் உணர்ந்து கொள்கிறார்கள். இவர்களைப் போல் நீங்கள் நடந்து கொள்கிறீர்களா? அப்படியானால் உங்களைப் பொறுத்தவரை வானஇயலில் எந்தத் தீமையும் கிடையாது.
ஆனால் இப்படி நடப்பது எல்லோருக்கும் சாத்தியம் என்று குறிப்பிடுவது தவறு. மக்களில் பலர் வெளிப்படையாகத் தெரியும் காரணங்களை நம்பிக்கொண்டு வேலை செய்கிறவர்களே அவர்கள் விண்மீன்கள் இயங்குவதையும் அதையொட்டி உலகில் நல்ல விளைவு அல்லது தீய விளைவு தோன்றுவதையும் பார்க்கிறார்கள்.
எனவே உலகில் தோன்றும் விளைவுகளுக்கு விண்மீன்களின் இயக்கமே காரணம் என்று தீர்மானிக்கிறார்கள். விண்மீன்களுக்கு அப்பால், அவற்றை இயக்கும் பேராற்றல் ஒன்று மறைந்திருக்கிறது என்ற உண்மையை அவர்கள் தெரிந்து கொள்வதில்லை.

இத்தகையவர்களை எண்ணிப் பார்க்கும்போது. எழுத்துக்களுள்ள காகிதத்தின்மீது ஓடக்கூடிய சிற்றெறும்பின் நிலைதான் எனக்கு நினைவுக்கு வருகிறது. அதற்குப் பகுத்தறிவு இருப்பதாக வைத்துக் கொண்டால், எழுத்துக்குக் காரணம் ஓர் எழுதுகோல் என்பதை அது சிரமப்பட்டேனும் தெரிந்து கொள்ளலாம்.
இந்த அளவுக்குத்தான் அது முன்னேறலாம் எழுதுகோலை விரல்கள் இயக்குகின்றன என்பதை விரல்களை மனிதனின் ஆற்றல் இயக்குகிறது என்பதை மனிதனின் ஆற்றலை அவனது உள்ளம் தூண்டி விடுகிறது என்பதையோ அந்தச் சிற்றெறும்பினால் கண்டுபிடிக்க முடியாது .

காகிதத்தில் விழும் எழுத்துக்கு எழுதுகோல்தான் காரணம் என்று சிற்றெறும்பு எண்ணுவதுபோல், வானஇயலில் நுழைந்தவர்களில் பலர் விண்மீன்களினால்தான் உலகம் இயங்குகிறது என்று எண்ணுகிறார்கள்.
சிற்றெறும்மை பொறுத்தமட்டில் எழுதுகோலுக்கு அப்பால் எதுவும் கிடையாது இதுபோலவே, வான இயலில் ஈடுபட்ட பெரும்பாலோ பொறுத்த மட்டில் விண்மீன்களுக்கு அப்பால் எதுவும் கிடையாது.
உள்ளம்தான் மனிதனை இயக்குகிறது என்பதை மறப்பது மறுப்பதும் அறியாமையின் சின்னங்கள் அல்லவா?
இதை நீங்கள் ஏற்றுக் கொண்டால், விண்மீன்களையும் உலகையும் இயக்குகிறவன் இறைவன்தான் என்பதை மறப்பது மறுப்பதும்கூட அறியாமையின் சின்னங்களே என்பதை நீங் ஏற்றுக் கொள்ளத்தான் வேண்டும்.
வான இயலை நாம் மறுப்பதற்கு இது முதல் காரணம். மூலத்திற்கு மூலமாக அமைந்திருக்கும் பேராற்றனை திரைபோட்டு மறைக்கிறது.
ஆதார நூல் : இமாம் கஸ்ஸாலி (ரஹ்) அவர்கள் எழுதிய "கிதாபுல் இல்ம் ''
___________________________________________

இதை சிறு கவிதை மூலம் விளக்குகிறேன்.
எறும்பின் தியானம் .
எருமையின் முதுகில் ஊர்ந்துகொண்டிருந்தது எறும்பு
நாக்கு சுழற்றுவதை நிறுத்தி ஊர்தலைத் தியானிக்கிறது எருமை
பாறையின் மேல் ஊர்வதாக எறும்பு போய்க்கொண்டிருக்கலாம்
காற்று ஊர்வதாக எருமை நினைக்கலாம்
வால் வரை வந்து வெளியின் ஆழத்தை வியக்கிறது எறும்பு
எறும்பின் தியானத்தில் எருமையின் தியானம் கலைகிறது.
வாலின் அசைவில் வெளி கடந்து நிலம் வீழ்ந்து ஊர்ந்துகொண்டிருக்கிறது எறும்பு.
இப்போது தியானிக்கத் தொடங்குகிறது நிலம்.

## அறிவு என்னும் அற்புதம் 19

( அறிவை வெறுக்கலாமா? பகுதி 4 )

இரண்டாம் காரணம்: வான இயல் நிபுணர்கள் விண்மீன்களின் இயக்கத்தை வைத்து எதிர்காலம் பற்றிக் கணக்குப் போடுகிறார்கள் என்று நான் குறிப்பிட்டேனல்லவா?
இதை வார்த்தைக்கு வார்த்தை நிச்சயமானது என்று சொல்லிவிட முடியாது. இது உத்தேசமான ஓர் அறிவு. தனிப்பட்ட மனிதர்கள் ஒவ்வொருவருக்கும் இது நிச்சயமாக எல்லா நேரங்களிலும் பொருந்துவதில்லை.
உலகிலுள்ள அறிவுகள் அனைத்தும் இறைவனால் கொடுக்கப்பட்டவைதான். வான இயல்பற்றிய அறிவும் இறைவனால் கொடுக்கப்பட்டதுதான். இதனை உலகத்திற்கு கொடுத்தவர் இத்ரீஸ் நபி அவர்கள்.
இத்ரீஸ் நபியவர்களை வானலோகத்திற்கு அழைத்து சென்று மலக்குகள் பார்வையிடும் " ஸிர்ருல் மலக்கூத்து " என்கிற பிரபஞ்சங்கள் இரகசிய கிதாபை படிக்க கொடுத்தும் சூரியனுடைய கோள்கள் சுற்றி வரும் பாதைகளில் அந்தந்த கிரகங்களோடு அவரையும் பயணிக்க செய்தார்கள்

இப்படி சனிக்கோளுடன் சேர்ந்து 30 ஆண்டுகள் விண்ணிலே பயணித்து வந்தார்கள். ஆகையால் இவர்களால் தன்னால் நேரில் கண்ட நட்சத்திரத்திரங்களைப் பற்றியும் கிதாபு (பிரபஞ்சங்கள் இரகசியத்தை) ஒன்றாக சேர்த்து வான சாஸ்திரத்தை இவர்கள் தொகுத்து பூமிக்கு கொடுத்தார்கள்
இந்த ஞானத்தின் துணைகொண்டு அப்போதைய மக்கள் எத்தனையோ மர்மங்களைத் தெரிந்து கொண்டார்கள். எதிர்காலம் குறித்து அவர்கள் கூறியவை பெரும்பான்மை சரியாயிருந்தன.
ஆனால் அந்த ஞானமும் காலத்தை அளக்கும் திறமையும் அழிந்துபோய் விட்டன. அந்தத் திறமையை இன்றைக்குக் காண முடியாது. இன்றைய வானஇயல் நிபுணர்கள் கூறுவதில் ஏதேனும் உண்மை இருந்தால், அது தற்செயலானதுதானே தவிர, தவிர்க்க முடியாதது அல்ல! ஏனெனில், இந்த நிபுணர்கள் குறிப்பிடும் விளைவுகள் பெரும்பான்மை நிகழ்வதேயில்லை.

இப்படிப் பார்க்கும்போது, இதனை அறிவு என்று சொல்வதைவிட அறியாமை என்று சொல்வது மிகப் பொருத்தம் என்றே தீர்மானிக்க வேண்டி ஏற்படுகிறது. அறியாமைக்கு முக்கியத்துவம் கொடுப்பதை இஸ்லாம் எதிர்க்கிறது.
விண்வெளியில் கார்முகிற் கூட்டம் மிதந்து செல்லும் போது நாம் 'மழை வரப்போகிறது' என்று தீர்மானிக்கிறோம். நம் தீர்மானம் பெரும்பான்மை உண்மையாகவே இருக்கிறது. ஆனால் அதற்காக, 'கார்முகிற் கூட்டம் தோன்றினால் மழை பெய்துதான் ஆக வேண்டும்' என்று சொல்லிவிட முடியாதல்லவா?
நீல விண்திரை கார்முகில் திரையாக மாறியதுபோல், கார்முகிற் கூட்டம் திடீரென்று காற்றினால் சிதறியோடி நீல விண்திரையை முகம் காட்ட வைக்கலாம். ஏன் தெரியுமா?

மழை பெய்வதற்குக் கார்முகிற் கூட்டம் தோன்றியது ஒரு காரணம்; இதற்குப் பின்னால் பல காரணங்கள் இருக்கின்றன. காற்று வீசுவது, அதில் குளிர்ந்த தன்மை இருப்பது - இப்படி எத்தனையோ காரணங்கள்.

இந்தக் காரணங்கள் எல்லாம் ஒன்று சேரும் போதுதான் மழை பெய்ய முடியும். அவற்றில் ஒன்றே ஒன்று இழக்கப்பட்டாலும் போதும், ஒரு சொட்டுத் தண்ணீரை உங்களால் பார்க்க முடியாது.
எனவே, கார்முகிற் கூட்டம் தோன்றும் போதெல்லாம் மழை பொழிந்துதான் ஆகவேண்டும் என்று நம்புவது நிச்சயமாக அறியாமைதான். கார்முகில் இல்லாமல் மழை பொழிய முடியாது என்பதை நான் ஏற்றுக் கொள்கிறேன். ஆனால் கார்முகிற் கூட்டம் சிலவேளை மழையைத் தராமல் மறைந்து விடுவதுண்டு என்பதைத் தயவுசெய்து நீங்கள் ஏற்றுக் கொள்ளுங்கள்.
மழைக்கும் மேகத்துக்குமிடையில் பிணைப்பு இருப்பது போல், விண்மீன்களுக்கும் உலக நிகழ்ச்சிகளுக்கு மிடையில் பிணைப்பு உண்டு.
மழை பெய்வதற்கு மேகத்தைத் தவிர்த்து எத்தனையோ காரணங்கள் இருப்பதுபோல், உலகில் தோன்றும் நிகழ்ச்சிகளுக்கு விண்மீன்களைத் தவிர்த்து எத்தனையோ காரணங்கள் இருக்கின்றன. அவை அனைத்தையும் அலசிப் பார்த்து முடிவு காண்பது சாதாரணமாக மனித ஆற்றலுக்கு அப்பாற்பட்ட ஒன்று.
அப்படி ஒரு மனிதன் அந்தக் காரணங்கள் அனைத்தையும் தெரிந்து கொண்டுவிட்டால், அப்புறம், 'அனைத்தையும் இறைவனே இயக்குகிறான்' என்பதில் அவனுக்குச் சந்தேகம் தோன்றப் போவதில்லை
ஆதார நூற்கள் : 1) தஃப்ஸீர் ஹமீதிய்யா
2) இமாம் கஸ்ஸாலி (ரஹ்) அவர்கள் எழுதிய "கிதாபுல் இல்ம் "

## அறிவு என்னும் அற்புதம் 20

( மத அறிவும் பௌதீக அறிவும் )

மனித வரலாற்றில் முதன் முதலாக மத அறிவை மற்ற இயற்பொருள் சார்ந்த பௌதீக அறிவிலிருந்து வேறுபடுத்தியது இஸ்லாம் மார்க்கம் மட்டும்தான்
பொதுமக்களால் ஏற்றுக் கொள்ளப்பட்ட மத அறிவிற்கு மூலாதாரம் இறை வெளிப்பாடு (வஹீ)தான். (இந்த வாதத்திற்கு ஆதாரமாக இறை வெளிப்பாடாகிய குர்ஆன் நூல் வடிவில் பாதுகாக்கப்பட்டு வருகிறது)
தனி மனிதர்கள் சுயேச்சையாக எவ்வித நிர்ப்பந்தத்திற்கும் ஆளாகாமல் தீர்வு காண்பதற்கு ஏதுவாக இயற்கை நிகழ்வுகளை ஆய்வதற்கு முழு உரிமையும் வழங்கப்பட்டது.
...ஆனால் கிருஸ்துவ மதத்தில் அப்படி அல்ல, மதக் கொள்கை கோட்பாட்டிற்கு பௌதீக அறிவு குறுக்கிட்டால் அதை பாதகமானதாக கருதி, அது தண்டனைக்குரிய விஷயமாக பார்க்கப்படுகிறது .உதாரணமாக..
சூரியனும் மற்ற கோள்களும் பூமியைச் சுற்றுவதாகவே பல நூற்றாண்டுகளாக நம்பப்பட்டது. பூமி உள்ளிட்ட கோள்கள்தான் சூரியனைச் சுற்றுகின்றன என்று கலிலியோ, கோபர்நிகஸ், ஜோகன்னஸ் கெப்ளர் ஆகியோரின் ஆய்வுகள்தான் முதன்முறையாக கூறின.

கலிலியோ கண்டுபிடிப்புகள் கிறிஸ்தவ மத நம்பிக்கைக்கு எதிரானது என்று கூறி இவருக்கு சிறைத் தண்டனை வழங்கப்பட்டது. இவரது கருத்துகளைத் திரும்பப் பெறவும் வலியுறுத்தப்பட்டது. நீண்டகாலம் இவர் வீட்டுச் சிறையில் வைக்கப்பட்டதாகவும், கல்லால் அடித்து, தீவைத்துக் கொல்லப்பட்டதாகவும் கூறப்பட்டது.
நவீன வானியல் ஆய்வுகளின் தந்தை, நவீன இயற்பியலின் தந்தை, அறிவியலின் தந்தை என்றெல்லாம் போற்றப்படும் கலிலியோ 78 வயதில் மறைந்தார். கலிலியோ இறந்து 350 ஆண்டுகளுக்குப் பிறகு, அவரை தண்டித்தது தவறு என்று 1992-ல் போப் மன்னிப்பு கோரினார்.
அனஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள் பேரீச்ச மரங்களுக்கு மகரந்தச் சேர்க்கை செய்துகொண்டிருந்த மக்களைக் கடந்து சென்றார்கள்.
அப்போது, "நீங்கள் (இவ்வாறு) செய்யாமலிருந்தால் நன்றாயிருக்குமே!" என்று சொன்னார்கள். ஆகவே, (அவர்கள் மகரந்தச் சேர்க்கை செய்வதை விட்டுவிட்டனர். அதனால் அந்த மகசூலில்) நன்றாகக் கனியாத தாழ்ந்த ரகக் காய்களே காய்த்தன.
அப்போது அவர்களைக் கடந்து நபி (ஸல்) அவர்கள் சென்றபோது, "உங்கள் (பேரீச்ச) மரங்களுக்கு என்ன நேர்ந்தது?"என்று கேட்டார்கள்.
மக்கள், "நீங்கள் இப்படி இப்படிச் சொன்னீர்கள். (அதனால் நாங்கள் மகரந்தச் சேர்க்கை செய்வதை விட்டுவிட்டோம். அதனால் இந்த நிலை ஏற்பட்டுவிட்டது)" என்று கூறினர்.
நபி (ஸல்) அவர்கள், "உங்கள் உலக விவகாரங்கள் பற்றி (என்னைவிட) நீங்களே நன்கு அறிந்தவர்கள்" என்று சொன்னார்கள்.
ஸஹீஹ் முஸ்லிம் : 4713.
"மகரந்தச் சேர்க்கை செய்வதால் பலன் ஏற்படுமாயின் அவர்கள் அதை தொடர்ந்து செய்யட்டும் நான் யூகத்தின் பேரில்தான் அதைச் சொன்னேன். அது ஓர் அபிப்ராயமே இது போன்ற செயல்களில் என்னுடைய அபிப்பிராயத்தை ஏற்று நடக்க வேண்டும் என்பது இல்லை.
..ஆனால் நான் இறைவனை பற்றி சொல்வதை ஏற்று செயல்பட வேண்டும் என்பது கட்டாயம். இறைவனைப் பற்றி சொல்லும் போது நான் யதார்த்தமல்லாதவற்றைக் கூற மாட்டேன்" என்று விளக்கினார்கள்
இந்த நபிமொழியின்படி இஸ்லாம் மத நடவடிக்கைகளை அறிவியல் ஆய்வில் நின்றும் வேறுபடுத்தியுள்ளது என்பது தெரிகிறது. மத நடவடிக்கைகளைப் பொருத்த மட்டில் இறை காட்டிய வழியை முற்றிலுமாகக் கடைப்பிடித்தாக வேண்டும்.

ஆனால், அறிவியல் துறையில் மனித அனுபவங்களுக்கு ஏற்பச் செயல்பட வேண்டும் என்று கூறும் இஸ்லாம் அறிவியல் துறைச் சரித்திரத்தில் ஒரு மகத்தான புரட்சியைச் சாத்தியமாக்கியது இந்தப் பாகுபாடுதான்

## அறிவு என்னும் அற்புதம் 21

( கணித மேதை அல் குவரிஸ்மி ( கிபி 780 - 850 )




அபு ஜாபர் முஹம்மத் இப்னு மூஸா என்ற இயற்பெயர் கொண்ட அல் குவரிஸ்மி பக்தாதின் பக்கத்தில், யூப்ரடீஸ், டைகிரீஸ் நதிகளுக்கிடையே அமைந்த குத்ரு புல்லி என்ற மாவட்டத்தில் வாழ்ந்ததாக வரலாற்றாசிரியர் அல்தபரீ கூறுகிறார்.
அவரது மூதாதையர்கள் குவாரிஸ்மிலிருந்து வந்தவர்கள். அவர்கள் ஜோராஸ்டிர மதத்தை (நெருப்பு வணங்கிகள்) பின்பற்றியவர்கள்.
அவரது வாழ்க்கையைப் பற்றி மிகக் குறைவான தகவல்களே கிடைத்துள்ளன. குவாரிஸ்மி ஏழ்மைமிக்க குடும்பத்திலிருந்து வந்தாலும் அவரது அர்ப்பணிப்பும், அயராத உழைப்பும், முஸ்லிம் உலகமே அவரைக் குறித்து பெருமைப்படும் அளவுக்கு உயர்ந்த சிகரத்தை அடையக் காரணமாயின. மத்திய காலத்தில் எந்த ஒரு கணித மேதையும் எட்ட முடியாத சிகரத்தை அல்குவாரிஸ்மி தொட்டிருந்தார்.
கலீஃபா மாமூன் அவர்களின் ஆட்சிகாலத்தில் (கி.பி 825) அவர் பக்தாத் சென்றார். அந்த கால கட்டத்தில் அங்கு பேராற்றல் உள்ள பல அறிஞர்கள் ஆராய்ச்சியில் மும்முரமாக ஈடுபட்டிருந்தனர். அங்கிருந்த 'பைதுல் ஹிக்மா' (அறிவின் இல்லம்) அறிவின் இல்லத் பல்கலைக்கழகத்தின் கல்விச் சூழல் அவரைப் பெரிதும் கவர்ந்தது.
ஆகவே அவர் கணிதவியலில் ஆழமான ஆய்வுகளை அங்கே மேற்கொண்டு அதன் விளைவாக, தான் கண்டறிந்த நுணுக்கமான கணிதக் கோட்பாடுகளை அங்கிருந்த அறிவியல் கழகத்தில் சமர்ப்பித்தார். இதை இக்காலத்தில் முனைவர் பட்ட ஆய்வுக்கு (பி.எச்.டி.) பல்கலைக்கழகங்களில் சமர்ப்பிக்கப்படும் ஆய்வேட்டிற்கு சமமாகச் சொல்லலாம்.

பல்கலைக்கழகத்தில் இவர் தனது கணித ஆய்வுகளைச் சமர்ப்பித்ததும் அந்தத் துறைசார்ந்த நிபுணர்கள் அவரிடம் வினாக் கணைகளைத் தொடுத்தனர். அவர்கள் திருப்தியுறும் விதமாக அவர் பதிலளித்தார். அதைத் தொடர்ந்து அவர் 'பைதுல் ஹிக்மாவின் உறுப்பினராக நியமிக்கப்பட்டார்.
அல்ஜீப்ரா என்று அறியப்பட்ட கனிதக் கோட்பாட்டைப் பற்றி முதன் முதலில் ஆய்வுக் கட்டுரை எழுதிய முஸ்லிம் அறிஞர் இவர்தான். அவரது 'அல்ஜபர் வல்முகாபலா' - 'அல் ஜீப்ரா' எனும் நூல் கணிதவியலுக்கு மிக முக்கிய பங்களிப்பாகும். அந்த நூலின் தலைப்பே 'அல்ஜீப்ரா' என்ற சொல்லை உலகுக்குத் தந்தது.அவரால் அறிமுகப்படுத்தப்பட்ட சில வழிமுறைகள் இன்றும் உலகெங்கும் உள்ள ஒவ்வொரு பள்ளியிலும் பயிற்றுவிக்கப்படுகிறன.

அல்குவாரிஸ்மியும், அவரது சகாக்களும் பக்தாதில் உள்ள அறிவின் இல்லத்தில்' ஆராய்ச்சியாளராக இருந்தார்கள். அங்கு அவர்களுக்குரிய கடமை என்னவெனில், கிரேக்க விஞ்ஞான பிரதிகளை மொழியாக்கம் செய்வதில் பங்கு கொள்ளுதல், அத்தோடு அங்கு அவர்கள் அட்சர கணிதம், ஷேத்திர கணிதம், வானியல் ஆகியவற்றைப் படிப்பதுடன், அவற்றைப் பற்றியும் எழுதினர்.
உண்மையாக அல்குவாரிஸ்மி அரசு ஆதரவுடன்தான் பணி செய்தார். பரவலாக அறியப்பட்ட அவரது விண்ணியல் கலை வரிசைப்பட்டியல் ஜிஜ்சை (சமஸ்கிருதத்தில் ஜெய்ஷா ) அல்ஃபஜாரியின் கண்டுபிடிப்பின் அடிப்படையில், இந்திய கிரேக்க வானியல்கலை அமைப்போடு இணைந்து அதே நேரத்தில் தனது சொந்த பங்களிப்பையும் தந்து உருவாக்கினார்.
பூமியின் நிலத்தளவை, கணக்கியல் (Geodetic) நடவடிக்கைகளில் பங்கு கொண்டவர்கள், மூஸா இப்னு ஷாகிரினின் மகன்களும் அல்குவாரிஸ்மியுமாகும். அவர் யூத காலண்டர் பற்றியும் ஒரு நூல் எழுதினார்.
இந்த காலகட்டத்தில் ஐரோப்பாவில் ரோம எண்களே புழக்கத்தில் இருந்தன. எண் குறிப்பை நிலைப்படுத்தும் முக்கியமான முறையை இந்தியர்கள்தான் கண்டுபிடித்தனர்.
அதாவது ஒரு தனிப்பட்ட எண், ஒன்று, பத்து, நூறு, ஆயிரம் போன்ற வித்தியாசமான மதிப்பை வெளிப்படுத்த அந்த எண்ணுக்கு அடுத்து ஜீரோ என்ற '0' பூஜ்யத்தை இணைத்தால் 10, 100, 1000 போன்று மேலும் இலட்சம், கோடி வரை

மற்றும் முடிவற்ற எந்த எண்ணிக்கையையும் இலகுவில் எழுதிவிட முடியும். இந்த அரபு எண்களை அறிமுகப்படுத்தியதில் பெரும் பொறுப்பெடுத்துக் கொண்டது அல்குவாரிஸ்மி நூலே.

இதில் கவர்ச்சியூட்டும் செய்தி என்னவெனில், முஸ்லிம் அறிஞர்கள் மிகவும் கண்ணியமிக்கவர்களாக இருந்துள்ளார்கள். தசாம்ச முறையை இந்தியர்கள்தான் கண்டு பிடித்தனர். அரபு அறிஞர்கள் அவர்களிடமிருந்து கற்று உலகெங்கும் அதைப் பரப்பினார்கள். ஆயினும் அதன் முழுப் புகழனைத்தையும் இந்தியாவுக்கே அர்ப்பணிக்கும் விதமாக 'இல்ம் ஹிந்ஸா' (இந்திய தசாம்ச அறிவு) எனப் பெயரிட்டார்கள்!
(இந்த தசாம்ச - ஜீரோ - முறை இந்தியாவில் கண்டுபிடிக்கப் பட்டாலும். அங்கு அது உடன் ஏற்றுக்கொள்ளப்படவில்லை. பின்பு அது பக்தாதில் உள்ள ஆட்சியாளர்களால் ஆதரிக்கப்பட்டு ,பிறகு ஸ்பெயினில் இஸ்லாமிய ஆட்சியாளர்கள் மூலம் ஐரோப்பா எங்கும் பரப்பப்பட்டது. அதன்பிறகே இந்தியர்கள் அதைத் தங்களின் புழக்கத்தில்கொண்டு வந்தார்கள்.)
பிற்காலத்தில் கணித விற்பன்னர்களில் குவாரிஸ்மியின் செல்வாக்கால் ஈர்க்கப்பட்டவர் ஓமர் கைய்யாம் ஆகும்!
12ஆம் நூற்றாண்டின் ஆரம்பத்தில் அல்குவாரிஸ்மியின் பல நூல்கள் இலத்தீன் மொழியில் மொழிபெயர்க்கப்பட்டன.

உண்மையில், கணிதத்துறை பற்றி அவர் எழுதிய அவரது நூல், கிதாபுல் - ஜம்ஆ -வல்தஃப்ரீ பில் ஹிஸாப் அல் ஹிந்தி என்ற அவர் அரபியில் எழுதிய நூல் தொலைந்துவிட்டது. ஆயினும் அதன் இலத்தீன் மொழிபெயர்ப்பு இன்றும் வாழ்கிறது.
அட்சர கணிதத்தைப் பற்றி (அல்ஜீப்ரா) அவர் எழுதிய நூலும் இலத்தீன் மொழியில் மொழிபெயர்க்கப்பட்டுள்ளது. இத்தகைய மொழி பெயர்ப்புக்களின் காரணமாகவே, 'அதுவரை முற்றிலும் அறியப் படாத இந்த புதிய அறிவியல் மேற்குலகிற்கு அறிமுகப்படுத்தப் பட்டது.
அவரது விண்ணியல் அட்டவணைகளும் பல ஐரோப்பிய மொழிகளில் மொழிபெயர்க்கப்பட்டுள்ளன. பிறகு அவை சீன மொழியிலும் மொழிபெயர்க்கப்பட்டன!
#அல்_குவாரிஸ்மி பற்றி மேலும் சில தகவல்கள் :
ஒன்பதாம் நூற்றாண்டின் முதல் பாதியில் வாழ்ந்த இந்த அறிஞர் #அல்ஜிப்ராவின்_தந்தை என அறியப்படுபவர். சந்திரனில் ஒரு பள்ளத்தாக்கு இவர் பெயரால் அழைக்கப்படுகிறது.அவர் எழுதிய பல புத்தகங்களில் மிகவும் புகழ்பெற்றவை இரண்டு...
முதலாவது :
#இந்திய_எண்களை_கொண்டு_கணக்கு இந்தப் புத்தகத்தின் மூலமாகத் தான் இப்போது அரேபிய எண்கள் என அழைக்கப்படும் இந்தியாவில் பிறந்த எண்கள் உலகம் முழுவதும் அறியப்பட்டன...
இரண்டாவது :
#ஸிஜ்_அல்_ஸிந்த்_ஹிந்த்’
என்று அறியப்படும் வானவியல் அட்டவணை.
சூரியன், சந்திரன் மற்றும் அவரது காலத்தில் அறியப்பட்டிருந்த ஐந்து கிரகங்களின் பாதைகளின் அட்டவணை. இவருக்கு முன்னாலேயே எட்டாவது நூற்றாண்டில் #பிரம்ம_குப்தரின் - #பிரம்ம_சித்தாந்தம் என்ற வானவியல் நூல் #அல்ஃபசாரி என்பவரால் மொழிபெயர்க்கப்பட்டுவிட்டது. ஆனால் இவரது அட்டவணை தான் அரேபியர்கள் தாங்களாகத் தயாரித்த முதல் அட்டவணை...
குவாரிஸ்மி வானவியல், கணிதத்தோடு நின்றுவிட வில்லை.
#உலகத்தின்_வடிவம்’ என்ற பூகோளப் புத்தகத்தையும் எழுதினார்.
இரண்டாம் நூற்றாண்டில் #அலெக்ஸாண்டிரியாவில் வாழ்ந்த #தாலமி கிரேக்க மொழியில் எழுதிய #பூகோளம்’ என்ற புகழ்பெற்ற புத்தகத்தைத் தழுவி எழுதிய அந்தப் புத்தகம், உலகத்தின் இரண்டாயிரத்துக்கும் மேற்பட்ட நகரங்களைப் பற்றிப் பேசுகிறது...

## அறிவு என்னும் அற்புதம் 22

( விண்ணியல் அறிஞர் அல்ஃபர்கானி (கிபி 860)



அபு அப்பாஸ் அஹமது இப்னு முஹம்மத் இப்னு காதிர் அல் ஃபர்கானி, ஃபர்கானாவில் பிறந்தார். அவர் தனது பணிகளை கலீஃபா மாமூன் அரசவையில் தொடங்கி பின் வந்த நான்கு கலீஃபாக்கள் அவைகளில் நிறைவு செய்தார்.

அல்ஃபர்கானி, என்றும் நினைவில் நிற்கக்கூடிய 'வானியலின்
அடிப்படைகள்' என்ற நூலை எழுதினார். அந்த நூல் இலத்தீன் மொழியில் மொழிபெயர்க்கப்பட்டு, ஐரோப்பிய விண்ணியல் ஆய்வின்மீது மகத்தான செல்வாக்கை உருவாக்கியது.
அல்ஃபர்கானி பூமியின் சுற்றளவிலும், (6500 மைல்கள் என்பதிலும்) மற்றும் கிரகங்களின் சுற்றளவிலும் அவர் பிடிவாதமாக இருந்தார்.
உண்மையில் எல்லா முஸ்லிம் அறிவியல் அறிஞர்களைப் போலவே அல்ஃபர்கானியும் சகல கலா விற்பன்னராக திகழ்ந்தார். அவரது செயற்திறன்களில் பொறியியலும் (என்ஜீனியரிங்) அடங்கும்.
கலீஃபா முத்தவக்கில் ஆட்சி காலத்தில், உயர்ந்த, புகழ்பெற்ற 'நைலோ மீட்டரை' (நைல் நதியின் எழுச்சியை, பொங்கு மட்டத்தை - காட்டும் ஒரு மகத்தான தூண்) ஃபுஸாத்தில் (பழைய கெய்ரோவில்) வடிவமைத்துக் கட்டும் பொறுப்பு அவரிடம் ஒப்படைக்கப்பட்டது. இந்தத் திட்டம் அல் ஃபர்கானியின் மரணத்திற்கு சற்று பின் 861ல் முழுமை பெற்றது.

கலீஃபா முத்தவக்கில் சமாரியாவிலிருந்து ஐந்து கிலோ மீட்டர் தூரத்தில் 'ஜபாரியா' என்ற பெயரில் புது நகர் ஒன்றை கிபி 858ல் உருவாக்க முனைந்தார்.
முதல் கட்டமாக ஜபாரியா ஏரியை வெட்டும் பணியை மூஸா இப்னு ஷாகிரின் என்பவரின் இரு மகன்களான, முஹம்மது மற்றும் அஹமதுவிடம் கலீஃபா முதவக்கில் பொறுப்பு கொடுத்தார்.
மேலும் இப்னு ஷாகிரின் மகன்கள் இருவரும் வேண்டுமென்றே சிறந்த பொறியாளரான சிந்த் இப்னு அலியை தொழில் ரீதியான பொறாமையின் காரணமாக அலட்சியப்படுத்தியதோடு., அவரை சமாராவிலுள்ள முதவக்கிலின் அரசவையிலிருந்து அப்புறப்படுத்தி, பக்தாதுக்குச் செல்ல வைத்தனர்.
பின் அந்தப் பணியை அல்ஃபர்கானியிடம் ஒப்படைத்தனர். அல் ஃபர்கானி அறிவியல் விஞ்ஞான கோட்பாட்டைச் சொல்லும் ஒரு தத்துவ வாதி, அவருக்கு அதில் உள்ள மகத்தான அறிவைப்போல, செயல்முறை பொறியியலில் அந்த அளவு பயிற்சியின்மையால் வெற்றிபெற முடியவில்லை.
அந்த ஏரிக்காக கால்வாய் தோண்டும் போது கால்வாயின் மற்ற பகுதியைவிட அதன் தொடக்கத்தில் அதிக ஆழமாகத் தோண்டிவிட்டார். அதனால் சைகிரீங் நதியில் வெள்ளப்பெருக்கு ஏற்பட்ட காலத்தைத் தவிர மற்ற காலங்களில் அந்தக் கால்வாயில் தண்ணீர் ஓடுவதில்லை.

அதனால் அந்த இரண்டு சகோதரர்களையும் கலீஃபா முத்தவக்கில் கடுமையாகத் தண்டிக்கப்பட இருந்தார். ஆனால் சிந்த் இப்னு அலி, அல்ஃபர்கானின் கணக்கீட்டின் நடைமுறைத் தவறுகளைச் சரி செய்து, அல்ஃபர்கானின் வேண்டுகோளுக் கிணங்க அவர் மீது இரக்கம் கொண்டு அந்தப் பணியை சிந்த் இப்னு அலி செய்து முடிக்க தவறு செய்த சகோதரர்கள் இருவரும் விடுவிக்கப்பட்டனர்.

அறிவு என்னும் அற்புதம் 23
( இருண்ட காலத்தில் இஸ்லாமிய பேரொளி )



சமகால உலகம் அறிவியல் கண்டுபிடிப்புகளிலும் விஞ்ஞான தொழில்நுட்பங்களிலும் அவை அனைத்துக்குமான அஸ்திவாரம் அல்குர்ஆனின் மூலமாகவே இடப்பட்டிருக்க வேண்டும்.
ஏனெனில் அல்குர்ஆன் ஒரு பிரபஞ்ச நூல் மட்டுமன்றி அறிவியல் கண்டுபிடிப்பு மற்றும் வளர்ச்சிக்கான பாடத்திட்டம் அனைத்துமே குர்ஆனில் குறிப்பிட்டே இருக்கிறது
இதனாலேயே "அல்குர்ஆன் பேசும் பிரபஞ்சம். பிரபஞ்சம் மௌனக் குர்ஆன்" என்ற இக்கருத்தை உஸ்தாத் மன்சூர் தன்னுடைய அல்குர்ஆன் விளக்க உரையில் குறிப்பிட்டுள்ளார்.
ஐரோப்பிய வரலாறில் கி.பி. 6-ஆம் நூற்றாண்டு முதல் 10-ஆம் நூற்றாண்டு வரை உள்ள காலம் 'இருண்ட காலம்' என்றழைக்கப்படுகிறது.

நாகரிகத்திலிருந்து வெகு தொலைவில் ஐரோப்பா இருந்த காலக் கட்டம் அது. "ஐரோப்பாவில் வன்முறை நிறைந்து அறிவொளி இருண்டு இருந்த ஒரு காலம் அது''. (என்சைக்ளோ பீடியா 1984)
"இருண்ட காலம்" எனும் சொற்றொடர் ஐரோப்பாவிற்கே பொருந்தும்; ஐரோப்பா 'இருண்ட கால'த்தின் காரிருளில் மூழ்கி இருந்தபோது, இஸ்லாமிய உலகில் நாகரிகம் பேரொளி வீசிக் கொண்டிருந்தது.
மேற்கத்தியத் தத்துவத்தின் வரலாறு (HISTORY OF WESTERN PHILOSOPHY) எனும் தம் நூலில் பெர்ட்ராண்ட் ரஸ்ஸல், "இந்தியா முதல் ஸ்பெயின் வரை ஒளிமிக்க இஸ்லாமிய நாகரிகம் பரவியது" என்று எழுதுகிறார்.
தொலை நோக்கு கருவியைக் (TELES COPE) கண்டுபிடித்து கலீலியோ என்றுதான் சாதாரணமாக நம்பப்படுகிறது. ஆனால் கலீலியோவுக்கு ஏறத்தாழ 700 ஆண்டுகளுக்கு முன்பே அபு இஸ்ஹாக் இப்னு ஜந்துப் என்பவர் வானவீதி ஆய்வில் ஈடுபட்டிருக்கிறார்.
தொலைவிலுள்ளவற்றை நோக்க இவர் சிலவிதிகளை வகுத்து, அவ்விதிகளை ஒட்டி ஒருவிதத் தொலை நோக்கும் கருவியை உருவாக்கி இருந்தார். இந்தக் கருவியை அடிப்படையாகக் கொண்டு அதில் சில மேம்பாடுகளைச் செய்தார் கலீலியோ.

கலீலியோவின் தொலை நோக்குக் கருவியை முன்னோடியாகக் கொண்டுதான், மிக நுணுக்கமான இன்றைய நவீன மின்சாரத் தொலை நோக்கும் கருவிகள் தயாரிக்கப் பட்டன. நவீன அறிவியலின் அடிப்படை ஆய்வுக்கு இதுவே வித்திட்டது
ஆனால், பண்டைக் காலங்களில் இத்தகைய நடவடிக்கைகளுக்குப் பலவிதமான மூட நம்பிக்கைகள் தடையாயிருந்தன. ஜாபிர் இப்னு ஹய்யான் (D. 817) என்பவர் கூர்நோக்கின் (ஆய்வின்) அத்தியாவசியத்தை உணர்ந்தவராகத் தாம் கண்டுபிடித்தவற்றை அறிவியல் ஆய்விற்குப் பயன்படுத்தினார்.
ஆய்வின் விவரங்களை மொழியாக்கம் செய்து ஐரோப்பாவிற்கு அனுப்பி வைத்தார். இந்த வழியில் ஆய்வு தொடர்ந்து மேற்கொள்ளப்பட்டு, இன்றைய அறிவியல் பரிசோதனைக்குத் தகுந்த அடித்தளம் அமைக்கப்பட்டது.
மனித வரலாற்றில் நிலைம விதி (THEORY OF INCERTIA) பற்றி முதன் முதலாக எடுத்துரைத்தவர் அலி ஹஸன் இப்னு அல் ஹய்ஷவும் (D. 1021) ஆவார்.
இந்தக் கண்டுபிடிப்பைப் பற்றி அறிந்த ஐரோப்பிய வல்லுநர்கள் அதைப் பற்றி அறிய மேலும் நுண்ணிய ஆய்வை மேற்கொண்டனர். வெகு காலத்திற்குப்பின் அதுவே நியூட்டன் விதிகள் (NEWTON'S LAV OF MOTION) என முறைப்படுத்தப்பட்டது.
புறவிசை (EXTERNAL FORCE) ஒன்று செயற்பட்டு மாற்றும்வரை எந்த ஒரு பொருளும் தனது ஓய்வு நிலையையோ அல்லது நேர்க்கோட்டில் அமைந்த சீரான இயக்க நிலையையோ மாற்றி கொள்ளாமல் தொடர்ந்து அதே நிலையில் இருக்கும் என்பதுதான் நியூட்டன் விதி.

அறிவு என்னும் அற்புதம் 24
( பூவுலகின் வயது )




மனித வர்க்கம் புவியில் தோன்றிய காலத்தைப்பற்றி அறிவியல் வல்லுநர்களால் ஒருமித்த கருத்துக்கு வர முடியவில்லை. கிறிஸ்துவுக்கு 10ஆயிரம் ஆண்டுகளுக்கு முந்தைய காலத்தைச் சேர்ந்தது என அவர்கள் கருதும் ஒரு மனித எலும்புக் கூட்டைக் கண்டெடுத்துள்ள மையால் இந்தக் காரியத்தைப் பற்றிப் பைபிளில் கூறப்படுவதை அவர்கள் ஏற்றுக் கொள்ளவில்லை.
பைபிளில் ஆதி ஆகமத்தில் (GEN- ESIS) கூறப்பட்டு, மனித வர்க்கத்தின் தோற்றம் பற்றிய நாளின் அடிப்படை யில், ஆதம், கிறிஸ்துவுக்கு 3700 (மூவாயிரத்து எழுநூறு) ஆண்டுகளுக்கு முன் தோன்றியதாகக் கணிக்கபபடுகிறது. பழைய ஏற்பாட்டைப் (OLD TESTAMENT) பின்பற்றிக் கணிக்கப்பட்ட யூத நாள்காட்டி (JEWISH CALENDER) இந்தத் தேதியை மிகத் துல்லியமாக அறிவிக்கின்றது. இதன்படி கிறிஸ்துவ ஆண்டு 1975இன் பின்பாதியில் உலகம் தோன்றி 5736 ஆண்டுகள் ஆகின்றன. நவீன அறிவியல்படி இஃது ஏற்றுத் தக்கதன்று.

பைபிளின் கூற்றுப்பிரகாரம், கிறிஸ்துவர்கள், புவியின் வயது ஒரு சில ஆயிரம் ஆண்டுகள்தாம் ஆகியுள்ளதாகக் கருதுகிறார்கள். ஜேம்ஸ் ஹட்டன் எனும் பிரபலமான வல்லுநர் மேற்கொண்ட ஆய்வுக்குப் பின்னர்தான் அறிவியல் ரீதியாக இந்தக் கணிப்பு தவறு ஒரு சில என்பது வெளியாயிற்று.
புவி மற்றும் அதிலுள்ள பாறைகளின் அமைப்பையும்
ஆய்வதற்காகத் தம் வாணாள் முழுவதும் பாடுபட்டார் இவர்.
இவருடைய ஆய்வின் விளைவாக, புவி இன்றைய அதன் வடிவைப்பெற பல மில்லியன் ஆண்டுகள் கழிந்திருக்க வேண்டும் என்பது புலனாயிற்று.
சார்லஸ் லையல் (CHARLES LYE11) என்பவர் இதற்குப்பின் நடத்திய ஆய்வு ஹட்டனின் முடிவை உறுதி செய்தது. இவருடைய பிரசித்தி பெற்ற நூலாகிய புவியியல் கோட்பாடுகளின் (PRINCIPLES OF GEOLOGY) முதல் பகுதி 1830-இல் பிரசுரமாகியது. இந்த நூல் வெளியான பின்னர்தான்

பைபிளின் காலக் கணிப்பை, முக்கியம் வாய்ந்த விவாதங்களில் மேற்கோள் காட்டுவது நிறுத்தப்பட்டது.
“உண்மையில் லையல்லினுடைய நூற்கள்தாம், பைபிளின் கூற்றுகள் சில அம்சங்களிலாவது ஏதோ ஒரு வகையில் தவறாக இருக்கக்கூடும் என்று உலகத்தை நம்ப வைத்தது. அது இதுகாறும் நினைத்துக் கூடப் பார்க்க முடியாத ஒரு கருத்து” என்று ஃபிரட் ஹோய்ல் (FRED HOYLE) என்பவர், அறிவார்ந்த பிரபஞ்சம் (THE INTELLIGENT எனும் தம் நூலில் எழுதுகிறார். UNIVERSE)
பைபிளில் காணப்படும் இத்தகைய கருத்துகள் ஐரோப்பாவில் அறிவியல் வளர்ச்சிக்கு பெரும் முட்டுக்கட்டையாகத் திகழ்ந்தன. கிறிஸ்துவ ஆலயக் குழுவின் அங்கீகாரம் பெறாமல் யாரேனும் ஏதேனும் தத்துவத்தை வெளியிட முன்வந்தால், அது புனிதத்துவத்தைப் பாழடிக்கின்ற தத்துவம் என்று முடிவு கட்டித் தண்டிக்கப்படுவார்.
ஆனால், இஸ்லாமில் இத்தகைய யதார்த்தமில்லாத கருத்துகள் தலை தூக்கியதே இல்லை. ஆகவேதான், ஸ்பெயினில் அறிவியல் ஆய்வு தொடங்கியபோது மார்க்க ரீதியாக எவ்வித மறுப்பும் எதிர்ப்பும் தோன்றவில்லை.
பூமியின் வயது எவ்வளவு? என்பது பற்றி பிரிட்டானிக்கா :-
பூமியின் வயது இன்னும் ஒரு திறந்த கேள்வி-சரி, நீங்கள் யாருடன் பேசுகிறீர்கள் என்பதைப் பொறுத்து. யூத மற்றும் கிரிஸ்துவர் மரபுகளில், மத அறிஞர்கள் பைபிள் , உண்மையில் விளக்கம், உலகம் தோராயமாக 6,000 ஆண்டுகள் பழமையானது என்று கூறுகிறது என்று தெரிவிக்கின்றனர் -
இது இளம்-பூமி படைப்பாளிகளால் அடிக்கடி மேற்கோள் காட்டப்படுகிறது . பிற மத மரபுகளிலிருந்து விடையைக் கிண்டல் செய்வது சற்று கடினமானது. உதாரணமாக, முஸ்லீம் அறிஞர்கள் குர்ஆன் படைப்பின் ஒவ்வொரு ஆறு

நாட்களும் பைபிளின் புத்தகமான ஆதியாகமத்தில் வழங்கப்படுவதைக் குறிப்பிடுகிறது.1,000 மற்றும் 50,000 ஆண்டுகளுக்கு இடையில் எங்கோ நீடித்தது,
ஆனால் இஸ்லாமிய பாரம்பரியத்தில் பூமியின் வயது பற்றி வேறு சில குறிப்புகள் உள்ளன. சில இந்து நூல்களின்படி, பூமி 150 டிரில்லியன் (ஒரு T உடன் ) ஆண்டுகளுக்கும் மேலாக உள்ளது!
பூமியின் பழமையான பாறைகள் மற்றும் தாதுக்களின் தோராயமான வயதை தீர்மானிக்க விஞ்ஞானிகள் கதிரியக்க டேட்டிங் நுட்பங்களைப் பயன்படுத்தியுள்ளனர் . பூமி 4.4 பில்லியன் ஆண்டுகளுக்கு முன்பு உருவானது என்று அவர்கள் மதிப்பிடுகின்றனர் .
கிரகத்தின் வெளிப்புற மேலோடு எப்போது உருவாகத் தொடங்கியது என்பது யாருக்கும் தெரியாது என்றாலும், சில விஞ்ஞானிகள் சுமார் 4.4 பில்லியன் ஆண்டுகளுக்கு முந்தைய சில சிர்கான் தானியங்களின் இருப்பு நிலையான கண்டங்கள் , திரவ நீர் மற்றும் மேற்பரப்பு வெப்பநிலை இருப்பதை உறுதிப்படுத்துவதாக நம்புகிறார்கள்.
100 °C (212 °F) க்கும் குறைவாக புவியியலாளர்கள் ஒரு முறைசாரா நேர இடைவெளியை உருவாக்கியுள்ளனர், ஹேடியன் ஈயான், இது சுமார் 4.6 பில்லியனிலிருந்து சுமார் 4 பில்லியன் ஆண்டுகளுக்கு முன்பு வரை நீண்டுள்ளது, இது ஆரம்பகால சூரிய மண்டலத்தின் வாயுக்கள் , தூசி, பாறைகள் மற்றும் பிற குப்பைகள் ஆகியவற்றின் மூலம் பூமி உருவான காலத்தை விவரிக்கிறது ."

## அறிவு என்னும் அற்புதம் 25

( மதமும், அறிவியலும் )




அறிவும் அறிவியலும் இன்றி நாகரிகம் தோன்ற முடியாது
என்பது ஒரு பேருண்மையாகும். ஆயினும் மதம் அறிவியலுக்கு முரணானது, அது அறிவியலை ஆட்சேபிக்கின்றது என்ற வாதம் பிழையானதாகும்.
மதம் அறிவியலுக்கு எதிரானது என்ற கருத்து ஐரோப்பிய வரலாற்றில் நடைபெற்ற சில நிகழ்வுகளை அடிப்படையாக வைத்து எழுந்தவோர் ஐரோப்பிய நோக்காகும். மதத்திற்கும் அறிவியலுக்கும் இடையில் உலகில் வேறு எங்கும் போராட்டங்கள் நிகழவில்லை. அது ஐரோப்பாவிலேயே நிகழ்ந்தது.
மனித வரலாற்றில் மதம் அறிவு வளர்ச்சிக்கு தடையாக எங்கும் இருந்ததில்லை. ஐரோப்பாவில் தான் கிறிஸ்தவக் கோயில் அறிவு ஆராய்ச்சிக்கும், சுதந்திரமான சிந்தனைக்கும் எதிராக வரலாற்றின் மத்திய காலப்பிரிவில் செயற்பட்டது.
ஆனால் இஸ்லாத்தைப் பொறுத்த வரையில், அது அறிவு ஆராய்ச்சியை ஊக்குவித்த மார்க்கம் மட்டுமல்ல, அறிவை அடிப்படையாகக் கொண்டு எழுந்த மார்க்கமுமாகும்.
அது அறிவு ஆராய்ச்சிக்கு கொடுக்கும் முக்கியத்துவம் அதிசயிக்கத்தக்கதாகும். கல்வியினதும் அதனைக் கற்பவனதும், அதனைக் கற்பிப்பவனதும் சிறப்புகளைப் பற்றி இஸ்லாம் விரிவாகப் பேசியுள்ளது. .
அல்குர்ஆனை ஆராய்ந்து நோக்குகையில் அது அறிவுத்துறைக்கு கொடுத்திருக்கும அழுத்தத்தையும் முக்கியத்துவத்தையும் அறிந்து கொள்ள முடியும்.

'அறிவு' எனும் பொருள்படும் 'இல்ம்' எனும் பதம் அல்குர்ஆனில் என்பது இடங்களில் இடம்பெற்றிருக்கின்றது. இப்பதத்திலிருந்து பிறந்த சொற்களோ அல்குர்ஆனில் பல நூறு தடவைகள் வந்துள்ளன.
அறிவு எனும் கருத்தை கொடுக்கும் 'அல்-அல்பாப்' எனும் சொல் அல்குர்ஆனில் 16 தடவைகள் இடம் பெற்றிருக்கின்றது. குறித்த பொருளைத் தரும் 'அந்நுஹா' எனும் சொல் இரு தடவைகள் இடம்பெற்று இருக்கின்றது.
அல்குர்ஆனில் 'அல்-அகல்' எனும் பதம் அறிவு என்னும் பொருளைத்தரும். அதில் இடம்பெற்றுள்ள இந்த வினையடியிலிருந்து பிறந்த சொற்களின் எண்ணிக்கை 49 ஆகும்.
சிந்தனை என்ற கருத்தில் பயன்படுத்தப்படுதம் 'அல்-பிக்ர்' என்ற சொல்லிலிருந்து பிறந்த 18 சொற்களும் அல்குர்ஆனில் இடம் பெற்றுள்ளன. 'அல்-பிக்ஹ்' விளக்கம் என்ற
பதத்திலிருந்து பிறந்த 21 சொற்களும் காணப்படுகின்றன.
அல்-ஹிக்மா' (ஞானம்) என்ற பதம் 20 தடவைகள் வந்துள்ளதுடன், ஆதாரம் எனும் பொருள்படும் 'அல்-புர்ஹான்' என்ற சொல் 7 தடவைகளும் அல்குர்ஆனில்

குறிப்பிடப்பட்டுள்ளன. இவற்றுடன் ஆராய்தல், நோக்குதல், சிந்தித்தல் போன்ற கருத்துக்களைத் தரும் பல சொற்களும் அல்குர்ஆனில் ஆங்காங்கே இடம் பெற்றுள்ளன.
இவை அனைத்துக்கும் மேலாக அல்குர்ஆனில் ஆரம்பமாக இறங்கிய வசனங்களோ, அறிவைப்பற்றியும் அறிவின் அடிப்படைகளகத் திகழும் வாசிப்பு, எழுத்து, எழுதுகோல் பற்றியும் பேசுவதை பார்க்கின்றோம்.
ஸூரத்துல் அலக்கின் இவ்வாரம்ப வசனங்களைத் தொடர்ந்து இறங்கிய ஸூறா 'அல்கலமின்' ஆரம்ப வசனமும் அறிவின் முக்கியத்துவத்தனை வலியுறுத்துவதாகவே அமைந்துள்ளது.
இது போன்று ஆராயுமாறும், சிந்திக்குமாறும மனிதர்களைத் தூண்டுகின்ற சுமார் 35 வசனங்கள் அல்குர்ஆனில் காணப்படுகின்றன. கல்வியைத் தேடி உலகில் பயணம் செய்யுமாறு ஆர்வமூட்டும் சுமார் 50 வசனங்களை அல்குர்ஆனில் காணமுடிகின்றது.

அல்குர்ஆனில் பிரபஞ்சம் தொடர்பாகவும் அறிவியல் அத்தாட்சிகள் தொடர்பாகவும் பேசுகின்ற சுமார் 750 திருவசனங்கள் காணப்படுகின்றன. அது மட்டுமா?
அல்குர்ஆனில் இயற்கை, விஞ்ஞானம், வானவியல், தாவரவியல், மிருகவியல், விவசாயம், மானிடவியல், மனோதத்துவம், மருத்துவம், சமூகவியல், வரலாறு, புவியியல் போன்ற கலைகள் தொடர்பான பல உண்மைகளும் அக்கலைகளுடன் தொடர்பான பல அடிப்படைகளும் குறிப்பிடப்பட்ட ள்ளன.
அல்குர்ஆன் அறிவின் அவசியத்தை எந்தளவு
வலியுறுத்துகின்றது எனில், "அறிஞர்களே அல்லாஹ்வை சரியாக அஞ்சுவார்கள்" எனக் கூறுகின்றது.
மேலும் அல்குர்ஆன் அறியாமையையும் மடமையையும் பற்றி கூறும்போது, "அது நரகத்தின் பாதை" என வர்ணிக்கின்றது. பார்க்க: அல் அஃராப்: 79.
பெரும்பாலான ஹதீஸ் கிரந்தங்களில் 'கிதாபுல் இல்ம் எனும் பெயரில் அறிவைப் பற்றிப் பேசும் ஹதீஸ்களைக் கொண்ட ஒரு தனியான அத்தியாயத்தைக் காண முடியும். அறிவுடன் தொடர்பான பல ஹதீஸ்கள் வேறு பல அத்தியாயங்களிலும் இடம் பெற்றுள்ளன. உதாரணமாக 'கிதாபுத்திப்பி' (மருத்துவம் பற்றியது) என்ற அத்தியாயத்தைக் குறிப்பிடலாம்.

நூற்றுக்கணக்கான ஹதீஸ் கிரந்தங்களில் ஒன்றான ஸஹீஹுல் புகாரியில் மாத்திரம் 'கிதாபுல் இல்ம்' எனும் அத்தியாயத்தில் 102 நபிமொழிகள் காணப்படுகின்றன.
அல்குர்ஆன் விஞ்ஞான, கைத்தொழில், தொழில்நுட்ப முன்னேற்றத்திற்கு ஆக்கமும்,ஊக்கமும் கொடுப்பதை காணமுடிகின்றது.
இன்றைய கைத்தொழில் முன்னேற்றத்துக்குப் பிரதான காரணமாக அமைந்துள்ள இரும்பைத் தலைப்பாகக் கொண்ட ஓர் அத்தியாயமே குர்ஆனில் இடம்பெற்றுள்ளது.
இவ்வத்தியாயம் இரும்பின் சிவில், இராணுவ பயன்பாடுகளைப் பற்றி பின்வருமாறு குறிப்பிடுகின்றது. பார்க்க குர்ஆன் (57:25)
மேலும் இறைத் தூதர்களில் பெரும்பாலானோரும பல்வேறு தொழில் முயற்சிகளில் ஈடுபட்டிருந்தனர் என்பதை வரலாறு உறுதி செய்கின்றது. உதாரணமாக, நபி நூஹ் (அலை) கப்பல் கட்டும் தொழிலை அறிந்து இருந்தார்கள்.
நபிமார்களான இப்றாஹீம் (அலை) , இஸ்மாயீல் (அலை) கட்டட நிர்மாணிகளாக விளங்கி கஃபாவைக் கட்டினார்கள்.
நபி தாவூத் (அலை) இரும்பை உருக்கி கவசங்கள் செய்யும் திறனைப் பெற்றிருந்தார்கள்.
நபி ஸுலைமான் (அலை) அவர்களோ ஜின்களின் உதவியுடன் அதிசயிக்கத்தக்க பல பணிகளை மேற்கொண்டமை பற்றி அல்குர்ஆன் விளக்குகின்றது..

பல திறன்களையும் அபார ஆற்றல்களையும் பெற்றிருந்த நபி ஸுலைமான் (அலை) அவற்றை வைத்து அத்துமீறலிலோ, அட்டகாசத்திலோ ஈடுபடவில்லை; பெருமையோ இறுமாப்போ கொள்ளவில்லை. மாறாக 'இது எனது இறைவன் எனக்களித்த அருளாகும்' என்று பணிவுடன் பகர்ந்தார்கள்.
துல்கர்ணைன் (அலை) அவர்கள் தனது அபார அறிவியல் ஆற்றலைப் பிரயோகித்து ஒரு பெரு மதிலைக் கட்டிய போது மக்கள் அதற்காக அவருக்கு சன்மானம் வழங்க முற்பட்ட போதும், மிகவும் அடக்கமாக 'இது எனது இறைவன் எனக்கு அளித்த அருளாகும். எனது இறைவனின் குறித்த வாக்களிக்கப்பட்ட நாள் வந்து விடும்போது இந்த மதில் தவிடு பொடியாகிவிடும்' என்றார்கள்.
'திட்டமிடல்' என்பது ஒரு பிரதான அறிவியல் அணுகுமுறை ஆகும். அல்குர்ஆன் நபி யூஸுப் (அலை) அவர்களின் பதினைந்தாண்டு பொருளாதாரத் திட்டத்தைப் பற்றிக் குறிப்பிடுகின்றது.
அத்திட்டத்தின் காரணமாக எவ்வாறு அன்று எகிப்தும் அதைச் சூழவிருந்த பிரதேசங்களும் பேரழிவிலிருந்தும், பெரும் பஞ்சத்திலிருந்தும் காப்பாற்றப்பட்டன என்பதைச் சுட்டிக்காட்டுகின்றது.
அறிவு ஆராய்ச்சிக்கும், அறிவியல் அணுகுமுறைக்கும் நபி முகம்மது (ஸல்) அவர்கள் முக்கியத்துவம் அளித்த பாங்கினை அன்னாரின் வாழ்க்கை முறையில் காணமுடிகின்றது.
நபி (ஸல்) அவர்களும் தனது பிரசார வாழ்க்கையில் எவ்வாறு நுணுக்கமான திட்டங்களைத்தீட்டி செயற்பட்டார்கள் என்பதைக் காண முடிகின்றது. முதலாம் ஹிஜ்ரத், இரண்டாம் ஹிஜ்ரத், யுத்தங்கள் முதலியன இதற்கு சிறந்த சான்றாதாரங்களாகம்.

'கணக்கெடுப்பு' என்பது மற்றுமோர் அறிவியல் அணுகுமுறையாகும். நபி (ஸல்) அவர்கள் மதீனாவுக்குச் சென்று சில நாட்களிலேயே அங்குள்ள முஸ்லிம்களின் ஜனத்தொகையை கணக்கெடுக்குமாறு பணித்தார்கள். அவர்களின் தொகை அப்போது 1500 ஆக இருந்தது. (புகாரி).
அடிப்படை இஸ்லாமிய நம்பிக்கைகள், விழுமியங்கள், பெறுமானங்கள், சட்ட திட்டங்கள் முதலானவற்றுடன் தொடர்பற்ற உலகாயத, தொழில்நுட்ப விவகாரங்களில் அந்நியரின் உதவியை நாடுதல், ஆலோசனைகளைப் பெறல் ஆகியன பிழையானவையல்ல என்பதையும் நபி (ஸல்) அவர்கள் தன் செயற்பாடுகள் மூலம் எடுத்துக்காட்டி யுள்ளார்கள்.
பாரசீகரின் வழிமுறையான யுத்தத்தின் போது அகழி வெட்டும் உத்தியை சல்மான் (றழி) அவர்கள் மூலம் அறிந்து, அஹ்ஸாப்' யுத்தத்தின் போது செயற்படுத்தியமை, குத்பாப் பிரசங்கம் நிகழ்த்துவதற்காக ஓர் உரோம தச்சன் செய்து கொடுத்த மிம்பரை பயன்படுத்தியமை முதலியன இதற்கான சில உதாரணங்களாகும்.
அல்குர்ஆனினதும், சுன்னாவினதும் இத்தகைய
போதனைகளாலும் வழி காட்டல்களாலும் உந்தப்பட்டே ஆரம்ப கால முஸ்லிம்கள் அறிவாராய்ச்சித் துறைக்கும், பல கண்டு பிடிப்புகளுக்கும் முன்னோடிகளாக அமைந்தனர். ஐரோப்பா இருளில் சூழ்ந்திருந்த மத்திய காலப் பிரிவில் இஸ்லாமிய உலகில் அறிவுத்தீபம் சுடர்விட்டுப் பிரகாசித்துக் கொண்டிருந்தது.
முஸ்லிம்கள் அறிவின் அனைத்துத் துறைகளுக்கும் மகத்தான பங்களிப்பைச் செய்து கலாநிலையங்கள், நூலகங்கள், ஆய்வு கூடங்கள், அவதான நிலையங்கள் என்பவற்றை கட்டியெழுப்பி உலகுக்கு அறிவொளி பரப்பினர்.
இத்தகைய ஈமானிய உள்ளம் படைத்தவர்களிடம் அறிவும். ஆராய்ச்சியும் இருக்கின்ற போதே உலகம், அறிவியலால் உன்னதமான பயனைப் பெற முடியும்; அறிவியல் ஆக்கத்திற்கும், மனித வாழ்வின் சுபீட்சத்திற்கும் வழிவகுக்க முடியும். அதற்காக சிந்திப்போம்; செயல்படுவோம்.

## சாதனைகளின் சரித்திரங்கள் 1

ஹாங்காங்கில் ஒரு கருத்தரங்கிற்கு கண்டிப்பாக அலைபேசிகளை அரங்குக்குள் அனுமதிக்கவில்லை வரவேற்பறையில் அவற்றை கண்டிப்பாக ஒப்படைத்துவிட்டு டோக்கன் பெற்றுக் கொள்ளச் சொன்னார்கள் . பலரும் மருகி மருகி நின்றார்கள். 'இதுபோன்ற நிகழ்ச்சிகளில் அலைபேசிகளை ஒலிக்காமல் பார்த்துக்கொள்ளுங்கள் என்று தானே சொல்வார்கள் இப்படி சொல்லாமல் கொள்ளாமல் அலைபேசிகளை வாங்கி வைத்துக்கொள்ளமாட்டார்கள்' என்ற வருத்தம். என்ன செய்வது.. கருத்தரங்கிற்கு வந்தாச்சு , சரி அலைபேசியை கொடுத்துவிட்டு அரங்கிற்குள் போனார்கள் .
அரங்கில் நடந்த கருத்தரங்கில் யாரும் எந்தக் கருத்துக்களையும் கேட்டபாடில்லை. அவர்கள் அத்தனை பேரின் முழு சிந்தனையும் வெளியே கொடுத்துவிட்டு வந்த அலைபேசி மீதே இருந்தது . இதை கருத்தரங்கமும் கவனித்தது . தேனீர் இடைவேளை அறிவிக்கப்பட்டதுதான் தாமதம் பலரும் அரங்கில் இருந்து பாய்ந்து பறந்தோடி வெளியேறி தத்தமது அலைபேசியை கைப்பற்றி அதன் மீது கவிழ்ந்து கொண்டார்கள்.தேனீர் கோப்பைகள் காத்துக் கொண்டிருந்தன.

உலகமெங்கும் இவர்களைப் போல் ''தொடுதிரை அடிமைகள் இருக்கிறார்கள் என்பதை நிரூபிக்கும் கருத்தரங்கம்தான் இது ! "என்று முடிவில் அறிவிக்கப்பட்டது.
அலைபேசியை மறந்தாலோ , தொலைந்தாலோ, அதில் சார்ஜ் குறைந்தாலோ , தொடர்பு எல்லைக்கு வெளியே போக நேர்ந்தாலோ சிலர் ரொம்பவும் பதற்றம் அடைகிறார்கள் . அவர்களுக்கு BP கொஞ்சம் எகிறுகிறது வேறு சிலர் அடிக்கடி அனிச்சையாக ஸ்மார்ட் போனை எடுத்து தகவலோ , அஞ்சலோ வந்திருக்கிறதா ? என்று பார்த்துக்கொண்டு இருப்பார்கள்.
சிலர் அவசியமில்லாமல் படமெடுத்தபடியே இருப்பார்கள் . சிலர் தாங்கள் பதிவிட்ட தகவலுக்கு யாரும் பதில் அளிக்கவில்லை என்றால் ரொம்பவும் நொந்து கொள்கிறார்கள். சில சமயம் PROFILE போய் போன் போட்டு உங்க பதிவுக்கு எத்தனை SHARE செய்கிறேன் .என் பதிவுக்கு நீங்கள் ஒரு ஸ்மைல் LIKE போடக் கூடாதா ? கூச்சமில்லாமல் கேட்கிறார்கள்.
...இப்படிப்பட்டவர்கள் அத்தனை பேரும் இளஞர்கள் / இளஞிகள் இவர்களுக்கு சாதிக்க வேண்டும் என்ற எவ்வித இலட்சியங்களும் கடமையுணர்வுகளும் இல்லையா ? என்று இவர்களுக்கும் ஏதேனும் இலட்சியங்கள் இருக்காதா ? அதை அடைவதற்குரிய உத்வேகம் கொண்ட பதிவுகளை நீங்கள் எழுதினால் என்ன.. என்று இரவு 11 மணிக்கு நண்பர் VALI POAKKAN PARATHESI கேட்டார்.
நானும் எழுதலாம் .அதற்காக கஜினி முஹம்மது 17 தடவை படையெடுத்து இந்தியாவை வென்ற வரலாற்றையோ, செருப்பு தைக்கும் தொழிலாளியின் மகனாகப் பிறந்து அமெரிக்க அதிபரான அபிரகாம் லிங்கன் வரலாற்றை சொன்னால் அவர்கள் பதிவை கடந்து போகலாம்,
இன்றைய தலைமுறையினருக்கு இறந்த கால வரலாற்று எடுத்துக்காட்டுகளை விட நிகழ்காலத்தில் சாதித்த சாதனையாளர்கள் முட்டிமோதி,தட்டுத்தடுமாறி விழுந்து , அடையாளமின்றித் தொலைந்து , தவறுகளை உணர்ந்து, தன்னம்பிக்கையுடன் வீறுகொண்டு எழுந்து , வேதனையெல்லாம் சாதனையாக்கிய சாதனையாளர்களின் சரித்திரங்களை சொல்ல வருகிறேன்.
இந்த சாதனையாளர்களின் சரித்திரங்கள் நிச்சயம் இந்த தொடு திரையை விட்டும் தூரமாக்கி வைக்கும் என்று தொடு திரை வாயிலாக சொல்ல விழைகிறேன்

சாதனைகளின் சரித்திரங்கள் 2

( சர் ஜேம்ஸ் டைசன் (SIR JAMES DYSON)




வெற்றியாளர்கள் அனைவரும் எடுத்த எடுப்பிலேயே வெற்றி கனியைக் சுவைத்து விடுவதில்லை. கடும் போராட்டம், உழைப்புக்கு மத்தியில் தான் வெற்றியைச் சுவைக்க முடிகிறது.

வெற்றி பெற்ற பிரபலங்கள் தங்கள் வாழ்வில் பல போராட்டங்களையும், தோல்விகளையும், நெருக்கடிகளையும் சந்தித்து அந்த அனுபவங்களில் இருந்து மீண்டவர்கள் தான் என்பதை ஒரு போதும் மனித மனம் ஏற்றுக் கொள்வதில்லை.

விடாமுயற்சியும், உழைப்பும் தான் அதிகபடியான வேறுபாடாக இருக்கிறது. சில நேரங்களில் விடாமுயற்சியும், உழைப்பும் இருந்தாலும் வெற்றி அடைய முடிவதில்லை என நினைக்கலாம்.

தொடர்ந்து உழைத்து உழைத்து வெற்றி கிடைக்காமல் தோல்வியை சந்தித்தவன் சலிப்படைகிறான். எல்லா செயலிலும் சலிப்பை மட்டுமே அனுபவித்து பழக்கப்பட்டவன் என்று சிலர் தன்னைப் பற்றி கூறிக் கொள்கின்றனர். சலிப்படைகிற ஒருவனால் ஒருபோதும் வெற்றிபெற முடியாது என்ற மந்திரத்தை நிறைய பேர் தெரிந்து வைத்திருப்பதில்லை சலிப்பை அனுபவமாக மாற்றிக் கொள்ளும் திறமைசாலிகள் மட்டுமே வெற்றிப் பெறுகின்றனர்.

1990 களின் வாக்கில் வீடு சுத்தம் செய்யும் கருவியான வாக்யூம் கிளினரைக் (VACUUM) கண்டுபிடித்த டைசன் அதற்கு முன்னர் பல முறை தோல்வியைத் தழுவியவர் என்பது தான் சுட்டிக் காட்ட வேண்டிய விஷயம்.

அவரது வெற்றிகரமான G-FORCE VACUUM கிளினர் அதற்கு முன்பு அது 5126 முறை தோல்வியைத் தழுவிய ஒரு கருவி என்பதனை யாராலும் ஒத்துக் கொள்ள முடியாது.

டைசன் தனது 15 வருட கால கடும் உழைப்பில் 5126 முறை புதிய வடிவங்களில் VACUUM கிளினரை முயற்சித்துப் பின்னர் தான் வெற்றிகரமான வடிவத்தை உருவாக்கினார்.

5126 முறை தோல்வியைச் சந்தித்தவர் என்பதனை ஒத்துக் கொள்வதில் டைசன் எப்போதும் பெருமை கொள்கிறார் .

இப்போதுள்ள VACCUM கிளினர் டிசைன் செய்யப்படும் போதெல்லாம், இது சரியாக இருக்கும் என்றெண்ணியே உருவாக்கப்பட்டது. ஆனால் 5126 டிசைனுக்குப் பிறகு 5127 டிசைன்தான் வெற்றிபெறும் என்பதை ஜேம்ஸ் டைசன் கூட எதிர்ப்பார்த்திருக்கமாட்டார்.

20 வருடங்களுக்கு முன்னர் எனது தயாரிப்பினை சந்தையில் விற்க முயற்சித்து இருந்தால் ஒரு விளையாட்டு பையனாகத்தான் என்னை மதித்திருப்பார்கள் என்று தனது தோல்வியைக் குறித்து ஒப்புக்கொள்கிறார். தற்போது இவரது சொத்து மதிப்பு 4.6 பில்லியனையும் தாண்டுகிறது.

اِنَّ سَعْيَكُمْ لَشَتّٰىؕ

"உங்கள் முயற்சி பலதரப்பட்டதாக உள்ளது". (குர்ஆன் 92 : 4)

நண்பர்களே... இந்த வாழ்க்கையிலிருந்து நீங்கள் பெறும் படிப்பினைகளை உணருங்களேன் .

**சாதனைகளின் சரித்திரங்கள் 3**

( வால்ட் டிஸ்னி (WALT DISNEY)



உலகில் அதிகமானோரை சிரிக்க வைத்த ஒரு நபர் யாரென்று கேட்டால் சார்லி சாப்ளின் என்று வரலாறு சொல்லும். உயிரோடு உலா வந்து உலக மக்களை சிரிக்க வைத்தவர் அவர். ஆனால் உயிரற்ற ஒன்று சார்லி சாப்ளினுக்கு இணையாக உலகை சிரிக்க வைத்திருக்கிறது என்பது உங்களுக்கு தெரியுமா? உங்களுக்கு தெரியாவிட்டாலும் உங்கள் பிள்ளைகளுக்கு நிச்சயம் தெரிந்திருக்கும்.

சுமார் 85 ஆண்டுகளுக்கு முன்பு கேலிச்சித்திர உலகில் அடியெடுத்து வைத்து கற்பனை உலகை கொடி கட்டி பறக்க வைத்த அந்த கதாபாத்திரம் மிக்கி மவுஸ் (MICKEY MOUSE). பெரியவர்களைக் கூட குழந்தைகளாக மாற்றி சிரிக்க வைத்த அந்த மந்திர கதாபாத்திரத்தை உலகுக்கு தந்தவர் வால்ட் டிஸ்னி (WALT DISNEY). பொழுதுபோக்கு என்ற பரந்து விரிந்த வானம் அவருக்கு வசப்பட்ட கதையை தெரிந்துகொள்வோம்.

1901-ஆம் ஆண்டு டிசம்பர் 5-ஆம் நாள் அமெரிக்காவின் ILLINOIS மாநிலத்தில் பிறந்தார் வால்ட் டிஸ்னி. அவருக்கு சிறு வயதிலிருந்தே ஓவியங்கள் வரைவதிலும், தீட்டுவதிலும் ஆர்வம் இருந்தது. ஏழு வயதானபோதே அவர் ஓவியங்கள் வரைந்து அண்டை வீட்டுக்காரர்களிடம் விற்பார்.

பள்ளிப்பாடங்களை படிப்பதற்கு பதில் அவர் எப்போதுமே இயற்கை காட்சிகளையும், விலங்குகளையும் வரைந்து கொண்டிருப்பார். தந்தைக்கு அது பிடிக்கவில்லை என்றாலும், பிடித்த துறையைத் தேர்ந்தெடுக்குமாறு வால்ட் டிஸ்னிக்கு தாயார் ஊக்கமூட்டினார்.

சிக்காக்கோவின் மெக்கின்லி (MCKINLEY HIGH SCHOOL) உயர்நிலைப்பள்ளியில் ஓவியம் மற்றும் புகைப்படத்துறையில் படித்தார் வால்ட் டிஸ்னி. ஒரு நுண்கலைக்கழகத்தில் சேர்ந்து தனது ஓவியத்திறமையை வளர்த்துக்கொண்டார். தனக்கு மிகவும் விருப்பமான திரைப்பட நாயகன் சார்லி சாப்ளினைப் போல் டிஸ்னி பள்ளியில் நடித்துக்காட்டுவார்.

ஆசிரியர்கள் அவரை கதை சொல்லுமாறு கேட்டுக் கொள்வார்கள். அவர் கரும்பலகையில் ஓவியங்களாக வரைந்துகொண்டே கதை சொல்லுவார். தந்தைக்குத் தெரியாமல் இரவு நேரங்களில் உள்ளூர் அரங்குகளில் நகைச்சுவை நாடகங்களில் நடித்த அனுபவமும் அவருக்கு உண்டு.

1922-ஆம் ஆண்டு 21 வயதானபோது வால்ட் டிஸ்னி LAUGH-O-GRAMS என்ற தனது முதல் நிறுவனத்தை சகோதரர் ROY-யுடன் சேர்ந்து தொடங்கினார். தனது மாமாவிடம் 500 டாலர் கடனாக பெற்று அந்த நிறுவனத்தை ஆரம்பித்தார். கேலிச்சித்திர படங்களை உருவாக்குவதில் சோதனை செய்து பார்த்த அவர் ALICE IN CARTOON LAND என்ற கார்ட்டூன் படத்தை தயாரித்தார். அது தோல்வியைத் தழுவியது நிறுவனமும் நொடித்துப் போனது. ஆனால் அந்த முதல் தோல்வி அவரை வருத்தவில்லை. மனம் தளராத வால்ட் டிஸ்னி அடுத்து OSWALD THE LUCKY RABBIT என்ற புதிய கேலிச்சித்திரத்தை உருவாக்கினார்.

அது ஓரளவுக்கு சிறப்பாக அமைந்தாலும் அதன் உரிமையை இன்னொருவர் வாங்கிக்கொண்டு டிஸ்னியை ஏமாற்றினார். அப்போதும் மனம் தளராத டிஸ்னி தன் சகோதரர் ராயுடன் இனிமேல் நாம் சொந்தமாக தொழில் செய்வோம் நமக்கு கைகொடுக்கப் போவது ஓர் எலி. அது நமக்கே சொந்தமாக இருக்கும் என்று கூறினார். அப்போது உலகுக்கு அறிமுகமான அந்த அதிசய எலிதான் 'MICKEY MOUSE'. முகம், இரண்டு காதுகள் என வெறும் மூன்று வட்டங்களால் உருவானது MICKEY MOUSE. பிறந்த ஓரிரண்டு ஆண்டுகளுக்குள்ளேயே அது உலகப்புகழ் பெற்றது. வால்ட் டிஸ்னியின் கவனம் ஹாலிவுட்டின் பக்கம் திரும்பியது. மிக்கிக்கு உருவம் தந்த டிஸ்னிதான் அதற்கு குரலும் கொடுத்தார். அவர் அடுத்தடுத்து தயாரித்த STEAMBOAT WILLIE, THE SKELETON DANCE போன்ற கேலிச்சித்திரங்களில் அந்த மிக்கி அடித்த லூட்டிகளையும் அதன் சேட்டைகளையும் இமை கொட்டாமல் மக்கள் பார்த்து ரசித்தனர், குழந்தைகள் கற்பனை வானில் சிறகடித்துப் பறந்தனர். பெரியவர்கள் மீண்டும் குழந்தைகளாகி தங்கள் கவலைகளை மறந்து சிரித்தனர்.

1932-ஆம் ஆண்டு டிஸ்னி உருவாக்கித்தந்த 'FLOWERS AND TREES' என்ற திரைப்படத்திற்கு ஆஸ்கர் விருது கிடைத்தது. MICKEY MOUSE என்ற சுட்டி எலியை தந்த டிஸ்னி கேலிச்சித்திர உலகில் அடுத்து அறிமுகப்படுத்திய வெற்றி கதாபாத்திரம் 'DONALD DUCK' என்ற வாத்து.
அந்த வாத்தும், எலியும் செய்த சேட்டைகளை எண்ணி இன்றும் தன்னை மறந்து சிரிப்பவர்கள் ஏராளம். 1937-ஆம் ஆண்டில் SNOW WHITE AND THE SEVEN DWARFS என்ற முழுநீள கேலிச்சித்திரத்தை வழங்கினார் டிஸ்னி. அதற்கு அப்போது ஆன செலவு எவ்வுளவு தெரியுமா? ஒன்றரை மில்லியன் அமெரிக்க டாலர். அவ்வுளவு பொருட்செலவில் உருவான அந்தப்படம் மிகப்பெரிய வசூல் சாதனையை செய்தது.
அதன் பின்னர் PINOCCHIO, FANTASIA, DUMBO, BAMBI போன்ற புகழ்பெற்ற கேலிச்சித்திர படங்களை அவர் உருவாக்கினார். திரையில் மட்டுமே காட்ட முடிந்த கற்பனை உலகை நிஜமாக்கி காட்ட விரும்பிய டிஸ்னி 1955-ஆம் ஆண்டில் 17 மில்லியன் டாலர் செலவில் மிகப்பிரமாண்டமான
'DISNEYLAND PARK' என்ற பொழுதுபோக்குப் பூங்காவை அமெரிக்காவின் OAKLAND நகரில் உருவாக்கினார்.
DISNEYLAND பூங்கா நிச்சயம் முதல் ஆண்டிலேயே நொடித்துப்போகும் என்று பலர் ஆரூடங்கள் கூறினர். ஆனால் பூங்காவை பார்க்க வந்தவர்களோ அதனை பூலோக சொர்க்கம் என்று வருணித்தனர். முதல் 25 ஆண்டுகளில் பல உலகத்தலைவர்கள் உட்பட 200 மில்லியன் பேர் கண்டு ரசித்தனர். தற்போது ஆண்டுக்கு சுமார் 15 மில்லியன் வருகையாளர்களை அது ஈர்க்கிறது.

ஒவ்வொரு குழந்தையும் சென்று பார்த்து வர விரும்பும் கனவுலகம் அது. டிஸ்னி சிறுவனாக இருந்த வயதில் பள்ளிக்குப் போகும் வழியில் ஒரு பூங்கா இருந்தது அதில் கட்டணம் செலுத்தினால்தான் விளையாட முடியும். டிஸ்னி அப்போது ஏழ்மையில் வாடியதால் ஒருமுறைகூட அவரால் அந்த பூங்காவில் விளையாட முடியவில்லை. அந்த ஏக்கம்தான் உலகின் மிகப்பெரிய விளையாட்டுப் பூங்காவை உருவாக்கும் எண்ணத்தை அவருக்குள் விதைத்திருக்க வேண்டும். இன்று கேலிச்சித்திரம் என்றால் நம் நினைவுக்கு வரும் முதல் பெயர் மிக்கி மவுஸ். அந்த அதிசய கதாபாத்திரம் எப்படி உருவானது? வால்ட் டிஸ்னியே ஒருமுறை அதைப்பற்றி கூறினார்....
மிக்கி மவுஸ் தோற்றம் பற்றி வால்ட் டிஸ்னியின் கருத்து
"வாழ்க்கையில் என்ன செய்யப்போகிறோம்? என்று தெரியாமல், ஒரு பிடிப்பு இல்லாமல் எல்லாமே இழந்த நிலையில் ஒருமுறை MANHATTAN-லிருந்து HOLLYWOOD-டிற்கு இரயிலில் பயணம் செய்துகொண்டிருந்தேன். எப்போதும் போலவே அப்போதும் நான் கற்பனை உலகத்தில் சஞ்சரித்துக்கொண்டிருந்தேன். அப்போது என் ஓவிய நோட்டுப்புத்தகத்தில் நான் கிறுக்கிய கதாபாத்திரம்தான் மிக்கி மவுஸ்."
கற்பனை என்ற சொல்லுக்கு புது அர்த்தம் கொடுத்த வால்ட் டிஸ்னி நோய்வாய்ப்பட்டு 1966-ஆம் ஆண்டு டிசம்பர் 15-ஆம் நாள் தமது 65-ஆவது வயதில் காலமானார். இறப்பதற்கு முதல் நாள்கூட அவர் பல புதிய எண்ணங்களை நிறைவேற்ற திட்டம் தீட்டிக்கொண்டிருந்ததாக கூறுகிறார் அவரது சகோதரர் ராய். வால்ட் டிஸ்னியின் சரித்திர வெற்றிக்கு காரணங்கள் என்ன? அவரே கூறுகிறார் இவ்வாறு.....
மனிதனுக்கு எட்டாத உயரம் என்று எதுவுமே கிடையாது. அதற்கு கனவை நனவாக்கும் ரகசியம் தெரிந்திருக்க வேண்டும். அந்த ரகசியம் நான்கு C எழுத்துகளில் அடங்கியிருக்கிறது. CURIOSITY, CONFIDENCE, COURAGE, CONSTANCY அதாவது ஆர்வம், தன்னம்பிக்கை, தைரியம், நிலைப்பாடு இந்த நான்கிலும் ஆக முக்கியமானது தன்னம்பிக்கைதான். நீங்கள் ஒன்றை நம்பினால் அதனை உளப்பூர்வமாக எந்த கேள்விக்கும் இடம் தராமல் நம்புங்கள். அதுதான் வெற்றியின் ரகசியம்.

வால்ட் டிஸ்னிக்கு வெற்றியைத் தந்த அந்த நான்கு C மந்திரம் நிச்சயம் நமக்கும் பொருந்தும். டிஸ்னியைப்போல் ஆர்வம், தன்னம்பிக்கை, தைரியம், நிலைப்பாடு ஆகியவற்றுடன் விடாமுயற்சியோடு செயல்பட்டால் வால்ட் டிஸ்னிக்கு கற்பனை என்ற வானம் வசப்பட்டதைப்போல நமக்கும் நாம் விரும்பும் வானம் நிச்சயம் வசப்படும்.
"நீ நட்சத்திரமாக ஜொலிக்க விரும்பினால்
நீ யார் என்பது முக்கியமல்ல;
உனது மனது எதை விரும்புகிறதோ,
அது நிச்சயம் உன்னை வந்து சேரும்.” -அப்துல் கலாம்
நண்பர்களே... இந்த வாழ்க்கையிலிருந்து நீங்கள் பெறும் படிப்பினைகளை உணருங்களேன்

**சாதனைகளின் சரித்திரங்கள் 4**
( ஸ்டீவ் ஜாப்ஸ் STEVE JOBS )




தொடர் தோல்விகள், விடாத முயற்சி, மார்கெட்டிங் தந்திரம்... ஆப்பிள் மற்றும் ஸ்டீவ் ஜாப்ஸ்-ன் உண்மை கதை ஆப்பிள் இன்று உலகின் நம்பர் ஒன் நிறுவனமாக வளர்ந்திருக்கிறது. வெறும் 25 ஆண்டுகளில்தான் ஆப்பிள் இந்த வளர்ச்சியை பெற்றுள்ளது. இதற்கு முக்கியமான காரணம் அதன் நிறுவனம் ஸ்டீவ் ஜாப்ஸ், மார்கெட்டிங் தந்திரம், அவர் பயன்படுத்திய யுக்தி என அவரை பற்றிய இன்ஸ்பிரேஷனல் கதை தான் இங்கே நாம் காணப்போகிறோம். இன்று உங்களிடம் ஒரு ஆப்பிள் போன் இருந்தால் இந்த சமூகத்தில் ஒரு பெரிய அந்தஸ்து கிடைக்கும், ஆப்பிள் கணிணியை உங்களுக்கு உபயோகப்படுத்த தெரிந்தாலே நீங்கள் அதி புத்திசாலி இப்படியாக ஆப்பிள் நிறுவனத்தின் தயாரிப்புகள் ஒரு மனிதனிற்கான அடையாளத்தை பெற்று தருகிறது. காரணம் அதன் தரம், விலை மற்றும் வடிவமைப்பு.

இப்படி உலகம் முழுவதும் வெற்றி கொடி வீசி தனக்கென ஒரு பாதையை வடிவமைத்து அதில் பல வாடிக்கையாளர்களை தக்க வைத்திருக்கும் ஆப்பிள் நிறுவனத்தின் தந்தையான ஸ்டீவ் ஜாப்ஸ் குறித்து...
1955ம் ஆண்டு பிப் 24ம் தேதி அமெரிக்காவின் சான் பிரான்சிஸ்கோவில் பிறந்தவர் ஸ்டீவ் ஜாப்ஸ், இவர் தாய் செபில் மற்றும் தந்தை அப்துல் ஃபத்தா ஜான் ஆகியோர் சிரியாவைச் சேர்ந்தவர்கள். 1954ம் ஆண்டு செபில் கருவுற்றபோது இருவருக்கும் திருமணமாகவில்லை. இந்நிலையில் சிரியாவிலிருந்து அமெரிக்காவிற்கு தப்பி வந்தனர். அங்கு தான் ஸ்டீவ் ஜாப்ஸ் பிறந்தார்.
ஸ்டீவ் ஜாப்ஸ் பிறந்த போது அவரது பெற்றோர் விஸ்கான்சின் பல்கலைகழக மாணவர்கள் தான் திருமணம் ஆகாமல் ஒன்றாக வாழ்ந்து வந்தனர். பின் தகப்பனார் அப்துல் ஃபத்தா ஜான் ஒரு போலிட்டிகல் சயின்ஸ் பேராசிரியராக இருந்தார். தாய் ஒரு ஸ்பீச் தெரப்பிஸ்டாக இருந்தார்.
ஸ்டீவ் ஜாப்ஸை தத்தெடுக்க முன் வந்தது அந்த பகுதியில் செல்வந்தராக இருந்த பால் ஜாப்ஸ் - கிளாரா ஜாப்ஸ் தம்பதியினர். இவர்கள் இருவரும் ஸ்டீவ் ஜாப்ஸை தந்தெடுத்து அவர்கள் தான் ஸ்டீவ் பால் ஜாப்ஸ் என அவருக்கு பெயரை வைத்தனர்.

இவர் தன் வளர்ந்த இடமே கலிஃபோர்னியா தான் அந்த இடம் தான் தற்போது சிலிக்கான வேலி என அழைக்கப்படுகிறது.
சிறுவயதிலேயே ஸ்டீவ் ஜாப் தனது தந்தையுடன் வீட்டின் பின் பகுதியில் எலெக்டரானிக் கரஜை வைத்திருந்தனர். பால் ஜாப்ஸ் தான் முதலில் ஸ்டீவ் ஜாப்ஸிற்கு எப்படி எலெக்டரானிக் பொருட்கள் செயல்படுகிறது என சொல்லிக்கொடுத்தார்.
அப்பொழுது ஸ்டீவ் ஜாப்ஸிற்கு எலெக்டரானிக் உதிரி பாகங்களை வாங்கி அதன் மூலம் எலெக்டரானிக் பொருட்களை தயாரிக்கும் எண்ணம் வந்தது. இந்த எண்ணம் தான் பின் நாளில் இவரை ஆப்பிள் கம்யூட்டரை தயாரிக்க துணையாக நின்றது.
ஸ்டீவ் ஜாப்ஸ் சிறுவயதிலேயே அறிவாளியாகவும், புத்திசாலியாகவும் இருந்தார். இவருக்கு வழக்கமான பள்ளிக்கு செல்லவே பிடிக்கவில்லை. பள்ளியில் போர் அடித்தால் பள்ளியில் பல குறும்புகளை செய்தவர். ஒரு முறை பள்ளியில் அறிவிப்பு பலகையில் யார் அனுமதியும் இல்லாமல் நாளை எல்லோரும் அவரவர் வளர்ப்பு பிராணிகளுடன் பள்ளிக்கு வரவேண்டும் என எழுதி போட்டுவிட்டார்.
மறுநாள் எல்லோரும், நாய், பூனை, கோழி என பள்ளிக்கு வந்து பள்ளியையே நிரப்பிவிட்டனர்.இதனால் பள்ளி நிர்வாகத்திற்கு பெரும் தலைவலியே ஏற்பட்டது.

பள்ளி முடித்து இவர் ஃபோர்ட்லாண்ட் கல்லூரிக்கு சென்றார். அங்கு 6 மாதம் மட்டுமே படித்துவிட்டு நின்றுவிட்டார். பின்னர் அடுத்த 18 மாதம் கிரியேட்டிவ் வகுப்புகளுக்கு சென்றார். பின்னர் அவர் கேலிகிராபி படித்தார். அதன் மூலம் அவருக்க டைப்போகிராபி மீது ஆர் வம் ஏற்பட்டது.
1974ம் ஆண்டு இவர் தனது 19வது வயதில் அட்டாரி என்ற நிறுவனத்தில் வீடியோ கேம் டிசைனராக பணியில் சேர்ந்தார். அந்த பணியில் இருக்கும் போது அவருக்கு மக்களை பற்றிய பார்வை ஏற்பட்டது சில மக்கள் வசதியாகவும் சில மக்கள் ஏழையாகவும் இருக்கிறார்களே ஏன் என யோசித்தார்.
நேரடியாக சர்ச்க்கு சென்று அங்கிருந்த பாதிரியாரிடம் இதை பற்றி விளக்கம் கேட்டார். அதற்கு அந்தபாதிரியார் "எல்லாம் அப்படி தான் நடக்கும், இது உனக்கு புரியாது" என சொல்லியுள்ளார். இந்த பதில் ஸ்டீவ் ஜாப்ஸ்சிற்கு பிடிக்கவில்லை. தனக்கு புரியாத விஷயம் எனக்கு வேண்டாம் என கருதினார். பின்னர் கடவுளை பற்றிய தேடல் அவருக்குள் பிறந்தது.

இதற்கிடையில் 1971ம் ஆண்டு ஸ்டீவ் ஜாப்ஸ், ஸ்டீவ் வாஸ்னிக் என்பவரை சந்தித்தார். அவரும் எலெக்டரானிக் துறையில் மிகப்பெரிய வல்லுனராக இருந்தார். இவரும் நண்பர்களாக இருந்தனர். இவரும் ஒருவருக்கொருவர் தங்களுக்கான ஐடியாக்களை பகிர்ந்து கொண்டு தன் வாழ்க்கையில் பணியிக்க துவங்கினர்.
இந்நிலையில் 1974ம் ஆண்டு ஸ்டீவ் ஜாப்ஸிற்கு கடவுள் குறித்த தேடல் ஏற்பட்டது. அப்பொழுது அவருக்கு இந்தியாவை பற்றியும் இந்து மதம் பற்றியும் தெரியவந்தது. அதன் மீது ஈர்ப்பு ஏற்பட்டது. அதனால் அதை பற்றி தெரிந்து கொள்ள அவர் இந்தியா வந்தார்.
உ.பி மாநிலத்தில் அவர் நீம் கரோலிபாபா என்பவரை ஆசிரமத்தில் சந்தித்து பேசினார். அவரது பேச்சில் ஸ்டீவ் ஜாப்ஸின் கடவுள் குறித்த தேடுலுக்கான பதில் கிடைத்தது. ஸ்டீவ் ஜாப்ஸ் கரோலி பாபாவை தனது குருவாக ஏற்றுக்கொண்டு ஆன்மீக தேடுக்காக இமயமலை பகுதியில் பயணம் மேற்கொண்டு இறுதியாக புத்த மதத்தை தழுவினார்.
பின்னர் அமெரிக்கா திரும்பிய அவர் 1976ம் ஆண்டு தனது நண்பர் ஸ்டீவ் வாஸ்னிக் உடன் இணைந்து ஆப்பிள் நிறுவனத்தின் தன் வீட்டிலேயே உருவாக்கினர். இருவரும் இணைந்து ஆப்பிள் 1 என்ற கம்யூட்டரை தயாரித்தனர். பெரும்பாலான தயாரிப்புகளை ஸ்டீவ் வாஸ்னிக்கே செய்தார். அதை விற்பனை செய்யும் பொறுப்பை ஸ்டீவ் ஜாப்ஸ் எடுத்துக்கொண்டார்.

அன்றைய காலகட்டத்தில் கம்யூட்டர் மிகப்பெரியதாக இருந்தது. அதை சிரிதாக செய்ய வேண்டும் என்பதே இவர்களின் குறிக்கோள் முதல் ஆப்பிள் கம்யூட்டர் உருவானது. ஆனால் அதை வாங்க யாரும் முன் வரவில்லை.மிக சொற்ப எண்ணிக்கையிலான கம்யூட்டர் மட்டுமே விற்பனையானது
இதற்கான காரணத்தை ஆய்வு செய்தார் ஸ்டீவ் ஜாப்ஸ், இதற்கு அதன் லுக் தான் காரணம் என புரிந்து கொண்டார். பின்னர் ஆப்பிள் 2வது கம்யூட்டரை உருவாக்கினார். இப்பொழுது அதன் உட்கட்டமைப்பை மட்டும் ஸ்டீவ் வாஸ்னிக் உருவாக்கினார். வெளிப்புற விடிவமைப்பை ஸ்டீவ் ஜாப்பை ஸ்டைலாக உருவாக்கினார்.
இந்த கம்யூட்டரை அவர்கள் ஒரு விற்பனை ஸ்டாலுக்கு கொண்டு சென்றனர். அவர்கள் கையில் இருந்தது வெறும் 3 கம்யூட்டர்கள் தான். ஆனால் ஸ்டீவ் ஜாப்ஸ் ஒரு காரியம செய்தார் வெறும் அட்டை பெட்டிகளை அதிகம் அச்சடித்து ஸ்டால் முழுவதும் நிரப்பி 3 கம்யூட்டர்களை மட்டும் மக்கள் பார்வைக்காக வைத்தார்.
இதை பார்த்த மக்கள் பலர் ஆச்சரியப்பட்டனர். அதன் லுக் அவர்களை கவர்ந்து இழுந்தது. இதனால் இவர்களுக்கு பலர் ஆர்டர்களை கொடுத்தனர். அதற்காக பெறப்பட்ட முன் பணத்தை வைத்தே அடுத்தடுத்த கம்யூட்டர்களை உருவாக்கி விற்பனை செய்தார்.

இருந்தாலும் அன்றைய சூழ்நிலையில் மக்களுக்கு கம்யூட்டர் குறித்த விழிப்புணர்வு இல்லை இதனால் இவர்கள் பெரும்லாபம் சம்பாதிக்கும் அளவிற்கு கம்யூட்டர் விற்பனையாகவில்லை. 1975ல் துவங்கிய ஆப்பிள் நிறுவனத்தை விட்டு 1986ல் வெளியேறினார் ஸ்டீவ் ஜாப்ஸ்
ஆனால் இவரது திறமையை வால்ட் டிஸ்னி நிறுவனம் பார்த்து அவருக்கு அதன் இயக்குநர்களின் ஒரு பதவியை வழங்கியது. அதன் பின் அவர் வாட்ஸ் டிஸ்னி நிறுவனம் மூலம் பிக்சார் என்ற அனிமேஷன் நிறவனத்தையும் உருவாக்கினார். ஆனால் இது எல்லாம் இவர் எதிர்பாரத்ததுபடி செல்லவில்லை. தோல்வியை தழுவியது. பின்னர் நெக்ஸ்ட் என் சாஃப்ட்வேர் நிறுவனத்தை உருவாக்கி தோல்வியடைந்தார்.
இறுதியாக 1997ம் மீண்டும் ஆப்பிள் நிறுவனத்திற்கே திரும்பினார் ஸ்டீவ் ஜாப்ஸ், இந்த முறை பல கம்யூட்டர்களை தயாரித்தார். பெரும்பாலான கம்யூட்டர்கள் தோல்வியை தழுவியது. பின்னர் மைக்ரோ சாஃப்ட் நிறுவனத்துடன் கூட்டு சேர்ந்து கம்யூட்டர் தயாரிக்கும் வேலையை வாங்கினார். ஆனால் மைக்ரோசாஃப்ட் இறுதியாக அதை வேறு நிறுவனத்திற்கு மாற்றிவிட்டது.

பின்னர் ஆப்பிள் கம்யூட்டரையே தயாரித்து விற்க பல முயற்சிகளை மேற்கொண்டும் பெரிய அளவில் வெற்றிபெறவில்லை. இந்நிலயையில் 10 ஆண்டுகால போராட்டத்திற்கு பின்பு 1996ல் ஐமேக் என்ற கம்யூட்டரை வடிவமைத்தார். இந்த கம்யூட்டரை விற்க காந்தி, சார்லி சாப்ளின் என பல உலக ஆளுமைகளின் புகைப்படங்களை வைத்து "திங் டிஃப்ரன்ட்" (வித்தியாசமாக யோசியுங்கள்) என விளம்பரம் செய்தார்.
இந்த விளம்பரம் பலரது கவனத்தை ஈர்த்தது பலர் ஆப்பிள் நிறுவனத்தின் கம்யூட்டரை பற்றி பேச துவங்கினர். ஆப்பிள் நிறுவன கம்யூட்டர்கள் விற்பனை மெல்ல அதிகரித்தது. அதன் தரம் மிகப்பெரிய பெயரை பெற்றது. ஆப்பிள் நிறுவனம் எதிர்பாராத வளர்ச்சியை அடைந்தது.

ஸ்டீவ் ஜாப்ஸ் ஆப்பிள் நிறுவனத்தில் அடுத்தடுத்த பொருட்களை தயாரிக்க முன் வந்தார். ஆப்பிள் லேப்டாப், ஐபேடு என தனது தயாரிப்பு பொருட்களை அதிகரித்துக்கொண்டே சென்றார்.அவர் அதன்பின் அறிமுகப்படுத்திய அனைத்தும் வெற்றி பெற்றது. மக்கள் வாழ்வை எளிமையாக்குவதை மட்டும் குறியாக வைத்து தயாரிப்புகளை அறிமுகப்படுத்தினார்.
இதற்கிடையில் 1991ல் இவருக்கு லாரென்ஸ் பாவெல் என்பவருடன் திருமணமாகி குழந்தை பிறந்தது. அதற்கு முன்னர் ஸ்டீவ் ஜாப்ஸ் தனது கல்லூரி கால தோழியாக கிரிஸ்டன் பெர்னன் என்பவருடன் 1971-1977ம் ஆண்டிற்கு இடையில் உறவில் இருந்தார். இவர்களுக்கு இரு பெண் குழந்தைகள் இருந்தது
அதன் மூலம் பிறந்த ஒரு குழந்தைகள் தான் லீசா பெர்னன். இவர் ஆப்பிள் நிறுவனத்தின் தான் பணியாற்றினார். அப்பொழுது தான் அவருக்கு ஒரு உண்மை தெரிந்தது, தனது தந்தை ஸ்டீவ் ஜாப்பின் உண்மையான தாய் தந்தை பால் ஜாப்ஸ் - கிளாரா ஜாப்ஸ் இல்லை. இவர்கள் ஜாப்ஸை தத்தெடுத்து தான் வளர்த்தார்கள் சிரியாவை சேர்ந்த தம்பதியின் மகன் தான் ஸ்டீவ் ஜாப்ஸ் என தெரிந்தது. அதன்பின்னர் தான் இந்த விவகாரம் வெளி உலகிற்கு வந்தது.

ஸ்டீவ் ஜாப்ஸ் நல்ல நிலைக்கு வந்ததும் சிலிக்கான வேலி பகுதியில் அவருக்கான பெரிய வீடு ஒன்ற கட்டினார். அந்த வீட்டில் ஐன்ஸ்டீன் மற்றும் கரோலி பாபா ஆகிய இரண்டு பேரின் புகைப்படத்தை மட்டும் பெரியதாக வைத்திருந்தார். அந்த இரண்டு பெரும் தான் தன் வாழ்வில் பெரும் மாற்றத்தை ஏற்படுத்தியதாக அவர் நம்பினார். தான் ஒரு தத்துபிள்ளை என்பதை ஸ்டீவ் ஜாப்ஸ் ஒரு பேட்டியில் கூறினார். அப்பொழுது அவர் தான் தன்னை பெற்றொடுத்த பெற்றோரை தான் தான் இறக்கும் வரை பார்கப்போவதில்லை என்றும் பால் ஜாப்ஸ், மற்றும் கிளாரா ஜாப்ஸ் ஆகியோர் தான் தன்னை வளர்க்க முழு முயற்சி செய்ததாகவும் அவர்கள் தன் மீது மிகுந்த பாசம் வைத்திருப்பதாகவும் அவர்கள் இருக்கும் போது பெற்றொடுத்த பெற்றோரை சந்தித்தால் அவர்கள் மனம் புண்படும் என்றும் கூறியிருந்தார்.

இந்நிலையில் கிளாரா ஜாப்ஸ் 1986ம் ஆண்டு இறந்த பின்பு ஸ்டீவ் ஜாப்ஸிற்கு தன்னை பெற்ற தனது அம்மாவை பார்க்கும் வாய்ப்பு கிடைத்தது. இதை அவர் அவரது தந்தை பால் ஜாப்ஸ் அனுமதியுடன் சென்றார். அப்பொழுது ஸ்டீவ் ஜாப்ஸ் எமோசனல் ஆகி அன்றைய காலகட்ட சூழ்நிலையில் தன்னை கருவிலேயே கலைக்காமல் பெற்றதெடுத்ததற்காகவும் அதற்கா அவர் பட்ட கஷ்டத்திற்காக நன்றி கூறினார்.
அதற்கு அந்த தாய் அவரிடம் மகனை ஒரு பேப்பரில் கையெழுத்து போட்டு தத்து கொடுத்ததை எண்ணி பல ஆண்டுகள் வருத்தப்பட்டு அழுததாகவும், அதற்கான தன்னை மன்னிக்கும் படியும் கண்ணீர் விட்டு அழுதார். அந்த நேரம் அவரது வாழ்வின் நெகிழ்ச்சியான நேரமாக இருந்தது. ஆனால் அதன் பீன் ஸ்டீவ் ஜாப் தனது பெற்றோர்களிடம் எந்த விதமான உறவும் வைத்துக்கொள்ளவில்லை. ஆப்பிள் நிறுவனத்துடனும் அவர்களை தொடர்பு படுத்தவில்லை.

ஸ்டீவ் ஜாப்பிஸின் தாய் ஸ்பிக்கில் ஜானை திருமணம் செய்து கொண்டு மோனா என்ற பெண் குழந்தையை பெற்றொடுத்தார். பின்னர் அவர் அப்துல் ஃபத்தா ஜானை விவாகரத்து செய்துவிட்டு ஜார்ஜ் சிம்சன் என்பவரை 1970 களில் திருமணம் செய்து கொண்டார். அதன் காரணமாக மோனா தனது இரண்டாவது பெயராக சிம்சன் என வைத்துக்கொண்டார்.
ஸ்டீவ் ஜாப்ஸின் தந்தை அப்துல் ஃபத்தாஜான் கலிஃபோர்னியாவில் அப்பொழுது ஒரு சிறிய ரெஸ்டாரெண்டில் பணியாற்றி வந்துள்ளார். ஜார்ஜ் சிம்சன் அவரை ஒருமுறை சந்தித்து பேசியுள்ளார். அப்பொழுது அப்துல் ஃபத்தா ஜான் தனக்கும் ஸ்பிக்கெலுக்கும் பிறந்த குழந்தை குறித்து பேசியுள்ளார். அதற்கு முன்னரே ஸ்டீவ் ஜாப்ஸ் மற்றும் அவரது தாய் சந்திப்பு நிகழ்ந்துவிட்டது. ஆனால் அது குறித்து அவர் தந்தை அப்துல் ஃபத்தா ஜானிடம் பகிர்ந்து கொள்ளவில்லை.

ஸ்டீவ் ஜாப்ஸூம் அவரது தந்தையை பார்க்க விருப்பபடவில்லை. அவர் அவரது குழந்தைகளை சரியாக வளர்க்காத தந்தையாக அவரை கருதி அவர் மீது கோபத்தில் இருந்தார். இருவரை சந்திக்கவில்லை அதே போல சிரியாவில் உள்ள அவரது தாய் தந்தை வழி சொந்தங்களையும் ஸ்டீவ் ஜாப்ஸ் சந்திக்க எந்த நடவடிக்கையும் எடுக்கவில்லை. ஆனால் சிம்சன் அவர்களை சந்தித்தார்.
இந்த கதைகளை எல்லாம் சிம்சன் தான் எழுதிய "தி லாஸ்ட் ஃபாதர்"(தொலைந்து போன தந்தை) என்ற புத்தகத்தில் எழுதியுள்ளார்.
2003ம் ஆண்டு கேன்சர் நோயால் பாதிக்கப்பட்ட ஸ்டீவ் ஜாப்ஸ் தனது இறுதி நாட்களை எண்ண துவங்கினார். 2011ம் ஆண்டு மிக கடுமையாக பாதிக்கப்பட்டார் அதே ஆண்டு ஆகஸ்ட் மாதம் 24ம் தேதி ஆப்பிள் நிறுவனத்தின் பதவியிலிருந்து விலகி
டிம்குக்கிற்கு அந்த பதவியை வழங்கினார். அதே ஆண்டு ஆக்டோபர் 06ம் தேதி அவர் உடல் நலக்குறைவால் உயிரிழந்துவிட்டார்.

ஸ்டீவ் ஜாப்ஸ் தனது நண்பர்களுடன் உருவாக்கிய ஆப்பிள் நிறுவனம் தற்போது உலகில் அசைக்க முடியாத நிறுவனமாக வளர்ந்தது ஐமேக், ஐடியூஸ்ன்ஸ், ஐபாட்,ஐபோன், ஐபேடு ஆகிய தயாரிப்புகளை முன்வைத்து உலகின் மிகப்பெரிய நிறுவனமாக மாறியுள்ளது. யாராலும் கற்பனை கூட செய்து பார்க்க முடியாத இந்த வளர்ச்சி இன்றைய இளம் தலைமுறையினருக்கு ஒரு இன்ஸ்பிரேஷனாக அமைந்துள்ளது.

وَاَنْ لَّيْسَ لِلْاِنْسَانِ اِلَّا مَا سَعٰىۙ
இன்னும், மனிதனுக்கு அவன் முயல்வதல்லாமல் வேறில்லை.
وَاَنَّ سَعْيَهٗ سَوْفَ يُرٰى
அன்றியும், நிச்சயமாக அவன் முயற்சி(யின் பலன்) பின் அவனுக்குக் காண்பிக்கப்படும். (குர்ஆன் : 53:39,40)
ஸ்டீவ் ஜாப்ஸ் குறித்து நீங்கள் அறியாத பல தகவல்களை அறிந்திருப்பீர்கள் என நம்புகிறோம். மேலும் உங்களுக்கு அவரை பற்றிய தகவல் தெரிந்தால் கமெண்டில் சொல்லுங்கள்.
நண்பர்களே... இந்த வாழ்க்கையிலிருந்து நீங்கள் பெறும் படிப்பினைகளை உணருங்களேன்

## சாதனைகளின் சரித்திரங்கள் 5

( பில்கேட்ஸ் BILL GATES )




பில்கேட்ஸ் முழுப் பெயர் வில்லியம் ஹென்றி கேட்ஸ். 1955 அக் டோபர் 28-ஆம் நாள் சீயாட்டில் (வாஷிங்டன்) நகரில் பிறந்தவர். தந்தை வில்லியம் சட்ட நிறுவனமொன்றின் பங்குதாரர். தாய் மேரி மாக்ஸ்வல். படிக்கிற காலத்திலேயே சந்தித்துத் திருமணம் செய்து கொண்டவர்கள்.

பில்கேட்ஸுக்கு படிப்பில் அத்தனை ஆர்வமில்லை. பாடப் புத்தகங்களை விட 'டார்ஜான்' மாதிரி கதைகள் படிக்கவும், ரூஸ்வெல்ட் நெப்போலியன் மாதிரி பிரபலங்களின் வாழ்க்கை வரலாறுகள் படிக்கவும் விருப்பம்.
11 வயதிலேயே அபார ஞாபக சக்தி உள்ளவர் அவர்.13 வயதில் கம்ப்யூட்டரின் செயல்முறைகள் அத்துப்படி. 17 வயதில் ஒரு கோடை விடுமுறையில் பித்தான்கள் (குடியரசுத் தலைவர் கால பித்தான்கள்) வாங்கி விற்றார். ஒவ்வொரு பித்தானையும் 5 சென்ட் விலை கொடுத்து 5000 பித்தான்கள் வாங்கியிருந்தார். அந்தப் பித்தான்களுக்கு கிராக்கி வந்த போது ஒரு பித்தான் 25 டாலர் என்று விலை வைத்து விற்றார்.
பில்கேட்ஸ் கம்ப்யூட்டரில் காட்டிய அக்கறையை உடம்பின் சுத்தத்திலோ, வீட்டுவேலையிலோ, காரோட்டுவதிலோ காட்டியதில்லை.
கம்ப்யூட்டரில் ஏதாவது ப்ரொக்ராம் செய்து கொண்டே இருக்க வேண்டும். அவருக்கு ஸ்கூலில் அவர் கட்டணம் செலுத்தாமலே கம்ப்யூட்டரை உபயோகித்துக் கொள்ள அனுமதித்திருந்தார்கள்.
பில்கேட்ஸ் மைக்ரோ சாஃப்ட் நிறுவனத்தைத் தொடங்கினார்
ஹார்வர்டு பல்கலைக்கழகத்தில் படித்த போதே தன்னுடைய நண்பர் ஆலனுடன் சேர்ந்து மைக்ரோ சாஃப்ட் நிறுவனத்தைத் தொடங்கிவிட்டார்.
அப்போது அவருடைய வயது 12 கம்பெனி நன்றாக இயங்கவும், கேட்ஸ் படிப்பை விட்டுவிட்டார். தொழிலில் புதிய உத்திகளைப் புகுத்துவதும், உற்பத்திப் பிரிவை கவனித்துக் கொள்வது ஆன்லைன் வேலை.
.
கேட்ஸ் புதிய பிசினஸ் ஒப்பந்தம், பேரம் இவற்றைக் கவனித்துக் கொண்டார். வேறு சில நண்பர்களையும் தம்முடைய நிறுவனத்தில் கூட்டாக சேர்த்துக் கொண்டார். 0:40 விகிதத்தில் தமக்குச் சாதகமாய் ஒப்பந்தம் போட்டுக் கொண்டார்.
ஆப்பிள் கம்ப்யூட்டர், கமோடர் நிறுவனங்களுக்கு ப்ரொக்ராம்கள் எழுதித் தந்து பதினெட்டே மாதங்களில் பல லட்சம் டாலர்களை அவர்கள் சம்பாதித்து விட்டனர்.
அப்போது உ.பி.எம் நிறுவனம் தான் அதிக அளவில் கம்ப்யூட்டர்களைத் தயார்த்துக் கொண்டிருந்தது. அவை ரொம்ப பெரிய சைஸ்', தனிநபர் உபயோகத்துக்கு ஏற்றதாயில்லை.
பி.லஸி தயாரிப்பில் இறங்கிய போது அதிவேக ப்ரொக்ராம்களை அளிக்கக்கூடிய ஆப்ரேடிங் சிஸ்டத்தை கேட்ஸ் உருவாக்கித் தந்தார். முழு உரிமையைத் தாமே வைத்துக் கொண்டு, பயன்படுத்துகிற உரிமையை மட்டுமே ஐ.பி.எம்முக்குத் தந்தார்.

அவர்கள் ப்ரொக்ராமைப் பயன்படுத்தும் ஒவ்வொரு முறையும் அவருக்குப் பணம் கொடுப்பதாய் ஒப்பந்தம். அதன் மூலம் பல கோடி டாலர்கள் கேட் ஸிற்கு கிடைத்தது, இன்றும் கிடைத்துக் கொண்டிருக்கிறது.
பில்கேட்ஸின் தொழில் வெற்றிக்கான யுக்திகள்
போட்டியாளர்களை எப்படிக் கையாள்வதென்று அவருக்குத் தெரியும். ஒன்று, எதிரியை வளைத்துப் போடுவார் அல்லது செயலற்றுப் போகச் செய்வது விடுவார். அதுவே அவருடைய வெற்றி ரகசியம்.
1986-ல் கேட்ஸ் பல நூறு கோடிகளுக்கு அதிபர், 1200 ஊழியர்களும் சவுகரியமாய் வேலை பார்க்க புதிய வேலையிடம் உருவாக்கப்பட்டது.
1990-ல் விண்டோஸ் 3.0 அறிமுகம். மைக்ரோசாஃப்டின் ஆண்டு வருமானம் 100 கோடி டாலர்களைத் தாண்டியது.
1992-ல் மைக்ரோசாஃப்டின் பங்குகள் கிடுகிடு வென்று உயர்ந்தன.
கேட்ஸ் அமெரிக்காவின் முதன்மைக் கோடீஸ்வரரானார். 1995-ல் உலகின் நம்பர் ஒன் கோடீஸ்வரர். இன்று அவருடைய சொத்தின் மதிப்பு இரண்டரை லட்சம் கோடி. கேட்ஸின் வளர்ச்சி அசுரத்தனமானது, மற்ற நிறுவனங்களுக்கு அச்சுறுத்தல்.

அத்தனை வளர்ச்சியை அவரால் எப்படி எட்ட முடிந்தது? மூளை பலம், நிறுவன ஊழியர்களின் ஈடுபாடு. கெட்டிக்காரர்கள் கொண்ட நிறுவனம் மைக்ரோசாஃப்ட், நிறுவன பங்குகளை ஊழியர்களுக்கு வழங்கி அவர்களையும் நிறுவனத்தின் உரிமையாளராக்கியிருக்கிறார். ( நன்கு கவனிக்க வேண்டிய விஷயம் இது ) அவர்கள் ஈடுபாட்டுடன் உழைக்கக் கேட்பானேன்? மைக்ரோசாஃப்டில் பணத்தைத் தாராளமாய் செலவிட்டு ஆராய்ச்சிகளை மேற்கொள்கிறார்கள்.
பில்கேட்ஸஸின் சிக்கனம் மற்றும் எளிமை பில்கேட்ஸின் வளர்ச்சிக்குக் காரணம் புதிது புதிதாய்க் கண்டு பிடித்துக் கொண்டிருப்பது. பில்கேட்ஸ் 50 கோடி ரூபாய் செலவழித்துத் தம்முடைய வீட்டைக் கட்டியிருந்தாலும் பணத்தை சிக்கனமாய் பயன்படுத்துகிறவர்.
நேரத்திலும் சிக்கனம். 10 மணி பிளேனைப் பிடிக்கத் தமது அலுவலகத்திலிருந்து 9.50க்குத்தான் புறப்படுவார். பில்கேட்ஸ் ரொம்ப எளிமையானவர். பிரத்யேகக் காரியதரிசியெல்லாம் வைத்துக் கொள்ளவில்லை, ஒரேயொரு உதவியாளர் மட்டுமே.
'மெமோ'க்களையும் கடிதங்களையும் தமது கைப்பட 'டைப்' செய்து விடுவார். அவர் ஒரு தொழில்நுட்ப வல்லுநர் மட்டுமல்ல, தேர்ந்த வியாபாரியும் கூட.
தம்முடைய ஊழியர்களின் பணியை, திறமையை அவர் வாயால் பாராட்டுவதில்லை, செயலால் பாராட்டி விடுவார். அதே சமயம் ஊழியர்களில் யாருடைய பணியிலேனும் தொய்வு இருப்பது தெரிந்தால் தயங்காமல் வேலையை விட்டு நீக்கி விடுவார்.
மைக்ரோசாஃப்டில் குழுக்களாய் பிரிந்து வேலை செய்கிறார்கள். அதனால் பலருடைய திறமையும் ஒருங்கிணைக்கப்படுகிறது. பில்கேட்ஸும் சரி அவருடைய நிறுவனமும் சரி சவால்களை அதிகம் சந்திப்பதால் அதிக ஆற்றலுடன் திகழ முடிகிறது.

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
உங்களில் ஒருவருடைய பணியாளர் வெப்பத்தையும் புகையையும் தாங்கிக்கொண்டு உணவு சமைத்துக் கொண்டுவந்தால், அவரையும் தம்முடன் அமரச் செய்து அவர் உண்ணட்டும். உணவு குறைவானதாக இருந்தால் அதில் ஓரிரு கவளங்களையாவது அவரது கையில் வைக்கட்டும்.
அறிவிப்பவர்: அபூஹுரைரா (ரலி), நூல்: முஸ்லிம் 3421
அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள் கூறியதாவது: நான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுக்குப் பத்து ஆண்டுகள் பணிவிடை செய்தேன். அல்லாஹ்வின் மீதாணையாக! அவர்கள் என்னை (மனம் வேதனைப்படும்படி) "ச்சீ' என்றோ "இதை ஏன் செய்தாய்?" என்றோ, "நீ இப்படிச் செய்திருக்கக் கூடாதா?" என்றோ எதற்காகவும் அவர்கள் (கடிந்து) சொன்னதில்லை. நூல்: முஸ்லிம் 4623
ஒரு பணியாளரிடம் எவ்வாறு நடந்து கொள்ளவேண்டும் என்பதற்கு நபிகள் நாயகம் சிறந்த எடுத்துக்காட்டாகத் திகழ்ந்துள்ளார்கள். தங்களது குழந்தைகளிடம் கூட பெற்றோர்கள் இவ்வாறு நடந்து கொள்வதில்லை. ஆனால் நபியவர்கள் தனது பணியாளரிடத்தில் சிறந்த முறையில் நடந்து முதலாளிகளுக்கு ஒரு முன்மாதிரியாகத் திகழ்ந்துள்ளார்கள்.
முதலாளிகள் பெறவேண்டிய படிப்பினைகள்.
நண்பர்களே... இந்த வாழ்க்கையிலிருந்து நீங்கள் பெறும் படிப்பினைகளை உணருங்களேன்.

**சாதனைகளின் சரித்திரங்கள் 6**
( ஹாரிபாட்டர் எழுதிய ஜே.கே.ரவுலிங் )




ஜே. கே. ரௌலிங் (J. K. ROWLING, பிறப்பு: 31 சூலை 1965) ஒரு ஆங்கில புதின எழுத்தாளர். ஜே.கே.ரவுலிங்கின் தந்தை பீட்டர் ஜேம்ஸ் ரவுலிங் ரோல்ஸ்ராய்ஸ் நிறுவனத்தில் பொறியாளராகப் பணிபுரிந்து வந்தார். அவருடைய தாய் ஆனி ரவுலிங், அறிவியல் தொழில்நுட்ப வல்லுநராக இங்கிலாந்தில் பணிபுரிந்து வந்தார்.
இங்கிலாந்து ராணியைவிடப் பெரிய கோடீஸ்வரப் பெண்மணி ஜே.கே.ரவுலிங் . எழுத்தின் மூலமாக மட்டுமே 6,000 கோடி ரூபாய்க்கும் மேலாகச் சம்பாதிக்க முடியும் என நிரூபித்த உலகின் முதல் பில்லியனர் எழுத்தாளர் அவர். ஆனால், ஒரு காலத்தில் கணவனைப் பிரிந்து கைக்குழந்தையுடன் வாழும் தாய்மார்களுக்கு அரசாங்கம் தரும் சொற்ப உதவித்தொகையில் வாழ்க்கை நடத்திய பெண் அவர். மிகவும் அவமானகரமான, அடுக்கடுக்கான தோல்விகளால் புடம்போடப்பட்ட மனிதர் அவர்.
அவரது ஹாரி பாட்டர் வரிசைப் புத்தகங்கள் 40 கோடிக்கும் அதிகமான பிரதிகள் விற்றுள்ளன. 75-க்கும் மேற்பட்ட மொழிகளில் அவரது கதைகள் வாசிக்கப்படுகினறன. எழுத்துலகில் மட்டுமல்ல... திரையுலகிலும் ஹாரி பாட்டர் படங்கள் வசூலை வாரிக்குவித்துள்ளன. இன்று, ஜெ.கே.ரவுலிங் பற்றி தெரியாதவர்கள் உலகில் குறைவு.
சமீபத்தில் ஒரு தொலைக்காட்சி நிகழ்ச்சியில் அவர் கூறினார்: "நாம் தோல்விகளைப் பற்றி அதிகம் பேசுவதில்லை. தோல்விகள் தவிர்க்க முடியாதவை என்ற உண்மையைப் பற்றி நாம் பேசுவதில்லை. நான் வாழ்க்கையில் தோல்வி மேல் தோல்வி அடைந்து நொந்துபோயிருந்த அந்த நேரத்தில், வாழ்க்கையில் ஓரளவு வெற்றி பெற்ற யாராவது என்னிடம் வந்து, 'நீ பல தோல்விகளைச் சந்தித்தால் மட்டுமே வெற்றி அடைய முடியும்' என்று சொல்லியிருந்தால் மிகவும் மகிழ்ச்சி அடைந்திருப்பேன்."

இங்கிலாந்து நாட்டில் 1965-ம் ஆண்டு பிறந்த ஜெ.கே.ரவுலிங், சின்ன வயதிலேயே புத்தகங்களை தேடித்தேடி வாசிப்பதில் பேரார்வம் கொண்டிருந்தார். அவரது எழுத்து ஆர்வத்தைப் புரிந்துகொண்ட அவரது பள்ளி ஆசிரியர்கள் ஆக்ஸ்போர்டு பல்கலைக்கழகத்திற்கு விண்ணப்பிக்க வழிகாட்டினர்.
1982-ம் ஆண்டு ஆக்ஸ்போர்டு பல்கலைக்கழக நுழைவுத் தேர்வு எழுதிய ஜே.கே.ரவுலிங், தேர்வில் நிராகரிக்கப்பட்டார். அவமானத்தில் கூனிக் குறுகிப்போன ஜெ.கே.ரவுலிங், வீட்டைவிட்டு வெளியில் வருவதைப் பல நாட்கள் தவிர்த்தார். பின்னர் தன்னைத்தானே தேற்றிக்கொண்ட அவர், எக்ஸட்டர் பல்கலைக்கழகத்தில் விண்ணப்பிக்கத் தயாரானார்.

தனக்குள் இருந்த எழுத்தாற்றல் ஆர்வம் காரணமாக ஆங்கில இலக்கியம் படிக்க அவருக்கு அதிக ஆசை. மிகப் பெரிய எழுத்தாளர்களின் வரிசையில், தன்னைக் கருதிய ஜே.கே.ரவுலிங், தன்னை முழுநேர எழுத்தாளராகவே மனதுக்குள் கற்பனை செய்து வந்திருந்தார்.
தனது ஆர்வத்தை அவர் தயங்கியபடி சொன்னபோது. ஏழ்மையான பின்னணி கொண்ட அவரது பெற்றோர், "ஆங்கில இலக்கியம் சோறு போடாது. பிரெஞ்சு மொழி படித்தால் ஓர் அலுவலக உதவியாளர் வேலையாவது கிடைக்கும்" என்று வாதிட்டனர்.
வேறு வழியின்றி எக்ஸட்டர் பல்கலைக்கழகத்தில், பிரெஞ்சு மற்றும் செவ்வியல் இலக்கியப் படிப்பில் சேர்ந்தார். சில நாட்களிலேயே தனக்குப் பொருத்தமில்லாத படிப்பில் சேர்ந்ததை நினைத்து நொந்துபோனார்.

பி.ஏ பட்டம் பெற்ற பின்னர் லண்டன் மாநகருக்குச் சென்ற ஜெ.கே.ரவுலிங், ஆம்னாஸ்டி இன்டர்நேஷனல் அமைப்பில் ஆராய்ச்சி உதவியாளர் பணியில் சில மாதங்கள் செயல்பட்டார். அங்கு அவருக்குக் கிடைத்த அனுபவங்கள் வித்தியாசமானவை.
அப்போது கொடுங்கோலாட்சி நடந்த நாடுகளில் இருந்து தப்ப முயன்றவர்களும்,தப்பி வந்தவர்களும் எழுதும் அதிர்ச்சிகரமான கடிதங்களைப் படித்துக் குறிப்பெடுத்து வந்தார். மனிதர்கள் எத்தனை மோசமான சித்ரவதைகளை அனுபவிக்கிறார்கள்ள் என்பதை அறிந்து மனம் பதைபதைத்தார்.
அவர் எழுதிய நாவல்களில் இடம்பெற்ற சில அதீதச் சம்பவங்களும் கதாபாத்திரங்களும் ஆம்னஸ்டி இன்டர்நேஷனல் வேலையில் அவர் சந்தித்த அனுபவங்கள் அடிப்படையிலானவை.
ஒருமுறை லண்டனுக்குச் செல்வதற்காக மான்செஸ்டர் ரயில் நிலையம் சென்றார். ரயில் வர 4 மணி நேரம் தாமதமாகும் என்று அறிவிக்கப்பட்டிருந்தது. காத்திருந்த வேளையில், அவருக்கு ஒரு புத்தம் புதிய சிந்தனைக் கீற்று பளிச்சிட்டது.

மந்திரஜாலப் பள்ளி ஒன்றில் படிக்கும் ஹாரி என்ற சிறுவனைப் பற்றிய காட்சிக் கதைச் சித்திரம் அது. ஒரு முழு நீளத் திரைப்படம் போல் உருவான அந்தக் கதைச் சித்திரம் அவருக்குள் புதிய உணர்வலைகளை எழுப்பியது. வீட்டுக்கு வந்த உடன் அதனைப் பக்கம் பக்கமாக எழுதத் தொடங்கி விட்டார்.
அவர் தனது பிரம்மாண்டமான ஹாரிபாட்டர் நாவலை எழுதத் தொடங்கிய நேரத்தில், அவரது அம்மாவின் உடல் நலம் மோசமானது. தன்னை உயிருக்கு உயிராக நேசித்து, அரவணைத்துப் பாதுகாத்து வந்த தனது தாயாரின் மறைவு ஜெ.கே.ரவுலிங்கின் வாழ்க்கையை அடியோடு புரட்டிப்போட்டது. அவரால் வேலைக்கு செல்ல முடியவில்லை, எழுத்துப் பணியையும் தொடர முடியவில்லை.

ஒரு மாற்றத்துக்காக போர்ச்சுக்கல் நாட்டிவுள்ள போர்டோ நகருக்குச் சென்ற ஜெ.கே.ரவுலிங், அங்கு ஆங்கில ஆசிரியராக இரவு நேரப் பணியில் சேர்ந்தார். பகலில் நேரம் கிடைக்கும் போதெல்லாம் எழுதித் தள்ளினார். அங்கு, தான் சந்தித்த, தன்னைவிட வயதில் குறைந்த இளைஞர் ஒருவரை மணந்துகொண்டார்.மகள் பிறந்தாள். மண வாழ்க்கை நீடிக்கவில்லை. கணவரால் துன்புறுத்தப்படட்டு, துரத்தப்பட்டார். மீண்டும் இங்கிலாந்துக்கு வந்து சேர்ந்தார். இங்கிலாந்திலும்உதவுவதற்கு யாரும் இல்லை. தந்தை மறுமணம் செய்துகொண்டு போய்விட்டார். தங்கையாலும் பெரிய உதவி செய்ய முடியவில்லை. பழைய நண்பர்கள் சிலர் சிறிதளவு பண உதவி செய்திட முன்வந்த போதும்,அதனை கைநீட்டி வாங்க மனம் இடம் கொடுக்கவில்லை.
கணவனைப் பிரிந்து கைக்குழந்தையுடன் வாழும் தாய்மார்களுக்கு அரசாங்கம் தரும் சொற்ப உதவித்தொகைக்கு விண்ணப்பித்து, தனது கைக் குழந்தையுடன் போராட்ட வாழ்க்கையைத் தொடர்ந்தார். மற்ற குழந்தைகள் நிறைய விளையாட்டுப் பொருட்களோடு உற்சாகமாக விளையாடுவதைப் பார்த்தால், தன் குழந்தைக்கு எதுவுமே தர முடியவில்லை என்ற ஏக்கம் அவரது மனதை வலிக்கச் செய்தது. ஏமாற்றங்களும், சுய பச்சாதாபமும் அவரது மனநிலையைப் பாதிக்கத் தொடங்கியிருந்தன.
அவரது குழந்தைக்கு ஒரு சிறிய விளையாட்டுப் பொம்மையை சமூகநலத் துறை ஊழியர் ஒருவர் இலவசமாக வழங்கியபோது, அதைப் பிடுங்கி குப்பைத்தொட்டியல் போடும் அளவுக்கு அவர் மன அழுத்தத்தில் இருந்தார். மன அழுத்தத்தின் உச்சத்தில், தற்கொலை செய்துகொள்ளும் எண்ணம் தனக்கு எழுந்ததாகவும், மருத்துவச் சிகிச்சைக்குப் பின் மன அழுத்தம் குறைந்ததாகவும் அவர் பின்னாட்களில் கூறியுள்ளார். வறுமையுடன் போராட்டம் ஒருபுறம் இருக்க...
துரத்தியடித்த கணவர். ஜெ.கே.ரவுலிங்கையும் குழந்தையையும் தேடி இங்கிலாந்து வந்துவிட்டார். போதைப் பொருளுக்கு அடிமையாகிவிட்ட அவரால் பெரும் தொந்தரவுகள். அவரிடம் இருந்து மணவிலக்குப் பெற ஜெ.கே.ரவுலிங் பெரும்பாடு படவேண்டியிருந்தது.

இத்தனைச் சோதனைகளுக்கு இடையிலும், ஜெ.கே.ரவுலிங்கை நம்பிக்கை இழக்காமல் வைத்திருந்தது, அவரது எழுத்துப் பணி மட்டுமே. வெளியில் சுற்றிவிட்டு, அந்தக் குழந்தை தூங்கும் நேரமெல்லாம் எழுதுவதை வழக்கமாக்கிக்கொள்ண்டார். பூங்காவிலோ, காப்பி கடையிலோ, வீட்டிலோ, வீதியிலோ, எங்கெல்லாம் வாய்ப்புக் கிடைக்கிறதோ அங்கெல்லாம் எழுதித் தள்ளினார்.
"வீடில்லாமல், பணம் இல்லாமல், கணவர் இல்லாமல், கைக்குழந்தையுடன வாழ்ந்த அந்த நாட்களில் எனது வாழ்க்கை இருள்மயமானதாக இருந்தது. தோல்விகள் என்னைச் சூழ்ந்து நிற்கின்றன. அந்தத் தோல்விகள், என்னிடம் இருந்த தேவையற்ற அனைத்தையும் பறித்து எறிந்து விட்டன. எதை எனது வாழ்க்கையின் தவப் பணியாக நினைத்தேனோ, அதில் மட்டுமே எனது முழு சக்தியையும் ஒன்று குவிக்கும்படி, தோல்விகள் என்னை விரட்டின" என்று பின்னாட்களில் குறிப்பிட்டார் ஜெ.கே.ரவுலிங்.
தனது முழு சக்தியையும் திரட்டி ஹாரிபாட்டர் முதல் பாகத்தை எழுதி முடித்தார் ஜெ.கே.ரவுலிங். தனக்கு முழு திருப்தி ஏற்படும்வரை அதனை மெருகேற்றி, மிகுந்த நம்பிக்கையோடு பதிப்பகத்துக்கு அனுப்பிவைத்தார். 'பதிப்பிக்கத் தகுந்ததல்ல' என்ற குறிப்புடன் திருப்பி அனுப்பப்பட்டது ஹாரிபாட்டர் நாவல்.
11 பதிப்பகங்கள் நிராகரித்த அந்த நாவலை, மனம் தளராமல் 12-வது பதிப்பகத்துக்கு அனுப்பி வைத்தார் ஜெ.கே.ரவுலிங்.

ஹாரிபாட்டர் நாவலின் பிரதியை ப்ளூம்ஸ்பரி பதிப்பாசிரியர் படிக்கத் தொடங்கியபோது, அவரது 8 வயது மகளும் அதைப் படிக்கத் தொடங்கினார். அந்தச் சிறுமி, அடுத்தடுத்த அத்தியாயங்களைப் படிக்கத் தருமாறு

தனது அப்பாவிடம் கெஞ்சியபோது அந்த நாவல் குழந்தைகளைக் கவரும் என்று பதிப்பாசிரியர் புரிந்துகொண்டார்
ஜெ.கே.ரவுலிங்கை அழைத்து பதிப்பு ஒப்பந்தம் போட்டார். எதிர்பாராத மாபெரும் வரவேற்பைப் பெற்ற ஹாரிபாட்டர் நாவல்கள். தொடர் தோல்விகளைத் தாங்கிக் கொண்டு மனம் தளராமல் உழைத்த ஜெ.கே.ரவுலிங்குக்கு வெற்றி மேல் வெற்றி.
ஜே.கே.ரவுலிங் ஒருமுறை மாணவர்களிடம் பேசியபோது குறிப்பிட்டார்:"உங்களில் யாரும் நான் சந்தித்த அளவுக்கு மோசமான தோல்விகளைச் சந்திக்கப் போவதில்லை. தோல்விகள் தவிர்க்க முடியாதவை என்றாலும், அவை வாழ்க்கையின் இயல்பான பகுதி என்பதையும் சுட்டிக்காட்ட விரும்புகிறேன்.தோல்விகளைக் கண்டு அச்சப்பட வேண்டாம்."
ஜே.கே.ரவுலிங்கின் எழுதிய கதாநாயகன் ஹாரி பாட்டர் மந்திர சக்திகளைக் கொண்ட ஒரு அனாதை சிறுவன், அவர் தனது மாமாக்கள் கொடுத்த கொடூரமான வாழ்க்கையிலிருந்து தப்பிக்க ஒரு மந்திர உலகத்திற்கு தப்பித்து, அவர்களுடன் அவன் வாழ்கிறான்.
கதாநாயகன் ஹாரி பாட்டரை வைத்து ஏழு புத்தகங்களை எழுதி குவித்தார் ஜே.கே.ரவுலிங்கின் .இந்த ஏழு புத்தகங்களில் எந்த ஒன்றையும் தவிர்க்க முடியாது.
ஜே.கே. ரோலிங் எழுதிய ஹாரி பாட்டர் சிறுவன் கதாபாத்திரமாகக் கொண்டு எழுதப்பட்ட ஏழு புத்தகங்கள்

1) தத்துவஞானியின் கல் (1997)
2) சேம்பர் ஆஃப் சீக்ரெட்ஸ் (1998)
3) அஸ்கபானின் கைதி (1999)
4) நெருப்புக் குவளை (2000)
5) ஆர்டர் ஆஃப் தி பீனிக்ஸ் (2003)
6) ஹாஃப்-ப்ளட் பிரின்ஸ் (2005)
7) டெத்லி ஹாலோஸ் (2007)

ஹாரிபாட்டர் கதை மூலம் உலகப் புகழ் பெற்றுள்ள ஜே.கே.ரவுலிங், இந்த இடத்தை பிடிக்க தனது வாழ்க்கையில் பல்வேறு சோதனைகளை சந்திக்க வேண்டியிருந்தது.
ரவுலிங் அவரது பாத்திரங்கள்க்கு-செல்வந்தர்கள் மற்றும் குழந்தைகள் மூலம் உலகம் முழுவதும் புகழ் பெற்றது, அவரின் கதைகளை குழந்தைகள் மீண்டும் மீண்டும் வாசிப்பதை பெருமளவில் விரும்புகின்றனர்.
நண்பர்களே... இந்த வாழ்க்கையிலிருந்து நீங்கள் பெறும் படிப்பினைகளை உணருங்களேன்.

## சாதனைகளின் சரித்திரங்கள் 7

( ஹெலன் கெல்லர் )




அமெரிக்கா, வட அலபாமா, டஸ்கும்பியா கிராமத்தில், ஜூன் 27, 1880ல், பிறந்தார் ஹெலன் கெல்லர். இரண்டு வயதில் மூளைக் காய்ச்சலால் பாதிக்கப்பட்டு கண் பார்வை, கேட்கும் சக்தி, பேசும் திறன் ஆக ஐம்புலன்களில் மூன்றையும் இழந்தார்.
விடாமுயற்சி, பயிற்சியால் ஓரளவு பேசும் திறன் பெற்றார். கல்வியில் தீவிர கவனம் செலுத்தி, 24ம் வயதில் முதுகலை பட்டம் பெற்றார். ஆங்கிலம், லத்தீன், பிரெஞ்சு மற்றும் ஜெர்மன் மொழிகளையும் கற்று தேர்ந்தார்.

தன்னம்பிக்கையின் மொத்த வடிவாய் உருவெடுத்த ஒரு பெண்ணின் வாழ்க்கைச் சரித்திரம்! ஆம் அவள்தான் ஹெலன் கெல்லர்! அவளது வாழ்க்கையைப் படிக்கும் போது உச்சி முதல் உள்ளங்கால்வரை மயிர்சிலிக்கும். எம் உயிர் சிலிர்க்கும். அவளது வாழ்க்கையை உணரும் போது எம்மை நினைத்து எமக்கு வெட்கம் தான் வரும். சற்றுச் சிந்தித்துப் பாருங்கள். அவளது கண்கள் இரண்டும் பார்க்காது. காதுகள் இரண்டும்கேட்காது. வாய் பேசாது. கொஞ்சம் யோசித்துப் பாருங்கள் அந்த வாழ்க்கையை !
இறைவனின் படைப்பில் இளவயதிலேயே அவளில் மனிதம் செத்துவிட்டிருந்தது. ஜீவன் மட்டும் உடலோடு ஒட்டிக் கொண்டிருக்க தனது உணர்வுகளை மற்றவர்களுக்கு எள்ளளவும் புரிய வைக்க முடியாத ஒரு இருண்ட உலகத்தில் தனியாக அவள் மட்டும்....

அப்போதுதான் ஸல்லிவன் என்ற ஆசிரியை அவளுக்குக் கிடைத்தார். மூன்று புலன்களற்ற ஹெலனுக்கு தன்னால் கற்பிக்க முடியும் என்கின்ற தன்னம்பிக்கை ஸல்லிவனுக்கு இருந்தது.
வார்த்தை வார்த்தையாக ஹெலனின் கையில் எழுதிக் காட்டித்தான் தன் கற்பித்தலைத் தொடங்கினார்.
ஸல்லிவனின் சலிக்காத தன்னம்பிக்கை ஹெலன் என்னும் சாதனையாளரை உலகிற்குக் காட்டியது. அவர் மட்டும் ஹெலனுக்கு ஆசிரியையாகக் கிடைக்காதிருந்திருந்தால் ஹெலன் என்ற அற்புத சாதனையாளரை உலகம் இழந்து போயிருக்கும்.
ஒருமுறை ஹெலன் கெல்லரை வண்டியில் அழைத்து சென்றார், ஆசிரியை ஆன் சல்லிவன். அப்போது, ஹெலனுக்கு கவனத்தை ஒருமுகப்படுத்தும் பயிற்சி அளித்தார்.
அந்த ஒருமுகப்படுத்தும் பயிற்சியில் கவனம் கொண்டு, 'திறந்த வெளியில் பயணித்துக் கொண்டிருக்கிறோம்...வயல் வெளியில் செல்கிறோம்...மரங்களுக்கு நடுவே செல்கிறோம்...' என பயணப் பாதையை உணர்ந்து கூறினார். இது, இன்றைய உளவியலாளர்களுக்கு கூட பெரும் வியப்பை தருகிறது.
எழுத்தாளராய்ப் பேச்சாளராய் அரிய சாதனைகள் நிகழ்த்தி அரிய வழிகாட்டும் நூல்கள் பல எழுதி எண்பத்தெட்டு வயது வரை ஆரோக்கியமாய் வாழ்ந்து உலகின் எட்டாவது அதிசயம் என்று பாராட்டுடப் பெற்றார் ஹெலன்.
‘வாழ்க்கையில் இழப்பு என்பதே இல்லை. ஒன்று போனால் இன்னொன்று வரும். அந்த நம்பிக்கை இருந்தால் வாழ்க்கை வெறுமை ஆகாது” என்று சொன்ன ஹெலன், உலகெங்கும் பார்வையற்றோர் செவிப்புலனற்றோர் பள்ளிகள் திறக்கவும் அவர்களுக்கு உதவவும் ஒன்றரைக் கோடி ரூபாய் நிதியுடன் ‘ஹெலன் கெல்லர் நிதி’ என்று தொடங்கினர்.
அதிலிருந்து கிடைத்த தொகைகளை மேற்படி பள்ளிகளுக்கு வாரி வழங்கினார். பார்வையற்றவர்களுக்கென்று தேசிய நூலகம் ஒன்றையும் உருவாக்கி உலகம் முழுவதிலிருந்தும் அதற்கு நூல்கள் வந்து குவிய ஏற்பாடு செய்தார். இப்படித் தன் இறுதிநாள் வரை தைரியமூட்டி அவர்களும் தன்னைப் போல மீட்சி பெற உழைத்தார்.
பார்க்கிற, கேட்கிற, பேசுகிற சக்திகளில் ஒன்றை இழந்தாலும் மனமுடைந்து மூலையில் முடங்கிப் போகும் எம்மில் பலருக்கு மத்தியில் மூன்றையுமே இழந்தும் ஹெலன் கெல்லர் படைத்த சாதனைதானே தன்னம்பிக்கையின் வித்து.

அதன் ஆதர்ஷ சக்தி உடல் ஊனமுற்றிருந்தாலும் சுடர்விட்டுப் பிரகாசித்தது. அவளது ஆத்மா நினைக்கவே உடல் புல்லரிக்க வில்லையா? உயிர் துடிக்கவில்லையா? எல்லாவற்றிற்கும் என்ன காரணம்? ஒரு சொல்லில் சொல்வதென்றால் தன்னம்பிக்கை!
அவள் பட்ட பாட்டை நினைக்கும் போது எமது துன்பங்கள் அவளது கால் தூசியும் பெறாது என்பது ஞிரியும். ஆனால் அவளுக்குள் ஜீவசக்தியாக ஒளிர்ந்து கொண்டிருந்தது வாழ வேண்டும் என்ற நம்பிக்கை! சாதிப்பேன் என்கின்ற நம்பிக்கை! மொத்தத்தில் தன்னம்பிக்கை!
‘வாழ்க்கையை ஒரு அவசர நெருக்கடியாக ஒவ்வொருவரும் உணரவேண்டும். அப்போதுதான் நமது ஆற்றல் எல்லாம் வலிமை பெற்று செயல்களைத் துரிதமாகச் செய்ய முடியும் என்று எழுதினார் அவர்.
“நிமிர்ந்து அமருங்கள். அதன் பின்னர் முதலில் ஒரு புனித எண்ணத்தை எல்லா உயிரினங்களின் மீதும் செலுத்துங்கள். எல்லோரும் இன்பம் பெறுக. எல்லோரும் அமைதி பெறுக; எல்லோரும் ஆனந்தம் பெறுக’ என்று மனத்தில் திரும்பத் திரும்பக் கூறுங்கள். கிழக்கு, தெற்கு, வடக்கு, மேற்கு என்று எல்லா திசைகளுக்கும் அவ்வாறு செய்யுங்கள். இவ்வாறு எவ்வளவுக்கெவ்வளவு அதிகம் செய்கிறார்களோ அவ்வளவுக்கவ்வளவு நீங்களும் நன்மையை உணர்வீர்கள்.

“நம்மை ஆரோக்கியமாக வைத்திருக்க மிகவும் எளிய வழி பிறரது ஆரோக்கியத்தைக் கவனித்துக் கொள்வதே; நாம் மகிழ்ச்சியாக இருப்பதற்கு மிக எளிய வழி பிறரை மகிழ்ச்சியுறச் செய்வதே’ என்பதை நாளடைவில் அறிந்து கொள்வீர்கள்.
" சுபுஹுன் குத்தூஸ் ரப்பில் மலாயிக்கத்தி வர்ரூஹி " என்பதாக இறைஞானிகள் கூறுவார்கள். இதையே அடிக்கடி திக்ராக செய்யுங்கள்
இதன்பிறகு கடவுளிடம் நம்பிக்கை உடையவர்கள் பிராத்தனை செய்யுங்கள்; பணத்திற்காக அல்ல, உடல்நலத்திற்காக அல்ல. சொர்க்கத்திற்காக அல்ல ஞானத்திற்காக, ஒளிக்காகப் பிரார்த்தனை செய்யுங்கள். பிற பிரார்த்தனைகள் எல்லாமே சுயநலம்தான்”
“பின்பு உங்கள் உடம்பை நினைத்து அது நலமாக உறுதியாக இருப்பதாக எண்ணுங்கள். உடல்தான் நம்மிடம் உள்ள சிறந்த கருவி. இது வஜ்ரம் போல் உறுதியாக இருப்பதாகவும், இதன் துணையுடன் நீங்கள் வாழ்க்கைக் கடலையே தாண்டிவிடலாம் என்று எண்ணுங்கள்.

உங்கள் உடம்பு உறுதியாக இருப்பதாக அதனிடம் சொல்லுங்கள். உங்கள் மனம் உறுதியாக இருப்பதாக அதனிடம் சொல்லங்கள். உங்களிடமே எல்லையில்லா நம்பிக்கை, முழு நம்பிக்கை வையுங்கள் என்கிறார் விவேகானந்தர்.
உள்ளிருக்கும் ஆத்மாவின் ஓயாத அழுகுரல்கள் சாதிக்க வேண்டும் என்ற தன்னம்பிக்கையை அந்த வெறியை எமக்குள் ஊட்டட்டும். அவை எம்மை தன்னம்பிக்கை மிகுந்த மனிதர்களாக்கட்டும். எம் சமுதாயம் உலகை அசைக்கும் ஆற்றல் கொண்ட சமுதாயமாக மாறட்டும்!
“இந்த இருண்ட அமைதியான என் வாழ்வை கடவுள் எதோவொரு திட்டத்தோடுதான் படைத்திருக்கின்றார். அதை என்றாவது ஒரு நாள் நான் உணர்வேன். அப்போது நான் அது குறித்து மகிழ்வேன்” - ஹெலன் கெல்லர்
கல்லூரியில் படித்த போது, 'என் கதை' என்ற தலைப்பில், சுயசரிதை நூலை எழுதினார். தொடர்ந்து, 'இருளுக்கு வெளியே' என்ற இவரது கட்டுரை பிரபலமானது.

ஹெலன் கெல்லர், 39 நாடுகளில் சுற்றுப்பயணம் செய்தார். அப்போது பார்வையற்றோர், செவித்திறன் குன்றியோருக்கு, பள்ளிகள் திறக்கும்படி, பிரசாரம் செய்தார்; நிதியுதவியும் வழங்கினார்.மாற்றுத் திறனாளிகள் வாழ்வு உயர, தொழிற்பயிற்சி தேவை என வலியுறுத்தினார்.
இந்தியாவில் அப்போதைய பிரதமர் ஜவஹர்லால் நேருவை சந்தித்தார். பார்வையற்றோர், செவித்திறன் குறைந்தோருக்கு பல திட்டங்களை பரிந்துரைத்தார்.
அவரது வாழ்க்கை அனுபவம், 'மீட்சி' என ஆவணப் படமாக எடுக்கப்பட்டது. அதில் அவரே நடித்தார். பார்வையற்றோருக்காக தேசிய நூலகம் ஒன்றையும் உருவாக்கினார்.
வாழ்நாளில், 12 முக்கிய நூல்களை எழுதியுள்ளார் ஹெலன்.
பொதுநலனில் பெரும் அக்கறை கொண்டிருந்தார். இருபதாம் நூற்றாண்டில், உலகின் சிறப்பு மிக்க பெண்ணாக பாராட்டு பெற்றார்.

பல்வேறு வளர்ச்சிப் பணிகளில் ஈடுபட்ட ஹெலன் கெல்லர், ஜூன் 1, 1968ல், 87ம் வயதில் மறைந்தார்.
அமெரிக்கா, அலபாமா மாநிலத்தில் 2009ல் ஹெலன் கெல்லருக்கு வெண்கலச் சிலை நிறுவப்பட்டது. முதன் முதலாக ஏழு வயதில், தண்ணீரைத் தொட்டு உணர்ந்து பொருளை புரிந்துகொண்ட காட்சி சிலையாக வடிக்கப்பட்டுள்ளது.

**சாதனைகளின் சரித்திரங்கள் 8**
( நிக் வுஜிசிக்)



1982 இல் ஆஸ்திரேலியாவின் மெல்போர்னில் துஷ்கா (நர்ஸ்) மற்றும் போரிஸ் வுஜிசிக் ஆகியோருக்குப் பிறந்தார். அவர் ஒரு ஆரோக்கியமான குழந்தையாக இருந்தாலும், நிக் இரண்டு கைகள் மற்றும் இரண்டு.கால்கள் இல்லாமல் பிறந்தார்; அவருக்கு கால்கள் இல்லை, ஆனால் இரண்டு சிறிய பாதங்கள், அவற்றில் ஒன்று இரண்டு கால்விரல்கள்.
"தாயின் வயிற்றில் கருவாக இருக்கும்போதே தெரிந்திருந்தால்கூட கருவைக் கலைத்திருப்பார்கள் பெற்றோர்கள். பாவம், அந்த அப்பாவிப் பெற்றோர்கள் பெற்ற ஆண் குழந்தை இரு கைகளும் இல்லாமல், இரு கால்களும் இல்லாமல் பிறந்திருப்பதைப் பார்த்ததும் துடிதுடித்துப் போனார்கள். அக்குழந்தையை வளர்த்தெடுக்கவும், படிக்க வைக்கவும் அவர்கள் பட்ட துயரங்களையும், துன்பங்களையும் வார்த்தைகளால் சொல்லிவிட முடியாது.
கொஞ்சம் வளர்ந்து பள்ளியில் சேர்க்கப்போகும் போது அரசாங்கம், பள்ளியில் சேர்ந்து படிக்க அனுமதிக்கவில்லை. அரசை எதிர்த்து ஒரு மாபெரும் யுத்தமே நடத்தி அரசுப் பள்ளியில் சேர்த்து படிக்க வைத்தனர் பெற்றோர்கள்.
பள்ளியில் அவரைக் கிண்டலும், கேலியும் செய்யாத மாணவரும் இல்லை, மாணவியரும் இல்லை. பள்ளி முடிந்து ஒருநாள் வீட்டுக்கு வந்த சிறுவன் வூஜிச் தனது தாயாரைக் கட்டியணைத்துக் கொண்டு "அம்மா, என்னை

கருவிலேயே சாகடித்திருக்கக் கூடாதா? பலரும் அவமானப்படுத்துகிற என்னை எதற்காக பெற்றெடுத்தாய்?' என்ற கேட்க , ஒரே பதில் : "கடவுளிடம் கேள் "
என் தேவனே .. 'எனக்கும் கைகள் , கால்கள் கொடு 'கடவுள் தான் அதிசயங்களை நிகழ்த்துபவராயிற்றே விடியும்போது தனக்குத் கைகளும், கால்களும் முளைத்திருக்கும் என பல இரவுகளில் கண்மூடி விழித்த எந்த விடியலிலும் நம்பிக்கை வெளிச்சம் கொடுக்க வில்லை.
இருப்பினும், அவரது கைகால்கள் இல்லாததால் பள்ளி கொடுமைப்படுத்துபவர்களுக்கு இலக்காகி, அவர் கடுமையான மன உளைச்சலுக்கு ஆளானார். எட்டு வயதில், அவர் தற்கொலை செய்து கொள்ள நினைத்தார், மேலும் பத்து வயதில் தனது குளியல் தொட்டியில் மூழ்கி தற்கொலை செய்து கொள்ள முயன்றார்; அவனது பெற்றோர் மீதான அன்பு அவனைப் பின்தொடர்வதைத் தடுத்தது.
கடவுள் தனக்கு கைகளையும் கால்களையும் தர வேண்டும் என்று நிக் மிகவும் கடினமாக ஜெபித்தார், ஆரம்பத்தில் கடவுளிடம், அவருடைய பிரார்த்தனைக்கு பதிலளிக்கப்படாவிட்டால், நிக் அவரை காலவரையின்றி பாராட்ட மாட்டார் என்று கூறினார். இருப்பினும், அவரது தாயார் கடுமையான ஊனமுற்ற ஒரு மனிதனைப் பற்றிய செய்தித்தாளில் கட்டுரையைக் காண்பித்தபோது அவருடைய நம்பிக்கையில் ஒரு முக்கிய திருப்புமுனை ஏற்பட்டது.

கைகால்கள் இல்லாமல் ஒரு முழு வாழ்க்கையை எப்படி வாழ்வது என்பதை நிக் படிப்படியாகக் கண்டுபிடித்தார், கைகால் உள்ளவர்கள் சிந்திக்காமல் சாதிக்கும் பல தினசரி திறன்களை மாற்றியமைத்தார்.
நிக் தனது இடது காலில் இரண்டு கால்விரல்கள் மற்றும் அவரது பெருவிரலில் சறுக்கிய ஒரு சிறப்பு பிடியுடன் எழுதுகிறார். கம்ப்யூட்டரை எப்படிப் பயன்படுத்துவது என்பது அவருக்குத் தெரியும், மேலும் "ஹீல் அண்ட் டோ" முறையைப் பயன்படுத்தி நிமிடத்திற்கு 45 வார்த்தைகள் வரை தட்டச்சு செய்யலாம்.
கோல்ஃப், நீச்சல், ஸ்கை-டைவிங் போன்றவற்றில் பங்கேற்பதைத் தவிர, டென்னிஸ் பந்துகளை வீசுவது, டிரம் பெடல்களை விளையாடுவது, ஒரு கிளாஸ் தண்ணீர் எடுப்பது, தலைமுடியை சீப்புவது, பல் துலக்குவது, ஃபோனைப் பேசுவது மற்றும் ஷேவ் செய்வது போன்றவற்றையும் அவர் கற்றுக்கொண்டார்.
வூஜிச் வளர, வளர அவன் பேச்சு பலரையும் வசீகரிக்கத் தொடங்கியது. கைகளும் கால்களும் இல்லையென்றாலும் அவன் ஒரு மாபெரும் பேச்சாளனாக மாறினான். தனது 26-வது வயதில் ஒரு சிறந்த தன்னம்பிக்கை சொற்பொழிவு ஆற்றும் சாதனை மனிதராக மாறிவிட்டான் வூஜிச். உலகிலுள்ள அனைத்து மக்களும் அவனது பேச்சை ஆர்வமுடன் கேட்பதற்காக குவியத் தொடங்கினார்கள். வூஜிச் பேசுகிறார் என்றால் அரங்கம் முழுவதும் நிற்கக்கூட இடமில்லாமல் நிரம்பி வழியும்.
வூஜிச் பேசும் இடங்களிலெல்லாம் ஒன்றை குறிப்பிட்டுச் சொல்வதுண்டு. 'கடவுள் இந்த உலகத்துக்குச் செய்ய வேண்டியதை என்னைப் போன்ற ஒரு அசாதாரணப் பிறவி மூலமாகத்தான் செய்து முடிக்கிறார் என்பதை உணர்ந்து கொண்டேன். எனக்கு அந்தப் பெரும் பாக்கியம் கிடைத்திருக்கிறது. உண்மையில் நான் குறையுடன் பிறந்ததற்காகப் பெருமைப்படுகிறேன்.

என் உருவத்தை என்னால் மாற்ற முடியாது. ஆனால் உலகம் முழுவதும் மனதளவில் குறைப்பட்ட எத்தனையோ பரிதாபத்துக்குரியவர்களை மாற்றி மறுவாழ்வு வாழ வைத்திருக்கிறேன். நீங்கள் எப்படிப்பட்ட தாழ்வு மனப்பான்மை உள்ளவராக இருந்தாலும் உங்களை என்னால் மாற்ற முடியும்' என்று ஒரு கனமழை பொழிவதுபோல தன்னம்பிக்கை வார்த்தைகளை கொட்டுகிறார் வூஜிச்.
இரு கைகளும், இரு கால்களும் இல்லாமல் பிறந்த நான் எனக்குத் தேவைப்படும் எந்த உதவியையும் நான் பிறரைச் செய்யுமாறு எப்போதும் சொல்வதில்லை. எதிர்பார்ப்பதும் இல்லை. எனக்குத் தேவையான அனைத்தையும் நானே செய்துகொள்கிறேன்.

எனது வாகனத்தை நானேதான் ஓட்டிச் செல்வேன். என் வாழ்வில் நடந்த அவமானங்களையும், கடந்து வந்த கரடு, முரடான பாதைகளையும் சொல்லிச் சொல்லியே பலரை உற்சாகப்படுத்தியிருக்கிறேன். எனது பேச்சைக் கேட்க வந்த எண்ணற்ற மக்களின் தாழ்வு மனப்பான்மையை தவிடுபொடியாக உடைத்தெறிந்திருக்கிறேன்
நடக்கவே முடியாமல் என் கூட்டத்துக்கு வந்த பல மாற்றுத்திறனாளிகள் என் பேச்சைக் கேட்டு எழுந்து நடந்திருக்கிறார்கள். சொன்னால் நம்ப மாட்டீர்கள், சிலர் ஓடியும் இருக்கிறார்கள்.
அவமானங்களையும், அடைந்து வரும் துயரங்களையும் தயவுசெய்து தூக்கி வீசுங்கள். ஒவ்வொரு நாளும் காலை எழுகிறபோது புதிதாகப் பிறந்ததாக எண்ணிக்கொண்டு புதிய பயணத்தைத் தொடங்குங்கள். உங்கள் ஒவ்வொருவரிடமும் திறமைகள் இருக்கின்றன என்பதை நம்புங்கள்.
நீங்கள் ஏதேனும் சாதிப்பதற்காகத்தான் கடவுள் உங்களை அனுப்பியிருக்கிறார் என்று நம்புங்கள், எளிதில் வெற்றியடைவீர்கள்.

அமெரிக்காவின் கலிபோர்னியாவில் உள்ள லாஸ் ஏஞ்சல்ஸில் வசிக்கிறார்.
2005 ஆம் ஆண்டில், வுஜிசிக் ஆண்டின் இளம் ஆஸ்திரேலியன் விருதுக்கு பரிந்துரைக்கப்பட்டார்.
12 பிப்ரவரி 2012 அன்று, அவர் தனது காதலி கனே மியாஹாராவை மணந்தார், மேலும் 13 பிப்ரவரி 2013 அன்று, அவர்களின் மகன் கியோஷி ஜேம்ஸ் வுஜிசிக் 8 பவுண்டுகள் 10 அவுன்ஸ் எடையுடன் பிறந்தார். இரண்டு ஆண் குழந்தைகள் மற்றும் இரட்டை மகள்களின் தந்தை
ஒருவரை மட்டும் என்னால் ஊக்கப்படுத்த முடிந்தால் இந்த வாழ்க்கையில் என் வேலை முடிந்துவிட்டது.

எல்லோரும் வெற்றி பெற விரும்புகிறார்கள், ஆனால் வெற்றி தோல்வி வித்தியாசத்தில் நாம் தாமதிக்கக் கூடாது... ஆனால் தோல்வி தோல்வியா?
நான் என் வாழ்க்கையை நேசிக்கிறேன், ஏனென்றால் நான் என் நோக்கத்தைப் பார்த்தேன்.
நான் மீண்டும் மீண்டும் முயற்சிப்பேன், ஏனென்றால் நான் கைவிடும் தருணம், நான் தோல்வியுற்ற தருணம்.
நன்றியுள்ள ஒரு கசப்பான நபரை நான் சந்தித்ததில்லை. அல்லது கசப்பான ஒரு நன்றியுள்ள நபர்.
நீங்கள் போதுமானவர் இல்லை என்று நினைப்பது பொய். நீங்கள் எதற்கும் தகுதியற்றவர் என்று நினைப்பது பொய்.

வழியில் நீங்கள் கீழே விழலாம், ..சில சமயங்களில் வாழ்க்கையில், நீங்கள் கீழே விழலாம், மீண்டும் எழும்புவதற்கான வலிமையைக் காணமுடியாமல்... நம்பிக்கை இருப்பதாக நினைக்கிறீர்களா? ஏனென்றால், நான் இங்கே கீழே இருக்கிறேன், எனக்கு கைகளும் கால்களும் இல்லை, ... என்னால் எழுந்திருப்பது சாத்தியமற்றதாக இருக்க வேண்டும்,
ஆனால் அது இல்லை.நான் முயற்சி செய்யும் வரை, எப்போதும் எழுந்திருக்க வாய்ப்பு உள்ளது. நீங்கள் கைவிடாத வரை இது முடிவல்ல.
நீங்கள் ஒரு நல்ல கணிதவியலாளரா, அல்லது ஒரு நல்ல தடகள வீரரா, அல்லது எதிலும் திறமை இல்லாதவராக இருந்தால் - நீங்கள் நினைப்பது எனக்கு கவலையில்லை. ஆனால் நான் வந்து சொல்கிறேன், நீங்கள் இருக்கும் விதம் மிகவும் அருமை.
என் மனைவியின் கைகளைப் பிடிக்க எனக்கு கைகள் இல்லாமல் இருக்கலாம், ஆனால் அவளுடைய இதயத்தைப் பிடிக்க எனக்கு கைகள் தேவையில்லை. அதைத்தான் நான் தாங்குவேன்.
என்னிடம் இல்லாததற்கு கடவுள் மீது கோபம் கொள்வது அல்லது உங்களிடம் உள்ளதற்கு நன்றி சொல்ல எனக்கு விருப்பம் உள்ளது.

உள்ளுக்குள் உடைந்து போனால் வெளியில் முழுமையாய் இருப்பதில் அர்த்தமில்லை.
நான் எழுவதற்கு நூறு முறை முயற்சிப்பேன், நான் நூறு முறை தோல்வியுற்றால். நான் தோல்வியடைந்து விட்டுவிட்டால், நான் எப்போதாவது எழுந்திருப்பேனா? இல்லை! நான் தோல்வியுற்றால், நான் மீண்டும் மீண்டும் முயற்சிப்பேன். ஆனால் இது முடிவல்ல என்பதை நான் உங்களுக்கு சொல்ல விரும்புகிறேன்.
தோல்வி முக்கியமல்ல, அதை எப்படி சமாளிப்பது என்பது முக்கியம்."
'கடவுள் அதிசயம் நிகழ்த்துவார் ' என்ற தனது நம்பிக்கையில் , 'ஆம், நிச்சயம் அதுவும் நடக்கும். எனக்கும் கால்கள் முளைக்கும் .அந்த நம்பிக்கையில்தான் ஒரு ஜோடி ஷூ வாங்கி அலமாரியில் பத்திரமாக வைத்திருக்கிறேன் "

## சாதனைகளின் சரித்திரங்கள் 9

( நிக் வுஜிசிக் 2)

(நிக் வுஜிசிக்கின் காதல் அதையும் தாண்டி புனிதமானது! )
வாழ்க்கையில் எனக்கு கேர்ள் ஃப்ரெண்ட் அமையவே அமையாது' என்ற கவலைதான், சிறுவயதில் நிக் தற்கொலை முயற்சி செய்ய முக்கியக் காரணம்.
2010-ம் ஆண்டு டெக்ஸாஸின் ஓர் இடத்தில் உரையாற்றியபோது அவளைப் பார்த்தார் நிக். கண்டதும் காதல். அன்று மேடையில் வார்த்தைகள் தடுமாறின. அந்தப் பெண்ணின் பெயர் கேனே. அவளை எப்படியாவது காதலித்தே தீர வேண்டும் எனத் தோன்றியது.
மீண்டும் மீண்டும் சந்திப்பதற்கான வாய்ப்புகளை வலிய ஏற்படுத்தினார். நேசம் வளர்ந்தது. கொஞ்சம் டேட்டிங். ஒருநாள் கடலின் நடுவில் படகின் முகப்பில் 'டைட்டானிக்' ஜாக்கும் ரோஸுமாகத் தழுவி நின்றார்கள். அந்தப் பொழுதில் தன் காதலைச் சொல்லி, வாயால் மோதிரமும் அணிவித்தார் நிக்.
கேனே மகிழ்ச்சியில் திளைத்தார். 'சில ஆண்களைப் பார்த்ததும் பாய் ஃப்ரெண்ட் ஆக்கிக்கொள்ளலாம் எனத் தோன்றும். ஆனால் நிக்கைச் சந்தித்த முதல் நொடியிலேயே இவரை கணவர் ஆக்கிக்கொள்ள வேண்டும் எனத் தோன்றியது' என்பது கேனேவின் லவ் மொழி.
இருவரும் 2012-ம் ஆண்டு திருமணம் செய்துகொண்டார்கள். 2013-ம் ஆண்டு பரிபூரண ஆரோக்கியத்துடன் ஓர் ஆண் குழந்தையும் பெற்றுக்கொண்டார்கள்.
2015-ம் ஆண்டு இரண்டாவது மகன் பிறந்திருக்கிறான். ஒரு பேட்டியில் நிருபர் ஒருவர் நிக்கிடம் கேட்ட கேள்வி, 'நீங்கள் எப்படி குழந்தை பெற்றுக்கொண்டீர்கள்... கை, கால்கள் இல்லாமல் எப்படிச் சாத்தியமானது?' நிக் பட்டெனக் கேட்ட பதில் கேள்வி, 'குழந்தை பெற்றுக்கொள்ள கை, கால்கள் அவசியமா என்ன?'
நிக்- கேனே காதல் கதை:

## சாதனைகளின் சரித்திரங்கள் 10

( நிக் வுஜிசிக் 3 )
சக்கி என்பவன், நிக்கின் பள்ளியில் படித்த புஜபல முரட்டு மாணவன். நிக்கிடம் அடிக்கடி வம்பிழுத்தான். 'ஒண்டிக்கு ஒண்டி வர்றியா?' என ஒருமுறை அவன் கேட்க, நிக்கும் ஏதோ ஒரு தைரியத்தில் ஒப்புக்கொண்டான்.

மறுநாள் மதிய இடைவேளையில் மைதானத்தில் மாணவர்கள் குழுமி இருக்க, நிக்கும் சக்கியும் எதிர் எதிரே. நிக்குக்குள் பயம் நிரம்பித் ததும்பியது. ஆசிரியர்கள் யாராவது விஷயம் அறிந்து வந்து சண்டையைத் தடுத்துவிடுவார்கள் என நம்பினான். அது நடக்கவில்லை.
'வீல்சேரில் இருந்து இறங்கு' என்றான் சக்கி.
'நீயும் முட்டி போட்டுத்தான் மோத வேண்டும்' என்றான் நிக்.
சக்கி முட்டி போட்டான். நிக்கை அடித்துப் போட்டான். நிக்குக்கு உடலைப் புரட்டி, முன்நெற்றியை தரையில் பதித்து, அழுத்தி எழுந்து நிற்பதே சிரமமாக இருந்தது. மீண்டும் மீண்டும் அடி. நிக், சுருண்டு விழுந்தான். 'அய்யோ வேணாம்' என மாணவிகள் அழ ஆரம்பிக்க, தனக்காக யாரோ சிந்தும் கண்ணீரும், கீழே விழுந்த அவமானமும் நிக்கைச் சிலிர்த்தெழச் செய்தன.
சிரமப்பட்டு மீண்டும் எழுந்து, தன் உடலைத் தரையில் ஊன்றி, ஓர் ஏவுகணைபோல பாய்ந்து, தன் தலையால் சக்கியின் முகத்தில் கடுமையாக மோதி விழுந்தான். சக்கியின் மூக்கு உடைந்து ரத்தம் கொட்டியது.
கூட்டம் ஸ்தம்பித்தது. பின் நிக்குக்காக ஆர்ப்பரித்தது. நிக்கோ பதறி, சக்கியிட மன்னிப்பு கேட்டான். சக்கி, அங்கே நிற்க முடிகாமல் வெளியேறினான். பின் பள்ளியில் இருந்தும் நிரந்தரமாக!
பயத்தை விழுங்கிவிட்டால் எந்த ஓர் அசாதாரணச் சூழலையும் சமாளிக்கலாம் என நிக்குக்குத் தைரியப் பாடம் கற்றுக்கொடுத்தது அந்த நிகழ்வு.
அதேபோல லாரா என்கிற பள்ளித்தோழி கேட்ட ஒரு கேள்வி, நிக்கை அடுத்தக் கட்டம் நோக்கி நகர்த்தியது.
'இப்படி எத்தனை காலம்தான் ஒவ்வொன்றுக்கும் அடுத்தவர்களையே நம்பி இருப்பாய்?'-தோழியின் கேள்வியால் காயப்படாமல் 'தான் சுதந்திரமாக இயங்கப் பழக வேண்டும்' என உணர்ந்தான் நிக்.
பல் துலக்குவதில் இருந்து, குளிப்பது, கழிவறையை உபயோகிப்பது, உடை அணிவது, முட்டையை உடைத்து ஆம்லெட் போடுவது, இரண்டு விரல்களால் ரிமோட்டை இயக்குவது, கீபோர்டில் டைப் அடிப்பது, குட்டிக் காலை துடுப்பெனச் சுழற்றி நீச்சலடிப்பது என, தினம் தினம் புதிய விஷயங்களை கற்க ஆரம்பித்தான்.
LIFE WITHOUT LIMITS இது, நிக்கின் வாழ்க்கை வரலாறு புத்தகம். UNSTOPPABLE, LIMITLESS, STAND STRONG, LOVE WITHOUT LIMITS ஆகியவை, நிக்கின் பிற புத்தகங்கள். அனைத்துமே விற்பனையில் சாதனை படைப்பவை. தவிர, NO ARMS, NO LEGS, NO WORRIES என்ற நிக்கின் வாழ்க்கையும் தன்னம்பிக்கை உரைகளும் அடங்கிய டி.வி.டி மிகப் பிரபலம்.
நிக் ஒருமுறை இந்தோனேஷியா சென்றபோது, அங்கு இருந்த நண்பர், நிக்கின் டி.வி.டி., போலி டி.வி.டி-யாக ஒன்றரை லட்சம் காப்பிகளுக்கும் மேல் விற்றுள்ளதாக வருத்தப்பட்டார். நிக் சிரித்தபடியே சொன்ன பதில், 'நல்ல விஷயம் மக்களிடம் எந்த வழியில் போய்ச் சேர்ந்தாலும் எனக்கு மகிழ்ச்சியே!"
நிக் தன்னம்பிக்கைப் பற்றிய சொற்பொழிவு உரையாற்றி முடித்ததும் பார்வையாளர்கள் வரிசையில் நின்று அவரைத் தழுவிச் செல்வது வழக்கம்.
2010-ம் ஆண்டு ஒரு மணி நேரத்தில் 1,749 பேர் நிக்கைத் தழுவிச்செல்ல, அது கின்னஸ் சாதனையாகப் பதிவானது. இருந்தாலும், நிக் தனக்குக் கிடைத்த சிறந்த தழுவலாக நினைப்பது, இரண்டு கைகள் இல்லாத ஆப்பிரிக்க சிறுவன் தன்னை தழுவியதையும்,
2009-ம் ஆண்டு இரண்டரை வயது ஆஸ்திரேலியச் சிறுமி ஒருத்தி, தன் கைகளைப் பின்னால் கட்டிக்கொண்டு நிக்கை போன்றே அவரது பாணியிலேயே கழுத்தாலும் தோள்பட்டையாலும் தழுவியதே!

## சாதனைகளின் சரித்திரங்கள் 11.

உசைன் போல்ட் ( USAIN BOLT )




கரீபியன் தீவுவாசிகளுக்கு கிரிக்கெட், தடகளமும், இரண்டு "கால்கள்". விளையாட்டுகளின் மீது அலாதியான விருப்பம் அங்கு வளரும் இளம் தலைமுறைக்கு இயல்பானதே. சிறுவன் உசைனுக்கும் கிரிக்கெட், கால்பந்து மீது பெரும் ஆர்வம்.

அதிலும் கிரிக்கெட் விளையாடுவதென்றால் சொல்லவே வேண்டாம். தனது பள்ளியின் கிரிக்கெட் அணியில் பந்து வீச்சாளராக விளையாடினார் உசைன். பந்து வீச ஓடிவரும் உசைனின் வேகத்தைக் கவனித்துப் பாராட்டிய பள்ளி ஆசிரியர்,
“நீ தடகளப் போட்டிகளில் கவனம் செலுத்து உசைன். பள்ளிகளுக்கு இடையிலான தடகளப் போட்டிகளில் கலந்துகொள்” என்றார். இருப்பினும் உசைனின் மனது ஆசிரியரின் வார்த்தைகளை முதலில் ஏற்கவில்லை. ஆசிரியர் சொன்னது போலவே பள்ளிகளுக்கு இடையிலான தடகளப் போட்டிகள் வர, தனக்குத் தடகளத்தில் ஆர்வமேதுமில்லை என்று ஆசிரியரிடம் கூறினார் உசைன். ஆனால் ஆசிரியரோ, “நீ இன்று பங்கேற்றால் நிச்சயம் வெற்றி பெறுவாய்” என்றார்.
மேலும், அமைதியாக இருந்த உசைனிடம், ”நீ இதில் வெற்றி பெற்றால் சிக்கனோடு சேர்ந்த நல்ல மதிய உணவு வாங்கித் தருகிறேன்” கூறினார். சிரித்துக் கொண்டே அதனை ஒப்புக்கொண்ட உசைன் தடகளப் போட்டியில் வெற்றியும் பெற்றார்.

இதுவே தடகள உலகில் உசைன் போல்ட்டின் முதல் வெற்றி. சிக்கனின் சுவையைக் காட்டிலும் வெற்றியின் சுவை போல்ட்டுக்குப் பெரிதும் பிடித்துப் போனது. மேலும், பல போட்டிகளில் விளையாட்டாகவே பங்கேற்று வென்றார் உசைன். வெற்றிகளும் பதக்கங்களும் மேன்மேலும் குவிய 14 வயதிலேயே சர்வதேச அளவிலான ஜூனியர் லெவல் தடகளப் போட்டிகளில் பங்கு பெறும் வாய்ப்பு உசைனுக்குக் கிடைத்தது.
இயல்பாக அமைந்த உயரம், ஓட்டத்திற்கு ஏற்ற உடல்வாகு, பயிற்சி என அனைத்தும் கிடைத்திருந்தும் அவற்றின் முக்கியத்துவத்தை உணர முடியாமல் கிரிக்கெட் மீதான ஆர்வம் போல்ட்டின் கண்களை மறைத்தன. இதனால் தனது முதல் சர்வதேச அளவிலான ஜூனியர் லெவல் போட்டியில் தோல்வியைக் கண்டார் உசைன்.
தோல்வி உசைனுக்கு மிகவும் கசந்தது. மனதை மிகவும் பாதித்தது. வீட்டின் கொல்லைப் புறத்தில் தனிமையில் அழுது கொண்டிருந்த போல்ட்டை அவரது பெற்றோர் அரவணைத்தனர். “இப்போது ஒன்றும் ஆகவில்லை, முறையான பயிற்சியில் ஈடுபடு, முயற்சியே செய்யாமல் ஒதுங்கிப் போகாதே. அதன் முடிவு என்னவானாலும் தைரியமாக ஏற்றுக்கொள்” என்றனர்.

உசைனுக்கு நம்பிக்கை பிறந்தது. அமெரிக்கத் தடகள வீரர் மைக்கேல் ஜான்ஸன் ஒலிம்பிக்கில் 200 மீட்டர் பந்தய தூரத்தை 19.32 விநாடிகளில் கடந்த சாதனை வீடியோவைப் பார்க்கும் வாய்ப்பு போல்ட்டுக்குக் கிடைத்தது. தானும் அந்த இடத்தில் ஒரு நாள் நிற்பேன் என மனதில் உறுதி கொண்டார் சிறுவனான உசைன் போல்ட்.
2002-ல் தன் சொந்த நாடான ஜமைக்காவில் நடந்த சர்வதேச அளவிலான ஜூனியர் தடகளப் போட்டியில் 200 மீட்டர் ஓட்டத்தில் 20.61 விநாடிகளில் கடந்து வெற்றி பெற்று சர்வதேச அளவில் தன் முதல் வெற்றியைப் பதிவு செய்ததோடு ஜூனியர் பிரிவில் மிகக் குறைந்த வயதில் உலக சாம்பியன் என்ற பெயரையும் பெற்றார்.
உசைனுக்குப் புதிய பயிற்சியாளராக வந்த ஃபிட்ஸ் கோல்மென், களப் பயிற்சிகளை விட மற்ற பயிற்சிகளில் அதிக கவனம் செலுத்தினார். முதுகிலும், கால்களிலும் ஏற்பட்ட அதீத வலியை போல்ட்டால் தாங்க முடியவில்லை.
2004-ல் போல்ட்டின் முதல் ஒலிம்பிக் வாய்ப்பு. ஆனால் ஃபிட்னஸ் சரியாக இல்லாத காரணத்தால் 200 மீட்டர் பந்தயத்தில் முதல் சுற்றிலேயே வெளியேறினார்.
காயத்தைவிட போல்ட்டுக்குத் தோல்வியே அதிகமாக வலித்தது. போல்ட்டைப் பரிசோசித்த ஜெர்மானிய மருத்துவர் ஹேன்ஸ் முல்லர் போல்ட்டின் முதுகெலும்பு சற்றே வளைந்திருப்பதாகக் கூறினார்.
அதனால் அவருடைய வலது கால் இடது காலைவிட அரை இன்ச் உயரம் குறைவாக இருப்பதாகவும் முதுகிலும் காலிலும் ஏற்படும் வலிக்கு இதுவே காரணம் என்றும் கூறினார். பிசியோதெரபி சிகிச்சை மூலமாக குணப்படுத்தலாம் என்றும், கூடுதலாக ஹோமியோபதி மருந்துகள் எடுத்துக் கொள்ளவும் பரிந்துரைத்தார்.
சற்றே மனம் தளர்ந்திருந்த போல்ட்டுடன் புதிய பயிற்சியாளராக கைகோத்தார் ஜமைக்காவின் இளென் மில்ஸ். மில்ஸின் புதிய பயிற்சி முறைகள் போல்ட்டை சற்றே தேற்றின.
2005-ல் பின்லாந்தில் உலக தடகள சாம்பியன்ஷிப் போட்டியில் தசைப் பிடிப்பினால் தோல்வி,
2006-ல் காமன்வெல்த் போட்டிகளிலும் அதே தசைப் பிடிப்பினால் தோல்வி. மிகவும் மனம் தளர்ந்த போல்ட்டை அரவணைத்த பயிற்சியாளர் மில்ஸ்,
”2008 ஆம் ஆண்டு ஒலிம்பிக் போட்டியை இலக்காக வைத்துப் பயிற்சியைத் தொடங்கலாம்” என உற்சாகமூட்டினார்.
“உனக்காக ஓடு. உனக்கென ஒரு லட்சியத்தையும், இலக்கையும் உருவாக்க ஓடு. அதை நோக்கியே நீ உன்னைச் செலுத்து. பழைய தோல்விகள், முதுகு வலி, கால் வலி என எல்லாவற்றையும் தூக்கி எறிந்துவிட்டு ஓடு, உறுதியாக ஓடு, முன்பை விட உறுதியாக முன்பைவிட வேகமாக” என ஒவ்வொரு தருணத்திலும் ஊக்கப்படுத்தினார் மில்ஸ்.
இதனைத் தொடர்ந்து உசைன் போல்ட் கடினமாக உழைக்க ஆரம்பித்தார். 2008ஆம் ஆண்டு பெய்ஜிங் ஒலிம்பிக்கில் 100 மீட்டர் பந்தய தூரத்தை 9.69 விநாடிகளில் கடந்து உலக சாதனை படைத்து தங்கம் வென்றார், அடுத்து 200 மீட்டரில் 19.30 விநாடிகள் வென்று மைக்கேல் ஜான்ஸனின் 12 ஆண்டு கால உலக சாதனையைத் தகர்த்தார்.
4 x 100 மீட்டர் ரிலேவிலும் 37.10 விநாடிகள் என்று உலக சாதனை படைத்தார்.
உலகமே உசைன் போல்ட்டைத் திரும்பிப் பார்த்தது. ஊடகங்கள் அனைத்தும் தூக்கி வைத்துக் கொண்டாடின. வெற்றிக்குப் பின்னர் களத்தில் இரண்டு கைகளையும் வானத்தை நோக்கி போல்ட் கொடுக்கும் போஸ் உலக ஃபேமஸ்.

2009 பெர்லின் உலக சாம்பியன்ஷிப் போட்டியில் 100 மீ மற்றும் 200 மீ இரண்டிலும் 9.58 மற்றும் 19.19 விநாடிகளில் கடந்து தன்னுடைய சாதனைகளைத் தானே மாற்றியமைத்தார் உசைன் போல்ட்.
2012ஆம் ஆண்டு மற்றும் 2016ஆம் ஆண்டும் இரண்டு ஒலிம்பிக்கிலுமே 100 மீ, 200 மீ, 400 மீ ரிலே என மூன்று போட்டிகளிலும் தங்கம் வென்று தனது தொடர் சாதனைகளால் தடகள உலகில் தனது கால்தடத்தை மிக அழுத்தமாகப் பதித்தார்.

தனது சுயசரிதையில், தடகள உலகில் தனது முதல் வெற்றியில் கிடைத்தது சிக்கன் மட்டுமின்றி தன் திறமையைப் பற்றிய புரிதலுமே எனக் குறிப்பிட்டிருக்கிறார் உசைன் போல்ட்.
அதுமட்டுமில்லாமல் தனது ஜூனியர் லெவல் சர்வதேசப் போட்டியின் வெற்றியால் தனக்குக் கிடைத்த சுகபோகங்களில் சிக்கி அந்த இடத்திலேயே தேங்கிவிடாமல் அதைக் கடந்துவந்த அனுபவங்களையும் பகிர்ந்து தன்னை அடிமைப்படுத்தக்கூடிய கஞ்சா உட்பட பல போதைப் பழக்கங்களுக்கு அடிமையாகாமல் தன் இலக்கை நோக்கிப் பயணித்தது என்று பல அனுபவங்களைக் குறிப்பிட்டுள்ளார்.
2017ஆம் ஆண்டு ஒலிம்பிக் போட்டியில் வெண்கலப் பதக்கத்துடன் தடகளப் போட்டிகளில் இருந்து தனது ஓய்வையும் அறிவித்தார். ஓய்வுக்குப் பின்னர் தனக்குப் பிடித்த கிரிக்கெட் விளையாட்டில் ஈடுபட்டு வருகிறார். அத்துடன் கால்பந்தாட்டத்தில் தன் விருப்ப அணியான மான்செஸ்டர் யுனைடெட் அணியில் இணைந்து விளையாடுவது தனது ஆசை என்றும் தெரிவித்திருந்தார்.
தற்போது “ட்ராக்ஸ் அண்ட் ரெக்கார்ட்ஸ்” என்ற பெயரில் உணவகமும், ஆடை தயாரிக்கும் நிறுவனமும் நடத்தி வருகிறார்.
தன் கடின முயற்சியால் இன்று உலக அரங்கில் தன் பெயரையும் தன் நாட்டின் பெயரையும் நிலை நிறுத்தி, தடகள உலகில் நீங்கா தடம் பதித்தார் உசைன் போல்ட்

**சாதனைகளின் சரித்திரங்கள் 12**
மார்க் ஸுக்கர்பெர்க் ( ஃபேஸ்புக் ஓனர் )


மார்க் எலியட் ஸுக்கர்பெர்க் மே 14, 1984 நியூயார்க்கில் உள்ள ஒயிட் பிளைன்ஸில் சுக்கர்பெர்க் பிறந்தார்.
நியூயார்க்கில் உள்ள டாப்ஸ் பெர்ரியில் வளர்ந்தார்.
இவளது தந்தை எட்வர்ட் டாப்ஸ் பெர்ரியில் பல் மருத்துவர்
மார்க் ஸுக்கர்பெர்க் நடக்கும் பருவத்தில் (1985), எட்வர்டு தனது கிளினிக்கில் புதிய கம்ப்யூட்டர்களை நிறுவினார்.
விவரம் அறியாத வயதிலேயே கம்ப்யூட்டர் ஸ்பரிசத்துடன் வளர்ந்தான் சிறுவன் மார்க்.
விளையும் பயிர் முளையிலேயே, தனி கம்ப்யூட்டர் கேட்டு அடம்பிடித்தது. சமாளிக்க முடியாமல் பெற்றோரும் வாங்கிக் கொடுத்தனர். 10 வயது மார்க், அதில் படம் வரைந்தான்; படம் பார்த்தான். வேறு என்ன செய்ய? கம்ப்யூட்டர் போரடிக்குதுப்பா!' என அலுத்துக்கொள்ள, 'சி++ ஃபார் டம்மீஸ்' என்ற புரோகிராமிங் புத்தகத்தை தன் மகனிடம் விளையாட்டாகத் தூக்கிக் கொடுத்தார் எட்வர்டு.
மார்க், அதில் லயித்தான். புத்தகத்தைப் படித்துப் புரிந்து கொண்டு,சிறு சிறு புரோகிராம்கள் எழுத ஆரம்பித்தான். அந்த 'விளையாட்டு' அவனுக்குப் பிடித்திருந்தது. மகனின் ஆர்வத்தைக் கண்டுகொண்ட எட்வர்டு, அருகில் நடந்த 'புரோகிராமிங் வகுப்பு'க்கு அனுப்பினார். பொடியனின் ஆர்வமும் திறமையும், வகுப்பில் இருந்த சீனியர்களைத் திகைக்கச் செய்தன.

'அப்பா, உங்க கம்ப்யூட்டரையும் கிளினிக் ரிசப்ஷன்ல இருக்கிற கம்ப்யூட்டரையும் ஒரே நெட்வொர்க்ல கொண்டுவாங்க' என மார்க் கட்டளையிட, எட்வர்டும் அப்படியே செய்தார். டாக்டரும் ரிசப்ஷனிஸ்ட்டும் ஒருவருக்கொருவர் தகவல் பரிமாறிக்கொள்ளும்படி புதிய ‘சாட் புரோகிராம்' எழுதி அசத்தினான் மார்க்.
இன்றைக்கு உலகையே ஃபேஸ்புக்கால் கட்டி வைத்திருக்கும் மார்க் நிகழ்த்திய முதல் 'இணைப்பு வைபவம்' அது.
வீடியோ கேம்ஸ்களில் மூழ்கிக்கிடக்கும் பதின் வயதில், மார்க் தன்னைப் போன்ற புரோகிராமிங் ஆர்வமுள்ள நண்பர்களுடன் சேர்ந்து புதிய கேம்ஸ்களை உருவாக்கினான். அதற்காக 'புரோகிராமிங்தான் வாழ்க்கை' என

அவன் அப்போதே முடிவெடுக்கவில்லை அது என்னவோ, செம்புலப் பெயல்நீர்போல, 'பிஹெச்பி'யும் 'சி ப்ளஸ் ப்ளஸ்ஸும் அவனுள் இயல்பாகக் கலந்தன.
பள்ளி இறுதி ஆண் ஒரு புராஜெக்ட் செய்ய டி ல் வேண்டும். மார்க்கும் அவரது நண்பர் ஆடமும் இணைந்து 'ஸினாப்ஸ்' (SYNAPSE) என்ற ஒரு புதிய மியூசிக் பிளேயரை உருவாக்கினார்கள். ஒரு கம்ப்யூட்டரை உபயோகிப்பவர் என்ன மாதிரியான பாடல்களை அதிகம் விரும்பிக் கேட்கிறார் என அவரது ரசனையை ஸினாப்ஸ் மோப்பம் பிடித்துக்கொள்ளும்.

ஏற்கெனவே இருக்கும் பாடல்கள். புதிதாகச் சேர்க்கும் பாடல்கள் எல்லாவற்றிலும் இருந்து அவருக்குப் பிடித்த மாதிரியான பாடல்களைத் தானே தேர்ந்தெடுத்து, 'ப்ளே லிஸ்ட்' ஒன்றை உருவாக்கி ஒலிக்கச் செய்யும். பள்ளி அளவில் ஸினாப்ஸ் புகழ்பெற, மார்க்கும் ஆடமும் அதை இணையத்தில் இலவசமாக உலவ விட்டார்கள். உபயோகித்தவர்கள், உச்சி முகர்ந்து பாராட்டினார்கள்.
'பள்ளிச் சிறுவர்'களின் அபாரத் திறமை, எட்டுத் திக்கும் எட்டியது. மைக்ரோசாஃப்ட் முதல் மியூசிக் மேட்ச் வரை, சிறிய பெரிய நிறுவனங்களின் 'ஆஃபர் லெட்டர்' இருவரது இன்பாக்ஸையும் தட்டியது. மார்க், சற்றே மிரளத்தான் செய்தார்.
'அதுக்குள்ளயா... அய்யோ, நான் காலேஜ் படிக்கணும்'! என நழுவினார். 'சரி, ஒரு மில்லியன் டாலர் தர்றோம். அந்த ஸினாப்ஸை எங்ககிட்ட வித்துருங்க' எனவும் கேட்டுப் பார்த்தார்கள். மைக்ரோசாஃப்ட் இரண்டு மில்லியன் தருவதாகவும் அழைத்தது. ஆனால், அங்கே மூன்று வருடம் பணியாற்ற வேண்டும் என்ற நிபந்தனையுடன். மைக்ரோசாஃப்ட்டில் வேலை என்பது ஆகச் சிறந்த வெகுமதிதான். ஆனால், என் கல்லூரிக் கனவுகள்? கடும் குழப்பத்தில் தவித்த மார்க், இறுதியில் 'குழந்தைத் தொழிலாளி'யாக மாற விரும்பாமல், 'ஹார்வர்டு' பல்கலைக்கழகத்தில் படிக்க விண்ணப்பித்தார்.
அங்கே ஒவ்வொரு செமஸ்டரின் ஆரம்பத்திலும், மாணவர்கள் தங்கள் விருப்பத்துக்கு உரிய பாடங்களைத் தேர்ந்தெடுக்க வேண்டும். தங்கள் நண்பர்கள், காதலிக்கத் துரத்தும் பெண்கள்/ஆண்கள் எதைத் தேர்ந்தெடுக்கிறார்கள் என விவரம் தெரிந்தால், தாங்களும் அங்கே நங்கூரமிடலாம் அல்லவா?
அதைத் தொகுத்துச் சொல்லும் ஹார்வர்டுக்கு உரிய பொது இணையதளம் எதுவும் இல்லை. மாணவர்கள் தவித்தார்கள். அதற்காகவே மார்க், 2003-ம் ஆண்டு மத்தியில் கோர்ஸ்மேட்ச்' (COURSEMATCH) என்ற இணையதளத்தை இன்ஸ்டன்ட்டாக உருவாக்கினார். செம ஹிட். தளத்தை உருவாக்க எந்தவித டேட்டாபேஸும் மார்க்கிடம் கிடையாது.

ஒவ்வொரு மாணவரும் தளத்தினுள் நுழைந்து, தங்கள் விவரங்களைத் தாங்களே பதிவுசெய்துகொண்டனர். புதிய டேட்டாபேஸ் உருவானது. கோர்ஸ் மேட்ச்-ன் இந்த மாடல்தான் ஃபேஸ்புக்கின் அடித்தளமும்கூட..
மார்க், ஃபேஸ்புக்கை நிறுவுவதற்கு பல ஆண்டுகள் முன்பே ஹார்வர்டில் ஒரு 'ஃபேஸ்புக்' புழக்கத்தில் இருந்தது. ஹார்வர்டு மாணவர்களின் சுயவிவரங்களும் புகைப்படங்களும் அச்சடிக்கப்பட்ட தொகுப்பு. இணைய வசதி வந்தபின் அவை டிஜிட்டல் வடிவில் கிடைத்தன. ஆனால், அவற்றை அந்தந்தத் துறை சார்ந்தவர்கள் மட்டுமே பார்க்க முடியும். மற்ற துறையினர் உள்ளே நுழைய முடியாது. செக்யூரிட்டி... பாஸ்வேர்டு... இத்யாதி.
'மப்பும்' மந்தாரமுமாக இருந்த ஒரு பொழுதில், மார்க்குக்கு 'ஹார்வர்டிலேயே அழகான பெண் யார்... ஆண் யார்?' என்பதைத் தேர்ந்தெடுக்கும் ஒரு புரோகிராம் எழுதும் கோக்குமாக்கு யோசனை தோன்றியது.
நெட்வொர்க் வழியே ஹார்வர்டின் ஒவ்வொரு துறையில் இருந்தும் மாணவர்களின் விவரங்களைத் திருடினார். 'ஃபேஷ்மேஷ்' (FACEMASH) என்றொரு புரோகிராம் உருவாக்கினார். இரண்டு பெண்களின் (அல்லது ஆண்களின்) புகைப்படத்தை ஒப்பிட்டு யார் அழகானவர் எனத் தேர்ந்தெடுத்தால், தேர்ந்தெடுக்கப்படாத படம் மறைந்து அடுத்த படம் தோன்றும். இப்படியே ஒப்பிட்டு ஓட்டு அளித்துக்கொண்டே செல்லலாம்.
மார்க், ஃபேஷ்மேஷை உருவாக்கி இணையத்தில் ஏற்றிய சில மணி நேரத்திலேயே, மாணவர்கள் அதை மொய்க்க ஆரம்பித்தனர். ஓட்டுகள் குவியக் குவிய, ஹார்வர்டின் இணைய இணைப்பு டிராஃபிக்கால் செயல் இழந்தது. மார்க்கும் அத்துடன் ஃபேஷ்மேஷுக்குத் திரை போட்டார். தனக்குள் முடிவெடுத்தார். குற்றமான விளையாட்டைச் செய்யாதே.

சில நாட்களில் மார்க், பல்கலைக்கழகத்தின் விசாரணை வளையத்துக்குள் நிறுத்தப்பட்டார். புகைப்படங்களைத் திருடியது, இணைய இணைப்பைத் தவறாகப் பயன்படுத்தியது, அழகுக்கான ஓட்டு என்ற பெயரில் கறுப்பு இனத்தவரின் மனதைப் புண்படுத்தியது இப்படிச் சில
குற்றச்சாட்டுகள் பாய்ந்தன.
புண்படுத்தியதற்காக மன்னிப்புக் கெட்டுக்கொட மார்க், 'சாதாரண மாணவன் ஒருவன் தகவல்களை எளிதாகத் திருடும் அளவுக்குத்தான் பல்கலைக்கழகத்தின் இணையதளப் பாதுகாப்பு இருக்கிறது. என்பதை உணர்த்தியிருக்கிறேன் அதற்காகப் பாராட்டுங்கள்' என்றார் சாமர்த்தியமாக, தண்டனை இல்லாமல் தப்பித்தார்.
அடுத்ததாக மார்க். ஹார்வர்டு மாணவர்களுக்கான புதிய சோஷியல் நெட்வொர்க் தளம் ஒன்றை அமைக்கும் யோசனையில் இறங்கினார் 'அந்தச் செயலை முடிக்க என்னவெல்லாம் தேவை எனத் தீவிரமாகத் திட்டமிட்ட பின்பே முனைப்புடன் களத்தில் இறங்கினார்.

கோர்ஸ்மேட்சை'விட அதிகப் பயனுள்ளதாக, குறிப்பாக சாட்டிங்கில் தொடங்கி டேட்டிங் வரை புதிய தளம் மாணவர்களுக்குக் கைகொடுக்க வேண்டும். என்ற சீரிய நோக்கத்துடன் செயலாற்றினார். தளத்தினுள் நுழைய

அடிப்படைத் தேவை ஹார்வர்டு இமெயில் கணக்கு. மாணவர்கள் சுய விவரங்களைத் தாங்களே இதில் பதிவு செய்துகொள்ளலாம். அடுத்தவர்களின் தகவல்களை நோட்டம்விடலாம். 'கொஞ்சம் படிக்கிறேன்', 'நீச்சல் அடிக்கிறேன்', 'காதலில் துடிக்கிறேன்' என ஏதாவது ஸ்டேட்டஸ் அப்டேட்ஸ் போடலாம்.
'THEFACEBOOK.COM' என, அந்தத் தளத்துக்காக இணையதள முகவரியை 2004-ம் ஆண்டு ஜனவரி மாதம் பதிவுசெய்தார் மார்க். இரவு, பகல், பசி, தூக்கம் எல்லாம் மறந்து தளத்தை இயக்கிவிட வேண்டும் என்ற உத்வேகத்துடன் இயங்கினார்.

2006-ம் ஆண்டு செப்டம்பரில், மாணவர்களுக்கு மட்டும் அல்லாமல் பொதுமக்களுக்கான சேவையையும் ஆரம்பித்தது ஃபேஸ்புக். 2007-ம் ஆண்டு, நிறுவனங்களுக்கான பிசினஸ் பக்கங்கள் தொடங்கப்பட்டன. அடுத்தடுத்து ஃபேஸ்புக் வால், நியூஸ் பீட், போட்டோ ஷேரிங், கேம்ஸ், குரூப்ஸ் எனப் புதிய வசதிகள் பளபளக்க, சமூகம் அள்ளி அணைத்து 'லைக்'கிட்டு, அபாரம் என 'கமென்ட்' போட்டு, 'ஃபேஸ்புக்குக்கு நீங்க வாங்க' என தங்கள் கருத்துகளை எங்கெங்கும் 'ஷேர்' செய்ய ஆரம்பித்தது.
'ஃபேஸ்புக்கை ஆரம்பிக்கும்போது அதற்குப் பின் இத்தனைப் பெரிய வியாபார வாய்ப்பு இருப்பதாக நான் சத்தியமாக நினைக்கவில்லை' என பிறகு சொன்னார் மார்க்.

## நிகழ்வும் அதன் நீதியும் 1

( நல்லது செய்தால் நன்மை உண்டு )

நாம் நன்மை செய்தால் அல்லாஹ் நமக்கு உதவி செய்வான். இதனை உணர்த்தக் கூடிய நபிமொழி (ஹதீஸ்) ஒன்றை நபி (ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்) அவர்கள் கூறினார்கள்.
ஒரு மனிதர் திறந்த வெளியில் இருந்தார். அப்போது மேகத்தில் இருந்து ஒரு சத்தம் வந்தது.
"ஓ...மேகமே! இன்ன மனிதரின் தோட்டத்துக்கு நீர் புகட்டு" என்று அந்த சத்தம் (அசரீரி) சொன்னது.
இது கேட்ட மனிதர் ஆச்சரியப்பட்டார். யாருடைய தோட்டமாக அது இருக்கும்? ஏன் அவருடைய தோட்டத்தில் மட்டும் மழை பொழிய வேண்டும் என்று கட்டளையிடப்பட வேண்டும். இது பற்றி நான் அவசியம் அறிய வேண்டும் என்று எண்ணி, அந்த மழை மேகத்தைப் பின் தொடர்ந்தார்.
இந்த அசரீரி கேட்டதும், மழைமேகம் பணிந்தது. ஒரு கல் மலையில் மழை பொழிந்தது. அங்கே பல கால்வாய்கள் இருந்தன. ஆனால் அவற்றில் ஒன்றில் மட்டும் அந்த மழை நீர் வந்து சேர்ந்தது. இம்மனிதர் அந்த கால்வாயில் போகும் தண்ணீரைப் பின்தொடர்ந்து சென்றார்.
இறுதியில் ஒரு தோட்டத்தை அடைந்தார். அங்கே ஒரு மனிதர் கால்வாய் தண்ணீரைத் தன் தோப்புக்குச் செலுத்திக் கொண்டிருப்பதைக் கண்டார்.
வந்தவர் அவரிடம், "அல்லாஹ்வின் அடியானே! உன் பெயர் என்ன?" என்று விசாரித்தார். அவர் தன் பெயரை கூறினார். (மேகத்தில் கூறப்பட்ட அதே பெயர்தான்.)
தோட்டக்காரர் : ஏன் என் பெயரைக் கேட்டீர்கள்?
அசரீரி கேட்ட மனிதர் : இப்போது தண்ணீர் வந்து கொண்டிருக்கிறதே இந்த நீரைப் பொழிந்த மழைமேகத்தில் ஒரு சப்தத்தைக் கேட்டேன். அதில் உன் பெயர் கூறி; உன் தோட்டத்திற்கு நீர் புகட்டுமாறு கூறப்பட்டது. இவ்வாறு உனக்கு மட்டும் விசேஷமாகக் கூறப்பட்டதே! நீ என்ன நன்மைகளை செய்கிறாய்?
தோட்டக்காரர் : அப்படியா சங்கதி! நான் தோட்டத்து விளைச்சலை கணக்கிட்டு அதனை மூன்று பங்குகளாகப் பிரிப்பேன். ஒரு பகுதியை ஏழை எளியோர், வழிப்போக்கர்களுக்கு தர்மம் செய்வேன்; ஒரு பங்கை எனக்காகவும், என் குடும்பத்தினரின் செலவுகளுக்காகவும் வைத்துக் கொள்வேன். மற்றொரு பகுதியை மீண்டும் விளைச்சலுக்குப் பயன்படுத்துவேன்.
இந்த ஹதீஸை (நபிமொழியை) நபி (ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்) அவர்கள் கூறியதாக அபூஹுரைரா (ரளியல்லாஹு அன்ஹு) அவர்கள் அறிவிக்கிறார்கள். முஸ்லிம் 5707
___________________________________________

நீதி :
இந்த மனிதருக்கு அல்லாஹ் அளித்த கண்ணியத்தைப் பார்த்தீர்களா? அவரது பெயர் கூறியே அவர் தோட்டத்தில் மழை பொழிந்துள்ளது! அவர் செய்த தர்மம்தான் அதற்குக் காரணம்.
கொடுத்தால் குறையாது என்பர். நாம் ஏழை எளியோருக்குக் கொடுத்தால் அல்லாஹ் நமக்குத் தருவான். நம்மிடம் இருக்கும் போது இல்லாதோருக்கு நாம் கொடுக்காவிட்டால், நம்மிடம் உள்ளதும் அழிந்து போகும்.
எனவே, நம்மிடம் இருப்பதை இல்லாதோருக்குக் கொடுத்து, அவர்களின் துயரத்தை நாம் நீக்க வேண்டும். நாம் எல்லோருக்கும் நல்லது செய்ய வேண்டும். அல்லாஹ் நமக்கு நல்லதைத் தருவான், எனவே நீங்கள் நல்லது செய்வீர்கள்தானே?
ஸஅத் பின் உப்பாதா (ரலி) அவர்கள் வெளியே சென்றிருந்த போது அவருடைய தாயார் இறந்து விட்டார். அப்போது அவர் நபி (ஸல்) அவர்களிடம்,
“அல்லாஹ்வின் தூதரே! என் தாயார் நான் வெளியே சென்றிருந்த போது மரணமடைந்து விட்டார். நான் அவர் சார்பாக தர்மம் ஏதும் செய்தால் இது அவருக்குப் பயனளிக்குமா?” என்று கேட்டார்.
நபி (ஸல்) அவர்கள், ஆம்! என்று பதிலளித்தார்கள்.

இதைக் கேட்ட ஸஅத் (ரலி) அவர்கள், “நான் எனது மிக்ராஃப் எனும் தோட்டத்தை என் தாயார் சார்பாக தர்மம் செய்து விட்டேன். அதற்கு தங்களை சாட்சியாக்குகின்றேன்” என்று கூறினார்கள். இப்னு அப்பாஸ் (ரலி), நூல் : புகாரி-2756

**நிகழ்வும் அதன் நீதியும் 2**
( நன்றி மறப்பது நன்றன்று )

நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
" பனூ இஸ்ராயீல் மக்களில் மூன்று பேர் இருந்தனர். அவர்களில் ஒருவர் தொழு நோயாளியாகவும், மற்றொருவர் வழுக்கைத் தலையராகவும், இன்னொருவர் குருடராகவும் இருந்தனர். அல்லாஹ் அம்மூவரையும் சோதிக்க நாடினான்;எனவே, வானவர் ஒருவரை அவர்களிடம் அனுப்பினான்.
அந்த வானவர் தொழுநோயாளியிடம் வந்து, "உனக்கு மிகவும் விருப்பமானது எது?" என்று கேட்க அவர், "நல்ல நிறம்,நல்ல தோல்(தான் எனக்கு மிகவும் விருப்பமானவை). மக்கள் என்னை அருவருப்பாகக் கருதக் காரணமான இ(ந்த நோயான)து என்னைவிட்டு விலக வேண்டும்" என்று சொன்னார்.
உடனே அவ்வானவர் (இறைநாட்டப்படி) அவரைத் தம் கைகளால் தடவ அந்த அருவருப்பான நோய் அவரைவிட்டு விலகியது. மேலும், அவருக்கு நல்ல நிறமும் நல்ல தோலும் வழங்கப்பட்டன.
பிறகு அவ்வானவர், "செல்வங்களில் உமக்கு மிகவும் விருப்பமானது எது?" என்று கேட்க, அவர், "ஒட்டகம்தான்" என்றார் ஆகவே, பத்து மாத சினையுள்ள ஒட்டகம் ஒன்று அவருக்கு வழங்கப்பட்டது. அவ்வானவர், "இதில் உனக்கு இறைவன் வளம் (பரக்கத்) வழங்குவானாக!" என்று பிரார்த்தித்தார்.
அடுத்து அந்த வானவர் வழுக்கைத் தலையரிடம் சென்று, "உனக்கு மிகவும் விருப்பமானது எது?" என்று கேட்டார். அவர் அழகான முடிதான். மக்கள் வெறுக்கும் இந்த வழுக்கை என்னைவிட்டு நீங்க வேண்டும்" என்றார்.
உடனே அவ்வானவர், அவரது தலையைத் தடவினார்; வழுக்கை மறைந்தது; அழகிய முடியைப் பெற்றார்.
அவ்வானவர், "செல்வங்களில் உமக்கு மிகவும் விருப்பமானது எது?" என்று கேட்டார். அவர், "பசுமாடுதான் (எனக்கு மிகவும் விருப்பமான செல்வம்)" என்று சொன்னார்.
உடனே அவ்வானவர் அந்த வழுக்கைத் தலையருக்குச் சினையுற்ற பசுமாடு ஒன்றைக் கொடுத்து, "அல்லாஹ் உமக்கு இதில் வளம் (பரக்கத்) புரிவானாக" என்று பிரார்த்தித்தார்.
பிறகு அந்த வானவர் குருடரிடம் சென்று, "உனக்கு மிகவும் விருப்பமானது எது?" என்று கேட்க, அவர் "அல்லாஹ் என் பார்வையை எனக்குத் திரும்பச் செய்வதும், அதன் மூலம் மக்களை நான் பார்ப்பதும்தான் (எனக்கு மிகவும் விருப்பமானது)" என்று பதிலளித்தார்.
உடனே அவ்வானவர் அவரைத் தமது கரத்தால் தடவ, அவருக்கு அல்லாஹ் அவரது பார்வையைத் திருப்பித் தந்தான்.

பிறகு அவ்வானவர், "செல்வங்களில் உமக்கு மிகவும் விருப்பமானது எது?" என்று கேட்டார். அவர் "ஆடு" என்றார். அவருக்கு அவ்வானவர், சினையுற்ற ஆடு ஒன்றைக் கொடுத்தார். (ஒட்டகமும் மாடும் வழங்கப்பெற்ற) இருவரும் நிறைய குட்டிகள் ஈந்திடப்பெற்றனர். (ஆடு வழங்கப்பட்ட) இந்த மனிதரும் நிறைய குட்டிகள் ஈந்திடப்பெற்றார். தொழுநோயாளியாய் இருந்தவருக்கு ஒரு பள்ளத்தாக்கு நிரம்ப ஒட்டகங்களும், வழுக்கைத் தலையராய் இருந்தவருக்கு ஒரு பள்ளத்தாக்கு நிரம்ப மாடுகளும், குருடராக இருந்தவருக்கு ஒரு பள்ளத்தாக்கு நிரம்ப ஆடுகளும் சேர்ந்தன.
பிறகு அவ்வானவர் தொழுநோயாளியாய் இருந்தவரிடம் தமது அதே தோற்றத்திலும் அமைப்பிலும் சென்று, "நான் ஓர் ஏழை மனிதன். என் பயணத்தில் வாழ்வாதாரம் அறுபட்டு விட்டது. (செலவுக்குப் பணம் தீர்ந்துபோய்விட்டது.) இன்று உதவிக்கான வழிவகை எனக்கு அல்லாஹ்வையும் பிறகு உன்னையும் தவிர வேறெவருமில்லை. உனக்கு அழகிய நிறத்தையும் நல்ல தோலையும் செல்வத்தையும் கொடுத்த (இறை)வனின் பெயரால் உன்னிடம் ஓர் ஒட்டகத்தைக் கேட்கிறேன். அதன் மீது பயணம் செய்து நான் போக வேண்டிய இடத்திற்குப் போய்ச்சேருவேன்" என்று சொன்னார்.

அதற்கு அந்த மனிதர், "(எனக்குக்)கடமைகள் நிறைய இருக்கின்றன. (எனவே, என்னால் நீ கேட்டதைத் தர முடியாது)"என்றார்.
உடனே அவ்வானவர், "உன்னை எனக்குத் தெரியும் போலுள்ளதே! மக்கள் அருவருக்கின்ற தொழுநோயாளியாக நீ இருக்கவில்லையா? ஏழையாகவும் நீ இருக்கவில்லையா? பிறகு அல்லாஹ் உனக்கு (செல்வத்தை)க் கொடுத்தான் அல்லவா?" என்று கேட்டார்.
அதற்கு அவன், "(இல்லையே; நான் இந்த அழகான நிறத்தையும் தோலையும் மற்றும்) இந்தச் செல்வத்தையும் வாழையடி வாழையாக (என் முன்னோரிடமிருந்து) வாரிசுச் சொத்தாகப் பெற்றேன்" என்று பதிலளித்தான்.
உடனே அவ்வானவர், "நீ (இக்கூற்றில்) பொய்யனாயிருந்தால், நீ முன்பு எப்படி இருந்தாயோ அப்படியே உன்னை அல்லாஹ் மாற்றிவிடட்டும்" என்று சொன்னார்.
பிறகு வழுக்கைத் தலையரிடம் தமது அதே உருவத்தில் சென்று, முன்பு தொழுநோயாளியிடம் கேட்டதைப் போன்றே கேட்டார். அவரும் முதலாமவர் பதிலளித்ததைப் போன்றே பதிலளித்தார்.

வானவரும், "நீ (உன் கூற்றில்) பொய்யனாயிருந்தால் நீ முன்பு எப்படியிருந்தாயோ அப்படியே அல்லாஹ் உன்னை மாற்றிவிடட்டும்" என்று சொன்னார்.
பிறகு (இறுதியாக), குருடரிடம் தமது அதே உருவிலும் அமைப்பிலும் வந்து, "நான் ஓர் ஏழை மனிதன்; வழிப்போக்கன். என் பயணத்தில் வாழ்வாதாரம் (வழிச் செலவுக்கான பணம்) தீர்ந்து போய்விட்டது. இன்று எனக்கு உதவிக்கான வழிவகை அல்லாஹ்வையும், பிறகு உன்னையும் தவிர வேறெவருமில்லை. என் பயணத்தில் என் தேவையைத் தீர்த்துக்கொள்ள உதவும் ஆடு ஒன்றைத் தரும்படி உனக்குப் பார்வையைத் தந்த(இறை)வன் பெயரால் கேட்கிறேன்"என்று சொன்னார்.
(குருடராயிருந்து பார்வை பெற்ற) அந்த மனிதர் வானவரிடம், "நான் குருடனாகத்தான் இருந்தேன். அல்லாஹ் எனக்குப் பார்வையைத் திருப்பித்தந்தான். நீர் விரும்புவதை எடுத்துக்கொள்க; விரும்புவதை விட்டுவிடுக. அல்லாஹ்வின் மீதாணையாக! இன்று நீர் எடுக்கின்ற எந்தப்பொருளையும் திருப்பித் தரும்படி அல்லாஹ்வுக்காக நான் சிரமப்படுத்தமாட்டேன்" என்று சொன்னார்.
உடனே அவ்வானவர், "உமது செல்வத்தை நீரே வைத்துக்கொள்ளும். இது உங்களைச் சோதிப்பதற்காகத்தான். உம்மீது திருப்தி கொள்ளப்பட்டது. உம்முடைய இரு தோழர்கள் (தொழுநோயாளி, வழுக்கைத்தலையர் ஆகியோர்) மீது சினம் கொள்ளப்பட்டது" என்று சொன்னார்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
ஸஹீஹ் முஸ்லிம் : 5672.
___________________________________________
நீதி :
இந்தச் சம்பவத்தின் மூலம் நாம் சில உண்மைகளைப் புரிந்து கொள்ளலாம்.
1. அல்லாஹ் தான் நாடியவர்களை பணம், உடல் நலம் என்பவற்றைக் கொடுத்தும் சோதிப்பான்! எடுத்தும் சோதிப்பான்!
2.ஏழ்மையையோ, வாழ்க்கை வசதியையோ அல்லாஹ்தான் தர வேண்டும்.
3. மனிதர்களில் உள்ள சில முட்டாள் செல்வந்தர்கள், தமக்குச் செல்வம் கிடைத்து விட்டால், கஞ்சத்தனம் பண்ணுகின்றனர். தங்களது பழைய நிலைமைகளை மறந்து விடுகின்றனர். இது நல்லதல்ல! நாம் அப்படி நடக்கக் கூடாது!
4. நமக்குத் தரப்பட்டுள்ள அருள்களுக்கு நாம் நன்றி செலுத்த வேண்டும். இல்லையென்றால், அல்லாஹ்வின் சோதனைகளுக்கு நாம் ஆளாக நேரிடும்! இந்தச் சம்பவத்தில் வரும் இருவர்கள் நன்றி மறந்து நடந்ததால் பழைய நிலைக்கே தள்ளப்பட்டனர் என்பதை கவனித்தீர்களா ?
وَإِذْ تَأَذَّنَ رَبُّكُمْ لَئِنْ شَكَرْتُمْ لَأَزِيدَنَّكُمْ وَلَئِنْ كَفَرْتُمْ إِنَّ عَذَابِي لَشَدِيدٌ إبراهيم ،
'நீங்கள் நன்றி செலுத்தினால், உங்களுக்கு அதிகமாக வழங்குவேன். நீங்கள் நன்றி மறந்தால், எனது வேதனை கடுமையானது' என்று உங்கள் இறைவன் பிரகடனம் செய்ததை எண்ணிப் பாருங்கள்! ( குர்ஆன் 14 : 7 )
மனிதன் அல்லாஹ்விற்கு நன்றி செலுத்தும் போது, அருட்கொடைகளை அள்ளி வழங்குகின்றான். நன்றி மறக்கும் போது, தண்டனையை வழங்குகின்றான்.

## நிகழ்வும் அதன் நீதியும் 3
(அழகிய தீர்ப்பு )

தங்கம் என்றாலே வியக்கும் மனிதர்களிடையே தங்கப் புதையல் என்றால் மனம் எப்படி அலைபாயும் .ஆனாலும் பனி இஸ்ரவேலர்கள் காலத்தில் நடந்த ஒரு சம்பவம் தங்கத்தை விடவும் நம்மை ஆச்சரியப்பட வைக்கிறது !
இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்:
(பனூ இஸ்ராயீலில்) ஒருவர் இன்னொரு மனிதரிடமிருந்து அவருக்கிருந்த அசையாச் சொத்து (நிலம்) ஒன்றை வாங்கினார். அந்த நிலத்தை வாங்கிய மனிதர் தன்னுடைய நிலத்தில் தங்கம் நிரம்பிய (களிமண்) ஜாடி ஒன்றைக் கண்டெடுத்தார்.
நிலத்தை வாங்கியவர் (நிலத்தை) விற்றவரிடம், 'என்னிடமிருந்து உன் தங்கத்தை எடுத்துக் கொள். (ஏனெனில்), உன்னிடமிருந்து நான் நிலத்தைத் தான் வாங்கினேன்; இந்தத் தங்கத்தை வாங்கவில்லை' என்று கூறினார்.
நிலத்தின் (முந்தைய) உரிமையாளர், 'நிலத்தை அதிலிருப்பவற்றுடன் சேர்த்துத் தான் உனக்கு நான் விற்றேன். (எனவே, இந்தத் தங்கம் உனக்குத் தான் உரியது)' என்று கூறினார்.
(இருவருக்குமிடையே தகராறு முற்றி) மற்றொரு மனிதரிடம் தீர்ப்புக் கேட்டு சென்றனர்.
அவர்கள் இருவரும் தீர்ப்புக் கேட்டு சென்ற அந்த மனிதர், 'உங்கள் இருவருக்கும் குழந்தை இருக்கிறதா?' என்று கேட்டார். அவ்விருவரில் ஒருவர், 'எனக்குப் பையன் ஒருவன் இருக்கிறான்' என்று கூறினார். மற்றொருவர், 'எனக்குப் பெண்பிள்ளை இருக்கிறது' என்று கூறினார்.
தீர்ப்புச் சொல்பவர், 'அந்தப் பையனுக்கு அந்தச் சிறுமியை மணமுடித்து வையுங்கள். அவர்கள் இருவருக்காவும் அதிலிருந்து செலவழியுங்கள்; தான தர்மம் செய்யுங்கள்' என்று தீர்ப்பளித்தார் என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.
ஸஹீஹ் புகாரி 3472
___________________________________________

நீதி :
பனூ இஸ்ராயீல் மக்கள் இம்மையை வெறுத்து மறுமையை பெரிதும் விரும்பினார்கள் என்பது மேற்கண்ட நிகழ்வு நமக்கு எடுத்துக் காட்டினாலும் , மறுமை நாளில் மக்கள் எப்படி இருப்பார்கள் என்பதை குர்ஆனும் ஹதீஸும் படம் பிடித்து காட்டுகிறது.
அப்துல்லாஹ் பின் அல்ஹாரிஸ் பின் நவ்ஃபல் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
(ஒரு முறை) நான் உபை பின் கஅப் (ரலி) அவர்களுடன் நின்றுகொண்டிருந்தேன். அப்போது அவர்கள், "உலகத்தைத் தேடுவதில் மக்கள் தம் கழுத்துகளை நீட்டிக் கொண்டேயிருக்கிறார்கள் (அல்லவா?)" என்று கூறினார்கள்.
நான் "ஆம்" என்றேன்.
அதற்கு உபை பின் கஅப் (ரலி) அவர்கள் கூறினார்கள்: அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் பின்வருமாறு கூறியதை நான் கேட்டுள்ளேன்:
யூப்ரடீஸ் நதியானது வற்றி, தங்கமலை ஒன்றை வெளிப்படுத்தப் போகிறது. அதைப் பற்றி மக்கள் கேள்விப்படும்போது,அதை நோக்கிச் செல்வார்கள். அப்போது அந்த மலை அருகில் இருப்பவர், "அதிலிருந்து சிறிதளவை எடுத்துக்கொள்ளட்டும் என மக்களை நாம் விட்டு விட்டால், முழுவதுமாகக் கொண்டு போய்விடுவார்கள்" என்று கூறுவார்.
எனவே, அதற்காகச் சண்டையிட்டுக்கொள்வார்கள். அப்போது ஒவ்வொரு நூறு பேரிலிருந்தும் தொண்ணூற்றொன்பது பேர் கொல்லப்படுவார்கள். ஸஹீஹ் முஸ்லிம் : 5551 (குழப்பங்களும், மறுமை நாளின் அடையாளங்களும் )

'(மனிதர்களே..!) நிச்சயமாக நீங்கள் அறிந்து கொள்ளுங்கள்,' இவ்வுலக வாழ்க்கையெல்லாம் வீண் விளையாட்டும், வேடிக்கையும், வெறும் அலங்காரமும் தான். தவிர உங்களுக்கிடையில் ஏற்படும் வீண் பெருமையும், பொருளிலும், சந்ததியிலும் அதிகரிக்க வேண்டுமென்ற வீண் எண்ணமும் தான்.
(இதன் உதாரணமாவது) ஒரு மழையின் உதாரணத்தை ஒத்திருக்கின்றது. அந்த மழையினால் முளைத்த பயிர்கள் (நன்கு வளர்ந்து) விவசாயிக்கு களிப்பை உண்டுபண்ணிக் கொண்டிருந்தன. பின்னர் அவை மஞ்சலித்து காய்ந்து சருகுகளாகி விடுவதைக் காணுகிறான். (இவ் வுலக வாழ்க்கையும் அவ்வாறே இருக்கின்றது)
மறுமையிலோ (அவர்களில் பலருக்குக்) கொடிய வேதனையும் (பலருக்கு) அல்லாஹ்வின் மன்னிப்பும், அவன் பொருத்தமும் கிடைக்கின்றன. ஆகவே, இவ்வுலக வாழ்க்கை (மனிதனை) மயக்கும் சொற்ப இன்பமேயன்றி வேறில்லை.' (குர்ஆன் 57:20)
______________________________________________
(படம் : ஆந்திராவில் விவசாயி ஒருவர் நிலத்தை விற்ற நிலையில் அதில் ஒரு வாரத்துக்குப் பின்னர் புதையல் கிடைத்துள்ளது.
தெலங்கானாவில் உள்ள பெம்பார்த்தி என்ற பகுதியில் விவசாயி ஒருவர் நிலத்தில் பெரிதாக வருவாய் இல்லாததால் அந்த நிலத்தை ரியல் எஸ்டேட் ப்ரோக்கர் ஒருவரிடம் விற்பனை செய்துள்ளார்.
அதையடுத்து ஒரு வாரத்தில் அவர் நிலத்தை ஜேசிபி எந்திரம் வைத்து சமப்படுத்திய போது 5 கிலோ மதிப்புள்ள தங்கப் புதையல் கிடைத்துள்ளது.
இந்த செய்தி ஊர்மக்கள் வழியாக போலிஸாருக்கு செல்லவே அவர்கள் வந்து புதையலை பறிமுதல் செய்து விசாரணையை மேற்கொண்டு வருகின்றனர்)

## ***நிகழ்வும் அதன் நீதியும் 4***

" உங்க பதிவுகள் ஏன் நீதிக் கதைகள் மாதிரி பதிவு போடுறீங்க? "நண்பர் ஒருவர் கேட்டார்
"நிகழ்வும் அதன் நீதியும் " தொடரில் நிகழ்வுகள் அனைத்துமே உண்மைச் சம்பவங்கள். இது ஒன்றும் கதையல்ல .கதை வடிவில் சொல்லும்போது நண்பர்கள் விரும்புவார் என நினைக்கிறேன்.
பொதுவாக ஃபேரி டேல் என்பது ஒரு வகைக் கதை கூறலைக் குறிக்கும் ஆங்கில மொழிச் சொல்லாகும். இதன் ஜெர்மானிய, ஸ்வீடன் மொழிச்சொல் அல்லது இத்தாலியச் சொல் ஆகியவை முறையே மார்ச்சன் (MAERCHEN), சாகா (SAGA) மற்றும் ஃபியாபா (FIABA) ஆகியவையாகும்.
சிறு எண்ணிக்கையிலான கதைகள் மட்டுமே பிரத்யேகமாக விசித்திரக் கதைகள் என்ற வகையின் கீழ் உட்படுத்தப்படுகின்றன. இருப்பினும், செவிவழிக் கதைகள், பாரம்பரியக் கதைகள் (பொதுவாக விவரிக்கப்படும் நிகழ்வுகளைப் பற்றிய உண்மை கூறலைப் பற்றிய கதைகள்)

போன்ற பிற நாட்டுப்புறக் கதைகள் மற்றும் விநோத உயிரிகளைப் பற்றிய கதைகள் உள்ளிட்ட சிறப்பான நீதிக் கதைகள் போன்றவற்றை இவற்றிலிருந்து வேறுபடுத்த முடியும்.
பொதுவாக எழுத்தாக்கங்கள் இரண்டு தலையாய வடிவங்களில் தான் எழுதப்படுகிறது.
ஒன்று செய்தி வடிவம். மற்றொன்று கதை வடிவம்.
ஒரு தகவல் வெறும் செய்தி வடிவில் சொல்லப்படுகின்ற போது ஒரு கட்டத்திற்கு மேல் அதை வாசிக்க ஆர்வம் தூண்டுவதில்லை. மனம் சலிப்படைந்து விடுகிறது.

அதே தகவலை கதைக் களத்துடன் இணைத்து ஒரு நிகழ்வாகச் சொல்லும் பொழுது அதைப் படிக்க அவா ஆர்ப்பரிக்கின்றது. அதனால்தான் நாவல் போன்ற கதைக் களத்துடன் கூடிய புத்தகங்களையே மக்கள் அதிகம் விரும்புகின்றனர்.
ஏன் இந்த வேறுபாடு?
நாம் சிறு பிராயத்திலிருந்து இவ்வாறு பயிற்றுவிக்கப்பட்டதே இதற்குக் காரணம்.
குழந்தைப் பருவத்தில் நம்மை அரவணைத்து வளர்த்தெடுக்கும் பாட்டிமார்களும், அம்மாக்களும் சொல்லும் கதைகளில் துவங்கி நாம் பள்ளியில் படிக்கும் போது மொழி ரீதியான பாடப் புத்தகங்களில் அதிகமாக இடம்பெறும் பாடங்கள் வரை எல்லாமே கதை வடிவம்தான். தத்துவ வடிவமோ, செய்தி வடிவமோ குறைவு.
இன்னும், வீட்டுக்கு வெளியிலேயே அதிகம் விளையாடித் திரியும் குழந்தைக்குத் தாய் பயமுறுத்துவதற்காகச் சொல்லும் வார்த்தை என்னவோ ‘வெளியில் போகாதே! பூச்சாண்டி பிடித்துக் கொள்வான்’ என்பதுதான்.
ஆனால், அதைச் சொல்லும் விதம் என்ன?
ஒரு ஊருல ஒரு ராஜா இருந்தானாம் எனத் துவங்கி, ராஜாவுடைய மகன் வெளியிலேயே விளையாடிட்டு இருந்தானாம், என்று தொடர்ந்து சென்று அந்தப் பையனை பூச்சாண்டி பிடித்துட்டு போய்ட்டானாம்! அதனால நீ இனிமேல் வெளியில விளையாடாதே என முடியும் கதை வடிவம் தானே!
அறிவுரையாக எத்தனை முறை சொன்னாலும் கேட்காத குழந்தை கதையாக நிகழ்வோடு சேர்த்துச் சொல்லும் போது அதை அவன் மனம் ஏற்றுக்கொள்கிறது.
இந்தப் பழக்கம் தான் நம் வாழ்நாளில் தொடர்கிறது. இதில் எந்தத் தவறும் இல்லை. செய்தி சென்றடைய வேண்டுமே தவிர அது சொல்லப்படும் விதம் கணக்கில்லை.
அதனால் தான் அல்லாஹ்வும் அவனது தூதரும் பல்வேறு இடங்களில் இந்த விதத்தில் நமக்குப் பாடம் நடத்துகிறார்கள். உதாரணத்திற்கு சிலவற்றைப் பார்ப்போம்.
நாம் செலவு செய்கின்ற பொருளாதாரத்தின் நன்மை மறுமையில் நமக்குப் பயனளிக்கும் விதமாக அமைய வேண்டும். சில தீய காரியங்களைச் செய்து அந்த நன்மையை நாம் அழித்துக் கொள்ளக்கூடாது என்ற செய்தியை இறைவன் நமக்கு எடுத்துரைக்கிறான்.
ஆனால், மேற்படி தகவலை செய்தி வடிவமாக எடுத்துச் சொல்லவில்லை. கதை வடிவமாக கதாபாத்திரங்களோடு இணைத்து ஒப்பிட்டு இறைவன் பின்வரும் வசனத்தில் நமக்குக் கூறுகிறான்.
" பேரீச்சை மற்றும் திராட்சைத் தோட்டம் ஒருவருக்கு இருக்கிறது; அவற்றின் கீழ்ப்பகுதியில் ஆறுகளும் ஓடுகின்றன; அதில் அனைத்துக் கனிகளும் அவருக்கு உள்ளன; அவருக்குப் பலவீனமான சந்ததிகள் உள்ள நிலையில் அவருக்கு முதுமையும் ஏற்பட்டு விடுகிறது; அப்போது நெருப்புடன் கூடிய புயல் காற்று வீசி அ(த்தோட்டத்)தை எரித்து விடுகிறது. இந்த நிலையை உங்களில் எவரேனும் விரும்புவாரா? நீங்கள் சிந்திப்பதற்காக இவ்வாறே அல்லாஹ் சான்றுகளைத் தெளிவுபடுத்துகிறான்.
(அல்குர்ஆன்:2:266)

மேலும், நபிகள் நாயகம்(ஸல்) அவர்கள் பல்வேறு சந்தர்ப்பங்களில் மக்கள் விரைவாக விளங்கிக்கொள்வதற்காக தன் போதனையை ஒரு கதைக்களத்துடன் ஒப்பிட்டு கூறியுள்ளார்கள்.
நபி (ஸல்) அவர்களிடத்தில் உமர் (ரலி) வருகிறார்கள். அப்போது நபியவர்களோ ஒரு பாயின் மீது உறங்கிக் கொண்டிருக்க அப்பாயின் சுவடுகள் அவர்களின் முதுகில் பதிந்துள்ளது. இதைப் பார்த்த உமர் (ரலி) அவர்கள், ‘‘அல்லாஹ்வின் தூதரே! இதை விட மென்மையான விரிப்பை நீங்கள் எடுத்துக் கொள்ளக் கூடாதா?’’ என கேட்டார்கள்.
அதற்கு நபி(ஸல்) அவர்கள், “எனக்கும் இந்த உலகத்திற்கும் என்ன (தொடர்பு) இருக்கிறது? ஒரு பயணி உஷ்ணமிகுந்த நாளில் பயணம் செய்கிறான். அப்போது, அவன் பகலின் சிறிது நேரம் ஒரு மரத்தின் கீழ் நிழல் பெற்று ராஹத் பெறுகிறான். பிறகு, அம்மரத்தை விட்டுவிட்டுச் சென்றுவிடுகிறான்.
இதுபோன்று தான் எனக்கும் இவ்வுலகுக்கும் மத்தியில் உள்ள தொடர்பு இருக்கிறது’’ என்று கூறினார்கள். இதை இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
நூல்: அஹ்மது 2744

இந்தச் செய்தியில் நபி (ஸல்) அவர்களால் சொல்லப்படும் தகவல், தனக்கும் இவ்வுலகத்திற்கும் எவ்விதத் தொடர்பும் இல்லை. இவ்வுலகம் அற்பமானதே என்பது தான். ஆனால் அதை நபி (ஸல்) சொன்ன விதமோ கதா பாத்திரத்தோடு இணைந்த கதை வடிவம் தானே!
இன்னும், இதுபோன்று ஏராளமான செய்திகள் ஹதீஸ்களில் நிறைந்து காணப்படுகின்றன.
எனது நிலையும் எனக்கு முன்பிருந்த இறைத்தூதர்களின் நிலையும், ஒரு வீட்டைக் கட்டி அதை அழகாக அலங்கரித்து, ஒரு மூலையில் ஒரு செங்கல் அளவிற்குள்ள இடத்தை மட்டும் விட்டு விட்ட ஒரு மனிதரின் நிலை போன்றதாகும்.
மக்கள் அதைச் சுற்றிப் பார்த்து விட்டு ஆச்சரியமடைந்து, “இந்தச் செங்கல் (இங்கே) வைக்கப்பட்டிருக்கக் கூடாதா?’’ என்று கேட்கலானார்கள். நான் தான் அந்தச் செங்கல். மேலும், நான் தான் இறைத் தூதர்களில் இறுதியானவன் என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
நூல்: புகாரி 3535

மேற்படி ஹதீஸில் நபியவர்களால் சொல்லப்படும் தகவல், நபிமார்களில் இறுதியானவன் நானே என்பது தான். ஆனால் அதை, வீட்டை அழகாகக் கட்டி ஒரு சிறு இடத்தை மட்டும் விட்டுவிட்டுப் பிறகு பூர்த்திசெய்துவிட்ட ஒரு மனிதனின் கதைக் களத்தை ஒப்பீடாக நபி (ஸல்) அவர்கள் கூறுவதைப் பார்க்கிறோம்.
அடுத்து, இறையடியார்கள் பாவமன்னிப்புக் கோருகையில் இறைவனது சந்தோஷம் எத்தகையது என்பதை அல்லாஹ்வுடைய தூதர் விளக்கும் விதத்தைப் பாருங்கள்!
“ஒரு மனிதர் உணவோ நீரோ கிடைக்காத வறண்ட பாலைவனத்தில் (ஓய்வெடுத்துக்கொண்டு) இருந்தபோது, அவரது ஒட்டகம் தனது கடிவாளத்தை இழுத்துக்கொண்டு ஓடிவிட்டது. அந்த மனிதரின் உணவும் பானமும் அதன் மீதே இருந்தன. அந்த மனிதர் அதைத் தேடிப் புறப்பட்டார். அதனால் அவர் மிகுந்த சிரமத்திற்கு உள்ளானார். (ஓடிப்போன) அந்த ஒட்டகம் ஒரு மரத்தைக் கடந்தபோது அதன் கடிவாளம் அந்த மரத்தின் வேரில் மாட்டிக்கொண்டது. அதில் சிக்கிக்கொண்டு இருந்தபோது அந்த மனிதர் அதைக் கண்டார். அப்போது அந்த மனிதர் அடையும் மகிழ்ச்சியைப் பற்றி என்ன சொல்கிறீர்கள்?’’ என்று நபி(ஸல்) அவர்கள்கேட்டார்கள்.
அதற்கு நாங்கள், “மிகவும் அதிகமாக (மகிழ்ச்சி அடைந்திருப்பார்), அல்லாஹ்வின் தூதரே!’’ என்று சொன்னோம். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், “அறிந்துகொள்ளுங்கள். அல்லாஹ்வின் மீதாணையாக! தனது ஒட்டகத்தைக் கண்ட அந்த மனிதர் அடையும் மகிழ்ச்சியை விடத் தன் அடியான் பாவமன்னிப்புக் கோரி மீட்சி பெறுவதால் அல்லாஹ் அதிகமாக மகிழ்ச்சி அடைகிறான்’’ என்று சொன்னார்கள். இதை பராஉ பின் ஆஸிப்(ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள். நூல்: முஸ்லிம் 5299

மனிதன் பாவமன்னிப்புக் கோரும்போது இறைவன் அளவற்ற மகிழ்ச்சியுறுகிறான் என்பது மேலுள்ள ஹதீஸில் இடம்பெறும் தகவல். ஆனால், அதை மக்கள் அதிகம் உணர்ந்து விளங்க வேண்டும் என்பதற்காக நபி (ஸல்) அவர்கள் சொன்ன விதம் கதை வடிவம் தான்.
அடுத்து, தொழுகையினால் ஏற்படும் நன்மையைப் பற்றி விளக்க நபி (ஸல்) அவர்கள் கையாண்ட விதத்தைப் பாருங்கள்!
ஒருவரது வீட்டு வாசலில் ஆறு ஒன்று ஓடிக் கொண்டிருக்கிறது. அதில் அவரோ தினமும் ஐந்து தடவை குளிக்கின்றார். இவ்வாறு அவர் குளிக்கையில் அவரது மேனியில் அழுக்குகள் ஏதேனும் எஞ்சியிருக்குமா? என நபி(ஸல்) அவர்கள் கேட்டார்கள்.
அதற்கு மக்கள், அவரது மேனியில் எந்த அழுக்கும் எஞ்சியிராது என்று பதிலளித்தார்கள். அதற்கு, நபி(ஸல்) அவர்கள் “இதுதான் ஐவேளைத் தொழுகையின் நிலையாகும்; இ(வற்றை நிறைவேற்றுவ)தன் மூலம் அல்லாஹ் பாவங்களை நீக்குகிறான்’’ என்று கூறினார்கள்.இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள். நூல்: புகாரி 528

தொழுகை நமது பாவங்களுக்குப் பரிகாரமாக அமைகிறது என்பதுதான் இந்தச் செய்தியில் நபியவர்களால் எடுத்துரைக்கப்படும் தகவல். இத்தகவலை நபி (ஸல்) அவர்கள் பல்வேறு இடங்களில் நமக்குச் சொல்லியுள்ளார்கள்.
குறிப்பிட்ட மேற்படி ஹதீஸில் சொன்ன விதம் என்ன?
மக்கள் தெளிவாகப் புரிந்து கொள்ள வேண்டும் என்பதற்காக, ஆற்றில் ஐவேளை நீராடும் ஒருவரின் கதைக்களத்தை நபி (ஸல்) அவர்கள் எடுத்துச் சொல்லியுள்ளார்கள்.
இவ்வாறு பல்வேறு இடங்களில் அல்லாஹ்வும், நபி (ஸல்) அவர்களும் மக்கள் எளிமையாக விளங்கிக் கொள்வதற்காகப் பல்வேறு கதைக்களங்களை எடுத்துச் சொல்லியுள்ளார்கள்.
மார்க்கத்தை மக்களுக்கு இப்படியும் எடுத்துச் சொல்லலாம் என்பதற்கு இவைகளெல்லாம் சான்றுகளாக இருக்கின்றன.
மக்கள் மார்க்கத்தைப் புரிந்து கொள்ள வேண்டும். அதற்கு என்னென்ன வழிமுறைகள் இருக்கிறதோ, எவ்வழி முறையைக் கையாண்டால் மக்களுக்கு மார்க்கம் எளிமைப்படுத்தப்படுமோ அவைகளை ஆராய்ந்து மார்க்கத்தை எடுத்துரைக்கலாம்.

## நிகழ்வும் அதன் நீதியும் 5

( நெருப்புக் குண்டத்தவர்கள் )

(இது ஒன்றும் கற்பனைக்கதை அல்ல , திருக்குர்ஆன் கூறும் உண்மைச் சம்பவம் )
முற்காலத்தில் பனீ இஸ்ரவேலர்களில் ஓர் அரசன் இருந்தான். அரச சபையில் குறி சொல்லும் வயோதிகன் ஒருவனும் இருந்தான் .
ஒரு நாள் குறிகாரன் : " மன்னரே ! எனக்கு அந்திம காலம் நெருங்கி விட்டதால் , நல்ல புத்தி தீட்சண்யமுடைய ஒரு சிறுவனைக் கொடுத்தால் அவனுக்கு நான் கற்ற சூனியத் தொழிலைக் கற்றுக் கொடுக்கிறேன் "
அரசன் அப்படி ஒரு சிறுவனை தேர்ந்தெடுத்து சூனியக்காரரிடம் சூனியம் கற்க அனுப்பி வைத்தான் .
சூனியக்காரன் வீட்டிற்கு செல்லும் வழியில் ஒரு ஞானி வீடு இருந்தது. அச்சிறுவன் அந்த ஞானியின் உபதேசங்களை கேட்டு விட்டு தாமதமாகவே சூனியக்காரனிடம் செல்லலனான் . தாமதமாக வருவதை கண்டித்து அச்சிறுவனை சூனியக்காரன் அடித்து துன்புறுத்தினான்.
சூனியக்காரனின் துன்புறுத்தலை அந்த ஞானியிடம் சிறுவன் சொல்ல , ஞானி சிறுவனிடம் , "தாம் வரும் வழியில் ஒரு புலி வந்து தன்னை வழிமறித்ததால் தாமதமாகி விட்டது " என்று சூனியக்காரனிடம் சொல்லுமாறு கூறினார்.

உண்மையிலேயே புலி வழிமறித்து மனிதர்களுக்கு இடையூறு செய்து கொண்டிருக்க, இச்சிறுவன் "ஞானி சிறந்தவரா ? சூனியக்காரன் சிறந்தவனா என்பதை நான் அறியேன் "யா அல்லாஹ் ! சூனியக்காரனது காரியத்தைப் பார்க்கினும் ஞானியின் காரியம் உனக்கு அதிகப் பிரியமாக இருக்குமாயின் , மனிதர்களுக்கு தடையை ஏற்படுத்தும் இந்த புலியை கொன்று விடுவாயாக ! " என்று பிரார்த்தித்து கல்லை எறிந்தான். புலி கல்லடிப் பட்டு இறந்தது .

இந்த விஷயம் ஞானிக்கு தெரிந்தது. சிறுவனை அழைத்து , " அருமைப் புதல்வரே !... இன்று நீ என்னிலும் சிறந்தவன். நான் அறிந்த காரியம் உன்னிலிருந்து வெளியாயிற்று . இதனால் வெகு விரைவில் நீ சோதனைக்கு உள்ளாக்கப்படுவாய் அந்த சோதனையில் நீ என்னைக் காட்டிக் கொடுத்து விடாதே ! " என்று ஞானி எச்சரித்தார் .
அன்று முதல் சிறுவனிடம் பிறவிக் குருடர், முடவர் ,வெண்குஷ்டரோகி, கருங்குஷ்டரோகி ஆகியோர்கள் வந்து சிறுவன் கூறும் அல்லாஹ்வை விசுவாசித்து குணமடைந்து சென்றனர் .
அரச சபையில் உள்ள கண் தெரியாத குருட்டு அமைச்சர் பெருஞ் செல்வத்தைப் பாத காணிக்கையாகக் கொடுத்து கண் பார்வையை மீட்டித் தர வேண்டினார் .
அதற்கு அந்த சிறுவன் " நான் எதையும் குணப்படுத்த முடியாது. குணப்படுத்துபவன் அல்லாஹ்தான் நீங்கள் அல்லாஹ்வை ஈமான் கொண்டால் நான் பிரார்த்திக்கிறேன் . அல்லாஹ் குணப்படுத்துவான் " என்று கூறினான். அதன்படி கண் பார்வையைப் பெற்றார்.
கண் பார்வை பெற்றதும் அரச சபைக்கு அமைச்சர் சென்றார். அரசன் எப்படி கண் பார்வை கிடைத்தது்ப் பற்றி விசாரித்தான் .
" அல்லாஹ்தான் " என்றார்.
அதற்கு அரசன் " என்னைத் தவிர்த்து உனக்கு வேறு இறைவன் இருக்கிறானா ? "
" எனக்கும் இறைவனாக , உனக்கும் இறைவனாக உள்ள ஒரே அல்லாஹ் " என்று அமைச்சர் பதில் கூறினார். அரசன் அவரை சிறையில் அடைத்து கொடுமைப்படுத்த , அவர் சிறுவனைக் காட்டிக் கொடுத்தார் .
அச்சிறுவனை பிடித்து துன்புறுத்த, "நான் யாரையும் எப்போதுமே குணப்படுத்தியதில்லை.
குணப்படுத்துவதெல்லாம் அல்லாஹ்தான் " என்றான். அரசன் சிறுவனைக் கொடுமைப்படுத்த , சிறுவன் ஞானியைக் காட்டிக் கொடுத்தான் .
உடனே ஞானியைக் கட்டி இழுத்து வந்து , மதம் மாற அரசன் வற்புறுத்தினான். அதற்கு ஞானி மறுக்கவே , உடனே ரம்பம் கொண்டு உச்சியிலிருந்து உடல் இரண்டு துண்டாகப் பிளக்கப்பட்டது.
பின்னர் அமைச்சரையும் மதம் மாற வற்புறுத்த அவரும் மறுக்கவே அவரையும் ரம்பத்தால் இரண்டாக பிளக்கப்பட்டார் .

பின்னர், அச் சிறுவனை அவனையும் மதம் மாற வற்புறுத்த , அதற்கு மறுப்புத் தெரிவிக்க , மலையில் இருந்து சிறுவனை உருட்டி விட ஆணைப் பிறப்பித்தான் .
சிறுவனை மலை உச்சியில் உருட்டி விட முயலும் போது , " யா அல்லாஹ் இவர்களது தீங்கை விட்டும் நீ விரும்பிய விதத்தில் என்னைக் காப்பாற்றுவாயாக! என்று பிரார்த்தித்தான் . உடனே மலையில் நில நடுக்கம் ஏற்பட்டு சிறுவனைத் தவிர்த்து மற்ற பணியாளர்கள் மலையிலிருந்து உருண்டு இறந்தனர் .
சிறுவனை மீண்டும் அரசன் பிடித்து விசாரிக்க , " அல்லாஹ் அவர்களை விட்டு என்னைக் காப்பாற்றினான் " என்று கூற , சிறுவனை படகில் ஏற்றி நடுக் கடலில் கொண்டு போய் கடலில் போட முயற்சிக்கும் போது,
" யாஅல்லாஹ் இவர்களது தீங்கை விட்டும் நீ விரும்பிய விதத்தில் என்னைக் காப்பாற்றுவாயாக! என்று பிரார்த்தித்தான்.
அப் படகு கவிழ்ந்து சிறுவனைச் தவிர்த்து அனைவரும் கடலில் மூழ்கி இறந்தனர் .
அரசன் சிறுவனைப் பிடித்து " உன்னை கொல்வதற்காக மற்றவர்கள் இறந்து போகிறார்கள். எனவே உன்னைக் கொல்வதற்கு நீயே ஓர் உபாயத்தை சொல் " என்றான்.
" நான் கூறுவதுபோல் நீ செய்யாத வரையில் என்னை நீ கொல்ல முடியாது "
அரசன் , " என்ன செய்ய வேண்டும் ?"
" மனிதர்களை யாவரையும் ஒரு இடத்தில் ஒன்று கூட்ட வேண்டும் என்னைக் கழுவிலேற்றி , எனது அம்புக் கூட்டிலிருந்து ஒரு அம்பை எடுத்து, நாணிலேற்றி , " பிஸ்மில்லாஹி ரப்பில் குலாம் " அதாவது இந்தச் சிறுவனின் ரப்பாகிய அல்லாஹ்வின் திருப்பெயரால் எய்கின்றேன்" என்று அவ்வம்பை எய்ய வேண்டும். என் மரணத்தை என் இறைவன் தர முடியுமே தவிர , உன்னால் முடியாது " _என்று கூறினான்.
சிறுவன் கூறிய வண்ணம் திறந்த வெளியில் அவ்வூரில் உள்ளவர்கள் யாவரையும் ஒன்று கூட்டி , அவனைக் கழுவிலேற்றி, அவனது அம்பை எடுத்து , அவன் கூறியவாறே கூறி எய்தப்பட்டது .
அவ்வம்பு சிறுவனின் கண்ணுக்கும் , செவிக்கும் இடையில் உள்ள பொட்டில் தைத்தது . அவன் அந்த இடத்தில் கையை வைத்த வண்ணம் இறந்தான் .

இதனைப் பார்த்த மக்கள் யாவரும் " இச்சிறுவனின் இறைவனை நாங்கள் விசுவாசித்தோம் . இச்சிறுவனின் இறைவனை நாங்கள் விசுவாசித்தோம் " என்று கூறினார்கள்.
உடனே , அரசன் பெரிய பெரிய பள்ளங்களில் நெருப்புக் குண்டங்களை உண்டாக்கி , மனிதர்கள் மதம் மாறவில்லை என்றால் நெருப்புக் குண்டத்தில் வீசி எறியச் சொன்னான் .

அப்படி எறிக்கப்பட்டவர்கள் 20 ஆயிரம் என்றும் 70 ஆயிரம் என்றும் காணக் கிடைக்கிறது .
அதில் ஒரு பெண் தன் கைக்குழந்தையுடனும் மற்ற இரண்டு குழந்தைகளுடனும் நெருப்பில் குதிக்க தாமதித்த போது , கைக்குழந்தை " என் தாயே ! நீங்கள் சத்தியத்தில் இருக்கின்றீர்கள் " என்றதும் , அவளது முதல் மகனை நெருப்பில் வீசப்பட்டது . அவள் ஈமானில் உறுதியாக இருந்தாள் அடுத்து இரண்டாவது மகனை நெருப்பில் வீசப்பட்டது .அப்போதும் ஈமானில் உறுதியுடன் , இறுதியாக தன் கைக் குழந்தையுடன் நெருப்பினுள் உறுதியான ஈமானுடன் வீழ்ந்தாள் .
இவ்வரலாற்றை மையப்படுத்தி திருக்குர்ஆனில் இறைவன் .....
قُتِلَ اَصْحٰبُ الْاُخْدُوْدِۙ
அகழுடையவர்கள் (பள்ளக் கிடங்குடையவர்கள் )அழிக்கப்பட்டார்கள்(அல்குர்ஆன் : 85:4)
النَّارِ ذَاتِ الْوَقُوْدِۙ
அது, விறகுகள் போட்டெரித்த நெருப்பு (அகழ் நெருப்பு )
(அல்குர்ஆன் : 85:5)
اِذْ هُمْ عَلَيْهَا قُعُوْدٌ ۙ
அதன் முன் அவர்கள் உட்கார்ந்து கொண்டிருந்த சமயத்தில்,
(அல்குர்ஆன் : 85:6)
وَّهُمْ عَلٰى مَا يَفْعَلُوْنَ بِالْمُؤْمِنِيْنَ شُهُوْدٌ
நம்பிக்கையாளர்களை (நெருப்புக் கிடங்கில் போட்டு) நோவினை செய்வதை அவர்கள் (வேடிக்கையாகப்) பார்த்துக் கொண்டுமிருந்தார்கள்.
(அல்குர்ஆன் : 85:7)
وَمَا نَقَمُوْا مِنْهُمْ اِلَّاۤ اَنْ يُّؤْمِنُوْا بِاللّٰهِ الْعَزِيْزِ الْحَمِيْدِۙ
(நம்பிக்கை கொண்ட) அவர்களில் யாதொரு குற்றத்தையும் அவர்கள் காணவில்லை. எனினும், மிக்க புகழுடையவனும், (அனைவரையும்) மிகைத்தவனுமாகிய அல்லாஹ்வை அவர்கள் நம்பிக்கை கொண்டதையே அவர்கள் குற்றமாகக் கண்டனர்.
(அல்குர்ஆன் : 85:8)
الَّذِىْ لَهٗ مُلْكُ السَّمٰوٰتِ وَالْاَرْضِ وَ اللّٰهُ عَلٰى كُلِّ شَىْءٍ شَهِيْدٌ
வானங்கள், பூமியின் ஆட்சி அவனுக்குறியதே! (அவனை நம்பிக்கை கொண்டதற்காகவே அவர்களை நெருப்பில் எறிந்தனர்.) அல்லாஹ்வோ, (இவர்கள் செய்த) அனைத்தையும் அறிந்தவனாகவே இருந்தான்.
(அல்குர்ஆன் : 85:9)

இவ்வுண்மைச் சம்பவம் நபி (ஸல்) அவர்கள் பிறப்பதற்கு 90 ஆண்டுகளுக்கு முன்னர் நிகழ்ந்தது .
உமர் (ரலி) அவர்களின் ஆட்சி காலத்தில் வேறு ஒரு காரியத்திற்காக பூமியைத் தோண்டிய போது , தனது பொட்டில் அம்புக் காயமுள்ள இடத்தில் தனது விரலை வைத்த வண்ணம் அடக்கப்பட்ட ஒரு சிறுவனின் பிரேதம் தோண்டி எடுக்கப்பட்டது. கையை அவ்விடத்தை விட்டு அகற்றிய போது . காயத்திலிருந்து இரத்தம் வெளிவருவதும் ,கையை விட்டால் அது அக்காயத்தை அடைத்துக் கொள்வதுமாக இருந்தது.
இதனைப் பார்த்த நபித்தோழர்கள் கலீஃபா உமர் (ரலி) அவர்களுக்கு விஷயத்தை தெரிவித்து , மறு உத்தரவுக்கு காத்திருந்தனர் .
கலீஃபா அவர்கள் " இந்தச் சிறுவன் நெருப்பு குண்டங்களில்
சம்பந்தப்பட்டவன் .அவனை அப்படியே வைத்திருங்கள் கியாமத்து நாள் வரை இறைவன் அவனை உயிர்ப்பிக்கும் வரை அப்படியே அடக்கம் செய்யுங்கள்.

## நிகழ்வும் அதன் நீதியும் 6
( சாதுர்யமான தீர்ப்புகள் )

தாவூத் நபியின் மகன்தான் சுலைமான் நபியாவார். இவர்கள் இருவரும் நபியாகவும் மன்னர்களாகவும் இருந்தனர். இவர்கள் மன்னர்கள் என்பதால் புதுப்புதுப்
பிரச்சினைகள் இவர்களிடம் வருவதுண்டு.
இவர்களில் சுலைமான் நபி மிகவும் நுட்பமாக, பிரச்சினைகளை ஆராய்ந்து தீர்வு கூறுபவராக இருந்தார்கள்.
இதற்கு சில நிகழ்வுகளில் அவர்கள் வழங்கிய தீர்ப்புகளில் நுட்பங்களை காணலாம்.
ஒரே நேரத்தில் இரு சகோதரிகளுக்கு இரு ஆண் குழந்தைகள் பிறந்தன. அந்த இரு குழந்தைகளில் ஒரு குழந்தையை ஓநாய் தூக்கிச் சென்று விட்டது. இருக்கும் குழந்தைக்கு இருவரும் உரிமை கோரினர். எனவே குழந்தை மூத்தவளுக்கு உரியது என தாவூத் நபி தீர்ப்புக் கூறினார்.
இருவருமே அரச மண்டபத்தை விட்டு வெளியேறும்போது தாவூத் நபியின் மகனார் நபி சுலைமான் (அலை) அவர்களிடம் வழக்கை கூறினர்

சுலைமான் நபி தன் பணியாட்களிடம் “கத்தியைக் கொண்டு வாருங்கள், இந்தக் குழந்தையை இரு கூறாகக் கிழித்து இருவருக்கும் பிரித்துக் கொடுப்போம்” எனக்கூறி, குழந்தையை வெட்ட முயல்வது போல் பாசாங்கு செய்தார்கள்.

மூத்தவள் எந்த பதட்டமும் இல்லாமல் சும்மா இருக்க, இளையவள் பதறிப்போனாள். “வேண்டாம் வேண்டாம். குழந்தை அவளிடமே இருக்கட்டும்” எனக் கூறினாள்.
நபி சுலைமான் (அலை) அவர்கள் உடனே குழந்தையின் உண்மையான தாய் இளையவள் தான் என்பதை உணர்ந்து கொண்டார். அதற்கு ஏற்ப நுட்பமாக அவர் தீர்ப்புக் கூறினார்.
அடுத்து..
ஒருநாள் தாவூத் நபியின் அரசவைக்கு ஒரு புதிய பிரச்சனை வந்தது. ஒரு கூட்டத்தினர் விவசாயிகள். மற்றொரு கூட்டத்தினர் ஆடு மேய்ப்பவர்கள். விவசாயிகள் விவசாயம் செய்து பயிர் நன்றாக வளர்ந்திருந்தது. பார்க்கப் பசுமையாக இருந்தது. இந்நிலையில் இடையர்களின் ஆடுகள் அந்த விவசாய நிலங்களை மேய்ந்து அழித்துவிட்டன. இந்த முறைப்பாட்டுடன் இரு தரப்பாரும் தாவூத் நபியின் அரசவைக்கு வந்தனர்.
விவசாயிகளின் வாழ்வாதாரம் பயிர்களாகும். இடையர்களின் வாழ்வாதாரம் ஆடுகளாகும். அவர்களின் வாழ்வாதாரத்தை இவர்களின் வாழ்வாதாரம் அழித்துள்ளது. எனவே “இடையர்கள் தங்களது ஆடுகளை விவசாயிகளிடம் கொடுத்துவிட வேண்டும். ஆடு விவசாயிகளுக்குரியது” என்று நபி தாவூத் (அலை) தீர்ப்புக் கூறினார்கள்.

இந்தத் தீர்ப்பு இடையர்களுக்கு பெரும் இடியாக இருந்தது. அவர்களின் வாழ்வாதாரம் முழுமையாக அடிபட்டுவிட்டதை உணர்ந்தார்கள்.
இதனை அறிந்த நபி சுலைமான் (அலை) அவர்கள் , “இதற்கு நான் தீர்ப்புக் கூறி இருந்தால் எனது தீர்ப்பு வேறு விதமாக இருந்திருக்கும்” என்று கூறினார்கள்.
நபி தாவூத் (அலை) அவர்கள் , “அந்தத் தீர்ப்பு என்ன? ” என்று கேட்டார்கள்.
நபி சுலைமான் (அலை) அவர்களின் தீர்ப்பு இப்படி இருந்தது.
“இடையர்கள் தமது ஆடுகளை விவசாயிகளிடம் கொடுக்க வேண்டும், விவசாயிகள் தமது விளை நிலத்தை இடையர்களிடம் கொடுக்க வேண்டும். இடையர்கள் பயிரிட்டு அதைப் பாதுகாக்க வேண்டும். பயிர்களை ஆடுகள் உண்ணும் போது இருந்த அளவுக்கு வரும்வரை நீர் பாய்ச்சிப் பயிரைப் பாதுகாக்க வேண்டும்.
விளைந்த பின்னர் விவசாய நிலத்தை விவசாயிகளிடம் கையளிக்க வேண்டும். அதுவரை விவசாயிகள் இவர்களது ஆடுகளைப் பராமரிக்க வேண்டும்.
விவசாயிகளைப் பொறுத்தவரை இவர்கள் ஆடுகளைப் பராமரிப்பது என்பது மேலதிக வேலை. அத்துடன் அவர்களின் அறுவடையும் இவர்களின் ஆடுகள் உண்டதனால் தாமதமாகும்.
எனவே இதற்குப் பகரமாக தாம் பராமரிக்கும் காலப் பகுதியில் அந்த ஆடுகளிடமிருந்து அவர்கள் பால் கறந்து கொள்வார்கள். இடையர்கள் விவசாய நிலத்தை விவசாயிகளிடம் கையளித்த பின்னர் விவசாயிகள் ஆடுகளை இடையர்களிடம் கையளிக்க வேண்டும்” என்று தீர்ப்புக் கூறினார்.
இந்தத் தீர்ப்பை இருதரப்பும் மனத்திருப்தியுடன் ஏற்றுக் கொண்டனர்.
தாவூத் மற்றும் சுலைமான் இருவருக்கும் அல்லாஹ் ஞானத்தைக் கொடுத்ததாகவும், இந்தப் பிரச்சனைக்கான தீர்வை சுலைமானுக்கு அல்லாஹ்வே புரிய வைத்ததாகவும் குர்ஆனில் இறைவன் கூறுகின்றான்.

وَدَاوٗدَ وَسُلَيْمٰنَ اِذْ يَحْكُمٰنِ فِى الْحَـرْثِ اِذْ نَفَشَتْ فِيْهِ غَنَمُ الْقَوْمِ وَكُنَّا لِحُكْمِهِمْ شٰهِدِيْنَ ۙ
இன்னும் தாவூதும், ஸுலைமானும் (பற்றி நினைவு கூர்வீராக!) வேளாண்மை நிலத்தில் அவர்களுடைய சமூகத்தாரின் ஆடுகள் இரவில் இறங்கி மேய்ந்த போது, அதைப் பற்றி அவ்விருவரும் தீர்ப்புச் செய்த போது, அவர்களுடைய தீர்ப்பை நாம் கவனித்துக் கொண்டிருந்தோம். (குர்ஆன் : 21:78)
فَفَهَّمْنٰهَا سُلَيْمٰنَ وَكُلًّا اٰتَيْنَا حُكْمًا وَّعِلْمًا وَّسَخَّرْنَا مَعَ دَاوٗدَ الْجِبَالَ يُسَبِّحْنَ وَالطَّيْرَ وَكُنَّا فٰعِلِيْنَ
அப்போது, நாம் ஸுலைமானுக்கு அதை (தீர்ப்பின் நியாயத்தை) விளங்க வைத்தோம்; மேலும், அவ்விருவருக்கும் ஞானத்தையும் (நற்)கல்வியையும் கொடுத்தோம்; இவற்றை யெல்லாம் நாமே செய்தோம் (குர்ஆன் : 21:79)

நீதி :
இறைவன் புறத்திலிருந்து நமக்கு அருளும் வளமும் மட்டும் வருவதில்லை நம்முடைய உடல் சுகபோகங்களும், ஆன்ம பலமும் அவனிடம் இருந்தே வருகின்றன.
மேலும் நீதி நியாய அடிப்படையிலான தீர்ப்புகளும் அதன் தீர்வுகளும் அவனிடமிருந்தே வருகின்றன என்பதை மேற்கண்ட நிகழ்வுகள் மூலமாக குர்ஆன் நமக்கு இதனை சுட்டிக்காட்டுகின்றன.

## நிகழ்வும் அதன் நீதியும் 7
( குகையில் சிக்கிய மூவர் )

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்:
உங்களுக்கு முன் வாழ்ந்தவர்களில் மூன்று பேர் (ஒன்றாக) நடந்து சென்றனர். இறுதியில் (மலையில் இருந்த) குகையொன்றில் இரவைக் கழிப்பதற்காக தஞ்சம் புகுந்தனர். அதில் அவர்கள் நுழைந்தவுடன் மலையிலிருந்து பெரும் பாறையொன்று உருண்டு வந்து குகைவாசலை அடைத்துவிட்டது.
அப்போது அவர்கள் 'நீங்கள் செய்த நற்செயலைக் கூறி அல்லாஹ்விடம் பிரார்த்தித்தால் தவிர நீங்கள் தப்ப முடியாது!' என்று தமக்குள் கூறினர்.

அவர்களில் ஒருவர் 'இறைவா! எனக்கு வயது முதிர்ந்த பெற்றோர் இருந்தனர். நான் அவர்களுக்குப் பால் (கறந்து) கொடுப்பதற்கு முன் என் குடும்பத்தினருக்கோ குழந்தைகளுக்கோ பால் கொடுப்பதில்லை!
ஒரு நாள் எதையோ தேடிச் சென்றதால் தாமதமாக வந்தேன். என்னுடைய தாயும் தந்தையும் (முன்பே) உறங்கிவிட்டிருக்க கண்டேன். அவர்களுக்குப் பால் கொடுப்பதற்கு முன், என் குடும்பத்தினருக்கோ என் அடிமைகளுக்கோ பால் கொடுப்பதை நான் விரும்பாததால் அவர்கள் விழிப்பதை எதிர்பார்த்து என் கைகளில் பாத்திரத்தை வைத்துக் கொண்டு காத்திருந்தேன். ஃபஜ்ர் நேரம் வந்ததும் அவ்விருவரும் விழித்துத் தமக்குரிய பாலைக் குடித்தனர்.
எனவே இறைவா! நான் இதை உன்னுடைய திருப்தியை நாடிச் செய்திருந்தால் நாங்கள் சிக்கிக் கொண்டிருக்கும் இந்தப் பாறையை எங்களைவிட்டு அகற்று!' எனக் கூறினார்.
உடனே, அவர்கள் வெளியேற முடியாத அளவிற்குப் பாறை சற்று விலகியது!

மற்றொருவர், 'இறைவா! என் தந்தையின் சகோதரரின் மகள் ஒருத்தி இருந்தாள்; அவள் எனக்கு மிகவும் விருப்பமானவளாக இருந்தாள். நான் அவளை அடைய விரும்பினேன்; அவள் என்னிடமிருந்து விலகிச் சென்றாள். அவளுக்குப் பஞ்சம் நிறைந்த ஆண்டு ஒன்று வந்தபோது (பொருளாதார நெருக்கடி ஏற்பட்டு) என்னிடம் வந்தாள்; நான் அவளை அடைந்திட அவள் எனக்கு வழிவிட வேண்டும் என்ற நிபந்தனையில் பேரில் நூற்றி இருபது தங்கக்காசுகளை அவளுக்குக் கொடுத்தேன்.

அவளை என் வசப்படுத்தி (உறவு கொள்ள முனைந்து) விட்டபோது, 'முத்திரையை அதற்கான (மணபந்தத்தின்) உரிமையின்றி உடைப்பதற்கு உனக்கு நான் அனுமதி தரமாட்டேன்!' என்று அவள் கூறினாள். உடனே, அவளுடன் உறவு கொள்ளும் பாவத்(தைச் செய்வ)திலிருந்து விலகிக் கொண்டேன்; அவள் எனக்கு மிகவும் விருப்பமானவளாக இருந்தும் அவளைவிட்டுத் திரும்பி விட்டேன்; நான் அவளுக்குக் கொடுத்த தங்க நாணயத்தை அவளிடமேவிட்டு விட்டேன். இதை உன்னுடைய திருப்தியை நாடி நான் செய்திருந்தால் நாங்கள் சிக்கிக் கொண்டிருக்கும் இந்தப் பாறையை எங்களைவிட்டு அகற்று!' எனக் கூறினார்.
பாறை விலகியது: ஆயினும் அவர்களால் வெளியேற முடியவில்லை.
மூன்றாமவர், 'இறைவா! நான் சில ஆட்களைக் கூலிக்கு அமர்த்தி அவர்களின் கூலியையும் கொடுத்தேன். ஒரே ஒருவர் மட்டும் தம் கூலியைவிட்டுவிட்டுச் சென்றார். அவரின் கூலியை நான் முதலீடு செய்து அதனால் செல்வம் பெருகியிருந்த நிலையில் சிறிது காலத்திற்குப் பின் அவர் என்னிடம் வந்தார்.
'அல்லாஹ்வின் அடியாரே! என்னுடைய கூலியை எனக்குக் கொடுத்துவிடும்!' என்று கூறினார்.
'நீர் பார்க்கிற இந்த ஒட்டகங்கள், மாடுகள், ஆடுகள், அடிமைகள் எல்லாம் உம் கூலியிலிருந்து கிடைத்தவைதாம்!' என்று கூறினேன்.
அதற்கவர் 'அல்லாஹ்வின் அடியாரே! என்னை கேலி செய்யாதீர்!' என்றார்.
'நான் உம்மை கேலி செய்யவில்லை!' என்று கூறினேன். அவர் அனைத்தையும் ஒன்றுவிடாமல் ஓட்டிச் சென்றார்.
'இறைவா! இதை நான் உன்னுடைய திருப்தியை நாடிச் செய்திருந்தால் நாங்கள் சிக்கிக் கொண்டிருக்கும் இந்தப் பாறையை எங்களைவிட்டு அகற்று!' எனக் கூறினார்.
பாறை முழுமையாக விலகியது. உடனே, அவர்கள் வெளியேறிச் சென்றுவிட்டனர்!' என அப்துல்லாஹ்வின் உமர்(ரலி) அறிவித்தார் புகாரி : 2272.

---

நீதி :
மார்க்கம் (தீன்) என்பதே நலம் நாடுவதுதான்” என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். அறிவிப்பவர்: தமீமுத்தாரீ (ரலி) நூல்: முஸ்லிம்-95
மனிதர்கள் மீது கருணை காட்டாதவனுக்கு அல்லாஹ் கருணை காட்ட மாட்டான் என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். நூல்: புகாரி-7376
முஃமின்கள் ஒருவருக்கொருவர் (துணை நிற்கும் விஷயத்தில்) ஒரு கட்டிடத்தைப் போன்றவர்கள் ஆவர். அதன் ஒரு பகுதி மற்றொரு பகுதிக்கு வலுவூட்டுகின்றது என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். (இப்படிக் கூறும்போது) நபி (ஸல்) அவர்கள் தமது கைவிரல்களை ஒன்றோடொன்று கோர்த்துக் காண்பித்தார்கள். அறிவிப்பவர்: அபூ மூஸா (ரலி), நூல்: புகாரி-2446
‘இறைவன் உனக்கு நல்லதைச் செய்திருப்பது போன்றே நீயும் நல்லதை செய்’ என்பது திருக்குர்ஆன் (28:77) வசனமாகும்.
‘உங்களுடைய சகோதரரைப் பார்த்து நீங்கள் புன்னகை புரிவதும் தர்மம். நீங்கள் நன்மையை ஏவி, தீமையைத் தடுப்பதும் தர்மம். வழி தவறியவருக்கு வழிகாட்டுவதும் தர்மம். பார்வையற்றோருக்கு வழிகாட்டுவதும் தர்மம். கல், முள், எலும்பு போன்றவற்றை நடைபாதையிலிருந்து அகற்றுவதும் தர்மம். உங்களது வாளியிலிருந்து உங்களது சகோதரனின் வாளியில் தண்ணீர் நிரப்புவதும் தர்மமே’ என நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். (அறிவிப்பாளர் : அபூதர் (ரலி), நூல் : திர்மிதி)
மேற்கூறப்பட்ட நபிமொழியில் பலவிதமான தர்ம சிந்தனைகள் இடம்பெற்றுள்ளன. அவற்றில் ஒன்றுகூட பொருள் சம்பந்தப்பட்டது கிடையாது. தர்மம் என்றால் இஸ்லாத்தின் பார்வையில் பொருளுடன் மட்டும் தொடர்புடையது அல்ல. அது பரந்த மனப்பான்மையுடன் தொடர்புடையது என்பதை இதன் மூலம் அறியலாம்."

## நிகழ்வும் அதன் நீதியும் 8
( தாய் சொல்லைத் தட்டாதீர் )

ஒருமுறை நபி (ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்) அவர்கள் அதிசயமான ஒரு சம்பவத்தைக் கூற ஆரம்பித்தார்கள். இதோ அது!
இந்த உலகில் மூன்று குழந்தைகள்தான் (தாய்) மடியில் மழலையாக இருக்கும்போதே பேசியுள்ளனர். ஒருவர் மர்யமின் மகன் ஈஸா (அலைஹிஸ்ஸலாம்) ஆவார்கள்! மற்றது ஏற்கனவே நாம் கூறிய " நெருப்புக் குண்டத்தவர்கள் " என்ற சம்பவத்தில் வரும் குழந்தை மூன்றாவதாக இப்பதிவில் வரக்கூடிய குழந்தை ஜுரைஜ் என்பவருடன் சம்பந்தப்பட்ட குழந்தையாகும். எனக் கூறிய நபி (ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்) அவர்கள் ஜுரைஜின் கதையைக் கூறுகிறார்கள்:-

முன்னொரு காலத்தில் ஜுரைஜ் என்றொரு இறை நேசர் வாழ்ந்து வந்தார்.அவர் மிக நல்லவர். பொய், புறம் பேசமாட்டார். மற்றவர்களுக்குத் தொல்லை கொடுக்கமாட்டார். அவருக்கென ஒரு மாடம் உண்டு. அதில் தான் உண்டு; தன் வேலை உண்டு என்று தனித்திருந்து வணக்கத்திலேயே மூழ்கியிருப்பார்
ஒருநாள் இவர் (சுன்னத்தான) தொழுகையில் ஈடுபட்டுக் கொண்டிருக்கும் போது; அவருடைய தாயார், மாடத்திற்கு வெளியில் நின்று கொண்டு "ஜுரைஜ்" எனக் கூப்பிட்டார்.
தாய் கூப்பிடுவதை அறிந்த அவர், தாயின் அழைப்புக்கு பதில் சொல்வதா? வணக்கத்திலேயே இருப்பதா? எனத் தனக்குள்ளேயே யோசித்து விட்டு வணக்கத்தைப் பூர்த்தியாக்குவதுதான் உயர்வானது என முடிவெடுத்து தாய்க்கு பதில் சொல்லாமல் இருந்துவிட்டார்.
மகன் தன்னுடன் பேசாததைக் கண்டு மனம் நொந்த தாய், திரும்பிப் போய்விட்டாள். இரண்டாம் நாளும் அந்தத் தாய் வந்து மகனைக் கூப்பிட்டாள்! மகன் தாய்க்கு பதில் சொல்லாமல் வணக்கத்திலேயே ஈடுபட்டார்! திரும்பிச் சென்ற தாய் மூன்றாம் நாளும் வந்து கூப்பிட்டாள்! மகன் பதில் கூறவில்லை.
எனவே மூன்று நாளாக அழைத்தும் தன் மகன் - வந்து பேசவில்லையே என்று ஆத்திரப்பட்ட தாய், "யா அல்லாஹ்! என் மகன் என் முகத்தைப் பார்க்க நான் அழைத்தும் வராமல் இருந்துவிட்டான். எனவே அவன் விபச்சாரியின் முகத்தைக் காணும் வரை அவனை நீ மரணிக்கச் செய்துவிடாதே!" என்று மகனுக்கு எதிராக துஆ செய்துவிட்டுச் சென்றுவிட்டாள்!
அல்லாஹ் அதனை அங்கீகரித்து விட்டான்.
சிறிது காலம் சென்றது!

மக்கள் ஜுரைஜ் பற்றியும், அவர் ஆர்வமாக வணக்க வழிபாட்டில் ஈடுபடுவது பற்றியும் தமக்கிடையே உயர்வாகப் பேசிக் கொண்டிருந்தனர். அந்த ஊரில் தன் அழகைப் பற்றி பெருமை பேசக் கூடிய, கெட்ட நடத்தையுடைய ஒரு பெண் இருந்தாள். மக்கள் ஜுரைஜைப் பற்றி புகழ்ந்து பேசும்போது, நான் நினைத்தால், "என் அழகின் மூலம் அவரை மயக்கி அவரை குழப்பத்தில் ஆழ்த்திக் காட்டுவேன்!" என சவால்விட்டாள்.
இதன்படி ஜுரைஜை மயக்கி, அதன் மூலம் தன் அழகைப் பற்றி பெருமை பேச எண்ணிய அந்தப் பெண்; அவர் முன் சென்று அவரைக் மயக்க முயற்சித்தாள். அவரோ அல்லாஹ்வைத் தியானிப்பதிலேயே மூழ்கியிருந்தார். அவர் இவள் பக்கம் திரும்பிக் கூட பார்க்கவில்லை!
இதனால் தோல்வியுற்ற அந்தப் பெண் ஆத்திரப்பட்டு இவரைப் பழிவாங்கத் திட்டம் தீட்டினாள். ஜுரைஜின் மாடத்துப் பக்கம் ஓர் ஆடு மேய்க்கும் இடையன் தன் ஆடுகளை வழமையாக மேய்க்க வருவதுண்டு! அவனுடன் இந்தப் பெண் தவறான நடத்தையில் ஈடுபட்டாள். சிறிது காலத்திற்குப் பின் அவளுக்கு ஒரு ஆண் குழந்தை பிறந்தது. மக்களிடம் அவள், 'இந்தக் குழந்தைக்கு ஜுரைஜ்தான் தந்தை' எனப் பொய் கூறினாள்.
இதைக் கேட்டு ஆத்திரமுற்ற ஊர்மக்கள், ஜுரைஜ் வணக்கம் செய்யும் மாடத்திற்கு வந்து அதை உடைத்ததுடன், அவரை கடுமையாகவும் அடித்தனர்.
ஜுரைஜ் : " உங்களுக்கு என்ன நடந்தது? ஏன் என்னை அடிக்கிறீர்கள்?"
மக்கள் : "நீ இந்தப் பெண்ணுடன் தவறான நடத்தையில் ஈடுபட்டுள்ளாய்! அதன் மூலம் குழந்தையும் பெற்றுள்ளாய்? இப்படிச் செய்யலாமா? "
ஜுரைஜ் : " எங்கே அக்குழந்தை? "
மக்கள் குழந்தையைக் கொண்டு வந்தனர்.
அப்போது அல்லாஹ்வின் அருளால் அந்தக் குழந்தை இன்ன ஆடு மேய்ப்பாளன்தான் என் தந்தை' எனக் கூறியது.
இது கண்டு ஆச்சரியப்பட்ட (ஊர் மக்கள்) அவரை கரங்களில் முத்தமிட்டு மன்னிப்பும் கேட்டனர்.
(தெரியத்தனமாக உங்கள் மாடத்தை நாம் உடைத்துவிட்டோம். அதற்குப் பகரமாக) தங்கத்தால் உங்களுக்கு ஒரு மாடத்தை நாம் கட்டித் தருகிறோம் என ஊர் மக்கள் கூறினர்.
அதற்கவர், "வேண்டாம் எனக்குக் களிமண்ணாலேயே ஒரு மாடத்தைக் கட்டித் தாருங்கள்! (அது போதும்)" என்றார்.
மக்களும் அப்படியே செய்தனர்.
புகாரி 2482

---

நீதி :
தாய் கூப்பிட்ட போது பதிலளிக்காததினால்தானே அவமானப்பட நேரிட்டது! எனவே,' நீங்கள் தாய் தந்தை சொல்வதைக் கேட்க வேண்டும். அவர்களது கட்டளைகளை மீறக் கூடாது. அப்படி மீறினால், அல்லாஹ் உங்களைத் தண்டிப்பான்.
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் ஒரு மனிதர் வந்து,
"நான் அழகிய முறையில் உறவாடுவதற்கு மிகவும் தகுதியானவர் யார்?" என்று கேட்டார். நபி (ஸல்) அவர்கள் "உன் தாய் என்றார்கள்". அவர் "பிறகு யார்?" என்று கேட்டார். நபி (ஸல்) அவர்கள் "உன் தாய்" என்றார்கள். அவர், "பிறகு யார்?" என்றார். அப்போது நபி (ஸல்) அவர்கள் "பிறகு, உன் தந்தை " என்றார்கள். அபூஹுரைரா (ரலி), நூல் : புகாரி-5971

**மிஃராஜின் போது ...2**
( பைத்துல் மஃமூர் )

"பைத்துல் மஃமூர் என்பது நபி(ஸல்) அவர்கள் மிஃராஜ் செல்லும்போது 7-வது வானத்தில் அந்த பைத்துல் மஃமூர் பள்ளிவாசலை கண்டதாக கூறுகிறார்கள்.
அல்பைத்துல் மஅமூர்' (எனும் வானவர்கள் அதிகம் சஞ்சரிக்கும் இறையில்லம்) எனக்கு (அருகே கொண்டுவந்து) காட்டப்பட்டது.
"இது வானுலகில் வானவர்கள் வணங்குவதற்காக அமைக்கப்பட்ட மாபெரும் ஆலயமாகும். (திருக்குர்ஆன் 52:4)
அல்லாஹுதஆலா ஏழாவது வானத்திலே " அல் பைத்துல் மஃமூர்" என்ற இல்லத்தை கட்டியிருக்கிறான். அந்த இல்லம் எப்படிப்பட்டதென்றால்,
இதில் தினமும் எழுபதினாயிரம் வானவர்கள் தொழுவர் என்றும், ஒருமுறை தொழுதவர்கள் மறுபடி அங்கே செல்ல மாட்டார்கள் என்றும், இது ஏழாம் வானத்தில் இருப்பதாகவும் நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கூறியுள்ளனர். ( புகாரி 3207)

நான், "ஜிப்ரீல்! இது என்ன?" என்று கேட்டேன். அதற்கு அவர்கள், "இதுதான் 'அல்பைத்துல் மஅமூர்' ஆகும். இதில் (இறைவனை வணங்குவதற்காக) ஒவ்வொரு நாளும் எழுபதாயிரம் வானவர்கள் நுழைகிறார்கள்.
அவர்கள் இங்கிருந்து வெளியே சென்றால் திரும்ப இங்கு வரமாட்டார்கள். அதுவே அவர்கள் கடைசியாக நுழைந்ததாகிவிடும்" என்று சொன்னார்கள்.
இதிலே இரண்டு விஷயங்களை நமக்கு நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் உணர்த்துகின்றார்கள் . ஒன்று அல்லாஹ் படைத்த மலக்குகளின் எண்ணிக்கை மிக அதிகம்.
இரண்டாவது அல்லாஹ்வை வணங்குவதற்காக அந்த மலக்குகள் இருக்கிறார்கள்
மேலும் அலி(ரலி) கூறியதாக இந்த பைத்துல் மஃமூர் காஃபாவின் நேர்கோட்டில் 7வது வானத்தில் இருப்பதாக ஒரு அறிவிப்புகளில் காண்கிறோம். நபி(ஸல்) சொன்னதாக முர்ஸலான அறிவிப்பு இந்த செய்தி ஒரு தாபியீன் சொல்லக்கூடிய ஸஹாபி பெயர் விடுபட்டு வரக்கூடிய ஹதீஸ்களில் கஃபாவுக்கு நேராக மேலே பைத்துல் மஃமூர் இருக்கிறது என்ற செய்தி பதிவு செய்யப்பட்டிருக்கிறது.
நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்: "அல்பைத்துல் மஃமூர்" வானத்தில் உள்ளது. அதற்கு "அஸ்ஸுராஹ்" என்று கூறப்படும். அது பைதுல் ஹராம் என்ற கஅபா பள்ளியைப் போன்றதாகும். அதற்கு நேராக (வானத்தில்) உள்ளது. அது விழுந்தால் கஅபாவின் மீதுதான் விழும்.
நூல் : முஃஜமுல் கபீர் லித்தப்ரானீ, பாகம் : 11 பக்கம் : 417

இதை வைத்துப் பார்க்கும் பொழுது கஃபாவிற்கு நேராக பைத்துல் மஃமூர் இருப்பது உறுதியாகிறது.
மிஃராஜின் போது ஏழாவது வானத்தில் இப்ராஹீம் (அலை) அவர்கள் பைத்துல் மஃமூரில் சாய்ந்து கொண்டிருந்தார்கள். முஸ்லிம்-259 (234), அஹ்மத்-12047
ஆக இந்த செய்திகள் தான் பதிவு செய்யப்பட்டிருக்கிறது அதனை சுற்றி மலக்குமார்கள் தவாஃப் செய்கிறார்கள் என்று ஹதீஸ்களில் பதிவு செய்யப்படவில்லை பொதுவாக அறிஞர்களுல் சொல்லப்படுவது இந்த காஃபாவிற்கு நேர்கோட்டில் 7வது வானத்தில் இருப்பதினால் மலக்குமார்கள் அதனை தவாஃப் செய்கிறார்கள் என்று கூறப்படுகிறது
ஆனால் நபி(ஸல்) அவர்கள் கூறியதாவது மலக்குமார்கள் தொழுவது உறுதியான செய்தி ஆனால் தவாஃப் செய்வது என்பது எந்த ஹதீஸ்களிலும் பதிவு செய்யப்படவில்லை."
நபி ஸல்லல்லாஹு (அலை )அவர்கள் வானவர்கள் பற்றி குறிப்பிடும் போது,
நீங்கள் பார்க்கிறீர்கள் அல்லவா! மேல் இருக்கிற வானங்களை, இந்த வானத்திலே ஒரு பாதத்தின் அளவு கூட இடம் காலியாக இல்லை. ஒரு மலக்கு ருகூவில் இருந்து கொண்டு அல்லாஹ்வை வணங்கிக் கொண்டு இருக்கிறார். அல்லது இன்னொரு மலக்கு சுஜூதில் இருந்து கொண்டு அல்லாஹ்வை வணங்கிக்கொண்டிருக்கிறார்.
அல்லாஹ் அவர்களைப் பற்றி சொல்லும்போது,

وَمَنْ عِنْدَهُ لَا يَسْتَكْبِرُونَ عَنْ عِبَادَتِهِ وَلَا يَسْتَحْسِرُونَ
நபியே! உம்முடைய இறைவன் இடத்தில் இருக்கக்கூடிய வானவர்கள் அந்த அல்லாஹ்வைவணங்குவதை விட்டு அவர்கள் பெருமை அடித்து விலகுவது கிடையாது. (அல்குர்ஆன் 21 : 19)
يُسَبِّحُونَ اللَّيْلَ وَالنَّهَارَ لَا يَفْتُرُونَ
"இடைவிடாமல் அவர்கள் இரவிலும், பகலிலும் அவனைத் துதித்துக் கொண்டே இருக்கிறார்கள்."(அல்குர்ஆன் 21:20) அவர்கள் சோர்வடைவது கிடையாது. தொடர்ந்து அல்லாஹ்வை புகழ்ந்து கொண்டே இருக்கிறார்கள். அல்லாஹ்வை வணங்கிக் கொண்டே இருக்கிறார்கள். அல்லாஹ்வுடைய புகழை உயர்த்திக் கொண்டே இருக்கிறார்கள். இப்படிப்பட்ட ஒரு தூய படைப்பை அல்லாஹு தஆலா தன்னை வணங்குவதற்காகவே படைத்துள்ளான்.

## **நிகழ்வும் அதன் நீதியும் 9**

( பாத்திரம் அறிந்தா தர்மம் செய்ய வேண்டும் ? )

நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
(முற்காலத்தில்) ஒருவர் "நான் இன்றிரவு தர்மம் செய்யப்போகிறேன்" எனக் கூறிக்கொண்டு, (இரவில்) தர்மத்துடன் வெளியே வந்து, ( யாருக்கும் தெரியாமல்) அதை ஒரு விபச்சாரியிடம் கொடுத்து விட்டார்.
காலையில் மக்கள், "இன்றிரவு ஒரு விபச்சாரிக்குத் தர்மம் கொடுக்கப்பட்டுள்ளது" எனப் பேசிக்கொண்டனர்.
(இதைக் கேட்ட) அவர், "இறைவா! விபச்சாரிக்குத் தர்மம் செய்ததற்காக உனக்கே புகழ் அனைத்தும் உரியது. (நாளையும்) நான் தர்மம் செய்வேன்" என்று கூறினார்.
மறுநாள் அவர் தர்மத்துடன் (இரவில்) வெளியே வந்து, அதை ஒரு பணக்காரரின் கையில் கொடுத்துவிட்டார்.
மறுநாள் காலையில் மக்கள், "ஒரு பணக்காரருக்குத் தர்மம் செய்யப்பட்டுள்ளது" எனப் பேசிக்கொண்டனர்.
(இதைக்கேட்ட) அவர், "இறைவா! பணக்காரருக்குத் தர்மம் செய்ததற்காக உனக்கே புகழ் அனைத்தும் உரியது. (நாளையும்) நான் தர்மம் செய்வேன்" என்று கூறினார்.
(மூன்றாம் நாள்) அவர் தர்மத்துடன் புறப்பட்டுச் சென்று, ஒரு திருடனின் கையில் அதைக் கொடுத்துவிட்டார்.
காலையில் மக்கள், "இன்றிரவு ஒரு திருடனுக்குத் தர்மம் செய்யப் பட்டுள்ளது" என்று பேசிக்கொண்டனர்.
உடனே அவர், "இறைவா! விபச்சாரிக்கும் பணக்காரனுக்கும் திருடனுக்கும் தர்மம் கொடுத்ததற்காக உனக்கே எல்லாப் புகழும் உரியது" எனக் கூறினார்.
பின்னர் (கனவில்) அவரிடம் (வானவர்) அனுப்பிவைக்கப்பட்டு (பின்வருமாறு) கூறப்பட்டது:
"உமது தர்மம் ஏற்கப்பட்டுவிட்டது. விபச்சாரிக்கு நீர் கொடுத்த தர்மம், அவள் விபச்சாரத்திலிருந்து விலகி கற்பைப் பேணக் காரணமாக அமையலாம்.
பணக்காரனுக்குக் கொடுக்கப்பட்ட தர்மத்தால் அவன் படிப்பினை பெற்று, அல்லாஹ் தனக்கு வழங்கியவற்றிலிருந்து தர்மம் செய்யக்கூடும்.
திருடனுக்குக் கொடுக்கப்பட்ட தர்மம் அவன் களவைக் கைவிடக் காரணமாக அமையலாம்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
ஸஹீஹ் முஸ்லிம் : 1856.
___________________________________________

நீதி :
"“அவர்கள் மக்களிடத்தில் வருந்தியும் கேட்கமாட்டார்கள். இத்தகைய ஏழைகளுக்கு நீங்கள் நல்லதில் இருந்து எதைச் செலவு செய்த போதிலும் நிச்சயமாக அல்லாஹ் அதை நன் கறிந்து அதற்குரிய கூலியை உங்களுக்குத் தருவான்”. (2:273)
அடுத்து அல்லாஹ் தர்மத்தின் இரண்டு நியதிகளைச் சொல்லித் தருகிறான். ‘தர்மம் என்பதை வலது கை கொடுப்பதை இடது கை அறியாமல் கொடுங்கள் என்றும், சில சமயங்களில் வெளிப்படையாகவும் செய்யுங்கள்’ என்றும் சொல்கிறான்.
“நீங்கள் செய்யும் தர்மங்களை வெளிப்படையாகச் செய்தால் அதுவும் நன்றே. ஏனெனில் அது பிறரையும் தர்மம் செய்யும்படி தூண்டும். ஆயினும் நீங்கள் அதனை மறைத்தே கொடுப்பது, அதுவும் ஏழைகளுக்கு கொடுப்பது உங்களுக்கு மிகவும் நன்மை பயக்கும். அந்த இருவகை தர்மமும் உங்கள் பாவங்களுக்கு பரிகாரம் ஆகும். நீங்கள் செய்யும் வெளிப்படையான மற்றும் மறைவான அனைத்தும் அல்லாஹ் நன்கு அறிவான்”. (2:271)
‘ஒருவன் குதிரை மேல் வந்து தர்மம் கேட்டாலும், அவனிடம் ஏன் எதற்கு என்று விளக்கம் கேட்காமல் கொடுத்துவிடுங்கள். அவர்கள் உள் அந்தரங்களை அல்லாஹ்வே அறிந்தவனாக இருக்கின்றான்’ என்று கண்மணி நாயகமும் நவின்றுள்ளார்கள்."

## நிகழ்வும் அதன் நீதியும் 10

அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறியதாவது:

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "நஜ்த்" பகுதிக்குக் குதிரைப் படையொன்றை அனுப்பினார்கள். அந்தப் படையினர் யமாமாவாசிகளின் தலைவரும் "பனூ ஹனீஃபா" குலத்தைச் சேர்ந்தவருமான ஸுமாமா பின் உஸால் எனப்படும் மனிதரை (கைது செய்து) கொண்டுவந்தார்கள்; (மஸ்ஜிதுந் நபவீ) பள்ளிவாசலின் தூண்களில் ஒன்றில் அவரைக் கட்டிப்போட்டார்கள்.
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அவரிடம் வந்து, "(உம்முடைய விஷயத்தில் நான் சொல்லப்போகும் தீர்ப்பைப் பற்றி) நீர் என்ன கருதுகிறீர், ஸுமாமா?" என்று கேட்டார்கள்.
அவர், "நல்லதே கருதுகிறேன், முஹம்மதே! நீங்கள் என்னைக் கொன்றால் இரத்தப் பழிவாங்க வேண்டிய ஒருவனையே கொல்கிறீர்கள். நீங்கள் (என்னை மன்னித்து) உபகாரம் செய்தால், நன்றி பாராட்டக்கூடிய ஒருவனுக்கே உபகாரம் செய்கிறீர்கள். நீங்கள் செல்வத்தை விரும்பினால் கேளுங்கள். நீங்கள் விரும்புவது கொடுக்கப்படும்" என்றார்.
அன்றைய தினம் அவரை (அந்நிலையிலேயே) விட்டுவிட்டு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் சென்றார்கள். மறுநாள் வந்தபோது அவரிடம், "ஸுமாமா, (உம்முடைய விஷயத்தில் நான் சொல்லப்போகும் தீர்ப்பைப் பற்றி) நீர் என்ன கருதுகிறீர்?" என்று கேட்டார்கள்.

அதற்கு அவர், "உங்களிடம் நான் (ஏற்கெனவே) கூறியதுதான்: நீங்கள் உபகாரம் செய்தால் நன்றி பாராட்டக்கூடிய ஒருவனுக்கே உபகாரம் செய்கிறீர்கள். நீங்கள் (என்னைக்) கொன்றால் இரத்தப் பழிவாங்க வேண்டிய ஒருவனையே கொல்கிறீர்கள். நீங்கள் செல்வத்தை விரும்பினால் கேளுங்கள்; நீங்கள் விரும்புவது கொடுக்கப்படும்" என்றார்.
அன்றும் அவரை அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் விட்டுவிட்டார்கள்.
மூன்றாவது நாள் வந்தபோது, "ஸுமாமா! என்ன கருதுகிறீர்?" என்று அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கேட்டார்கள்.
அவர், "நான் (ஏற்கெனவே) உங்களிடம் சொன்னதைத்தான் கருதுகிறேன். நீங்கள் உபகாரம் செய்தால் நன்றி பாராட்டும் ஒருவனுக்கே உபகாரம் செய்கிறீர்கள். நீங்கள் என்னைக் கொன்றால் இரத்தப் பழிவாங்க வேண்டிய ஒருவனையே கொல்கிறீர்கள். நீங்கள் செல்வத்தை விரும்பினால் கேளுங்கள். அதில் நீங்கள் விரும்புவது கொடுக்கப்படும்" என்று சொன்னார்.

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "ஸுமாமாவை அவிழ்த்துவிடுங்கள்" என்று கூறிவிட்டார்கள்.
உடனே, ஸுமாமா பள்ளிவாசலுக்கு அருகிலிருந்த பேரீச்சந்தோட்டத்திற்குச் சென்று குளித்துவிட்டுப் பள்ளிவாசலுக்கு வந்தார்.
"அல்லாஹ்வைத் தவிர வேறு இறைவனில்லை என்று உறுதிமொழிகிறேன். முஹம்மத் (ஸல்) அவர்கள் அல்லாஹ்வின் அடியாரும் தூதரும் ஆவார்கள் என்றும் உறுதிமொழிகிறேன்" என்று கூறி (முஸ்லிம் ஆ)னார்.
பிறகு "முஹம்மதே! அல்லாஹ்வின் மீதாணையாக! (இன்றுவரை) உங்கள் முகத்தைவிட எனக்கு மிகவும் வெறுப்புக்குரிய முகம் வேறெதுவும் இருக்கவில்லை. ஆனால், (இன்று) உங்களுடைய முகம் மற்றெல்லா முகங்களையும்விட எனக்கு மிகவும் பிரியமானதாக ஆகிவிட்டது.
அல்லாஹ்வின் மீதாணையாக! (இன்றுவரை) உங்கள் மார்க்கத்தைவிட என் வெறுப்புக்குரிய மார்க்கம் வேறெதுவும் இருக்கவில்லை. ஆனால், (இன்று) உங்களுடைய மார்க்கம் மற்றெல்லா மார்க்கங்களையும்விட எனக்கு மிகவும் பிரியமானதாக ஆகிவிட்டது.
அல்லாஹ்வின் மீதாணையாக! (இன்றுவரை) உங்கள் ஊரைவிட எனக்கு வெறுப்பான ஊர் வேறெதுவும் இருக்கவில்லை. ஆனால், (இன்று) உங்கள் ஊரே மற்றெல்லா ஊர்களையும் விட எனக்கு மிகவும் பிரியமானதாக ஆகிவிட்டது.
உங்கள் குதிரைப்படையினர் என்னைப் பிடித்து (வந்து) விட்டனர். நான் "உம்ரா"ச் செய்ய விரும்புகிறேன். நீங்கள் என்ன கருதுகிறீர்கள்?" என்று கேட்டார்.
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அவருக்கு நற்செய்தி கூறி, "உம்ரா"ச் செய்ய அவருக்கு அனுமதியளித்தார்கள்.
அவர் மக்காவிற்குச் சென்றபோது அவரிடம் (மக்காவாசி) ஒருவர், "நீர் மதமாறிவிட்டீரா?" என்று கேட்டார்.
அதற்கு ஸுமாமா (ரலி) அவர்கள், "இல்லை, அல்லாஹ்வின் மீதாணையாக! (நான் மதம் மாறவில்லை) அல்லாஹ்வின் தூதருடன் இணைந்து இறைவனுக்குக் கீழ்ப்படியும் முஸ்லிமாக மாறிவிட்டேன். இல்லை; அல்லாஹ்வின் மீதாணையாக! அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அனுமதியளிக்காத வரை (எனது பகுதியான) யமாமாவிலிருந்து ஒரு கோதுமை தானியம் கூட (மக்காவாசிகளான) உங்களுக்கு வராது" என்று சொன்னார்கள்.
ஸஹீஹ் முஸ்லிம் : 3622.

---

நீதி
" சொல்லுங்கள், இஸ்லாம் வாளால் பரப்பப்பட்டதா ?

"இம்மார்க்கத்தில் எந்த வற்புறுத்தலும் இல்லை. வழிகேட்டிலிருந்து நேர்வழி தெளிவாகி விட்டது. தீய சக்திகளை மறுத்து அல்லாஹ்வை நம்புபவர் அறுந்து போகாத பலமான கயிற்றைப் பிடித்துக் கொண்டார். அல்லாஹ் செவியுறுபவன்; அறிந்தவன். (குர்ஆன் 2:256)
இஸ்லாத்தில் வற்புறுத்தல் கிடையாது என்றும், தெளிவான ஆதாரங்களை எடுத்துச் சொல்லி மார்க்கத்துக்கு அழைப்பு விடுப்பது மட்டுமே இஸ்லாத்தின் கொள்கை என்றும் இவ்வசனம் தெள்ளத் தெளிவாகச் சொல்கிறது. மார்க்கத்தில் யாரையும் கட்டாயப்படுத்தி சேர்க்கக் கூடாது என்று திருக்குர்ஆனே கூறி விட்ட பிறகு நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கட்டாயப்படுத்தி யாரையும் மதமாற்றம் செய்திருப்பார்கள் என்று கருத நியாயம் இல்லை.
"(முஹம்மதே!) உமது இறைவன் நாடியிருந்தால் பூமியில் உள்ள அனைவரும் ஒட்டு மொத்தமாக நம்பிக்கை கொண்டிருப்பார்கள். நம்பிக்கை கொண்டவர்களாக ஆவதற்காக மக்களை நீர் நிர்பந்திக்கிறீரா?" (குர்ஆன் 10:99)
ஒருவர் நம்பிக்கை கொள்ளாமல் இருந்தால் அது இறைவனின் நாட்டப்படி தான் நடக்கிறது. நீர் யாரையும் கட்டாயப்படுத்துவதோ, நிர்பந்தம் செய்வதோ கூடாது என்று இந்த வசனமும் தெள்ளத் தெளிவாக பிரகடனம் செய்கிறது.
இணை கற்பிப்போரில் யாரும் உம்மிடம் அடைக்கலம் தேடினால் அல்லாஹ்வின் வார்த்தைகளைச் செவியுறுவதற்காக அவருக்கு அடைக்கலம் அளிப்பீராக! பின்னர் அவருக்குப் பாதுகாப்பான இடத்தில் அவரைச் சேர்ப்பீராக! அவர்கள் அறியாத கூட்டமாக இருப்பதே இதற்குக் காரணம். (குர்ஆன் 9:6)
ஏகஇறைவனை) மறுப்பவர்களே!'' நீங்கள் வணங்குவதை நான் வணங்க மாட்டேன். நான் வணங்குபவனை நீங்கள் வணங்குவோரில்லை. நீங்கள் வணங்குவதை நான் வணங்குபவன் அல்லன். நான் வணங்குபவனை நீங்கள் வணங்குவோரில்லை. உங்கள் மார்க்கம் உங்களுக்கு. என் மார்க்கம் எனக்கு'' எனக் கூறுவீராக! (குர்ஆன் 109 வது அத்தியாயம்)
உங்கள் மார்க்கம் உங்களுக்கு; என் மார்க்கம் எனக்கு என்ற பிரகடனத்தின் மூலமும் வாள் முனையில் இஸ்லாத்தைப் பரப்புதல் இல்லை என்று தெளிவாக அறிவிக்கப்படுகிறது.
வேறு மார்க்கத்தில் இருப்பவர்கள் முஸ்லிம்களிடம் அடைக்கலம் தேடி வந்தால் அது தான் மதத்தைத் திணிப்பதற்கு சரியான தருனமாகும். ஆனால் அப்படி யாரும் அடைக்கலம் தேடி வந்தால் அவர்களுக்கு இஸ்லாம் என்றால் என்ன என்பதை எடுத்து கூறுவதுடன் நிறுத்திக் கொள்ள வேண்டும். அவருக்கு பாதுகாப்பான ஏற்பாட்டைச் செய்து தர வேண்டும் என்று இவ்வசனமும் தெளிவாகச் சொல்கிறது.
மேலும் எந்த நற்செயலாக இருந்தாலும் உளப்பூர்வமாக இருந்தால் தான் ஏற்றுக் கொள்ளப்படும் என்றும் திருக்குர்ஆன் கூறுகிறது.
உள்ளத்தில் நம்பிக்கை இல்லாமல் வேண்டாவெறுப்பாக ஒருவர் இஸ்லாத்தை ஏற்றால் அதனால் அவருக்கு எந்தப் பயனும் இல்லை என்று இஸ்லாம் கூறுகிறது.
எனவே கட்டாயப்படுத்தி இஸ்லாத்திற்கு அழைப்பது இஸ்லாத்தின் அடிப்படைக் கொள்கைக்கே எதிரானது."

## நிகழ்வும் அதன் நீதியும் 11

(கடன்)

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்:
'

இஸ்ரவேலர்களில் ஒருவர் மற்றொருவரிடம் தமக்கு ஆயிரம் தங்கக்காசுகள் கடனாகக் கேட்டார்.
கடன் கேட்கப்பட்டவர் 'சாட்சிகளை எனக்குக் கொண்டு வா! அவர்களைச் சாட்சியாக வைத்துத் தருகிறேன்' என்றார்.
கடன் கேட்டவர் 'சாட்சிக்கு அல்லாஹ்வே போதுமானவன்!' என்றார்.
'அப்படியானால் ஒரு பிணையாளியை என்னிடம் கொண்டுவா!' என்று கடன் கேட்கப்பட்டவர் கூறினார்.
அதற்குக் கடன் கேட்டவர் 'பிணை நிற்க அல்லாஹ்வே போதுமானவன்' என்று கூறினார்.
கடன் கேட்கப்பட்டவர் 'நீர் கூறுவது உண்மையே!' என்று கூறி, குறிப்பிட்ட தவணைக்குள் திருப்பித் தர வேண்டும் என்று ஆயிரம் தங்கக் காசுகளை அவருக்குக் கொடுத்தார்.
கடன் வாங்கியவர் கடல் மார்க்கமாகப் புறப்பட்டு, தம் வேலைகளை முடித்துவிட்டு, குறிப்பிட்ட தவணையில் கடனைத் திருப்பிச் செலுத்த வேண்டும் என்பதற்காக வாகனத்தைத் தேடினார். எந்த வாகனமும அவருக்குக் கிடைக்கவில்லை.
உடனே, ஒரு மரக்கட்டையை எடுத்து, அதைக் குடைந்து அதற்குள் ஆயிரம் தங்கக் காசுகளையும் கடன் கொடுத்தவருக்கு ஒரு கடிதத்தையும் உள்ளே வைத்து அடைத்தார்.
பிறகு கடலுக்கு வந்து, 'இறைவா! இன்னாரிடம் நான் ஆயிரம் தங்கக் காசுகளைக் கடனாகக் கேட்டேன்; அவர் பிணையாளி வேண்டுமென்றார்; நான் 'அல்லாஹ்வே பிணைநிற்கப் போதுமானவன்!' என்றேன்; அவர் உன்னைப் பிணையாளியாக ஏற்றார். என்னிடம் சாட்சியைக் கொண்டுவரும்படி கேட்டார்; 'சாட்சிக்கு அல்லாஹ்வே போதுமானவன்!' என்று கூறினேன்.
அவர் உன்னை சாட்சியாக ஏற்றார்; அவருக்குரிய (பணத்)தை அவரிடம் கொடுத்து அனுப்பி விடுவதற்காக ஒரு வாகனத்திற்கு நான் முயற்சி செய்தும் கிடைக்கவில்லை என்பதையெல்லாம் நீ அறிவாய்! எனவே, இதை உரியவரிடம் சேர்க்கும் பொறுப்பை உன்னிடத்தில் ஒப்படைக்கிறேன்!' என்று கூறி அதைக் கடலில் வீசினார்.

அது கடலுக்குள் சென்றதும் திரும்பிவிட்டார். அத்துடன் தம் ஊருக்குச் செல்வதற்காக வாகனத்தையும் அவர் தேடிக் கொண்டிருந்தார். அவருக்குக் கடன் கொடுத்த மனிதர், தம் செல்வத்துடன் ஏதேனும் வாகனம் வரக்கூடும் என்று நோட்டமிட்ட வண்ணம் புறப்பட்டார். .
அப்போது, பணம் அடங்கிய அந்த மரக்கட்டையைக் கண்டார். தம் குடும்பத்திற்கு விறகாகப் பயன்படட்டும் என்பதற்காக அதை எடுத்தார். அதைப் பிளந்து பார்த்தபோது பணத்தையும் கடிதத்தையும் கண்டார்.
பிறகு, கடன் வாங்கியவர் ஆயிரம் தங்கக் காசுகளை எடுத்துக்கொண்டு இவரிடம் வந்து சேர்ந்தார்.
'அல்லாஹ்வின் மீது ஆணையாக! உம்முடைய பணத்தை உமக்குத் தருவதற்காக வாகனம் தேடும் முயற்சியில் நான் ஈடுபட்டிருந்தேன். இப்போதுதான் வாகனம் கிடைத்து வந்திருக்கிறேன்!' என்று கூறினார். .
அதற்கு கடன் கொடுத்தவர், 'எனக்கு எதையாவது அனுப்பி வைத்தீரா?' என்று கேட்டார்.
கடன் வாங்கியவர், 'வாகனம் கிடைக்காமல் இப்போதுதான் வந்திருக்கிறேன் என்று உமக்கு நான் தெரிவித்தேனே!' என்று கூறினார்.
கடன் கொடுத்தவர், 'நீர் மரத்தில் வைத்து அனுப்பியதை உம் சார்பாக அல்லாஹ் என்னிடம் சேர்ப்பித்துவிட்டான்; எனவே, ஆயிரம் தங்கக் காசுகளை எடுத்துக் கொண்டு (சரியான) வழியறிந்து செல்லும்!' என்று கூறினார்.
என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார். (புகாரி : 2291)
_____________________________________________

நீதி :
கடன் வாங்குவது நிர்பந்தம் கருதி அனுமதிக்கப்பட்டது, ஆகவே இயன்றவரை கடன் வாங்குவதைத் தவிர்க்க வேண்டும். ஏனென்றால் வாங்கியக் கடனைத் திருப்பி கொடுப்பதற்குத் தாமதமானாலும் அல்லது கொடுக்க இயலாமல் போனாலும் இம்மையிலும் மறுமையிலும் மனிதன் பாதிப்புக்குள்ளாக வேண்டியது ஏற்படும்.
நபி(ஸல்) அவர்கள் “அல்லாஹ்வே பாவத்திலிருந்தும் கடனிலிருந்தும் உன்னிடம் பாதுகாவல் தேடுகிறேன்” என்று தொழுகையில் துஆ செய்து கொண்டிருந்தார்கள், அப்போது ஒருவர் அல்லாஹ்வின் தூதரே! நீங்கள் அதிகமாக கடனிலிருந்து பாதுகாவல் தேடுகிறீர்களே! என்றார். அதற்கு நபியவர்கள் ஒரு மனிதன் கடன்பட்டுவிட்டால் பொய் பேசவும், வாக்குறுதிக்கு மாறு செய்யவும் ஆரம்பித்துவிடுகிறான் என்று பதிலளித்தார்கள். ஆயிஷா(ரலி) நூல்: புகாரி 2397
வாங்கியக் கடனை திருப்பிக் கொடுக்காமல் மரணித்துவிட்டால் பிற மனிதனுக்கு கொடுக்க வேண்டிய உரிமையை கொடுக்காத குற்றம் வந்து சேரும்.
ஸஃத் பின் அல்அத்வால் (ரலி) அவர்களின் சகோதரர் மரணிக்கையில் முன்னூறு திர்ஹமை விட்டுச் சென்றார். அந்த தொகையை மரணித்தவரின் பிள்ளைகளுக்காக செலவழிக்க வேண்டுமென்று வைத்திருந்தார் ஸஃத், அவரை நோக்கி நபி(ஸல்) அவர்கள் உன் சகோதரர் அவர் வாங்கிய கடனால் தடுத்து வைக்கப்பட்டுள்ளார். எனவே அவருக்காக அதனை அடைத்து விடு! என்றார்கள்.
அதற்கவர் அல்லாஹ்வின் தூதரே அவருடைய கடனெல்லாம் நான் அடைத்துவிட்டேன். ஆனால் ஒரு பெண்மணி தனக்கு இரண்டு தீனார்கள் அவர் கொடுக்க வேண்டுமென்று வாதிட்டார், அவரிடம் ஆதாரம் எதுவுமில்லை என்பதால் நான் கொடுக்கவில்லை என்றார்.
அதற்கு நபியவர்கள் அப்பெண் உண்மைதான் சொல்கிறார் அந்தக் கடனையும் அடைத்து விடு! என்றார்கள். நூல்கள்: அஹ்மத் 20088, இப்னுமாஜா 2433.
கடன் வாங்கி அதை அடைக்காமல் இறந்து போகிறவருக்கு நபி(ஸல்) அவர்கள் ஜனாஸா தொழுகை நடத்த மாட்டார்கள்.
இந்நிலையில் ஒரு மய்யித் கொண்டுவரப்பட்டது. அவர்மீது கடன் திருப்பிக் கொடுக்க வேண்டியிருக்கிறதா? என்று நபியவர்கள் கேட்டார்கள். அதற்கு, ஆம் இரண்டு தினார்கள் என்று மக்கள் பதிலளித்தனர், அப்படியானால் உங்கள் தோழருக்கு நீங்களே தொழுதுகொள்ளுங்கள் என்று நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்.
அப்போது அபூகதாதா(ரலி) அல்லாஹ்வின் தூதரே அதை அடைப்பது என் பொறுப்பு என்றார்.
அதன் பின் நபி(ஸல்) அந்த மய்யித்திற்காக தொழுகை நடத்தினார்கள். ஜாபிர்(ரலி) _அஹ்மத் 14192, அபூதாவூத் 3345
இது மட்டுமின்றி அல்லாஹ்வின் வழியில் போர் செய்து உயிர் தியாகம் செய்தவருக்கு தவறுகளெல்லாம் மன்னிக்கப்பட்டாலும் கடன் மட்டும் மன்னிக்கப்படாது.
நபி(ஸல்) அவர்களிடம் ஒரு மனிதர் வந்து அல்லாஹ்வின் தூதரே நான் பொறுமையுடனும் நன்மையை எதிர்பார்த்தும் (எதிரிகளை) முன்னோகியவாறும் புறமுதுகு காட்டாமலும் அல்லாஹ்வின் வழியில் போரிட்டுக் கொல்லப்பட்டால் என் தவறுகளெல்லாம் மன்னிக்கப்படுமல்லவா? என்று கேட்டார்.
அதற்கு ஆம் என்று பதிலளித்தார்கள். நபியவர்கள் அம்மனிதர் திரும்பிச் செல்கையில் அவரை அழைத்து மீண்டும் அவரது கேள்வியைக் கேட்கும்படி கூறினார்கள்.
முன்பு கேட்டதையே அவர் மீண்டும் கேட்டார். அப்போது நபி(ஸல்) அவர்கள் ஆம் கடனைத் தவிர! இவ்வாறு ஜிப்ரீல் எனிடம் இப்போது கூறினார்கள் என்றார்கள். நூல்கள்: நஸஈ 3156, (இதன் கருத்து முஸ்லிம், திர்மிதியிலும் உள்ளது)

## நிகழ்வும் அதன் நீதியும் 12

( உண்மை வெளித்தோற்றத்தில் இல்லை )

இஸ்ரவேல் சமுதாயத்தைச் சேர்ந்த ஒரு பெண் தன் குழந்தைக்கு பாலூட்டிக் கொண்டிருக்கும் போது, அந்த வழியாக அவர்களைக் கடந்து அழகிய ஆடை அணிந்த, சுறுசுறுப்பான (போர் வீரன்) ஒருவன் குதிரையில் போனான்.
இது கண்ட தாய், "யா அல்லாஹ்! என் குழந்தையையும் இவர் போல் ஆக்கியருள்வாயாக!" என்று பிரார்த்தனை செய்தாள்.
உடனே, குழந்தை பால் குடிப்பதை நிறுத்தி அவனைப் பார்த்தது. பின்னர், "யா அல்லாஹ்! என்னை அவன் போலாக்கிவிடாதே!" என்று குழந்தை பதிலுக்கு பிரார்த்தித்து விட்டு, பால் குடிக்க ஆரம்பித்தது.
அதன் பின் சிலர் ஒரு பெண்ணை, “விபச்சாரியே! திருடியே” எனத் திட்டிக்கொண்டும், அடித்துக்கொண்டும் அந்த வழியில் சென்றனர். அவர்கள் அடிக்க அவள், 'ஹஸ்பியல்லாஹ் ஹஸ்பியல்லாஹ்!' (எனக்கு அல்லாஹ் போதுமானவன்! எனக்கு அல்லாஹ் போதுமானவன்!) என, திரும்பத் திரும்பக் கூறிக் கொண்டே சென்றாள்.
இதைக் கண்ணுற்ற தாய், "என் குழந்தையை இவள் போல் ஆக்கிவிடாதே!" என்று அல்லாஹ்விடம் பிரார்த்தனை செய்தாள்.
உடனே, குழந்தை பால் குடிப்பதை நிறுத்திவிட்டு அவளைப் பார்த்தது. பின்னர், "யா அல்லாஹ்! என்னை இவள் போல் ஆக்குவாயாக!” என்று பிரார்த்தித்தது.
அப்போது தாய் நேரடியாகக் குழந்தையிடம் பேச ஆரம்பித்தாள்
தாய் : அழகிய தோற்றமுடைய ஒரு மனிதன் சென்றபோது 'அவன் போல் என் குழந்தையை ஆக்கு' என்று நான் துஆ கேட்டேன். நீ என்னை அப்படி ஆக்கிவிடாதே என்று கூறினாய்.
விபச்சாரியே! திருடியே! எனக் கூறி ஒரு அடிமைப் பெண்ணை சிலர் அடித்துக் கொண்டு சென்றதைக் கண்டு, 'அவள் போல் குழந்தையை ஆக்கிவிடாதே' என துஆ கேட்ட போது, நீ என்னை அவள் போல் ஆக்கி விடு என துஆ கேட்டாயே இதற்கான காரணம் என்ன?
குழந்தை : அந்த மனிதன் பெருமைக்காரனாக (நரகத்திற்குரியவனாக) இருந்தான். எனவேதான் நான் 'என்னை அவன் போல் ஆக்கிவிடாதே' என துஆ கேட்டேன்.
அந்த அடிமைப் பெண்மணியை அவர்கள், 'விபச்சாரியே! திருடியே!' எனத் திட்டினர். அவள் விபச்சாரம் புரியவுமில்லை, திருடவுமில்லை. (அது மட்டுமல்ல, அவள் அந்நேரத்திலும் எனக்கு அல்லாஹ் போதுமானவன்' என்று அல்லாஹ்வின் மீது நம்பிக்கையை வெளிப்படுத்தினாள்.)
எனவேதான் 'அவள் போல் என்னையும் ஆக்கிவிடு' என நான் அல்லாஹ்விடம் துஆ கேட்டேன் என்று குழந்தை கூறியது.
(இந்த சம்பவத்தை நபி (ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்) அவர்கள் கூறக் கேட்டு அபூஹுரைரா (ரளியல்லாஹு அன்ஹு) எனும் உத்தமத் தோழர் அறிவிக்கிறார்.
(முஸ்னத் அஹ்மத் என்ற ஹதீஸ் நூலில் (பாகம் 2, பக்கம் 359) பதிவு செய்யப்பட்டுள்ளது.)

---

நீதி :
அல்லாஹ் நாடினால் எதையும் செய்வான். இங்கு அல்லாஹ் குழந்தையைப் பேச செய்தானல்லவா?
உலகில் மக்கள் பார்வைக்கு உயர்ந்த தகுதியில் வாழ்ந்துவிட்டு; மறுமையில் நரகம் நுழைபவர்களை விட, உலகத்தில் மற்றவர்களால் இழிவு படுத்தப்பட்டாலும், நல்லவர்களாக வாழ்ந்து; நல்லவர்களாகவே மரணித்து; மறுமையில் சுவனம் பெறுவதே உண்மையில் மேலானதாகும்.
இதற்கு நல்லதொரு உதாரணம் காரூன் .இவனைப் பற்றி

குர்ஆனில் அல்லாஹ் ...
فَخَرَجَ عَلٰى قَوْمِهٖ فِىْ زِيْنَتِهٖ قَالَ الَّذِيْنَ يُرِيْدُوْنَ الْحَيٰوةَ الدُّنْيَا يٰلَيْتَ لَنَا مِثْلَ مَاۤ اُوْتِىَ قَارُوْنُ اِنَّهٗ لَذُوْ حَظٍّ عَظِيْمٍ
அப்பால், அவன் (கர்வத்துடனும், உலக) அலங்காரத்துடன் தன் சமூகத்தாரிடையே சென்றான்; (அப்போது) இவ்வுலக வாழ்க்கையை எவர் விரும்புகிறார்களோ அவர்கள்: “ஆ! காரூனுக்கு கொடுக்கப்படடதைப் போன்று நமக்கும் இருக்கக்கூடாதா? நிச்சயமாக, அவன் மகத்தான பாக்கியமுடையவன்” என்று கூறினார்கள்.
(குர்ஆன் : 28:79)

وَقَالَ الَّذِيْنَ اُوْتُوا الْعِلْمَ وَيْلَكُمْ ثَوَابُ اللّٰهِ خَيْرٌ لِّمَنْ اٰمَنَ وَعَمِلَ صَالِحًا ‌ۚ وَلَا يُلَقّٰٮهَاۤ اِلَّا الصّٰبِرُوْنَ
கல்வி ஞானம் பெற்றவர்களோ; “உங்களுக்கென்ன கேடு! ஈமான் கொண்டு, நல்ல அமல்களை செய்பவர்களுக்கு அல்லாஹ் அளிக்கும் வெகுமதி இதைவிட மேன்மையானது; எனினும், அதைப் பொறுமையாளரைத் தவிர, (வேறு) எவரும் அடைய மாட்டார்கள்” என்று கூறினார்கள். (குர்ஆன் : 28:80)

فَخَسَفْنَا بِهٖ وَبِدَارِهِ الْاَرْضَ فَمَا كَانَ لَهٗ مِنْ فِئَةٍ يَّـنْصُرُوْنَهٗ مِنْ دُوْنِ اللّٰهِ وَمَا كَانَ مِنَ الْمُنْتَصِرِيْنَ
ஆகவே, நாம் காரூனையும் அவன் வீட்டையும் பூமியில் அழுந்தச் செய்தோம்; அல்லாஹ்வையன்றி அவனுக்கு உதவி செய்கிற கூட்டத்தார் எவருமில்லை; இன்னும் அவன் தன்னைத்தானே காப்பாற்றிக் கொள்ளவும் முடியவில்லை.
(குர்ஆன் : 28:81)

وَاَصْبَحَ الَّذِيْنَ تَمَنَّوْا مَكَانَهٗ بِالْاَمْسِ يَقُوْلُوْنَ وَيْكَاَنَّ اللّٰهَ يَبْسُطُ الرِّزْقَ لِمَنْ يَّشَآءُ مِنْ عِبَادِهٖ وَيَقْدِرُ‌ۚ لَوْلَاۤ اَنْ مَّنَّ اللّٰهُ عَلَيْنَا لَخَسَفَ بِنَا‌ ؕ وَيْكَاَنَّهٗ لَا يُفْلِحُ الْكٰفِرُوْنَ
முன் தினம் அவனுடைய (செல்வ) நிலையை விரும்பியவர்களெல்லாம், “ஆச்சரியம் தான்! அல்லாஹ் தன் அடியார்களில், தான் நாடியவர்களுக்கு ஆகார வசதிகளைப் பெருக்குகிறான், சுருக்கியும் விடுகிறான்; அல்லாஹ் நமக்கு கிருபை செய்யவில்லையாயின் அவன் நம்மையும் (பூமியில்) அழுந்தச் செய்திருப்பான்; ஆச்சரியம் தான்! நிச்சயமாக காஃபிர்கள் சித்தியடைய மாட்டார்கள்” என்று கூறினார்கள்.
(குர்ஆன் : 28:82)

## நிகழ்வும் அதன் நீதியும் 13

( ஜீவகாருண்யம் )

1) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
(முன்னொரு காலத்தில்) ஒரு நாய் கிணறு ஒன்றைச் சுற்றிச்சுற்றி வந்துகொண்டிருந்தது. அது தாகத்தால் செத்துவிடும் நிலையில் இருந்தது.
அப்போது பனூ இஸ்ராயீல் சமுதாயத்தின் விபசாரிகளில் ஒருத்தி அதைப் பார்த்தாள்.
உடனே அவள் தனது காலுறையைக் கழற்றி (அதில் தண்ணீரை எடுத்து) அந்த நாய்க்குப் புகட்டினாள். அதன் காரணமாக அவளுக்குப் பாவமன்னிப்பு வழங்கப்பட்டது.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
முஸ்லிம் : 4518.
2 ) இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்:
(முன்னொரு சமுதாயத்தைச் சேர்ந்த) பெண்ணொருத்தி ஒரு பூனை(க்குத் துன்பம் தந்த) விஷயத்தில் வேதனைப்படுத்தப்பட்டாள்.
அந்தப் பூனையை அது பசியால் துடித்துச் சாகும் வரை அவள் அடைத்து வைத்திருந்தாள். அதன் காரணத்தால் அவள் நரகத்தில் புகுந்தாள். அப்போது அல்லாஹ்வே மிக அறிந்தவன் -
'நீ அதைக் கட்டிவைத்து அதற்குத் தீனி போடவுமில்லை; தண்ணீர் தரவுமில்லை; அது பூமியிலுள்ள புழு பூச்சிகளைத் தின்று (பிழைத்துக்) கொள்ளட்டும் என்று அதை அவிழ்த்து விடவுமில்லை' என்று அல்லாஹ் கூறினான். என அப்துல்லாஹ் இப்னு உமர்(ரலி) அறிவித்தார். புகாரி : 2365.

நீதி :
மிருகங்களை அறுப்பதில் இஸ்லாம் ஜீவகாருண்யத்தை பின்பற்றுகின்றதா ?
இஸ்லாம் கூறுகின்ற முறையில் உயிரினங்களை அறுக்கும் போது அவற்றுக்கு எந்த வேதனையும் தெரியாது என்று சோதனை மூலம் நிரூபிக்கப்பட்டுள்ளது.
உயிரினங்களை உணவாகக் கொள்ளும் முஸ்லிமல்லாதவர்கள் அவற்றைத் தண்ணீரில் மூழ்கடித்தோ, அல்லது கழுத்தை நெறித்தோ, தடியால் அடித்தோ, ஈட்டியால் குத்தியோ இன்னும் இது போன்ற வழிகளில் பிராணிகளின் உயிரைப் போக்குகின்றனர்.
ஆனால் இந்த வழிமுறைகளில் பிராணிகளைக் கொல்வதை இஸ்லாம் கண்டிக்கிறது. பிராணிகளின் குரல் வளையில் கூர்மையான கத்தி மூலம் அறுத்துத் தான் பிராணிகளைக் கொல்ல வேண்டும் என்று இஸ்லாம் கூறுகிறது.
குரல்வளை மிக விரைவாக அறுக்கப்படுவதால் மூளையுடன் உள்ள தொடர்பு அறுந்து போகின்றது. இதனால் அப்பிராணிகளால் வலியை உணர முடியாது. இரத்தத்தை வெளியேற்றுவதற்காக உடல் துடிக்கிறது; வேதனையால் அல்ல என்பதை சமீபத்திய ஆய்வுகள் தெரிவிக்கின்றன.
ஜெர்மனி நாட்டில் உள்ள ஹனோவர் பல்கலைக் கழகத்தில் ஒரு ஆய்வு மேற்கொள்ளப்பட்டது.
அந்த ஆய்வை நடத்தியவர்கள் பேராசிரியர் சூல்ட்ஜ் மற்றும் அவரது துணை ஆய்வாளர் டாக்டர் ஹாஸிம் ஆவார்கள்.

அவர்கள் செய்த பரிசோதனையின் விவரத்தையும் அதன் முடிவுகளின் விவரத்தையும் கீழே தருகின்றோம்.
1- முதலில் உணவுக்காக அறுக்கப்படும் விலங்குகள் தேர்வு செய்யப்பட்டன.
2 – அறுவை சிகிச்சை செய்து அவ்விலங்குகளின் தலையில் மூளையை தொடும் படி பல பகுதிகளில் மின்னணுக் கருவிகள் பொருத்தப்பட்டன.
3 -உணர்வு திரும்பியதும். முழுவதுமாகக் குணமடைய பல வாரங்களுக்கு அப்படியே விடப்பட்டன.
4 – அதன் பிறகு பாதி எண்ணிக்கை விலங்குகள் இஸ்லாமிய ஹலால் முறைப்படி அறுக்கப்பட்டன.
5 – மறு பாதி எண்ணிக்கை விலங்குகள் மேற்கத்தியர் கையாளும் முறைப்படி கொல்லப்பட்டன.
6 – பரிசோதனையின் போது கொல்லப்பட்ட எல்லா விலங்குகளுக்கும் E.E.G. மற்றும் ஊ.ஈ.ஏ. பதிவு செய்யப்பட்டன.
அதாவது E.E.G. மூளையின் நிலையையும், E.E.G. இருதய நிலையையும் படம் பிடித்துக் காட்டின.
இப்போது மேற்கண்ட பரிசோத னையின் முடிவுகளையும், அதன் விளக்கங்களையும் காண்போம்.
இஸ்லாமிய ஹலால் முறை:

1- இம்முறையில் விலங்குகள் அறுக்கப்பட்ட போது, முதல் மூன்று வினாடிகளுக்கு E.E.G.ல் எந்த மாற்றமும் தென்படவில்லை. அறுக்கப்படுவதற்கு முன்னிருந்த நிலையிலேயே அது தொடர்ந்து நீடித்தது. விலங்குகள் அறுக்கப்படும் போது அவை வலியினால் துன்பப்படவில்லை என்பதை இது காட்டியது.
2- மூன்று வினாடிகளுக்குப் பின் அடுத்த மூன்று வினாடிகளுக்கு விலங்குகள் ஆழ்ந்த தூக்கம் அல்லது உணர்வற்ற நிலைக்கு ஆளாகின்றன என்பதை E.E.G.பதிவு காட்டியது. அந்நிலை உடம்பிலிருந்து அதிகப் படியான ரத்தம் பீறிட்டு வெளியாவதால் ஏற்படுகின்றது.
3 – மேற்கண்ட ஆறு வினாடிகளுக்குப் பின் E.E.G. பூஜ்ய நிலையைப் பதிவு செய்தது. அறுக்கப்பட்ட விலங்கு எந்த வலி அல்லது வதைக்கும் ஆளாகவில்லை என்பதை இது காட்டியது.
4 -மூளையின் நிலையை பூஜ்யமாகப் பதிவு செய்த நேரத்திலும், இதயத் துடிப்பு நிற்காமல் தொடர்ந்து துடிப்பதாலும் உடலில் ஏற்படும் வலிப்பினாலும் உடலிலிருந்து முற்றிலுமாக ரத்தம் வெளியேற்றப்படுகிறது. அதனால் அந்த மாமிசம் உணவுக்கேற்ற சுகாதார நிலையை அடைகிறது.
முஸ்லிமல்லாதவர்கள் பிராணிகளைக் கொல்லும் முறை:
1 – இந்த முறையில் கொல்லப்படும் விலங்குகள் உடனே நிலை குலைந்து போய் உணர்வற்ற நிலைக்குப் போகின்றன.
2 – அப்போது விலங்குகள் மிகக் கடுமையான வலியால் அவதியுறுவதை E.E.G.பதிவு காட்டியது.
3 – அதே நேரத்தில் விலங்குகளின் இதயம் ஹலால் முறையில் அறுக்கப்பட்ட விலங்குகளோடு ஒப்பிடும் போது முன்னதாகவே நின்று விடுகிறது. அதனால் உடலில் மிகுதியான ரத்தம் தேங்கிவிடுகிறது. ரத்தம் உறைந்த அந்த மாமிசம் உட்கொள்ளத்தக்க சுகாதார நிலையை அடையவில்லை.
மேற்கண்ட ஆய்வுகள் இஸ்லாமிய ஹலால் முறையே சிறந்தது என்பதை எடுத்துக் காட்டுவதோடு அம்முறையே மனிதாபிமான முறை என்பதையும் நிரூபித்துள்ளது.
எனவே பிராணிகளை இஸ்லாம் கூறும் முறையில் அறுத்தால் அதில் உயிரினங்களுக்கு வதை இல்லை என்பது நிரூபணமாகின்றது. எனவே இஸ்லாம் ஜீவகாருண்யமில்லாத மார்க்கம் என்பது முற்றிலும் தவறான குற்றச்சாட்டு என்பதில் ஐயமில்லை

## அளவிலா அருட்கொடைகள் 1

( இந்த உலகம் தானாக உருவானது அல்ல! )

(மனிதர்களே!) வானங்களிலும் பூமியிலும் உள்ளவைகளை நிச்சயமாக அல்லாஹ் உங்களுக்கு வசப்படுத்தித் தந்திருக்கின்றான் என்பதையும், அவன் தன் அருட்கொடைகளை மறைவாகவும் வெளிப்படையாகவும் உங்கள் மீது சொரிந்திருக்கின்றான் என்பதையும் நீங்கள் பார்க்கவில்லையா?
(இவ்வாறெல்லாமிருந்தும்) மனிதர்களில் பலர் யாதொரு கல்வியும், யாதொரு (தர்க்கரீதியான) ஆதாரமும், யாதொரு தெளிவான வேத நூலின் ஆதாரமுமின்றி அல்லாஹ்வைப் பற்றி (வீணாகத்) தர்க்கிக்கின்றனர். (குர்ஆன் : 31:20)
.இந்த உலகம் எப்படி உருவானது என்பது சம்பந்தமாக பல்வேறு தரப்பினரிடையே வெவ்வேறு விதமான கருத்துக்கள் நிலவி வருகின்றன.
அறிவியல் ஆய்வாளர்கள் "பெரு வெடிப்பு கொள்கை" என்றொரு கொள்கையை "அதாவது முன்னொரு காலத்தில் நெபுலா என்றொரு மிகப்பெரிய நட்சத்திரம் வெடித்து சிதறியதால் தான் இந்த உலகம் மற்றும் எல்லா கோள்களும் உண்டானதாகவும் பின்பு இந்த உலகில் உயிர்கள் தோன்றி தானாக வளர்ந்ததாகவும் பரவலாக நம்புகின்றனர்.
அறிவியல் ஆய்வாளர்கள் பிரபஞ்ச வடிவயியலிலிருந்து கண்ட உண்மையை இறைவனும் தன் குர்ஆனில்,

اَوَلَمْ يَرَ الَّذِيْنَ كَفَرُوْۤا اَنَّ السَّمٰوٰتِ وَالْاَرْضَ كَانَـتَا رَتْقًا فَفَتَقْنٰهُمَا‌ وَجَعَلْنَا مِنَ الْمَآءِ كُلَّ شَىْءٍ حَىٍّ‌ اَفَلَا يُؤْمِنُوْنَ
(நபியின் கூற்றை) நிராகரித்தவர்கள் சிந்தித்துப் பார்க்க வேண்டாமா? வானங்கள், பூமி அனைத்தும் ஒன்றோடொன்று சேர்ந்திருந்தன. பிறகு அவற்றை நாம் தனித்தனியாகப் பிளந்தோம்; ஒவ்வொரு உயிரினத்தையும் தண்ணீரிலிருந்து நாம் படைத்தோம்; (நமது இந்தப் படைப்புத்திறனை) அவர்கள் ஏற்கமாட்டார்களா? (குர்ஆன் : 21:30)

அதன்பின் ஒவ்வொரு வஸ்துக்களையும் மிகச் சிறந்த நுண்ணறிவுடனும் அத்தியவசியசத்துடனும் இறைவன் படைத்துள்ளான் என்பதை இந்த உலகில் உள்ள ஒவ்வொன்றையும் கூர்மையாக ஆராய்ந்து பார்த்தால் இது ஒரு மிகப்பெரிய வல்லுனரால் திட்டமிட்டு உருவாக்கப்பட்டது என்பதை சுலபமாக புரிந்துகொள்ள முடியும்.
நாம் வாழும் இந்த பூமி உயிரினங்கள் வாழ்வதற்கு ஏற்ப சூரியனில் இருந்து சரியான தூரத்தில் அமைக்கப்பட்டுள்ளது.
பூமி சூரியனை 23 1/2 டிகிரி சாய்வாக, நீள் வட்ட பாதையில் சூரியனை சுற்றி வருவதால் பருவ காலங்களில் மற்றம் ஏற்படுகிறது.
மனிதனின் அத்யாவசிய பொருளான காற்று நீர் எல்லாமே மறு சுழர்ச்சி முறையில் திரும்ப திரும்ப பூமியில் உருவாகி கொண்டே இருக்கிறது.

மனிதன் சுவாசிக்கும் காற்றை தாவரங்கள் கொடுக்கின்றன தாவரங்களுக்கு தேவையான காற்றை மனிதன் வெளியிடுகின்றான் இது ஒரு சமநிலையை
ஏற்படுத்துகிறது.
''அவனே பூமியை நீங்கள் வசிக்கும் இடமாகவும், வானத்தை ஒரு முகடாகவும் அமைத்து மேகத்தில் இருந்து மழையைப் பொழிவித்து, அதைக் கொண்டு (நீங்கள்) புசிக்கக்கூடிய கனி வர்க்கங்களையும், உங்களுக்கு வெளியாக்குகின்றான். ஆகவே (இவற்றை யெல்லாம்) நீங்கள் தெளிவாக அறிந்து கொண்டே அல்லாஹ்வுக்கு எதையும்
இணையாக்காதீர்கள்'' (குர்ஆன்–2:22)
இந்த உலகில் உள்ள உயிர்கள் எல்லாம் தன் இனத்தை பெருக்க திட்டமிட்டு செய்யப்பட்டிருக்கும் விதம் மிக மிக அதிசயம்.
உதாரணமாக எருக்கு செடியை எடுத்துக்கொள்ளுங்கள் அதன் காய் சரியாக காற்று அடிக்கும் காலத்தில்தான் வெடித்து சிதறும் அதன் விதையோடு உள்ள பஞ்சு போன்ற பொருள் அதை காற்றின் மூலம் பல்வேறு இடத்துக்கு எடுத்து செல்கிறது இதுபோல் ஒவ்வொன்றும் ஒவ்வொரு விதத்தில் பரவுகிறது
இப்படி எத்தனையோ அடுக்கிக்கொண்டே போகலாம்
அதுபோல் மனிதன் உருவாக்கப்பட்ட விதமும் ஒரு மிகப்பெரிய அதிசயமே. கண், காதுகளின் அமைப்பு, கைவிரல்கள், பல் தாடைகள் போன்ற மனிதனின் ஒவ்வொரு
உறுப்புகளின் அமைப்பும் மிக நேர்த்தியாக மனிதனின் தேவைகளை நிறைவேற்ற தகுந்தபடி மிகவும் அதிசயமாக அமைக்கப்பட்டுள்ளது.
இவ்வளவு ஏன்?
ஒரு குழந்தையானது பூமியில் பிறக்கும் முன்னரே அதற்கு தேவையான உணவு அதன் தாயிடம் ஏற்பாடு செய்யப்பட்டு உள்ளது.
அஹா ! எவ்வளவு அருமையாக இந்த உலகம்
படைக்கப்பட்டுள்ளது இது தானாக உருவனானது என்று சொல்வதில் எந்த உண்மையும் இருக்கவே முடியாது!
ஒருவன் மிகவும் அழகாக வடிவமைக்கப்பட்ட ஒரு செல் போனை தனது நண்பரிடம் காட்டினார். உடனே அந்த நண்பர் இந்த செல்போன் மிகவும் அழகாக உள்ளது நான் இதுபோல் ஒன்று வாங்க வேண்டும் எது எங்கே வாங்கினீர்கள் என்று கேட்டாராம்.
உடனே செல்போன்காரரர் இதை நீங்கள் எங்குமே வாங்க முடியாது. எனது அலுவலகம் பக்கத்தில் ஒரு எலக்ட்ரானிக் கம்பனி ஒன்று இருந்தது. அது ஒருநாள் திடீரென்று
வெடித்து சிதறியது அப்பொழுது அதில் உள்ள பல பொருட்கள் ஒன்று சோர்ந்து இப்படி ஒரு செல்போன் தானாக உருவாகி எனக்கு பக்கத்தில் வந்து விழுந்தது என்று சொன்னால் எப்படி நம்ப முடியாதோ...
அதுபோல் இந்த உலகம் ஒரு விபத்தால் தானாக உருவானது என்பது கொஞ்சமும் நம்ப முடியாத ஒரு விஷயம்!
இந்த உலகம் என்பது இறைவன் என்ற ஒரு கைதேர்ந்த கலைஞரால் பார்த்து பார்த்து வடிவமைக்கப்பட்ட அருட்கொடை என்பதே உண்மை!

## அளவிலா அருட்கொடைகள் 2

( நோயிக்கு நிவாரணமும் இறைவனின் அருட்கொடையே ! )




நோய் ஏன் வருகிறது?
முதலில் நோய் ஏன் வருகிறது? பல பதில்களை நாம் அறிந்திருந்தாலும் அது நம்மைப் படைத்தவன் புறத்திலிருந்து எச்சரிக்கை என்பதை அதிமுக்கியமாக நாம் உணர வேண்டும்!

கண்களை மூடிக்கொண்டு ஓடிக்கொண்டிருக்கும் குதிரையை அதன் மேலுள்ள குதிரைஒட்டி மெதுவாக கடிவாளம் கொண்டு இழுக்கும் போது அக்குதிரை நிதானத்தை அடைகிறது. அதுபோன்ற ஒரு செயலே நோய் என்பதும்!
மனிதன் அன்றாட வாழ்க்கையில் ஈடுபடும்போது இறைவனைப் பற்றியோ, இறைவன் புறத்திலிருந்து அனுபவித்துக் கொண்டு வரும் எண்ணற்ற அருட்கொடைகளைப் பற்றியோ சிறிதும் பொருட்படுத்துவதில்லை.
தன்னிலை மறந்து கண்ணை மூடியவனாக ஓடிக்கொண்டிருக்கும் அவன் அவனது உடல், பொருள் ஆவி என அனைத்துக்கும் சொந்தக்காரன் தன்னைப் படைத்து பரிபாலித்து வரும் இறைவன்தான் என்பதை மறந்து விடுகிறான்.
அவனது கருணை இல்லாமல் தன்னால் இங்கு வாழ முடியாது என்பதையும் அவன் கொடுத்துவரும் எண்ணற்ற அருட்கொடைகளுக்கு நன்றி சொல்லக் கடமைப் பட்டிருக்கிறான் என்பதையும் எளிதாக மறந்து விடுகிறான்.
அப்படிப்பட்ட மனிதனை நிதானப் படுத்த இறைவன் விடுக்கும் எச்சரிக்கையே நோய் என்பது!
நோய் வரும் முன் வரை தனது உடல் இயக்கங்களை சமநிலையில் இயக்கிவந்த இறைவனின் கருணையை நினைவூட்ட வருகிறது நோய்!
அவ்வாறு இறைவனை நினைவூட்டி மனிதனை பாவங்களில் இருந்து மீட்டு நல்லவனாக மாற்ற வருகிறது நோய்!
எனவே நோய் வரும்போது நாம் மிக மிக முக்கியமாக உணர வேண்டியவை.
அதே நேரத்தில் ...

"அல்லாஹ் எந்த நோயையும் அதற்குரிய நிவாரணத்தை அருளாமல் இறக்குவதில்லை என்று இறைதூதர் இனிய நபி (ஸல்) அவர்கள் இயம்பியதை அறிவிக்கிறார் அபூஹுரைரா (ரலி) நூல் புகாரி.
எல்லா நோய்களையும் நீக்கும் மருந்தை நீக்கமற நிறைந்துள்ள இறைவன் உண்டு பண்ணி இருக்கிறான். நோய் ஏற்பட்டால் மருத்துவம் செய்யுங்கள். தடை செய்யப்பட்ட ஹராமான மருத்துவம் வேண்டாம் என்ற ஏந்தல் நபி(ஸல்) அவர்களின் மணிமொழியை அறிவிக்கிறார் அபூதர்தா (ரலி) நூல்- அவூதாவூத்.
இதய நோய்களை அறிய எவ்வித கருவியும் இல்லாத இக்கட்டான சூழலில், ஈ.ஸி.ஜி. என்னும் கருவியை வடிவமைத்துத்தந்து மருத்துவ உலகில் சாதனை புரிந்தவர் டாக்டர் வில்லெம்!
வில்லெம் வாழ்ந்த காலத்தில் இதயம் சம்பந்தமான நோய்களைக் கண்டறிய, இதயத் துடிப்பினையே பெரிதும் நம்பியிருந்தனர். இதயத் துடிப்பானது மின்சாரத்தை உற்பத்தி செய்கிறது என்னும் தகவலை 1890 ஆம் ஆண்டுகளில் மருத்துவ உலகம் அறிந்து கொண்டது .

இதயத் துடிப்பினை அப்படியே பிரதிபலிக்கும் அந்த மின்சாரத் துடிப்பினை நோயாளியிடமிருந்து பதிந்து எடுத்து, இதய நோயின் காரணத்தை அறிவது எளிது என்பதையும் அறிந்திருந்தனர். ஆனால், இதயத் துடிப்பு வெளியிடும் மின்சார ஓட்டத்தினைப் பதிய எவ்விதக் கருவியும் இல்லை.
இதயத் துடிப்பினால் உண்டாகும் மின் அதிர்வுகளைப் பதிவு செய்திட மின்தகடுகளை இதயத்துக்குள்ளே நுழைத்து, ஒரு கருவியுடன் இணைத்து, அதன் மூலம் பதிவு செய்தனர். ஆனால், இதயநோய் ஏற்பட்டு அச்சத்துடன் வாழும் நோயாளிக்கு இம்முறை வேதனையை ஏற்படுத்தியது.
இந்த நிலையிலிருந்து இதய நோயாளியின் நோயின் தன்மையை அறிந்திட, ஒரு புதிய கருவியினை கண்டுபிடித்து விட வேண்டும் என தமது ஆராய்ச்சியினைத் தீவிரமாகச் செய்தார் வில்லெம்.
பத்து ஆண்டுகள் இடையறாது தொடர்ந்து மேற்கொண்ட ஆய்வுகளின் பலனாக, 1901 ஆம் ஆண்டு இதயத் துடிப்பின் போது வெளியாகும் மின்சாரத்தினைப் பதிவு செய்திட நவீனக் கருவியை வடிவமைத்தார்.
'கேல்வினா மீட்டர்' என்பது ஒரு மின் கருவி, இக்கருவியின் உதவியால் ஒரு மின் சுற்றில் மின்னோட்டம் இருக்கின்றதா இல்லையா என்பதைக் கண்டறிய இயலும்.

மின் சுற்றில் மின் பொறியாளர்கள் பயன்படுத்தும் இக்கருவியை, நீளமான கம்பிகள் கொண்டு தமக்கு தேவைப்பட்டாற் போல சிறிது மாற்றி அமைத்துக் கொண்டார் வில்லெம்.
மின்சாரத்தைப் பதிவதில் கேல்வினாமீட்டர் சிறந்து விளங்கியது. சற்று தொலைவில் மின்சாரம் இருந்தால் கூட அதனை அப்படியே பதிவு செய்து தரவல்லது கேல்வினா மீட்டர்.
நெஞ்சின் மேற்பகுதியில் வைக்கும் போது, சற்று தள்ளி உள்ளே இதயத் துடிப்பு உருவாக்கித் தரும் மின்சாரத்தைப் பதிவு செய்திட பயன் படுத்தினார் வில்லெம்.
இந்த கருவியில் ஒரு மெல்லிய மின் கடத்தி பொருத்தப்பட்டிருக்கும். இது இரண்டு சக்தி வாய்ந்த காந்தங்களுக்கு இடையில் தொங்கிய நிலையில் இருக்கும். இதயத் துடிப்பு உருவாக்கும் மின்சாரம் மேம்படுத்தப்பட்ட கேல்வினா மீட்டரால் உணரப்பட்டது. அந்த மின்சாரமானது இந்தக் கடத்திக்கு மாற்றப்படும்.
காந்தப் புலன்களின் ஆளுமையில் இருப்பதால், இந்த மின் கடத்தி நகரும் அல்லது அசையும் காந்தப் புலன்களுக்கு நடுவே அகப்படும் எந்த மின் கடத்திக்குள்ளும் இப்படி ஓர் அதிர்வு ஏற்படும்.
இந்த மின் கடத்தியின் மீது பட்டுக் கொண்டேயிருக்கும் ஒளியானது, இந்த அமைப்பின் எதிர்ப்புறத்தில் வைக்கப்பட்டிருக்கும் போட்டோ சுருள் மீது அதிர்வின் சூழலைப் பதிவு செய்தபடி இருக்கும். அதாவது, மின் கடத்தியின் அசைவுகள் தொடர்ச்சியாகப் பதிவாகிவிடும்.

மனித சதை, எலும்பு முதலியவற்றைத் தாண்டி இதயம் உள்ளேயிருந் தாலும், கேல்வினா மீட்டரின் துரித செயல்பாட்டினால் எவ்விதமான சேதமும், வலியும் இல்லாமல் இதயத் துடிப்பினை பதிவு செய்திட முடிந்தது. சூடாகும் காந்தங்களைக் குளிர்விக்க கூடுதல் தண்ணீர், காந்தங்களின் அதிக எடை முதலிய இடையூறுகள் ஆரம்பத்தில் இருந்தது. அந்த இடையூறு களைக் கடந்து, நெஞ்சு வரை குடைந்து சென்று பதிவு செய்யவேண்டிய தொல்லைகளை விரட்டி, இதயத் துடிப்பினை எளிமையாகப் பதிவு செய்யும் நவீனக் கருவியைக் கண்டுபிடித்தார் வில்லெம்! அது ஈ.ஸி.ஜி. (Electro Cardio Gram) கருவியாகும்.

ஈ.ஸி.ஜி கருவி மூலம் எந்தவிதமான இதய நோயையும் கண்டுபிடித்து விடும் வழி ஏற்பட்டது. மாரடைப்பு ஏற்படும் நிலையைக் கூட முன் கூட்டியே கண்டுபிடித்து அறிவிக்கும் எச்சரிக்கை மணியாய் ஈ.ஸி.ஜி கருவி விளங்குகிறது. இக்கருவி இதய நோய்கள் சம்பந்தமான மருத்துவப் பிரிவிற்குக் கிடைத்த வரப்பிரசாதமாகும்!
ஈ.ஸி.ஜி கருவியை 1901ஆம் ஆண்டு வில்லெம் உருவாக்கினார். அதற்குப் பிறகு பல நவீன மாற்றங்களைக் கண்டது. வில்லெம், தமது தொடர்ச்சியான ஆராய்ச்சிகளின் மூலமாக, வெறும் தாளில் வளைந்து, வளைந்து வரையப்படும் இதயத் துடிப்பின் பதிவினையும் தாண்டி, ஓசையுடன் பதிவதற்கான வசதிகளையும் அக்கருவியில் ஏற்படுத்தினார்.
ஆனாலும், இன்றளவும் ஈ.ஸி.ஜி கருவியானது வில்லெம் எப்படி அமைத்துக் கொடுத்தாரோ, அதே அடிப்படையில் தான் வடிவமைக்கப்பட்டு வருகிறது.
மனித குல மருத்துவ முறைகளின் மைல் கல்லாய் வில்லெமின் இக்கண்டுபிடிப்பு அமைந்துள்ளது. ஈ.ஸி.ஜி கருவியைக் கண்டுபிடித்து மருத்துவ உலகிற்கு வழங்கிய வில்லெமிற்கு 1924ஆம் ஆண்டு மருத்துவத்துக்கான நோபல் பரிசு வழங்கப்பட்டது!
இதய நோயிக்கு நிவாரணமான இக்கண்டுபிடிப்பும் இறைவனின் அருட்கொடையே !

## அளவிலா அருட்கொடைகள் 3

( உங்கள் இல்லம் ஒரு மகத்தான ஓர் அருட்கொடை)



மனிதன் சிந்திக்கத் தவறிய இறைவனின் அருட்கொடைகள் ஏராளம் தாராளம் இருக்கின்றன.
அப்படி மனிதன் சிந்திக்கத் தவறிய ஓர் உயரிய அருட்கொடை தான் இல்லமாகும். ஆம்! மனிதன் தான் வசிப்பதற்கு பயன் படுத்தும் வீடாகும்.
அப்படி மனிதன் சிந்திக்கத் தவறிய வீட்டைக் குறித்து சிந்தித்து உணருமாறு அல்லாஹ் தன் திருமறையில் தூண்டுகின்றான்.

وَاللّٰهُ جَعَلَ لَـكُمْ مِّنْ بُيُوْتِكُمْ سَكَنًا وَّجَعَلَ لَـكُمْ مِّنْ جُلُوْدِ الْاَنْعَامِ بُيُوْتًا تَسْتَخِفُّوْنَهَا يَوْمَ ظَعْنِكُمْ وَيَوْمَ اِقَامَتِكُمْ‌ۙ وَمِنْ اَصْوَافِهَا وَاَوْبَارِهَا وَاَشْعَارِهَاۤ اَثَاثًا وَّمَتَاعًا اِلٰى حِيْنٍ
உங்கள் வீடுகளை அல்லாஹ் உங்களுக்கு நிம்மதி தருவதாக அமைத்தான். கால்நடைகளின் தோல்களை நீங்கள் வீடுகளாக அமைக்க (வசதியான விதத்தில்) உங்களுக்காக அவன் படைத்திருக்கிறான்.
அது நீங்கள் பிரயாணம் போகும் சமயத்திலும், ஓர் இடத்தில் தங்கும் சமயத்திலும் எளிதில் சுமந்து செல்லக்கூடியதாக இருக்கிறது.
(ஆடை போன்ற) பற்பல பொருள்களையும் தயாரிப்பதற்கு அவற்றில் (செம்மறியாட்டின்) கம்பளி, (ஒட்டகத்தின்) உரோமம் (வெள்ளாட்டின்) முடி ஆகியவைகளையும் (அவன் உங்களுக்காக படைத்திருக்கிறான். அவற்றாலான பொருள்கள்) ஒரு காலம் வரையில் உங்களுக்கு பயன்படுகின்றன. (குர்ஆன் : 16:80)
இந்த இறைவசனத்திற்கு முன்னாலும், பின்னாலும் அல்லாஹ் பல்வேறு அருட்கொடைகளைக் கூறிவிட்டு அவைகளைப் பற்றி சிந்திக்குமாறு கூறுகின்றான்.

நாம் நம்முடைய அன்றாட வாழ்வில் எத்துனையோ அருட்கொடைகளை அனுபவிக்கின்றோம்.
என்றாலும், அவைகளின் மதிப்புகளை நாம் உணர்வதில்லை. அது போன்று தான் இறைவனின் மாபெரும் அருட்கொடையான வீடு – இல்லத்தின் மதிப்பு குறித்தும் நாம் உணரவில்லை.
வீடே இல்லாதவனுக்குத் தான் வீட்டின் மதிப்பும், அருமையும் தெரியும்.
இன்று உலகத்தில் கோடான கோடி பேர்கள் வீடில்லாமல், குழந்தை குட்டிகளோடு நாடோடிகளாக மரங்களுக்கு கீழேயும், மேம்பாலத்தின் விளிம்புகளிலும், ஆற்றுப் படுகைகளிலும் படுத்து உறங்கிக் கொண்டு அலைந்து திரிகின்றார்கள்.

இன்னும் சிலர், சொந்த வீடு இருந்தும் இயற்கைப் பேரிடர், யுத்த மேகம், உள் நாட்டுப் போர் ஆகியவைகளால் பாதிக்கப்பட்டு அகதிகள் முகாமில் ஒரு நேர சாப்பாட்டிற்கு வரிசையில் நின்று கொண்டிருக்கின்றார்கள்.
ஆதலால் தான் அல்லாஹ்வின் தூதர் {ஸல் அவர்கள் தங்களது துஆவில் ரிஜ்கில் – வாழ்வாதாரத்தில் அபிவிருத்தியைக் கேட்பதற்கு முன்னால் இல்லத்தின் விசாலத்தைப் பற்றி அல்லாஹ்விடம் முறையிட்டார்கள்.
“இறைவா! என்னுடைய பாவத்தை மன்னித்து விடுவாயாக! என் வீட்டை விசாலமாக்குவாயாக! என் வாழ்வாதாரத்தில் – ரிஜ்கில் அபிவிருத்தி செய்வாயாக ! ( நூல்: இப்னு அபீ ஷைபா, ஹதீஸ் எண்: 29384 )
இன்று சமூகத்தில் வீட்டை உருவாக்குவதில் மனிதர்கள் பல்வேறு கனவுகளைச் சுமந்தவர்களாக வலம் வருகின்றார்கள். சில போது வீட்டை அமைப்பதில் காட்டுகின்ற அக்கறையும், அதீத ஆர்வமும் அல்லாஹ்வின் வரம்புகளை மீறிடும் துணிச்சலைத் தந்து விடுகின்றது.
அதனால், வீண்விரயம் வட்டி, இன்னொருவனின் உரிமையப் பறித்தல் போன்ற பாவங்களைச் செய்திட மனிதன் துணிந்து விடுகின்றான்.

நாம் பார்த்திருக்கின்றோம், சில பேர் பக்கத்து வீட்டுக்காரனின் இடத்தை அபகரித்து தன் வீட்டைக் கட்டி விட்டு வீட்டின் முகப்பிலே “இது என் இறைவனின் அருட்கொடை” என்று போட்டிருப்பார்கள்.
வீட்டின் வரைவிலக்கணத்தைப் பற்றி அபூ அப்தில்லாஹ் முஹம்மத் இப்னு அஹ்மத் அல் அன்ஸாரி அல் குர்துபீ (ரஹ்) அவர்கள், மேற்கூறிய இறைவசனத்தின் விளக்கத்தில் கூறுகின்ற போது..
“உன் தலைக்கு மேல் நிழல் தருபவைக்கு முகடு என்றும், உன்னைச் சுமந்து தாங்கி நிற்பவைகளுக்கு தரை என்றும், உன்னை நான்கு புறத்திலும் மறைப்பதற்கு சுவர் என்றும் கூறப்படும் இவை அனைத்தும் ஒன்று சேர்ந்த கட்டிடத்திற்கு ”பைத்” வீடு என்று சொல்லப்படும்.”

மனிதன் தனது அயராத உழைப்பினூடே சிறிது நேரம் ஓய்வெடுப்பது அவசியம். இந்த ஓய்வு என்பது அவனுக்கு வீட்டில் தான் கிடைக்கின்றது.
மேலும், உடல் ஓய்வோடு உள்ளமும், சிந்தனையும், சீர் பட அல்லாஹ் வீட்டில் தான் அமைதியை, மன நிம்மதியை அருளியிருப்பதாக இந்த வசனத்தில் தெளிவு படுத்தி இருக்கின்றான் - ( நூல்: தஃப்ஸீர் குர்துபீ )
கலீஃபா உமர் (ரலி) அவர்களின் ஆட்சிக் காலத்தில் நபித்தோழர் ஸல்மானுல் ஃபார்ஸீ (ரலி) அவர்கள் ஷாமின் கவர்னராக இருந்த தருணம் அது.
தங்களுக்கென அது வரை எந்த ஒரு வீட்டையும் அவர்கள் கட்ட வில்லை. பெரும்பாலும் மரங்களின் நிழல்களிலும், மஸ்தித்களிலும் தங்கிக் கொள்வார்கள்.
மதாயின் பகுதியில் வசித்து வந்த ஸல்மான் (ரலி) அவர்களை ஒரு நாள் ஹுதைஃபா (ரலி) அவர்கள் சந்தித்து, தோழரே! நீங்கள் ஏன் உங்களுக்காக ஒரு வீட்டை கட்டிக் கொள்ளக் கூடாது? என்று கேட்டார்.
அதற்கு ஸல்மான் (ரலி) அவர்கள் “எதற்காக வீட்டை கட்ட வேண்டும்? என்று கேட்டார்கள்.
அதற்கு ஹுதைஃபா (ரலி) அவர்கள் “ஓய்வெடுக்கவும் இன்ன பிற சுய தேவைகளுக்கும் உங்களுக்கு பயன் தருமல்லவா? என்று கூறினார்கள்.
அது கேட்ட ஸல்மான், "அதைத் தான் மதாயின் நகர மரங்களின் நிழல்களில் பெற்றுக் கொள்கின்றேனே" என்று கூறி மறுத்து விட்டார்கள்.
வற்புறுத்திக் கூறவே, வீடு கட்ட சம்மதித்து கொத்தனாரை வரவழைத்தார்கள்.
கொத்தனாரிடம் ஸல்மான் (ரலி) அவர்கள், எப்படி வீட்டைக் கட்டப் போகின்றாய்? என்று கேட்டார்கள்.
ஸல்மான் (ரலி) அவர்களின் உலகப் பற்றற்ற வாழ்வையும், எளிமையையும் நன்கு விளங்கி வைத்திருந்த கொத்தனார் இப்படிக் கூறினார்.

“கவர்னர் அவர்களே! கவலை கொள்ளாதீர்கள்! நான் தங்களுக்காக கட்டித் தரப்போகும் வீடு வெயில் காலங்களில் நிழல் தரும், குளிர் காலங்களில் தங்களுக்கு பாதுகாப்பு அளிக்கும். நீங்கள் எழுந்து நின்றால் அதன் முகடு உங்கள் தலையின் உச்சியைத் தொடும், நீங்கள் படுத்திருந்தால் அதன் சுவர்கள் உங்களின் கால்களைத் தட்டும்!” என்றார் கொத்தனார்.
அவர் சொன்ன பதிலைக் கேட்டு, அகமகிழ்ந்தவராக “ஆம்! இப்படித்தான் என் இல்லம் அமைந்திருக்க வேண்டுமென்று நானும் விரும்பினேன்” என்றார்கள் ஸல்மான் ஃபார்ஸி (ரலி) அவர்கள். ( நூல்: ரிஜாலுன் ஹவ்லர் ரஸூல் {ஸல்}, இஸ்தீஆப், பாகம்:1, பக்கம்:336 )
ஹஜ்ரத் அலீ (ரலி) அவர்கள் ஒரு நாள் மதீனாவின் வீதியில் வந்து கொண்டிருக்கும் போது, ஒருவர் தமது வீட்டை கட்டிக் கொண்டிருந்தார். அவரை அழைத்து அலீ (ரலி) அவர்கள் சொன்னார்களாம்.

“ஓ! இன்னவரே! நீர் உயிரற்றவராய் இருந்தீர்! பின்பு நீர் உயிர் கொடுக்கப்பட்டீர்! சில காலத்திற்குப் பின்னர் மீண்டும் உயிரற்றுப் போவீர்!
ஆனாலும், நீர்! அழியும் உலகில் வீட்டைக் கட்டிக் கொண்டிருக்கின்றீர்! அழியா உலகான மறுமையில் நீர் இன்பமாக இருப்பதற்காகவும் ஓர் வீட்டை உருவாக்கிக் கொள்வீராக!
மன்னர் ஹாரூன் ரஷீத் அவர்கள் மிகப் பிரம்மாண்டமான முறையில், அதிக செலவில் ஓர் அரண்மனையைக் கட்டினார்கள்.
அந்த அரண்மனையைக் கண்டு அதிர்ந்து போன, அந்த காலத்தில் வாழ்ந்த மாமேதை புஹ்லூல் (ரஹ்) அவர்கள் அரண்மனையின் சுவரில்…
“ஹாரூனே! மண்ணை உயர்த்தி சத்திய சன்மார்க்கத்தை நீர் தாழ்த்தி விட்டீர்! வைரக் கல்லை உயர்த்தி சத்திய தீனின் நெறியான குர்ஆன் – ஹதீஸைத் தாழ்த்தி விட்டீர்!
“ஹாரூனே! அறிந்து கொள்ளுங்கள்! இந்த அரண்மனை சொந்த வருமானத்தில் கட்டப்பட்டிருந்தால் அது இஸ்ராஃப் – வீண் விரயமாகும். அல்லாஹ் வீண் விரயம் செய்பவர்களை ஒரு போதும் நேசிப்பதில்லை.”
அவ்வாறின்றி, பொதுச் சொத்திலிருந்து கட்டப்பட்டிருந்தால் அது அநியாயம் ஆகும். அல்லாஹ் அநியாயம் செய்பவர்களையும் ஒரு போதும் நேசிப்பதில்லை.” என்று எழுதினார்கள். ( நூல்: தஃப்ஸீர் ரூஹுல் பயான், அந் நஹ்ல் 80 –வது வசனத்தின் விளக்கத்தில் )
வீடு கட்ட வேண்டும் என்ற பேராசையில் உழல்பவர்களுக்கும், பிறரின் புகழுக்காக ஆடம்பரமாகவும், உயரமாகவும் பயன்பாட்டிற்கு அதிகமாகவும் வீடு கட்டுகின்ற ஒவ்வொருவருக்கும் முன்னோர்களின் வரலாற்றில் பாடங்கள் நிறைய உண்டு.

அல்லாஹ்வின் தூதர் {ஸல்} அவர்கள் கூறினார்கள்.
“நான்கு விஷயங்கள் ஓர் அடியானுக்கு ஸாலிஹான நல்ல மனைவி, விசாலமான அமைதி நிலவும் வீடு, நல்லவராக இருக்கும் அண்டை வீட்டான், இலகுவான வாகனம் ஆகியவை அமையப் பெறுமானால் அவன் நற்பேற்றை பெற்றவனாவான்.
அதே போன்று ஓர் அடியானுக்கு தீய நடத்தையுள்ள மனைவி, கெட்டவராக இருக்கும் அண்டை வீட்டான், நெருக்கடியும் அசௌகர்யமும் நிலவும் வீடு, பயனற்ற வாகனம் ஆகியவை அமையப் பெறுமானால் அவன் துர்பாக்கியம் பெற்றவனாவான்.” ( நூல்: இப்னு ஹிப்பான், ஹதீஸ் எண்: 4032 )
அல்லாஹ்வின் தூதர் {ஸல்} அவர்கள் கூறினார்கள்: “தன்னுடைய நாவை கட்டுப்படுத்தினானே அத்தகைய ஒருவனுக்கும், தனது பாவத்தை நினைத்து அழுகின்றானே அத்தகைய ஒருவனுக்கும், தனது இல்லத்தை எல்லா வகையிலும் விசாலமாக ஆக்கிக் கொண்டானே அத்தகைய ஒருவனுக்கும் சோபனம் உண்டாகட்டும்!
அல்லாஹ்வின் தூதர் {ஸல்} அவர்கள் கூறினார்கள்: “குழப்பத்திலிருந்து தான் பாதுகாக்கப்பட வேண்டும் என ஒரு மனிதன் விரும்பினால், அவன் வீட்டில் வசிப்பதை அவசியமாக்கிக் கொள்ளட்டும்!”

ஓர் இறைநம்பிக்கையாளனின் இல்லத்தில் அல்லாஹ் வாக்களிக்கிற அமைதியும் நிம்மதியும், அல்லாஹ்வின் தூதர் {ஸல்} அவர்கள் வாக்களிக்கிற சோபனமும், நற்பேரும் தவழ வேண்டுமானால் எப்படிப்பட்ட இல்லமாக அது திகழ வேண்டும்?

1.வீட்டின் அஸ்திவாரத்தை இறையச்சத்தையும், இறைதிருப்தியையும் நோக்கமாகக் கொண்டு அமைக்க வேண்டும்.
அல்லாஹ் கூறுகின்றான்: “இறையச்சத்தையும், இறைதிருப்தியையும் நோக்கமாகக் கொண்டு தம் கட்டடத்தை நிர்மாணித்தவர் சிறந்தவரா? அல்லது வெள்ளத்தால் அரிக்கப்பட்ட உறுதியற்ற ஓடைக்கரையின் மீது தனது கட்டடத்தை நிர்மாணித்து, பிறகு அக்கட்டடத்துடன் சேர்ந்து தானும் நரக நெருப்பில் நேராக வந்து விழுந்து விட்டானே அவன் சிறந்தவனா? (குர்ஆன்: அத் தவ்பா, வசனம்:109 )
இந்த இறைவசனம் நயவஞ்சகர்கள் கட்டிய மஸ்ஜித் ளிரார் குறித்து நேரடியாகப் பேசினாலும், பொதுவாக எந்த ஒரு கட்டிடமானாலும் அது இறையச்சத்தையும், இறைதிருப்தியையும் நோக்கமாகக் கொண்டு கட்டப்பட வேண்டும் என்பதையும் வலியுறுத்துகின்றது.

2.இபாதத்களின் கூடாரமாகவும், இறைநெருக்கத்தைப் பெற்றுத் தரும் இனிய செயல்களின் உறைவிடமாகவும் இல்லம் அமைந்திருக்க வேண்டும்.
பனூ இஸ்ரவேலர்கள் ஃபிர்அவ்னின் அடக்குமுறைகளால் பலவந்தப் படுத்தப்பட்ட போது, அவர்களால் ஆலயங்களில் சென்று தொழ முடியாத சூழல் ஏற்பட்டது.
அப்போது, நபிய்யுல்லாஹ் மூஸா (அலை) அவர்களிடம் பனூ இஸ்ரவேலர்கள் முறையிட்ட போது அல்லாஹ் அவர்களின் இல்லங்களையே தொழுகையில் முன்னோக்கும் கிப்லாவாக அமைக்க உத்தரவிட்டான்.
ஃபிர்அவ்ன் வெற்றி கொள்ளப்படும் வரை பனூ இஸ்ரவேலர்கள் தங்களது வீடுகள் எத்திசை நோக்கி இருப்பினும் அத்திசைகளையே கிப்லாவாக அமைத்துக் கொண்டார்கள்.
ஆகவே, இல்லங்கள் இறைவழிபாடு நடத்தப்படும் இடங்களாக மாறிப்போய் விட வேண்டும்.
அல்லாஹ்வின் தூதர் {ஸல்} அவர்களின் சமூகத்திற்கு வருகை தந்த இத்பான் இப்னு மாலிக் (ரலி) எனும் நபித்தோழர் நபிகளாரிடத்தில்…

“அல்லாஹ்வின் தூதரே! நான் என் சமூக மக்களுக்கு இமாமாக இருக்கின்றேன். என் வீட்டிற்கும் பள்ளிவாசலுக்கும் இடையே ஓர் ஓடை ஓடுகின்றது.
அதைக் கடந்து தான் நான் தொழவைக்கச் செல்வேன். ஆனால், மழைக் காலங்களில் அதைக் கடந்து செல்ல எனக்கு மிகவும் சிரமமாக இருக்கின்றது. மேலும், சமீப காலமாக எனக்குப் பார்வைக் குறைபாடும் ஏற்பட்டுள்ளது. இந்நிலையில் அது எனக்கு மேலும் சிரமத்தை ஏற்படுத்தியுள்ளது.
எனவே, நான் அங்கு சென்று தொழுவதும், தொழவைப்பதும் இயலாத காரியமாக இருக்கின்றது.
ஆகவே, நான் எனது வீட்டிலேயே ஓரிடத்தில் தொழுது கொள்ள அனுமதியளித்து, அந்த இடத்தில் நீங்கள் வந்து முதல் தொழுகையைத் தொழுதிட என் உள்ளம் நாடுகின்றது, அதுவே எனது விருப்பமாகவும் இருக்கின்றது. மேலும், அந்த இடத்தை நான் தொழுமிடமாக ஆக்கிக் கொள்வேன்.
அல்லாஹ்வின் தூதரே! நீங்கள் வருவீர்களா?” என்று வேண்டி நின்றார்.
அதற்கு அண்ணலார், இன்ஷா அல்லாஹ்.. அப்படியே செய்கின்றேன் என்றார்கள்.
இத்பான் இப்னு மாலிக் (ரலி) அவர்கள் கூறுகின்றார்கள்:”மறுநாள் நபிகளாரும், அபூபக்ர் (ரலி) அவர்களும் முற்பகல் நேரத்தில் எனது வீட்டிற்கு வருகை தந்தார்கள்.
பின்னர், அல்லாஹ்வின் தூதர் {ஸல்} வீட்டினுள் எங்கேயும் அமராமல் என்னை நோக்கி “நீர்! எங்கே தொழுதிட விரும்புகின்றீர்!” என்று கேட்டார்கள்.
அப்போது நான் வீட்டின் ஒரு ஓரப்பகுதியை சுட்டிக் காட்டினேன். அண்ணல் நபி {ஸல்} அவர்கள் இமாமாக நிற்க, நானும் அபூபக்ர் (ரலி) அவர்களும் நபிகளாரைப் பின் பற்றி இரண்டு ரக்அத்கள் தொழுதோம். பின்னர் அண்ணலார் என்னிடம் இருந்து விடை பெற்றுச் சென்றார்கள்.( நூல்: புகாரியின் தெளிவுரை ஃபத்ஹுல் பாரீ, பாகம்:1, பக்கம்:519 )

அன்னை ஆயிஷா (ரலி) அவர்கள் கூறுகின்றார்கள்: “அல்லாஹ்வின் தூதர் {ஸல்} அவர்கள் இரவுத் தொழுகைகளை முடித்து விட்டு வித்ர் தொழுகையை தொழும் போது ஆயிஷாவே! எழுந்திரு! வித்ர் தொழுகையைத் தொழு!” என்று கூறுவார்கள். ( நூல்: ஷரஹ் முஸ்லிம் லி இமாமின் நவவீ, பாகம்:6, பக்கம்:23 )
அல்லாஹ்வின் தூதர் {ஸல்} அவர்கள் தாம் செய்ததோடு மாத்திரம் நின்று விடாமல் இந்த உம்மத்தாரையும் செய்யுமாறு ஏவியதோடு, அப்படிச் செய்பவர் ”அல்லாஹ்வின் அருளுக்கு எல்லா காலத்திலும் சொந்தக்காரராக இருக்க” துஆவும் செய்தார்கள்.

நபி {ஸல்} அவர்கள் கூறினார்கள்: “ஒரு மனிதர் இரவுத் தொழுகைக்காக எழுகின்றார். தொழுகின்றார். பின்னர் அவரின் துணைவியாரையும் எழுப்புகின்றார். அவரின் துணைவியாரும் தொழுகின்றார். அல்லாஹ் இத்தகைய மனிதருக்கும், அவர் எழுப்புகின்ற போது, எழ மறுக்கும் தமது துணைவியாரின் முகத்தில் நீர் தெளித்து விழிக்கச் செய்து தொழ வைக்கிற மனிதருக்கும் அல்லாஹ் தனது அருளைப் பொழிவானாக!" ( நூல்: ஸஹீஹுல் ஜாமிஉ, ஹதீஸ் எண்:3488 )
3.நன்மைகள் ஏவப்படுகின்ற, தீமைகள் தடுக்கப்படுகின்ற, பணியின் கேந்திரமாக இல்லம் அமையப் பெற்றிருக்க வேண்டும்.
அல்லாஹ் கூறுகின்றான்: “இறைநம்பிக்கை கொண்டவர்களே! மனிதர்களும் கற்களும் எரிபொருள்களாகக் கூடிய அந்த நரக நெருப்பிலிருந்து உங்களையும் உங்கள் வீட்டாரையும் காப்பாற்றிக் கொள்ளுங்கள்.”
இந்த இறைவசனத்திற்கு விளக்கம் தருகிற பெரும்பாலான அறிஞர் பெருமக்கள் “வீட்டில் உள்ளவர்களுக்கு தர்பியத் செய்வதையும், கல்வி வழங்குவதையும் தான் இந்த இறைவசனம் குறிப்பிடுகின்றது” என்று கூறுகின்றார்கள்.
கதாதா (ரஹ்) அவர்கள் கூறுகின்றார்கள்: “வீட்டில் உள்ளவர்களை அல்லாஹ்விற்கு வழிப்படுமாறு ஏவுவதும், அல்லாஹ் தடுத்தவற்றிலிருந்து விலகி வாழுமாறு எச்சரிப்பதும் தான்” இந்த ஆயத் வலியுறுத்துகிற கருத்தாகும்.
ளஹ்ஹாக் (ரஹ்) அவர்கள் கூறுகின்றார்கள்: “வீட்டில் உள்ளவர்களுக்கும் தமது நெருங்கிய உறவுகளுக்கும் சன்மார்க்க போதனைகளை போதிப்பது ஒரு முஸ்லிமின் மீது கடமையென” இந்த வசனம் அறிவுறுத்துகின்றது.
4.மார்க்க அறிவை வளர்த்திடும் கலாசாலையாக இல்லம் அமைந்திருக்க வேண்டும்.
சன்மார்க்கத்தின் எல்லாத் துறைகளிலும் ஆழமான ஞானமும், தீட்சண்யமான கல்வியறிவும் கொண்டிருந்த அப்துல்லாஹ் இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் கல்வியை கற்பதிலும், பிறருக்கு கற்பிப்பதிலும் பேரார்வத்தோடு திகழ்ந்தார்கள்.
பல ஆயிரக்கணக்கான தாபியீன்களின் பேராசிரியப் பெருந்தகையாகத் திகழ்ந்தார்கள் இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள்.
அவர்களிடம் பயின்ற மாணாக்கரில் ஒருவர் கூறுகின்றார்: “நான் அவர்களின் சபையில் பங்கு கொள்கிற அறிஞர் பெருமக்களைப் பார்த்திருக்கின்றேன். அதைக் கொண்டு குறைஷிகள் எத்துணை பெருமை கொண்டாலும் அது தகுதியானது தான் என்று எண்ணத்தோன்றும்.”
இப்னு அப்பாஸ் (ரலி) அவர்களின் வீட்டுக்குச் செல்கின்ற பாதை முழுவதும் அவரிடம் கல்வி பயில வந்த மாணவர்களால் நிரம்பி வழியும். மற்றவர்கள் சென்று வருவதற்கு கூட இடம் இல்லாத அளவிற்கு அவருடைய வீட்டைச் சுற்றிலும் எந் நேரமும் அலை அலையாய் மாணவர்கள் நிறைந்து இருப்பதை நான் கண்ணாறக் கண்டிருக்கின்றேன்.
நான் இப்னு அப்பாஸ் (ரலி) அவர்களின் வீட்டிற்குள் நுழைந்து, இப்னு அப்பாஸ் (ரலி) அவர்களிடம் வெளியில் மாணவர்கள் காத்திருக்கும் விஷத்தைக் கூறுவேன்.

உடனே, இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் உளூ செய்வதற்கு தேவையான தண்ணீரை எடுத்து வருமாறு ஏவுவார்கள். நான் தண்ணீரை அவர்களின் அருகே கொண்டு செல்வேன். உடனடியாக உளூச் செய்து விட்டு, தாம் வழக்கமாக அமர்ந்து பாடம் நடத்தும் இடத்தில் அமர்ந்து விடுவார்கள்.
பிறகு என்னிடம் "குர்ஆன் குறித்தும், குர்ஆனின் விரிவுரை குறித்தும் விளக்கத்தைக் கேட்க வந்திருப்பவர்கள் உள்ளே வரலாம்" என்று அறிவிப்புச் செய்யச் சொல்வார்கள்.
நான் வெளியே சென்று அதைப் போன்று அறிவிப்புச் செய்வேன். பெருமளவில் மக்கள் உள்ளே நுழைவார்கள். வீடும் அறையும் நிறைந்து விடும். அவர்கள் கேட்கின்ற எல்லாவகையான கேள்விகளுக்கும் அவர்கள் தெளிவு பெரும் பொருட்டு மிக நேர்த்தியாக பதிலளிப்பார்கள்.
அவர்கள் கேட்க மறந்த கேள்விகளையும் இப்னு அப்பாஸ் (ரலி) அவர்களே நினைவு படுத்தி அதற்கும் விளக்கம் தருவார்கள். பிறகு, "உங்களின் இன்ன பிற சகோதரர்களுக்காக நீங்கள் வழி விடுங்கள்" என்று கூறுவார்கள்.
பிறகு என்னிடம் "ஹலால் குறித்தும், ஹராம் குறித்தும் விளக்கத்தைக் கேட்க வந்திருப்பவர்கள் உள்ளே வரலாம்" என்று அறிவிப்புச் செய்யச் சொல்வார்கள்.
நான் வெளியே சென்று அதைப் போன்று அறிவிப்புச் செய்வேன். பெருமளவில் மக்கள் உள்ளே நுழைவார்கள். வீடும் அறையும் நிறைந்து விடும். அவர்கள் கேட்கின்ற எல்லாவகையான கேள்விகளுக்கும் அவர்கள் தெளிவு பெரும் பொருட்டு மிக நேர்த்தியாக பதிலளிப்பார்கள்.
அவர்கள் கேட்க மறந்த கேள்விகளையும் இப்னு அப்பாஸ் (ரலி) அவர்களே நினைவு படுத்தி அதற்கும் விளக்கம் தருவார்கள். பிறகு, "உங்களின் இன்ன பிற சகோதரர்களுக்காக நீங்கள் வழி விடுங்கள்" என்று கூறுவார்கள்.
பிறகு என்னிடம் "கடமைகள் குறித்து விளக்கத்தைக் கேட்க வந்திருப்பவர்கள் உள்ளே வரலாம்" என்று அறிவிப்புச் செய்யச் சொல்வார்கள்.

நான் வெளியே சென்று அதைப் போன்று அறிவிப்புச் செய்வேன். பெருமளவில் மக்கள் உள்ளே நுழைவார்கள். வீடும் அறையும் நிறைந்து விடும். அவர்கள் கேட்கின்ற எல்லாவகையான கேள்விகளுக்கும் அவர்கள் தெளிவு பெரும் பொருட்டு மிக நேர்த்தியாக பதிலளிப்பார்கள்.
அவர்கள் கேட்க மறந்த கேள்விகளையும் இப்னு அப்பாஸ் (ரலி) அவர்களே நினைவு படுத்தி அதற்கும் விளக்கம் தருவார்கள். பிறகு, "உங்களின் இன்ன பிற சகோதரர்களுக்காக நீங்கள் வழி விடுங்கள்" என்று கூறுவார்கள்.
பிறகு என்னிடம் "அரபி மொழி, மற்றும் கவிதைகள் குறித்து விளக்கத்தைக் கேட்க வந்திருப்பவர்கள் உள்ளே வரலாம்" என்று அறிவிப்புச் செய்யச் சொல்வார்கள்.
நான் வெளியே சென்று அதைப் போன்று அறிவிப்புச் செய்வேன். பெருமளவில் மக்கள் உள்ளே நுழைவார்கள். வீடும் அறையும் நிறைந்து விடும். அவர்கள் கேட்கின்ற எல்லாவகையான கேள்விகளுக்கும் அவர்கள் தெளிவு பெரும் பொருட்டு மிக நேர்த்தியாக பதிலளிப்பார்கள்.
அவர்கள் கேட்க மறந்த கேள்விகளையும் இப்னு அப்பாஸ் (ரலி) அவர்களே நினைவு படுத்தி அதற்கும் விளக்கம் தருவார்கள். பிறகு, "உங்களின் இன்ன பிற சகோதரர்களுக்காக நீங்கள் வழி விடுங்கள்" என்று கூறுவார்கள்.
இறுதியாக, எல்லோரும் சென்ற பிறகே சற்று ஓய்வெடுப்பார்கள்.

இப்னு அப்பாஸ் (ரலி) அவர்களின் மாணவர்களில் ஒருவர் கூறுகின்றார்: "நாங்கள் இப்னு அப்பாஸ் (ரலி) அவர்களின் வீட்டில் அதிகமான கல்வி ஞானத்தை பெற்றுக் கொண்டதோடு அல்லாமல், அதிகமான உணவு பதார்த்தங்களையும், அதிகமான பானங்களையும், அதிகமான கனிவர்க்கங்களையும் பெற்றிருக்கின்றோம்."
அப்படி என்றால், இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் வந்து சென்ற பெருமளவிலான மக்களுக்கு கல்வியை மாத்திரம் கொடுக்காமல் அவர்களுக்கு உண்ண உணவும், பருக இதமான பானங்களும் வழங்கி பெரும் கொடையாளியாகவும் திகழ்ந்திருக்கின்றார்கள்.
5. நல்லோர்களும், சான்றோர்களும் உலவிச் செல்கிற இல்லமாக அமைந்திருக்க வேண்டும்.
நபி நூஹ் (அலை) அவர்கள் தங்களுக்கு வழங்கப்பட்ட பிரத்யேகமான துஆவை மிகவும் இக்கட்டான சூழலில் பயன் படுத்திய போதும் கூட தன் வீட்டிற்கு வந்து சென்ற நல்லோர்களையும் இணைத்துக் கொண்டார்கள்.
என் அதிபதியே! எனக்கும், என் தாய் தந்தையருக்கும், மேலும், என் வீட்டில் இறைநம்பிக்கை கொண்டவராகப் பிரவேசித்திருக்கும் ஒவ்வொருவருக்கும், மேலும், நம்பிக்கை கொண்ட ஆண் – பெண் அனைவருக்கும் நீ மேலான உன் மன்னிப்பை வழங்குவாயாக! மேலும், கொடுமைக்காரர்களுக்கு அதிக அழிவைத் தவிர வேறு எதையும் நீ கொடுக்காதே!

ஏனெனில், நல்லோர்களின் வரவால் இல்லங்களில் ஈமானியப் பிரகாசம் சுடர் விடும். மேலும், அவர்களோடு உரையாடுவதால் ஈருலகத்திற்கும் பயன் தருகிற ஏராளமான நன்மைகள் வந்து சேரும்.
6.தீயோர்களின் நிழல் கூட படியாத இல்லமாக அமைந்திருக்க வேண்டும்.
அல்லாஹ்வின் தூதர் {ஸல்} அவர்கள் கூறினார்கள்: "தீய நடத்தை கொண்டவர்களோடு பழகுவது என்பது, கொல்லம் பட்டறைக்கு அருகே வசிப்பதற்கு சமமாகும். ஒன்று அதன் புகை உன் வீட்டிற்குள் நுழைந்து விடும் ஆபத்து உள்ளது.
அல்லது உன் ஆடையை கரித்து விடும் ஆபத்தும் நேரிடலாம். அல்லது அதன் மூலம் உமக்கு நோவினை கூட ஏற்படலாம்."

இந்த ஹதீஸிற்கு விளக்கம் தரும் அறிஞர் பெருமக்கள் “தீயோர்களின் வரவால் வீட்டில் குழப்பமும், கணவன் மனைவி இடையே பிணக்கும், குடும்பத்தார்களிடையே பகைமையும், பிள்ளைகளுக்கும் பெற்றோருக்கும் இடையே பிரச்சனைகளும் ஏற்படும்.
சில போது அவர்களால் இழப்பும், ஆபத்தும் கூட ஏற்படலாம். ஆகையால் இது போன்ற தீய குணம் கொண்டவர்களை வாசலோடு அனுப்பி வைப்பது சாலச் சிறந்தது. அவர்கள் நெருங்கிய உறவினர்களாக இருந்தாலும்சரியே!

இன்றைக்கு நமது இல்லங்களில் அமைதியும், சாந்தியும், மகிழ்ச்சியும் இல்லாமல் போனதற்கான காரணங்கள் நம்முடைய சிந்தனைக்குப் புலப்பட்டிருக்கும்.
அல்லாஹ் கூறுகின்றான்: “உங்களுக்கு வழங்கப்பட்டிருக்கும் அத்துணை அருட் கொடைகளும் அல்லாஹ்வின் புறத்திலிருந்தே வழங்கப்பட்டிருக்கின்றன.”
உலகில் நாம் அனுபவிக்கும் அனைத்து நிஃமத்துக்களுமே அல்லாஹ் நமக்களித்த அருட்கொடை தான் என்பதை உளப்பூர்வமாக ஏற்றுக் கொள்ள வேண்டும்.
அல்லாஹ் கூறுகின்றான்: ”அல்லாஹ்வின் அருட் கொடைகளை நீங்கள் கணக்கிட்டால் அது எண்ணிக்கையில் அடங்காது.”
நமக்களித்த அருட்கொடைகளை எல்லால் நாம் கணக்கிட நினைத்தாலும் ஒரு போதும் நம்மால் அவைகளை எண்ணிக்கையில் அடக்கி விட முடியாது.
அவன் வழங்கிய தாராளமான நிஃமத்தில் இல்லம் என்பது அல்லாஹ் நமக்களித்திருக்கின்ற ஓர் மகத்தான அருட்கொடை என்பதை நாம் ஒப்புக் கொள்ள வேண்டும்.
அப்படி ஒப்புக் கொள்கிற மனோ நிலைக்கு நாம் வரும் போது தான் படைத்த ரப்புக்கு நாம் நன்றியாளர்களாக மாறிடும் சூழ்நிலை ஏற்படும்.
அல்லாஹ் கூறுகின்றான்: ”அல்லாஹ் உங்களுக்கு வழங்கிய அருட் கொடைகளுக்காக நீங்கள் நன்றியுள்ளவர்களாக இருப்பீர்களேயானால், அந்த அருட் கொடைகளில் அல்லாஹ் இன்னும் அபிவிருத்தியை நல்குவான்.”

அப்படி நாம் கொடையளித்த இறைவனுக்கு நன்றியாளர்களாக மாறிடும் பட்சத்தில் நமக்கு வழங்கிய கொடைகளில் அல்லாஹ் அபிவிருத்தியை நல்குவான்.
இல்லையேல், அல்லாஹ் நம்மைப் பாதுகாக்க வேண்டும். நாம் இறைக் கொடையை அனுபவித்து விட்டு அவனை மறந்தவர்களில், மறுத்தவர்களில் ஒருவராக ஆகிவிடுவோம்.
ஏனெனில், சில சமூகத்திற்கு அல்லாஹ் தான் அளித்த தண்டனையைக் குறிப்பிடும் போது, அது அவர்களின் வீடாகத்தான் இருந்தது என்று குறிப்பிடுகின்றான்.
ஆகவே, நம்முடைய இல்லங்களை சாந்தியும் அமைதியும் என்றென்றும் நின்று நிலவும் பூஞ்சோலைகளாக மாற்றிட முன் வருவோம்!
பெருமானாரின் சோபனத்திற்குரிய இல்லத்தோராய் நம்மை நாம் மாற்றிட முயற்சி செய்வோம்! அல்லாஹ் நம் இல்லங்களிலும், உள்ளங்களிலும் நிம்மதியைத் தந்தருள்வானாக! ஆமீன்! (மிஹ்ராப் விளக்குகள் பதிவு தளத்திலிருந்து )

**Sheik Alavudeen**

நிறையக் கேள்விகளுக்கான .... நிறைவான பதில்களாக பதிவு அமைந்துள்ளது ! ஆத்மார்த்தமாக ஒவ்வொருவரும் உள்வாங்கி ...இப்படியாகத்தான் நாம் இருக்கிறோமா என சுய பரிசோதனை செய்துகொள்ள ஒரு வாய்ப்பு ! ... பரந்த துன்யாவின் அழகான இல்லங்களைப் பார்த்து வியந்த அந்தக் கணங்கள் ... தெளிவு பெறுகிறது !

**அளவிலா அருட்கொடைகள் 4**
( குழந்தைகள் அல்லாஹ்வின் அருட்கொடைகள் )



“ஒருவர் தன் மனைவியிடம் நெருக்கமாக இருக்கும் நேரத்தில் ‘பிஸ்மில்லாஹ், இறைவா, சைத்தானை எங்களிடமிருந்து விலகி இருக்கச் செய். நீ எங்களுக்கு அளிக்கும் சந்ததியினரிடமிருந்தும், சைத்தானை விலகியிருக்கச் செய்’ என்று பிரார்த்தனை புரிந்து, பிறகு அவர்களுக்குச் சந்ததி அளிக்கப்பட்டால், அந்தச் சந்ததிக்கு சைத்தான் தீங்கு செய்யமாட்டான்’’ என்பதாக நபி (ஸல்) அவர்கள் கூறியுள்ளார்கள்
மனிதர்கள் அனைவருக்கும் பிள்ளைச்செல்வம் கிடைப்பதில்லை. அல்லாஹ் தான் நாடியவர்களுக்கே குழந்தைச் செல்வத்தை அளிக்கிறான்.

சிலருக்கு இப்ராஹீம் (அலை) அவர்களுக்கு அருளியது போல ஆண் மக்களாகக் கொடுக்கிறான். அல்லது லூத் (அலை) அவர்களுக்கு அளித்தது போல் பெண் மக்களாகக் கொடுக்கிறான். இன்னும் சிலருக்கோ நபி (ஸல்) அவர்களுக்கு வழங்கியது போல் ஆண் மக்களையும், பெண் மக்களையும் கலந்து கொடுக்கிறான்.
அருளாக விளங்கும் ஒவ்வொன்றும் அமானத் ஆகும். சொத்து, செல்வங்கள் அல்லாஹ்வின் அருட்கொடைகள். அவை இஸ்லாத்தின் பார்வையில் அமானிதமாக நோக்கப்படும். தேக ஆரோக்கியம் ஓர் அருளாக இருப்பது போல் அது ஓர் அமானிதமுமாகும்.

இளமைப் பருவம் ஓர் அருள். அவ்வாறே அது ஓர் அமானிதமாக கருதப்படும். அந்த வகையில் அருளாக கிடைக்கப்பெற்ற குழந்தைகள் மிகப் பெரும் பாக்கியமும் அமானிதமுமாகும்.
உலக வாழ்க்கையில் நாம் பெற்றிருக்கின்ற செல்வங்களிலெல்லாம் மிக உயர்ந்த செல்வம் குழந்தைச் செல்வம்.
அல்லாஹுத்தஆலா அல்குர்ஆனில் குழந்தைகளை 'ஸீனத்' என்று வர்ணிக்கின்றான்.
“செல்வமும் பிள்ளைகளும் இவ்வுலக வாழ்க்கையின் அலங்காரங்களேயாகும்.” (50: 46)
குழந்தைகள் இந்த உலகத்தில் அல்லாஹ் மனிதர்களுக்கு வழங்கியிருக்கின்ற ஒரு நிஃமத் (அருட்கொடை) என்றும் அல்லகுர்ஆன் குறிப்பிடுகின்றது.
“ஏராளமான பொருள்களையும் புதல்வர்களையும் (தந்து) கொண்டு உங்களுக்கு உதவி செய்து, உங்களைத் திரளான கூட்டத்தினராகவும் ஆக்கினோம்.” (குர்ஆன் 17: 06)

கண்களுக்கு குளிர்ச்சியானவர்கள் (குர்ரதுல் அஃயுன்) என்றும் அல்குர்ஆன் குழந்தைகளை வர்ணிக்கிறது.
இப்ராஹீம் (அலை) அவர்கள் இறைவனிடம் இவ்வாறு பிரார்த்தனை புரிபவர்களாக இருந்தார்கள்: “மேலும் அவர்கள், ‘எங்கள் இறைவா, எங்கள் மனைவியரிடமும், எங்கள் சந்ததியரிடமும் இருந்து எங்களுக்குக் கண்களின் குளிர்ச்சியை அளிப்பாயாக. இன்னும், பயபக்தியுடையவர்களுக்கு எங்களை இமாமாக (வழிகாட்டியாக) ஆக்கியருள்வாயாக’, என்று பிரார்த்தனை செய்வார்கள்” (குர்ஆன் 25:74).
“என் இறைவனே, என்னையும், என் சந்ததிகளையும் (உன்னைத்) தொழுது வருபவர்களாக ஆக்கிவை. எங்கள் இறைவனே, என்னுடைய பிரார்த்தனையை அங்கீகரித்துக் கொள்வாயாக’ (குர்ஆன் 14:40).
பெற்றோர்கள் தங்களுக்கு குழந்தைகள் பிறப்பதற்கு முன்பாகவே அவர்களுக்காக ‘துஆ’ செய்யக்கூடியவர்களாக இருக்க வேண்டும்.

ஜக்கரியா (அலை) அவர்கள் அல்லாஹ்விடம் தனக்காக ஒரு பரிசுத்தமான சந்ததியை தங்களின் முதுமைக்காலத்தில் கேட்டபொழுது, ஈசா (அலை) அவர்களின் வருகையை முன்னறிவிப்புச் செய்யக்கூடியவரான யஹ்யா (அலை) அவர்களை, அல்லாஹ் மகனாக வழங்குகிறான்.

இவ்வாறு குழந்தைகளை அருளாக, அலங்காரமாக, செல்வமாக, பாக்கியமாக, கண்குளிர்ச்சியாக, பரிசாக வர்ணிக்கின்ற அல்குர்ஆன் குழந்தைகள் சோதனையுமாகும் என்ற உண்மையையும் சொல்கிறது.
நிச்சயமாக உங்கள் செல்வமும் உங்கள் குழந்தைகளும் (உங்களுக்குச்) சோதனையாக இருக்கின்றன. நிச்சயமாக அல்லாஹ்விடத்தில்தான் மிகவும் உயர்ந்த நற்கூலி உண்டு என்பதை நீங்கள் நன்கு அறிந்து கொள்ளுங்கள்." (குர்ஆன் 8: 28)

அருளாகக் கிடைக்கப்பெற்ற நமது குழந்தைகளுக்கு நாம் வழங்க வேண்டிய உரிமைகள், கடமைகளை சரியாக நிறைவேற்றத் தவறினால் இவர்கள் எமக்கு இம்மையிலும் மறுமையிலும் கண்குளிர்ச்சியாக இருப்பதற்குப் பகரமாக பித்னாவாக மாறுவார்கள்.
இறைத்தூதர்கள் தங்களுக்கு குழந்தை பாக்கியத்தை வேண்டும் போது நல்ல குழந்தைகளைத் தருமாறு அல்லாஹ்விடம் பிரார்த்தனை செய்துள்ளார்கள்.
எனக்குப் பின் உறவினர்கள் குறித்து நான் அஞ்சுகிறேன். என் மனைவியும் பிள்ளைப்பேறு அற்றவளாக இருக்கிறார். எனவே ஒரு பொறுப்பாளரை நீ எனக்கு வழங்குவாயாக! அவர் எனக்கும், யஃகூபின் குடும்பத்தாருக்கும் வாரிசாவார். என் இறைவா! அவரை (உன்னால்) பொருந்திக் கொள்ளப்பட்டவராக ஆக்குவாயாக!" என்று (ஸக்கரிய்யா) கூறினார். (குர்ஆன் 19:6)

ஸக்கரிய்யா "இறைவா! உன்னிடமிருந்து எனக்கொரு தூய குழந்தையைத் தருவாயாக! நீ வேண்டுதலைச் செவியுறுபவன்" என்று தம் இறைவனிடம் வேண்டினார். (குர்ஆன் 3:38)

குழந்தைகளுக்காக பிரார்த்தனை செய்வது பெற்றோர்கள் செய்ய வேண்டிய முக்கியமான காரியமாகும்.
இறைவா! எங்களை உனக்குக் கட்டுப்பட்டோராகவும், எங்கள் வழித் தோன்றல்களை உனக்குக் கட்டுப்பட்டு நடக்கும் சமுதாயமாகவும் ஆக்குவாயாக! எங்கள் வழிபாட்டு முறைகளை எங்களுக்குக் காட்டித் தருவாயாக! எங்களை மன்னிப்பாயாக! நீ மன்னிப்பை ஏற்பவன் ; நிகரற்ற அன்புடையோன் (என்று இப்ராஹீமும் இஸ்மாயீலும் பிரார்த்தனை செய்தார்கள்) (குர்ஆன் 2 :128)

என் இறைவா! என்னையும், என் சந்ததிகளிலும் தொழுகையை நிலை நாட்டுவோராக ஆக்குவாயாக! எங்கள் இறைவா! எனது பிரார்த்தனையை ஏற்பாயாக! (என்று இப்ராஹீம் கூறினார்.) (குர்ஆன் 14 :40)
அன்சாரிகளில் ஒருவர் தமது ஒட்டகத்தை மண்டியிடச் செய்து அதில் ஏறினார். பிறகு அதைக் கிளப்பினார். ஆனால், அது சிறிது (சண்டித்தனம் செய்து) நின்று விட்டது. அப்போது அவர் "ஷஃ' என அதை விரட்டிவிட்டு, "உனக்கு அல்லாஹ்வின் சாபம் உண்டாகட்டும்!" என்று சபித்தார்.
இதைச் செவியுற்ற அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "தமது ஒட்டகத்தைச் சபித்த இந்த மனிதர் யார்?" என்று கேட்டார்கள்.
"நான்தான், அல்லாஹ்வின் தூதரே!" என்று அந்த அன்சாரி பதிலளித்தார்.
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "அதிலிருந்து இறங்கிவிடு! சபிக்கப்பட்ட ஒரு பொருளோடு எங்களுடன் நீர் வர வேண்டாம். நீங்கள் உங்களுக்கெதிராகவோ உங்கள் குழந்தைகளுக் கெதிராகவோ உங்கள் செல்வங்களுக்கெதிராகவோ பிரார்த்திக்காதீர்கள். அல்லாஹ்விடம் கேட்டது கொடுக்கப்படும் நேரமாக அது தற்செயலாக அமைந்துவிட்டால், உங்கள் பிரார்த்தனையை அவன் ஏற்றுக்கொள்வான் (அது உங்களுக்குப் பாதகமாக அமைந்துவிடும்)" என்று சொன்னார்கள். (முஸ்லிம்: 5736)

குழந்தைகளை நல்வழிப்படுத்தி இஸ்லாமிய நிழலில் வளர்த்தெடுப்பது என்பது இந்த நவீன யுகத்தில் பாரிய பொறுப்பு வாய்ந்த பணியாகவே திகழ்கின்றது. குழந்தைகளிடம் ஆதிக்கம் செலுத்தும் வெளி சக்திகளின் ஊடுருவலிலிருந்து அவர்களை மீட்டெடுப்பதும் சிரம சாத்தியமான பணியாகவே விளங்குகின்றது.
அந்தவகையில் ஒவ்வொரு பெற்றோரும் தமது பிள்ளைகளை ஈருலகத்திலும் வெற்றிபெற்றவர்களாக வளர்த்தெடுப்பது அவர்கள் மீதுள்ள தார்மீகப் பொறுப்பாகும்.
மனிதன் இறந்துவிட்டால் மூன்று விஷயங்களைத் தவிர அவனுடைய அனைத்து அமல்களும் அவனைவிட்டு துண்டிக்கப்பட்டு விடுகிறது. (அவை) நிரந்தர தர்மம், பயன்தரும் கல்வி, அவருக்காக துஆச் செய்யும் சாலிஹான குழந்தை' என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். (முஸ்லிம்)"
இன்னும் நம்மில் பலர் நம்முடைய குழந்தைகளுக்கும், பேரப்பிள்ளைகளுக்கும் பிரார்த்தனை செய்பவர்களாக இருக்கிறோம். ஆனால் அதையும் தாண்டி, மறுமை நாள் வரை நம்மிலிருந்து வரக்கூடிய நம்முடைய சந்ததியினர் அனைவருக்கும் 'துஆ' (பிரார்த்தனை) செய்பவர்களாக இருக்க வேண்டும்.
மறுமையில் வெற்றி அடைவதற்கு பெற்றோர்கள் மட்டுமல்லாது, பிள்ளைகளும் தங்களின் அமல்களை அதிகப்படுத்திக் கொள்ள வேண்டும்.
சுவனத்திற்கு அனுப்பப்படும் பெற்றோர்களின், குறையற்ற அமல்களின் காரணமாக கருணையின் பெருங்கடலான அல்லாஹ் அவர்களின் பிள்ளைகளையும் அவர்களுடன் சேர்த்து வைக்கக் கூடியவனாக இருக்கிறான்.
அதுபோலவே பிள்ளைகளின் நல்ல அமல்களின் பொருட்டு அவர்களுடன் சேர்த்து அவர்களின் பெற்றோர்களையும் சுவனம் அனுப்பப்படுகிறது.

**அளவிலா அருட்கொடைகள் 5**
( ஈடு இணையற்ற அருட்கொடை )



وَاِنْ تَعُدُّوْا نِعْمَةَ اللّٰهِ لَا تُحْصُوْهَا اِنَّ اللّٰهَ لَـغَفُوْرٌ رَّحِيْمٌ
இன்னும் அல்லாஹ்வின் அரு(ட் கொடைக)ளை நீங்கள் கணக்கிட்டால், அவற்றை (வரையறை செய்து) நீங்கள் எண்ணி முடியாது! நிச்சயமாக அல்லாஹ் மிக்க மன்னிப்பவனாகவும், மிகக் கருணையுடையோனாகவும் இருக்கின்றான். (குர்ஆன் : 16:18)

அல்லாஹ் எத்தகையவன் என்றால் அவன் தான் வானங்களையும், பூமியையும் படைத்து வானத்திலிருந்து மழையையும் பொழியச் செய்து அதைக் கொண்டு கனிவர்க்கங்களையும் உங்களுக்கு - ஆகாரமாக வெளிப்படுத்தித் தன் கட்டளையினால் கடலில் செல்லுமாறு கப்பலை உங்களுக்கு வசப்படுத்திக் கொடுத்தும், ஆறுகளையும் உங்களுக்கு வசப்படுத்தித்தந்தான்.
(குர்ஆன் : 14:32)

(தவறாமல்), தம் வழிகளில் ஒழுங்காகச் செல்லுமாறு சூரியனையும் சந்திரனையும் அவனே உங்களுக்கு வசப்படுத்தித் தந்தான். மேலும், அவனே இரவையும் பகலையும் உங்களுக்கு வசப்படுத்தித் தந்தான்.
(குர்ஆன் : 14:33)

(இவையன்றி) நீங்கள் அவனிடம் கேட்ட யாவற்றிலிருந்தும் அவன் உங்களுக்குக் கொடுத்தான்; அல்லாஹ்வின் அருட்கொடைகளை நீங்கள் கணிப்பீர்களாயின் அவற்றை நீங்கள் எண்ணி முடியாது! நிச்சயமாக மனிதன் மிக்க அநியாயக்காரனாகவும், மிக்க நன்றி கெட்டவனாகவும் இருக்கின்றான். (குர்ஆன் : 14:34)
மேற்கண்ட வசனங்களிலும் அல்லாஹ் அருளியிருக்கும் அருட்கொடைகளில் சில கூறப்படுகின்றன. அவற்றை அனுபவிக்கிற மனிதன் அல்லாஹ்வுக்கு நன்றி உள்ளவனாக இருக்காமல், நன்றி கெட்டவனாக இருக்கின்றான் என்பது எடுத்துக்காட்டுப்படுகிறது

அல்லாஹ்வின் அருட்கொடைகள் :
வானங்களையும் பூமியையும் மனிதர்களுக்காகப் படைத்தான். இரண்டிலிருந்தும் கணக்கிலடங்காப் பல நன்மைகளை மனிதன் ஒவ்வொரு கணத்திலும் அனுபவித்துக் கொண்டிருந்தான். அவன் நன்றியுள்ளவனாக நடந்து கொள்ளும் வரையில் அவைகள் அவனுக்குச் சாதகமாக இருக்குமாறு அல்லாஹ் மனிதனுக்கு வசப்படுத்திக் கொடுப்பான்.
இல்லையெனில், அவ்விரண்டிலிருந்தும் வேதனையை இறக்கிவிடுவான். வானிலிருந்து தண்ணீரை மழையாக இறக்கி அம்மழையின் மூலம் காய்கனிகள், தாளியங்கள்
ஆகியவற்றை உண்டாக்குகின்றான். அவற்றின் மூலம் உங்களுக்கு உணவைக் கொடுத்து உங்களுக்கு நன்மை செய்கின்றான்.
ஆனால், நீங்கள் இதற்கு நன்றி காட்டாமல் துரோகம் செய்தால், அதே மழையினால் உங்களுக்கு பேரிழப்பை உண்டாக்கி விடுவான்.
நீங்கள் கடலில் கப்பல் மூலம் செல்கின்றீர்கள். அது அவனுடைய அனுமதியைக் கொண்ட கடலில் சுமுகமாகச் செல்லுமாறு அவன் உங்களுக்கு ஏற்பாடு செய்துள்ளான். நீங்கள் அவனுக்கு நன்றியுள்ளவனாக நடந்து கொள்ளும் வரையில் அக்கப்பல் ஆரோக்கியமாகச் செல்லும்.
நீங்கள் நன்றி கெட்டதனமாக நடந்து கொண்டால் புயலோ, பேரலையோ அக்கப்பலைக் கவிழ்த்து உங்களுக்கு பேரழிவைத் தந்து விடும்.

இப்புவியில் நீங்கள் விவசாயம் செய்யவும் உங்களுக்கும் உங்களுடைய கால்நடைகளுக்கும் தண்ணீர் புகட்டவும் மற்றும் பல நன்மைகளுக்கும் ஆறுகளையும் வாய்க்கால்களையும் உங்களுக்கு அருளி அவை உங்களுக்கு வசப்படுமாறு செய்தான்.
நீங்கள் நன்றியுள்ளவர்களாக இருக்கும் வரையில் அவை உங்களுக்கு நன்மையை உண்டாக்கிக் கொண்டிருக்கும். இல்லையெனில், அவற்றின் மூலம் பெரும் வெள்ளம் தோன்றி உங்களுக்கு நாசத்தை உண்டாக்கி விடும்.

சூரியனையும், சந்திரைனையும் முறைப்படி அன்றாடம் ஒழுங்காகச் செல்லுமாறு உங்களுக்காக ஏற்பாடு செய்துள்ளான். நீங்கள் நன்றியுள்ளவர்களாக இருக்கும் வரையில் தான்.
இல்லையெனில், இவற்றின் மூலமே உங்களுக்கு ஏதாவது தொல்லை ஏற்படுமாறு செய்துவிடுவான்.
இரவும், பகலும் மாறி மாறி வருமாறு இறைவன் செய்து உங்களுக்கு அவ்விரண்டின் மூலம் நீங்கள் அனுபவிக்கும் பல பலன்களை அருளியிருக்கின்றான்.
இரண்டும் மாறி மாறி வராமல் ஒன்றாகவே ஆகிவிட்டால், உங்களுடைய வாழ்க்கையில் எத்தனை நெருக்கடிகள் ஏற்படும் என்பதை நீங்கள் உணர்ந்து அவனுக்கு நன்றியறிதலுடன் நடந்து கொள்ளுங்கள்.
நீங்கள் அவனிடம் எவற்றையெல்லாம் கேட்கிறீர்களோ அவற்றையெல்லாம் உங்களுக்கு அவன் வழங்குகின்றான். அல்லது நீங்கள் கேட்பதைவிட மிகச் சிறந்ததைத் தருகின்றான். நீங்கள் இவற்றிற்கெல்லாம் அவனுடைய கட்டளையை நிறைவேற்றுவதன் மூலம் அவனுக்கு நன்றியறிதலுடன் நடந்து கொள்ள வேண்டும். இல்லையெனில், அவன் உங்களுக்கு அளித்தவற்றைப் பறித்துவிடுவான் என்பதை நீங்கள் உணர்ந்து நடந்து கொள்ளுங்கள்.

இவைகளைப் பற்றி இன்னும் கணக்கிலடங்கா அருட்கொடைகளை உங்களுக்கு வழங்கியிருக்கின்றான், வழங்கிக் கொண்டும் வருகின்றான். அவற்றை நீங்கள் கணக்கிட முற்பட்டீர்களாயின் எவ்வளவு காலமானாலும் இவ்வளவுதான் என மட்டுப்படுத்தி விட முடியாது.
அவனுடைய அளவில்லா அருட்கொடைகளை நீங்கள் அனுபவித்துக் கொண்டே அவனுக்கு துரோகம் செய்கிறீர்கள் அவனுடைய கட்டளைகளை புறக்கணிக்கின்றீர்கள் அவனுக்கு இணையும் வைக்கின்றீர்கள் நிச்சயமாக மனிதன் இம்முறையில் அநியாயக்காரனாக இருக்கிறான் மிகவும் நன்றி கெட்டவனாகவும் இருக்கின்றான்.
அவன் உணர்வு பெற்று தன்னை படைத்து ரட்சித்து வருகிறேன் இறைவனுக்கு வழிபடும் பொருட்டு ஒரு சிறிய வரலாறு...
"எனது இரட்சகா ! இந்த ஊரை அச்சமற்றதாக ஆக்கி என்னையும் என் மக்களையும் விக்கிரக ஆராதனை செய்வதிலிருந்து காப்பாற்றுவாயாக என நபி இப்ராஹிம் (அலை) கேட்டது நினைவு கொள்ள வேண்டியதாகும்.
விவசாயமற்ற இந்த இடத்தில் உன் வீட்டுக்கு அருகில் என் சந்ததியை விட்டுச் செல்கிறேன். அவர்கள் நன்றி உள்ளார்களாக ஆவதற்கு உலக மக்களின் மனதை அவர்கள் பால் திருப்பு.
என்னையும் என் சந்ததிகளையும் தொழுகையை நிறைவேற்றச் செய்து, எனக்கும் என் பெற்றோருக்கும் உண்மை விசுவாசிகளுக்கும் மன்னிப்பும் அருள்வாயாக எனவும் இப்ராஹிம் பிராத்தித்தார்.

## அளவிலா அருட்கொடைகள் 6

( பிறருக்கு வழங்குவதும் அவனின் அருட்கொடையே )



ஆபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள் நபி (ஸல்) அவர்கள் கூறியதாக: செல்வத்தை எந்த வழியில் சம்பாதித்து எவ்வழியில் செலவு செய்தான் என்று மறுமையில் விசாரிக்கப்படாத வரை எந்த மனிதனின் பாதமும் தன் இறைவனிடம் இருந்து நகர முடியாது.

மனிதனின் அன்றாட மிக முக்கியத் தேவையான பணத்தை இறைவன் தூய்மையான வழியில் சென்று சம்பாதிக்கதான். இஸ்லாம் கூறுகிறது தூய்மையான முறையில் சம்பாதிக்கும் பணத்தினால் செய்யும் தர்மத்தைதான் இறைவன் ஏற்றுக்கொள்கிறான்.
அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள் நபி (ஸல்) அவர்கள் கூறியதாக, இறைவன் ஹலாலானதை (அனுமதிக்கப்பட்டதை) தவிர வேறு எதையும் ஏற்க மாட்டான் எவரேனும் அதிலிருந்து தர்மம் செய்தால் ரஹ்மான் தன் வலக்கரத்தால் இதை பெற்றுக் கொள்கிறான் அது ஒரு பேரித்தம் பழமாக இருப்பினும் சரியே. அது இறைவனிடம் மலையை விடப் பெரியதாக இருக்கிறது. ஒருவர் தன் ஒட்டகக் குட்டியை வளர்ப்பது போல் அதை அல்லாஹ் வளரச் செய்கிறான் (ஆதாரம்: புகாரி, முஸ்லிம்)

"அல்லாஹ் நம்மை கொடுக்கின்ற நிலையில் வைத்திருக்கின்றான். கொடுப்பதற்கான நல்ல மனதை தந்திருக்கின்றான். பிறருக்குரிய வாழ்வாதாரத்தையும் நம்மிடமே தந்து வழங்கச் சொல்கிறான்.
அல்லாஹ் பிறரை விட நம்மை, செல்வத்திலும் செல்வாக்கிலும், அந்தஸ்திலும் உயர்வாக வைத்திருக்கின்றான் என்றால் நம்மிடம் உள்ள ஏதோ ஒரு நல்ல எண்ணத்தையோ, நல்ல செயலையோ அவன் பொருந்திக்கொண்டான் என்பதின் அடையாளம் தான் அது.
அது மட்டுமல்லாமல், நம் மூலம் பிறருக்கு ஏதாவது உதவி செய்யலாம் என்கின்ற ஓர் எண்ணத்தையும் அல்லாஹ் வரையறுத்து வைத்திருக்கலாம். அதனால் தான் சமூகத்தில் பல ஏற்றத்தாழ்வுகள் இருந்தாலும், அவை எல்லாம் குறிப்பிட்டவர்களால் உணரப்படாமல் ஒருவருக்கொருவர் உதவி செய்து வாழ்கின்ற ஓர் உன்னத வாழ்வுமுறையை ஏற்படுத்தியுள்ளான்.
ஒருவரை ஒருவர், ஒன்றை ஒன்று சார்ந்து வாழ்வதால் தான் இவ்வுலகில் குழப்பம் என்பது இல்லை என்ற நிலையுள்ளது.
அல்லாஹ்வும் தன் திருமறையில் சொல்கின்றான்:
“வானங்கள், பூமியின் பொக்கிஷங்களின் சாவிகள் அவனிடமே இருக்கின்றன. அவன் விரும்பியவர்களுக்கு உணவை விரிவாக்குகிறான். அவன் விரும்பியவர்களுக்கு சுருக்கி விடுகின்றான். நிச்சயமாக அவன் சகல வஸ்துகளையும் மக்களின் தன்மைகளையும் நன்கறிந்தவன். ஆகவே அவர்களின் தகுதிக்கு தக்கவாறு கொடுக்கிறான்”. (குர்ஆன் 42:12)

‘மனிதனின் தகுதியையும் தன்மையையும் அறிந்து கொடுக்கின்றேன்’ என்று சொல்வதன் மூலம் தன் அடியானுக்கு கொடுப்பதை, அல்லாஹ் தன் வசம் தான் வைத்துள்ளான் என்பது நிரூபணம் ஆகிறது.
எல்லா உயிர்களுக்கும் வாழ்வாதாரத்தை வழங்குவதற்கு, நம்மை படைத்த அல்லாஹ்வே பொறுப்பேற்று கொண்டுள்ளான். அனைத்து உயிரினங்களுக்கும் நேரடியாக வழங்காமல் ஒருவர் மூலம் அவற்றுக்கான வாழ்வாதாரங்களை வழங்குவதை அல்லாஹ் வழக்கமாக கொண்டுள்ளான். அதன் மூலம் பிறருக்கு உதவும் நல்ல வாய்ப்பையும் சிலருக்கு வழங்குகிறான்.
அல்லாஹ் அளித்துள்ள அந்த உயர்ந்த அந்தஸ்தை நாம் உணர்ந்து கொள்ளவேண்டும். அதற்காக இறைவனுக்கு நன்றி செலுத்த வேண்டும். அதைவிட்டுவிட்டு, “நான் தான் உதவி செய்கிறேன், என்னால் தான் இந்த காரியம் நிறைவேறுகிறது” என்று அகந்தை கொண்டால், அல்லாஹ் அவனைக்கொண்டு நாடிய அந்த நன்மையை நிறுத்தி விடுவான்.
“உங்களுக்கு வர வேண்டிய வாழ்வாதாரம் உங்களைச் சார்ந்து வாழும் பலவீனர்களைக் கொண்டே அல்லாமல் உங்களுக்கு அது வருவதில்லை” என்பது அருமை நாயகத்தின் அருள்மொழியாகும்.
இறையச்சம் உள்ள நல்லடியார் ஒருவர், தான் வேலை செய்யும் அலுவலகத்தில் தனக்குரிய கடமைகளை வெகு நேர்த்தியாக செய்து வந்தார். அப்பழுக்கற்ற அவர் பணியை பாராட்ட எண்ணிய உரிமையாளர், அவருக்கு அறிவிக்காமலேயே அவருக்கு சம்பள உயர்வு வழங்கினார்.
ஆனால் அதைப்பற்றி எந்தவித சஞ்சலமும் கொள்ளாமல் அந்த ஊழியர் தன் கடமையைச் செய்து கொண்டிருந்தார்.

ஒருநாள் அவர் மிக அவசரமான சூழ் நிலையால் தொடர்ந்து நான்கு நாட்கள் விடுமுறை எடுத்து விட்டார். வேலைகள் முடங்கி விட்டதன் காரணத்தால் உரிமையாளர் அவர் மீது கோபமுற்று அவரது சம்பளத்தைக் குறைத்து விட்டார். அதற்கும் அவர் எந்தவித எதிர்ப்பையும் காட்டவில்லை.
அலுவலகத்தின் உரிமையாளர் அவரை அழைத்து “நான் உனக்கு சம்பள உயர்வு தரும் போதும் உன்னிடம் எந்தவித ஆர்ப்பாட்டமும் இல்லை. இன்று அதனைக் குறைத்து விட்டபோதும் எதிர்க்கவில்லை. ஏன் இந்த நிலைப்பாடு?” என்று வினவினார்.
“எனக்கு சமீபத்தில் குழந்தை பிறந்தது. அல்லாஹ் அதற்குரிய வாழ்வாதாரத்தை உங்கள் மூலம் வழங்கினான். இப்போது என் தாயார் இறந்து விட்டார்கள். அவர்களுக்குரிய ரிஸ்க்கை (வாழ்வாதாரத்தை) அல்லாஹ் குறைத்து விட்டான்.
நம் அனைவருக்கும் பொறுப்பேற்று கொண்ட அல்லாஹ்வின் செயல்பாட்டுக்கு நாம் என்ன வரைமுறை சொல்ல முடியும்?” என்று பதிலுரைத்தார்.
இந்த உலகமே அல்லாஹ்வின் கட்டளையால் இயங்கிக்கொண்டிருக்கும் போது எந்தவித சக்தியும் இல்லாத நாம், ‘நம்மால் தான் இது நடக்கிறது’, என்று இறுமாந்து போவது எந்த வகையில் நியாயம்?

நபித்தோழர் அபூபக்கர் சீத்தீக் (ரலி) அவர்கள், தங்களின் உறவினர்கள் பலருக்கு நீண்ட காலமாக உதவிகளைச் செய்து வந்தார். அவர்களில் மிஸ்த்தா என்பவர் ஒரு சந்தர்ப்பத்தில் அன்னை ஆயிஷா (ரலி) அவர்களைப் பற்றி ஒரு தவறான செய்தியை பரப்புவதில் முன்னிலை பெற்றிருந்தார்.
இந்த காரணத்தில், அவர் மீது கோபம் கொண்டு, 'நான் உனக்கு செய்யும் உதவியை இன்றோடு நிறுத்தி விடுவேன்' என்று அபூபக்கர் (ரலி) சொல்லி விட்டார்கள்.
அவர்களின் அந்த செயலை அல்லாஹ் விரும்பாத காரணத்தால் அவர்களை கண்டித்து திருமறையில் ஒரு வசனத்தை இறக்கி விட்டான்.
“உங்களில் செல்வந்தரும், பிறருக்கு உதவி செய்ய இயல்புடையவரும், தங்கள் பந்துக்களுக்கோ, ஏழைகளுக்கோ, அல்லாஹ்வுடைய பாதையில் ஹிஜ்ரத் செய்தவர்களுக்கோ தர்மம் கொடுக்க மாட்டேன் என்று சத்தியம் செய்ய வேண்டாம். அவர்களால் உங்களுக்கு ஏதும் வருத்தம் ஏற்பட்டிருந்தால் அதை நீங்கள் மன்னித்து புறக்கணித்து விடவும். அல்லாஹ் உங்களுக்கு மன்னிப்பளிப்பதை நீங்கள் விரும்பமாட்டீர்களா?. அல்லாஹ் மிக்க மன்னிப்பவன் கருணையுடையவன் ஆவான்” (குர்ஆன் 24:22)
எனவே நம் போன்றவர்களுக்கு அருள்மறையின் மூலம் இந்தச்செய்தியைச் சொல்கிறான் ஏக இறைவன்:
“தர்மம் செய்து அதை வாங்கியவனுக்கு துன்பம் தொடரும் படியாகச் செய்யும் தர்மத்தை விட அன்புடன் சொல்லும் இனிய சொல்லும் மன்னிப்பும் மிக்க மேலானதாகும். அல்லாஹ் எத்தேவையும் அற்றவன், மிக்க பொறுமையாளன் ஆவான்” (குர்ஆன் 2:263)

அல்லாஹ் நம்மை கொடுக்கின்ற நிலையில் வைத்திருக்கின்றான். கொடுப்பதற்கான நல்ல மனதை தந்திருக்கின்றான். பிறருக்குரிய வாழ்வாதாரத்தையும் நம்மிடமே தந்து வழங்கச் சொல்கிறான்.
இப்படிப்பட்ட நல்ல நிலையில் நம்மை வாழவைத்துக்கொண்டு இருக்கும் அல்லாஹ்விற்கு நன்றி செலுத்திட வேண்டும். அந்த நன்மையின் காரணமாக பாவமன்னிப்பு கோரி அல்லாஹ்வி
டம் சரணடைய வேண்டும்.
அதைவிடுத்து, நாம் கொடுக்கிறோம் என்ற காரணத்தால் பிறரை தாழ்வாக எண்ணி இகழ்வதையோ, என்னால் தான் எல்லாம் உனக்கு கிடைக்கிறது என்று ஆணவத்துடன் நடந்துகொள்வது தவறானது, அதனை தவிர்க்க வேண்டும்.
எல்லாம் வல்ல அல்லாஹ் நம் எல்லோருக்கும் அத்தகைய நல்ல குணத்தை தந்து கிருபை செய்வானாக, ஆமின்."

**அளவிலா அருட்கொடைகள் 7**

( காற்றின் அருட் கொடை )



சூரிய வெப்பத்திலிருந்தும், ஒளியின் தீவிர தாக்குதலிலிருந்தும் பூமியைப் பாதுகாக்கும் கவசமாக காற்று மண்டலம் இருந்து வருகிறது. இதில் உள்ள ஓசோன் படலம் சூரியனில் இருந்து வரும் அபாயகரமான புற ஊதாக் கதிர்களை உறிஞ்சி எடுத்துக் கொண்டு உலகில் உள்ள உயிரினங்கள் அழியாமல் பாதுகாக்கிறது.
காற்றழுத்தம் என்பது பூமியின் குறிப்பிட்ட புள்ளியின் மேல் காற்றின் முழு எடையும் ஊட்டும் அழுத்தம் ஆகும். உண்மையில் காற்றின் அழுத்தம் மிகக் குறைவு.

சாதாரணமாக ஒரு அறையின் வெப்பநிலையில் ஒரு லிட்டர் காற்றின் எடை சுமார் 1.3 கிராம்தான்! இதுவே கடல் மட்டத்தில் ஒரு சதுர சென்டி மீட்டரில் பல மடங்கு எடை இருக்கும்.
இதையே வளி மண்டல அழுத்தம் என்பதைக் குறிப்பிடுகிறோம். வளிமண்டலம் வெவ்வேறு வாயுக்களாலும் நீராவியினாலும் நிறைந்துள்ளது.

பூமிக்கு மேல் 50 கிலோ மீட்டர் வரையிலான காற்று மண்டலத்தில் சுமார் 78 சதவீதம் நைட்ரஜனும், 21 சதவீதம் ஆக்ஸிஜனும், மிகக் குறைந்த அளவுகளில் ஆர்கன், கரியமிலவாயு, நியான், ஹீலியம், மீத்தேன் போன்ற வாயுக்களும் அடங்கியுள்ளன.
50 கி.மீ தூரத்திற்கு அப்பால் வளி மண்டலத்தில் ஆக்சிஜன், ஓசோன், ஹீலியம், ஹைட்ரஜன் அணுக்களும் இடம் பெறுகின்றன. பூமியிலிருந்து 64 ஆயிரம் கி.மீ. தூரம் வரை ஹைட்ரஜன் அணுக்களே நிறைந்துள்ளன.
ஏறத்தாழ 0.01 முதல் ஒரு சதவீதம் வரை நீராவி உள்ளது. இது வளி மண்டலத்தில் சுமார் 12 கி.மீ. உயரத்துக்குப் பரவி இருக்கிறது. வளி மண்டலத்தில் நீராவியின் அளவு மிகக் குறைவாக இருந்தாலும் அது முக்கியத்துவம் மிகுந்தது.
உலகிலே இருக்கும் முக்கியமான முக்கியத்துவமான பொருட்கள், காரியங்கள் மீது அல்லாஹ் சத்தியமிட்டுக் கூறும் வசனங்கள் ஆங்காங்கே அதிகம் காணப்படுகின்றன. அவற்றுள் ஓர் அங்கமாக, காற்றும் குறிப்பிடப்பட்டு இருப்பதை இங்கு நாம் கவனத்தில் கொள்ள வேண்டும்.
"வேகமாக புழுதியைப் பரப்புவத்துவதன் மீதும், மழையைச் சுமப்பவற்றின் மீதும், எளிதாகச் செல்பவை மீதும், கட்டளைகளைப் பங்கிடுவோர் மீதும் சத்தியமாக! நீங்கள் எச்சரிக்கப்படுவது உண்மை ". (குர்ஆன்:51:1-5.)
"தொடர்ந்து அனுப்பப்படுபவை மீதும், கடுமையாக வீசும் புயல் மீதும் சத்தியமாக! பரப்பிவிடுபவை மீதும், ஒரேயடியாகப் பிரித்துவிடுபவை மீதும் சத்தியமாக! மன்னிப்பாகவோ, எச்சரிக்கையாகவோ படிப்பினையைப் போடுபவற்றின் (காற்றின்) மீது சத்தியமாக!"
(குர் ஆன்:77:1-6.)

பிற கோள்களில் காற்றே இல்லை; அப்படியோ காற்று இருந்தாலும் அது சுவாசிப்பதற்கு உகந்ததாக இல்லை என்பதாலேயே ஜீவராசிகள் அங்கு வாழ்வதற்குக் கடுகளவும் வாய்ப்பில்லை என்கிறார்கள் விஞ்ஞானிகள்.
ஆனால் நம் பூமியில் நாம் உயிர் வாழ்வதற்குக் தேவையான காற்று அதுவும் தேவையான அளவில் தகுதியான நிலையில் இருக்கிறது. இத்தகைய தன்மை பூமியில் மட்டுமே நிலவுகிறது.
மனிதன் ஒரு நிமிடத்தில் சுவாசிக்கும் காற்றின் அளவு, சுமார் 15.5. லிட்டர். பெரிய அகன்ற தாவரங்கள் தண்ணீர் கிடைக்காத பட்சத்தில் காற்றில் இருக்கும் ஈரப்பதத்தின் மூலம் தான் உயிர் வாழ்கின்றன.
காற்றில் ஏற்படும் அழுத்த மாறுபாடு மழைப் பொழிவுக்கு முக்கியக் காரணமாக இருக்கிறது. நீர் இல்லாமல் வானிலை இல்லை. புவியின் நீர் கோளத்தில் இருந்து வெப்பத்தாலும், தாவரங்களின் உதவியாலும், வளி மண்டலத்தினுள் நுழைகிற நீராவி மீண்டும் குளிர்வடைந்து பனியாகவும், மழையாகவும் பெய்கிறது.
இப்படி, காற்றின் சிறப்புகளை, நன்மைகளை, பயன்களைச் சொல்வதாக இருந்தால் இப் பதிவின் தொடர் போதாது என்பதே நிதர்சனம்.

ஆகாய வெளியில் அங்கும் இங்கும் அலைபாயும் காற்று அற்பமானதும் அல்ல; அலட்சியம் செய்யத்தக்கதும் அல்ல. இந்தப் பிரபஞ்சத்தை வடிவமைத்து, கட்டுக்கோப்பாக அடக்கி ஆளும் இறைவன் ஒருவன் இருக்கிறான் என்பதை அறிந்து கொள்ளத் துணைபுரியும் அற்புதமான சான்று.
அவன் ஞானமிக்கவன்; அனைத்தையும் அறிந்தவன் என்பதை, திசை மாறிமாறி வீசும் காற்றின் மூலம் தெளிவாக விளங்கிக் கொள்ளலாம். இந்தப் பேருண்மையை எடுத்துரைக்கும் திருமறை வசனங்களைப் பாருங்கள்.
"வானங்களையும், பூமியையும் படைத்திருப்பதிலும், இரவு பகல் மாறி மாறி வருவதிலும், மக்களுக்குப் பயன் அளிப்பவற்றுடன் கடலில் செல்லும் கப்பலிலும், அல்லாஹ் வானத்திலிருந்து இறக்கி வைக்கும் மழையிலும், பூமி வறண்ட பின் அதன் மூலம் அதைச் செழிக்கச் செய்வதிலும், ஒவ்வொரு உயிரினத்தையும் அதில் பரவ விட்டிருப்பதிலும், காற்றுகளை மாறி மாறி வீசச் செய்திருப்பதிலும், வானத்திற்கும் பூமிக்கும் இடையே வசப்படுத்தப்பட்டுள்ள மேகத்திலும் விளங்கும் சமுதாயத்திற்குப் பல சான்றுகள் உள்ளன. (குர்ஆன்:2:164.)
அவன் தனது அருளை உங்களுக்குச் சுவைக்கச் செய்வதற்காகவும், கப்பல்கள் அவன் கட்டளைப்படி செல்வதற்காகவும், அவனது அருளை நீங்கள் தேடுவதற்காகவும், நீங்கள் நன்றி செலுத்திடவும் நற்செய்தி கூறும் காற்றுகளை அனுப்பி வைப்பது அவனது சான்றுகளில் உள்ளவை.(குர்ஆன் 30:46.)
இரவு பகல் மாறி மாறி வருவதிலும், வானிலிருந்து அல்லாஹ் (மழைச்) செல்வத்தை இறக்கியதிலும், பூமி வறண்ட பின் அதன் மூலம் உயிரூட்டுவதிலும், காற்றுகளைத் திருப்பி விடுவதிலும் விளங்கும் சமுதாயத்துக்குப் பல சான்றுகள் உள்ளன. (குர்ஆன்:45:5.)

மலைகளைப் போன்று கடலில் செல்லும் கப்பல்களும் அவனது சான்றுகளில் உள்ளவை. அவன் நினைத்தால் காற்றை நிறுத்தி விடுகிறான். உடனே அது அதன் (கடலின்) மேற்பரப்பில் நின்று விடுகின்றது. சகிப்புத் தன்மையும் நன்றியுணர்வும் உள்ள ஒவ்வொருவருக்கும் இதில் பல சான்றுகள் உள்ளன. (குர்ஆன்:42:32,33.)
இறைவனின் கட்டுப்பாட்டில் காற்று

இயற்கையின் கட்டுப்பாடு என்பது இறைவனின் கைவசத்தில் இருக்கிறது. அதிலே காற்றுக்கு மட்டும் விதிவிதிலக்கு இருக்கிறதா என்ன? அவ்வாறில்லை. அவனே தான் விரும்பும் வகையில் காற்றை இயக்குகிறான். அதன் மூலம் பல விதமான மாற்றங்களை, விளைவுகளை ஏற்படுத்துகிறான்.
கடவுளே இல்லை என்று வாதிடுபவர்கள் அழித்துவிட இயலாத காற்றைக் குறித்துக் கொஞ்சமாவது கண்டிப்பாகச் சிந்திக்க வேண்டும். பருவ மாற்றத்திற்குத் தோதுவாக வெவ்வேறு திசைகளில் பயணிக்கும் காற்றின்

மாறுதலுக்குப் பின்னணியில் இருக்கும் படைத்தவனின் நுட்பத்தைப் புரிந்து அவனுக்கு அடிபணிந்து வாழவேண்டும்.
தனது அருளுக்கு முன்னால் நற்செய்தியாக அவனே காற்றை அனுப்புகிறான். அது கனமான மேகத்தைச் சுமக்கும் போது இறந்து போன ஊருக்கு அதை ஓட்டிச் செல்கிறோம். அதிலிருந்து தண்ணீரை இறக்கி, அதன் மூலம் எல்லாப் பலன்களையும் வெளிப்படுத்துகிறோம். இவ்வாறே இறந்தோரையும் வெளிப்படுத்துவோம். (இதன் மூலம்) நீங்கள் படிப்பினை பெறக் கூடும். (குர்ஆன்:7:57 )

திருத்தூதர்களில் ஒருவரான சுலைமான் (அலை) அவர்களுக்கு இந்தக் காற்றை வசப்படுத்தும் அற்புதம் கொடுக்கப்பட்டு இருந்தது. மனிதர்களால் ஒருபோதும் செய்ய முடியாத காரியத்தை நபி சுலைமான் (அலை) அவர்கள் செய்ததன் மூலம், அவர் சத்தியத்தின் பக்கம் அழைக்கும் அல்லாஹ்வின் தூதர் என்பதை விளங்கிக் கொள்ளும் வாய்ப்பு அன்றைய கால மக்களுக்கு கிடைத்தது.
இந்தச் செய்தியை இறைவனே தமது இறுதி வேதமான திருக்குர்ஆனில் குறிப்பிட்டும் இருக்கிறான்.
"வேகமாக வீசும் காற்றை ஸுலைமானுக்கு வசப்படுத்திக் கொடுத்தோம். அது நாம் பாக்கியம் செய்த பூமிக்கு அவரது கட்டளைப்படி சென்றது. நாம் ஒவ்வொரு பொருளையும் அறிவோராக இருக்கிறோம். (குர்ஆன்:21:81.)
ஸுலைமானுக்குக் காற்றை வசப்படுத்தினோம். அதன் புறப்பாடு ஒரு மாதமாகும். அதன் திரும்புதல் ஒரு மாதமாகும். அவருக்காக செம்பு ஊற்றை ஓடச் செய்தோம். தனது இறைவனின் விருப்பப்படி அவரிடம் பணியாற்றும் ஜின்களும் இருந்தனர். அவர்களில் நமது கட்டளையை யாரேனும் புறக்கணித்தால் நரகின் வேதனையை அவருக்கு சுவைக்கச் செய்வோம். (குர்ஆன்:34:12.)

## **அளவிலா அருட்கொடைகள் 8**

(மலை)



திருக்குர்ஆனில் பூமி மற்றும் வானங்கள் பற்றிப் பேசப்படுகின்ற இடங்களில் மலைகள் குறித்தும் பேசப்படுகிறது. மேலும் நபிமார்களுக்கு வேதங்களெல்லாம் மலைகள் மீது அவர்கள் இருந்த போதே அருளப்பட்டிருக்கிறது !
வானங்களும், பூமியும் இறைவனின் பிரமிப்பூட்டும் பிரமாண்ட படைப்புகளாக இருப்பதைப் போன்றே மலைகளும் ஒரு மகத்தான படைப்பாகும் என்பதையே இது காட்டுகிறது.
‘‘பின்னர் அவனே பூமியை விரித்தான். அவனே அதில் இருந்து நீரையும் மேய்ச்சலையும் வெளிப்படுத்துகிறான். மலைகளையும் அவனே அதில் நிலை நிறுத்தினான் (குர்ஆன்–79:30) என்றும்,

‘‘நிச்சயமாக (நம்முடைய) பொறுப்பை சுமந்து கொள்வீர்களா? என நாம் வானங்கள், பூமி, மலைகள் முதலியவற்றிடம் வினவினோம். அதற்கு அவை அதைப் பற்றி பயந்து, அதைச் சுமப்பதில் இருந்து விலகி விட்டன. மனிதன் அதைச் சுமந்து கொண்டான். (இருப்பினும்) அவன் அறியாமையால் தனக்குத் தானே தீங்கிழைத்துக் கொண்டான்’’ குர்ஆன் (33:72)

என்றும் பூமியுடன் மலைகளும் சேர்ந்தே இடம் பெற்றுள்ளதை அறிந்து கொள்ளலாம்.
பூமியில் அழகாகவும், கம்பீரமாகவும் காட்சி அளிக்கும் மலைகள் எதற்காகப் படைக்கப்பட்டிருக்கின்றன? பூமியில் அதன் அவசியம்தான் என்ன?
‘‘நாம் பூமியை விரிப்பாக ஆக்கவில்லையா? இன்னும் மலைகளை முளைகளாக ஆக்கவில்லையா?’’ (78:6) என்றும்,
‘‘அவனே பூமியை விரித்து அதில் உறுதியான மலைகளையும் ஆறுகளையும் உண்டாக்கினான்’’ (13:3) என்றும்,
‘‘அவனே பூமியை விரித்தான்... அதில் மலைகளையும் நிலைநாட்டினான்’’ (79:30,32) என்றும் இறைவன் திருமறையில் கூறுகின்றான்.
பூமி ஆடாமல் அசையாமல் நிற்பதற்கு மலைகள், ‘முளை’களாக அமைந்துள்ளன

என்பதையும், அவை உறுதியானவை என்பதையும் மேற்கண்ட வசனங்கள் மூலம் அறியலாம்.
கூடாரங்கள் காற்றில் பறந்து விடாமல் தடுப்பதற்காக அதன் பக்கவாட்டில் உள்ள கயிறுகளை இழுத்துக் கட்டுவதற்காக பூமியில் அறையப்படும் ‘முளைக்குச்சி’களைப் போல மலையின் வேர்கள் அமைந்துள்ளன.

‘புவி’ (எர்த்) என்ற தலைப்பில் எழுதப்பட்ட புத்தகம் புவியியல் தொடர்பான அறிவியல் நூலாக போற்றப்படுகிறது. இந்த நூலின் ஆசிரியர்களில் ஒருவரும், அமெரிக்காவில் உள்ள தேசிய விஞ்ஞானக் கழகத் தலைவருமான பிராங் பிரஸ் கூறுகையில்...,
‘‘மலைகள், முளைகளைப் போன்று பூமிக்கடியில் புதைந்து காணப்படுகின்றன. அதன் வேர்கள் பூமிக்குள் மிக ஆழமாக ஊடுருவி நிற்கின்றன’’ என்று குறிப்பிட்டுள்ளார்.
பூமியின் மேற்பரப்பில் காணப்படும் மலைகளின் உயரத்தை விட 10 அல்லது 15 மடங்கு ஆழமாக பூமிக்கடியில் ‘மலை வேர்’ என்று அழைக்கப்படும் அதன் வேர் பதிந்துள்ளது.
சான்றாக, பூமியின் மேற்பரப்பில் இருந்து 9 கிலோ மீட்டர் உயரமான இமயமலையின் வேர் பூமிக்கு அடியில் சுமார் 125 கிலோ மீட்டர் ஆழத்திற்கு நீண்டு காணப்படுகிறது. சுபஹானல்லாஹ்
இதன் காரணமாக கூடாரத்தைத் தாங்கிப் பிடித்துக் கொண்டிருக்கும் முளைகள் போன்று மலைகள் செயல்படுகின்றன என்பதை விஞ்ஞான உலகம் ஒப்புக் கொண்டுள்ளது.

நிலப்பகுதியைச் சேர்ந்த பூமியின் மேல் அடுக்கு, கண்டத்தட்டு (காண்டினென்டல் கிரஸ்ட்) என்றும், நீருக்கடியில் உள்ள மேல் அடுக்கு, கடல் தட்டு (ஓசியானிக் கிரஸ்ட்) என்றும் அழைக்கப்படுகிறது.
கண்டத் தட்டு பூமியின் மேற்பரப்பில் இருந்து சுமார் 40 கிலோ மீட்டர் ஆழம் வரை உள்ளது. கடல் தட்டு கடல் நீருக்கடியில் 5 முதல் 10 கிலோ மீட்டர் ஆழம் வரை வியாபித்துள்ளது. மேன்டில் எனப்படும் இரண்டாம் அடுக்கு மற்றும் உட்கரு (கோர்) எனப்படும் மைய அடுக்கு என பல அடுக்குகள். அதில் உள் மையம், வெளி மையம் என்று உட்கரு இரண்டு கிளை அடுக்குகளாக பிரிந்துள்ளன.
பூமியின் உள்ளமைப்பு பல்வேறு நிலைகளில் உள்ளன. இதனால் பூமி தன்னைத் தானே சுற்றிக் கொண்டு சூரியனையும் சுற்றி வரும்போது நிலப்பரப்பு நிலை பெயர்ந்தும் போகலாம்.
பூமியின் அடுக்குகளில் நடுக்கம் ஏற்பட்டு சீட்டுக்கட்டுகள் போல சரிந்தும் போகலாம். இதனால் பூமியை அசையவிடாமல் கெட்டியாகவும், உறுதியாகவும் பிடித்துக் கொள்வதற்கு மலையின் மேற்பகுதி உறுதுணையாக உள்ளது.
‘‘இன்னும் இப்பூமி (மனிதர்களுடன்) ஆடி சாயாமல் இருக்கும் பொருட்டு, நாம் அதில் நிலையான மலைகளை அமைத்தோம். அவர்கள் நேரான வழியில் செல்லும் பொருட்டு, நாம் விசாலமான பாதைகளையும் அமைத்தோம்’’ (குர்ஆன் 21:31)

... என்ற வசனத்தின் மூலம் பூமி ஆடாமல் அசையாமல் இருப்பதற்காகவே மலைகள் அமைந்துள்ளன என்பதை அறியலாம்.
குர்ஆனின் மற்றுமொரு அதிசயம் – துர்சீனா மலை
மூஸா (அலை) அவர்களின் கூட்டத்தார் எகிப்தில் இருந்து செங்கடல் வழியாக வெளியேறி தற்போதைய சவூதி அரேபியாவில் இருக்கும் துர்சீனா மலை இது கடல் மட்டத்திலிருந்து 2,285 மீட்டர் உயரமானதாகும்.
சூழவுள்ள சமவெளியிலிருந்து செங்குத்தாக உயர்ந்து காணப்படுகிறது இம்மலையடிவாரத்தை அடைந்த பின்னர் நடந்த பல சம்பவங்கள் குர்ஆனில் விவரிக்கப்பட்டு இருக்கின்றன.
நபி மூஸா அலை அவர்கள் தூர் ஸீனா மலைக்கு வந்த போது அல்லாஹுத்தாலா அவரிடம் உரையாட அந்த மலையில் ஏழு காத தூரத்திற்கு இருளை இறக்கினான். அதனை விட்டு ஷைத்தானையும் ஜீவராசிகளையும் விரட்டினான்.
மூஸா அலை அவர்களின் தோள் புஜங்களில் நியமிக்கப்பட்டிருந்த இரு மலக்குகளையும் அகற்றினான்.
பிறகு அவருக்கு வானம் திறக்கப்பட்டது.
அவர் அர்ஷையும் அந்தரத்திலுள்ள மலக்குகளையும் பார்த்தார்.
பிறகு அல்லாஹுத்தாலா அவருடன் உரையாடினான்.
மூஸாவுக்கு வஹ்யி அறிவித்ததுடன் அல்லாஹ் அவருடன் பேசியும் இருக்கிறான்
(குர்ஆன் 4 : 164)
மூஸா நபியவர்களை அல்லாஹ் துர்சீனா மலை உச்சிக்கு முப்பது நாட்களுக்கு அழைத்து பின்னர் மேலும் பத்து நாட்கள் தங்கியிருக்க அல்லாஹ் கேட்டுக்கொண்டதும்,
நாட்பது நாட்களின் இறுதியில் மூஸா (அலை) அவர்கள் இறைவனை பார்த்தே ஆகவேண்டும் ஆசைப்பட்டதும் அதன் பின்னர் ஏற்பட்ட ஒரு பேரொளியின் பின்னர் மயக்கமடைந்து வீழ்ந்ததும் குர்ஆனில் (7: 142- 143) விவரிக்கப்பட்டு இருக்கின்றது.
40 நாட்கள் மூஸா (அலை) அவர்கள் மலை உச்சியில் தங்கியிருந்தபோது, மலையடிவாரத்தில் இருந்த அவர்களின் சமூகத்தினரான பனூ இஸ்ரவேலர்கள் தங்கத்திலான மாடு ஒன்றை செய்து வணங்கியதும் குர்ஆன் கூறும் சம்பவமாகும்.
இந்த குர்ஆன் வசனங்களில் வரும் சம்பவங்களை அடிப்படையாக கொண்டு ஆராய்ச்சி செய்த அகழ்வாராய்ச்சியாளர்கள் பல மலையுச்சிகள் இருந்த அந்த பிராந்தியத்தில் துர்சீனா மலை உச்சி மாத்திரம் கருகி இருந்ததை கண்டு ஒரு கணம் ஆடிப்போய்விட்டார்கள்.

ஒளியின் கதிர்வீச்சினால் பாறாங்கற்கள் கருகும் என்றால் அது மிகப்பெரிய அதிசயம் அன்றி வேறில்லை என்பது இவர்களின் கூற்றாகும் (சுபஹானல்லாஹ்).

இந்த மலையை மையமாக வைத்து அவதானித்து பார்த்தபோது, மலையடிவாரங்களின் பல கற்களில் மாடுகளின் உருவம் பொறிக்கப்பட்டு இருந்ததையும் அவதானித்தார்கள்.
அதாவது மாட்டை தெய்வமாக வணக்கிய மூஸா (அலை) அவர்களின் கூட்டத்தார் அவர்கள் வணங்கிய மாட்டை கற்களிலும் செதுக்கி இருக்கக்கூடும் என்று தற்போது ஆராய்ச்சியாளர்கள் கருதுகிறார்கள்.
பனீ இஸ்ரவேலர்களுக்கு அருளப்பட்ட தவ்ராத் வேதம் அவர்களுக்கு சாதகமானதாக இல்லாததால் , வேறொரு வேதத்தை கொண்டு வரும்படி மூஸா (அலை) அவர்களிடம் வேண்டினர்.
உடனே ஜிப்ரயீல் (அலை) அவர்கள் தூர் ஸீனா மலையை வேரொடும் வேரடி மண்ணோடு தூக்கி அவர்கள் மீது தூக்கி போட எத்தனித்தார்கள். உயிருக்கு பயந்தவர்கள் தவ்ராத் வேதத்தை ஈமான் கொள்வதாக உறுதியளித்தனர்.

"தூர் மலையை உங்கள் மேல் உயர்த்தி நாம் உங்களுக்குக் கொடுத்த (தவ்ராத்)தை உறுதியுடன் பற்றிக் கொள்ளுங்கள்; அதை செவியேற்றுக்கொள்ளுங்கள் என்று உங்களிடம் நாம் வாக்குறுதி வாங்கினோம். (அதற்கு அவர்கள்) நாங்கள் செவியேற்றோம்; மேலும்(அதற்கு) மாறு செய்தோம் என்று கூறினார்கள். மேலும் அவர்கள் நிராகரித்த காரணத்தினால் அவர்கள் இதயங்களில் காளைக்கன்றின் (பக்தி) புகட்டப்பட்டது. நீங்கள் முஃமின்களாக இருந்தால் உங்களுடைய ஈமான் எதை கட்டளையிடுகிறதோ அது மிகவும் கெட்டது என்று (நபியே!) நீர் கூறும்" ( குர்ஆன் 2:93)
எல்லா மலைகளின் கம்பீரமான தோற்றமும், எழிலும் மனிதர்களுக்கு மலைப்பை ஏற்படுத்துவதால்தான் அதற்கு மலை என்று பெயரிட்டனர்.
மலைப்பைத் தருவது மலை மட்டுமல்ல; திருக்குர்ஆனில் மலை பற்றி இறைவன் கூறிய கருத்துகளும்தான்

## அளவிலா அருட்கொடைகள் 9

(கால் பங்கு நிலத்திற்கு முக்கால் பங்கு கடல் அவசியமா ? )




அல்லாஹ் படைத்த இம்மாபெரும் பிரபஞ்சத்தில் வானம், பூமி, கோள்கள், நட்சத்திரங்கள் போன்ற பெரும்படைப்புகள் உள்ளன.

அவனது எல்லா படைப்புகளுக்கும் ஆதாரமாக அவன் முதலில் படைத்தது 'தண்ணீர்". இன்று நாம் சர்வ சாதாரணமாக பயன்படுத்தும் நீரானது... அல்லாஹ்வின் தலையாய படைப்பு என்று எண்ணும்போதே அந்த நீரின் மகத்துவமும், கண்ணியமும் அதன் மதிப்பும் நமக்கு விளங்குகிறது.
அல்லாஹ்வின் அருட்கொடையான நீரின் மதிப்பு தெரியாத காரணத்தால், இன்று சுற்றுச்சூழல் சீர் கேடானது, நீரை மாசுபடுத்துவதிலிருந்தே ஆரம்பமாகிறது.
நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள், "ஆதியில் அல்லாஹ் மட்டுமே இருந்தான். அவனைத்தவிர வேறெந்தப் பொருளும் இருக்கவில்லை. பிறகு படைக்கப்பட்ட அவனுடைய அர்ஷ் (சிம்மாசனம்)தண்ணீரின் மீது இருந்தது. பிறகு (லவ்ஹுல் மஹ் பூள் எனும்) பாதுகாக்கப்பட்ட பலகையில் அவன் எல்லா விஷயங்களையும் எழுதினான். பின்னர், வானங்கள், பூமியைப் படைத்தான். அறிவிப்பவர்: இம்ரான் இப்னு ஹுசைன் (ரலி), புஹாரி 3191.
இந்த ஹதீஸிற்கு இமாம் இப்னு ஹஜர் (ரஹ்) அவர்கள். "அல்லாஹ் அர்ஷை படைக்குமுன்பே நீரைப்படைத்து விட்டான் என்பதை இந்த ஹதிஸ் தெளிவு படுத்துகிறது" என்கிறார்கள்.
( பத்ஹுல் பாரி 6/289 )
நன்னீரான ஆற்று நீர் கடலில் கலக்காமல் நிலத்திற்கே திருப்பி விட வேண்டும் என்று கருத்து முழுக்க முழுக்க தவறான கருத்து என்கிறார்கள் சூழலியல் வல்லுநர்கள்.

"ஆற்று நீர் நன்னீர். அது கடலில் சேர்வதன் மூலம்தான் கடலின் உப்புத்தன்மை சமநிலையில் இருக்கும். இல்லாவிட்டால் உப்புத் தன்மை பாதிக்கப்பட்டு, ஆவியாதலிலும் மாறுபாடு ஏற்படும். இது சூழலில் பெரும் தாக்கத்தை ஏற்படுத்தும்.
சூரிய வெப்பத்தால் கடலில் உள்ள உப்பை விட நீர் வேகமாக ஆவியாகும். ஆற்று நன்னீர் கலக்காத கடல் நீர் ஆவியாகி மேகமாக மாறி மழை பொழிந்தால் , அந்நீரை குடிக்க முடியுமா ?

لَوْ نَشَاۤءُ جَعَلْنٰهُ اُجَاجًا فَلَوْلَا تَشْكُرُوْنَ
நாம் விரும்பினால் அதனை (நீங்கள் குடிக்க முடியாத) உப்புநீராக ஆக்கியிருப்போம். (இதற்கு) நீங்கள் நன்றி செலுத்த வேண்டாமா? (குர்ஆன் : 56:70) இது எத்தனை பெரிய அருட்கொடை
மேலும் கடல்தான் நாம் சுவாசிக்கும் ஆக்ஸிஜனில் 70 சதவீதத்தை உருவாக்குகிறது. இது கடல்நீர் வாழ்விகள் உணவு தயாரிப்பதால்தான் கடலில் ஆக்ஸிஜன் உருவாக்கப்படுகிறது. இதனால் பூமியின் நுரையீரல் என்று கடலைச் சொல்லலாம்.
நாம் சுவாசிக்கும் காற்றில் பெருமளவை, மரங்களைவிடவும் கடலே உற்பத்தி செய்கிறது. நமக்குத் தேவையான பெருமளவு உணவு, மருந்துகள், உயிரின வளம் கடலிடமே இருக்கிறது.இதைச் சிறப்பிக்கும் வகையில் உலகப் பெருங் கடல்கள் நாள் ஜூன் 8-ம் தேதி அனுசரிக்கப்படுகிறது.
கடல் நீர் வாழ்விகள் உணவு தயாரிக்க வேண்டுமென்றால், அவை சீரான வளர்ச்சியைப் பெற வேண்டியது அவசியம். ஆற்று நீர் கடலில் கலந்தால்தான் அவற்றில் உள்ள கனிமங்கள் கடலில் கலந்து சிறு நுண்ணுயிர்களுக்கு ஊட்டமாக அமையும். அவற்றை சிறு மீன்கள் உண்ணும். அவற்றை பெரிய மீன்கள் உண்ணும்.

இது ஒரு மிகப் பெரிய உணவு சங்கிலி. ஆற்று நீர் கடலில் கலப்பது கூடாது என்பதன் மூலமாக மிகப் பெரிய உயிர்ச் சுழற்சியை நிறுத்த முயல்கிறோம்"
விரிந்த கடற்பரப்பிலுள்ள நீரில் பல வகையான உப்புக்களும் கனிமங்களும் கரைசலாக உள்ளடங்கியுள்ளன. பூமியின் மேற் புறணியில் உள்ள கனிமங்களில் அடங்கியுள்ள தனிமங்கள் அனைத்தும் கடலிலும் உள்ளன எனக் கண்டறிந்துள்ளார்கள். கடல் நீரின் உப்பில் 57 தனிமங்கள் உள்ளன.
பூமியில் தொடக்கத்தில் உயிர்கள் தோன்றுவதற்கு இந்த மாபெரும் நீர் நிலைகள் மூலாதாரமாக அமைந்தன. இன்றும் இந்த உலகிலுள்ள உயிரினங்கள் வாழ இக்கடல்களே காரணமாக உள்ளன.
எல்லா உயிர்ப்பிராணிகளையும் அல்லாஹ் நீரிலிருந்து படைத்துள்ளான். நிச்சயமாக அல்லாஹ் எல்லாவற்றின் மீதும் பேராற்றலுடையவனாக இருக்கின்றான்.(குர்ஆன் 24 : 45 )
கடல்நீர் வெப்பத்தைச் சேகரித்து வைக்கும் மாபெரும் சேமிப்புக் கிடங்காக உள்ளது. அதனால், பூமியில் அளவுக்கு மீறி வெப்பம் ஏற்படாமலும் அளவுக்கு மீறி குளிர்ச்சி ஏற்படாமலும் சமனப்படுத்துகிறது.
இந்நிலவுலகம் பாலைவனமாகவோ அல்லது பனிக்காடாகவோ மாறிவிடாமல் இக் கடல்கள் தான் பாதுகாத்து வருகின்றன.

கடலில் வாழும் மீன்கள் மனிதரின் உணவுக்கு முக்கிய ஆதாரமாகவும் அமைந்துள்ளன. கடல்களிலிருந்து விலைமதிப்பு மிக்கக் கனிமங்களும், பெட்ரோல், இயற்கை வாயு போன்ற எரிபூட்டிகளும் அதிக அளவில் கிடைக்கின்றன.
இன்னும் பூமியின் கழிவுப் பொருட்களை ஏற்கும் கொள்கலமாகவும் உள்ளது. மனிதர்களின் போக்குவரத்துக்கான எளிமையான வழியாகவும் கடல்கள் பயன்பட்டு வருகின்றன.
சில ஆய்வாளர்கள் கடலை தோல் என்று வர்ணிக்கிறார்கள். நமது உடலை மூடி உள்ள தோல் போல, இந்த உலகை கடல் மூடிக்கொண்டு இருக்கிறது. அவ்வளவுதான்.
அதாவது, உட்புறம் நெருப்புக் குழம்பாகக் கொதித்துச் சுழன்றுகொண்டு இருக்கின்ற இந்தப்புவியின் மேற்பரப்பைக் குளிர்விக்கின்ற ஒரு குளிர்விப்பானாகக் கடல் அமைந்து இருக்கின்றது. எனவே, அதை, புவியின் தோல் என்றே அழைக்கலாம் என்கிறார்கள்.
நீர் எல்லாப் பொருள்களிலும் நீக்கமற நிறைந்திருக்கிறது. நீர் என்பது எங்கும் காணப்படுவது. நாம் தினமும் குடிக்கிறோம், குளிக்கிறோம், கழுவுகிறோம், கொதிக்க வைக்கிறோம், உறைய வைக்கிறோம். ஆகவே அது நம் கண்களுக்கு ஒரு சாதாரணப் பொருளாக தெரிகிறது. அதன் அற்புதம் புரியவில்லை. அதன் மதிப்பும் தெரியவில்லை.

உலகின் பல்வேறு தட்ப வெப்ப நிலைகளிலும் நீரானது திரவமாக, திடப் பொருளாக,நீராவியாக பின்னிப் பிணைந்துள்ளது. நீரின் குணங்களை ஆராய..ஆராய.. அது ஒரு வினோதமான முற்றிலும் புரிந்து கொள்ள முடியாத புதிராகவே இன்றும் உள்ளது.
அல்லாஹ் நம்மை எந்த நீரிலிருந்து படைத்தானோ... அந்த நீரின் அருமை பெருமை சொல்லில் வடிக்க முடியாத ஒன்று.!
ஆக மொத்தத்தில் கடல் இறைவனின் அருட்கொடையே !

**அளவிலா அருட்கொடைகள் 10**
( பார்வை என்னும் பேரற்புதம் )



நம் உடலில் உள்ள ஐம்புலன்கள் வெளி உலகோடு நம்மை தொடர்பு படுத்துகின்றன. பார்த்தல், நுகர்தல், தொடுதல், கேட்டல் மற்றும் ருசித்தல் இவை இல்லாத ஒரு வாழ்க்கை எப்படி இருக்கும் என்று யூகித்து பாருங்கள்!
தாயின் கருவறையில் பதினான்காம் நாள் கண்கள்
20 பாகங்களைக் கொண்டு உருவாக்கம் பெறுகின்றது !
உடலின் மென்மையான அந்த உறுப்புகள், உடலின் மிக இன்றியமையாத அந்தப்பகுதி, மனிதனுக்கு வெளிச்ச உணர்வையும், விழிபபையும் வழங்கும் அந்த அவயவம் எங்கே உருவாக்கப்படுகிறது தெரியுமா ?
இருளில் தான் உருவாக்கப்படுகிறது இறைவனின் இந்த அற்புத சக்தியை ஒருகணம் எண்ணிப்பாருங்கள்.
நமது கண்கள் ஆயிரக்கணக்கான வண்ணங்களைப் பிரித்தறிந்து வேகமாக இயங்கும் தசைகள் நம் கண்களில் தான் இருக்கின்றன
பார்க்கும் வல்லமையுடைய கண்கள் நம் உடலில் உள்ள தசைகளிலேயே சுமார் 50 % மேல் மூளை இயங்குவது கண்களுக்காகத்தான்
இவ்வளவு நுட்பங்களைக் கொண்ட அழகிய கண்களை நமக்கு வழங்கியது யார் கோடி?

أَلَمْ نَجْعَلْ لَّهُ عَيْنَيْنِ
அவனுக்கு நாம் இரண்டு கண்களை ஆக்கவில்லையா? (அல்குர்ஆன் : 90:8)
மனிதமூளையில் ஒரு வினாடிக்கு 3 பில்லியன் மின்செயல்பாடுகள் நடைபெறுகிறது. இதில் 2 பில்லியன் செயல்பாடுகள் பார்வையோடு சம்பந்தப்பட்டு உள்ளது.
உங்கள் அலைபேசிக்கு வரும் அழைப்புகளில் நூற்றில் அறுபத்தி ஆறு அழைப்புகள் ஒரு நபரிடமிருந்து வருமென்றால், கண்டிப்பாக அந்த நபர் முக்கியமானவர் தானே அது மாதிரி மனித மூளை கண்ணுக்கு முக்கியத்துவம் கொடுத்திருக்கிறது.

ஐம்புலன்களில் கண் போக மீதி நான்கு புலன்களுக்கு ஒட்டு மொத்தமாக உபயோகப்படும் மூளை நரம்பு செல்களை காட்டிலும் பார்வைக்கு மட்டும் அதிகமான நரம்பு செல்களை மூளை பயன்படுத்துகிறது. இதிலிருந்து பார்வையின் நுட்பத்தையும் முக்கியத்துவத்தையும் நாம் அறிந்து கொள்ளலாம்.
இவ்வளவு ஏன்? நமக்கு பிடித்தவர்களை ‘கண்ணே ! கண்மணியே!’ என்று அழைப்பதும், ‘கண்ணுக்கு கண்ணாய் பார்த்து கொள்வேன்’ என்று ஆசையாய் உறுதி கொடுப்பதும், கண்களின் அவசியத்தை எடுத்து காட்டுகின்றது.
பள்ளிக் கூடத்தில் ஒரு விளையாட்டு சொல்லி தரப்படும். மாணவர்களை ஒருவர் பின் ஒருவராக வரிசயாக நிற்க வைத்து, முதல் மாணவனிடம் ரகசியமாக ஒரு செய்தி சொல்லப்படும்.
அவன் அவனுக்கு பின் நிற்கும் மாணவனிடம் அதை ரகசியமாகவே சொல்ல வேண்டும்…இப்படி செய்தி எல்லோரிடமும் ரகசியமாக ஒவ்வொரு மாணவனிடமும் சென்று கடைசி நபரிடத்தில் வரும் போது அந்தச் மொத்தமாக மாறி இருக்கும்!
அனால், நம் விழித்திரையின் செல்களில் உருவாகும் செய்தி, பல அடுக்கு செல்கள் மூலமாக, பல நரம்பிழைகள் மூலமாக மூளையை துல்லியமாய் தவறின்றி செல்லும் விந்தையை அதிசயம் என்று சொல்லாமல் வேறென்ன சொல்ல !

எவ்வளவு முயன்றும் இன்னும் விஞ்ஞானிகள் முழுமையாக விழித்திரையை போல பணியாற்றக்கூடிய chip களை இன்னும் கண்டு பிடிக்க இயலவில்லை.
இது மட்டுமல்ல. நாம் இரண்டு கண்களால் பார்க்கிறோம் ஆனால் நமக்கு உலகம் இரண்டிரண்டாக தெரிவது இல்லை. ஒரு கண்ணால் பார்ப்பது போல, நாம் உலகத்தை காண்கிறோம்.
இரண்டு கண்களும் ஒரு சேர இயங்குவதாலும் , மூளையின் செயல்பாடினாலும் இப்படிப்பட்ட ஒருங்கிணைந்த பார்வை சாத்தியாமாகிறது. இப்படி கண்கள் ஒருசேர நகர கண்களின் தசைகள் முக்கிய பங்காற்றுகின்றன.
உடலின் மற்ற தசைகளை காட்டிலும் கண்களின் தசைகள் அதிக வேலை செய்கின்றன.

கண்கள் நம் உடலினுள் உற்றுப் பார்க்கும் ஜன்னல் போன்றவை என்று கூறப்படுவதுண்டு. மனதின் உணர்ச்சிகள் மட்டும் இல்லை, உடலில் ஏற்படும் பல்வேறு நோய்களின் அறிகுறிகளையும் கண்களில் காண முடியும்.
சர்க்கரை, உயர் இரத்தஅழுத்தம் போன்ற நோய்கள் உடலின் பிற முக்கிய உறுப்புகளை தாக்குவதன் அறிகுறிகளை கண்களின் விழித்திரையில் ஆரம்ப கட்டத்திலேயே காணலாம்.
நமக்கு இரண்டு கண்களை கொடுத்த இறைவனுக்கு என்னென்றும் நன்றி செலுத்த வேண்டும். ஆனால் நபி (ஸல்) அவர்களுக்கு மறைவாக மேலும் இரண்டு கண்கள் அவர்களின் பின்புற பிடரியில் கொடுக்கப்பட்டுள்ளது.
ஒரு சமயம் நபி (ஸல்) அவர்கள் லுஹர் தொழுகைக்கு இமாமாக நின்ற போது நபித்தோழர்களைப் பார்த்து, "நீங்கள் வரிசை ஒழுங்காக கடைபிடியுங்கள் நீங்கள் உங்களுக்கு முன்னாடி எப்படி தெளிவாக பார்க்க முடிகிறதோ அதுபோல் எனக்கு பின்னால் பிடரியுள்ள கண்ணால் உங்களை தெளிவாக பார்க்க முடிகிறது" என்றார்கள்

## அளவிலா அருட்கொடைகள் 11

( வானம் பூமிக்கிடையே உள்ள இடத்தை அடைத்துக் கொள்ளும் இறை அன்பு )

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
அல்லாஹ் வானங்கள், பூமி ஆகியவற்றைப் படைத்த நாளில் அன்பை நூறு பாகங்களாகப் படைத்தான்.
அவற்றில் ஒவ்வொரு பாகமும் வானம் பூமிக்கிடையே உள்ள (இடத்)தை அடைத்துக் கொள்ளும் அளவுடையதாகும்.
அவற்றில் ஒரு பாகத்தையே பூமியில் வைத்தான். அந்த ஒரு பாகத்தினால்தான் தாய் தன் குழந்தை மீது பாசம் கொள்கிறாள். மிருகங்களும், பறவைகளும் ஒன்றன் மீதொன்று அன்பு காட்டுகின்றன.
மறுமை நாள் வரும்போது இந்த ஓர் அன்புடன் சேர்த்து அன்பை இறைவன் (நூறாக) முழுமையாக்குவான்.
இதை சல்மான் அல்ஃபாரிசீ (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
ஸஹீஹ் முஸ்லிம் : 5314.

நூறு மடங்கு அன்பு என்பது இது எவ்வளவு பெரிய இறைவனின் அருட்கொடை .
ரத்த வழி உறவினர்கள், உடன் பிறந்த சகோதர சகோதரிகள், பாட்டன் பாட்டிகள், மாமா மாமிகள், சிறிய பெரிய தந்தைகள், சின்னம்மா, பெரியம்மா இவ்வழியில் கிளைக்கும் உறவுகள். அர்ரஹீம் என்னும் அரபி சொல் அர்ரஹ்மான் என்னும் சொல்லிலிருந்து பிறந்தது.
" நான் தான் அர்ரஹ்மான் (அளவற்ற அருளாளன்). ரத்த வழி உறவுகளை நானே படைத்தேன். அந்த உறவுகளை என் திருப்பெயரோடு சேர்த்தேன். யார் ரத்த உறவுகளோடு சேர்ந்து வாழ்கிறார்களோ நிச்சயம் அவர்கள் என்னோடு சேர்ந்து கொள்வார்கள்.
எவர் ரத்த உறவைத் துண்டிக்கிறாரோ அவரை நான் துண்டித்து விடுவேன் என்ற இறை கட்டளையை இறைத்தூதர் இயம்பியது திர்மிதி 1694, அபூதாவூத் 1907, அஹ்மது 1659 நூல்களில் உள்ளது.
அபூ உமாமா (ரலி) கூறுகிறார்:
'யார் ஒருவரை இறைவனுக்காக நேசிக்கிறாரோ, இறைவனுக்காக வெறுக்கிறாரோ, இறைவனுக்காக கொடுக்கிறாரோ, இறைவனுக்காக தடுக்கிறாரோ அவர் இறை நம்பிக்கையை பரிபூரணமாக்கிவிட்டார் என நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்'. (அபூதாவூத்)

ஒருவர் மற்றவரை நேசிப்பதும், வெறுப்பதும் இறைவனுக்காக வேண்டி இருந்தால், இதுவும் இறை நம்பிக்கையின் ஒரு பகுதியாக தகுதி பெற்று விடுகிறது.
இறைவனுக்காக நேசிப்பதும், வெறுப்பதும் உள்ளம் சார்ந்த செயல். கொடுப்பதும், தடுப்பதும் உடல் சார்ந்த செயல்.
ஒட்டுமொத்தத்தில் இறைநம்பிக்கை பரிபூரணம் அடைய நமது செயல்கள் அனைத்தும் மார்க்கத்தின் அடிப்படையிலும், இறைநேசத்தின் அடிப்படையிலும் வெளிப்பட வேண்டும்.
'இறைநம்பிக்கையின் சுவையை ஒருவர் அடைய ஆசைப்பட்டால், அவர் ஒருவரை நேசிக்கட்டும். அவர் அவரை இறைவனுக்காக அன்றி வேறெந்த காரணத்திற்கும் நேசிக்கக் கூடாது என நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்'. (அறிவிப்பாளர்: அபூஹுரைரா (ரலி), நூல்: அஹ்மது)
பராஉ பின் ஆஸிப் (ரலி) தெரிவிக்கிறார்:
"நாங்கள் நபி (ஸல்) அவர்களுடன் சேர்ந்திருந்தோம். அப்போது அவர்கள் 'இறைநம்பிக்கையின் பலமான பகுதி எதுவென்று தெரியுமா?' என்று கேட்டார்கள்.
நாங்கள் 'தொழுகை' என்றோம்.
'தொழுகை அல்ல, அது ஒரு அழகு சாதனம்' என நபி (ஸல்) விளக்கமளித்தார்கள்.
பிறகு 'நோன்பு' என்றோம்.
'அதுவும் இல்லை' என நபி (ஸல்) தெரிவித்தார்கள்.
பிறகு 'அறப்போர்' என்றோம்.
'அதுவும் கிடையாது' என பதில் கூறினார்கள்.

பிறகு நபியவர்கள் ‘இறைநம்பிக்கையின் பலமான பகுதி இறைவன் விஷயத்தில் நேசிப்பதும், இறைவன் விஷயத்தில் வெறுப்பதும் ஆகும்’ என தெரிவித்தார்கள். (நூல்: அஹ்மது)
தனிப்பட்ட முறையில் ஒருவர் ஒருவரை நேசிப்பதும், வெறுப்பதும் கூடாது. ஒருவரின் அழகுக்காக, அவரின் அறிவுக்காக, அவரின் செல்வாக்குக்காக, செல்வத்திற்காக, படிப்புக்காக, பட்டத்திற்காக என குறிப்பிட்ட குண நலன்களை பார்த்து நேசிப்பதாக அமைந்தால், அந்த நேசம் நிரந்தரமானது அல்ல. அது இருக்கும் வரைக்கும் நேசம் இருக்கும். அது இல்லாதபோது நேசமும் காணாமல் போய்விடும்.
ஒருவரை வெறுப்பதும், அவரின் தனிப்பட்ட தீய செயல்களுக்காக மட்டுமே தீயவர்களை வெறுக்க வேண்டும். தீய செயல்களை புரிபவர்களை அல்ல, தீய செயல்களை மட்டுமே.
இறைநம்பிக்கையாளர் மீது நமக்கு நேசம் இயற்கையாகவே வரவேண்டும். அது அவரின் இறைநம்பிக்கையை வைத்து மட்டுமே. அவர் ஏழை-பணக்காரர், சிறியவர்-பெரியவர், படித்தவர்-பாமரர் என்ற அளவுகோலை வைத்து அல்ல.

இறைமறுப்பாளர்கள் மீது வெறுப்பு இருக்கவேண்டும். அதன் அளவுகோல் இறைமறுப்பு என்ற தன்மையில் மட்டுமே, மற்ற செயல்பாடுகளில் அல்ல.
இறைவனுக்காக விருப்பு, வெறுப்பு கொள்ளும்போது அதனால் பிறருக்கு நன்மைகள் மட்டுமே கிடைக்கும். தனிப்பட்ட காரணங்களுக்காக அது வரும்போது அதனால் பிறருக்கு தீங்குகள் மட்டுமே விளையும்.
“நிச்சயமாக இறைவன் நாளை மறுமைநாளில் ‘எனது வல்லமையைக் கொண்டு நேசம் கொண்டவர்கள் எங்கே?’ என்று கேட்பான்.
பிறகு, ‘எனது நிழலைத்தவிர வேறு எந்த நிழலும் இல்லாத இன்றைய தினத்தில் நான் அவர்களுக்கு நிழல் தருவேன்’ என இவ்வாறு இறைவன் கூறுவதாக நபி (ஸல்) கூறினார்கள்”. (நூல்: முஸ்லிம்)
‘எனக்காக ஒருவருக்கொருவர் பிரியமாக நடந்துகொண்ட இருவருக்கும், எனக்காக சபையில் அமர்ந்து கொண்ட இருவருக்கும், எனக்காக தரிசித்துக் கொண்ட இருவருக்கும், எனக்காக செலவளித்த இருவருக்கும் எனது நேசம் அவசியமாகிவிட்டதாக இறைவன் கூறியதை நபி (ஸல்) அவர்கள் தெரிவித்தார்கள்”. (அறிவிப்பாளர்: முஆத் (ரலி), நூல்: அஹ்மது)

“இறைவனின் நிழலைத் தவிர வேறு நிழல் இல்லாத நாளான மறுமைநாளில் இறைவன் ஏழு பேர்களுக்கு நிழலை அளிக்கிறான். அவர்களில் ஒருவர் இறைவனுக்காகவே பிரியம் கொண்டு இணைந்து, இறைவனுக்காகவே பிரிந்து செல்கின்ற இரண்டு நண்பர்கள் ஆவர் என நபி (ஸல்) கூறினார்கள்”. (அறிவிப்பாளர்: அபூஹுரைரா (ரலி), புகாரி)
“இறைவனுக்காக நேசிக்கும் இரு சகோதரர்களில் மிகச்சிறந்தவர் யாரெனில், ‘அவர்களில் மற்றவரை மிக அதிகமாக நேசிப்பவரே’ என நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்”. (நூல்: அதபுல் முப்ரத்)
ஒரு மனிதர் மற்றொரு ஊரில் உள்ள சகோதரரை சந்திக்கச் சென்றபோது, அவரது பாதையில் இறைவன் ஒரு வானவரை எதிர்பார்த்திருக்க வைத்தான்.
அம்மனிதர் அந்த வானவரைக் கடந்தபோது, அவர் ‘எங்கே செல்கிறாய்?’ என்று கேட்டார்.
அந்த மனிதர் ‘இந்த ஊரிலுள்ள எனது சகோதரரை சந்திக்கச் செல்கிறேன்’ என்றார்.
அந்த வானவர், ‘அவர் உமக்கு ஏதேனும் உபகாரம் செய்ய வேண்டும் என்பதற்காகவா செல்கிறாய்?’ என்று கேட்டார்.
அவர், ‘இல்லை, எனினும், நான் இறைவனுக்காக அவரை நேசிக்கிறேன்’ என்று பதில் கூறினார்.
‘நான் இறைவனால் அனுப்பப்பட்ட வானதூதர், நீ இறைவனுக்காக உமது சகோதரரை நேசித்தது போல் நிச்சயமாக இறைவனும் உம்மை நேசிக்கிறான்’ என்று கூறினார். (அறிவிப்பாளர்: அபூஹுரைரா (ரலி), நூல்: முஸ்லிம்).
‘என்னுடைய மகத்துவத்திற்காக ஒருவருக்கொருவர் நேசித்துக் கொண்டவர்களுக்கு ஒளியினால் தயார் செய்யப்பட்ட மேடைகள் உண்டு. அதில் அவரைக் கண்டு நபிமார்களும், வீரமரணம் அடைந்தவர்களும் ஆசை கொள்வார்கள்’ என இறைவன் கூறுவதாக நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். (அறிவிப்பாளர்: முஆத்பின் ஜபல் (ரலி), திர்மிதி)
இறைவன் தமக்காக நேசிக்கும் தனது அடியார்களுக்கு மிகஉயரிய அருட் கொடைகளை வழங்கி கவுரவப்படுத்துகின்றான்.
இறைவிசுவாசியின் அன்பு, நேசம், பாசம் அனைத்தும் சுயநலமில்லாமல், எவ்வித எதிர்பார்ப்பும் இல்லாமல் உண்மையான சகோதரத்துவ அடிப்படையில் இறைவனுக்காக அமையவேண்டும். இதில்தான் அவர் இறை விசுவாசத்தின் சுவையையும், இன்பத்தையும் பெறவேண்டும்.
இவையெல்லாமே இறைவனின் அளவிலா அருட்கொடைகள் தாமே !

**அளவிலா அருட்கொடைகள் 12**
( வானம் நம்மை பாதுகாக்கும் முகடு )



وَجَعَلْنَا السَّمَآءَ سَقْفًا مَّحْفُوْظًا وَّهُمْ عَنْ اٰيٰتِهَا مُعْرِضُوْنَ
வானத்தைப் பத்திரமான ஒரு முகட்டைப் போலும் நாம் அமைத்தோம். (இவ்வாறெல்லாமிருந்தும்) அவைகளிலுள்ள அத்தாட்சிகளையும் அவர்கள் புறக்கணிக்கின்றனர்.(குர்ஆன் : 21:32)

'எரிகல்' (Meteors) என்றால் என்ன? அது எறிவது யார்?
ஜூன் 30.1908 அதிகாலையில் ரஷ்யாவில் மத்திய சைபீரியாவில் வானத்திலிருந்து ஒரு ராட்சத தீக்கோளம் மிக வேகமாக வருவதைப் பார்த்தார்கள். அது விழுந்து வெடித்தபோது நூற்றுக்கணக்கான மைல்வரை சத்தம் கேட்டது. 2,000 கிலோ மீட்டர் சதுரத்துக்கு இருந்த மரங்கள் எல்லாம் எரிந்து போயின.
அதன் ஷாக், உலகம் பூராவும் இரண்டு தடவை சுற்றி வந்தது. அது நிகழ்ந்து இரண்டு நாட்கள்வரை வானத்தில் பரவியிருந்த நெருப்புத் தூசின் வெளிச்சத்தில் 10.000 கிலோ மீட்டர் தள்ளி லண்டனில் இரவில் பேப்பர் படிக்க முடிந்தது.

'துங்கஸ்கா நிகழ்ச்சி' என்று பெயர் பெற்றுவிட்ட அந்த விபத்துக்கு இன்று காரணம் கண்டுபிடித்து விட்டார்கள். 1908-ல் ஒரு வால் நட்சத்திரத்தின் (Comet) பகுதி பூமியைத் தாக்கியிருக்கிறது.
கிரகங்களுக்கு நடுவே விண்வெளியில் என்னென்னவோ சின்ன, பெரிய சமாசாரங்கள் எல்லாம் பொட்டைத்தனமாகச் சுற்றிக் கொண்டிருக்கின்றன. தூசியிலிருந்து பூட்டான் அளவுக்குப் பெரிய கற்கள்வரை! துங்கஸ்காவில் விழுந்தது ஒரு ஃபுட்பால் மைதான அளவுக்குப் பத்து லட்சம் டன் எடையும், மணிக்கு எழுபதாயிரம் மைல் வேகத்தோடும் விழுந்த ஒரு வால் நட்சத்திரத்தின் துணுக்கு என்று அனுமானித்திருக்கிறார்கள். இன்றைக்கு இந்த மாதிரி விழுந்தால் திகிலில் அமெரிக்காவும் ரஷ்யாவும், மூன்றாவது உலகப் போரைத் துவங்கிவிடும்!
எரிகற்கள் என்பவை இந்த வகையில் வால் நட்சத்திரங்களிலிருந்து விடுதலை பெற்ற துண்டுகள்தாம். துல்லியமான ராத்திரியில் பொறுமையாக வானத்தைப் பார்த்துக் கொண்டிருந்தீர்கள் என்றால், 'நட்சத்திரங்கள்' தீற்றிக் கொண்டு விழுவதைப் பார்க்கலாம். (ஒரு இரவில் ஆறு கற்களையாவது பார்க்கலாமாம்).
இவை நட்சத்திரங்கள் அல்ல. சின்னச் சின்னக் கற்கள்தாம். இதுவரை விழுந்ததில் மிகப்பெரிய கல் 9 அடி நீளம். பெரும்பாலும் எரிகற்கள் நம் பூமியின் பாதையுடன் குறுக்கிட்டுக் காற்று வெளியில் நுழைந்து உராயும்போது, உஷ்ணத்தால் எரிய ஆரம்பிக்கின்றன. எரிந்து சுமார் நூறு கிலோ மீட்டர் உயரத்திலேயே சாம்பலாகி விடுகின்றன.

ரொம்பப் பெரிசாக இருந்தால்தான் இந்த எரிச்சலையும்
சமாளித்துப் பூமியில் விழும் பூமியின் பெரும்பகுதி கடலாக இருப்பதால், கடலுக்குள்தான் பெரும்பாலும் விழுகின்றன. இருந்தும் நீங்கள் நடந்து செல்லும் போது ஒரு எரிகல் உங்களை 'சொட்டேல்' என்று பின்மண்டையில் தாக்க மெலிதான சாத்தியக்கூறு இருக்கிறது!
எரிகற்கள் இருவகைப்பட்டவை. உலோக எரிகற்கள், நிக்கல் இரும்புச் சத்துடன் விழுகின்றன. சும்மா வெறும் பாறாங்கல்லாகவே விழுவதும் உண்டு. ரொம்ப அதிர்ஷ்டக்காரராக இருந்தால் வைர மழையாக கொட்டவும் சான்ஸ் உண்டு.
சந்திரன் போன்ற துணைக்கோள்களில் எரி கற்களின் தாக்கத்தால் அவற்றின் மேல் தளங்கள் அம்மன் தழும்பு மாதிரி வட்ட வட்ட பெரிய குழிகளை ஏற்படுத்தி இருக்கிறது. ஆனால் இறைவன் நம் பூமிக்கு வழங்கிய காற்று மணடலத்தின் தயவால் இந்த எரிகற்களில் இருந்து தப்பிக்கிறோம்.
இது நம் பூமிக்கு இறைவன் வழங்கிய மிகப்பெரும் அருட்கொடை !
வானத்திலிருந்து எரிகற்கள் விழுவதுபோல் நரகத்தின் முகட்டிலிருந்தும் பெரிய பெரிய பாறாங்கற்கள் உருட்டி விடப்படுவதாக நபிமொழிகளிலிருந்து அறிகிறோம்.

"சிறிய பாத்திரம் போன்றதொன்றை நபி(ஸல்) அவர்கள் சுட்டிக்காட்டி இந்த அளவுள்ள ஒரு ஈயக்கட்டியை பூமியிலிருந்து ஐநூறு ஆண்டுகள் தொலைவிலுள்ள வானத்திலிருந்து போடப்பட்டால் இரவாகும் முன்பே அது கீழே வந்துவிடும்".
ஆனால் அதை நரகவாசிகளுக்குப் போடப்பட்டுள்ள விலங்குகளை உச்சியிலிருந்து போடப்பட்டால், அதன் அடிப்பாகத்தை அந்த ஈயக்கட்டி சென்று அடைவதற்குள் நாற்பது ஆண்டுகள் ஓடிவிடும் என்று நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள். (அப்துல்லாஹ் பின் அம்ருப்னுல் ஆஸ்(ரழி), திர்மிதி : 2714, அஹ்மத், பைஹகீ)

நரகத்தின் மேல் விளிம்பிலிருந்து பெரும் பாறாங்கல் ஒன்று உருட்டி விடப்படும். அது எழுபது ஆண்டுகளாக இறங்கிக் கொண்டே இருக்கும். ஆனாலும் அதன் அடியில் அது போய்ச்சேராது என்று நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள். (உத்பா இப்னு அஸ்வான்(ரழி), முஸ்லிம் : 2967, திர்மிதி : 2701, ரியாதுஸ்ஸாலிஹீன் : 498)
நபி(ஸல்) அவர்களுடைய சமூகத்தில் நாங்கள் இருந்தோம். அப்போது ஒரு பெரும் சப்தத்தைக் கேட்டோம். "இது என்ன சப்தம் என்பதை நீங்கள் அறிவீர்களா?" என்று கேட்டார்கள்.
"அல்லாஹ்வும் அவனது தூதருமே மிக அறிந்தவர்கள் " என்று நாங்கள் கூறினோம்.
"எழுபது வருடங்களுக்கு முன்னர் நரகத்தில் எறியப்பட்ட ஒரு கல்தான் அது இப்போதுதான் அது நரகத்தின் அடிப்பாகத்தைப் போய்ச் சேர்ந்திருக்கிறது.அந்த சப்தத்தைத்தான் இப்போது நீங்கள் கேட்டீர்கள் என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். (அபூஹுரைரா(ரழி), முஸ்லிம் : 2844, முஸ்னத் அஹ்மத், ரியாளுஸ்ஸாலிஹீன் : 404)

## அளவிலா அருட்கொடைகள் 13

( காது சொல்வதை காது கொடுத்துக் கேளுங்கள் )



மனிதனின் உச்சந்தலை முதற்கொண்டு உள்ளங்கால் வரை உடலுக்கு உள்ளேயும், உடலுக்கு வெளியேயும் ஏராளமான உறுப்புக்களை, நரம்புகளை, எலும்புகளை, தசைகளை, இரத்தத்தை, நுண்ணுயிர்களை வடிவமைத்து,
அவைகள் வெளியே தெரிந்து விடாதபடி மனித உறுப்புக்களிலேயே மிகவும் பெரிய உறுப்பாக தோலை உருவாக்கி, அதைக் கொண்டு அழகாக மூடி இப்போது நாம் இருக்கிற இந்த தோற்றத்தில் மனிதன் என்கிற முகவரியோடு உலவ விட்டிருக்கின்றான்.
அத்தகைய மனித இனத்தின் மாண்பு குறித்து அல்லாஹ் பேசுகையில் அல்லாஹ் “அழகிய படைப்பு” என வர்ணித்துக் கூறுவான்.

لَقَدْ خَلَقْنَا الْإِنْسَانَ فِي أَحْسَنِ تَقْوِيمٍ ()
“மனிதனை மிக அழகான வடிவமைப்பில் திட்டமாக நாம் படைத்தோம்”. (குர்ஆன்: 95: 4 )
இவ்வாறாக, படைத்த இறைவன் நமது உடலை, சிந்தித்துப் பார்க்குமாறும், அதன் மூலம் படைத்த இறைவனுக்கு நன்றி செலுத்துமாறு தூண்டுகின்றான்.
وَفِىْٓ اَنْفُسِكُمْ‌ اَفَلَا تُبْصِرُوْنَ
உங்களுக்குள்ளேயும் (பல) அத்தாட்சிகள் இருக்கின்றன; (அவற்றை) நீங்கள் உற்று நோக்க வேண்டாமா? (குர்ஆன் : 51:21)

ஒட்டு மொத்தமாக மனித உடலில் காணப்படும் எல்லா உறுப்புக்களும் மனிதனுக்கு முக்கியமானவை தான். எனினும் அல்லாஹ் மனித உடலில் இடம் பெற்றிருக்கிற மூன்று உறுப்புக்களைக் குறித்து அல்குர்ஆனில் அதிகம் பேசுகிறான், விமர்சிக்கிறான்.
கண், காது, இதயம் ஆகியவை தான் இம்முன்று உறுப்புக்கள். சில இடங்களில் மூன்று உறுப்புக்களையும் சேர்த்து பேசுகின்றான்.
பல இடங்களில் பார்வையையும், செவிப்புலனையும் இணைத்தே பேசுகின்றான். இன்னும் தெளிவாக சொல்வதாக இருந்தால் கண் – பார்வையைப் பற்றி 148 இடத்திலும், காது – செவிப்புலன் பற்றி 185 இடங்களிலும் பேசுகின்றான்.

அவ்வகையில் பார்க்கும் போது கண்ணும், காதும் மனித உறுப்பில் பிரதானமானவைகளாக இடம் பெறுகின்றன. அதிலும் குறிப்பாக காது – செவிப்புலன் என்பது மனித குலத்திற்கு அல்லாஹ் வழங்கியிருக்கிற மகத்தான அருட்கொடையாகும்.
ஏனெனில், பெரும்பாலான இடங்களில் இதயத்தை விட, கண்ணை விட அல்லாஹ் காதைத்தான் முற்படுத்தி முதன்மையாக கூறுகின்றான்.

அறிவியல் பார்வையில்....
காது.. உடலில் மிகச் சிறிய உறுப்புதான். ஒலிகளை உள்வாங்கி அதனை மூளைக்குக் கொண்டு செல்லும் பணியைச் செய்வதுதான் காதின் வேலையாகும்.
ஆனால், இந்த கேட்கும் சக்தி இல்லாமல் போனால்.. நாம் பேசும் சக்தியை பெற முடியாது என்பதுதான் முக்கியமான விஷயம். பல விஷயங்களை நாம் கேட்டுத்தான் தெரிந்து கொள்கிறோம், ஒருவருடன் ஒருவர் பேசிப் பழகும், புரிந்து கொள்ளவும் காது இன்றியமையாததாக உள்ளது.
நமது காது சாதாரணமாக 20 ஹெர்ட்சில் இருந்து 20 கிலோ ஹெர்ட்ஸ் வரை கேட்கும் திறன் பெற்றது. ஒரு கிலோ ஹெர்ட்ஸ் = 1000 ஹெர்ட்ஸ்.
செவி ஒலி அலைகளைப் பெற்று உணர்வது மட்டுமன்றி, உடல் சமநிலை உணர்வு தொடர்பிலும் முக்கிய பங்கு வகிக்கின்றது. உடலின் ஐம்புலன்களில் செவி கேட்க உதவும் ஒரு கருவியாவும் அமைந்துள்ளது.
செவித்திறன் குறைபாடு மூன்று வகையாகப் பிரிக்கப்படுகிறது. ஒலி நரம்புக் குறைபாடு, செவிப்பறை அல்லது செவிக்குழாய் (Ear Canal) குறைபாடு, இந்த இரண்டும் சேர்ந்த குறைபாடு. இவற்றில் செவிப்பறை அல்லது செவிக்குழாய் குறைபாடு இருப்பவர்களுக்கு, செவிப்பறையில் மோதும்
ஒலி அதிர்ந்து, நரம்புக்குத் தகவல் போகாது. அவர்களுக்கு எலும்புகள் மூலம் ஒலி செலுத்தும் உபகரணங்களைக் கொண்டு கேட்கும் திறனைத் திரும்பப்பெற வைக்கலாம்.
புகழ்பெற்ற இசை மேதை பீத்தோவன், கேட்கும் திறனை இழந்ததும் தன் பியானோவில் ஒரு இரும்புக் கம்பியை இணைத்து அதைப் பல்லில் கடித்துக்கொள்வதன் மூலம் தொடர்ந்து இசையமைத்ததாகக் குறிப்பு உண்டு.
செவி என்பது சரியானபடி முழுமையான உறுப்பைக் குறிப்பதற்கோ அல்லது வெளியில் தெரியும் செவிப் பகுதியை மட்டும் குறிப்பதற்கோ பயன்படக்கூடும்.
இது புறச்செவி அல்லது செவிமடல் எனவும் அழைக்கப்படும். புறச்செவி மட்டுமே வெளியில் தெரியும் செவியாக இருப்பினும், இது கேட்டல் என்னும் செயற்பாட்டின் பல படிகளில் முதல் படியோடு மட்டுமே தொடர்புபட்டது. இது உடற் சமநிலை உணர்வு தொடர்பில் எவ்விதப் பங்கும் வகிப்பதில்லை.

காது பற்றி குர்ஆனிய பார்வையில்...
1. ரப்புக்கு நன்றி செலுத்த வேண்டியதன் அவசியத்தை உணர்த்தும் உறுப்பு...
وَجَعَلَ لَكُمُ السَّمْعَ وَالْأَبْصَارَ وَالْأَفْئِدَةَ قَلِيلًا مَا تَشْكُرُونَ ()
“அல்லாஹ்வே உங்களுக்கு செவிப்புலனையும், பார்வைகளையும், இதயங்களையும் படைத்தான். மிக குறைவாகவே அவனுக்கு நன்றி செலுத்துகிறீர்கள்”
(குர்ஆன்: 32: 9 )
2.இறைவனால் நியமிக்கப்பட்ட வேவு பார்க்கும் ஒற்றர்கள்.....
حَتَّى إِذَا مَا جَاءُوهَا شَهِدَ عَلَيْهِمْ سَمْعُهُمْ وَأَبْصَارُهُمْ وَجُلُودُهُمْ بِمَا كَانُوا يَعْمَلُونَ ()
”அச்சமயம் பாவம் செய்த அவர்களுக்கு விரோதமாக அவர் களின் செவிகளும், கண்களும், அவர்களுடைய தோல்களும் அவர்கள் அவற்றின் மூலம் செய்தவற்றைப்பற்றி சாட்சி கூறும்”. ( குர்ஆன்: 41: 20 )
3. மனிதனை பரிசோதிப்பதற்காக படைக்கப்பட்ட உறுப்பு....
نَبْتَلِيهِ فَجَعَلْنَاهُ سَمِيعًا بَصِيرًا ()
”மனிதனை நாம் சோதிப்பதற்காகவே செவியுடையவனாகவும், பார்வையுடையவனாகவும் அவனை ஆக்கினோம்”. (குர்ஆன்: 76: 2 )
4. மஹ்ஷர் பெருவெளியின் கேள்வி மன்றத்தில் இடம்பெரும் உறுப்பு....
إِنَّ السَّمْعَ وَالْبَصَرَ وَالْفُؤَادَ كُلُّ أُولَئِكَ كَانَ عَنْهُ مَسْئُولًا ()
“நிச்சயமாக! செவி, பார்வை, இதயம் இவை ஒவ்வொன்றும் அது பற்றி (மறுமையில்) விசாரிக்கப்படக் கூடியதாய் இருக்கின்றது”. ( குர்ஆன்: 17: 36 )
5. மனித படைப்பின் நோக்கத்தைக் கூறும் உறுப்பு...
وَاللَّهُ أَخْرَجَكُمْ مِنْ بُطُونِ أُمَّهَاتِكُمْ لَا تَعْلَمُونَ شَيْئًا وَجَعَلَ لَكُمُ السَّمْعَ وَالْأَبْصَارَ وَالْأَفْئِدَةَ لَعَلَّكُمْ تَشْكُرُونَ ()
“அல்லாஹ் உங்களை – உங்களுடைய அன்னையர்களின் வயிறுகளிலிருந்து நீங்கள் எதனையும் அறியாத நிலையில் வெளியாக்கினான்; மேலும், உங்களுக்குச் செவிப்புலனையும், பார்வைகளையும், இதயங்களையும் அமைத்தான்! நீங்கள் நன்றி செலுத்துவதற்காக!”.( குர்ஆன்: 16: 78 )
6. சுவனத்து இன்பங்களை முதலில் அனுபவிக்கும் உறுப்பு....
“சாந்தி நிலவட்டும்! சாந்தி நிலவட்டும்! எனும் சொல்லைத்தவிர, வேறு வீணாண, பாவமான எந்தப் பேச்சுக்களையும் அவர்கள் செவியுற மாட்டார்கள்! ( குர்ஆன்: 56: 25, 26 )
செவி – காது என்பது.. அல்லாஹ்வின் தூதர் {ஸல்} அவர்கள் பார்வையில்...

அல்லாஹ்வின் தூதர் {ஸல்} அவர்கள் தங்களின் துஆக்களில் “யாஅல்லாஹ்! என் செவிகளுக்கும், என் பார்வைகளுக்கும் உயிர் வாழும் காலம் வரையிலும் சுகத்தையும், இயங்கும் ஆற்றலையும் வழங்குவாயாக! என்று கேட்பார்கள்.
மேலும், குர்ஆன் திலாவத்தின் போது செய்கிற ஸஜ்தாவில் கூட “அல்லாஹ்வே! உனக்கே சிரம் பணிந்தேன்! உன்னையே நம்பிக்கை கொண்டேன்! உனக்காக கட்டுப்பட்டேன்! பெரும் பாக்கியவானும், அழகிய படைப்பாளனுமான அல்லாஹ் அவன் தான் பார்வைகளுக்கும், செவிப்புலன்களுக்கும் ஆற்றல் வழங்கி, அழகிய தோற்றம் கொண்டு மனிதனைப் படைத்தான்! அத்தகைய ஒருவனுக்கு நான் சிரம் பணிந்தேன்!” என்று பிரார்த்திப்பார்கள். ( நூல்: அபூதாவூத், முஸ்லிம் )

## அளவிலா அருட்கொடைகள் 14

( மனித உடலில் இறைவனின் அருட்கொடை )

இறைவனின் படைப்புகள் ஒவ்வொன்றும் தனக்கெனத் தனித்தனிச் சிறப்புக் கூறுகளைக் கொண்டுள்ளன.
ஊர்ந்து செல்லும் எறும்பு, தனது உடல் எடையைவிடச் சுமார் எட்டு மடங்கு சுமையைச் சுமக்கும்.
ஒட்டகம், முற்செடியையும் வலியின்றி உட்கொண்டு ஜீரணிப்பதோடு ஓரிரு வாரம் நீரின்றி உயிர் வாழும்.
ஆந்தை, கும்மிருட்டிலும் தடுமாற்றமின்றிப் பறக்கும்.
மனிதன் பெற்றிராத இத்தனை சிறப்பு வாய்ந்த உடற்கூறுகளைக் கொண்டுள்ள கோடிக் கணக்கான ஜீவராசிகளை விடவும், “மனிதனை மிகச்சிறந்த படைப்பாகப் படைத்திருக்கிறோம்” என்று அல்லாஹ் திருமறையில் கூறுகிறான்.
இறைவனைப் புரிந்துகொள்ள நம் உடலின் அற்புத அமைப்புகளை உணர்ந்தாலே போதும்.

وَفِىْۤ اَنْفُسِكُمْ‌ ؕ اَفَلَا تُبْصِرُوْنَ
உங்களுக்குள்ளேயும் (பல) அத்தாட்சிகள் இருக்கின்றன; (அவற்றை)நீங்கள் உற்று நோக்க வேண்டாமா?
 (குர்ஆன் : 51:21)
உச்சி முதல் உள்ளங்கால்கள் வரை மனித உடலின் ஒவ்வொரு உறுப்புகளாக கவனித்தால் அவனின் அருட்கொடைகள் ஒவ்வொரு உறுப்புகளிலும் மிளிர்வதைக் கண்டு சிலிர்த்துப் போவீர்கள்.
மண்டையோட்டுடன் கூடிய தலை அதில் சிந்திக்கக் கூடிய மூளை, அழகான முகம், அதிலே பார்ப்பதற்காக இரு கண்கள், சுவாசிக்க ஒரு மூக்கு. கேள் திறன்கொண்ட இரண்டு காதுகள், எதையும் அரைத்து உண்ணவும், பேச்சுக்கு உறுதுணையாகவும் கொண்ட அழகான பற்கள், பேசவும், ருசிக்கவும் எலும்பில்லா நாவையும் கொண்டமைந்துள்ள வாய்,
திரும்பும் கழுத்து, பரந்த மார்பகங்கள், பல்வேறு வேலைகளை செய்துகொள்ள இரண்டு கைகளும் அவற்றில் பற்றிப் பிடிக்க பத்து விரல்கள், உணவை நிரப்பிக் i வயிறு, கழிவு வெளியேற்றும் தொகுதிகள், இன உற்பத்திப் பகுதிகள், ஓடிப் பாய்ந்து நடந்து திரிய இரண்டு கால்களும் அவற்றின் பாதங்களில் பத்து விரல்களும் என பல உறுப்புகள் காணப்படுகின்றன.
அவை தவிர உடலுக்குள் மூளை, இதயம், சுவாசப்பை, இரைப்பை, சிறு, பெரு குடல்கள், சிறுநீரகம், ஈரல், இரத்தம் என பல சமாச்சாரங்களை கொண்டு மிக நேர்த்தியாகவும் அழகாகவும் அல்லாஹ் படைத்துள்ளான்.
திருமறை கூறுகின்றது. "நிச்சயமாக நாம் மனிதனை மிகவும் அழகிய அமைப்பில் படைத்தோம்." ( குர்ஆன் 95:4 )
ஒவ்வொரு மணி நேரமும் பில்லியன் கணக்கான உயிரணுக்கள் நமது உடலில் உருவாகி பல பில்லியன் கணக்கான உயிரணுக்கள் மறைந்து போகின்றன. இது தொடர்ந்து நடந்துகொண்டே இருக்கும்.
இந்த உயிரணுக்களின் கருவில் அமைந்துள்ள DNA கள் தான் (Deoxyribo Nucleic Acid) ஒரு மனிதனுடைய பரம்பரைக் குணவியல்புகளைத் தீர்மானிக்கின்றன.

தந்தையிடமும் தாயிடமும் இருந்து கடத்தப்படும் இந்தப் பரம்பரை அலகுகள் அவர்களுடைய தோற்றம், குணவியல்புகளைக் கொண்டிருக்கும் என்பதை இன்றை நவீன விஞ்ஞானம் சொல்ல, அதனை அன்றே அண்ணலார் அழகுற இவ்வாறு பகர்ந்தார்கள்.
"ஆண் பெண்ணை மூடியதன் பின் ஆணின் நீர் முந்தினால் தோற்றம் (ஆணாக) அவனை ஒத்து இருக்கும். பெண்ணின் நீர் முந்தினால் தோற்றம் (பெண்ணாக) அவளை ஒத்து இருக்கும்."(புஹாரி)
இவ்வாறு நமது உடலில் காணப்படும் ஒவ்வொரு அங்க உறுப்புகளையும் ஆராய்ந்து பார்த்தால் அவை சதாவும் இறைவனை புகழ்ந்துரைக்கச் சொல்கின்றன என்பதை பின்வரும் திருமறை வசனம்கூட இதனை எடுத்துரைப்பதைப் பாருங்கள்.

நீங்கள் (அவனுக்கு) நன்றி செலுத்த வேண்டும் என்பதற்காகவே உங்களுக்குச் செவிப்புலனையும், பார்வைகளையும், இதயங்களையும் - அவன் அமைத்தான்."குர்ஆன் (16:78)
ஆணும் பெண்ணும் இணைகிற உடலுறவின் உச்சத்தில் உதிர்க்கும் திரவத்திற்கு விந்து அல்லது இந்திரியம் என்று பெயர்
ஒரு முறை வெளிப்படுத்தும் இரண்டு ஸ்பூன் விந்தில் 30 கோடி உயிரணுக்கள் உள்ளன ஒவ்வொன்றிலும் 23 குரோமோஸோம்கள் இருக்கின்றன.

இதில் அந்த ஆணின் அத்தனை அடையாளங்களும் டி என் ஏ வில் செய்தி ரூபமாக கறுப்பா, சிவப்பா, குட்டையா, நெட்டையா, காது பெரிசா, கண் நிறம் சாம்பலா, உயரம், முன்கோபம்,குள்ள நரித்தனம் ,கிடார் வாசிக்கும் திறமை... என்று எல்லா செய்திகளும், இத்துடன் அப்பா, அம்மா, தாத்தா, பாட்டிகளின் அத்தனை வம்சாவளிகளும் வெளிப்படுத்தும் விந்தில் பதிவாகி இருக்கிறது !
"ஓர் அற்பத் துளியாகிய இந்திரியச் சத்திலிருந்து அவனுடைய சந்ததியை படைக்கின்றான் ( குர்ஆன் 32 : 08 )

ஒரு பெண்ணின் உடலில் ஆணினால் செழுத்தப்படும் விந்தணுக்களில் ஒன்று மாத்திரம் பெண்ணின் சினை முட்டையுடன் கருக்கட்டுவது முதல் மனித கருவறையிலிருந்து ஆரம்பிக்கின்றது.
அதனைத் உருவாக்கம் அதனைத் தொடர்ந்து சரியாக 42 நாட்களுக்குள் அது அலக்கா (சூழ்வித்தகம் - Placenta), முழ்கா (சதைக் கட்டி - Chew), இதாம் (எண்பு - Bone), லஹ்ம் (தசை - Muscles) என்ற கட்டங்களில் வளர்ச்சியடைகின்றது.
42 ஆம் நாளாகும் பொழுது கருவாகி, உருவாகிய அந்தச் சிசுவிற்கு ஒரு வானவர் மூலம் அல்லாஹ் ரூஹை ஊதுகின்றான். இந்தப் படி நிலைகளை அல்குர்ஆன் அழகாக முன்வைக்கின்றது.
"நாம் (மனிதனைப் படைப்பதற்காக) அவனை ஒரு பாதுகாப்பான இடத்தில் இந்திரியத் துளியாக்கி வைத்தோம்.
பின்னர் அந்த இந்திரியத் துளியை அலக் என்ற நிலையில் ஆக்கினோம்;
பின்னர் அந்த அலக்கை ஒரு தசைப் பிண்டமாக்கினோம்;
பின்னர் அத்தசைப்பிண்டத்தை எலும்புகளாகவும் ஆக்கினோம்;
பின்னர், அவ்வெலும்புகளுக்கு மாமிசத்தை அணிவித்தோம்;
பின்னர் நாம் (அதில் ரூஹை ஊதி) வேறு ஒரு படைப்பாக செய்தோம். (இவ்வாறு படைத்தவனான) அல்லாஹ் பெரும் பாக்கியமுடையவள் (படைப்பாளர்களில் எல்லாம்) மிக அழகான படைப்பாளன்." (23:14)
இந்த அழகான படைப்புகளை எல்லாம் படைத்தவன் தான் மிகப்பெரும் அருட்கொடையாளன்

## அளவிலா அருட்கொடைகள் 15

( நெருப்பும் அவனின் அருட்கொடையே )




நெருப்பு ஏன் எப்போதும் மேல் நோக்கியே எரிகின்றது?
முதலில் இரண்டு விஷயங்களை தெரிந்து கொள்வோம்.
ஒன்று :சூடான காற்று மேல்நோக்கியே செல்லும்.
இரண்டு: வெற்றிடம்/காற்று அழுத்தம் குறைவான இடத்தை நோக்கி, அருகில் உள்ள அடர்த்தியான(குளிர்ந்த) காற்று ஓடி வரும்.
தீ பற்றியவுடன், அதைச்சுற்றியுள்ள காற்று வெப்பமடைவதால், அந்த நெருப்பை சுற்றியுள்ள காற்று முழுவதும் சூடாகி மேலே செல்லும்.
அந்த இடத்தில் வெற்றிடம் உண்டாவதால் (காற்றழுத்தம் குறைவதால்) அருகில் இருக்கும் அடர்த்தியான காற்று, அட இந்தப்பக்கம் இடமிருக்கிறதே...என் மகிழ்ந்து அந்த நெருப்பை நோக்கிச் செல்லும்.
ஆனால் அந்த நெருப்பின் அருகில் சென்றவுடன் வா..மகனே..வா..என தீ அந்த குளிர்ந்த அடர்த்தியான காற்றை சூடாக்கும். எனவே இதுவும் சூடாகி மேலை போகும்.

இந்த நிகழ்வு தொடர்ந்து நடைபெறுவதால், நெருப்பைப் சுற்றியுள்ள காற்று சூடாகி...சூடாகி..மேலே செல்லும்போது அந்த ஜூவாலையும் மேல்நோக்கியே இழுத்துச் செல்லப்படும்.
எனவே எரியும் நெருப்பு எப்போதும் மேல் நோக்கி மட்டுமே எரியும்.மேலும் நெருப்பு எரிவதற்கு தேவை ஆக்ஸிஜன் நிறைந்த காற்று. இது பூமியில் கிடைப்பதால் நெருப்பு நீண்ட நேரம் மேல் நோக்கி எரியும்.
சைத்தான் நெருப்பினால் படைக்கப்பட்டான் இதனால் இறைவன் ஆதம் அலை அவர்களுக்கு சுஜூது என்னும் பணிவான வணக்கத்தை செய்ய சொல்ல, அவன் செய்ய மறுத்தான் காரணம் அவன் கொழுந்து விட்டு மேல் நோக்கி எரியும் நெருப்பால் அல்லவா .
படைக்கப்பட்டான். அதனால் பணிய அவன் பூர்வ ஆதாரம் ஒத்துக்கொள்ளவில்லை

ஆக்ஸிஜன் மிக குறைவாக இருக்கும் காற்று அடர்த்தி குறைந்த வேறு கிரகங்களிலும், அல்லது பூமியை விட்டு உயரத்தில் அதிக தூரம் சென்ற பிறகு தீ பற்றவைத்தால், தீ மேல் நோக்கி உயரமாக எரியாமல் தேமே...ன்னு சொங்கி மாதிரி வேணும்னா..சிகரெட் பத்தவச்சுக்கோ...ங்கிற அளவே எரியும்.
எந்த ஒரு சமூகத்திலும், "தீ" என்று சற்று சத்தமாகச் சொன்னாலே அனைவரையும் பதற்றத்தில் திரும்பிப் பார்க்க வைக்கும் தன்மை கொண்டது நெருப்பு.
சாதாரணமாக நெருப்பு என்றாலே ஆபத்தாகக் கருதப்படுகிறது.அதை சரியாகக் கையாளவில்லை என்றால் அதுவும் அவ்வாறே செயல்படுகிறது.
பஞ்சபூதங்களில் நெருப்பின் விகிதம் மனித உடலில் குறைந்தபட்சமாக இருப்பினும், அதன் தாக்கம் அபரிமிதமானது.
பலவிதங்களில் நெருப்பு என்பது உயிர்த்தன்மையைக் குறிக்கிறது. நீங்கள் உயிருடன் இருக்கிறீர்களா இல்லையா என்பதற்கு ஒரு அறிகுறி, உங்களுக்குள் இன்னும் நெருப்பு இருக்கிறதா அல்லது உடல் குளிர்ந்துவிட்டதா என்பதுதான்.
இந்த பூமியில் அடிப்படையாகவே வாழ்க்கையை நடத்துவது சூரிய சக்திதான். பூமியில் உயிர் இயங்குவதற்கு எரிவாயுவாக இருப்பது சூரியன் எனும் பெரிய நெருப்புப் பந்து.
எந்த இயந்திரமானாலும், அது இயங்கும்போது வெப்பத்தை உருவாக்குகிறது, ஏனென்றால் நெருப்புதான் அதை இயக்கும் எரிவாயுவாக இருக்கிறது. மின்சாரம், பெட்ரோல், மரம், நிலக்கரி, அல்லது வேறு எந்த வடிவத்தில் இருந்தாலும் சரி, அடிப்படையாகவே, உங்கள் உடல் உட்பட அனைத்து இயந்திரங்களையும் இயக்குவது நெருப்புதான்.

நமக்குள் எரியும் நெருப்பு இல்லாமல் உயிர் இல்லை. ஆனால் நீங்கள் கவனிக்கவில்லை என்றால், அதே நெருப்பு க்ஷணப்பொழுதில் கட்டுக்கடங்காமல் படர்ந்து எல்லாவற்றையும் புசித்துவிடும். நம் உடலை அது புசிக்கும்போது அதனை காய்ச்சல் என்கிறோம்.
இன்னொரு அம்சம், சமையல் செய்ய நாம் நெருப்பை பயன்படுத்துகிறோம், அதன்மூலம் நாம் அப்படியே சாப்பிடமுடியாத உணவு வகைகளை சாப்பிடக்கூடியதாக மாற்றுகிறோம்.
நமக்குள்ளும் வெளியும் பல பரிமாணங்களில் நெருப்பு செயல்படுகிறது. உள்நிலை நெருப்பின் ஒரு வகை, ஜடராக்கினி. ஜடரா என்றால் வயிறு அல்லது ஜீரணத்தின் நெருப்பு. வயிற்றில் கொஞ்சம் நெருப்பு இல்லாவிட்டால் உண்ணும் உணவை உங்களால் ஜீரணிக்க முடியாது. உணவென்பது, நீங்கள் உடைத்து சக்தியை எடுத்துக்கொள்ளவேண்டிய எரிவாயுவாக செயல்படுகிறது.
இந்த ஜீரணத்தின் நெருப்புக்குத் தேவையான எண்ணெயும் சரியான ஊட்டமும் வழங்கப்பட்டால், அது இனப்பெருக்கத்திற்கான நெருப்பாகவும் மாறுகிறது. செரிமானமும் இனப்பெருக்கமும் உடல் நெருப்பை சார்ந்திருக்கின்றன.

உடலின் நெருப்பு மனதினில் பற்றிக் கொண்டால், அது பொறாமை நெருப்பாக பற்றி எரிகிறது.
நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள் பொறமை கொள்வதை விட்டும் உங்களை எச்சரிக்கின்றேன். ஏனெனில் நெருப்பு விறகைத் தின்பதைப் போன்று பொறாமை நன்மையைத் தின்று (அழித்து) விடும். அறிவிப்பவர் அபூஹுரைரா (ரலி) அபூதாவூத் 4257

## அளவிலா அருட்கொடைகள் 16

( பூமிக்கும், வானத்திற்கும் இடைப்பட்ட அருட்கொடைகள் )

அவன் வானங்களைத் தூண்களின்றியே படைத்துள்ளான். அதனை நீங்களும் பார்க்கிறீர்கள். உங்களுடன் பூமி அசையாதிருப்பதற்காக அவன் அதன் மேல் மலைகளை உறுதியாக நிறுத்தினான்;
(குர்ஆன் : 31:10)

(இவ்வேதத்தை அருளிய) அல்லாஹ் எத்தகையவனென்றால் அவன் வானங்களைத் தூணின்றியே உயர்த்தியுள்ளான்; நீங்கள் அவற்றைப் பார்க்கிறீர்கள்; . (குர்ஆன் : 13:2)
தன் அனுமதியின்றி பூமியின் மீது வானம் விழுந்துவிடாதவாறு அவன் தடுத்து கொண்டிருக்கிறான். நிச்சயமாக அல்லாஹ் மனிதர்கள் மீது மிக்க இரக்கமும், அன்பும் உள்ளவன்.(குர்ஆன் : 22:65)
“வானங்களுக்கும், பூமிக்கும் தூண்கள் உள்ளன; ஆனால் அவைகளை உங்களால் பார்க்க முடியாது” என்ற கருத்தில் இவ்வசனங்கள் அமைந்துள்ளன.
பார்க்க முடியாத தூண்கள் இருக்கின்றனவா? என்றால் நிச்சயமாக இருக்கின்றன. உலகத்தில் இருக்கின்ற பூமி உள்ளிட்ட எல்லாக் கோள்களும் அவற்றிற்குரிய இடங்களில் நீந்துவதற்கு, அவற்றைக் குறிப்பிட்ட வேகத்துடன் இழுத்துப் பிடித்திருக்கின்ற ஒரு ஈர்ப்புவிசை எல்லாப் பகுதியிலும் பரவியிருப்பது தான் காரணம்.
உதாரணமாக நாம் வாழ்கின்ற பூமி, மணிக்கு 1670 கி.மீ. வேகத்தில் தன்னைத் தானே சுற்றுகிறது. அதே சமயம் சூரியனை, மணிக்கு 1,07,000 கி.மீ. வேகத்தில் சுற்றி வருகின்றது.

இவ்வளவு வேகமாக தன்னைத் தானே சுற்றிக் கொண்டு, சூரியனையும் பூமி சுற்றும் பொழுது அதை ஈர்த்துப் பிடிக்கும் ஒரு சக்தி இல்லாவிட்டால் தனது நீள்வட்டப் பாதையிலிருந்து இப்பூமி தூக்கி வீசப்பட்டு விடும்.
பூமியின் எடை (நிறை) 6,000,000,000,000,000,000,000,000 கிலோ கிராம் (6க்குப் பின் 24 பூஜ்யங்கள்) ஆகும்.
இந்த வேகத்தில் சுற்றும் இவ்வளவு பாரமான ஒரு பொருளை அதன் பாதையை விட்டு விலகாமல் தடுத்து நிறுத்த வேண்டுமானால், ஐந்து மீட்டர் குறுக்களவு கொண்ட ஒரு லட்சம் கோடி உருக்குக் கம்பிகளாலான தூண்களைக் கொண்டு பூமியிலிருந்து சூரியனை இணைக்க வேண்டும் என்று விஞ்ஞானிகள் கணித்துள்ளனர்.
அந்தத் தூண்கள் இல்லாமலேயே பூமி, தனது பாதையிலிருந்து விலகாமல் இருப்பதற்கு ஈர்ப்பு விசை என்ற கண்ணுக்குத் தெரியாத தூண்களே காரணம்.

இந்த அறிவியல் உண்மையைத்தான், “நீங்கள் பார்க்கின்ற தூண்களின்றி” என்று அல்லாஹ் கூறுகின்றான்.
இந்த ஈர்ப்பு விசையின் காரணமாகத்தான் ஒவ்வொரு கோளும் அந்தரத்தில் எவ்விதப் பிடிமானமும் இன்றி மிதக்கும் காட்சியைப் பார்க்கின்றோம்.
எனவே 17வது நூற்றாண்டில் மனிதன் கண்டறிந்த ஈர்ப்பு விசை எனும் கண்டுபிடிப்பை, ஆயிரத்து நானூறு ஆண்டுகளுக்கு முன்பே திருக்குர்ஆன் கூறுகிறது.
இந்த வானங்களையும், பூமியையும் படைத்தவன் பேசுகின்ற வார்த்தையாக இது இருப்பதால் தான் “பார்க்கின்ற தூண்களின்றி” என்ற சொல்லைப் பயன்படுத்தி, பார்க்காத தூண்கள் இருக்கின்றன என்ற உண்மையை மறைமுகமாகக் குறிப்பிடுகிறான்.

அடுத்து ,
சூரியனிலிருந்து இடைவிடாமல் பூமியை நோக்கி வீசிக்கொண்டிருக்கும், மனிதர்களுக்குப் பல்வேறு கேடுகளை விளைவிக்கக் கூடிய அழிவுக் கதிர்களான புற ஊதாக்கதிர்கள் பூமியின் மேற்பரப்பையும் அதில் வசிக்கும் உயிரினங்களையும் தாக்காமல் தடுத்துக்கொண்டிருக்கும் ஓசோன் என்ற வாயு மண்டலமும் இந்த காற்று மண்டலத்தில் தான் உள்ளது.
இதைத் தவிர சூரியனிலிருந்து அவ்வப்போது பூமியை நோக்கி வீசும் படுபயங்கர விளைவுகளை ஏற்படுத்தக் கூடிய வெப்பக் கதிர்களையுடைய சூரியப் புயல் பூமியைத் தாக்கா வண்ணம் பூமிக்கு ஒரு கூரையாக அமைத்து பாதுகாத்துக் கொண்டிருக்கும் பூமியின் காந்த மண்டலமும் பூமிக்கும் வானத்திற்கும் இடையே தான் அமைந்துள்ளது.
இவைகளை சமீபத்தில் தான் அறிவியலாளர்கள் கண்டறிந்தனர். இவைகளை சாதாரணமாக வெறும் கண்களால் பார்த்தால் பார்க்க முடியாது. ஆனால் விஞ்ஞான வளர்ச்சி ஏற்பட்டுள்ள இக்கால கட்டத்தில் நாம் பல்வேறு நவீன கருவிகளின் உதவியுடன் பூமிக்கும் வானவெளிக்கும் இடையில் இவைகள் இருப்பதை அறிய முடிகிறது.
ஆனால் 1400 ஆண்டுகளுக்கு முன்னரே இவைகளைப் பற்றி கூறப்பட்டிருக்கிறது என்று கூறினால் நமக்கு ஆச்சரியாகத் தோன்றுகிறதல்லவா!

ஆம். அகிலங்களின் இறைவனாகிய அல்லாஹ் அவனுடைய படைப்பினங்களின் மேல் கொண்டுள்ள அளவற்ற கருணையினால் அவர்களுக்கு நேர்வழி காட்ட அவனருளிய சத்திய திரு வேதத்திலே இந்த பூமிக்கும் வானத்திற்கும் இடையேயும் அவனுடைய படைப்பு இருக்கிறது என்று கூறியிருக்கிறான்.
இறைவன் வானங்கள் மற்றும் பூமியைப் படைத்திருப்பதோடு அல்லாமல் இவை இரண்டிற்கும் இடையில் பல வாயுக்களை உள்ளடக்கிய காற்று மண்டலத்தையும், காந்த மண்டலம் மற்றும் நாம் அறியாதவைகளைப் படைத்திருக்கின்றான்.
அல்லாஹ் கூறுகிறான் : –
“அவன் பெரும் பாக்கியம் உடையவன்: வானங்கள், பூமி இவை இரண்டிற்குமிடையே உள்ளவை ஆகியவற்றின் ஆட்சி அவனுக்குடையதே. அவனிடம் தான் (இறுதி) வேளைக்குரிய ஞானமும் இருக்கின்றது. மேலும் அவனிடமே நீங்கள் மீட்கப்படுவீர்கள்” (குர்ஆன்: 43:85)

“நீங்கள் உறுதியுடையவர்களாக இருப்பின் வானங்கள், பூமி இவ்விரண்டிற்கும் இடையிலுள்ளவை ஆகியவற்றிற்கு அவனே இறைவன் (என்பதைக் காண்பீர்கள்)” (குர்ஆன்: 46:3)
அல்லாஹ்வே முற்றிலும் அறிந்தவன்!

## அளவிலா அருட்கொடைகள் 17

( நிழலும் அருட்கொடையே! )



செம கோடை வெயில் அனலை அள்ளிக் கொட்டுகிறது. பயணிக்கும் மக்கள், அடிக்கடி அதன் ஓரத்தில் நிம்மதி நாடி நிழல் தேடி ஓய்வுக்காக ஒதுங்குகிறார்கள். வெயிலின் வெப்பம் தாக்குவதால் தேகம் வியர்வையைச் சிந்திச் சிந்தி சோர்வடைந்து விடும். .

நாம் நிம்மதியாக வாழ வேண்டும் என்பதற்காக அல்லாஹ்வே இந்த நிழலை ஏற்படுத்தியிருக்கிறான். வெறும் வெயிலை மட்டும் கொடுத்து நம்மை வேதனையில் தள்ளிவிடாமல் அதிலிருந்து இதமளிக்கும் நிழலையும் தந்து அவன் நம் மீது கருணை மழையைப் பொழிந்திருக்கிறான். நமது நலனுக்காக அவன் அளித்திருக்கும் அளவிலா அருட்கொடைகளில் இந்த நிழலும் உள்ளடங்கும்.

தான் படைத்தவற்றிலிருந்து அல்லாஹ் உங்களுக்கு நிழல்களை ஏற்படுத்தினான். (குர்ஆன் 16:81)

காலையிலும் மாலையிலும் வெவ்வேறு திசையில் நிழல் விழுவதைப் பார்க்கிறோம். எந்தவொரு காரணமும் இல்லாமல் நிழல் விழுவதாக நாம் நினைத்துவிடக் கூடாது. அனைத்துப் படைப்பினங்களும் படைப்பாளனான அல்லாஹ்விற்குக் கட்டுப்பட்டுப் பணிகின்றன. அவன் விதித்தபடி செயலாற்றிக் கொண்டிருக்கின்றன. அவற்றுள் நிழலும் ஒரு அங்கம்.

எந்த நேரத்தில் எப்படி விழவேண்டும் என்று வல்ல இறைவன் செயல்திட்டம் வகுத்தானோ அதன்படி அங்குலம் மாறாமல் அப்படியே அடிபணிகிறது நிழல்.

இறைவனுக்கு மாறுசெய்வதையே தொழிலாகக் கொண்டிருக்கும் மனித இனம் இதைப் பற்றிச் சிறிதளவேனும் சிந்தித்துப் பார்க்க வேண்டாமா? அப்படிச் சிந்தித்தால் நாம் இறைவனுக்குக் கட்டுப்பட வேண்டியதன் முக்கியத்துவத்தை விளங்கிக் கொள்ளலாம். இதோ, இறைவனே இறைமறையில் கேள்வியைத் தொடுக்கிறான் பாருங்கள்.

وَلِلّٰهِ يَسْجُدُ مَنْ فِى السَّمٰوٰتِ وَالْاَرْضِ طَوْعًا وَّكَرْهًا وَّظِلٰلُهُمْ بِالْغُدُوِّ وَالْاٰصَالِ

வானங்களிலும், பூமியிலும் உள்ளவை விரும்பியோ, விரும்பாமலோ அவனுக்கே பணிகின்றன. அவற்றின் நிழல்களும் காலையிலும், மாலையிலும் பணிகின்றன. (குர்ஆன் 13:15)

اَوَلَمْ يَرَوْا اِلٰى مَا خَلَقَ اللّٰهُ مِنْ شَىْءٍ يَّتَفَيَّؤُا ظِلٰلُهٗ عَنِ الْيَمِيْنِ وَالشَّمَآئِلِ سُجَّدًا لِّلّٰهِ وَهُمْ دٰخِرُوْنَ

அல்லாஹ் படைத்த ஒவ்வொரு பொருளையும் அவர்கள் பார்க்கவில்லையா? அதன் நிழல் வலம் மற்றும் இடப்புறங்களில் சாய்ந்து அல்லாஹ்வுக்கு விழுந்து பணிகின்றன. (குர்ஆன் 16:48)

சூரியன் எந்தத் திசையில் இருக்கிறதோ அதற்கு எதிர் திசையில் நிழல் தோன்றும். இதன் மூலம் நிழல் ஏற்படுவதற்கு சூரியனே காரணமாக இருக்கிறது என்பதை புரிந்து கொள்ளலாம். இப்படியான திட்டமிடப்பட்ட கச்சிதமான ஏற்பாட்டிற்குச் சொந்தக்காரன் ஏக இறைவன் ஒருவனே என்பதை எவரும் மறுக்க இயலாது.

அந்த இறைவன் நினைத்தால் நிலைமாறும் விதத்தில் வைத்திருக்கும் நிழலை நிலையானதாக ஆக்கிவிடுவான் என்பதையும் நாம் நினைவில் கொள்ள வேண்டும். அவன் நினைத்தால் ஒரே நேரத்தில் ஒட்டுமொத்த உலகையும் நிழல் கொண்டதாக மாற்றமுடியும். இன்னும் ஏன்? ஒரு குறிப்பிட்ட இடத்தில் மட்டும் நிழலை நிரந்தரமாக வைக்கவும் முடியும்.

اَلَمْ تَرَ اِلٰى رَبِّكَ كَيْفَ مَدَّ الظِّلَّ ۚ وَلَوْ شَآءَ لَجَـعَلَهٗ سَاكِنًا ۚ ثُمَّ جَعَلْنَا الشَّمْسَ عَلَيْهِ دَلِيْلًا ۙ

உமது இறைவன் எவ்வாறு நிழலை நீட்டுகிறான் என்பதை நீர் அறியவில்லையா? அவன் நினைத்திருந்தால் அதை நிலையானதாக ஆக்கியிருப்பான். சூரியனை அதற்கு ஆதாரமாக ஆக்கினோம். பின்னர் அதை நம்மளவில் இலேசாகக் கைப்பற்றிக் கொள்வோம். (குர்ஆன் 25:45)

وَظَلَّلْنَا عَلَيْكُمُ الْغَمَامَ وَاَنْزَلْنَا عَلَيْكُمُ الْمَنَّ وَالسَّلْوٰى‌ؕ كُلُوْا مِنْ طَيِّبٰتِ مَا رَزَقْنٰكُمْ‌ؕ وَمَا ظَلَمُوْنَا وَلٰـكِنْ كَانُوْآ اَنْفُسَهُمْ يَظْلِمُوْنَ

(பனூ இஸ்ராயீல் சமுதாயமாகிய) உங்கள் மீது மேகத்தை நிழலிடச் செய்தோம். மன்னு, ஸல்வா (எனும் உண)வை உங்களுக்கு இறக்கினோம். “நாம் உங்களுக்கு வழங்கிய தூய்மையானவற்றை உண்ணுங்கள்!” (என்று

கூறினோம்). அவர்கள் நமக்குத் தீங்கிழைக்கவில்லை. மாறாக தமக்குத் தாமே தீங்கிழைத்துக் கொண்டனர்.
(குர்ஆன் 2:57)

உஹுதுப்போர் தினத்தன்று உறுப்புக்கள் சிதைக்கப்பட்ட நிலையில் என் தந்தையின் உடல் கொண்டு வரப்பட்டு நபி (ஸல்) அவர்களின் முன்னிலையில் வைக்கப்பட்டது. அவ்வுடல் மீது ஒரு துணி போர்த்தப்பட்டிருந்தது.
அப்போது நான் சென்று அந்தத் துணியை நீக்கி (என் தந்தையை)ப் பார்க்க நாடினேன். எனினும் என் கூட்டத்தினர் என்னைத் தடுத்துவிட்டனர்.
நான் மீண்டும் சென்று துணியை நீக்க முனைந்தேன். மீண்டும் என் கூட்டத்தினர் என்னைத் தடுத்துவிட்டார்கள்.
அப்போது நபி (ஸல்) அவர்கள் (பிரேதத்தை தூக்கும்படி) கட்டளையிட்டார்கள்.
(பிரேதம்) தூக்கப்பட்டபோது ஒரு பெண் சப்தமாக அழுவதைக் கேட்ட நபி (ஸல்) அவர்கள் "யார் அந்தப் பெண்?" என்று கேட்டார்கள்.
"அம்ருடைய மகள்" என்றோ அல்லது "அம்ருடைய சகோதரி" என்றோ (கூடியிருந்தோர்) கூறினர். நபி (ஸல்) அவர்கள் "நீ ஏன் அழுகிறாய்?" அல்லது "நீ அழ வேண்டாம்" என்று கூறிவிட்டு,
"பிரேதம் தூக்கப்படும்வரை வானவர்கள் தங்களின் இறக்கைகளை விரித்து அதற்கு நிழல் கொடுத்துக் கொண்டிருந்தார்கள்" என்று கூறினார்கள். ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி),
நூல்: புகாரி-1293 , (1244), (2816), (4080), முஸ்லிம் (4875), (4876)
எல்லா நிழல்களும் கண்ணுக்குத் தெரிவதில்லை. கண்ணுக்குத் தெரியாத நிழல்களும் உண்டு என்பதை இந்நிகழ்வு மூலம் அறிய முடிகிறது.

## அளவிலா அருட்கொடைகள் 18

( இரவின் அருட்கொடை )

புவியின் குறிப்பிட்ட ஓர் இடத்தில் சூரிய ஒளி இல்லாதிருக்கும் காலப்பகுதி இரவு அல்லது இருட்சூழ்வு எனப்படும். இருள் சூழ்ந்திருக்கும் நேரமே இரவு.
இது சூரியன் மறைவுக்கும்,அடுத்த சூரியோதயத்துக்கும்
இடைப்பட்ட காலமாகும் . ஓர் இரவும் ஒரு பகலும் கொண்டது ஒரு நாள் ஆகும்.
பூமி தனது அச்சில் சுழலும்போது ஒரு குறிப்பிட்ட நேரத்தில் ஒரு பாதி சூரியனுக்கு எதிர்ப்பக்கத்தில் இருப்பதனால், அப் பக்கத்துக்கு சூரிய ஒளி கிடைப்பதில்லை. இதன் காரணமாக அப் பகுதி இருட்டாக இருக்கும். அத்தகைய பகுதிகளில் அந்த நேரம் இரவாக இருக்கும்.
ஒரு முஃமினுடைய வாழ்வில் இரவு நேரம்
اَمَّنْ هُوَ قَانِتٌ اٰنَآءَ الَّيْلِ سَاجِدًا وَّقَآٮِٕمًا يَّحْذَرُ الْاٰخِرَةَ وَيَرْجُوْا رَحْمَةَ رَبِّهٖ قُلْ هَلْ يَسْتَوِى الَّذِيْنَ يَعْلَمُوْنَ وَالَّذِيْنَ لَا يَعْلَمُوْنَ اِنَّمَا يَتَذَكَّرُ اُولُوا الْاَلْبَابِ
எவர் மறுமையை அஞ்சி தன் இறைவனுடைய ரஹ்மத்தை ஆதரவு வைத்து இராக்காலங்களில் ஸுஜூது செய்தவராகவும், நிலையில் நின்றவராகவும் வணங்குகிறாரோ அவர் (நிராகரிப்பவரைப் போல்) ஆவாரா? (நபியே!) நீர் கூறும்: "அறிந்தோரும், அறியாதோரும் சமமாவார்களா? நிச்சயமாக (இக் குர்ஆனைக் கொண்டு) நல்லுபதேசம் பெறுவோர் அறிவுடையவர்கள் தாம்." (குர்ஆன் : 39:9)

வேதம் கொடுக்கப்பட்டவர்களில் சிலரிடமிருந்த நற்பண்பு :
لَـيْسُوْا سَوَآءً  مِنْ اَهْلِ الْكِتٰبِ اُمَّةٌ قَآٮِٕمَةٌ يَّتْلُوْنَ اٰيٰتِ اللّٰهِ اٰنَآءَ الَّيْلِ وَ هُمْ يَسْجُدُوْنَ
அவர்கள் அனைவரும் ஒரே மாதிரியான (தீய)வர்கள் அல்லர். வேதத்தையுடைய இவர்களில் (நல்லோரான) ஒரு கூட்டத்தினர் இருக்கின்றனர். அவர்கள் இரவு காலங்களில் அல்லாஹ்வுடைய வசனங்களை ஓதி நின்று சிரம் பணிந்து வணங்குகின்றனர்.
(அல்குர்ஆன் : 3:113)

"நிச்சயமாக இரவில் ஒரு நேரமுண்டு! ஒரு முஸ்லிமான மனிதர் சரியாக அந்த நேரத்தில் இம்மை, மறுமை தொடர்பான எந்த நன்மையை வேண்டினாலும் அதை இறைவன் அவருக்கு வழங்காமல் இருப்பதில்லை. இது ஒவ்வொரு இரவிலும் நடக்கின்றது என்று நபி (ஸல்) அவர்கள் கூற நான் கேட்டுள்ளேன் "
- ஜாபிர் (ரலி) நூல்: முஸ்லிம்
இச்செய்தியுனூடாக இரவு நேரத்தைப் பிரார்த்தனைக்கு தகுந்த நேரமாக, பிரார்த்தனைகள் அங்கிகரிக்கப்படும் நேரமாக அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் நமக்கு அடையாளப்படுத்துகின்றார்கள். எனவே இரவு நேரத்தில் அதிகமாக நாம் இறைவனிடம் கையேந்த வேண்டும்.
அல்லாஹ் முஃமின்களின் பண்பாகச் சொல்கிறான்:

تَتَجَافَىٰ جُنُوبُهُمْ عَنِ الْمَضَاجِعِ يَدْعُونَ رَبَّهُمْ خَوْفًا وَطَمَعًا
(இரவு நேரத்தில்) அச்சத்துடனும், எதிர்பார்ப்புடனும் தமது இறைவனைப் பிரார்த்திக்க அவர்களின் விலாப்புறங்கள் படுக்கைகளிலிருந்து விலகும். ( குர்ஆன் 32:16 )
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
இரவின் பாதி நேரம் அல்லது மூன்றில் இரு பகுதி நேரம் கழியும்போது உயர்வும் வளமும் மிக்க இறைவன் கீழ் வானிற்கு இறங்கிவந்து, "கேட்பவர் எவரும் உண்டா? அவருக்குக் கொடுக்கப்படும்.

பிரார்த்திப்பவர் எவரும் உண்டா? அவரது பிரார்த்தனை ஏற்கப்படும். பாவமன்னிப்புக் கோருபவர் எவரும் உண்டா? அவருக்கு மன்னிப்பு அளிக்கப்படும்” என்று அதிகாலை புலரும்வரை கூறுகின்றான்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
முஸ்லிம் : 1388.
நிச்சயமாக முத்தகீன்கள் (சுவனத்தின்) சோலைகளிலும், நீரூற்றுக்களிலும் இருப்பார்கள். அவர்கள் தமது இரட்சகன் அவர்களுக்கு கொடுத்ததை (திருப்தியுடன்) எடுத்துக்கொண்டார்கள். அவர்கள் அதற்கு முன்னர் நன்மை செய்வோராகவே இருந்தார்கள். இரவில் சொற்ப நேரமே தூங்கக்கூடியோராக இருந்தார்கள். மேலும் அவர்கள் ஸஹர் நேரங்களில் பாவமன்னிப்புக் கோருவார்கள்'
(குர்ஆன் தாரியாத் 15-18)
'(நபியே...) சூரியன் (உச்சியை விட்டு) சாய்ந்ததில் இருந்து இரவின் இருள் சூழும் வரையில் (ளுஹர்), அஸ்ர், மஃரிப், இஷா ஆகிய தொழுகைகளையும் பஜ்ர் தொழுகையையும் நிறைவேற்றுவீராக.... நிச்சயமாக பஜ்ர் தொழுகையானது (மலக்குகள்) சமூகமளிக்கும் தொழுகையாக உள்ளது. மேலும் நீர் உமக்கு உபரியாக இரவில் (அல் குர்ஆனை ஓதுவதன்) மூலம் தஹஜ்ஜத் தொழுவீராக. (இதன் மூலம்) உமது இறைவன் 'மகாமம் மஹ்மூத்' எனும் புகழ்பெற்ற இடத்தில் உம்மை எழுப்பப்போதுமானவன்'. (அல்குர்ஆன் இஸ்ரா- 78-79)

## அளவிலா அருட்கொடைகள் 19

(மூக்கின் அருட்கொடை )



"மூர்த்தி சிறிதாயினும் கீர்த்தி பெரிது என்பதற்கு ஏற்ப மூக்கு சிறிய உறுப்பாக இருந்தாலும் செய்யும் பணிகள் ஆச்சரியம் தருபவை.
மூக்கானது உள்ளே இழுக்கும் காற்றை நுரையீரலில் அனுப்புவதற்குள் மூன்று முக்கிய பணிகளை செய்கிறது.
முதலாவதாக மூக்கின் உள்ளே இருக்கும் மயிரிழைகள்(சிலியா) காற்றில் உள்ள தூசிகளை வடிகட்டும் பணியை செய்கின்றன.
இரண்டாவதாக மூக்கின் உள்ளே சுரந்தரபடி இருக்கும் திரவம் (சளி) உள்வரும் காற்றினை உடலுக்கு ஏற்ற வெப்ப நிலைக்கு சீராக்குகிறது.
மூன்றாவதாக சளித்திரவத்தில் உள்ள 'லைசோாைஸம்' என்ற என்சைம் சில வகைகிருமிகளை கொல்லும் செயலை செய்கிறது.
மேலும் மூக்கானது சுவாசத்து அடுத்தபடியாக வாசனையை உணரும் திறனையும் பெற்று உள்ளது. பத்தாயிரம் வகையான வாசனைகளை மூக்கினால் அறிய முடியும் என்பது அறிவியலாளர்கள் கூறும் உண்மையாகும்.
பேச்சுக்கும் மூக்குக்கும் சம்பந்தம் இருக்கிறது என்று சொன்னால் உங்களுக்கு ஆச்சரியமாக இருக்கும்.
ஜலதோஷம் பிடித்து, மூக்கு அடைத்துக்கொள்ளும் சமயங்களில் நீங்கள் ஏன் சரியாகப் பேசச் சிரமப்படுகிறீர்கள் என்று யோசித்தால், அந்த உண்மை விளங்கும்.

நாம் எழுப்பும் சப்த ஒலிக்குச் சரியான வடிவம் கொடுக்க, தொண்டையின் குரல்வளையம் மட்டும் போதாது... மூக்கும் அதிலுள்ள சைனஸ் அறைகளும் கூட முக்கியம்தான். இவையெல்லாம் சேர்ந்துதான் நாம் எழுப்பும் சப்த ஒலிக்குச் சரியான அதிர்வுகள் தந்து இனிமையைச் சேர்க்கின்றன.
மூக்கை அழுத்திப் பிடித்துக்கொண்டு ங, ஞ, ந, ம போன்ற எழுத்துக்களை உச்சரித்துப் பாருங்கள்...அவற்றின் ஒலி வடிவம் சரியாகவே வெளிவராது. மூக்கின் ஒத்துழைப்பு இல்லாமைதான் அதற்குக் காரணம்.
மூக்கின் இன்னொரு பயன் கண்ணீருக்கான கழிவுநீர் கால்வாயாகச் செயல்படுவது. தாங்கமுடியாத துக்கத்தாலோ அல்லது வேறு காரணங்களாலோ கண்ணீர் பெருகும்போது, அதன் ஒரு பகுதி மூக்கு வழியாகவும் வெளியேறும். விழியோரம் இருக்கும் ஒரு துளை, மூக்கோடு தொடர்புகொண்டிருக்கிறது.
துக்க வீடுகளில் கூடி அழும் பெண்கள் அடிக்கடி மூக்கைச் சிந்தியபடி இருப்பார்கள். அவர்கள் சிந்துவது சளி அல்ல... இப்படி வெளியேறும் கண்ணீர்தான்.

அடுத்து, காது .காது, மூக்கு , தொண்டை இம் மூன்றும் ஒன்றோடொன்று தொடர்புள்ளவை. காது சரியாகப் கேட்பதற்குத் தொண்டையும் ஒரு வகையில் உதவி செய்கிறது.
தவிர, காது, மூக்கு , தொண்டை இந்த மூன்றுமே காற்றை அடிப்படையாகக் கொண்டு இயங்கும் ஒரு முக்கூடல் எக்ஸ்பிரஸ்.
சுவாசமும் வாசனையையும் உணர்வது மட்டுமே அல்ல மூக்கின் செயல் , வெவ்வேறு செயல்களில் மறைமுகமான தோழமை தந்து நம்மை இயக்கிக் கொண்டிக்கிறது மூக்கு
மூக்கு முகத்தின் மையத்தில் பிரதானமாக அமைந்து ஒட்டுமொத்த முகத்துக்கே பொலிவைத் தருகிறது. அது அழகியல் அம்சங்களில் அது இன்றியமையாத பாகமாக இருப்பதால்தான் நடிகைகள் மூக்குகளில் பிளாஸ்டிக் சர்ஜரி செய்து கொண்டு மேலும் மேலும் அழகுப்படுத்திக் கொள்கிறார்கள் .
சைத்தான் நம் மூக்கின் வழியே ஊடுருவி மூச்சிக் காற்றோடு இரத்தத்தில் கலந்து விடுகிறான்
"நீங்கள் தூக்கத்திலிருந்து எழுந்து உளூச் செய்தால் மூன்று முறை (நீர் செலுத்தி) நன்கு மூக்கைச் சிந்தி (தூய்மைப்படுத்தி)க் கொள்ளுங்கள். ஏனெனில், நீங்கள் (தூங்கும் போது) மூக்கின் உட்பகுதிக்குள் ஷைத்தான் தங்கியிருக்கிறான். என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்கள் ( புஹாரி 3295. )
இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்:
சிறிய கண்களும் சிவந்த முகங்களும் குட்டையான (சப்பை) மூக்குகளும் கொண்ட துருக்கியர்களுடன் நீங்கள் போர் புரியாத வரை இறுதிநாள் ஏற்படாது. புகாரி : 2928

அளவிலா அருட்கொடைகள் 20
(ஆடைகள் என்னும் அருட்கொடைகள் )



இன்னும் வெப்பத்திலிருந்து உங்களைப் பாதுகாக்கக்கூடிய சட்டைகளையும் உங்களுடைய போரில் உங்களை பாதுகாக்கக்கூடிய கவசங்களையும் உங்களுக்காக அமைத்தான்; நீங்கள் (அவனுக்கு) முற்றிலும் வழிப்பட்டு நடப்பதற்காக, இவ்வாறு தன் அருட்கொடையை உங்களுக்குப் பூர்த்தியாக்கினான்.
(குர்ஆன் : 16:81)
ஸராபீல் என்பது ஸிர்பால் என்பதன் பன்மைச் சொல், பஞ்சு, பருத்தி. உரோமம், மிருகங்களின் முடி முதலியவற்றால் செய்யப்படும் உடையைக் குறிக்கும்.
தவிர, போரில் அணியும் கவசம், உருக்குச் சட்டை ஆகியவற்றிற்கும் இப்பதம் பயன்படுத்தப்படுகிறது.
முற்காலத்திய போர்களிலெல்லாம் அம்பு, வாள், ஈட்டி, வேல் முதலிய ஆயுதங்களை மனிதர்கள் நேருக்கு நேராக நின்று பயன்படுத்தி வந்தனர்.

இவ்வாயுதங்களால் தங்களுக்குத் துன்பம் நேராதபடி தடுக்க கவச குண்டலங்களைத் தலையிலும் அணிந்து கொள்வர். இவைகள் உருக்கால் செய்யப்பட்ட தொப்பியும் சட்டையுமாகும். இவற்றிற்கு அப்புறம் கேடயங்களையும் வைத்துக் கொள்வர்.
இவ்வாறான உருக்குச் சட்டைகளை முதன் முதலாகத் தயார் செய்து உபயோகித்தவர் ஹளரத் தாவூது அலைஹிஸ்ஸலாம் அவர்களாவார்கள்.
உருக்கு இரும்பு முதலியவைகளெல்லாம் ஹளரத் தாவூது (அலை) அவர்களுக்கு மெழுகைப் போலிருந்தன. மற்றவர்கள் மெழுகைத் தங்கள் விருப்பம் போல் செய்து வந்தது போல, ஹளரத் தாவூது (அலை) அவர்கள் உருக்கை தங்கள் விருப்பம் போல் வளைக்கவும் முறுக்கவும் ஒடிக்கவும் செய்து வந்தார்கள்.

தற்கால நவீன காலத்தில் பாதுகாப்பான உடைகளாக ஃப்ரான்கோயிஸ் ஃப்ரெஷ்நியூ என்ற பிரெஞ்சு இன்ஜினீயரே இந்த மழை உடையைக் கண்டுபிடித்ததாகச் சொல்கிறார்கள். 1748 ல் அவர் ரப்பரை பூட்ஸ்களிலும் கோட்டுகளிலும் பயன்படுத்தி 'வாட்டர்ப்ரூஃப்' ஆக மாற்றுவது பற்றி ஒரு உரை நிகழ்த்தினார்.
நீர் புகாத துணியைக் கண்டுபிடித்து, பெரிய அளவில் ரெயின் கோட் உற்பத்தியைத் தொடங்கியவர் சார்லஸ் மெக்கின்டாஷ் என்ற ஆங்கிலேயரே.
மெக்கின்டாஷின் வாட்டர்ப்ரூஃப் முறை எளிமையானது. இரண்டு காட்டன் துணிகளுக்கு நடுவே மெல்லிய ரப்பர் வைத்து தைத்துவிட்டார். ரப்பரை மென்மையாக்க கொஞ்சம் டர்பன்டைன் சேர்த்திருந்தார். பின்னர் ரெயின் கோட்டாக மாற்றுவதற்கு டெய்லரிடம் கொடுத்தார். அவையே "மெக்கின்டாஸஸ்" (சுருக்கமாக மேக்ஸ்) என்றழைக்கப்படும் ரெயின் கோட்கள்.
முதல் மெக்கின்டாஸஸ் உடைகள் மழையிலிருந்து காத்தன. மழை நின்று வெயில் அடித்தாலோ, உள்ளே வியர்த்துக் கொட்டும். ரப்பர் இளகி உடலோடு ஒட்டும்.
மழைக்காலத்தில் பஸ்ஸில் உட்கார்ந்தால், எழுந்திருப்பது சிரமம். ரப்பரின் வாசனை எல்லோர் மூக்குகளையும் துளைக்கும். உடையின் எடையும் அதிகம். அளவும் பெரிது. ஒரு கூடாரமே நடப்பதுபோல இருக்கும். இந்தப் பிரச்னைகளையும் சார்லஸ் குட்இயர்தான் தீர்த்து வைத்தார்.
இன்று பெரும்பாலான மழை உடைகள் வேதிப்பொருட்களிலிருந்தே தயாராகின்றன. செயற்கை ரப்பர் கூட பயன்படுத்தப்படுகிறது.

ரெயின்கோட் பட்டன்கள் இவை ஆயிரக்கணக்கான ஆண்டுகளுக்கு முன்பே பெயர் தெரியாத முன்னோரால் கண்டுபிடிக்கப்பட்டுவிட்டன. 17-ம் நூற்றாண்டு வரை பட்டன்கள் அலங்காரத்துக்காகவும், அலுவலகங்களில் 'பேட்ஜ்' ஆகவுமே பயன்பட்டன!"
விண் உடை அல்லது விண்வெளி உடை (space suit) என்பது வெப்பமான மற்றும் உறை கடுங்குளிர் போன்ற வேறுபட்ட வெப்ப நிலை நிலவும் வெற்றிடமான விண்வெளியில் மனிதனின் உடல் வெப்பநிலையைச் சீராகப் பாதுகாக்க வடிவமைக்கப்பட்ட ஒரு ஆடையாகும்.
மேலும் இது விண்ணிலிருந்து பாய்ந்துவரும் விண் தூசுகளில் இருந்தும் விண்வெளி வீரரின் உடலைப் பாதுகாக்கும் வகையிலும் வீரரின் உடலுக்குத் தேவைப்படும் காற்று, நீர், வெப்பம் ஆகியன கிடைக்கும் விதத்திலும், வேர்வை, சிறுநீர், கரியமிலவாயு ஆகியவற்றை அகற்றும் விதத்தில் விண் உடை வடிவமைக்கப்படுகிறது.

வான்வெளியில் உள்ளவர்களோடும், தரைக் கட்டுப்பாட்டு நிலையத்தில் உள்ளவர்களோடும் பேசுவதற்குச் சிறப்புக் கருவிகள் இந்த உடையில் பொருத்தப்பட்டதாக இருக்கும்.
இவ்வுடையின் முதுகில் சுவாசிக்கத் தேவைப்படும் ஆக்சிஜன் தொட்டி இருக்கும்.விண் உடையானது ஒவ்வொரு விண்வெளி வீரருக்கும் அவரது உடல் அமைப்புக்கு ஏற்ப பிரத்யேகமாகத் தயாரிக்கப்படும்.
பெரும்பாலும் ஒவ்வொருவருக்கும் மூன்று உடைகள் தயாரிக்கப்படும் இதில் பயிற்சிக்கு ஒன்று, விண்வெளிப் பயணத்தின்போது ஒன்று, மாற்று உடை ஒன்று ஆகும்.
விண் உடைகளின் எடை புவியைப் பொறுத்தவரை மிகக் கூடுதலாக இருக்கும், ஆனால் இவை ஈர்ப்பு விசை இல்லாத விண்வெளியில் பயன்படுதும்போது எடை தெரியாது. விண்வெளி உடை ஒன்றின் சராசரி விலை மூன்று கோடிவரை ஆகும்."

புற ஊதா கதிர்களின் இந்த தீங்கு விளைவிக்கும் விளைவுகளிலிருந்து தோல் எல்லா விலையிலும் பாதுகாக்கப்பட வேண்டும். அதை பாதுகாக்க, பல்வேறு UV (ultra Vilet) கதிர் வீச்சின்
தீங்கு விளைவிக்கும் கதிர்களில் இருந்து நம் சருமத்தைப் பாதுகாக்க, இப்போதெல்லாம் பல்வேறு UV பாதுகாப்பான துணிகள் உள்ளன.
டெக்ஸ்டைல் ஃபினிஷிங்கின் குறிக்கோள், சூரிய கதிர்வீச்சின் விளைவுகளிலிருந்து சருமத்தைப் பாதுகாப்பதாகும், இது ஒப்பீட்டளவில் சமீபத்திய இலக்காகும், ஏனெனில் ஜவுளி எப்போதும் பொருத்தமான பாதுகாப்பை வழங்காது. பலவிதமான தாக்கங்களுக்கு எதிராக எக்ஸைல்ஸின் குறிப்பிட்ட பாதுகாப்பு பண்புகள் அதிகரித்து வருகின்றன.

சில புற ஊதா பாதுகாப்பு ஜவுளிகள் மற்றும் ஆடைகள் சுவாசிக்கக்கூடிய நெசவுகள், ஈரப்பதத்தை உறிஞ்சும் மற்றும் குளிர்ச்சி மற்றும் காற்றோட்டத்திற்கு உதவும் பாக்டீரியா, வைரஸ் எதிர்ப்பு குணங்களுடன் உருவாக்கப்படலாம், ஏனெனில் சூரிய பாதுகாப்பு ஆடைகள் பொதுவாக வெப்பமான மற்றும் ஈரப்பதமான நிலையில் அணியப்படுகின்றன.
இது போன்று இரசாயனங்களிலிருந்தும் ,நோய்க்கிருமிகள், வைரஸ்களிடமிருந்தும், அணுகதிர் வீச்சியிலிருந்தும் அந்தந்த தொழிலுக்கேற்ற வெவ்வேறு வகையான ஆடைகள் வடிவமைக்கப்படுகின்றன
இதுபோன்ற நவீன பாதுகாப்பு ஆடைகள் அத்தனைமே இறைவனின் மாபெரும் அருட்கொடைகளாகும் .

**அளவிலா அருட்கொடைகள் 21**
(வாகனங்கள் என்னும் அருட்கொடைகள் )



وَّالْخَيْلَ وَالْبِغَالَ وَالْحَمِيْرَ لِتَرْكَبُوْهَا وَزِيْنَةً وَيَخْلُقُ مَا لَا تَعْلَمُوْنَ
இன்னும், குதிரைகள், கோவேறு கழுதைகள், கழுதைகள் ஆகியவற்றை நீங்கள் ஏறிச்செல்வதற்காகவும், அலங்காரமாகவும், (அவனே படைத்துள்ளான்;) இன்னும், நீங்கள் அறியாதவற்றையும் அவன் படைக்கிறான். (குர்ஆன் : 16:8)

ஹளரத் ஆதம் அலைஹிஸ்ஸலாம் அவர்களுக்கு முன்னதாக குதிரைகள் காற்றினால் சிருஷ்டிக்கப்பட்டன. அவைகள் காட்டு மிருகங்களின் இனத்திலேயே சேர்ந்திருந்தன. முதன் முதலாக ஹளரத் இஸ்மாயீல் அலைஹிஸ்ஸலாம் அவர்கள்தான் இதனை வசப்படுத்தி சவாரி செய்தார்கள். குதிரைக்கு ஈரல் இல்லை. எனவேதான் அது வேகமாக ஓடுகிறது. அது மனிதனைப் போல் கனவு காணும் சுபாவமுள்ளது.
"கோதுமையை கல் நீக்கி சுத்தம் செய்து குதிரைக்கு ஒருவன் கொடுத்தால், அவன் கொடுத்த ஒவ்வொரு கோதுமைக்கும் ஒரு நன்மையை இறைவன் எழுதுகிறான்" என்பதாக ஹதீஸில் கூறப்பட்டிருக்கிறது.
"நாயனே! என்னை நீ ஆதமுடைய மக்களிடம் கீழ்ப்படியச் செய்து, எனது உணவையும் அவர்கள் கைவசத்தில் கொடுத்து விட்டாய். ஆதலின், அவர்களுடைய மனைவி மக்களைப் பார்க்கினும் என் மீது அவர்களுக்கு அதிகப் பிரியம் இருக்குமாறு செய்வாயாக" ஒவ்வொரு இரவிலும் குதிரை பிரார்த்திக்கிறது என்பதாக ஹதீஸில் கூறப்பட்டிருக்கிறது.

உலுல் அஸ்மான நபிமார்களது வாகனமாக அது இருக்கிறது. குதிரையின் நெற்றி ரோமத்தில் நன்மை இருக்கிறது என நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறியதாக ஹதீஸில் கூறப்பட்டிருக்கிறது.
.நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களிடம் ஏழு குதிரைகள் இருந்தன. கஸ்பு, முர்த்தஜிஸ், லஹீப், லஸ்ஜாஸ், விர்து. திர்பு, ஸப்ஹத் என்பன அக்குதிரைகளின் பெயர்களாகும்.
தங்களுக்கு எந்த மிருகத்தின் மீது பிரியம் என ஹளரத் கில்ரு அலைஹிஸ்ஸலாம் அவர்களை, ஹளரத் மூஸா அலைஹிஸ்ஸலாம் அவர்கள் வினவியதற்கு "குதிரை, கழுதை, ஒட்டகை" என்று கூறினார்கள்.
ஏனெனில் குதிரை (உலுல் அஸ்மான நபிமார்களுக்கு வாகனமாக இருந்திருக்கிறது. ஹளரத் ஹூத். ஸாலிஹு ஷுஐபு, முஹம்மது (அலைஹிமுஸ்ஸலாத்து வஸ்ஸலாம் ஆகிய நபிமார்களது வாகனமாகவும் குதிரை இருந்திருக்கிறது.
கழுதை நபி ஈஸா (அலை) நபி உஜைர் (அலை) ஆகிய நபிமார்களது வாகனமாக இருந்திருக்கிறது.
நவீன கால வாகனங்கள் நம்மை பிரமிக்கவைக்கிறது .இன்னும், நீங்கள் அறியாதவற்றையும் அவன் படைக்கிறான். (குர்ஆன் : 16:8) என்கிற இறை வசனம் எத்தனை நிதர்சனமானது என்பதை நம்மால் உணர முடிகிறது .

பறக்கும் கார்
வருங்காலத்தில் ரோட்டில் ஓட்டிய கார்கள் வானில் பறக்கும் கார்களாக உருமாற்றம் செய்யப்படுகிறது ஹளரத் ஆதம் அலைஹிஸ்ஸலாம் அவர்களுக்கு முன்னதாக குதிரைகள் காற்றினால் சிருஷ்டிக்கப்பட்டன என்பதாக இக்கட்டுரையின் 2- வது பாராவில சொல்லப்பட்ட செய்தி இப்போது அது பறக்கும் காராக பவனி வருகிறது .
"அமெரிக்காவில் உள்ள கலிஃபோர்னியாவின் சான் மேடியோவில் உள்ள ட்ராப்பர் பல்கலைக்கழகத்தில் நடந்த நிகழ்வில், அலெஃப் என்ற ஒரு ஸ்டார்ட்-அப் நிறுவனம் தாங்கள் வடிவமைத்துவரும் பறக்கும் கார் எவ்வாறு புறப்படும் என்ற விவரங்களை வெளியிட்டது.

முதல் உண்மையான பறக்கும் காரை 'மாடல் ஏ' என்ற பெயரில் அலெஃப் நிறுவனம் உருவாக்கிவருகிறது. இந்த வண்டி செங்குத்தாக புறப்படும் திறனுடன் கூடிய நேர்த்தியான எலெக்ட்ரிக் கார் போல இருக்குமென்றும், இதனால் 110 கிலோ மீட்டர் தூரத்திற்குப் பறக்க முடியும் .
மாடல் ஏ' காரின் வெளித் தோற்றம் வலைப்பின்னல் போல இருக்கும். அதன் வழியாக உட்புகும் காற்று உட்பகுதியில் அமைந்திருக்கும் உந்துவிசையை ஏற்படுத்தும் சாதனத்தினுள் நுழையும். அது கார் உயர உதவும்.இதை மட்டுமே பயன்படுத்தி, இறக்கைகள் இல்லாமல் பறக்க அதிக ஆற்றல் தேவைப்படும்.
"நீங்கள் உங்கள் ஃபோனில் அழைத்தால் ஒரு பறக்கும் கார் உங்களை அழைத்துக்கொண்டு வேறு இடத்தில் இறக்கிவிடும். வேறு மாதிரி சொல்வதென்றால் நீங்கள் ட்ரோன் டாக்சியை வரவழைக்கிறீர்கள்"
இந்தக் காரை 2025ஆம் ஆண்டுக்குள் சந்தைக்கு கொண்டுவர வேண்டும் என்பது அலெஃப் நிறுவனத்தின் இலக்காக உள்ளது
அடுத்து பறக்கும் ரயில்
501 கிலோமீட்டர் வேகத்தில் செல்லும் அதிவிரைவு புல்லட் ரயிலின் சோதனை ஓட்டம் வெற்றிகரமாக ஜப்பானில் நடத்தப்பட்டது.
மேக்னட்டிக் சக்தியில் இயங்குவதால் அதிவிரைவாக செல்லும் இந்த ரயிலுக்கு சக்கரங்கள் கிடையாது என்பது குறிப்பிடத்தக்கது.
சோதனை ஓட்டமாக, டோக்கியோவில் இருந்து நாகோயா என்ற நகருக்கு சென்ற புல்லட் ரயிலில் பயணம் செய்வதால், 40 முதல் 90 நிமிடங்கள் வரை பயண நேரத்தை மிச்சப்படுத்தலாம். கிட்டத்தட்ட $64 பில்லியன் செலவில் இந்த புல்லட் ரயில் வல்லுனர்களால் வடிவமைக்கப் பட்டுள்ளது.
இதுபோன்று எல்லா வாகனங்களும் தொழில்நுட்பத்திற்கு ஏற்றவாறு உருமாற்றம் அடைந்து கொண்டே வருகின்றன
இனி வரும் எதிர்காலங்களில் சூரிய மண்டலத்தையும் தாண்டி ஆகாய கங்கை பால்வீதியையும் தாண்டி பயணிக்கும் வாகனக் கலங்களில் மனிதன் பயணிப்பான் என்பதாக குர்ஆனே கொல்கிறது

يٰمَعْشَرَ الْجِنِّ وَالْاِنْسِ اِنِ اسْتَطَعْتُمْ اَنْ تَنْفُذُوْا مِنْ اَقْطَارِ السَّمٰوٰتِ وَالْاَرْضِ فَانْفُذُوْا لَا تَنْفُذُوْنَ اِلَّا بِسُلْطٰنٍ
மனித, ஜின் கூட்டத்தார்களே! நீங்கள் வானங்கள் பூமியின் எல்லையைக் கடந்து சென்றுவிட உங்களால் கூடுமாயின் அவ்வாறு சென்று விடுங்கள். ஆயினும், (அவைகளை ஆட்சி புரியக்கூடிய) மிகப்பெரும் பலத்தைக் கொண்டே தவிர நீங்கள் செல்ல முடியாது.
(அல்குர்ஆன் : 55:33) அப்போது கூட குர்ஆன் வசனம் இப்படித்தான் ஓதப்படும்
இன்னும், நீங்கள் அறியாதவற்றையும் அவன் படைக்கிறான். (குர்ஆன் : 16:8)

## அளவிலா அருட்கொடைகள் 22
( பாதைகளும் அவனின் அருட்கொடையே )




وَاَلْقٰى فِى الْاَرْضِ رَوَاسِىَ اَنْ تَمِيْدَ بِكُمْ وَاَنْهٰرًا وَّسُبُلًا لَّعَلَّكُمْ تَهْتَدُوْنٌ
உங்களுடன் பூமி அசையாதிருப்பதற்காக அவன் அதன் மேல் உறுதியான மலைகளை நிறுத்தினான்; இன்னும் நீங்கள் சரியான வழியை அறி(ந்து செல்)வதற்காக அவன் ஆறுகளையும், நீங்கள் நேரான வழியறிவதற்காகப் பாதைகளையும் அமைத்தான். (குர்ஆன் : 16:15)
"அவர்கள் நேரான வழியில் செல்லும் பொருட்டு, நாம் விசாலமான பாதைகளையும் அமைத்தோம் ".
(குர்ஆன் : 21:31)
“அதில் நீங்கள் செல்வதற்காக விசாலமான பாதைகளையும் அமைத்தான்” (என்றும் போதித்தார்). (குர்ஆன் : 71:20)
வருங்கால உலகம்: எல்லா சாலைகளும் சுரங்கப்பாதையானால் எப்படியிருக்கும்?
சாலைகள் நகரங்களை மாசுபடுத்துகின்றன. பொது இடங்களையும் ஆங்காங்கே துண்டுகளாக இருக்கும் வாழ்விடங்களையும் விழுங்கிவிடுகின்றன. அத்தகைய சாலைகளை நிலத்தடி சுரங்கச் சாலைகளாக மாற்ற முடியுமா? அது இந்தப் பிரச்னையைத் தீர்க்க உதவுமா?

1863-ஆம் ஆண்டில், தெருக்களில் இருக்கும் போக்குவரத்தைக் குறைக்கும் முயற்சியில், உலகின் முதல் சுரங்கப் பாதையான மெட்ரோபோலிட்டன் ரயில்பாதையை லண்டன் திறந்தது. அதற்கு இருபது ஆண்டுகளுக்கு முன்னர், தேம்ஸ் நதிக்குக் கீழே உலகின் முதல் நதிக்கு அடியிலான சுரங்கப்பாதை கட்டமைக்கப்பட்டது. இது பாதசாரிகள் மற்றும் சுற்றுலா பயணிகளிடையே பிரபலமானது.

தொடக்கத்தில், லண்டனில் நிலத்தடிப் பாதைகள், மேற்பரப்பிலிருந்து சற்று கீழாகத் தோண்டப்பட்டு, அதற்கு மேலே மூடிய வகையில், தடங்கள் உருவாக்கப்பட்டன. ஆனால், தொழில்நுட்பம் மேம்பட்டதும் ரயில்கள் நீராவியிலிருந்து மின்சாரத்திற்கு மாறியதும், பாதைகளும் நிலத்தடியில் இன்னும் ஆழமாகச் சென்றன. இப்போது லண்டன்வாசிகளின் கால்களுக்குக் கீழே இருக்கும் நிலத்திலுள்ள பாதைகள், டியூப் பாதைகளின் விரிவான வலையமைப்புடன் மக்களை வேகமாகவும் திறன்மிக்க முறையிலும் கொண்டு செல்கின்றன. ரயில்கள், மின்சார லைன்கள், குழாய்கள், கேபிள்கள், சாக்கடைகள் ஆகியவற்றோடு, சாலைகளையும் நிலத்தடிக்குக் கொண்டுபோக சிலர் நீண்டகாலமாக விரும்புகிறார்கள்.

சாலைகளை நிலத்தடிக்கு மாற்றுவதால் ஏற்படும் தாக்கம் என்ன?
உலகளவில் 64 மில்லியன் கிமீ சாலைகள் உள்ளன. குறிப்பாக வளரும் நாடுகளில், உலக மக்கள் தொகை அதிகரித்து வருமானம் உயரும்போது, அதிக மக்கள் கார்களை வாங்க முடியும் எனக் கணிக்கப்பட்டுள்ளது. 2040-ஆம் ஆண்டுக்குள் சாலையில் இரண்டு பில்லியன் கார்கள் ஓடும் என்று கணிக்கப்பட்டுள்ளது. மொத்த போக்குவரத்தின் அளவு 50 சதவீதத்திற்கும் மேல் அதிகரிக்கும்.
போக்குவரத்து நெரிசல் மக்களின் அதிகமான நேரத்தை உறிஞ்சுகிறது. சராசரி அமெரிக்க ஓட்டுநர் ஒவ்வோர் ஆண்டும் 54 மணி நேரத்தை போக்குவரத்து நெரிசலில் உட்கார்ந்தபடி வீணாக்குகிறார். மேலும், எரிபொருள் நுகர்வு, கரிம உமிழ்வு, காற்று, ஒலி மாசுபாடு ஆகிய சூழலியல் விளைவுகளை அதிகரிப்பதும் இதில் நிகழ்கிறது.
உலகின் ஒவ்வொரு சாலையையும் நிலத்தடிக்கு மாற்றினால் என்ன நடக்கும்?
நகரமயமாக்கல், ஏற்றத்தாழ்வு மற்றும் காலநிலை நெருக்கடி அதிகரித்து வரும் நேரத்தில், மேற்பரப்பு சாலைகள் இல்லையெனில் உலகில் ஏற்படக்கூடிய மிக உடனடியான தாக்கங்களில் ஒன்று, உலகம் முழுவதும் பெரியளவிலான நிலப்பகுதிகள் விடுவிக்கப்படும்.

கிராமப்புறங்களில், காட்டுயிர்களுக்கான வாழ்விடங்களுக்கும் கரிம கிரகிப்புக்கும் வேளாண்மை செய்யவும் அதிக நிலம் கிடைக்கும். அது, நிலப்பரப்புகள் துண்டாவது என்ற சாலைகளால் ஏற்படக்கூடிய இன்னொரு பிரச்னையையும் குறைக்கும்.
காட்டுயிர்களுக்கு, சாலைகள் ஒரு தடையாகச் செயல்படலாம். அவற்றைத் தம் கூட்டத்திடமிருந்தோ அவற்றின் இரைகளிடமிருந்தோ பிரிக்கலாம். சாலை இணைப்புகளின் உலகளாவிய விரிவாக்கம், காட்டுயிர்களில் வேட்டையாடி உயிரினங்களின் பாதுகாப்பிற்கான முயற்சிகளை அச்சுறுத்துகிறது.
மேலும், ஊடுருவும் சாலைகளால் காடுகள் துண்டாக்கப்படுவதால், காடுகளின் விளிம்புகளின் அளவை அதிகரிப்பதால், அங்கு மரங்களின் இழப்பு அதிகமாக உள்ளது. இது, அதிகமான கரிம உமிழ்வுக்கும் வழிவகுக்கிறது.

அமெரிக்க வேளாண்மை துறையைச் சேர்ந்த சூழலியல் ஆராய்ச்சி நிபுணரான அலிசா காஃபின், சாலைகள் நீரோட்டத்திலும் குறுக்கிடுவதாகக் கூறுகிறார். தம்பா மற்றும் மியாமியை இணைக்கும் சாலையான டாமியாமி டி ரெயிலை அவர் சுட்டிக்காட்டுகிறார். இது எவர்க்லேட்ஸ் என்ற பகுதிக்கான நீரோட்டத்தைத் தடுப்பதன் மூலம் பேரழிவு தரும் விளைவுகளை ஏற்படுத்தியது.
நீரோட்டம் தடைபடுவது, காட்டுத்தீ அதிகரிக்கவும் தாவரங்களும் காட்டுயிர்களும் அதனால் பாதிக்கப்படவும் காரணமாகின்றன. "பாதிப்புகள் என்னவாக இருக்கும் என்பதைப் புரிந்துகொள்ளாமல் ஒரு சாலை எப்படி கட்டமைப்படுகிறது என்பதற்கு இதுவோர் உதாரணம்," என்கிறார் காஃபின்.
2050-இல் 70% மக்கள் நகரங்களில் வசிக்கலாம்

மனித-காட்டுயிர் எதிர்கொள்ளல் மற்றொரு பெரிய பிரச்னையாக உள்ளது.
கார்டிஃப் பல்கலைக்கழக விரிவுரையாளரான சாரா பெர்கின்ஸ், பிரிட்டன் சாலைகளில் கொல்லப்படும் காட்டுயிர்களைக் கண்காணிக்கும் குழு ஒவ்வோர் ஆண்டும் விபத்தில் உயிரினங்கள் இறப்பது குறித்த சுமார் 10,000 தகவல்களை தருகிறது

சாலைகளை நிலத்தடியில் அமைப்பது, "காட்டுயிர்-வாகன எதிர்கொள்ளலைக் குறைக்கும்," என்று பெர்கின்ஸ் கூறுகிறார். அதோடு, ஒலி மற்றும் ஒளி மாசுபாடு இதன் மூலம் அகற்றப்படும்போது, சுற்றியிருக்கும் காட்டுயிர்களின் நடத்தைகளிலும் அது நல்ல தாக்கத்தை ஏற்படுத்தும் என்கிறார்.
நகரங்கள் எப்படி மாறும் என்று உங்களால் கற்பனை செய்ய முடிகிறதா?" என்று கேட்கிறார், பொறியியல் நிறுவனமான ஆரேகானின் (Aurecon) சுரங்கப்பாதை திட்ட இயக்குநர் டாம் அயர்லேண்ட். "நீங்கள் நகர மையத்திற்கு புத்துயிர் அளிக்க விரும்பினால், சாலைகளை பாதசாரிகளாக ஆக்க வேண்டும். இது மரங்கள், பூங்காக்கள், நடைபாதை கஃபேக்கள் மற்றும் பிற பொது வசதிகளுக்கு இடமளிக்கும்," என்கிறார்

இதில் வாகன நிறுத்துமிடமும் நிலத்தடியில் அமைக்கப்படும். சிறு பூங்காக்கள், பொது இருக்கைகள் அல்லது சிறு சிறு விளையாட்டு மைதானங்கள் எனப் பலவும் அமைக்கப்படும்.
இந்நிலையில், கான்க்ரீட் ஊடுருவாத பசுமையான இடங்கள் அதிக தண்ணீரை உறிஞ்சி, வெள்ளத்திற்கு எதிராக அதிகப் பாதுகாப்பை வழங்குகிறது. மரங்கள் பகல் நேரத்தில் வெப்பநிலையை 40% வரை குறைக்கலாம்.
லண்டனில் உள்ள வெஸ்ட்மின்ஸ்டர் பல்கலைக்கழகத்தின் போக்குவரத்து பேராசிரியரான ரேச்சல் ஆல்ட்ரெட், "மக்களோடு மோட்டார் போக்குவரத்து கலப்பது இயல்பாகவே பிரச்னைக்குரியது.
சாலைப் போக்குவரத்து விபத்துகளால் ஒவ்வோர் ஆண்டும் சுமார் 1.3 மில்லியன் மக்கள் உயிரிழக்கின்றனர். இது ஐந்து முதல் 29 வயதுக்கு உட்பட்டவர்களின் மரணங்களுக்கு முக்கியக் காரணமாக உள்ளது.
போக்குவரத்து நெரிசலைத் தீர்க்குமா?
நிலத்தடியில் வாகனங்களை ஓட்டுவது சுமூகமான அனுபவமாக இருக்கலாம். ஏனெனில், மக்கள் அதிக வெப்பம், குளிர் அல்லது மழை போன்ற வானிலைகளைத் தவிர்க்க முடியும். "உங்கள் இருப்பை மிகவும் திறமையாக நிலத்தடியில் வடிவமைக்க முடியும். இதன்மூலம், பொதுவாக நிலத்தடியில் நாம் உருவாக்கும் உள்கட்டமைப்பு நீண்ட காலம் நீடிக்கலாம்,"
நிலத்தடி கட்டமைப்பு நிலநடுக்கத்தால் ஏற்படும் பாதிப்புகளைக் குறைப்பதாகவும் கண்டறியப்பட்டுள்ளது. 2010-ஆம் ஆண்டு சிலியில் ஏற்பட்ட பெரிய பூகம்பம் சான்டியாகோவின் மேற்பரப்பில் மோசமான பாதிப்புகளை ஏற்படுத்தியது. ஆனால், நிலத்தடி மெட்ரோ ரயில் கட்டமைப்புகளுக்குச் சேதமே ஏற்படவில்லை என்று ப்ரோயெர் கூறுகிறார்.
ஆனால், காலநிலை மாற்றத்தால் அதிகரிக்கக்கூடிய வெள்ளப்பேரிடர் ஏற்படும்போது, அது நிலத்தடி கட்டமைப்புகளில் அதிக பாதிப்புகளை ஏற்படுத்தலாம். ஆகையால் மக்கள் நிலத்தடி கட்டமைப்புகளுக்கு நுழையும் மற்றும் வெளியேறும் பகுதிகள் வழக்கத்தைவிட சில மீட்டர் மேலாக அமைக்கப்பட வேண்டும் என்கிறார் ப்ரோயெர். மேற்பரப்பில் சாலைகளே இல்லாமல் இருப்பது இத்தகைய சூழ்நிலைகளில் மக்களை அபாயத்தில் தள்ளலாம்.

புதைபடிம எரிபொருளால் இயங்கும் லட்சக்கணக்கான வாகனங்கள் நிலத்தடியில் இயங்குவது பெரும் அபாயங்களைக் கொண்டு வரும். "விபத்துகளின்போது தீ விபத்து ஏற்படும் அபாயம் மிக முக்கியமானது, அத்தகைய சூழல்களில் புகை தானாகவே வெளியேறாது.
"புகையை வெளியேற்றுவதற்கான வழிகளையும் சிந்திக்க வேண்டும். சுரங்கப்பாதைகளில் இருந்து விபத்தான வாகனங்களை அகற்றுவதற்கு, அவசர சேவைகள் மக்களைச் சென்றடைவதற்குப் போதுமான அகலம் இருக்க வேண்டும்," என்கிறார் காரெட்.
மேலும் அவர், "காற்று மாசுபாடு மேற்பரப்பில் குறையும். ஆனால், அங்கிருந்து நிலத்தடிக்கு மாற்றப்படும். அந்த மாசுபாடுகளை வடிகட்டுவதற்கான, காற்றோட்டத்திற்கான வழிகளைச் சிந்திக்க வேண்டும்," என்றும் கூறுகிறார்.

நிலத்தடி சாலைகளை அமைக்கும் செலவைச் சமாளிக்க முடியுமா?
ஒருவேளை நிலத்தடி சாலைகளை அமைப்பதற்கு முதன்மைத்துவம் அளித்தால், அதற்கான செலவுகளை நம்மால் சமாளிக்க முடியுமா?
எவ்வளவு செலவாகும் என்பது இடத்தைப் பொறுத்தது. சீனா, இந்தியா மற்றும் தென்கிழக்கு ஆசியாவில் ஒரு மைல் நிலத்தடி சுரங்கப்பாதைக்கு ஆகும் செலவு, 100 முதல் 200 மில்லியன் டாலர். ஐரோப்பாவில் 250 முதல் 500 மில்லியன் டாலர். அமெரிக்காவில் 1.5 முதல் 2.5 பில்லியன் டாலர்.
பாஸ்டனின் பிக் டிக் திட்டத்தில், 12 கி.மீ நீளத்தில் நிலத்தடி சாலை அமைக்க 15 ஆண்டுகள் ஆனது. அதற்கான செலவு 20 பில்லியன் டாலருக்கும் அதிகமானதாகக் கணிக்கப்படுகிறது.
சுரங்கம் உருவாக்கும் தொழில்நுட்பம் மேம்பட்டிருந்தாலும், வேகம் குறைவாகவும் கடினமானதாகவும் உள்ளது. இயந்திரம், பொருட்கள் மற்றும் உழைப்புக்கான செலவு மட்டுமல்ல, அனுமதி, சூழலியல் தாக்க மதிப்பாய்வுகள் போன்றவற்றுக்கும் செலவாகும்.

நிலத்தடி நிலப்பரப்பைத் தவறாக மதிப்பிடுவது அதிக பாதிப்புகளை ஏற்படுத்தும். கட்டுமானங்கள் முடிவதோடு செலவுகள் நிற்காது. காற்றோட்டம், மின் விளக்குகள் வெளிப்புறத்துடன் ஒப்பிடுகையில் 24 மணிநேரமும் இயங்க வேண்டும், அதற்கு அதிக ஆற்றல் தேவைப்படும், அதேநேரத்தில் ஆபரேட்டர்கள் தீ போன்ற அபாயங்களையும் கண்காணிக்க வேண்டும் என்று அயர்லேண்ட் கூறுகிறது.
அதிக திறன் கொண்ட ரயில் அல்லது பேருந்தைப் பயன்படுத்துவது, தனியார் வாகனங்களைக் குறைக்க உதவும். அதன்மூலம் பொதுப் போக்குவரத்து அந்த இடங்களை நிரப்புவதால், சாலை அதிக இடவசதி கொண்டதாக நெரிசல் குறைவாக இருக்கும் என்றும் அவர் கூறுகிறார்.
எல்லா சாலைகளும் சுரங்கப்பாதையானால் அது அவனின் அருட்கொடையே .

**அளவிலா அருட்கொடைகள் 23**
( பிண்டத்திலுள்ள நீரும், நிலமும் அண்டத்திலும் உள்ளது )

***மண்ணான பிண்டத்தை மண்ணில் படைக்குமுன்னே மண்ணைப் படைத்தவனைத் தேடடா!***
***சித்தர் குணங்குடி மஸ்தானின் பாடல் மனிதன் மண்ணால் படைக்கப்பட்டவன் என்பதைத் தெளிவுபடுத்துகிறது.***
***சித்தர் பாடல் ஒன்று ,***
***'கூறுவேன் தேகமது என்னவென்றால்***
***குருபரனே எலும்புதனைக் காலாய் நாட்டி***
***மாறுபடா எலும்புக்குத் துவாரமிட்டு***
***வன்மையுடன் நரம்பினால் வலித்துக் கட்டி***
***தேறுதலாய் இரத்தமதை உள்ளே ஊற்றி***
***தேற்றமுடன் அதன் மேலே தோலை மூடி***
***ஆறுதலாய் வாய்வுதனை உள்ளடக்கி***
***அப்பனே தேகமென்ற கூறுண்டாச்சே'***

பிண்டத்தை மண்ணால் உருவாக்குவதற்கு நீரின் துணையும் அவசியம் தேவைப்படுகின்றது. ஆயிரத்து நானூறு ஆண்டுகளுக்கு முன்பே குர்ஆன் இப்படிச் சொல்கிறது.
"நிச்சயமாக நாம் (ஆதி) மனிதனைக் களி மண்ணிலிருந்துள்ள சத்தினால் படைத்தோம் " (குர்ஆன் 23:12 )
" இன்னும் அவன்தான் மனிதனை நீரிலிருந்து படைத்து பின்னர் அவருக்கு வம்சத்தையும் சம்பந்தங்களையும் ஏற்படுத்துகின்றான்" ( குர்ஆன் 25:54 )
இவ்விரு வசனங்களும் மனிதன் மண் மற்றும் தண்ணீரின் கூட்டுக் கலவையினால் உருவாக்கப்பட்டவன் என்பதைத் தெளிவுபடுத்துகின்றது.
குர்ஆனில் நீர் பரப்பை குறிக்கும் "அல் பஹ்ரு " வார்த்தை 33 இடங்களிலும், நிலப் பரப்பை குறிக்கும் "அல் பர்ரு " என்ற வாரத்தை12 இடங்களிலும் அல்லாஹ் பயன்படுத்தி உள்ளான்
இரண்டையும் கூட்டினால் 33+12=45
அதாவது கடலின் சதவீதம்
33/45*100 = 73 .333 சதவீதம்
நிலத்தின் சதவீதம்
12/45*100= 26.666 சதவீதம்
நிலமும், நீரும் சேர்ந்து (33 + 12 = 45 ) ஆகும். 45-ல் 33 என்பது 73.333 சதவீதம் ஆகும். 45-ல் 12 என்பது 26.666 சதவீதம்.
இன்றைய ஆய்வாளர்கள் மனிதனின் உடலில் 73 விழுக்காடு நீரும், 26 விழுக்காடு மற்ற பொருட்களும் அதாவது வேறுபட்ட மூலக்கூறுகள் அமைந்த மண்ணும் உள்ளது என்று கூறுகின்றனர்.
இவ்வுலகின் மொத்தப் பரப்பில் தண்ணீர்தான் மிகப் பெரிய பரப்பை ஆக்கிரமித்து உள்ளது என்பதையும் இங்கு கருத்தில் கொள்ள வேண்டும்.

உலகின் மொத்தப் பரப்பில் தண்ணீர் 73.333 விழுக்காடும், நிலம் 26.666 விழுக்காடும் என்பது இன்றைய அறிவியல் கண்டுபிடிப்பாகும். சார்டிலைட் மூலம் கணித்தது பூமியின் கடல் வெளி 73 % நிலப் பரப்பு 26 % எனபதாக விஞ்ஞானம் கூறுகிறது
திருக்குர்ஆனில் இந்த அண்டமும் பிண்டமும் குறித்த அற்புத விளக்கம் ஆச்சரியம் தருகிறதல்லவா !
அண்டத்தில் உள்ளது பிண்டத்திலும் உள்ளது என்பதை வடமொழியில் "யத் அண்டே த பிரம்மாண்டே " – என்பர்.
இதை கிரேக்கர்கள் மைக்ரோ காஸ்ம் (உடல்), மேக்ரோகாஸ்ம் (பூமி அல்லது பிரபஞ்சம்) என்றனர்.
உபநிஷதங்களும், "ஒன்றே எல்லாவற்றிலும் உள்ளது, எல்லாம் ஒன்றில் உள்ளது" — என்று கூறின.
தத்துவ ஞானிகளும் விஞ்ஞானிகளும் : "எல்லாம் ஒன்றுடன் ஒன்று தொடர்புடையன. ஒன்றை ஒன்று சார்ந்துள்ளன. அவைகளைத் தனியாகப் பிரிக்கமுடியாது"என்றனர்

## அளவிலா அருட்கொடைகள் 24

( கால்நடைகளின் அருட்கொடைகள் )



"உலகம் உருவானது மனிதர்களுக்காக இறைவன் பூமியில் உள்ள அனைத்தையும் உங்களுக்காகப் படைத்தான் என்று 16-12 ஆவது குர்ஆன் வசனம் கூறுகிறது.
கால்நடைகளின் பயனைப் பகர்கிறது 16-5 ஆவது வசனம், "மனிதர்களே கால்நடைகளை உங்களுக்காக படைத்து இருக்கிறான். அவற்றில் குளிரைத் தடுக்கும் பொருள்களும் பல பயன்களும் உள்ளன.''
கால்நடைகள் மனித பயன்பாட்டிற்காக படைக்கப் பட்டவை. மனித தேவைகளில் முதலிடம் பெறுவது உணவு, உடை, உறைவிடம். கால்நடைகளின் உரோம உடைகள் குளிரைத் தடுப்பன என்பதை எடுத்துரைக்கிறது இந்த வசனம்.

முற்காலத்தில் கால்நடைகளின் விலங்குகளின் தோல்கள் கூடாரங்களுக்குக் கூரை ஆயின. கூடாரத்தைச் சுற்றி சுற்று சுவர் போல் கட்டியும் பயன்படுத்தினர் அக்கால மக்கள். இக்காலத்திலும் காட்டுவாசிகள் இவ்வாறு பயன்படுத்துவதைப் பார்க்கலாம்.
கால்நடைகள் நிலத்தை உழ, நீர் இறைக்க பயன்படுகின்றன. மேலும் கால்நடைகள் பால் தருகின்றன. அவற்றின் அசைவ உணவு சத்துள்ளது. மேலும் இக்கால்நடைகளின் பயன்களை விரிவாக விளக்குகிறது 16-80 ஆவது வசனம்.
"அல்லாஹ் உங்களுக்கு நிம்மதி தருவதாக உங்களுடைய வீடுகளை அமைத்தான். கால்நடைகளின் தோல்களால் அவ்வீடுகளை அமைக்க கால்நடைகளைப் படைத்தான். பயணத்திலும் பயணத்தில் தங்கும் சமயத்திலும் எளிதில் சுமந்து செல்ல ஏற்றதாக அவை உள்ளன.

பற்பல பொருள்களைத் தயாரிப்பதற்கு அவற்றின் கம்பளி, உரோமம், முடி ஆகியவற்றையும் உங்களுக்காகப் படைத்திருக்கிறான். அவைகளாலான பொருள்கள் சில காலம் வரை உங்களுக்குப் பயன்படும்''
அல்லாஹ் கால்நடைகளை நீங்கள் சவாரி செய்வதற்காகவும் புசிப்பதற்காகவும் படைத்தான் என்று 40-79 ஆவது வசனம் பகர, 16-66 ஆவது வசனம் கால்நடைகளின் வயிற்றிலுள்ள சாணத்திற்கும் ரத்தத்திற்கும் இடையிலிருந்து அருந்துபவர்களுக்கு இனிய தூய பாலைப் புகட்டுவதாக புகல்கிறது.
வானங்களையும் பூமியையும் படைத்தவன் உங்கள் இனத்திலிருந்தே இணைகளையும் விலங்குகளிலிருந்து அவற்றின் இணைகளையும் படைத்து பரவ செய்ததை 42-11 ஆவது வசனம் செப்ப,
39-6 ஆவது வசனம் உங்களுடைய நன்மைக்காகவே எட்டு வகை கால்நடைகளை ஜோடி ஜோடியாக படைத்திருப்பதைப் பகர்கிறது. எட்டு வகை கால்நடைகள், வெள்ளாடு, வெள்ளாட்டு கிடா, செம்மறியாடு, செம்மறியாட்டு கிடா, பசு, காளை, பெண் ஒட்டகம், ஆண் ஒட்டகம், குதிரைகள், கோவேறு கழுதைகள் ஆகியவற்றை நீங்கள் ஏறி செல்ல உங்களுக்கு அலங்காரமாக படைத்திருக்கிறான் அல்லாஹ் என்று 16- 8 ஆவது வசனம்,

கழுதை, கோவேறு கழுதை, குதிரை வாகனங்களாகப் பயன்படுவதைப் பகர்கிறது. கணினி யுகமான அலை வரிசையில் ஆர்ப்பரிக்கும் இக்காலத்திலும் மலைப் பகுதிகளில் இக்கால்நடைகள் வாகனங்களாகப் பயன்படுத்தப்படுகின்றன. இணைகளைப் படைத்து நீங்கள் சவாரி செய்கிற விலங்குகளையும் கப்பல்களையும் உங்களுக்காக அல்லாஹ் ஆக்கியதை அறிவிக்கிறது 43-12 ஆவது வசனம்.
நீரில் செல்ல கப்பல்களைக் கட்ட மனிதனுக்குக் கற்பித்த அல்லாஹ் நிலத்தில் செல்ல கால்நடைகளைப் படைத்திருக்கிறான்.

வட அரேபியாவில் ஹிஜாஸின் மத்திய பாகங்களில் வாழ்ந்த தமூத் இனத்தினர் ஸாலிஹ் நபியிடம் கற்பாறையிலிருந்து ஒட்டகம் தோன்ற இறைவனிடம் இறைஞ்ச வேண்டினர். ஸாலிஹ் நபி இறைவனை இறைஞ்ச நிறை கர்ப்பமாய் தோன்றிய ஒட்டகம் குட்டியையும் ஈன்றது.

ஒருநாள் விட்டு ஒருநாள் கிணற்று நீரை ஒட்டகத்திற்கு ஒதுக்கிவிட்டு அதேமுறையில் ஒருநாள் விட்டு ஒருநாள் தமூத் இனத்தினர் நீரைப் பயன்படுத்த ஒப்பு கொண்டனர். ஒட்டகம் அதன்முறை வரும் நாளில் ஒரே உறிஞ்சில் கிணற்று நீர் முழுவதையும் குடித்துவிடும். இதனால் பொறாமை கொண்ட தமூத் கூட்டத்தினர் ஒட்டகத்தை வெட்டினர். இறை கட்டளையை மீறிய தமூத் இனம் நிலநடுக்கத்தில் அழிந்ததை அறிவிக்கிறது இந்த வசனம். யூசுப் நபி வரலாற்றைக் கூறும் வான்மறை வசனங்களில் ஒன்றான 12-13 இல் ஓநாய் ஆடுகளைச் சாப்பிடுவது குறிப்பிடப் படுகிறது.

மூசா நபி காலத்தில் தௌராத் வேதம் கூறுவதை ஏற்காமல் புறக்கணித்து பிறவழி செல்வோரின் வஞ்ச பொருளில் வாஞ்சை கொண்டு நிச்சயமில்லா பிச்சை பொருளைப் பெற்ற பல் ஆம்பின் பாவூராவைப் பழித்துரைக்கும் 7-176 ஆவது வசனம் பல் ஆம்பின் பாவூராவை நாயுடன் ஒப்பிடுகிறது.
அடித்து துரத்தினால் நாக்கைத் தொங்கவிட்டு கொண்டு ஓடும் நாய் தாக்காமல் விட்டுவிட்டாலும் நாக்கை தொங்கவிட்டுக் கொண்டு அலையும். இவ்வுதாரணம், இப்பொழுது குர்ஆன் கூறுவதைப் புறக்கணிப்பவர்களுக்கும் பொருந்தும்.
62-5 ஆவது வசனம் தௌராத் வேதத்தை ஏற்று கொள்ளாது அவ்வேதத்திற்கு மாற்றமாய் நடந்தவர்களைக் கழுதையோடு ஒப்பிடுகிறது. அதன்மீது ஏற்றப்பட்ட பொருள் ஏடாயினும் ஓடாயினும் கூடாயினும் அவற்றின் அருமையை அறியாது பொருளைப் புரியாது சுமந்து செல்லும் கழுதையை போன்றவர்கள் ஆகமத்தை அறியாது திரிவோர்.
குர்ஆனைப் புறக்கணித்து பிறழ்ந்து நடப்போருக்கும் இக்கருத்து பொருந்தும் என்று தப்ஸீர் காஜின், அஹ்ஸனுத்தப்ஸீர் ஆகிய குர்ஆன் விளக்க நூல்களில் குறிப்பிடப்படுகிறது.
இத்தகு பயன்தரும் கால்நடைகளைக் கவனிக்க கண்ணிய நபி (ஸல்) அவர்களின் அறிவுரைகள், கால்நடைகளின் முகத்தில் அடிக்க வேண்டாம். முகத்தில் அடையாள சூடு போட வேண்டாம் அறிவிப்பவர்- ஜாபிர் (ரலி) நூல்- முஸ்லிம்.

நீங்கள் செழிப்பான காலத்தில் பயணம் செய்தால் ஒட்டகங்களுக்கு அவற்றின் உணவு பங்கைப் பூமியிலிருந்து கொடுங்கள். பஞ்ச காலத்தில் நீங்கள் பயணம் செய்வீர்களாயின் அவற்றை வேகமாக ஓட்டிச் செல்லுங்கள். அறிவிப்பவர்- அபூஹுரைரா (ரலி) நூல்- முஸ்லிம்.
கால்நடைகள் வருந்தாது கவனமாக காப்பாற்றி பொருந்தும் வகையில் பயன் பெறுவோம். நயமிகு அல்லாஹ்வின் நல்லருளைப் பெறுவோம் (மு.அ. அபுல் அமீன் பதிவிலிருந்து)

## அளவிலா அருட்கொடைகள் 25

وَاِنْ تَعُدُّوْا نِعْمَةَ اللّٰهِ لَا تُحْصُوْهَا اِنَّ اللّٰهَ لَـغَفُوْرٌ رَّحِيْمٌ
அல்லாஹ்வின் அரு(ள்க)ளை நீங்கள் கணக்கிட்டால் அவற்றை உங்களால் எண்ணிட முடியாது. நிச்சயமாக அல்லாஹ் மிக்க மன்னிப்பவனும், பெரும் கிருபையுடையவனாகவும் இருக்கின்றான்.
(குர்ஆன் : 16:18)

நபி அவர்களின் தோழர் ஹழ்ரத் உமர் அவர்கள் சிலரோடு மதினா நகரில் நடந்து சென்று கொண்டிருந்தார்கள். அப்போது தெருவில் ஒரு மனிதன் படுத்துக்கிடந்தான். அவன் தொழுநோயாளியாகவும், அழுக்கேறிய ஆடைகளோடும், உண்ண உணவில்லாமல், கை, கால் இல்லாத முடமாக இருந்தான். ஹழ்ரத் உமர் அவர்கள் அவனருகே நெருங்கி தங்கள் தோழர்களைப் பார்த்து "இந்த மனிதனிடம் ஏதாவது இறைவனின் அருட்கொடை இருக்கிறதா?' எனக் கேட்டார்கள்.
அதற்கு "இவனிடம் அவ்வாறு யாதென்றும் தென்படவில்லையே' என்று தோழர்கள் பதிலளித்தனர். அப்போது, ஹழ்ரத் உமர் அவர்கள், "இம்மனிதன் சிரமமில்லாமல் மல, ஜலம் கழிக்கிறானே! அது அல்லாஹ்வுடைய அருளல்லவா?' என்று கூறினார்கள்.

ஈராக் நாட்டில் கூஃபா என்ற ஊரில் நடுப்பகல் தொழுகையை நிறைவேற்றுவதற்காக ஒருவர் தனது இல்லத்திலிருந்து பள்ளிவாசலை நோக்கி கிளம்பினார். வெயில் சூடு அதிகமாக இருந்தது.
வெயில் சூட்டிலிருந்து பாதுகாத்துக்கொள்ள தனக்கு ஒரு செருப்பு இல்லையே என்ற சிந்தனையோடு முன்னே பார்த்தால், அங்கே மற்றொரு மனிதர் கால்களே இல்லாமல் தவழ்ந்து செல்வதைப் பார்த்து கலங்கி, "இறைவா! நான் உன்னிடம் என் கால்களுக்கு செருப்புக் கேட்டேன்; ஆனால் இங்கே ஒருவர் கால்களே இல்லாமல் இருக்கிறாரே!' என கண்ணீரோடு கூறிக்கொண்டார். நாம் சிந்திக்க வேண்டிய விஷயம்.
இறைவன் நம் எல்லோருக்கும் ஏராளமான சந்தோஷத்தை வழங்கியிருக்கிறான். ஆனால் எது பிறரிடத்தில் உள்ளதோ அதுதான் சந்தோஷம் என நினைத்து நம்மில் உள்ளதை அனுபவிக்கத் தெரியாமல் ஆகிவிடுகிறோம்.

பார்க்கத்தூண்டும் அழகான பறவைகள் மட்டுமே கூண்டில் சிறைப்படுத்தப்படுகிறது. காரணம், அம்மனிதன் அப்பறவையை நேசிக்கிறான். அப்பறவைகளுக்கு விலங்குகளால் ஆபத்து ஏற்பட்டு விடக்கூடாது என வேலியிடுகிறான்.

அதுபோல் சிறுசிறு சிரமங்களும் சோதனைகளும் நம்மை நல்வழிபடுத்தவும், தீமைகளிலிருந்து பாதுகாக்கவுமே தவிர, கஷ்டப்படுத்த அல்ல. மரணம் வரும் வரைதான் சிரமங்களும், சோதனைகளும்! பிறகு எல்லையில்லா இன்பத்தைத் தரும் சுவன பூஞ்சோலையில் எவ்வித கட்டுப்பாடும் இன்றி சுதந்திரமாக பறந்து திரியலாம்.
நற்செயல்கள் உடையவர்கள், பாவம் செய்பவர்களைப் பார்த்து நன்றாக வாழ்கிறார்களோ என்று மனதிற்குள் புலம்பாமல் இறைவன் வகுத்துக்கொடுத்த வாழ்க்கையை சந்தோஷமாக வாழ்ந்துவிட வேண்டும். காக்கையை சிறைப்படுத்தி ரசிப்பதில்லை. கிளிக்கும், அழகான பறவைகளுக்கும்தான் சிறை.
நபி அவர்கள் அருளியுள்ளார்கள்:
இறைநம்பிக்கையாளருக்கு வேதனை, சிரமம், நோய், துன்பம் ஆகியவற்றில் ஏதேனும் வந்து கவலைக்குள்ளாக்கினால், அல்லாஹ் அவருடைய தீமைகளுக்குப் பரிகாரமாக்கி அவற்றை இல்லாமல் ஆக்கிவிடுகிறான்.
நாம் ஒவ்வொரு நிகழ்வுகளையும் அகப்பார்வையோடு பார்த்தால் அதிலுள்ள உண்மைநிலை தெரியவரும். படிப்பினைக்குரிய பல விஷயங்களும் நம்மிலும் நம்மைச் சுற்றிலும் ஏராளமாக உள்ளது. இறைவன் அருளியுள்ள வாழ்க்கையின் இன்ப, துன்பங்களை நல்லுணர்வோடு பொருத்தி அருட்கொடைகளை வழங்கிய இறைவனுக்கு நன்றியுள்ளவர்களாக வாழ்வோமாக! "

اَلَمْ تَرَوْا اَنَّ اللّٰهَ سَخَّرَ لَكُمْ مَّا فِى السَّمٰوٰتِ وَمَا فِى الْاَرْضِ وَاَسْبَغَ عَلَيْكُمْ نِعَمَهٗ ظَاهِرَةً وَّبَاطِنَةً ۗ وَمِنَ النَّاسِ مَنْ يُّجَادِلُ فِى اللّٰهِ بِغَيْرِ عِلْمٍ وَّلَا هُدًى وَّلَا كِتٰبٍ مُّنِيْرٍ
(மனிதர்களே!) வானங்களிலும் பூமியிலும் உள்ளவைகளை நிச்சயமாக அல்லாஹ் உங்களுக்கு வசப்படுத்தித் தந்திருக்கின்றான் என்பதையும், அவன் தன் அருட்கொடைகளை மறைவாகவும், வெளிப்படையாகவும் உங்கள் மீது சொரிந்திருக்கின்றான் என்பதையும் நீங்கள் பார்க்கவில்லையா?
(இவ்வாறெல்லாமிருந்தும்) மனிதர்களில் பலர் யாதொரு கல்வியும், யாதொரு (தர்க்கரீதியான) ஆதாரமும், யாதொரு தெளிவான வேத நூலின் ஆதாரமுமின்றி அல்லாஹ்வைப் பற்றி (வீணாகத்) தர்க்கிக்கின்றனர். (குர்ஆன் : 31:20)

## அதிசயம், அற்புதம், ஆச்சரியம் 1


பல நூறு மில்லியன் ஆண்டுகளுக்கு முன் வாழ்ந்த ஒரு டைனோசர,கொசு ஒண்ணு கடிச்சிரும்.கடிச்ச கொசு ஒரு பிசின்ல (Amber) மாட்டிக்கும்.
தற்காலத்துல அந்த பிசின், மனிதர்கள் கைல கிடைச்சு,அந்த கொசு குடிச்ச டைனோசர் ரத்தத்தை வச்சு டைனோசரோட DNA மூலக்கூற கண்டுபுடிச்சு,விடுபட்டுப்போன மரபணுக்களுக்கு மாற்றாக தவளையோட DNA மூலக்கூற வச்சி நிரப்பி குளோனிங் முறைல பல டைனோசர்கள உருவாக்கி ஜுராசிக் பார்க் ஆரம்பிச்சதா அந்த தாத்தா சொல்லுவார்.
இதெல்லாம் கதையா கேக்க நமக்கு நல்லா இருந்தாலும்,உண்மையாலும் இதெல்லாம் நடக்க சாத்தியம் இல்லனு தோணும்.
ஆனா,இத விட விசித்திரமான சம்பவம் ஒண்ண ரஷ்யா விஞ்ஞானிகள் கண்டுபுடிச்சிருக்காங்க.
பிடெல்லாய்ட் ரோடிபர்ஸ்(Bdelloid rotifers) :
இது நீர்சார்ந்த இடங்களில், கடும் குளிரான தட்பவெட்ப நிலையிலும்,எப்பேர்ப்பட்ட கடும் சூழ்நிலையிலும் வாழும் ஓர் மைக்ரோஸ்கோபிக் விலங்கினம்.
சமீபமாக ஒரு Drilling Rig உதவியுடன் சைபீரியன் பகுதியில் ஆழ்துளை இடப்பட்டு நிலத்தடி உறைபனி மண் ,பூமிக்கு கொண்டுவரப்பட்டு,அதனை ஆராய்ச்சி செய்யும் போது,இந்த உயிரினம் உயிர்த்தெழுப்பப்பட்டது.
ரேடியோ கார்பன் டேட்டிங் மூலம் இந்த நிலத்தடி உறைபனி கிட்டத்தட்ட 24,000 ஆண்டுகள் பழமையானது என்று கண்டுபிடிக்கப்பட்டது.

ஆக,24,000 ஆண்டுகளாக உறைபனியில் உறைந்திருந்த உயிரினம் உயிர்த்தெழுப்பப்பட்டது.
இந்த ரோடிபர்ஸ் போன்று பல உயிரினங்கள் உறைபனி நிலையிலிருந்து உயிர்த்தெழுப்பப்பட்டுள்ளன உதாரணமாக, நேமிடோட்ஸ் எனப்படும் புழு வகையை சார்ந்த உயிரினம்,2018 ஆம் ஆண்டு கிட்டத்தட்ட 30,000 ஆண்டுகளுக்கு பின் உயிர்த்தெழுப்பப்பட்டது.
விசித்திரமான விஷயம் தானே ?
குர்ஆனும் மண்ணிலிருந்து வெளிப்படும் அதிசய மிருகம் பற்றி சொல்கிறது

தாபத்துல் அர்ளு:
உலக முடிவு நாளுக்கு முன் ஏற்படும் அற்புத நிகழ்ச்சிகளில் பூமியலிருந்து தாபத்துல் அர்ளு வெளிப்படுவதும் ஒன்றாகும். இது ஒரு பிராணி என்று கூறப்படுகிறது அவர்களுக்காகப் பூமியிகிறது. இதைப்பற்றி இறைவன் தன்னுடைய திருமறையில்
وَ اِذَا وَقَعَ الْقَوْلُ عَلَيْهِمْ اَخْرَجْنَا لَهُمْ دَآبَّةً مِّنَ الْاَرْضِ تُكَلِّمُهُمْ ۙ اَنَّ النَّاسَ كَانُوْا بِاٰيٰتِنَا لَا يُوْقِنُوْنَ
அவர்கள் மீது (வேதனையுடைய) வாக்கு நெருங்கும் போது, அவர்களுக்காக ஒரு பிராணியை பூமியிலிருந்து நாம் வெளியாக்குவோம்; அது, நிச்சயமாக மனிதர்கள் (யார், யார்) நம் வசனங்களின் மீது உறுதி கொள்ளவில்லையென்று அவர்களுக்குச் சொல்லிக் காண்பிக்கும். (குர்ஆன் : 27:82)

இதைப்பற்றி அண்ணல் நபி (ஸல்) அவர்கள் குறிப்பிடும் பொழுது, "உலக முடிவு நாளின் அடையாளங்களில் முந்தியது, வேளையில் கதிரவன் தான் அடையும் இடத்திலிருந்து உதயமாவதும், மக்கள் மீது ளுஹா வேலையில் (காலை 10 மணியளவில்) தாபத்துல் அர்ளு வெளிப்படுவதுமாகும்.
இந்த இரண்டில் எது முந்திவிடுகிறதோ, அதனை அடுத்து மற்றது வெளிப்பட்டுவிடும்" என்று கூறியுள்ளனர். உலக முடிவு நாள் பற்றிய அடையாளங்களில் விண்ணில் நிகழக் கூடியவற்றில் முதலாவது கதிரவன் மேற்றிசையில் உதயமாவதும், மண்ணில் நிகழக் கூடியவற்றில் முதலாவது தாபத்துல் அர்ளு தோன்றுவதும் ஆகும் என்றும் கூறப்படுகிறது.

ஈஸா (அலை) அவர்களும் முஸ்லிம்களும் கஃபாவைத் தவாஃபு செய்து கொண்டிருக்கும் பொழுது நில நடுக்கம் ஏற்படும். அப்பொழுது ஸஃபா மர்வாவுக்கிடையில் ஸயீ செய்யும் இடத்தைச் சேர்ந்த பகுதியில் பூமி பிளக்கும். அதிலிருந்து இப்பிராணி வெளியேறும்.
இது பூமியிலிருந்து வெளியேற மூன்று நாட்களாகும். இதனை மக்களில் ஒரு கூட்டத்தினர் பார்த்துக் கொண்டு நிற்பர். மற்றொரு கூட்டத் தினர் வணக்கத்தில் ஈடுபட்டிருப்பர்.
இம்மிருகம் அறுபது முழ நீளமுள்ளதாக இருக்கும். இதனுடைய தலை வானை உராயும். இதனுடைய முகம் மனித முகம் போன்றிருக்கும்.
இதனை எவரும் பிடிக்கவோ, இதனிடமிருந்து எவரும் தப்பவோ இயலாது. இது இறை நம்பிக்கையாளரின் நெற்றியில் தன் கையிலுள்ள மூஸா (அலை) அவர்களின் அஸாவால், "இவர் முஃமின்' என்று எழுதும்.
இறை மறுப்பவரின் புருவ மத்தியில் சுலைமான் (அலை) அவர்களின் முத்திரையால், "இவர் காஃபிர்" என்று எழுதி முத்திரையிடும்.

சுலைமான் (அலை) அவர்களின் ஊன்று கோலைக் கரையான் தின்றுவிட்டதன் காரணமாக, அவர்கள் கீழே விழுந்ததைப்பற்றி இறைவன் குறிப்பிடும்பொழுது, "தாபத்துல் அர்ளு அல்லாமல் அவரது இறப்பைப்பற்றி அவர்களுக்கு அறிவிக்கவில்லை” என்று கூறுகின்றான் (34:14). இவ்வசனத்தில் இச்சொல் கரையானுக்குப் பயன்படுத்தப்பட்டுள்ளது.

**அதிசயம், அற்புதம், ஆச்சரியம் 2**
(ஹன்ஸா இன மக்கள் 90 வயதிலும் தாய்மை அடையும் பெண்கள்)



"ஒரு கிராமத்தில் மக்கள் 120 ஆண்டுகள் வாழ்கிறார்கள், அவர்களுக்கு நோய் ஏற்படுவதில்லை என்ற செய்தி ஆச்சரியமாக இருக்கலாம். ஆனால், இது உண்மை தான். அதுவும், பிரச்சனைகள் அதிகம் இருக்கும் பாகிஸ்தானில்தான் அப்படியொரு ஊர் இருக்கிறது

சிறப்பு விஷயம் குறித்தும் பாகிஸ்தானின் பெயர் உலக அளவில் அடிபடுகிறது.. அதுதான் இங்கு குடியேறிய ஹன்சா சமூகத்தின் ஆரோக்கியம் அளிக்கும் ஆச்சரியமே விவாதப் பொருளாக மாறியிருக்கிறது.
ஹன்சா பள்ளத்தாக்கு (Pakistan Valley) ஒரு மலையில் அமைந்துள்ளது. இந்த மலையில் அமைந்துள்ள பல கிராமங்கள் பல ஆயிரம் ஆண்டுகள் பழமையானவை. பல கிராமங்கள் நூறு அல்லது இருநூறு ஆண்டுகள் பழமையானவை.

ஹன்சா சமூகத்தின் வாழ்க்கை முறை தொடர்பான தனித்துவமான வழிகள் காரணமாக பல புத்தகங்களும் எழுதப்பட்டுள்ளன. திரைப்படங்களும் எடுக்கப்பட்டுள்ளன. ஜேம்ஸ் ஹில்டனின் லாஸ்ட் ஹொரைசன் நாவலிலும் ஹன்ஸா பள்ளத்தாக்கு மக்கள் குறிப்பிடப்பட்டுள்ளனர். பின்னர் ஃபிராங்க் காப்ராவின் படமும் இந்தப் புத்தகத்தில் வந்தது.
இங்குள்ள பெண்கள் 60 வயதில் மட்டுமல்ல, சிலர் 90 வயது வரை குழந்தை பெற்றுக் கொள்ளும் தகுதி உடையவர்களாய் இருக்கிறார்கள். இந்த சமூகத்தின் பெண்களின் கர்ப்பம் தரிக்கும் திறன் மிகவும் அதிகமாக உள்ளதாக நோமேடிக் இணையதளம் (Nomadic website) தெரிவித்துள்ளது.
பெண்களே இப்படி என்றால் ஆண்களை பற்றிச் சொல்ல வேண்டுமா? என்ன.. நூற்றியிருபது வயதிலும் படு ஆரோக்கியமாக இருக்கிறார்கள். இதில் அநியாயம் என்னவென்றால், நூறு வயது என்பது இங்கே நடுத்தர வயது. நூறு வயதிலும் இவர்கள் அப்பாவாகிறார்கள்.

சொர்க்கத்தின் ஒரு துண்டாக விளங்கும் ஹன்ஸா பள்ளத்தாக்கின் புருஸீ, குன்ஞ்சவாலி பகுதியில்தான். ஹன்ஸா இன மக்கள் இங்கு அதிகம் வசிக்கிறார்கள். தளராத உடல்... மங்காத வனப்பு. முகத்தில் எப்போதும் புன்னகை. ஊற்றெடுக்கும் உற்சாகம் என்று உலகை ஆச்சரியத்தில் ஆழ்த்தும் இந்த இன மக்களில் ஒருவரைக் கூட இதுவரையில் புற்று நோய் போன்ற கொடிய நோய்கள் தாக்கியதில்லை என்பது மற்றொரு ஆச்சரியம்.
இந்தியாவின் உச்சிக்கு மேலே பனி படர்ந்த காஷ்மீரையும் தாண்டி... காரகோரம் மலைத் தொடர்களின் மடியில் கிடப்பதுதான் ஹன்ஸா பள்ளத்தாக்கு. பாகிஸ்தானின் வடக்கு எல்லையின் கடைசிப் பகுதி. அப்படியே பொடி நடையாக நடந்தால் சீனா, திபெத் போய்விடலாம்.
அவ்வப்போது பறிக்கப்படும் fresh ஆப்பிரிகாட் பழங்களும், படு தூய்மையான மலைக் காற்றும் தான் இவர்களின் என்றும் பதினாறு என்கிற ரகசியத்தின் காரணங்கள். வயிறு புடைக்கச் சாப்பிடுவதற்காக இவர்கள் வாழவில்லை. வாழ மட்டும் தேவையான அவசியமான அளவு மட்டுமே சாப்பிடுகிறார்கள்.
ரசாயன உரங்கள் என்னவென்று இவர்களுக்குத் தெரியாது. இயற்கையாகக் கிடைக்கும் பழங்கள், காய்கறிகள், அத்துடன் கோழி இறைச்சி, பால், வெண்ணெய், சீஸ், முட்டை.. இவைதாம் இவர்களின் உணவு. இவர்கள் மதம் இஸ்லாம்.

பகல் முழுவதும் உழைப்பு. தினமும் இருபது கி. மீ. நடை. உழைப்பின் ஒரு பாகமாக அமைந்துவிட்டதும் இவர்களின் ஒட்டுமொத்த ஆரோக்கியத்தின் இன்னொரு ரகசியம். ஒவ்வோர் ஆண்டும் இரண்டு மாதங்கள் அப்பிரிகாட் பழங்களின் சாற்றினை மட்டும் குடிக்கிறார்கள். வேறு எதையும் உணவாகச் சேர்த்துக் கொள்வதில்லை.
மாவீரன் அலெக்சாண்டர் சந்ததியினர் என்று நம்பும் இவர்களின் ஜீனின் ரிஷி மூலம் கிரீஸ் நாட்டவருடன் ஒத்துப் போகிறது. அலெக்சாண்டர் இந்தியாவிற்குப் படையெடுத்து வந்த போது அவரது படையின் ஒரு பகுதியினர் போரில் காயப்பட்டதினால் ஹன்ஸா பள்ளத்தாக்குப் பகுதியில் விடப்பட்டிருக்கலாம் என்று நம்பப்படுகிறது.

ஹன்ஸா பள்ளத்தாக்கின் இயற்கை அழகு ஸ்விட்சர்லாந்து, காஷ்மீருக்குச் சவால் விடும். அந்த அளவிற்கு கொள்ளை அழகு. ஹன்ஸா பெண்கள் கைகள் கொண்டு வேலைப்பாடுகள் நிறைந்த கண்ணைக் கவரும் வண்ணங்களில் உருவாக்கப்படும் தொப்பிகள் பிரசித்துப் பெற்றவை.

மலைகளிலிருந்து பொங்கி வழியும் ஊற்று நீர்... பனி உருகி ஆறாய் ஓடும் தண்ணீரைக் குடிக்கிறார்கள். ஹன்ஸா பள்ளத்தாக்கில் குளிர் எப்போதும் அதிகம். ஜீரோ டிகிரிதான்... இருந்தாலும் குளிப்பது உறைய வைக்கும் ஜிலீர் குளிருள்ள ஆற்றில்தான். அதனால்தான் இவர்களின் தோல் எப்போதும் மினுமினுத்துக் கொண்டேயிருக்கிறது. இவர்களின் மூலிகைத் தேநீரும் ரொம்ப பிரசித்தம்.
இவர்கள் "புருஸாஷ்கி' என்னும் ஒரு வட்டார மொழியைப் பேசுகிறார்கள். இந்த மொழி உலகில் வேறெங்கும் பேசப்படவில்லை இப்படி ஹன்ஸா என்று ஒரு மனித இனம் பூமியில் இருப்பதே தெரியாமல் இருந்தது.
1984இல் ஹன்ஸா இனத்தைச் சேர்ந்த அப்துல் என்பவர் லண்டன் செல்வதற்காக விமான நிலையத்துக்குச் சென்று இறங்கியிருக்கிறார். அங்கு செக் அவுட் செய்யும் போது அப்துலின் பாஸ்போர்ட் சரிபார்க்கப்பட்டிருக்கிறது. அவர் பார்ப்பதற்கு மிக இளமையாகத் தெரிந்திருக்கிறார்.
ஆனால் விமான நிலையத்தில் பணியாற்றியவர்கள் அவருடைய பாஸ்போர்ட்டை பார்த்து, அதிர்ந்து போனார்களாம். ஏனென்றால் பாஸ்போர்ட்டில் அவர் பிறந்த ஆண்டு 1832 என்று பதிவாகியிருந்தது.
சந்தேகத்தின் பேரில் விசாரணை. மருத்துவ பரிசோதனைக்குப் பிறகு பாஸ்போர்ட்டில் பதிவு செய்யப்பட்டிருக்கும் அப்துல் பிறந்த வருடம் சரியானதுதான் என்று கண்டுபிடிக்கப்பட்டது. இந்த சம்பவம் நடந்த போது அப்துலின் வயது 152.

இந்த சம்பவத்திற்குப் பிறகுதான் ஹன்ஸா இன மக்களின் இளமை, ஆரோக்கியம் பரபரப்பு விஷயம் ஆனது. பல ஆய்வுகளும் மேற்கொள்ளப்பட்டன."
பலதரப்பட்ட மருத்துவர்கள் மற்றும் ஆராய்ச்சியாளர்கள் இந்த சமூகத்துடன் தங்கி, இந்த சமூகத்தினரின் வாழ்க்கை தொடர்பான பிற விஷயங்களைப் பற்றிய தகவல்களை சேகரித்தனர்.
விஞ்ஞானி டாக்டர் ராபர்ட் மெக்ரிசன், பல ஆண்டுகளாக இந்த சமூகத்தினருடன் தங்கி இருந்தார். புற்று நோய், அல்சர், நோயால் பாதிக்கப்பட்ட ஒருவரைக் கூட காணமுடியவிலை என்று அவர் கூறுகிறார்.
இங்குள்ள மண் வளமானதாக இருப்பதால் இங்கு நல்ல விவசாயம் செய்வது கடினம் அல்ல. அவர்களின் உணவில் சுத்தமான கரிம காய்கறிகள் மற்றும் பழங்கள் அதிகம் இடம்பெற்றுள்ளது. இது அவர்களுக்கு அதிக ஆற்றலை அளிக்கிறது. இங்குள்ள தண்ணீரும் மிகவும் சுத்தமாகவும் தூய்மையாகவும் இருக்கிறது என பல ஆரோக்கிய விஷயங்களை அவர் அங்கு தங்கியிருந்த காலத்தில் கண்டறிந்தார்..
இங்குள்ளவர்கள் நீண்ட ஆயுளுடன் வாழ்வது மட்டுமின்றி, முதுமையிலும் உடல் ஆரோக்கியத்துடன் இருப்பார்கள் என மருத்துவர்கள் மேற்கொண்ட ஆய்வில் தெரியவந்துள்ளது. அவர்களின் நோய் எதிர்ப்பு சக்தி அபாரமானது என்று விஞ்ஞானிகளே அதிசயப்படுகின்றனர்.

ஹன்ஸா பள்ளத்தாக்கு மக்களுக்கு இறைவன் கொடுத்த அருட்கொடைகள்
1. வளமான ரிஸ்க் – வாழ்வாதாரம்.

2. அதை அனுபவிப்பதற்கு தேவையான ஆரோக்கியமான நீண்ட ஆயுள்.

3. நோய் நொடிகள், கஷ்டங்கள், துன்பங்கள், ஆபத்துகள் இல்லாத சூழ்நிலை.” ஆகியவைகளாகும்."

ஓர் இறைநம்பிக்கையாளனைப் பொறுத்த வரையில் இம்மூன்றுமே கிடைக்கப் பெறுவது என்பது இறைவன்

வழங்கும் இனிய அருட்கொடைகள் ஆகும்.

ஆகவே தான், பராஅத் இரவு அன்று இம்மூன்று அம்சங்களையும் முன்வைத்து, மூன்று யாஸீன் ஓதி வல்ல ரஹ்மானிடம் முறையிடும் அழகிய முறையை நம் முன்னோர்கள் ஏற்படுத்தி இருக்கின்றார்கள்.

**அதிசயம், அற்புதம், ஆச்சரியம் 3**
(உலகின் மிகப் பெரிய முத்து )




அவர் ஆழ்கடலில் குதித்து முத்துக்குளிக்கும் நபர்தான். ஆனால், அன்றைக்கு என்னவோ தவறாகிவிட்டது. கடலுக்குள் மாட்டிக் கொண்டார். மிகப் பெரிய Tridacna என்ற ராட்சச சிப்பிக்குள் அவரது கால் ஒன்று வசமாகச் சிக்கிக் கொண்டது. மீள முடியவில்லை. நீண்ட நேரம் கழித்து உடன் சென்ற சகாக்கள், அவரது உயிரற்ற உடலை மீட்டுக் கரைக்குக்கொண்டு வந்தார்கள். அவரது காலை அந்தப் பெரிய சிப்பி இறுகக் கவ்வியிருந்தது.
அது பிலிப்பைன்ஸின் பலாவான் தீவிலிருக்கும் ப்ரூக்'ஸ் பாயிண்ட் கடல் பகுதி. அந்தத் தீவில் வாழும் பழங்குடி மக்களின் தலைவர், அந்தச் சிப்பியை அகற்றினார். அதை அகலத் திறந்தார். அதனுள் இருக்கும் சதைப்பகுதி வெட்டி எடுக்கப்பட்டது. உள்ளே பளபளக்கும் வெண்ணிற முத்து ஒன்றைக் கண்டார். அவரது வாய் ஆச்சரியத்தில் சிப்பியைவிட அகலமாகத் திறந்தது. மிகப் பெரிய முத்து. அவ்வளவு பெரிய முத்தை அவர்கள் யாரும் அதுவரை கண்டதில்லை.

அந்த மக்கள் இஸ்லாம் மதத்தைப் பின்பற்றியவர்கள். அந்த முத்தின் வளைவிலும் நெளிவிலும் இறைத்தூதரான முகம்மது நபியின் முகம் தெரிவதுபோலப் பழங்குடித் தலைவருக்குத் தோன்றியது. எனவே, அந்த முத்தைப் பத்திரமாகப் பாதுகாக்கத் தொடங்கினார்.
1934. பிலிப்பினோ - அமெரிக்கரான வில்பர்ன் கோப், பெரிய முத்து ஒன்று பலாவான் பழங்குடித் தலைவரிடம் இருக்கிறது என்று கேள்விப்பட்டார். தேடி வந்தார். முத்தைப் பார்த்தார். ஆச்சரியப்பட்டார். நல்ல தொகைக்கு விலைக்குக் கேட்டார். 'இது இறைவன் அளித்த முத்து. தியாகத்தின் அடையாளம். இறைவனின் பொருளை ஒருபோதும் பணத்தால் வாங்க முடியாது' என்று பழங்குடித் தலைவர் மறுத்துவிட்டார்."
சில மாதங்கள் கடந்திருக்கும். பழங்குடித் தலைவரது மகன் மலேரியாவால் பாதிக்கப்பட்டான். வில்பர்ன் கோப், அந்தச் சிறுவனுக்கு மருந்து அளித்து மலேரியாவிலிருந்து மீட்டார். நன்றிக்கடனாக பழங்குடித் தலைவர், வில்பர்ன் கோப்புக்கு முத்தைப் பரிசாகக் கொடுத்தார். மகிழ்ச்சியுடன் அதை எடுத்துக்கொண்டு அமெரிக்காவின் நியூயார்க் நகரத்துக்குத் திரும்பினார்.
இந்தத் தகவல்களை எல்லாம் 1939-ல் Natural History என்ற இதழில் எழுதிய ஒரு கட்டுரையில் வில்பர்ன் கோப் குறிப்பிட்டிருக்கிறார். Pearl of Allah என்று பெயரிட்டு அந்த முத்தை, சில காலம் காட்சிக்கும் வைத்திருந்தார். அது 'உலகின் மிகப் பெரிய முத்து' என்று அழைக்கப்பட்டது.

1969-ல் Mensa என்ற அமைப்புக்குரிய இதழில் வில்பர்ன் கோப் இன்னொரு கட்டுரை எழுதினார். அதில் அல்லாவின் முத்து குறித்த கூடுதல் தகவல்களுடன், சீன தேசத்துக் கதை ஒன்றும் புதிதாகச் சேர்ந்திருந்தது. அதென்ன கதை? சீன தேசத்துச் செல்வந்தரான லீ, நியூயார்க் கண்காட்சியில் அல்லாவின் முத்தைக் கண்டார். துள்ளிக் குதித்தார். விழுந்து வணங்கினார். தன்னிலை மறந்து கண்ணீரும்விட்டார். 'இது அல்லாவின் முத்து' என்றார் வில்பர்ன் கோப். 'இல்லை, இது தொலைந்துபோன லாவோவின் முத்து!' என்றார் லீ.

லாவோட்சு, சீனாவின் முக்கியமான மெய்யியலாளர். கி.மு. 604-ல் பிறந்தவர். இவரது தத்துவங்கள் தாவோயிஸம் என்றழைக்கப்படுகிறது. தாவோயிஸக் கோட்பாட்டின் முதன்மையான கடவுளாக லாவோ வணங்கப்படுகிறார். லாவோ, தான் வாழ்ந்த காலத்தில் சிறிய வெள்ளை முத்து ஒன்றைக் கண்டெடுத்தார். அதில் புத்தர், கன்பூசியஸ் முகங்களுடன் தனது முகத்தையும் செதுக்கினார்.
அதை மோதிரம் ஒன்றில் பொருத்தி, 'மூன்று நண்பர்கள்' என்று பெயரிட்டார். பின் லாவோ, அந்த முத்து மேலும் வளர வேண்டும் என்பதற்காக அதைச் சிப்பி ஒன்றில் வைத்து மூடினார். அந்த முத்து வளர வளர வேறு பெரிய சிப்பிகளுக்கு மாற்றிக்கொண்டே இருந்தார்கள். பல நூற்றாண்டுகளுக்குப் பிறகு மிகப் பெரியதாக வளர்ந்திருந்த அந்த முத்தை, Tridacna வகை ராட்சசச் சிப்பிக்குள் மாற்றி வைத்துப் பாதுகாத்தார்கள். அந்த மிகப் பெரிய முத்தை அபகரிக்கும் நோக்குடன் வெவ்வேறு காலகட்டங்களில் போர்களும் நடந்திருக்கின்றன.
லீயின் முன்னோர்கள் லாவோவின் வழியின் வந்தவர்கள். அவர்கள் அந்த முத்துக்கு Pearl of Lao Tzu என்று பெயரிட்டுப் பாதுகாத்து வந்தார்கள். கி.பி. 1750. எதிரிகள் அந்த முத்தை அபகரிக்கத் திட்டமிட்டபோது,

லாவோவின் முத்தை, சீனாவிலிருந்து கப்பலில் ஏற்றி, பிலிப்பைன்ஸுக்கு அனுப்பி வைத்தனர். அந்தக் கப்பல் புயலில் சிக்கிக் கடலில் கவிழ்ந்தது.

பலாவான் பழங்குடியினர் அந்த முத்தை ஆழ்கடலில் கண்டெடுக்க, பின் அது வில்பர்ன் கோப் வசம் செல்ல, நியூயார்க்கில் அதை லீ பார்க்க என்று அந்தக் கதைக்கு ஒரு வடிவம் உண்டானது. '3.5 மில்லியன் டாலர் தருகிறேன். லாவோ முத்தைத் தந்துவிடுங்கள்' என்று லீ கேட்டதாகவும், வில்பர்ன் கோப் மறுத்ததாகவும் சொல்லப்படுகிறது. பின் அந்த லீ என்ன ஆனார் என்று தெரியவில்லை.
1979-ல் வில்பர்ன் கோப் இறந்து போனார். லாவோ முத்தை 2 லட்சம் டாலர்கள் கொடுத்து பீட்டர் ஹாஃப்மேன், விக்டர் பார்பிஷ் என்ற இருவர் வாங்கினர். இதற்காக விக்டர் பார்பிஷ், ஜோசப் போனிசெல்லி என்பவரிடம் குறிப்பிட்ட தொகை கடனும் வாங்கியிருந்தார்.
அதை ஒழுங்காகத் திருப்பிச் செலுத்தாததால் ஜோசப், விக்டர் மீது வழக்கு பதிவுசெய்தார். பல்வேறு இழுபறிகளுக்குப் பிறகு ஒரு முடிவு எட்டப்பட்டது. அதன்படி லாவோவின் முத்தில் பீட்டர் ஹாஃப்மேன், விக்டர் பார்பிஷ், போனிசெல்லி ஆகிய மூவருக்கும் சம உரிமை உண்டு என்று அறிவிக்கப்பட்டிருக்கிறது.
சரி, இன்றைக்கும் அல்லாவின் அல்லது லாவோவின் முத்துதான் உலகின் மிகப் பெரிய முத்தா?
இல்லை. அது 24 செ.மீ. சுற்றளவும் 6.4 கிலோ எடையும் கொண்டது. 2005-ம் ஆண்டு அதே பலாவான் தீவில் ஒரு மீனவர், ஆழ்கடலில் மிகப் பெரிய வெள்ளைக்கல் ஒன்றைக் கண்டெடுத்தார். அது அதிர்ஷ்டக்கல் என்று கருதி தன் படுக்கையின் கீழ் வைத்து, பத்து வருடங்கள் பாதுகாத்தார்.
அடிக்கடி வீடு மாற்றிக்கொண்டிருந்த காரணத்தால், அதற்கு மேல் கல்லை வைத்திருக்க வேண்டாம் என்று முடிவு செய்து, 2016-ல் சுற்றுலாத் துறையில் பணியாற்றிய தன் உறவுக்காரப் பெண்ணிடம் கொடுத்தார்.
சிந்தியா என்ற அந்தப் பெண் அது வெள்ளைக்கல் அல்ல, முத்து என்று கண்டுகொண்டார். 34 கிலோ எடை கொண்ட அந்த முத்தின் தோராய மதிப்பு 130 மில்லியன் டாலர்கள். Pearl of Puerto என்று பெயரிடப்பட்ட அதுவே இன்றைக்கு உலகின் மிகப் பெரிய முத்து.

"சொர்க்கத்தில் நடுவில் துளையுள்ள முத்தாலான கூடாரம் ஒன்று உள்ளது. அதன் அகலம் அறுபது மைல்களாகும். இறை நம்பிக்கையாளருக்குரிய துணைவியர்கள் அதன் ஒவ்வொரு மூலையிலும் இருப்பார்கள். அவர்கள் மற்றவர்களைப் பார்க்க முடியாது. இறைநம்பிக்கையாளர் அந்தத் துணைகளைச் சுற்றி வருவார்கள்'' என நபி (ஸல்) கூறினார்கள்.
அபுமூஸா அல்அஷ்அரீ (ரலி) முஸ்லிம் 5459"
இஸ்மாயீல் பின் அபீ காலித் கூறியதாவது:
அப்துல்லாஹ் பின் அபீ அவ்ஃபா (ரலி) அவர்களிடம்,
"நபி (ஸல்) அவர்கள் கதீஜா (ரலி) அவர்களுக்கு நற்செய்தி எதுவும் சொன்னார்களா?'' என்று நான் கேட்டேன்.
அவர்கள், "ஆம்! (சொர்க்கத்தில்) கூச்சல் குழப்பமோ, களைப்போ இல்லாத, துளையுள்ள முத்து மாளிகை ஒன்றை (இறைவன் அவர்களுக்கு அளிக்க இருப்பது) கொண்டு (நற்செய்தி சொன்னார்கள்)'' என்று பதிலளித்தார்கள்.புகாரி-3819 , முஸ்லிம் 4818

## அதிசயம், அற்புதம், ஆச்சரியம் 3

உலகப் புகழ்பெற்ற நாத்திகர்கள் மரணப் படுக்கையில் என்ன சொன்னார்கள் தெரியுமா ?
👉வால்டேர் என்பவர் புகழ்பெற்ற பிரெஞ்சு நாத்திக எழுத்தாளர். பிரெஞ்சு புரட்சிக்காக பெரும் பங்காற்றியவர், மதம் வேறு, அரசியல் வேறு என்ற கருத்தில் உறுதியாக நின்றவர்.
மரணப் படுக்கையில் தனது மருத்துவரிடம் கூறியதாவது:
'ஆண்டவனும் என்னை கைவிட்டுவிட்டான். மக்களும் என்னை புறக்கணித்து விட்டனர். ஆறு மாதங்களுக்கு என் உயிரை தக்க வைத்து தாருங்கள்! என் பாதி சொத்தை தருகிறேன். நான் இறக்கப்போகிறேன், நான் நரகத்தை கண் முன் காண்கிறேன்'
👉ஆங்கிலேய நாத்திகர் சர் தாமஸ் மரணப்படுக்கையில் கூறியதாவது:
'இவ்வளவு காலமாக நான் கடவுளை நம்பவில்லை, நரகத்தையும் நம்பவில்லை. ஆனால் இப்போது நான் கடவுள் இருப்பதாக உணர்கிறேன், இப்போது நான் நரகத்தின் விளிம்பில் இருப்தாக உணர்கிறேன்.'
👉சார்ச் ஆஃப் என்பவர் "சாத்தானின் பைபிள்" என்ற நூலின் ஆசிரியர். அவர் மரணப்படுக்கையில் கூறியதாவது:
'நான் மகா பாதக செயலை செய்துவிட்டேன். ஆண்டவன் என்னை மன்னிக்காவிட்டால் நான் நாசமானவர்களில் ஒருவன் என்பதில் ஐயமில்லை'.
👉பிரான்சு மன்னர் ஏழாம் சார்லஸ், பல்லாயிரக்கணக்கானவர்களை கொன்று குவித்தவர். தனது மரணப்படுக்கையில் கூறியதாவது:
'நான் கொன்றவர்கள் என் கண் முன்னால் வந்து செல்கின்றனர். என் கெட்ட முடிவை நான் காண்கிறேன்'.
👉தத்துவஞானி தாமஸ், இறக்கும் தருணத்தில் கூறியதாவது:
'நான் இருண்ட பாதளத்தில் குதிக்கப் போகிறேன், இந்த நேரத்தில் இந்த உலகம் என் கைவசம் இருந்தால், ஒரு நாள் மாத்திரம் உயிர் வாழ அதை கொடுப்பேன்'.

👉நாத்திக எழுத்தாளர் மாஸ் பெய்ன் கூறும்போது:
'எனக்கு இந்த உலகமும் அது போன்றதும் இருந்தால், நான் அதை கொடுத்து இந்த வேதனையில் இருந்து தப்பிப்பேன். என்னை தனியே விடாதீர்கள்! நான் நரக விளிம்பில் இருக்கிறேன். சைத்தானின் நண்பனாக நான் இருந்தேன்'.
👉பிரபல இஸ்கட்லாந்து நாத்திகரும் வரலாற்றாசிரியருமான டேவிட் ஹியூம் இறப்பதற்கு முன் கூறியதாவது:
'என்னை காப்பற்றுங்கள்! நரக நெருப்பு என்னை சுடுகிறது.'
அவரை பார்த்தவர்கள் அவர் மிகவும் பரிதாபப்படும் நிலையில் இருந்ததாக கூறியுள்ளனர்.
👉பிரெஞ்சு பேரரசர் நெப்போலியன் போனபார்டே உலகை ஆளும் வெறியில் மில்லியன் கணக்கானவர்களைக் கொன்றார். மரணபடுக்கையில் அவர் கூறியதாவது:
'என் நேரம் வர முன்பே நான் சாகப்போகிறேன். மண்ணோடு மண்ணாகப் போகிறேன். நான்தான் மிகப்பெரிய பேரரசரன், நான் விழும் நரக பாதளத்துக்கும் சொர்க்க சோலைகளுக்கும் பெரும் தூரம் உள்ளது'.
👉👉அமெரிக்க பத்திரிகையான நியூஸ்வீக்கிற்கு அளித்த பேட்டியில், ரஷ்ய சர்வாதிகாரி ஜோசப் ஸ்டாலினின் மகள் ஸ்வெட்லானா ஸ்டாலின், அவரது மரணம் பற்றி வர்ணிக்கும் போது:
'என் தந்தையின் மரணம் ஒரு பயங்கரமாக இருந்தது. அவர் திடீரென்று கண்களைத் திறந்து பார்ப்பார், வெறித்தனமாக கோபமடைவார், மேலே பார்ப்பார், தனது இடது கையால் மேலே ஏதோ ஒன்று இருப்பதாக சைகை செய்வார். ஏதோ ஒன்று இருப்பதாக எச்சரித்துவிட்டு மரணித்தார்".
👉டியூக் செசரே போர்கியா என்பவர் 'இளவரசன்' என்ற நாவலில் ஆசிரியர்.
அவர் தனது மரண அவஸ்தையில் சொன்னதாவது: "எதனையும் முகம் கொடுக்க தயாராக இருந்தேனே!, இப்போது இந்த மரணத்துக்கு முகம் கொடுக்க தயாராக இல்லையே".
👉சார் பிரான்சிஸ் நியூபெர்ட் என்பவர். பிரிட்டிஷ் நாத்திகர்கள் சங்கத் தலைவர். அவர் இறக்கும் போது படுக்கையைச் சுற்றி இருந்தவர்களிடம் இப்படி கூறினார்:
"கடவுள் இல்லை என்று என்னிடம் சொல்லாதீர்கள், நான் இப்போது அவன் முன்னிலையில் இருக்கிறேன். நரகம் இல்லை என்று சொல்லாதீர்கள், நான் இப்போது அதன் பாதாளத்தில் தொலைந்து விழுவதாக உணர்கிறேன். உங்கள் பேச்சை உங்களோடு வைத்துக் கொள்ளுங்கள். கோடி வருடங்கள் கடந்தாலும் அதன் வேதனையில் இருந்து எனக்கு விடுதலை இல்லை! ஐயோ சுட்டெரிக்கும் நரகமே!".
👉டேவிட் ஸ்ட்ராஸ் என்பவர் 1874 இல் இறந்த ஜெர்மன் நாத்திக எழுத்தாளர். அவர் தனது மரணப்படுக்கையில் கூறினார்:
"என் தத்துவங்கள் என்னைத் கைவிட்டுவிட்டதே! நான் இப்போது கோரப்பட்களைக் கொண்ட ஒரு ராட்சத இயந்திரத்தின் தாடையில் அகப்பட்டதாக உணர்கிறேன். அது எந்த நேரத்தில் என்னை அரைத்து நசுக்கும் என்று தெரியவில்லை".
👉புஷ், தந்தை மகன் என ட்ரம்ப், புடின், மற்றும் அரேபிய கொடுங்கோலர்கள், அப்பாவி மக்களின் இரத்தத்தை ஓட்டியவர்கள் தங்களது மரணப்படுக்கையில் என்னெவெல்லாம் உளறப் போகிறார்கள் என்பதை வரலாறு பதிந்து வைக்கத்தான் போகிறது!
வான்மறை வசனம் ஒன்று இப்படிச் சொல்கிறது:
(யார் வழிகேட்டில் இருக்கிறார்களோ அவர்கள் வாக்களிக்கப்பட்ட (இவ்வுலக) வேதனையை (காணும் வரை) அல்லது மறுமையை காணும்வரை பேரருளாளன் (அர்ரஹ்மான்) அவர்களுக்கு அவகாசம் கொடுக்கிறான்; (அவ்வாறு காணும் போது) எவருடைய தங்குமிடம் கெட்டது; எவருடைய படை பட்டாளம் பலஹீனமானது என்பதை திட்டமாக அவர்கள் அறிந்து கொள்வார்கள்" என்று (நபியே!) நீர் கூறுவீராக.) அல்குர்ஆன் : 19:75
"ஒருவர் மரணத்தை நெருங்கி விட்டார் என்பதை நாம் உணரும் போது லாயிலாஹ இல்லல்லாஹ் என்று அவருக்குச் சொல்லிக் கொடுக்க வேண்டும்.
உங்களில் மரணத் தருவாயில் உள்ளவர்களுக்கு லாயிலாஹ இல்லல்லாஹ் என்று சொல்லிக் கொடுங்கள் என்று நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கூறினார்கள். அபூ ஸயீத் அல்குத்ரீ (ரலி) முஸ்லிம் 1523, 1524"
உங்களில் மரணிக்க உள்ளவர்களுக்கு லாயிலாஹ இல்லல்லாஹ் என்பதைச் சொல்லிக் கொடுங்கள். மரணிக்கும் போது எவரது கடைசிப் பேச்சு லாயிலாஹ இல்லல்லாஹ் என்று
அமைந்து விடுகிறதோ அவர் என்றாவது ஒரு நாள் சொர்க்கத்தில் நுழைந்து விடுவார். இதற்குமுன்பு அவரிடமிருந்து எது ஏற்பட்டிருந்தாலும் சரியே என்று நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கூறினார்கள். அபூ ஹுரைரா (ரலி) இப்னு ஹிப்பான் 7/272
(Imran Farook தமிழாக்கப் பதிவிலிருந்து )

## அதிசயம், அற்புதம், ஆச்சரியம் 4

( இன்னும் படிக்காமல் இருக்கும் 3 லட்சம் தமிழ் ஓலை சுவடிகள் )




தமிழ்மொழி நல்ல இலக்கிய வளம் கொண்டது என்பது எல்லோருக்கும் தெரியும். நமக்கு தெரிந்த இலக்கியம் கொஞ்சம் தான். ஆனால் நமக்கு தெரியாத இலக்கியங்கள் லட்சக்கணக்கில் குவிந்துள்ளன என்பது இப்போது தெரியவந்துள்ளது.

தஞ்சையை ஆண்ட சரபோஜி மன்னரால் சரஸ்வதி மகால் நூலகம் உருவாக்கப்பட்டது. இது உலகின் முக்கியமான நூலகங்களில் ஒன்றாக திகழ்கிறது.

இங்கு 3 லட்சத்துக்கும் மேற்பட்ட ஓலைச்சுவடிகள், தஞ்சை ஓவியங்கள், கையெழுத்து படிகள், பழமையான நூல்கள் என பல அபூர்வமான விஷயங்கள் பாதுகாக்கப்பட்டு வருகின்றன. குறிப்பாக 1627ல் அச்சிடப்பட்ட பழமையான அச்சுப்புத்தகமும் இங்கு பாதுகாப்பாக உள்ளது.

"19-ம் நூற்றாண்டின் தொடக்கத்தில், பிரிட்டிஷ் அதிகாரத்துக்குக் கீழ் இருந்த மதுரை மாவட்டத்தின் ஆட்சியராக இருந்தவர் ஹாரிங்டன். இவரிடம் சமையல் வேலை பார்த்துவந்தவர் கந்தப்பன்.

அந்தக் காலகட்டத்தில், தமிழர்கள் ஒவ்வொருவர் வீட்டிலும் பழங்கால ஓலைச்சுவடிகள் இருப்பது வழக்கம். வருடத்துக்கு ஒரு முறை கரையான் அரித்த, பழுந்தடைந்த சுவடிகளை எரிப்பதும் வழக்கம்.

அப்படித் தன்னிடம் எரிப்பதற்காக அளிக்கப்பட்ட ஓலைச்சுவடிகளில் சில எந்தப் பழுதும் இல்லாமல் நன்றாக இருப்பதைக் கண்ட கந்தப்பர், அதை ஹாரிங்டனிடம் ஒப்படைக்க, அவர் அதை அப்போது சென்னை மாகாண வருவாய்த்துறைச் செயலாளராக இருந்த எல்லீஸிடம் ஒப்படைக்க அப்படி நமக்குக் கிடைத்த நூல்தான்

திருக்குறள்.

இன்று நாம் தமிழர்களின் அடையாளமாகக் கொண்டாடிக் கொண்டிருக்கும் சிலப்பதிகாரத்துக்காக `தமிழ்த் தாத்தா' என அழைக்கப்படும் உ.வே.சா நடக்காத நடை இல்லை. ஆனால், இப்போது `ஓலைச்சுவடிகள் திருட்டு', `ஆன்லைனில் விற்பனை' என இணையதளங்களிலும் பத்திரிகைகளிலும் வெளியாகும் செய்திகள் அனைவரையும் அதிர்ச்சியில் ஆழ்த்துகின்றன.

தமிழ்நாட்டில் உள்ள பழமையான ஓலைச்சுவடிகளில் இதுவரை 50 மட்டும்தான் படித்து வெளிவந்துள்ளன. அந்த 50 நூல்களுக்குள் தான் உலகப் பெரும் புகழ்பெற்ற திருக்குறள், சிலப்பதிகாரம், மணிமேகலை, அகநானூறு, புறநானூறு, பதிற்றுப்பத்து, எட்டுத்தொகை, நற்றிணை, குறுந்தொகை, இங்குருநூறு, சீவகசிந்தாமணி, பரிபாடல் போன்றவை உள்ளன.

உலகில் தோன்றிய முதல் மொழி, மூத்த மொழி தமிழ்மொழி என்பதை ஆணித்தரமாக எடுத்துரைக்க இந்த ஓலைச்சுவடிகளே போதுமே.

மேற்கூறப்பட்ட இலக்கியங்களின் செழுமையும், தொன்மையும் கண்டு உலகமே வியந்து நிற்கிறது.

அப்படியிருக்கும் போது இங்கு குவிந்து கிடக்கும் மூன்று லட்சம் ஓலைச்சுவடிகளையும் படித்தறிந்தால், எத்தனை தரமான படைப்புகள் வெளி வரும்... என்னென்ன அறிவுச் செல்வங்கள் நமக்கு கிடைக்கும் என்பதையெல்லாம் நினைத்துக் கூட பார்க்க முடியாது.

தமிழ்மொழியின் செழுமையும், தமிழனின் பல்வேறு திறமைகளையும் பற்றி உலகம் இன்னும் கூட அதிகமாக தெரிந்து கொள்ளலாம். தமிழனின் வரலாறு கூட மாற்றி எழுதப்படலாம் .

இப்படி படிக்காமல் இருக்கும் தமிழ்பொக்கிஷங்கள் மறைக்கப்படுகிறதா ? அல்லது மறுக்கப்படுகிறதா ? தெரியவில்லை

இப்பழம்பெரும் ஓலைச் சுவடிகளை ஆய்வு செய்து அடுத்த தலைமுறைக்கு அளிக்க வேண்டிய கடமை தமிழ் அறிஞர்களுக்கு இருக்கிறது.

தமிழின் மேன்மையை மேலும் உணர வைப்பார்களா? பொறுத்து இருந்துதான் பார்க்க வேண்டும்

நிலவின் மறுபுறத்தை உலகம் அறியாத நிலைமாதிரி, உலகின் அரும்பெரும் பொக்கிஷங்களுக்கும் அறியாத புறம் என்று ஒன்று இருக்கும் போல.

அண்ணலெம் பெருமானார் (ஸல்) அவர்களைப் பற்றி அதிகமான நபிமொழிகளை கூறிய நபித்தோழர் அபூஹுரைரா (ரலி) அவர்கள் இப்படி கூறுகிறார்கள் :
'இறைத்தூதர்(ஸல்) அவர்களிடமிருந்து (கற்ற) இரண்டு (வகையான கல்விப்) பாத்திரங்களை நான் நினைவில் வைத்துக் கொண்டிருக்கிறேன். அவற்றில் ஒன்றை நான் (மக்களிடம்) பரப்பி விட்டேன்; இன்னொன்றை நான் பரப்பியிருந்தால் என அடித்தொண்டை வெட்டப்பட்டிருக்கும்' என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்கள். ஸஹீஹ் புகாரி : 120.
நபித்தோழர் அபூஹுரைரா (ரலி) அவர்கள் நபியவர்களைப் பற்றி மறைத்த செய்திகள் இன்னும் படிக்காமல் இருக்கும் 3 லட்சம் தமிழ் ஓலை சுவடிகள் மாதிரிதானோ ?

## அதிசயம், அற்புதம், ஆச்சரியம் 5

( எலி உடலில் முளைத்த சோயாபீன்ஸ் செடி )

மத்தியபிரதேசத்தில். மத்தியப்பிரதேச மாநிலம் ரத்லம் பகுதியை சேர்ந்த தாதர் சிங், தனக்கு சொந்தமான இடத்தில் சோயா பீன்ஸை சமீபத்தில் விதைத்துள்ளார்.
சில நாட்களுக்கு பிறகு தனது தோட்டத்தை பார்வையிட சென்ற அவர் அங்கு ஒரு எலி உடலில் பீன்ஸ் செடி ஒன்று முளைத்தபடி அங்கும் இங்கும் ஓடியதைக் கண்டார்.
அவர் அந்த எலியை வீடியோ எடுத்து வெளியிட்டுள்ளார். பிறகு அந்த எலியை பிடித்து அதன் கழுத்து பகுதியில் வளர்ந்திருந்த பீன்ஸ் செடியை பிடுங்கியுள்ளார்.
இந்த அதிசயம் பற்றி கல்லூரி உயிரியல் தலைவர் ஒருவர் கூறுகையில் கழுத்தில் காயம் ஏற்பட்டபொழுது சோயா விதை அங்கு விழுந்திருக்கும் அதனால் இப்படி சோயா செடி வளர்ந்திருக்கலாம் என்றும், கழுத்து பகுதியில் செடி வளர்ந்திருந்தாலும், அதனால் பாதிக்கப்பட்ட எலியின் மூளையில் எந்த பாதிப்பும் இல்லை என்றும் கூறியுள்ளார்.

எலி ஓர் உயிரினம். சோயா பயிரும் ஓர் உயிரினம் தானே ! பல்வேறு ஜீவ காருண்ய நெறிகளையும், வாழ்வியல் தத்துவங்களையும் மக்களுக்கு போதித்த வள்ளலார் கூட 'வாடிய பயிரை கண்டபோதெல்லாம் வாடினேன்..! ' என்று கூறியுள்ளார்.
எனவே ஓர் உயிரினம் இன்னொரு உயிரினத்தில் பதிந்து முளைவிட்டு முளைப்பதில் கூட ஆச்சரியமில்லை .
ஆனால் குர்ஆன் இவற்றிற்கெல்லாம் ஒரு படி மேலே போய் நீங்கள் விளங்கிக் கொண்டபடி உயிரற்ற மலைப்பாறை, ஓர் உயிரினமான ஒட்டகத்தை ஈன்றெடுத்துள்ளது. இது எத்தனை பெரிய ஆச்சரியம்.
நபி ஸாலிஹ் (அலை) அவர்களது சமூகமான தமூது கூட்டம் எத்தகையவர்கள் என்றால் அவர்கள் பள்ளத்தாக்கில் மலைகளை குடைந்து கூடாரம் அமைத்திருந்தார்கள் என்பதை அல்லாஹுவே சாட்சி கூறுகிறான்
وَثَمُودَ الَّذِينَ جَابُوا الصَّخْرَ بِالْوَادِ
பள்ளத்தாக்குகளில் பாறைகளைக் குடைந்(து வசித்து வந்)த ஸமூது கூட்டத்தையும் என்ன செய்தான் என்று பார்க்கவில்லையா?
குர்ஆன் ( 89 -9 )

அம்மக்கள் 'எங்களுக்கு நீங்கள் நபிதான் என்பதை நிரூபிக்க ஒரு அத்தாட்சியை கொண்டு வாரும்' என்று கூறினார்கள்.
அப்போது தமூதுகளின் அரசன் ஜுன்தாஹ் ஒரு மலையை சுட்டிக்காட்டி, அதிலுள்ள பாறை ஒன்றிலிருந்து ஒரு சினையான ஒட்டகம் வெளிப்பட வேண்டும் என்றும், அது வெளிப்பட்ட அடுத்தகணம் எங்கள் கண்முன்னால் ஒரு குட்டியை ஈன வேண்டும் என்றும் அவ்விதம் செய்யின் இவர்களின் நபித்துவத்தை ஏற்றுக் கொள்வதாகவும் கூறினான்.
பிறகு அதனை சாலிஹ் அலைஹிஸ்ஸலாம் அல்லாஹுவிடம் மன்றாடியதில் பிரமாண்டமான ஒட்டகம் ஒன்று அம்மலைப் பாறையைப் பிளந்து, ஒரு குட்டியை ஈன்றது. அதைக் கண்ட ஜுன்தாஹ் மன்னனும் மற்றும் பலரும் உருவத் தொழும்பை விட்டொழித்து அல்லாஹ்வின் அருள்மார்க்கத்தை மேற்கொண்டனர்.
“அன்றியும், என் சமூகத்தாரே! உங்களுக்கு ஓர் அத்தாட்சியாக, இதோ இது அல்லாஹ்வுடைய (ஒரு) பெண் ஒட்டகம்; ஆகவே, அல்லாஹ்வின் பூமியில் (எதேச்சையாக) அதை மேய விட்டு விடுங்கள்; எந்த விதமான தீங்கும் செய்யக் கருதி அதைத் தீண்டாதீர்கள்; (அப்படி நீங்கள் செய்தால்) அதி சீக்கிரத்தில் உங்களை வேதனை பிடித்துக் கொள்ளும்” (என்று கூறினார்). குர்ஆன் ( 11:64)

## அதிசயம், அற்புதம், ஆச்சரியம் 6

ஆழ்மனம்



ஃபிலிப்பஸ் பாராசெல்சஸ் சுவிட்சர்லாந்தைச் சேர்ந்த ஒரு பிரபல இரசவாதி மற்றும் மருத்துவர். அவர் 1493 முதல் 1541 வரை வாழ்ந்தார். அந்நாளில் அவர் ஒரு மாபெரும் பிணிநீக்குனராகக் கருதப்பட்டார். இன்று அறிவியல் உண்மையென ஒப்புக்கொள்ளப்பட்ட ஒரு கருத்தை அவர் அன்றே கூறியிருந்தார். அவர் கூறியதாவது:

" நீங்கள் நம்பும் பொருள் உண்மையோ பொய்யோ, அது ஒரு பொருட்டல்ல. ஒரே விளைவுகளைத்தான் நீங்கள் பெறுவீர்கள்

இவ்வாறு, நான் புனித பீட்டரிடம் நம்பிக்கை கொள்வதை போலவே அவரது உருவச் சிலையிடத்திலும் நம்பிக்கை கொண்டால், புனித பீட்டரிடமிருந்து எனக்கு கிடைத்திருக்கக்கூடிய விளைவுகளையே அவரது உருவ சிலையிடமிருந்தும் நான் பெறுவேன்.

ஆனால் அது மூடநம்பிக்கையாக இருப்பினும், விசுவாசம் அதிசயங்களை அரங்கேற்றும். மெய்யான விசுவாசமோ அல்லது பொய்யான விசுவாசமோ, எப்போதும் ஒரே அற்புதங்களைத்தான் உற்பத்தி செய்யும் என்பது என் ஆழ்மனத்தில் பதிவாயிருந்தது.

இதற்கு உதாரணமாக 4000 வருடங்களுக்கு முன்பே எகிப்தில் ஸாமிரி என்பவன் தங்கத்தால் ஆன காளைக் கன்று என்ற ரோபாட் நிகழ்வை சொல்கிறேன்.

ஸாமிரி என்பவன் பனூ இஸ்ராயீல்களிலுள்ள ஸாமிரா என்ற பிரிவுகளில் தோன்றிய பிரபலமானவர்களில் ஒருவன். பனூ இஸ்ராயீல்களில் பிறக்கிற ஆண் குழந்தைகளைக் கொன்று விடுமாறு ஃபிர்அவ்ன் கட்டளையிட்ட சமயத்தில் இவன் பிறந்தான். இவன் பிரசவித்து உடன் இவனது தாய் நைல் நதிக்கரையில் இருந்த ஒரு திட்டில் குழந்தையை வைத்து விட்டாள் .

இவனை போஷித்து வளர்க்குமாறு இறைவன் ஜிப்ரீல் (அலை) அவர்களுக்கு கட்டளையிட்டான். அவ்வாறு ஜிப்ரீல் (அலை) அவர்களது பராமரிப்பில் ஸாமிரி வளர்ந்து வந்தான்

மூஸா (அலை) அவர்கள் ஸீனாய் மலைக்கு சென்றிருந்த சமயம் ஹாரூன் அவர்களிடம் ஸாமிரி வந்து, "ஃபிர்அவ்ன் இனத்தார்களான கிப்தியரிடம் இரவல் வாங்கிய நகைகளை நாம் உபயோகபடுத்துவது நமக்கு ஜாய்ஸ் இல்லை. பனூ இஸ்ராயீல்கள் அவற்றை விற்று விடுவார்கள் என நம்புகிறேன் . அவை எல்லாவற்றையும் ஒன்று சேர்த்து தீக்கிரையாக்கி விட நீங்கள் உத்தரவு தர வேண்டும்" என்று ஸாமிரி கோரிக்கொண்டான். "அனைவரும் நகைகளைக் கொண்டு வந்து கிணற்றில் போட்டு விட வேண்டும் அங்கு அவற்றில் நெருப்பு வைக்கப்படும். என்று ஹாரூன் (அலை) அவர்கள் உத்தரவிட்டார்கள். அதுபோல அவைகள் கொண்டுவரப்பட்டு தீ வைக்கப்பட்டன .

ஸாமிரி மிகத் திறமையான பொற்கொல்லன். அவன் உருகிய தங்கத்தில் ஒரு காளைமாடு உருவத்தை சிலையாக செய்தான்.

தன்னை வளர்த்த ஜிப்ரீல் (அலை) அவர்களின் குதிரையின் குளம்பு பட்ட காலடி மண்ணை சிலையின் வாயிக்குள் திணித்தான். அது உயிர் பெற்றது .எலும்பும் தசைகள் எல்லாம் அதற்கு உண்டாகி விட்டன. உரத்த சப்தமாக சத்தமும் செய்தது என்றாலும்,அது உயிர் பெறவில்லை , ஆனாலும் உயிர் பெற்றது போல காணப்பட்டது .அங்கும் இங்கும் கூட நடந்தது.

பனூ இஸ்ராயீல் காளை மாட்டின் உருவத்தை வணங்க தலைப்பட்டனர். ஆகவே உமக்குப் பிறகு உமது சமூகத்தினர் காளைக் கன்றை வணங்குபவர்களாகி விட்டனர் என்று அல்லாஹுத்தஆலா மூஸா (அலை) அவர்களுக்கு அறிவித்தான்.

பின்னர் அவன் அவர்களுக்காக ஒரு காளைக்கன்றை (உருவாக்கி) வெளிப்படுத்தினான்; அதற்கு மாட்டின் சப்தமும் இருந்தது. (இதைக் கண்ட) சிலர் “இது தான் உங்களுடைய நாயன்; இன்னும் (இதுவே) மூஸாவின் நாயனுமாகும்; ஆனால் அவர் இதை மறந்து விட்டார்” என்று சொன்னார்கள்.

அவர்களுக்கு அது மறுபடி எதுவும் சொல்லவில்லை என்பதையும்; அவர்களுக்காக நன்மையையோ, தீமையையோ செய்யச் சக்தியற்றது என்பதையும் அவர்கள் பார்க்க வில்லையா? (குர்ஆன் : 20: 88,89)
“ஸாமிரிய்யே! உன் விஷயமென்ன?” என்று மூஸா அவனிடம் கேட்டார்.
“அவர்கள் காணாத ஒன்றை நான் கண்டேன்; ஆகவே, நான் அந்த தூதர் காலடியிலிருந்து ஒரு பிடி (மண்ணாகப்) பிடித்து, அதை எறிந்தேன்; அவ்விதம் (செய்வதை) என் ( ஆழ் ) மனம் எனக்கு அழகா(ன செயலா)க ஆக்கிற்று” என (ஸாமிரி பதில்) சொன்னான். (குர்ஆன் : 20: 95, 96)

ஸாமிரி தங்க நகையை தீயில் உருவாக்கி காளைக் கன்றை செய்யும்போது, ஜிப்ரயீல் (அலை) அவர்களின் காலடிபட்ட இடத்தில் பசுமை துளிர்க்கும் என்பதால் காளைக் கன்றின் வாயில் ஜிப்ரயீல் (அலை) அவர்களின் காலடிபட்ட மண்ணை திணித்தான். அது உயிர் பெற்றது.
நபி மூஸா ( அலை) அவர்கள் இறைவனிடம் பேசும் போது இறைவனும் பேசுவான். அதை பனீ இஸ்ரவேலர்களும் இறைவன் பேசுவதை கேட்டு உள்ளார்கள் என்பதால்,
நாம் செய்யும் தங்க காளைக் கன்றும் பேச வேண்டும் என்று அவன் தன்னுடைய ஆழ்மனதில் அப்படி ஒரு எண்ணத்தை உருவாக்கிக் கொண்டான். எனவே தான் என் ஆழ்மனம் எனக்கு அழகான செயலாக அதை ஆக்கிற்று என்று ஸாமிரி பதில் சொன்னான்.
நல்ல எண்ணமோ கெட்ட எண்ணமோ ஆனால் ஆழ்மனத்தின் ஆழத்தில் பதிந்து விட்டால் அது கண்டிப்பாக நடைபெற்றே தீரும்.

## அதிசயம், அற்புதம், ஆச்சரியம் 7

(மலையை நகர்த்தவோ தூக்கவோ முடியுமா ? )

(நபியே!) உங்களிடம் அவர்கள் மலைகளைப் பற்றி (அதன் கதி உலக முடிவின்போது என்னவாகும் என)க் கேட்கிறார்கள். (அதற்கு) நீங்கள் கூறுங்கள்: "என் இறைவன் அவைகளைத் தூள் தூளாக்கி(ப் பரப்பி) விடுவான். (குர்ஆன் : 20:105)
மலையைப் படைத்த இறைவனால் மலையை நகர்த்தவோ , ஒன்றொன்று மோதி அவைகளைத் தூள்தூளாக்கி பரப்பிவிட முடியும். ஆனால்,மலையை தூக்குவது குறித்து புராணங்களிலும் , இதிகாசங்களும் , ஏன் குர்ஆனிலும் , தப்ஸீர்களிலும் காணமுடிகிறது.
முதலில் புராணங்களில் , இதிகாசங்களில் உள்ளதை சொல்றேன்.
தசக்ரீவன் கைலாய மலையை பெயர்த்த வரலாறு :
"தசக்ரீவன் என்ற அரக்கன் மகாபலிஷ்டன். அவன் வீரத்திற்கும் பலத்திற்கும் அஞ்சாதவர்களே கிடையாது. அவன் ஒருநாள் தனது எத்திசையிலும் பறந்து செல்லும் வல்லமை படைத்த புஷ்பக விமானத்தில் ஏறி வடதிசை நோக்கி விண்ணில் பறந்து சென்றான்.
பறப்பதற்கு எதிரே கயிலாய மலை. அதற்கு காவலாய் நந்திதேவர். அவர் விமானத்தை வழி மறித்து நிறுத்தி,""அப்பனே தசக்ரீவா! இது சிவபெருமான் உறையும் கயிலாய மலை. இதன்மேல் நீ பறந்து செல்லலாகாது. நவகிரகங்கள்கூட இம்மலைக்குமேல் செல்லாமல் சுற்றிக் கொண்டுதான் செல்லும். அதனால் நீயும் உன் விமானத்தில் இதைச் சுற்றிக் கொண்டு செல்!'' என்றார்.
தசக்ரீவனுக்கு இள ரத்தம். முனுக்கென்று கோபம் வந்துவிட்டது.
"ஏ குரங்குமூஞ்சி மாடே! கொழுப்பா? எனக்கு நீ புத்தி சொல்கிறாயா? உன்னையும் இந்த மலையையும் சேர்த்து பெயர்த்து எறிந்து விடுவேன். ஜாக்கிரதை!'' என்றான்.
தசக்ரீவனுக்கு இதைக் கேட்க கடுங்கோபம் மேலிட்டது. சடக்கென்று விமானத்தை விட்டுக் கீழே இறங்கி கைலாய மலையை ஓர் ஆட்டு ஆட்டிப் பெயர்த்துத் தோள்மீது வைத்து ஒரு குலுக்கு குலுக்கினான்.
சிவபெருமான் தன் கால் பெருவிரலின் நக நுனியை ஊன்றிச் சிறிது அழுத்தினார்.
அவ்வளவுதான்... கதவிடுக்கில் மாட்டிக் கொண்ட எலிபோல் தசக்ரீவன் மலையின் அடியில் அகப்பட்டு உடல் நசுங்கி, தோள் முறிந்து "ஓ' என்று அலற ஆரம்பித்தான்.
இப்படி அலற ஆரம்பித்தவனால் அதை நிறுத்த முடியவில்லை. ஆயிரம் ஆண்டுகள் கதறி அழுதானாம்! (புராணம் சொல்கிறது!) அதனால் அவனுக்கு ராவணன் என்ற பெயர் வந்தது! ராவணன் என்ற சொல்லுக்கு ரோதனம் புரிந்தவன் என்று பொருள்.
அதன்பின்னர், ராவணன் தனது சாமதான இசைப்புலமையால் இறைவனை புகழ்ந்துபாடி அவரது மன்னிப்பைப் பெற்றான். அவனுக்கு பல்லாயிரம் ஆண்டு வாழ்நாளையும் வலிமை மிக்க வாள் ஒன்றினையும் பரிசாகத் தந்து அனுப்பிவைத்தார் சிவபெருமான்!
அடுத்து சஞ்சீவி மலையை தூக்கி வந்த அனுமன்:
ராமர் சீதையை மீட்டுச் செல்வதற்காக ராவணனுடனான யுத்தம் தொடங்கி உக்கிரமாக நடைபெற்றது. தன் அண்ணன் ராவணனுக்காக ராமரை எதிர்க்க வந்த கும்பகர்ணன் இறந்து விட்டான்.
ராவணனின் அருமைப் புதல்வன் மேகநாதன் என்னும் பெயரை கொண்ட இந்திரஜித், தனது பரிவாரங்களுடன் வந்து ராம, லட்சுமணருடன் போரிட்டுக் கொண்டிருந்தான். நேருக்கு நேர் நின்று போர் புரிகையில் அவனால், ராம- லட்சுமணரை எதுவும் செய்ய முடியவில்லை. அது அவனுக்கும் புரிந்து போயிற்று.

உடனடியாக தனது மாயைகளை உபயோகிக்கத் தொடங்கினான் இந்திரஜித். மறைந்திருந்து தாக்குதல் நடத்தினான். இதில் வானர படைகளைச் சேர்ந்த பலர் சிதறி விழுந்து மாய்ந்தனர்.
எவருக்கும், என்ன செய்வதென்று தெரியவில்லை. எங்கிருந்து அம்பு வருகிறது என்பதை ஊகிக்கும் முன்பாக ஒவ்வொருவராக கீழே விழுந்து கொண்டிருந்தனர். அப்போதுதான் அந்த விபரீதம் நடந்தது.
மாயவனான இந்திரஜித், பிரம்மாஸ்திரத்தனை எடுத்து தொடுத்தான். லட்சுமணனை குறிவைத்தான். அது லட்சுமணனை தாக்கியது. பிரம்மாஸ்திரத்தில் இருந்து தப்பிக்க முடியாமல் மண்ணில் மயங்கி சரிந்து விட்டான் லட்சுமணன்....

இதனை பார்த்ததும் அருகில் நின்று கொண்டிருந்த ராமர் ஓடி வந்தார். தனது தம்பி இறந்த துக்கம் தாளாமல் கதறி அழுதார். ' அப்போது அங்கு ஜாம்பவானும், அனுமனும் வந்தனர். ஜாம்பவான், அனுமனை நோக்கி, 'அனைவரையும் பிழைக்க வைக்க ஒரு வழி உள்ளது. அது உன்னால் மட்டுமே முடியும். இமயமலை பகுதியில் சஞ்சீவி மலை ஒன்று உள்ளது. அதில் பல அதிசய மூலிகைகள் இருக்கின்றன.
இறந்தவர்களை உயிர் பிழைக்க செய்யும் மருந்து, உடல் பல துண்டுகளாகப் பிளவு பட்டுப் போயிருந்தால் அதனை ஒட்ட வைக்கும் மருந்து, உடலில் பாய்ந்த ஆயுதங்களை வெளியே எடுக்கும் மருந்து, சிதைந்து போன உருவத்தை மீண்டும் பழையபடியே பெறுவதற்கான மருந்து என்று தனித்தனியாக உள்ளது. அங்கு சென்று அந்த மருந்துகளை கொண்டுவா. தாமதம் பெரிய இழப்பை ஏற்படுத்தி விடும். விரைந்து வா!' என்று கூறி அனுப்பி வைத்தார். வேகமாக பறப்பதில் அனுமனுக்கு நிகர் எவரும் இல்லை.

சஞ்சீவி மலைக்கு வந்து விட்டார். ஆனால் அங்கு இருந்த பல மூலிகைகளில், எது ஜாம்பவான் கொண்டு வரக்கூறிய மூலிகை என்பதில் அவருக்கு பெரும் குழப்பம் ஏற்பட்டுவிட்டது.
ஆனால் யோசித்துக் கொண்டிருக்கும் ஒவ்வொரு நொடியும் விபரீதத்தை ஏற்படுத்தி விடும் என்பதை உணர்ந்த அனுமன், சஞ்சீவி மலையையே பெயர்த்து எடுத்துக் கொண்டு பறக்கத் தொடங்கினார்.
சஞ்சீவிமலையில் இருந்த மூலிகைகளின் காற்றை சுவாசித்ததுமே பலர் தங்கள் நினைவை பெற்று எழுந்து விட்டனர். ஜாம்பவான் குறிப்பிட்ட மூலிகைகளை பறித்து அனைவரையும் உயிர் பிழைக்கச் செய்தார்.
அடுத்து இஸ்லாத்தின் பார்வையில் ,
பல நாடுகளை வென்று மக்களை தீன் பக்கம் அழைத்தவண்ணம் சிக்கந்தர் துல்கர்ணைன் எட்டு இரவு, எட்டு பகல் கடந்து மலையொன்றினை அடைந்தார்கள். இதை குர்ஆன் (18:86 - 93 ) விவரிக்கிறது.
மலையின் பக்கம் வந்தார்.அது பூமியைச் சுற்றிலும் இருக்கும் மலையாகும். அதற்கு காப் மலை என்று சொல்லப்படுகிறது வானவர் ஒருவர் அம்மலையை பிடித்தவண்ணம் அல்லாஹ்வை துதித்துக் கொண்டிருந்தார்.
அங்குவந்த துல்கர்ணைன் அல்லாஹ்வுக்கு சுஜூது செய்து தமக்கு வலிமை (ஆற்றல்) வழங்குமாறு இறைஞ்சினார். அல்லாஹுத்தஆலா அவருக்கு வலிமையையும் ஆற்றலையும் வழங்கி அருள்புரிந்தான்.
எனவே அவரால் அந்த வானவரைக் காண முடிந்தது. அப்பொழுது அந்த வானவர் அவரை நோக்கி, ஆதமுடைய மக்களில் எவரும் இவ்விடத்திற்கு உமக்கு முன் இதுவரை வந்ததில்லை.
அவ்வாறிருக்க உமக்கு மட்டும் எவ்வாறு இங்குவர வலிமை கிட்டியது? என்று வினவினார்.
அதற்கு துல்கர்ணைன், இம்மலையைத் தூக்கி தாங்கும் வலிமையைத் தந்த அல்லாஹு தஆலா தான் எனக்கும் வலிமையைத் தந்தான் என்று விடையளித்தார்.
இந்நிகழ்ச்சி கஸஸுல் அன்பியாவில் மிக்க விரிவாக சொல்லப்பட்டிருக்கிறது. தப்ஸீர்கள் அனைத்திலும் இந்நிகழ்ச்சி குறிப்பிடப்பட்டுள்ளது."

وَاِذْ اَخَذْنَا مِيْثَاقَكُمْ وَرَفَعْنَا فَوْقَكُمُ الطُّوْرَ خُذُوْا مَآ اٰتَيْنٰكُمْ بِقُوَّةٍ وَّ اذْكُرُوْا مَا فِيْهِ لَعَلَّكُمْ تَتَّقُوْنَ
இன்னும், நாம் உங்களிடம் வாக்குறுதி வாங்கி, “தூர்” மலையை உங்கள் மேல் உயர்த்தி, “நாம் உங்களுக்கு கொடுத்த (வேதத்)தை உறுதியுடன் பற்றிக் கொள்ளுங்கள்; அதிலுள்ளவற்றை நினைவில் வைத்துக் கொள்ளுங்கள். (அப்படிச் செய்வீர்களானால்) நீங்கள் பயபக்தியுடையோர் ஆவீர்கள்” (என்று நாம் கூறியதையும் நினைவு கூறுங்கள்). (குர்ஆன் : 2:63)

ஹஜ்ரத் மூஸா அலைஹிஸ்ஸலாம் அவர்கள் தூர்ஸீனாவிற்கு ( சீனாய் ) மலைக்குச் சென்று இறைவனிடமிருந்து தவ்ராத் வேதம் எழுதப்பட்ட வௌஹு (பலகை)களைக் கொண்டு வந்தபோது, அதில் சொல்லப்பட்ட கட்டளைகள் மிகவும் கஷ்டமானவைகளாக இருக்கின்றன என்று பனீ இஸ்ராயில்கள் கருதி அதனை ஒப்புக் கொள்ள மறுத்தனர்.
அப்பொழுது அல்லாஹு கட்டளைப்படி ஹளரத் ஜிப்ரயீல் அலைஹிஸ்ஸலாம் அவர்கள் அம்மலையை வேருடன் பிடுங்கி அவர்களது தலைக்கு மேலில் உயர்த்தினார்கள். இன்னும் அந்த மலை அவர்களுக்கு மேலில் நிழலிட்டுக் கொண்டுமிருந்தது.
அப்பொழுது ஹளரத் மூஸா அலைஹிஸ்ஸலாம் அவர்கள் பனீ இஸ்ராயீல்களை நோக்கி “நீங்கள் இதனை ஒப்புக் கொள்ளுங்கள். இல்லையேல் உங்கள் மீது இது போடப்படும்” என்று கூறினார்கள்.
பனீ இஸ்ராயீல்கள் தப்பிச் செல்ல வழியில்லை என்பதை உணர்ந்து அதனை ஒப்புக் கொண்டு அல்லாஹு தஆலாவுக்கு சுஜூது செய்தார்கள்.

ஆனால் அவர்கள் சுஜுது செய்து கொண்டிருக்கும் போதே தலையைக் கொஞ்சம் நிமிர்த்தி மலையையும் பார்த்துக் கொள்பவர்களாக இருந்தனர். இதிலிருந்து யூதர்கள் சுஜுது செய்தால் அவர்கள் தங்கள் முகத்தில் பாதியைத்தான பூயியில் படும்படி சுஜுது செய்வார்கள்.
இது அவர்களில் ஒரு வழக்கமாகவே ஏற்பட்டு விட்டது. இம்மாதிரியான சுஜுதினால்தான் எங்களை விட்டு வேதனை அகற்றப்பட்டது என்று யூதர்கள் சொல்லிக் கொள்கிறார்கள்.
ஆக மலை நகர்த்தப்பட்டிருக்கிறது, தூக்கப்பட்டிருக்கிறது , ஒன்றொன்று மோதி அவைகளைத் தூள்தூளாக்கி பரப்பிவிடவும் இறைவனால் முடியும்.

**அதிசயம், அற்புதம், ஆச்சரியம் 8**




அறிவியலுக்கு அப்பால்" என்ற பெயரில் நீதியரசர் வெ. இராம சுப்ரமணியன், ஒரு நூலை 2014 ஆம் ஆண்டு எழுதியுள்ளார். அறிவியலால் விடை கூறமுடியாத புதிர்களாக அவர் கருதியனவற்றை தொகுத்தளித்துள்ளார். அவர் புதிர்களாக கருதியவற்றுக்கு விடை காண்பதே இந்நூலின் நோக்கம் என்பதாக குறிப்பிடுகிறார்.
புதிர் 1: இங்கிலாந்து நாட்டைச் சேர்ந்த ரோஸ் மேரி பிரவுன் என்பவர், மறைந்த இசைக் கலைஞர்கள் பலரின் ஆன்மாக்களோடு பேசி அவர்களின் இசையை உள்வாங்கி இசையமைத்தார்.இத்தனைக்கும் அவர் இசை கற்காதவர். இன்று வரை அவர் எப்படி இசையமைத்தார் என்பது புரியாத புதிராகவே உள்ளது.
விடை: 1994 ல் ராபர்ட் கரோல் தொகுத்த "The Skeptics Dictionary"யில் (கேள்வி கேட்போர் அகராதி) இதற்கான விடை உள்ளது. எல்லோரும் சொல்வதைபோல, ரோஸ் மேரி பிரவுன் இசை தெரியாதவரல்ல. அவர் 2 ஆண்டுகள் இசை பயிற்சி பெற்ற தகவலும் இந்த அகராதியில் உள்ளது. அது மட்டுமல்லாமல், அவருடைய குடும்பமே இசைக்குடும்பம் என்பதையும் அவர் மறைத்துள்ளார்.

1989இல் வேரன் ஜோன்ஸ் எழுதிய "Anomalistic Psychology – A Study of Magical Thinking" என்ற நூலில் ரோஸ் மேரி பிரவுனின் இசைகளை ஆய்வு செய்து, அது அவருடைய ஆழ்மனதில் இருந்து வந்தவையே தவிர, ஆன்மாக்களோடு பேசி பெறப் பட்டவையல்ல என்பதை நிரூபித்துள்ளார். 1989லேயே நிரூபிக்கப்பட்ட ஒன்று, 2014இல் நூலை எழுதிய நூலாசிரியருக்கு புதிராகத் தெரிவது விந்தையிலும் விந்தை.
சரி நாம் விஷயத்திற்கு வருவோம் .
இறந்த போனவர்களின் ஆன்மா உயிரோடிருப்பவர்களிடம் தொடர்பு கொள்ள முடியுமா ? இது பற்றி இஸ்லாம் மார்க்கம் கூறுவதென்ன ?

ஹஜ்ரத் ஸஃது இப்னு ஜிதாமா (ரலி ) அவர்களும் , ஹஜ்ரத் அவ்பு இப்னு மாலிக் (ரலி ) அவர்களும் உற்ற நண்பர்கள் இருவரில் யார் முதலில் மரணம் அடைந்தாலும் இருப்பவரின் கனவில் வந்து அங்குள்ள நிலவரம் பற்றி சொல்ல வேண்டும் என்ற முடிவு செய்திருந்தனர்.
ஸஃது (ரலி ) அவர்கள் முதலில் இறந்து அவ்பு (ரலி) அவர்களின் கனவில் தோன்றி , பல கஷ்டங்களுக்குப் பிறகு எனக்கு மக்ஃபிரத் கிடைத்தது என்பதை சொல்லும் போது , ஸஃது (ரலி) நினைவில் நேரில் வந்து சொல்வது போல் இருந்ததாம் அவ்பு (ரலி) அவர்களுக்கு .
ஸஃது கழுத்தில் கரு நிறக் கோடு இருந்ததைப் பற்றி அவ்பு விசாரித்தார்கள்.

அதற்கு ஸஃது , " இன்ன யூதனுக்கு 10 அஷ்ரப் காசுகள் கடன் கொடுக்க வேண்டும். என் வீட்டில் இன்ன இடத்தில் அந்த காசுகள் இருக்கிறது அதை எடுத்து அந்த யூதனுக்கு கொடுத்து விடவும் .
என் மரணத்திற்குப் பிறகு என் வீட்டில் நடந்த சகல காரியங்களும் எனக்கு தெரியும் ; நான் வளர்த்த பூனை இறந்தது உட்பட எனக்கு எல்லாமே தெரியும் , இன்னும் 6 நாட்களில் என் அன்பு மகள் இறக்கப் போவதையும் என் வீட்டில் தெரிவித்து விடுங்கள் " .
ஸஃது இட்ட கட்டளைகளை அவ்பு நிறைவேற்றினார்கள். பூனை இறப்பும் சரியாக இருந்தது , அதே மாதிரி 6 நாட்களில் அவருடைய மகள் இறப்பும் துள்ளியமாக நடந்தது .
(ஆதாரம் உயூனுல் ஹிகாயத்)

**அதிசயம், அற்புதம், ஆச்சரியம் 9**
(தற்செயல் என்று உண்டா ? பகுதி 18 )




நாவலின் பெயர் :"All Around the Moon" (நிலவைச் சுற்றி )
ஜூலெஸ் வெர்னே என்ற நாவலாசிரியர் எழுதியவையெலாம் அப்படியே பிற்காலத்தில் நடந்துள்ளன. 1870 இல் "Around the Moon" (நிலவைச் சுற்றி என்ற நூலை எழுதினார். அந்நாவலில் அவர் 4 விஷயங்களை எழுதியிருந்தார்.
1. கேப்டவுனில் இருந்து நிலவுக்கு செயற்கைக்கோள் அனுப்பப்படும்.
2. செயற்கைக் கோள் கோண வடிவில் இருக்கும்.
3. அதில் 3 பயணிகள் பயணிப்பார்கள், 4. 39, 600 கிலோ மீட்டர் வேகத்தில் செயற்கைகோள் நிலவை அடையும்.
அவர் இவற்றை எழுதி 99 ஆண்டுகளுக்கு பின், இவையனைத்தும் நடந்தன.

1969இல் கேப் டவுனில் இருந்து அப்போல்லோ 11 என்ற கோண வடிவிலான செயற்கைகோள், மூன்று பயணி களுடன் (எட்வின், ஆர்ம்ஸ்ட்ராங்க், காலின்ஸ்), 38, 500 கிலோமீட்டர் வேகத்தில் நிலவை அடைந்தது.
நடக்கப்போவதை முன்கூட்டியே அறிந்து கொள்ளும் ஆன்மீக சக்தி அவரிடம் இருந்தது.
பெரியார் தன்னுடைய "இனி வரும் உலகம்" (1943) என்ற நூலில் சோதனைக்குழாய் குழந்தை, அலைபேசி போன்ற எதிர்கால அறிவியல் கண்டுபிடிப்புகளை கணித்து கூறியிருந்தார்.
ரூடிரக்கர் என்பவர் " மனவெளி (Mindscape or Mind Space ) என்று ஒன்று இருக்கிறது . அங்கே கணித உண்மைகள் , விஞ்ஞான விதிகள் , இதுவரை கண்டறியப்படாத யுக்திகள் இவைகளெல்லாம் வசிக்கின்றன. மன வெளியில் இருந்துதான் நாம் ஒவ்வொன்றாகக் கண்டறிகிறோம் " என்கிறார்.
சில சமயம் இம்மாதிரியான உண்மைகளின் தரிசன விளக்கம் சட்டென்று சற்றும் எதிர்பாராமல் நிகழ்கின்றன .
இளம் விஞ்ஞானி கார்ல் காஸ் (Carl Gauss) ஒரு முக்கியமான கணக்கு விடை கிடைக்காமல் மாதக்கணக்கில் தவிர்த்திருக்கிறார். ஒரு நாள் சட்டென்று மின்னலடித்தாற் போல் விடை கிடைத்தது என்று அவரே எழுதியிருக்கிறார் .

விஞ்ஞானிகள் கண்டுபிடித்த விதிகளெல்லாம் பல்லாயிரக்கணக்கான ஆண்டுகளாக இந்த மனவெளியில் கேட்பாரற்று கிடந்தன . அதை ஒரு நியூட்டனோ , ஒரு டால்டனோ , ஒரு ஐன்ஸ்டீனோ அதனுள் பிரவேசித்து , அதை எடுத்துச் சொன்னார்கள் . நோபலையும் பெற்றார்கள் .

உலகில் இவர்கள் புவி ஈர்ப்பு விசை விதியையோ , ஒளியியல் விதியையோ சொல்வதற்கு முன் அந்த விதிகள் எங்கிருந்தன ? நீங்கள் யோசித்தீர்களா ?
அவைகளெல்லாம் இந்த மன வெளியில்தான் மண்டிக் கிடந்தன. இன்னும் கோடான கோடி விதிகள், கண்டுபிடிப்புகளெல்லாம் நம்மை சந்திக்க இன்னும் காத்திருக்கின்றன !

وَاِنْ مِّنْ شَىْءٍ اِلَّا عِنْدَنَا خَزَآٮِٕنُهٗ وَمَا نُنَزِّلُهٗۤ اِلَّا بِقَدَرٍ مَّعْلُوْمٍ
ஒவ்வொரு பொருளின் பொக்கிஷங்களும் நம்மிடமே இருக்கின்றன. எனினும், அவற்றை (அந்தந்தக் காலத்தில் அவற்றிற்குக்) குறிப்பிட்ட அளவில் தான் நாம் இறக்கி வைக்கிறோம். (குர்ஆன் : 15:21)

## அதிசயம், அற்புதம், ஆச்சரியம் 10

மனித வாழ்க்கையில் கனவுகள் மிக முக்கியமான இடத்தைப் பெற்றிருக்கிறது என்றால் அது மிகையல்ல. அந்த அடியிப்படையில் அல்குர்ஆன் தலைமை விரிவுரையாளர் மற்றும் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் அன்பு தோழர் ஹள்ரத் இப்னு அப்பாஸ் (ரலியல்லாஹு அன்ஹு) அவர்கள்
அல்லாஹ், உயிர்களை அவை மரணிக்கும் போதும், மரணிக்காதவற்றை அவற்றின் நித்திரையிலும் கைப்பற்றி, பின்பு எதன் மீது மரணத்தை விதித்துவிட்டானோ அதை(த் தன்னிடத்தில்) நிறுத்திக் கொள்கிறான்;
மீதியுள்ளவற்றை ஒரு குறிப்பிட்ட தவணை வரை (வாழ்வதற்காக) அனுப்பி விடுகிறான் - சிந்தித்துப் பார்க்கும் மக்களுக்கு, நிச்சயமாக அதில் அத்தாட்சிகள் இருக்கின்றன.
(குர்ஆன் : 39:42) வசனத்திற்கு கீழ் கண்டவாறு விளக்கம் தருகிறார்கள்.

‘ஒவ்வொரு மனிதனுக்கும் நஃப்ஸ் (ஆத்மா)-வும், ரூஹ் (உயிர்)- ம் உள்ளன. நஃப்ஸில் உணரும் தன்மையும் அறிவும் உள்ளன. ரூஹில் அசையும் தன்மையும் மூச்சு வாங்கும் தன்மையும் உள்ளன. மனிதன் தூங்கும் போது அல்லாஹ் நஃப்ஸை மட்டுமே கைப்பற்றுகிறான். ரூஹை கைப்பற்றுவதில்லை. ரூஹ் தனது அசையும் தன்மையால் அந்நேரத்தில் சுற்றித் திரிகிறது. அப்பொழுது அந்த ரூஹிற்கு மற்ற ரூஹ்களுடன் நடைபெறும் சம்பாஷனைகள் மற்றும் நிகழ்ச்சிகளே கனவுகளாகும். (நூல் : குர்துபி)
இன்றைய விஞ்ஞானம் கனவைப் பற்றி அது நம் நினைவுகள் மற்றும் சிந்தனைகளின் பிம்பங்கள் என்றும் நாம் தூங்கும் சமயம் நமது மூளை மிகக் குறைந்த அளவில் வேலை செய்யும் போது அதில் தோன்றும் சில படக்காட்சிகள் என்றும் பல விதமான கருத்துக்கள் கூறுகின்றது. அந்த அடிப்படையில் கனவிற்கும் அர்த்தமுண்டு. எல்லோருக்குமே சகஜமாக கனவு வரத்தானே செய்கிறது என்று கனவை நாம் சாதாரணமாக எடுத்துக் கொள்ள முடியாது. கனவிற்கும் பலவிதமான அர்த்தங்கள் உண்டு.
கனவுகள், அறிவியல் கண்டு பிடிப்புகளின் அடிப்படையாக இருந்துள்ளன. Benzene மூலக்கூற்றின் வடிவத்தை ஃப்ரடரிக் வோன் தன் கனவிலேயே முதலில் கண்டார்.
நரம்பு அதிர்வுகள் மின்சக்தியாக கடத்தப்படவில்லை; ரசாயன மாற்றங்களாகத் தான் கடத்தப்படுகின்றன என்று ஓட்டோ லூயி கண்டுபிடித்ததும் கனவில் தான்.
தையல் இயந்திரத்தின் வடிவமைப்பு, எலியஸ் ஹோவேயின் கனவில் தான் முதலில் வந்தது.
துப்பாக்கி ரவை செய்யும் தொழில் நுட்பத்தை ஜேம்ஸ் வாட் கனவாகக் கண்டார். இத்தகைய கனவுகளுக்கு அறிவியலில் விளக்கம் இல்லை.

ரேடியத்தை கண்டுபிடிப்பதற்குரிய நிரூபணத்தை கட்டமைக்க இரவு - பகலா மேரி கியூரி ரொம்பவும் கஷ்டப்பட்ட போது தூக்கத்தில் நிரூபணத்தின் சூத்திரம் எழுதி காண்பிக்கபட்டதாம் அந்த தூக்க கிறக்கத்திலேயே முகம் பார்க்கும் கண்ணாடியில் லிப்ஸ்டிக்கால் அதை எழுதி வைத்து விட்டு மீண்டும் உறங்கி விட்டார் .
விடிந்ததும் அதைப் பார்க்க அது ரேடியத்தை கண்டு பிடிக்கும் சமன்பாடாக இருந்தது
அவனுடைய விருப்பமின்றி அவனுக்குத் தெரிந்த வற்றிலிருந்து யாதொன்றையும் (மற்றெவரும் தங்கள் அறிவால்) அறிந்து கொள்ள முடியாது. (குர்ஆன் : 2:255)

## அதிசயம், அற்புதம், ஆச்சரியம் 11

ஒரு பல்லியால் முடியும் போது உங்களால் முடியாதா ?

இது ஜப்பானில் நடந்த உண்மை கதை !
ஜப்பான் நாட்டை சேர்ந்த ஒருவர் தன்னுடைய வீட்டை புதிப்பிப்பதற்காக மரத்தாலான சுவற்றை பெயர்த்து எடுத்து கொண்டு இருந்தார்.ஜப்பான் நாட்டில் பெரும்பாலும் வீடுகள் மரத்தாலயே கட்டப்பட்டிருக்கும் இரண்டு கட்டைகளுக்கு இடையில் இடைவெளி விட்டு கட்டப்பட்டிருக்கும்.
வீட்டு சுவற்றை பெயர்த்து எடுக்கும்போது இரண்டு கட்டைகளுக்கு இடையில் ஒரு பல்லி சிக்கி இருப்பதை பார்த்தார்.அது எப்படி சிக்கி இருக்கிறது என்று அந்த பல்லியை சுற்றி பார்த்தார்,அவர் அப்போதுதான் கவனித்தார். வெளி பகுதியில் இருந்து ஆணி அடிக்கும்போது அந்த ஆணி பல்லியின் காலில் இறங்கி இருக்கிறது.

அவருக்கு ஆச்சரியமாக இருந்தது அந்த ஆணி அடித்து குறைந்தது 3 வருடம் ஆகி இருக்கும். இந்த பல்லி 3 ஆண்டுகள் உயிருடன் எப்படி இருந்தது இதை நாம் கண்டு பிடித்து ஆக வேண்டும் என்று மேற்கொண்டு வேலை செய்யாமல் அந்த பல்லியை கண்காணித்து கொண்டு இருந்தார்
சிறிது நேரம் கழித்து இன்னொரு பல்லி அதன் அருகில் வருவதை கண்டார்.அந்த பல்லி தன் வாயில் இருந்து உணவை எடுத்து சுவற்றில் சிக்கிக் கொண்டு இருந்த பல்லிக்கு ஊட்டுவதை பார்த்தாஉம்ம்ீ.அவருக்கு தூக்கி வாரிப்போடது 3 ஆண்டுகளாக இந்த பல்லி சுவற்றில் சிக்கி இருந்த தன் சக பல்லிக்கு உணவு அளித்து வந்து உள்ளது.
ஒரு பல்லி தன் சக பல்லிக்கு எந்தவித எதிர்பார்ப்பும் இல்லாமல் 3 ஆண்டுகள் உணவளித்து வந்துள்ளது.
ஒரு பல்லியால் முடியும்போது உங்களால் முடியாதா...
உங்களை 10 மாதம் சுமந்த உம் தாய் தந்தைக்கு அவர்கள் முடியாத காலக்கட்டத்தில் உணவளிக்க முடியாதா ?
சிந்திப்பீர் நண்பர்களே!!

وَمَا مِنْ دَآ بَّةٍ فِى الْاَرْضِ اِلَّا عَلَى اللّٰهِ رِزْقُهَا وَ يَعْلَمُ مُسْتَقَرَّهَا وَمُسْتَوْدَعَهَا كُلٌّ فِىْ كِتٰبٍ مُّبِيْنٍ
இன்னும், உணவளிக்க அல்லாஹ் பொறுப்பேற்றுக் கொள்ளாத எந்த உயிரினமும் பூமியில் இல்லை; மேலும் அவை வாழும் இடத்தையும் (இருக்கும்) இடத்தையும், அவை (மடிந்து) அடங்கும் இடத்தையும் அவன் அறிகிறான். இவையனைத்தும் (லவ்ஹுல் மஹ்ஃபூல் என்னும்) தெளிவான புத்தகத்தில் (பதிவாகி) இருக்கின்றன. (குர்ஆன் : 11:6)

## அதிசயம், அற்புதம், ஆச்சரியம் 12

( மனித உடல் )
ஒருவனது உடம்பில் காலையும் வெட்டிவிட்டால் கைகளையும் மறுபடியும் வளர்வதில்லை. ஆனால், முடியையும் நகத்தையும் வெட்டிவிட்டால் திரும்ப வளர்வது ஏன்?
மனித எலும்பு ஒரு இன்ஜினீயரிங் அதிசயம்! அது ஒரு செங்கல்லைவிட முப்பது மடங்கு அதிகம் லோடு தாங்கக்கூடியது. தொடை எலும்பு மட்டும் 3,600 பவுண்டு தாங்கும். இவ்வளவு ஸ்ட்ராங்கான எலும்பு கொடுத்தும் நாம் அவ்வப்போது அதை உடைத்துக் கொள்கிறோம்.
எலும்பில் லேசான விரிசல் என்றால் 'இன்ஃப்ராக்ஷன்' என்பார்கள், எலும்பு உடைந்திருந்தால் 'ஸிம்பிள் ஃப்ராக்ச்சர்'. விபத்தில் எலும்பு பல இடங்களில் உடைந்திருந்தால் 'காம்பவுண்டு ஃப்ராக்ச்சர்,'
உடைந்த எலும்பை ரிப்பேர் செய்வது உடைந்த பீங்கான் கோப்பையை ரிப்பேர் செய்வது போலாகும். ஒரு வித்தியாசம் கோந்து எதுவும் தேவையில்லை. கோந்தை எலும்பில் உள்ள டிஷ்யூ செல்களே தங்களைத் தாங்களே உண்டாக்கிக் கொள்கின்றன. எலும்பின் டிஷ்யூவுக்கு இந்த மாதிரி திரும்ப வளரும் சக்தி இருக்கிறது.
எலும்பு விரியும்போது அல்லது முறியும்போது அந்த இடத்தைச் சுற்றி உறைந்த ரத்தம், லிம்ஃப் என்று ஒரு வஸ்து எல்லாம் சூழ்ந்து கொள்கிறது. ஒரு சில மணி நேரங்களில் புது டிஷ்யூ செல்கள் பிறக்கின்றன. படபடவென்று போர் கால நடவடிக்கையாய் கால்ஷியம் நிரப்பிக் கொண்டு மூன்று அல்லது நான்கு தினங்களில் ஒருமித்து உடைந்த இடத்தைப் பூசி மெழுகி விடுகிறது.
மேலும் மேலும் கால்ஷியம் சேர்ந்துக்கொள்ள அந்த இடம் பலப்படுத்தப்படுகிறது. ஒரு மாதங்களில் நார்மல்! உடைந்த சில இடத்தை பிளாஸ்டர் போட்டு அசங்காமல் வைத்திருந்தால் போதும்... மற்றதைத் தானே பார்த்துக் கொள்கிறது.
இது ரிப்பேர். கையை வெட்டுவது, காலை வெட்டுவது போன்ற வேலைகள் எல்லாம் எலும்புக்குப் பழக்கமில்லை. இருக்கிற எலும்பையே நீக்கிவிட்டு பல்லி வால் மாதிரி புதுசாக வளர்ந்து கொள் என்றால் அதற்கு ப்ரொக்ராம் கிடையாது.
முடி, நகம் எல்லாம் எலும்பு வகையல்ல. முடி 'ஃபாலிக்கிள்ஸ்' என்று சருமத்தில் உள்ள ஸ்பெஷல் பைகளில் வளர்கிறது. இந்த ஃபாலிக்கிள்களின் எண்ணிக்கை, அதன் பரவல், முடியின் பருமன் எல்லாமே அம்மாவின் வயிற்றிலேயே தீர்மானிக்கப்பட்டு விட்டவை.

சுருட்டை முடிகூட இப்படித் தான். ஆதிகாலத்தில் முடி குளிருக்கு இதமாகத் தேவைப்பட்டது. இப்போது அதன் ஆதிகால உபயோகங்கள் கழன்று விட்டன. அதேபோல்தான் நகமும். ஆதிகாலத்தில் இரையைக் கிழித்துக் குதற நகம் தேவைப்பட்டது. இதற்கும் ஸ்பெஷல் செல் இருக்கிறது. நகம் என்பது சருமத்தின் கெட்டிப் பதிப்புதான். கெராட்டின் என்கிற ப்ரொட்டினால் செய்யப்பட்டது. உடலில் எங்கெங்கே அழுத்தம் அதிகம் ஏற்படுகிறதோ (கை, கால் நுனிகள்) அங்கங்கே நகம் வளர்கிறது, பார்த்தீர்களா?!

ثُمَّ خَلَقْنَا النُّطْفَةَ عَلَقَةً فَخَلَقْنَا الْعَلَقَةَ مُضْغَةً فَخَلَقْنَا الْمُضْغَةَ عِظٰمًا فَكَسَوْنَا الْعِظٰمَ لَحْمًا ثُمَّ اَنْشَاْنٰهُ خَلْقًا اٰخَرَ فَتَبٰرَكَ اللّٰهُ اَحْسَنُ الْخٰلِقِيْنَ
பின்னர் அந்த இந்திரியத் துளியை அலக் என்ற நிலையில் ஆக்கினோம்; பின்னர் அந்த அலக்கை ஒரு தசைப் பிண்டமாக்கினோம்; பின்னர் அத்தசைப்பிண்டத்தை எலும்புகளாகவும் ஆக்கினோம்;
பின்னர், அவ்வெலும்புகளுக்கு மாமிசத்தை அணிவித்தோம்; பின்னர் நாம் அதனை வேறு ஒரு படைப்பாக (மனிதனாகச்) செய்தோம். (இவ்வாறு படைத்தவனான) அல்லாஹ் பெரும் பாக்கியமுடையவன் - (படைப்பாளர்களில் எல்லாம்) மிக அழகான படைப்பாளன். (குர்ஆன் : 23:14)

மனித உடலே ஆச்சரியம் என்றால் , அதனுள் இருக்கும் ஆன்மா பேராச்சரியம்

## அதிசயம், அற்புதம், ஆச்சரியம் 13

அதிசய அறுவை சிகிச்சை மருத்துவர் அரிகோ.

1921 முதல் 1971 பிரேசிலில் வாழ்ந்த புகழ்பெற்ற மருத்துவர் அதுவும் ஒரு அறுவை சிகிச்சை மருத்துவர்தான் அரிகோ.
முறையான மருத்துவ உபகரணங்கள் எதுவுமே இல்லாமல் சமையலறையில் பயன்படுத்தப்படும் கத்தி கத்தரிக்கோல் இடுக்கி பேனாக் கத்தி இப்படி கையில் கிடைக்கின்ற பொருட்களை எல்லாம் வைத்து வெற்றிகரமாக அறுவை சிகிச்சை செய்வதில் வல்லவர்.
யாருக்காவது அறுவை சிகிச்சை செய்ய வேண்டும் என்றால் சம்பந்தப்பட்ட நோயாளிக்கு எந்தவித மான மயக்க மருந்தோ அல்லது அனெஸ்தீஸியாவோ கொடுக்காமல் விழித்திருக்கும் போதே கையில் கிடைக்கும் கத்தியை எடுத்து நன்றாக குத்து குத்து என்று குத்தி குடைந்து எடுப்பார்.
அடுத்த சில நொடிகளிலேயே சம்பந்தப்பட்டவரின் வியாதி குணமாகிவிடும்.
இதில் ஆச்சரியம் என்னவென்றால் விழித்திருக்கும் நிலையில் அப்படி அறுவை சிகிச்சை செய்யும்போது சம்பந்தப்பட்ட நோயாளிக்கு ஒரு சிறு அளவு கூட வலி என்பதே இருக்காது.
5 அல்லது 10 நிமிடங்களிலேயே அறுவை சிகிச்சை முடிந்துவிடும்.
உலகம் முழுவதும் பல மருத்துவர்கள் கைவிட்ட குணப்படுத்தவே முடியாத பல சிக்கலான நோய்களுக்கும் தனது அறுவை சிகிச்சை மூலம் குணப்படுத்தி அனைவரையும் ஆச்சரியத்தில் ஆழ்த்தியவர்.
இதில் என்ன சிறப்பு என்கிறீர்களா?

உண்மையில் சொல்லவேண்டுமென்றால் இவர் முறையாக மருத்துவ படிப்பை படிக்காதவர்.
இன்னுமொரு ஆச்சரியமான தகவல் இவர் பள்ளிப்படிப்பையே முடிக்காதவர்.
ஏழ்மையான விவசாய குடும்பத்தில் பிறந்த அரிகோ வெறும் மூன்றாம் வகுப்பு வரை மட்டுமே படித்துள்ளார்.
தனது பதினான்காவது வயதில் ஒரு நிலக்கரி சுரங்கத்தில் சாதாரண தொழிலாளியாக பணிக்கு சேர்ந்தார்.
கிட்டத்தட்ட 20 வயது வரை அதே பணியை மட்டுமே செய்து வந்தார்.
திடீரென்று கடுமையான தலைவலி தூக்கமின்மை உள்ளிட்ட விவரிக்க முடியாத சில உடல்நல பிரச்சனைகளால் அவதிப்பட்டார்.

அவரது மனைவிக்கு தெரிந்த பெண்மணி ஒருவருக்கு கர்ப்பப்பை புற்றுநோய் ஏற்பட்டு அது குணப்படுத்த முடியாத நிலையில் மருத்துவர்கள் இனி ஒன்றும் செய்யமுடியாது என கைவிட்டு விட்டனர்.
தனது மனைவியுடன் அந்த பெண்மணியை பார்க்க சென்ற அவர் என்ன நினைத்தாரோ தெரியவில்லை திடீரென சமையல் அறையில் இருந்த ஒரு கத்தியை எடுத்து பெண்ணுருப்பின் வழியாக கத்தி உள்ளேவிட்டு நன்றாக குடைந்தார்.
இதைக் கண்ட அருகில் இருந்த பெண்மணிகள் தலைதெறிக்க ஓடினர்.
ஆனால் அவரோ உள்ளே இருந்து ஒரு கட்டி ஒன்றை எடுத்து வெளியே தூக்கி எறிந்தார்.
இத்தனை களேபரம் நடந்தாலும் சம்பந்தப்பட்ட பெண்மணிக்கு ஒரு சிறு துளி அளவு கூட வலி என்பதே ஏற்படாமல் அமைதியாக இருந்தார்.
பின்னர் மருத்துவர்கள் வந்து சோதித்து பார்த்ததில் ஆச்சரியப்படத்தக்க வகையில் அவருக்கு கர்ப்பப்பை புற்றுநோய் முற்றிலும் குணமடைந்து இருப்பது தெரியவந்தது.
அன்று முதல் தான் அரிகோவின் வாழ்க்கையில் திருப்புமுனை என்பது ஏற்பட்டது.
அவரது புகழ் பிரேசில் நாடு முழுக்க பரவ பலரும் அவரிடம் வைத்தியம் பார்க்க படையெடுத்து வந்த வண்ணம் இருந்தனர்.
முறையற்ற முறையில் மருத்துவம் பார்ப்பதாக இவர் மீது மருத்துவ இயக்கத்தினர் புகார் கொடுத்ததன் அடிப்படையில் நீதிமன்றம் அவருக்கு சிறை தண்டனை விதித்தது.
ஆனால் சிறைச்சாலைக்கு உள்ளேயும் அவர் தனது அதிசயத்தக்க மருத்துவத்தால் சிறைச்சாலையாக மருத்துவ சாலையாக மாற்றினார்.

இரு முறை அரசு தானாக முன்வந்து அவரை போலி டாக்டர் என்று கூறி கைது செய்தது. ஆனால், அவர் செய்த அறுவை சிகிச்சைகளில் ஒன்றில் கூட யாராலும் எந்த ஒரு தவறையும் கண்டு பிடிக்க முடியவில்லை. அதே போல அவருக்கு எதிராக யாரும் புகார் செய்தது கூட கிடையாது. இன்னும் சொல்லப் போனால் பிரேசில் நாட்டு மக்கள் அவரை பெருமைப்படுத்தித் தான் பேசினார்கள்
அவரது புகழ் பிரேசில் மட்டுமின்றி உலக நாடுகள் முழுவதும் பரவி பலரையும் ஆச்சரியத்தில் ஆழ்த்தியது.
பல்துறை மருத்துவர்கள் தனித்தனியாக செய்யும் மருத்துவத்தை இவர் ஒரே ஆளாக எப்படி செய்கிறார் என்று பலரும் ஆச்சரியத்தில் வாயடைத்து நின்றனர்.
இவர் குறித்து ஆய்வு செய்வதற்காக உலகம் முழுவதும் தலைசிறந்த மருத்துவர்கள் இவர் அறுவை சிகிச்சை செய்யும்போது கேமரா ஒன்றை வைத்து படம் பிடித்து ஆய்வு செய்தனர்.

அப்படி படம் பிடித்த போது எடுக்கப்பட்ட வீடியோதான் கீழே காண்பது.
கண் குறைபாடு சம்பந்தமாக வந்த மூதாட்டி ஒருவருக்கு கண்ணில் குறை இருப்பதை கண்டறிந்து உடனடியாக ஒரு கத்தியை எடுத்து கண்ணில் தனது கை போன இடத்தில் கத்தியை நன்றாக கண்ணில் உள்ளே வைத்து ஆட்ட சில நொடிகளிலேயே மூதாட்டியின் கண் புரை நோய் குணமாகியது.

இது ஒரு சின்ன உதாரணம் மட்டுமே.
தனது 20 ஆண்டுகால மருத்துவ பணியில் உலகம் முழுவதும் சுமார் இருபது லட்சம் பேருக்கு காசு எதுவும் வாங்காமல் இலவசமாகவே மருத்துவம் பார்த்து நோயை குணப் படுத்தி உள்ளார்.
சரி மருத்துவமே படிக்காமல் எப்படி மருத்துவம் செய்ய முடிகிறது என்கிறீர்களா?
பிரேசில் நாட்டில் ஜே. அரிகோ வாழ்ந்து வந்தார். அவருக்கு எழுதப் படிக்கத் தெரியாது. அவரது கனவில் அடிக்கடி ஒரு டாக்டர் வந்து கொண்டு இருந்தார்
1921 ம் ஆண்டில் திடீரென தனக்கு விவரிக்கமுடியாத தலை வலி மற்றும் உடல் நலக்குறைபாடு ஏற்பட்டபோது வெள்ளை கோட்டு அணிந்த வழுக்கைத்தலையான ஒரு நபர் கனவில் வந்து அவரது உடலின் நுழைய அனுமதி கேட்டு பின்னர் அவரை உடலில் இறங்கியதாக அரிகோ தெரிவித்துள்ளார்
1921 ம் ஆண்டு பிரேசிலில் வாழ்ந்து மறைந்த மருத்துவரான டாக்டர்.பிரிட்ஸின் ஆவி தான் தனது மருத்துவ குழுவினருடன் அரிகோவின் உடம்பில் இறங்கி மருத்துவம் பார்த்ததாக நம்பப்படுகிறது.
சிக்கலான பல அறுவை சிகிச்சைகளை எந்தவிதமான தோல்வியும் இன்றி மயக்க மருந்து எதுவும் இன்றி மருத்துவ உபகரணங்கள் எதுவுமின்றி எப்படி இலட்சக்கணக்கான மக்களை குணப்படுத்தினார் என்பது மருத்துவ உலகம் இதுவரை கண்டுபிடிக்க முடியாத ஆச்சரியமாகவே இதுவரை இருந்து வருகிறது.
இத்தனைக்கும் ஜே. அரிகோ நோயாளிகளாக வந்தவர்களிடம் வியாதி என்னவென்று கூட கேட்பது இல்லை. பெயரை மட்டும் கேட்பார். யாராவது தங்களுக்கு வந்த வியாதியைப் பற்றி எடுத்துச் சொன்னால் எல்லாம் எனக்குத் தெரியும் என்று கூறி விடுவார். அதற்கு மேல் வந்தவர்களை பேச அனுமதிக்க மாட்டார்.
இப்படிப்பட்ட ஜே. அரிகோ 1971 இல் சாலை விபத்தில் காலமானார். அவர் இறப்பதற்கு சில மாதங்களுக்கு முன்பே," நான் பூமிக்கு வந்த வேலை முடிவை நெருங்கிக் கொண்டு இருக்கிறது. அதனால் இன்னும் அதிக நாள் நான் உயிருடன் இருக்க மாட்டேன்" என்று சொல்லிக் கொண்டு இருந்தார்.
இந்நிலையில் அவர் சொன்னபடியே சில நாட்களில் மரணம் அவரை தழுவியது ஒரு அமானுஷ்ய விஷயம் தானே!

## அதிசயம், அற்புதம், ஆச்சரியம் 14

மனித உடலைப் பற்றி வியப்பூட்டும் படியான செய்திகள்
இருபத்தோரு வயது முடிவதோடு உடலின் எல்லா உறுப்புகளின் வளர்ச்சியும் நின்றுவிடுகிறது. கடைசிவரை தொடர்ந்து வளர்வது காது மட்டும் தான்! சின்னதாக... கொஞ்சமாக... உங்களால் கண்டுபிடிக்க முடியாத அளவுக்கு!
ஆயிரம் வருடங்கள் நீங்கள் உயிரோடு இருந்து பர்த்டே கொண்டாடினால், அப்போது உங்கள் காது - ஒரு குட்டி யானைக்காது 'சைஸ்' இருக்கும்!
ஒரு சராசரி மனிதனின் உடலில் இருக்கும் ரோமங்களின் எண்ணிக்கை சுமார் ஐந்து லட்சம். உடலில் ரோமங்கள் இல்லாத இடங்கள் இரண்டே இரண்டுதான் - உள்ளங்கை, பாதத்தின் கீழ்ப் பகுதி!
உங்கள் தலைமுடி படு ஸ்ட்ராங்க்! ஓர் அலுமினியக் கம்பிக்கு இணை. ஒரு சோதனையில் தலை முடிகளை உபயோகித்துத் தாம்பு (முடி)க் கயிறு தயாரித்து ஒரு சின்ன சைஸ் காரை வெற்றிகரமாகத் தொங்கவிட்டார்கள்.
பகல் வேளையில் முழித்துக் கொண்டிருந்தாலும், ஆயிரக்கணக்கான முறை கண்ணைச் சிமிட்டுகிறீர்கள். இதை மொத்தமாகக் கணக்கெடுத்தால், இரவைத் தவிர பகலிலும் பாதி நேரம் நீங்கள் கண்ணை மூடிக்கொண்டிருக்கிறீர்கள் என்று சொல்லலாம்!

உங்கள் உடம்பிலேயே மிகவும் வலுவான விஷயம், பல்லின்மீது இருக்கும் எனாமல்தான் இது யானை தந்தத்தைவிட வலுவுள்ளது என்று கண்டுபிடித்திருக்கிறார்கள்.
விதவிதமான, பல்லாயிரக்கணக்கான வேலைகளை அலட்சியமாகச் செய்யக்கூடிய ஒரே ஆயுதம் மனிதனின் கை. ஒரு 'கப்'பிலிருந்து ஸ்பூனில் பாயசத்தை எடுக்க முடிவு செய்கிறீர்கள். உடனே முப்பது ஜாயிண்ட்டுகளும், ஐம்பது தசைகளும் இயங்க ஆரம்பிக்கின்றன!
80 கிலோ எடையுள்ள வஸ்துவை, ஒரு சதுர அடியில் மூன்றில் ஒரு பாகம் உள்ள ஒரு சின்ன விஷயம் 70, 80 ஆண்டுகள் துளிகூடத் தேயாமல் - தாங்கி நிற்கிறது. மனிதனைத் தாங்கி நிற்கும் பாதங்களைக் குறிப்பிடுகிறேன்!

இதயத்தை எடுத்துக் கொள்ளுங்கள். ஒரு நாளைக்குச் சுமார் ஒருலட்சம் தடவை'லப் டப்' செய்கிறது. இப்படி வருஷத்துக்கு நாலு கோடி தடவை!
உங்கள் உடலை இரு பாதியாக எடுத்துக் கொண்டால், இரண்டு பக்கங்களும் Ditto-வாக இருக்காது. உங்களை நீளவாக்கில் அப்படியே மடித்தால், இரண்டு பாதிகளும் கொஞ்சம் அப்படி இப்படித்தான் பொருந்தும்.

சரி, இப்போது உங்கள் உடலை ஒரு சின்ன மளிகைக் கடையாக்கிப் பார்க்கலாம். உங்களுக்குள்ளேயே நாலு அவுன்ஸ் சர்க்கரை, இரண்டு 'ஸ்விம்மிங் பூல்'களை க்ளீன் பண்ணுகிற அளவு குளோரின், மூணு பவுண்ட் கால்ஷியம், இருபதாயிரம் தீக்குச்சிகள் பண்ணும் அளவு பாஸ்பரஸ், பத்து பார் சோப்புகளுக்கான Fat இருக்கின்றன. 'இரும்பு' கொஞ்சம் குறைச்சல். உங்கள் உடலில் இருக்கும் இரும்புச் சத்தை எடுத்து ஒரு ஆணி வேண்டுமானால் செய்ய முடியும் - இரண்டு அங்குல ஆணி!
இத்தனையும் இருபது சதுர அடி தோலுக்குள் கச்சிதமாக 'பேக்' செய்யப்பட, ஏன் அலட்டிக் கொள்ளமாட்டீர்கள்?

لَقَدْ خَلَقْنَا الْاِنْسَانَ فِىْۤ اَحْسَنِ تَقْوِيْمٍ
திடமாக, நாம் மனிதனை மிகவும் அழகிய அமைப்பில் படைத்தோம். (குர்ஆன் : 95:4)

## அதிசயம், அற்புதம், ஆச்சரியம் 15

ஹிப்னாடிசம் (அறிதுயில் )

ஹிப்னாடிசம் (அறிதுயில் ) என்பது விழிப்புணர்வுடன் கூடிய உறக்க நிலைக்கு கொண்டு செல்லும் முறை.
பல்வேறு முறைகளைக் கொண்டு ஹிப்னாட்டிச அறிதுயில் நிலையை ஏற்படுத்த முடியும்.
இந்த உறக்க நிலையில் ஆழ்மனதில் உள்ள எதிர்மறையான எண்ணங்களை தவறான பழக்கவழக்கங்களை மாற்ற கட்டளைகள் மற்றும் பரிந்துரைகள் மூலம் தீர்வு காண முடியும்.
தற்காலிகமான ஆழ்நிலை உறக்கத்துக்கு கொண்டு சென்று, அவரிடம் பேச்சுக் கொடுத்து, அவரது உள்ளத்தில் இருப்பதை அவர் அறியாமலேயே வெளிக் கொண்டு வரும் உத்தி.
இது எல்லோருக்கும் வேலை செய்யாது. யார் சுயமாக தன்னைத்தானே ஹிப்னாடிசம் செய்து பழகி இருக்கிறார்களோ அவர்கள்தான் மற்றவர்களை ஹிப்னாடிசம் செய்ய முடியும்.

ஜேம்ஸ் எஸ்டெய்ல் (1808 - 1859) என்ற அறுவை சிகிச்சை நிபுணர், பிரிட்டிஷ் கிழக்கிந்திய நிறுவனத்தில் வேலை பார்த்தார். அப்போது, மயக்க மருந்து இல்லாமல், hypnotism (அறிதுயில் நிலை - மன வசியம்) மூலம் நோயாளிகளை அரை மயக்க நிலையடையச் செய்து, அறுவை சிகிச்சை செய்து சாதனை படைத்தவர்.
மனவசியத்துக்கு இன்று வரை எந்த அறிவியல் விளக்கமும் இல்லை.
தன் அறிதுயில் (Self hypnosis) மூலம் உன்னை நீ அறிவாய்'
தன் அறிதுயில் என்பது பழங்கலையாகும். அது பொது அறிவுக்கு மேம்பட்ட நிலையாக உள்ளது. அது ஒரு முறை மட்டுமன்று; ஒரு நுணுக்கமும் ஆகும்.
தானாகவே செய்து கொள்ளப்படுவது தன் அறிதுயில் எனப்படும். இதைச் செய்பவர் தன் துயிற்றுபவர் (Self-hypnolist) ஆவார். இதில் அனைத்தும் தன் துயிற்றுபவராலேயே
செய்யப்படுகின்றது. ஆனால், அறிதுயிலிலோ அனைத்தும் துயிற்றுபரால் செய்யப்படுகிறது. செய்யப்படுவதைத் துயில்பவர் ஏற்கிறார்.
தன் அறிதுயிலில் நான்கு நிலைகள் அல்லது படிகள் உள்ளன:
தன் தளர்ச்சி (auto-relaxation)
தன் கருத்தேற்றம் (auto-suggestion)
தன் பகுப்பு (auto-analysis)
தன் மருத்துவம் (auto-theraphy)
இந்நான்கு நிலைகளும் ஒருவர் கைவரப்பெற்றால், அவற்றை எந்த சிக்கலையும் போக்க எந்த சமயத்திலும் பயன்படுத்தலாம்.
செய்வதற்குத் தகுந்த காரணங்கள் இல்லாத வரை, ஒருவர் தாமே எதையும் செய்ய இயலாது; பிறரையும் செய்விக்க இயலாது.'
சூஃபி ஞானிகள் தன்னைத்தானே வசியம் செய்து கொள்ள தெரிந்தவர்கள் ஆவார்கள்
ரமண மகரிஷி தன்னைத் தானே மன வசியம் செய்துகொண்டவர்.
உஹது போரில் அலி (ரலி) அவர்களின் உடலில் தைத்த அம்பை எடுக்க முயன்றனர். பொறுக்க முடியாத வலியால் அலி (ரலி) துடித்தார்கள்.
அண்ணல் நபி (ஸல்) அவர்கள் அறிவுறுத்தியபடி அலி (ரலி) தொழுது கொண்டிருக்கும்பொழுது அந்த அம்பை உருவினர்.
தொழுது முடித்த பிறகே அலி (ரலி) அவர்கள் அம்பு எடுக்கப்பட்டதை அறிந்தார்கள். தொழுகையில் அத்தகு ஆழமான இறை ஈடுபாடு இருக்க வேண்டும். பிறவற்றின் நினைவு கூடவே கூடாது

## அதிசயம், அற்புதம், ஆச்சரியம் 16

சிந்திப்பது மூளையா ?
விஞ்ஞானம் சிந்திப்பது மூளைதான் என்கிறது. மூளையில் இன்ன இடத்தில் யோசனை நடக்கிறது என்று அட்ரஸ் கொடுக்க விஞ்ஞானத்தால் முடியவில்லை. எக்ஸ்பர்ட்டுகளிடையே அபிப்பிராய பேதம் இருக்கிறது.

'பிஹேவியரிஸ்ட்டுகள் மனம்' என்று தனியாகக் கிடையாது. சிந்திப்பது என்பது, 'வெளி உந்துதல்களுக்கேற்ப பேச்சில்லாத வார்த்தைகளை அமைப்பது' என்கிறார்கள். இது ஒப்புக் கொள்ளப்படவில்லை.
யோசனை என்பதில் கொஞ்சம் உணர்ச்சிகளும் கலந்திருப்பதை நம்மால் உணர முடிகிறது. இதிலேயே இரண்டு விதம் இருப்பதையும் உணர முடியும். சினிமாவுக்குப் போகுமுன் சட்டை போட்டுக் கொள்ளவேண்டும், காசு எடுத்துக் கொள்ள வேண்டும். பஸ் பிடிக்க வேண்டும் என்று நிகழ்ச்சி நிரல் அமைத்துக் கொண்டு கோவையாக (Rational) சிந்திப்பது ஒரு பகுதி.
கனவுகளிலும், சில மனோ வியாதிகளிலும் (Schizophrenia) ஏற்படும் சிந்தனைகள் பகுத்தறிவில்லாதவை. அறிவுபூர்வமான யோசனைகள் ஸெரிப்ரல் கார்ட்டெக்ஸ் என்கிற பகுதியிலும், உணர்ச்சி பூர்வமான யோசனைகள் மூளையில் பழைய லிம்பிக் சிஸ்டம் என்னும் பகுதியிலும் நிகழ்கின்றன என்று நம்புகிறார்கள். அரை நூற்றாண்டு ஆராய்ச்சிக்குப் பின்னும் இன்னும் தெளிவாக, 'இதோ பார்யா, இந்த இடத்தில்தான் நினைக்கிறோம்' என்று சொல்ல முடியவில்லை. யோசனைக்கு அறிவு முக்கியம் என்பது தெரிகிறது. படிப்பு, வளர்ந்த சூழ்நிலை எல்லாமே யோசனையின் தரத்தைப் பாதிக்கின்றன. இதற்கான காரணம் கார்ட்டெக்ஸ்தான் என்கிறது ஒரு கோஷ்டி.

ராபர்ட் கலாம் போஸ் என்கிற நரம்பு நிபுணர், யோசனை என்பது ந்யூரன்களினைத் தாங்கும் க்ளையல் ஸெல்களில் நிகழ்கிறது என்று சூடம் அணைக்கிறார்.
கார்ல் ப்ரிப்ராம் என்கிற ந்யூரோ பிஸியால் ஜிஸ்ட், 'யோசனை என்பது ஒருவிதமான ஹோலோகிராம் போல முப்பரிமாண பிம்பமாக நிகழ்கிறது' என்று ஒரு புரட்சிகரமான கருத்தைத் தெரிவித்திருக்கிறார்.
சோவியத் நிபுணர் அலெக்ஸாண்டர் நூரியா, மூளைச் சேதம் அடைந்த பேஷண்ட்டுகளைப் பரிசோதித்து 'ஒவ்வொரு வகை யோசனைக்கும் ஒவ்வொரு இடம் இருக்கிறது' என்கிறார்!
என்றைக்காவது சிந்தனை எங்கே மூளைக்குள் நிகழ்கிறது என்று கண்டுபிடித்து, கனெக்ஷனெல்லாம் தெரிந்துகொண்டு, செயற்கை மூளையை உருவாக்கி, ப்ரோக்ராம் பண்ணாமல் சுயமாகவே சிந்திக்கும் கம்ப்யூட்டர்களை உருவாக்குவார்களோ என்னவோ...?!

ஆனால், இப்போதைக்கு ஒன்றும் நிச்சயமாக இல்லை.
யோசனையின் போது மூளைக்குள் எவ்வாறு பல்ஸ் போகிறது. எப்படி வெளிப்படுகிறது என்பது மட்டும் தெளிவாகத் தெரிந்து வைத்திருக்கிறார்கள். எங்கே, எப்படி, என்ன நிகழ்கிறது என்பது பற்றித் தற்போதைக்குக் கொஞ்சம் குன்ஸாகத்தான் இருக்கிறது. மூளைக்குள் நிகழ்கிறது இது சத்தியம்! மூளையின் பல பாகங்களின் ஒருமித்த ஒரு இயக்கம்தான் சிந்தனை என்பதை ஒப்புக்கொள்ளலாம் போலிருக்கிறது என்கிறது விஞ்ஞானம்
சிந்தனை , மனம் என்பதெல்லாம் மூளையில் நடைபெறுவதாக எனக்குத் தெரியவில்லை. உதாரணமாக மூளைச்சாவு அடைந்தவனுக்கு கபரில் முன்கர் நக்கீர் கேள்வி கேட்கமாட்டார்களா? கேட்பார்கள். அவனும் பதில் சொல்வான். மூளையைக் கொண்டல்ல ;
மண்ணோடு மண்ணாக மண்டையோடோடு மூளையும் மக்கிப்போனவனிடம் மறுமையில் இறைவன் கேள்வி கணக்கு கேட்காமலா போவான் ? கேட்பான்.அவனும் பதில் சொல்வான் மூளையைக் கொண்டல்ல .
அப்படியென்றால் சிந்தனை செய்வது மனமா ? மூளையா ? ரூஹா ? சொல்லுங்கள்.

اَللهُ يَتَوَفَّى الْاَنْفُسَ حِيْنَ مَوْتِهَا وَالَّتِيْ لَمْ تَمُتْ فِيْ مَنَامِهَا فَيُمْسِكُ الَّتِيْ قَضٰى عَلَيْهَا الْمَوْتَ وَ يُرْسِلُ الْاُخْرٰى اِلٰى اَجَلٍ مُّسَمًّى اِنَّ فِيْ ذٰلِكَ لَاٰيٰتٍ لِّقَوْمٍ يَّتَفَكَّرُوْنَ
மனிதர்கள் இறக்கும்பொழுதும், இறக்காமல் நித்திரையில் இருக்கும்பொழுதும் அல்லாஹ்வே அவர்களுடைய உயிரைக் கைப்பற்றுகிறான். பின்னர், எவர்கள் மீது மரணம் விதிக்கப்பட்டதோ அவர்களுடைய உயிரை(த் தன்னிடமே) நிறுத்திக் கொள்கிறான். மற்றவர்க(ளின் உயிர்க)ளை, குறிப்பிடப்பட்ட காலம் வரையில் வாழ அவன் அவர்களிடமே அனுப்பி விடுகின்றான். சிந்திக்கக் கூடிய மக்களுக்கு, நிச்சயமாக இதில் பல படிப்பினைகள் இருக்கின்றன. (குர்ஆன் : 39:42)

ஒவ்வொரு மனிதனுக்கும் நப்ஸும் ரூஹும் உள்ளன. நப்ஸில் உணரும் தன்மையும் அறிவும் உள்ளன. ரூஹில் அசையும் தன்மையும் மூச்சு வாங்கும் தன்மையும் உள்ளன. மனிதன் தூங்கும் போது அல்லாஹ் நப்ஸை மட்டுமே கைப்பற்றுகிறான். ரூஹை கைப்பற்றுவதில்லை " ( குர்துபி)

உடலில் அடர்ந்திருக்கும் நப்ஸின் ஆளுமையும் ஒரு கட்டத்தில் உயிரற்று போகிறது என்பதும் ஆனால் ரூஹ் எந்த நிலையிலும் இறப்பதில்லை என்பதும் இதன் தெளிவாகும்.
எட்டு பொருட்கள் உண்டு, அவைகளுக்கு அழிவே இல்லை. அதற்கு எப்போதும் அல்லாஹ் ஹயாத்தை நிலையாக்கி இருக்கிறான். அவை அர்ஷு,குர்ஷு, லௌஹு (விதிப்பலகை ), கலம் (எழுதுகோல் ), சுவர்க்கம், நரகம், மனித முதுகன்தண்டின் நுனி "லிலாஉ " என்று சொல்லப்படுகிற எலும்பு, ரூஹ், இவைகளுக்கு அழிவில்லை என்பதாக சொல்லப்படுகிறது.

மனித உடலில் இருந்து வெளியேறும் ரூஹ் ஜீவிதமாகவே இருக்கும். அதற்கு மரணம் என்பது விதியாகவில்லை. அது என்னவாகும் என்பதை ஞானம் மிகைத்தவர்களால் அன்றி எவராலும் எடுத்தறிவிக்க முடியாது. அதன் மூலம் எது ? என்ன ? என்பது ஆன்மீக பாடமாகும்.

17 ம் நூற்றாண்டில் டெஸ்கார்ட்டஸ் , பிரபஞ்சத்தை இரண்டு பாகங்களாகப் பிரித்தார் . ஒன்று மனம் அல்லது சிந்தனை . மற்றது ஜடப் பொருள் . இவரது பிரசித்த கோட்பாடு :
" நான் சிந்திக்கிறேன் அதனால் நான் இருக்கிறேன் "
"நான்" என்பது தன் உடலிருந்து வேறுபட்டு சிந்திக்கும் பகுதி (அது ரூஹா இருக்கலாம் ) மனிதன் தன்னைப் புறப் பொருள்களிலிருந்து முழுவதும் பிரித்துக் கொண்டு சிந்திக்க முற்படுகிறான்
சிந்திப்பது மூளையா ? நீங்கள்தான் சொல்லவேண்டும் .

**அதிசயம், அற்புதம், ஆச்சரியம் 17**

(குர்ஆன் ஓர் அற்புதம்)



வாஷிங்டன் நகருக்கு அருகிலுள்ள பால்டிமோரில், மைக்கேல் ஹெச். ஹார்ட் அவர்களோடு மதிப்பிற்குரிய மணவை முஸ்தபா பேசிக் கொண்டிருக்கும்போது சொன்னார்:
"நான் சமீபத்தில் கெய்ரோவில் நடைபெற்ற ஒரு இஸ்லாமிய நிகழ்ச்சியில் கலந்து கொண்டேன். அக்கூட்டத்தில் பேசிய இஸ்லாமிய மார்க்க அறிஞர்கள் பலரும் இஸ்லாத்தை ஒரு ஆன்மீக மார்க்கம் என்ற அடிப்படையில்- உணர்வில் பேசினார்களே தவிர, அறிவியல் போக்கில் யாருமே பேசாதது எனக்குப் பெரும் ஏமாற்றமாக இருந்தது. இஸ்லாத்தில் ஆன்மீகம் ஒரு பகுதி மட்டுமே. மற்றபடி அறிவியல் போக்கிலான மார்க்கமே இஸ்லாம் என்பது எனக்குள்ள அசைக்க முடியாத நம்பிக்கை மட்டுமல்ல; உண்மையும் கூட ஏனோ, இஸ்லாமிய அறிஞர்கள் அறிவியல் பக்கமே போக மாட்டேன் என்கிறார்கள்.

அறிவியல் அடிப்படையில் இஸ்லாத்தை விளக்கினால் அல்லவா இஸ்லாத்தினுடைய சிறப்பு மட்டுமல்ல, பெருமானாரின் வாழ்வும் வாக்கும் எந்த அளவுக்கு உலகுக்கு வழிகாட்டும் தன்மையுடையதாக விளங்குகிறது என்பது புலப்படும். நீங்களாவது அந்தக் காரியத்தை முனைப்போடு செய்ய முன்வாருங்கள்."
"எனக்கு என் முயற்சிகளுக்கு அழைப்பு விடுத்தார். மைக்கேல் ஹெச்.ஹார்ட் பேசும்போது அவர் உச்சரித்த "Islam is a Scientific way of life" என்ற வாசகம் என்னை வெகுவாகக் கவர்ந்தது. ஒரு யூதராக இருந்தும் இஸ்லாத்தின் மீது இந்த அளவுக்கு மதிப்பும் மரியாதையும் உடையவராக இருப்பதோடு, தன் உள்ளத்து உணர்வுகளைப் பிசிறில்லாமல் பதிவு செய்ய முற்படும் அவரது நடுவு நிலைப் போக்கு, அவரின் மீது எனக்கு மிகுந்த மதிப்பையும் மரியாதையும் ஏற்படுத்தியது" என மணவை முஸ்தபா அவர்கள் குறிப்பிடுகிறார்.
இந்தக் கூற்று, அதாவது ஒரு யூதரே திருக்குர்ஆன் ஓர் அறிவியல் நூல் என்னும் போது, முஸ்லிம்களின் திருமறையே அறிவியலாக இருந்து அறிவியல் வளர்ச்சிக்கு தனது பங்களிப்பைச் செய்திருக்கிறது என்பது உண்மை.

பெருமானார்(ஸல்) அவர்களும், அவர்கள் வாயிலாக உலகுக்குக் கிட்டிய திருமறையும் அறிவுத் தேடலின் அவசியத்தை மீண்டும் மீண்டும் வலியுறுத்துவதாகும். இதைக் குறித்து திமிஷ்கு (டமாஸ்கஸ்) பல்கலைக் கழகப் பேராசிரியர் டாக்டர் முஹம்மது இஃப் ஜாஸுன் கதீப் கூறுகிறார் :
"திருக்குர்ஆனில் மொத்தம் 6666 வசனங்கள் உள்ளன. சட்டமியற்றுதல் பற்றிப் புனிதத்திருமறையாம் திருக்குர்ஆனில் இருநூற்று ஐம்பது திருவசனங்கள்தாம் உள்ளன. ஆனால், இயற்கை பற்றி ஆராயவும் சிந்திக்கவும் அறிவைச் சிறந்த முறையில் பயன்படுத்தவும் அறிவியல் ஆய்வுகளை சமுதாய வாழ்வின் ஒரு முக்கிய அம்சமாக ஆக்கிக் கொள்ள வேண்டும் என்பது பற்றி வலியுறுத்தும் திருவசனங்கள் எழுநூற்று ஐம்பது உள்ளன.மறைமுக விஞ்ஞானத்தைக் கூறும் வசனங்கள் சுமார் 500 வசனங்கள். அதென்ன மறைமுகமான விஞ்ஞானம் ....?

اَلَمْ تَرَوْا كَيْفَ خَلَقَ اللّٰهُ سَبْعَ سَمٰوٰتٍ طِبَاقًا ۙ
ஏழு வானங்களையும், அடுக்கடுக்காக எவ்வாறு அல்லாஹ் படைத்திருக்கின்றான் என்பதை நீங்கள் கவனிக்கவில்லையா? (குர்ஆன் : 71:15)

மேற்கண்ட வசனத்தில் அவன் ஏழு வானங்களை அடுக்கடுக்காக அடுக்கி வைத்திருப்பதை நாம் எப்போது கவனித்தோம் ? இன்னும் இல்லை . விஞ்ஞான வளர்ச்சியால் மட்டுமே காண முடியும் . விஞ்ஞானத்தின் அபார வளர்ச்சியில் இனி இன்ஷா அல்லாஹ் காண்போம் . அன்றைய தினம் இக்குர்ஆன் வசனம் மெய்பிக்கப்படும் . வாழ்வியல் முறையை விளக்கும் 250 வசனங்களைத் தழுவி பல்லாயிரக்கணக்கான கிதாபுகள் எழுதப்பட்டும் , அதனை போதிக்கப்பட்டும் வருகிறது . நவீன விஞ்ஞானத்தின் கோட்பாட்டை ரொம்ப எளிமையாக சொல்லி காட்டும் குர்ஆன் , இதை போதிக்கும் மதரஸாக்களில் வானத்தை உற்று நோக்கும் ஒரு டெலஸ்கோப் இல்லாவிட்டாலும் , ஒரு பைனார்குலர் கூட கிடையாது .

ஒரு யூதருக்கு நன்கு புலப்படுகிற அறிவியல் விஷயம் தினம் தினம் குர்ஆனை ஓதும் இஸ்லாமியராகிய நமக்கு நாள்பட்டு புரிகிறது.
அண்ணலெம் பெருமானார் (ஸல்) அவர்கள் கூறியதெல்லாம் ஆன்மீகத்தை மட்டுமல்ல அறிவியலையும்தான் . வலது புறமாக தலை முதலில் சீவுங்கள் , வலது காலில் செருப்பை முதலில் அணியுங்கள் என்று வலது வலதாக முற்படுத்தியதும் , சிறுநீர் கழித்து டெலாக்கட்டி பிடிப்பதிலும் , உணவு உண்ட பின் கை விரல்களை சூப்பச் சொல்வதிலும் ஆன்மீகத்தைக் காட்டிலும் அறிவியலே மிகைத்திருந்தது என்பது நான் சொல்லித் தெரிய வேண்டியதில்லை .
நபிகளார் சொன்னதில் அறிவியல் மிகைத்திருந்தது. அறிவியலுக்கென்று ஒரு நபி வந்திருக்கிறார்கள் என்றால் அது அண்ணலெம் பெருமானார் (ஸல்) அவர்கள் மட்டுமே .
அறிவியலை ஏகமாக கூறும் குர்ஆனை யூதர்களும் , கிருஸ்தவர்களும் , ஜெர்மானியர்களும் ஆய்வு செய்து விஞ்ஞான கண்டுபிடிப்புகளை உலகுக்கு அளிக்கிறார்கள் . நமக்கு அருளப்பட்ட குர்ஆனை பட்டு குஞ்சத்தில் கட்டி உயர இடத்தில் வைக்கிறோமே தவிர அதை படிக்கக் கூட வில்லை பின் எப்போது ஆராய ?

اَفَلَا يَتَدَبَّرُوْنَ الْقُرْاٰنَ اَمْ عَلٰى قُلُوْبٍ اَ قْفَالُهَا
மேலும் அவர்கள் இந்தக் குர்ஆனை ஆராய்ந்து பார்க்க வேண்டாமா? அல்லது அவர்கள் இருதயங்கள் (இருக்கின்றனவே) அவற்றின் மீது பூட்டுப் போடப்பட்டு விட்டனவா? (குர்ஆன் : 47:24)

இஸ்லாமிய விஞ்ஞானிகள் என்று கணக்கிட்டால் , இந்தியாவில் ஒரு அப்துல் கலாம் , பாகிஸ்தானில் ஒரு அப்துல் ஸலாம் , இதில் அப்துல் ஸலாம் தன் குவாண்டக் கோட்பாட்டின் கண்டுபிடிப்புக்கு " ஜோடி ஜோடியாக இறைவன் படைத்திருக்கிறான்" என்ற வசனமே காரணம் என்று ஸலாம் குர்ஆனையே சுட்டிக் காட்டினார் . நோபலும் பெற்றார் . இது போதுமா ? உலக மக்கள் தொகை 800 கோடி. இதில் குர்ஆனை அணுகி விஞ்ஞானம் விளக்கம் சொன்ன இஸ்லாமிய விஞ்ஞானிகள் எத்தனை பேர் ?

நியமமாக பார்த்தால் இஸ்லாமியர்களே விஞ்ஞான கண்டுபிடிப்புகளை உலகுக்கு அளித்திருக்க வேண்டும். மருத்துவத்தையும் சொல்லிக் கொடுத்த நபிகளாரின் மருத்துவமும் கையில் வைத்துக் கொண்டு யூதர்களிடமும் , கிருஸ்தவர்களிடமும்தான் நாம் மருத்துவ விஞ்ஞானத்தை எதிர்நோக்க வேண்டிய அவலம் இன்னும் இருக்கிறது. இது உலகக் கல்வி, இது மார்க்க கல்வி என்று தனித்தனியாக பிரித்தததில்தான் இஸ்லாமியர் ஆரம்பத்திலேயே சறுகி விட்டனர். இதுவே முதல் கோணல் , உலகலாய கல்வியான விஞ்ஞான தத்துவத்தை குர்ஆன் உங்களுக்கு உரைத்துக் காட்டவில்லையா ? பின் ஏன் நீங்கள் விஞ்ஞானத்தை உலகக் கல்வி என்றும் , குர்ஆனை மார்க்க கல்வி என்று திரை போட்டு பிரித்தீர்கள் ?
இந்தக் குர்ஆனில்தான் எய்ட்ஸ்க்கும் , கேன்சருக்கும் மருந்து இருக்கிறது !
இந்தக் குர்ஆனில்தான் மூன்றாம் உலகப் போரை தடுத்து நிறுத்தி வைக்கும் அமைதியான ஆற்றல் இருக்கிறது !
இந்தக் குர்ஆனில்தான் உலகத்தை நடுநிலையான நீதியின் பக்கம் கொண்டு வரும் நியாயம் இருக்கிறது !

وَلَقَدْ صَرَّفْنَا لِلنَّاسِ فِىْ هٰذَا الْقُرْاٰنِ مِنْ كُلِّ مَثَلٍ فَاَبٰى اَكْثَرُ النَّاسِ اِلَّا كُفُوْرًا
இந்தக் குர்ஆனில் எல்லா உதாரணங்களையும் மனிதர்களுக்கு(த் திரும்பத் திரும்ப) விவரித்துக் கூறியிருக்கிறோம். எனினும், மனிதர்களில் பெரும்பாலானவர்கள் இதனை நிராகரிக்காமல் இருக்கவில்லை. (அல்குர்ஆன் : 17:89)

முதல்ல பிள்ளை படிக்க வையுங்கள். தமிழ் குர்ஆனும் , கொஞ்சம் தமிழ் ஹதீஸ் கிதாபுகள் வாங்கி வீட்டு அலமாரியில் வையுங்கள் .
செல்போனையும் , TV வையும் அடிக்கடி சுவிட்ச் ஆப் பண்ணச் சொல்லிக் கொடுங்கள் முதல்ல நீங்க இதை நடைமுறைப்படுத்துங்கள்

**அதிசயம், அற்புதம், ஆச்சரியம் 18**

( உங்கள் உடலுக்குள்ளே ஒரு வானவர் )

இரத்தம் சிவப்பு நிறமான ஒரு திரவமாக காணப்பட்டாலும் அது ஒரு தனிப் பொருளன்று . அது ஒரு கலவையாகும் . இதை அறிவதற்கு நாம் ஒரு சொட்டு இரத்தத்தை நுண்ணோக்கி உதவியால் சோதனை செய்ய வேண்டும். ரத்தத்தில் மூன்று பொருள்கள் அடங்கியுள்ளன அவை இளம் மஞ்சள் நிறமான பிளாஸ்மா ( Plasma ) என்னும் திரவம், வெள்ளையணுக்கள் ( White Corpuscles ) சிவப்பு அணுக்கள் (Red Corpuscles ) ஆகியவைகளாகும். பிளாஸ்மா என்ற திரவத்தில் உணவுச் சத்துக்கள் கரைந்திருக்கின்றன. உடல் வேலை செய்வதற்கும் உடல் வெப்பத்திற்கும் வளர்ச்சிக்கும் மிகத் தேவையான சத்துக்களை இரத்தத்தின் பிளாஸ்மாவே உடலின் பலவேறு பாகங்களுக்கும் பரவச் செய்கின்றது.

பிளாஸ்மாவில் வெள்ளையணுக்களும் சிவப்பு அணுக்களும் மிதக்கின்றன. வெள்ளையணுக்கள் சிவப்பு அணுக்களை விடக் குறைவு. ஆண்களுக்கு ஒரு கன மில்லி மீட்டர் இரத்தத்தில் சுமார் 50 லட்சம் சிவப்பணுக்கள் இருக்கும். பெண்களுக்கு ஒரு கன மில்லி மீட்டர் இரத்தத்தில் சுமார் 45 லட்சம் சிவப்பணுக்கள் இருக்கும். வெள்ளையணுக்கள் சிவப்பணுக்களில் சுமார் ஐந்நூறில் ஒரு பங்கு தானுள்ளன. ஆகவேதான் இரத்தம் சிவப்பு நிறமாயிருக்கிறது. வெள்ளையணு சிவப்பணுவைவிடப் பெரிது. சிவப்பணுக்களில் சுமார் 3200 அணுக்களை வரிசையாக வைத்தால் ஒரு அங்குல நீளம் இருக்கும். வெள்ளையணுக்களில் சுமார் 2500 சேர்ந்து ஒரு அங்குல நீளமாகும்.
சிவப்பணுக்கள் பிராணவாயுவை நுரையீரல்களிலுள்ள காற்றிலிருந்து பிரித்தெடுத்து உடலின் செல்களுக்குத் தேவைப்படும்போது கொடுத்து உதவுகின்றன.
செல்களில் உண்டாகும் கரியமிலவாயு (கார்பன் டைஆக்ஸைடு யூரியா உப்புப்போன்ற கழிவுப் பொருள்களை பிளாஸ்மா கரைத்து அந்தந்தக் கழிவு உறுப்புக்களில் கொண்டு சேர்க்கிறது.
வெள்ளையணுக்களுக்கு மட்டும்தான் உட்கரு உண்டு. அதாவது அவை உயிருள்ளவை.தாமாகவே இயங்கும் சக்தியுடையவை. ( இயக்குவது யார் ?) நோய் உண்டாக்கும் அணு உயிர்களைத் தேடிக் கண்டுபிடித்து அவைகளைக் கொல்லுகின்றன.
உடலின் எந்தப் பாகத்திலாவது அணு உயிர்கள் நுழைந்துவிட்டால் இரத்தத்தின் வெள்ளையணு அவைகளைத் தாக்கும். அணுவுயிர்களின் கழிவுப் பொருட்கள் ஒருவித நச்சுத்தன்மை உள்ளவை அவற்றை டாக்ஸின்கள் (Toxins) என்கிறோம்.

இரத்தத்தில் இவை கலந்ததும் அங்குள்ள நரம்பு மூளைக்குச் செய்தி அனுப்புகிறது. மூளை உடனே எலும்பு, மஜ்ஜை, மண்ணீரல், நிணநீர்ச் சுரப்பி முதலிய வெள்ளையணுக்களை உற்பத்தி செய்யும் உறுப்புகளுக்குச் செய்தியனுப்பி அதிகமான வெள்ளையணுக்களை அவ்வுறுப்புக்களிலிருந்து இரத்தத்தில் கொட்டுகின்றது. அவை அணி அணியாகத் தாக்கப்பட்ட பாகத்திற்கு விரைகின்றன. வெள்ளையணுப் படையால் அணு உயிர்கள் நாசம் செய்யப்படுகின்றன.
இவ்விதமாக அணு உயிர்களுக்கும் வெள்ளையணுக்களுக்கும் ஓயாது போர் நடந்துகொண்டிருக்கும். நமது உடல் ஒரு போர்க்களமென்று கூறினால் அது மிகையாகாது! ஆனால் சில சமயங்களில் வெள்ளையணுக்கள் முறியடிக்கப்பட்டு இறந்து போவதும் உண்டு. அப்போது இறந்துபட்ட வெள்ளையணுக்கள் சீழாக மாறும். உடலில் அழற்சி ஏற்பட்டு அவை வெளியேறுகின்றன.

நமது இரத்தம் மற்றொரு முறையிலும் நோயை எதிர்க்கிறது. நோய்க்குக் காரணமான அணு உயிர்கள் ஒருவிதமான நச்சுப் பொருள்களை இரத்தத்தில் சேர்க்கின்றன என்று கண்டோமல்லவா? அவைகளை எதிர்த்து இரத்தம் ஒரு வகை எதிர் விஷத்தை உற்பத்தி செய்கிறது. ஆன்டி-டாக்ஸின்கள் ( Anti Toxins ) என்று சொல்லப்படும் இவை அணு உயிர்களின் விஷத்தை முறித்து அவைகளைக் கொன்றும் விடுகின்றன.
இந்த உண்மைகளை அடிப்படையாகக் கொண்டே பசுக்களின் உடலில் இருந்து அம்மைப்பாலும் ( vaccine ) குதிரையும் ரத்தத்திலிருந்து சீரமும் ( Serum ) தயாரிக்கப்படுகின்றன. இப்படித்தான் மருத்துவ விஞ்ஞானம் கூறுகிறது .
ஆனால் ஆன்மிக தத்துவங்கள் இப்படி கோட்டை சுவரான உங்கள் உடம்புக்குள்ளே யாரோ ஒரு நபர் அரணாக இருந்து சதா கவனித்துக்கொண்டு உங்களை பாதுகாக்கிறார் என்கிறது.
"‘அல்லாஹ் கர்ப்பப் பையில் ஒரு வானவரை நியமிக்கிறான்.
கர்ப்பப் பையில் விந்து செலுத்தப்பட்ட பின்னர் அதன் ஒவ்வொரு நிலையிலும் மாற்றம் ஏற்படும்போது அந்த வானவர், ‘யா அல்லாஹ்! இப்போது விந்தாக இருக்கிறது.
யா அல்லாஹ்! இப்போது ‘அலக்’ (கருப்பைச் சுவற்றின் தொங்கும்) எனும் நிலையில் இருக்கிறது.
யா அல்லாஹ்! இப்போது சதைத் துண்டாக இருக்கிறது’ என்று கூறி வருவார்.
அல்லாஹ் அதை உருவாக்க நாடினால் அது ஆணா? பெண்ணா? நல்லவனா? கெட்டவனா? என்பதையும் அவனுக்குச் கொடுக்கவிருக்கும் செல்வம் எவ்வளவு? அவனுடைய வாழ்நாள் எவ்வளவு? என்பதையும் கூறிவிடுகிறான்.
மனிதன் தன் தாயின் வயிற்றில் இருக்கும் போதே இவை எழுதப்பட்டு விடுகின்றன’ என்று இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்”. புஹாரி : 318 அனஸ் (ரலி).

**அதிசயம், அற்புதம், ஆச்சரியம் 19**
காணாமல் போன விமானங்கள்... விடை தெரியாத மர்மங்கள்!




1948, ஜனவரி 30-ம் தேதி இரண்டாம் உலகப்போரில் வீர தீரச் செயல்கள் புரிந்த ஏர் மார்ஷல் ஆர்தர் கோணிங்கம் பயணம் செய்த ஸ்டார் டைகர் விமானம் 6 பணியாளர்கள் மற்றும் 25 பயணிகளுடன் பெர்முடா தீவில் இருந்து கிளம்பிய நேரத்தில் இருந்து இதுவரை தரை இறங்கவில்லை.
'இருட்டில் தொலைத்துவிட்டு வெளிச்சத்தில் தேடாதே' என்பார்கள். சர்வதேச நாடுகள் பலவும் இருட்டில் தொலைத்த விமானங்களை வெளிச்சம் இருக்கிறது என்கிற காரணத்தால் வேறு ஒரு இடத்தில் தேடிக்கொண்டிருக்கிறார்கள். ஓடவும் முடியாது ஒளியவும் முடியாது என்கிற ரீதியில் 24 மணி நேரக் கண்காணிப்பிலேயே இருந்த விமானங்கள் பலவும் தொலைந்து போய் இன்றுவரை கண்டுபிடிக்க முடியாமலே இருக்கிறது.

வெறுமனே விமானங்கள் மட்டும் காணாமல் போயிருந்தால் தேடாமல் விட்டிருக்கலாம். எல்லா விமானங்களிலும் 200 பயணிகளுக்கும் மேலாக இருந்திருக்கிறார்கள் என்பதுதான் சோகமான விஷயமாய் இருக்கிறது. குறிப்பிட்ட காலம் வரை தேடிவிட்டு கடலில் விழுந்திருக்கலாம் என ஜஸ்ட் லைக் தட் அறிக்கை கொடுத்துவிட்டு கடந்து வந்திருக்கின்றன சம்பந்தப்பட்ட அரசுகள்.
எல்லாமே முழு பூசணிக்காயை சோற்றில் மறைக்கிற சம்பவங்கள். ராணுவ விமானங்கள், போர்க்கப்பல்கள் எனச் சர்வதேச படைகளின் கூட்டுத் தேடல்களில் இன்று வரை விடை கிடைக்காத விமானங்கள் ஏராளம்.
டிசம்பர் 28, 1948 அன்று, மியாமி (புளோரிடா) தலைநகரான போர்டோரிகோவின் சான் ஜுவான் விமான நிலையத்திலிருந்து டக்ளஸ் டகோடா DC-3 என்கிற விமானம் இரவு 10.03 மணிக்குப் புறப்பட்டது. 28 பயணிகள் மூன்று விமான சிப்பந்திகளுடன் பயணித்தது. “வந்துகொண்டிருக்கிறோம். மியாமியினுடைய விளக்குகள் எனக்கு மங்கலாகத் தெரிகின்றன. இறங்குவதற்கான தகவலுக்காக காத்திருக்கிறேன்” என விமானி செய்தி அனுப்புகிறார்.

அந்த விமானத்திலிருந்து கடைசியாய் வந்த தகவல் இது மட்டும்தான். இப்போது வரை அந்த விமானம் தரை இறங்காமலே இருக்கிறது.
1949-ம் ஆண்டு ஜனவரி 17 அன்று பெர்முடாவிலிருந்து ஜமைக்காவுக்கு கிளம்பிய ஸ்டார் ஏரியல் விமானம் கட்டுப்பாட்டு அறையின் அனைத்துத் தொடர்புகளையும் இழந்தது. விமானத்தில் இருந்து கிடைக்கப்பெற்ற கடைசிச் செய்திகளும் சாதாரணமானவை.
தேடுதலைக் கைவிட்ட பிறகு 1998ல் ஆண்டிஸின் மலைகளில் காணாமல் போனதற்கான சாத்தியக்கூறு கண்டுபிடிக்கப்பட்டது. ஆனால், அது ஸ்டார் ஏரியல் விமானம்தான் என்பதற்கு ஆதாரங்கள் இல்லாததால் இப்போது வரை கிடப்பிலேயே கிடக்கிறது விமானமும் அதுசார்ந்த கோப்புகளும்.
1962-ம் ஆண்டு அமெரிக்க ராணுவ விமானம் ப்ளையிங் டைகர் லைன் விமானம் 739 மாயமானது. இந்த விமானமானது மேற்கு பசிபிக் பெருங்கடலின் வழியே செல்லும்போது திடீரென்று மாயமாகிவிட்டது.

விமானத்தில் 93 அமெரிக்க போர் வீரர்கள் மற்றும் வியட்நாமைச் சேர்ந்த மூன்று பேர் என மொத்தம் 107 பேர் பயணித்தனர்.
விமானம்குறித்த தகவலும் பயணிகள்குறித்த தகவலும் இப்போது வரை தேடப்படும் பட்டியலில்தான் இருக்கிறது. விமானம் வெடித்திருக்குமோ என்று பார்த்தால், அதற்கான ஆதாரம் ஏதும் கிடைக்கவில்லை. விமானத்தைத் தேடுவதை கைவிட்டு மாமாங்கம் ஆகிறது.
ஏர் பிரான்ஸ் விமானம் 447 விமானம் கடந்த 2009-ம் ஆண்டு 228 பேருடன் பிரேசில் வான்வெளியில் இருந்து, செனகல் வான் எல்லைக்குள் நுழையும்போது, கட்டுப்பாட்டு அறையுடன் கொண்டிருந்த அனைத்துத் தொடர்புகளும் துண்டிக்கப்பட்டது. இன்று வரை என்ன நடந்தது ஏன் நடந்தது என்று யாருக்கும் தெரியவில்லை. தீவிர விசாரணைக்குப் பிறகு, அந்த விமானம் அட்லாண்டிக் பெருங்கடலைக் கடக்கும்போது வெடித்திருக்கும் என்று யூகித்து அப்படியே விட்டுவிட்டார்கள். 228 பயணிகளும் உயிரிழந்ததாக அறிவிக்கப்பட்டது. 2 ஆண்டுகள் கழித்து அதன் கறுப்புப் பெட்டி கண்டெடுக்கப்பட்டதைத் தொடர்ந்து அது விபத்தில் வெடித்துச் சிதறியது உறுதியானது.

மலேசியத் தலைநகர் கோலாலம்பூரில் இருந்து சீனத் தலைநகர் பெய்ஜிங்குக்கு 2014-ம் ஆண்டு மார்ச் 8-ம் தேதி அன்று 00:41 மணியளவில் 239 பயணிகளுடன் போயிங் 777- 200 MH 370 விமானம் புறப்பட்டது. தகவல்களின்படி அதிகாலை 01:22 அல்லது 2.40 மணியளவில் தாய்லாந்து வளைகுடாவைக் கடக்கும்போது இவ்விமானம் கட்டுப்பாட்டு அறையுடனான தொடர்பை இழந்தது.
பிரேக்கிங் செய்திகள் அலற மலேசிய சீன நாடுகளைப் பதற்றத்தில் ஆழ்த்தியது. விமானம் கடத்தப்பட்டிருக்கலாம் என்கிற நோக்கில் இரு நாடுகளும் புலன் விசாரணையில் இறங்கின. உலகம் முழுவதிலும் பிரார்த்தனைகள் தொடர்ந்துகொண்டே இருந்தது. விமானம் பற்றிய எந்தத் தகவலும் கிடைக்காத இரண்டொரு நாளில் உலக நாடுகளின் உதவியை நாடியது மலேசிய அரசு.
உலகம் முழுவதிலும் இருந்து 25 நாடுகளின் விமானங்கள் மற்றும் கப்பல்கள் உதவியுடன் தேடியும் ஒரு துப்பு கூடக் கிடைக்காமல் போனது. கடல் மார்க்கம் ஆகாய மார்க்கம் என இந்தியப் பெருங்கடலில் ஆரம்பித்து ஆஸ்திரேலிய கடல் பகுதி வரை சல்லடைப் போட்டு தேடியும் எந்தத் தகவலும் கிடைக்காமல் போன பரிதாப விமானம் போயிங் 777. இப்போது வரை விமானத்தின் பாகங்கள் அங்கே கிடைத்தது இங்கே கிடைத்தது என உறுதிப்படுத்த முடியாத தகவல்கள் வந்துகொண்டே இருக்கிறது. விமானம் என்ன ஆனது என்றுதான் இப்போது வரை மர்மமாகவே இருக்கிறது

2016 ஜூன் 21-ம் தேதி 29 பேருடன் தாம்பரத்தில் இருந்து அந்தமான் கிளம்பிய ராணுவ விமானம் நடுவானில் காணாமல் போனது. தகவல் கிடைத்த நொடியில் இருந்து ஆறு கப்பல்கள் பதினைந்து விமானங்கள் எனப் பல இடங்களில் தேடியும் விமானத்தின் சிறிய பகுதிகூட இப்போது வரை கண்டுபிடிக்க முடியவில்லை. பயணம் செய்த 29 பேரும் இறந்துவிட்டதாக அரசு அறிவித்திருக்கிறது.
பெரும்பாலான விமானங்கள் இயந்திரக் கோளாறுகளால் விபத்துக்குள்ளாகின்றன. சில விபத்துகள் வானிலை மாறுவதால் நடந்திருக்கின்றன. சில விமானங்கள் பறவை மோதுவதால் நிகழ்கின்றன. ஆனால் காணாமல் போன விமானங்கள் எப்படி நடந்தன என்கிற எந்த எந்தக் குறிப்பையும் கொடுக்காமல் காணாமல் போயிருக்கின்றன.
விமானம் விபத்தில் சிக்கினால் அந்த விமான விபத்துக்குக் காரணம் என்ன என்பதைக் கறுப்புப் பெட்டியை வைத்துக் கண்டறிந்துவிடலாம். விமானி உரையாடலில் தொடங்கி விமானத்தின் அனைத்துத் தகவல்களையும் சேமித்து வைக்கும் கறுப்புப் பெட்டியை விமானத்தின் வால் பகுதியில் பொருத்தி இருப்பார்கள். எளிதில் பாதிக்கப்படாத வண்ணம் கறுப்புப் பெட்டி வடிவமைக்கப்பட்டிருக்கும்.
விமானம் செயல் இழந்தாலும் முப்பது நாள்களுக்கு சிக்கனல்களை வழங்கிக்கொண்டே இருக்கும். 2012 டிகிரி வெப்பத்தையும், 1000 டன் எடையையும் தாங்கும் விதமாகக் கறுப்பு பெட்டிகள் இருக்கும். எப்படி இருந்தாலும் மனிதனால் தயாரிக்கப்பட்ட சில தொழில்நுட்பங்கள் எல்லாக் காலங்களிலும் உதவியாய் இருக்கும் எனச் சொல்லிவிட முடியாது.
மேற்கூறிய விமான விபத்துகளில் மலேசிய விமானத்தின் கறுப்பு பெட்டியைக் கூட இப்போதுவரை கண்டுபிடிக்க முடியவில்லை என்பதுதான் தொழில் நுட்ப வளர்ச்சியின் முரண்.
இந்த எல்லா விமானங்களும் மாயமானதற்கான காரணங்கள் இருக்கின்றன. ஆனால், காரணம் தெரிந்தவர் யாரும் உயிரோடு இல்லை.

ظَهَرَ الْفَسَادُ فِى الْبَرِّ وَالْبَحْرِ بِمَا كَسَبَتْ اَيْدِى النَّاسِ لِيُذِيْقَهُمْ بَعْضَ الَّذِىْ عَمِلُوْا لَعَلَّهُمْ يَرْجِعُوْنَ
மனிதர்களின் கைகள் தேடிக்கொண்டதன் காரணமாகக் கடலிலும் தரையிலும் அழிவு வேலைகள் (அதிகமாகப்) பரவி விட்டன. அதிலிருந்து அவர்கள் விலகிக் கொள்வதற்காக, அவர்களின் தீய செயல்களில் சிலவற்றின் தண்டனையை அவர்கள் (இம்மையிலும்) சுவைக்கும்படி அவன் செய்ய வேண்டியதாகிறது. (குர்ஆன் : 30:41)

**அதிசயம், அற்புதம், ஆச்சரியம் 20**

T கதிர்கள்



நம் அனைவருக்கும் எக்ஸ் கதிர்கள் என்றால் என்னவென்று தெரியும். விபத்தில் மாட்டிக் கொண்டால் எலும்பு முறிவு ஏதும் ஏற்பட்டிருக்கிறதாவென்று அறிய மருத்துவமனை சென்று எக்ஸ்ரே படம் எடுத்துப் பார்க்கிறோம். அது போக இதயம், சிறுநீரகம் போன்ற ஏதேனும் ஒரு உள்ளுறுப்பின் நிலை அறிய டாக்டர்களுக்கு உதவுவது எக்ஸ்ரே படம்தான்.
1890-களிலேயே தொடங்கிவிட்ட இந்த எக்ஸ்ரே பட எடுப்பு மருத்துவ உலகிற்கு ஆற்றியிருக்கும் சேவை அளப்பரியது. மற்ற பலதுறைகளிலும் எக்ஸ் கதிர்கள் பயன்படுத்தப்பட்டிருக்கின்றன. உதாரணமாக, புரோட்டீன்களின் துல்லியமான கட்டமைப்பை அறிய விஞ்ஞானிகள் எக்ஸ் கதிர்களைப் பயன்படுத்துகின்றனர். அதுபோல, எக்ஸ்ரே படிகவியல் (X-ray crystallography) என்ற முக்கியமான துறையிலும் எக்ஸ் கதிர்கள் பயன்படுகின்றன.

சூரியனின் வெள்ளொளியில் 7 கதிர்களை தவிர்த்து நிறைய நம் கண்ணுக்குத் தெரியாத கதிர்கள் இருக்கிறது இவைகளும் ஒளிதான்
வயலட் கதிருக்கு மேலே அல்ட்ரா வயலட் , எக்ஸ்ரே கதிர் , காமா கதிர் , காஸ்மிக் கதிர் , இன்னும் அறியப்படாத மென் கதிர்கள் பல
அதைப்போல் சிவப்பு கதிருக்கு கீழே இன்ஃபரா சிவப்பு , வெப்பக் கதிர்கள் மின்பொறி , ராடார் கதிர்கள் , டெலிவிஷன் கதிர்கள் , குட்டையான ரேடியோ அலைக் கதிர்கள் , ரேடியோ அலைக் கதிர்கள் , நீளமான ரேடியோ அலைக் கதிர்கள் , அதற்கும் கீழ் இன்னும் அறியப்படாத வன்கதிர்கள் பல உள்ளன . இத்தனையும் சூரியக் கதிரில்தான் உள்ளது

நம் கண்களால் பார்க்க முடிந்த ஒளிக்கதிர்கள், -மைக்ரோவேவ் அடுப்புகளில் பயன்படும் மைக்ரோவேவ் கதிர்கள், டிவியில் சானலை மாற்ற அல்லது அணைக்க நாம் பயன்படுத்தும் ரிமோட்டிலிருந்து புறப்படும் கண்ணுக்குத் தெரியாத அப்பாற் சிவப்பு ( infrared rays) கதிர்கள், புற ஊதாக் கதிர்கள் (ultraviolet rays). காமா கதிர்கள், ரேடியோ அலைகள் எல்லாமே சூரிய வெள்ளொளியின் மின்காந்தக் கதிர்கள்தான்.
இவற்றில் மிகக் குறைந்த அலைநீளம் உடையவை காமா கதிர்கள். மிக அதிக அலைநீளம் உடையவை ரேடியோ அலைகள். மைக்ரோவேவ், அப்பாற் சிவப்பு ஆகிய இரு பகுதிகளுக்கும் இடைப்பட்ட பகுதியில் அலைநீளம் உடையவை T-கதிர்கள் என அழைக்கப்படுகின்றன.
இவற்றின் அலைநீளம் கண்ணுக்குத் தெரியும் ஒளி அலையின் அலைநீளத்தை விட பல நூறு மடங்கு அதிகமானது. இவையும் நம் எண்ணுக்குத் தெரியாத அலைகள்தான். இவற்றை உற்பத்தி செய்வது கடினமாக இருந்ததால் பயன்பாட்டுக்கு வராமல் இருந்தன. தற்போது அதில் ஒரு முறிப்பை விஞ்ஞானிகள் ஏற்படுத்தி விட்டனர்.

எக்ஸ் கதிர்களைப் போன்றே டி-கதிர்களும் உடைகள், தாள்கள், தடிமனான அட்டைகள், மரத்துண்டுகள், சுவர்கள், பிளாஸ்டிக் பொருட்கள், மண்பாண்டங்கள்போன்றபல பொருட்களை ஊடுருவிச் செல்லக் கூடியவை.
அதே சமயம், அவை எக்ஸ் கதிர்களைப்போல மூலக்கூறுகளை அயனிகளாக்குபவை அல்ல. மனிதர்களுக்குத் தீங்கு விளைவிக்காதவை.
இது அவற்றின் மிகப் அதனால் பெரிய நன்மை. உடலில் தோன்றும் கட்டிகளையும் புற்று நோயையும் கண்டுபிடிக்க அவை பயன்படத் தொடங்கியுள்ளன. புற்றுநோய் தொடங்கும்போதே டி-கதிர் சோதனை மூலம் கண்டுபிடித்து சிகிச்சையை ஆரம்பகட்டத்திலேயே தொடங்கிவிட முடியும்.
மருந்து மாத்திரைகளில் உள்ள குறைபாடுகளை டி-கதிர் சோதனை மூலம் அறிந்துகொள்ள முடியும்.

பற்கள் சொத்தையாவதையும், உணவிலோ குளிர்பானத்திலோ பூச்சி மருந்துகளில் சிறிதளவு கலந்திருப்பதையும் கூட டி-கதிர் சோதனை மூலம் கண்டுகொள்ள முடியும்.
உடலுக்குள் மறைத்து வைக்கப்பட்டுள்ள துப்பாக்கிகள், வெடிகுண்டுகள், போதைப் பொருட்கள் போன்றவற்றை டி-கதிர்கள் படம் காட்டிக் கொடுத்துவிடும். எனவே, தற்போது விமானநிலையங்களிலும் துறைமுகங்களிலும் பயணிகளைச் சோதனையிட டி-கதிர் சோதனை நடத்தப்படுகிறது.

வருங்காலத்தில் சூரிய வெள்ளொளியின் மின்காந்தக் கதிர்களில் இன்னும் பல கதிர்கள் கண்டுபிடிக்கப்படலாம். அவைகள் எதனுள் புகுந்து என்ன விந்தையை செய்யப்போகிறது என்பது யாருக்குமே தெரியாது .
உடலினுள் புகுந்து எலும்பை படம்பிடிக்க எக்ஸ் ரே கதிர் வந்தாச்சி
உடையினுள் புகுந்து உடலை படம்பிடிக்க T கதிர் வந்தாச்சி
உடலினுள் புகுந்து உள்ளத்தைப் படம்பிடிக்க எந்தக் கதிர்கள் வரப்போகிறதோ ? அவனே அறிவான்.
ஆனாலும் முக அழகையோ, ஆடை அலங்காரங்களையோ இறைவன் பார்க்க விருப்பம் கொள்வதில்லை. உள்ளத்தில் எழும் நல்லெண்ணங்கள், இறைவனின் பொருத்தத்தைக் கருதி செய்கின்ற இறையச்ச உணர்வுகள் இவற்றையே காண்கிறான். இதை, அடிப்படையாகக் கொண்டு நன்மைகளை ஏட்டில் பதிவு செய்கிறான்'" என்கின்றன நபி மொழிகள்.
“இறைவன் உங்கள் தோற்றத்தையோ, உங்களையோ பார்ப்பதில்லை. மாறாக உங்கள் உள்ளத்தை (இறையச்சத்தை) பார்க்கிறான்” என நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். (அறிவிப்பாளர்: அபூஹுரைரா (ரலி), நூல்: முஸ்லிம்)

## அதிசயம், அற்புதம், ஆச்சரியம் 21

நானோ தொழில்நுட்பம்

நமது அன்றாட வாழ்வில் நீளத்தை அளக்க மீட்டரையும், பொருட் திணிவை அளக்க கிலோ கிராமையும், நேரத்தை அளக்க நொடியையும் பயன்படுத்துகிறோம். இது மீட்டர்,கிலோ , செகண்ட் அமைப்பு ( MKS system ) என அழைக்கப்படுகிறது.
தூரமோ , அளவோ மிகமிகக் குறைவாக இருந்தால், நானோ மீட்டர் என்ற அலகு பயன்படுத்தப்படுகிறது
அதைப்போல் மிகக் குறைந்த நேரம் நானோ செகண்ட் என்ற அலகிலும் பார்க்கப்படுகிறது
மீட்டரில் பில்லியனில் ஒரு பகுதியே நானோமீட்டர். அது எவ்வளவு சிறியது என்பதை இப்படி தெரிந்து கொள்ளலாம். 10 ஹைட்ரஜன் அணுக்களை (அல்லது 5 கார்பன் அணுக்களை) வரிசையாக அடுக்கிவைத்தால், அது ஒரு நானோமீட்டர் நீளம் இருக்கும். ஒரு டிஎன்ஏ மூலக்கூறு சுமார் 2.5 நானோமீட்டர் அளவில் இருக்கும். ரத்தத்தில் உள்ள ஒரு சிவப்பணு சுமார் 7000 நானோமீட்டர் அளவிலும் ஒரு மனிதத் தலைமுடியின் அகலம் 80,000 நானோமீட்டர் (80 மைக்ரான்கள்) அளவிலும் இருக்கும்.
ஒரு மீட்டரில் ஆயிரத்தில் ஒரு பகுதி ஒரு மில்லிமீட்டர். ஒரு மில்லிமீட்டரில் ஆயிரத்தில் ஒரு பகுதி ஒரு மைக்ரோமீட்டர் (மைக்ரான்). - கணினியில் பயன்படுத்தப்படும் சிப்புகள் இந்த அளவில் இருக்கும். ஒரு மைக்ரோமீட்டரில் ஆயிரத்தில் ஒரு பகுதி ஒரு நானோமீட்டர் (1 nm). இந்த அளவில் இருக்கும் பொருட்களைப் பற்றி ஆராய்வதே நானோ அறிவியல்.

நானோ தொழில் நுட்பம் பல துறைகளில் பயன்படுகிறது. நிறம் மற்ற பொருட்களோடு சேரும்போது ஏற்படும் எதிர்விளை (reactivity), மின் குணங்கள் போன்ற ஒரு பொருளின் அடிப்படையான குணங்கள், நானோ அளவை எட்டும்போது மிக பெரிய மாற்றங்களை அடைகின்றன !
இதன் காரணமாக, மிக அசாதாரணமான முறையில் நானோ துகள்களைப் பயன்படுத்த முடிகிறது. அவை மிகவும் தனித்தன்மை வாய்ந்தவை உதாரணமாக, ஒளி புக முடியாத பொருளை ஒளிபுகக் கூடியதாக (உ-ம் - தாமிரம்) , எந்த பொருளும் சேர மறுக்கும் (inert), ஒரு பொருளை மற்ற மற்ற பொருள்களுடன் எளிதில் சேர வைக்கும் கிரியா ஊக்கியாக (உ-ம் -பிளாட்டினம் தங்கம்) , தீ பற்றாத பொருளை தீப்பற்ற கூடியதாக (உ-ம் - அலுமினியம் ) சாதாரணமான வெப்ப நிலையில் திடப் பொருளாக இருப்பதை திரவமாக ( உ-ம்-தங்கம்) மின்சாரத்தைக் கடத்தாத பொருளை மின்கடத்தியாக (உ-ம். சிலிக்கான்) ... என மாற்றும் ரசவித்தையே நானும் அளவில் பார்க்க முடியும்

இதன் ஆதார சாகசம் அணு அளவில் பொருள்களை நம் இஷ்டப்படி மாற்றுவது .ஒரு பொருளின் அணுக்கட்டத்தை மாற்றினால் அந்நப் பொருளின் இயற்கை மாறிவிடும்
உதாரணமாக அடுப்புக்கரியின் அணுக்கட்டமைப்பை சற்று மாற்றினால் அது வைரமாகிறது !
இரும்பின் கட்டமைப்பை மாற்றினால் தங்கம் கிடைத்துவிடும் !
அதைப் போல் சிலிக்கான் தனிமத்தின் கட்டமைப்பை மாற்றி அதனுடன் சில சேர்மானங்களை கட்டுப்படுத்தப்பட்ட அளவில் சேர்த்து குறிப்பிட்ட முறையில் வடிவமைத்தால் அது கம்ப்யூட்டர் ஆகிறது !
இன்னும் ஆதாரமாகப் பார்த்தால் மண் நீர் காற்று இவைகளின் அணுக்களை ஒரு வகையில் கூட்டமைத்தால் அது உருளைக் கிழங்காகிறது !

நானோ டெக்னாலஜி இதைத்தான் முயற்சிக்கிறது
இயற்கை செய்வதை ஒரு ஆராய்ச்சிசாலையில் மனிதன் செய்யமுடியும் என்று நம்புகிறது
"மூஸாவே உங்கள் இருவரின் இறைவன் யார்? "
என்று ஃபிர்அவ்ன் கேட்டான்
அதற்கு மூஸா "எவன் ஒவ்வொரு பொருளுக்கும் அதற்குரிய இயற்கைத் தன்மையைக் கொடுத்து அவைகளை பயன்படுத்தும் வழியையும் அவைகளுக்கு அறிவித்தானோ அவன்தான் எங்கள் இறைவன் " என்றார்
( குர்ஆன் 20 : 50 )

**அதிசயம், அற்புதம், ஆச்சரியம் 22**
( பெர்முடா ரகசியம் )




"பெர்முடா முக்கோணம் என்று கேள்விப்பட்டிருக்கிறீர்களா? இன்றைய நவீன அறிவியலால்கூட இன்னதென்று கூறமுடியாத மர்மங்களும், வியப்புகளும், அதிர்ச்சியும் நிறைந்த இடம்தான் பெர்முடா முக்கோணம். இது "சாத்தானின் முக்கோணம்' என்றும் அழைக்கப்படுகிறது.

புளோரிடா நீரிணைப்பு, பகாமாஸ் மற்றும் மொத்த கரீபியன் தீவுகளையும் உள்ளடக்கிய அட்லாண்டிக்கின் கிழக்கிலிருந்து அசோர்ஸ் வரை ஒரு முக்கோணமாக அமைந்துள்ளது இது. சில ஆய்வாளர்கள் இந்த முக்கோணப் பகுதியில் மெக்சிகோ வளைகுடாவையும் சேர்க்கிறார்கள்.
"பிளைட்-19' என்பது குண்டு வீசும் விமானங்களுக்குப் பயிற்சியளிக்கும் விமானமாகும். இது, அமெரிக்கக் கடற்படைக்குச் சொந்தமானது. இந்த விமானம் 1945-ஆம் ஆண்டு டிசம்பர் 5-ஆம் தேதி, ஒரு பயிற்சியில் பங்குகொண்டது. அதன் பிறகு, அட்லாண்டிக் கடலின்மீது பறந்துகொண்டிருந்தது. அது மர்மமான முறையில் திடீரென்று பெர்முடா பகுதியில் மறைந்துபோனது. இந்த நிகழ்வைப் பற்றி கடற்படை அதிகாரிகள் ஒரு அறிக்கை அளித்தார்கள். அந்த அறிக்கையில் உள்ள விவரம் இதுதான்:
"விமானம் தன் கட்டுப்பாட்டை இழந்து காணாமல் போவதற்குச் சற்று முன்பு, விமானத்தின் திசை காட்டி இயற்கைக்கு மீறிய அளவுகளைக் காட்டியது. அனுபவம் வாய்ந்த விமானி லெப்டினென்ட் சார்லஸ் கரோல் டெய்லரின் மேற்பார்வையில்தான் இந்த சம்பவம் நிகழ்ந்தது. இந்த நிகழ்வு ஒரு புரியாத புதிராக உள்ளது.''
இதைவிட மர்மமான இன்னொரு நிகழ்ச்சி உண்டு. ஒரு கப்பல் காணாமல் போய்விட்டது. அந்தக் கப்பலை மீட்பதற்காக கடற்படை விமானம் ஒன்று புறப்பட்டது. இந்த மீட்பு விமானத்தில் மொத்தம் 13 பேர் பயணம் செய்தார்கள். வட அட்லாண்டிக் கடலில் பறந்துகொண்டிருந்தது இந்த விமானம். சில மணிநேரத்திற்குப் பிறகு இந்த விமானத்திலிருந்து எந்தத் தகவலும் இல்லை. அப்படியே தொலைந்துபோய்விட்டது! இந்த சம்பவமும் பெர்முடா பகுதியில் நடந்தது.

1872-ஆம் ஆண்டு 282 டன் எடைகொண்ட "மேரி செலஸ்டி' என்னும் கப்பலும், 1864-ஆம் ஆண்டு செப்டம்பர் 13-ஆம் தேதி "மேரி செலஸ்டி' என்று அதே பெயர்கொண்ட இன்னொரு துடுப்புக் கப்பலும் பெர்முடா முக்கோணப் பகுதியில் மறைந்துபோனதாக பழைய கால செய்தித் தாள்கள் செய்தி வெளியிட்டிருந்தன.
மேலும், இந்த பெர்முடா முக்கோணப் பகுதியில் 1918-ஆம் ஆண்டு மார்ச் 4-ஆம் தேதிக்குப் பிறகு ஒரு சம்பவம் நடந்தது. பார்படோஸ் தீவிலிருந்து கிளம்பியது "யுஎஸ்எஸ் சைக்ளோப்ஸ்' எனும் ஒரு பயணிக்கப்பல். அது எந்தச் சுவடும் இல்லாமல் தனது 309 ஊழியர்களுடன் தொலைந்து போனது.

"ஆரான் பர்' என்பவர் முன்னாள் அமெரிக்க துணை ஜனாதிபதி. இவரது மகள் "தியோடோசியா பர் அல்ஸ்பான்', தெற்கு கரோலினாவிலிருந்து நியூயார்க் நகரத்திற்கு "பேட்ரியாட்' எனும் கப்பலில் பயணம் செய்தார். பின்பு, அவரைப் பற்றி எந்த தகவலும் இல்லை. பெர்முடா முக்கோணத்தில் 1812-ஆம் ஆண்டு டிசம்பர் 30-ஆம் தேதி நடந்த சம்பவம் இது.

முக்கோண எல்லைக்கு உட்பட்ட பகுதிதான் போர்டோரிகோ. இங்குள்ள சான்ஜூ நகரின் வான் பகுதியிலிருந்து ஒரு விமானம் பறந்தது. இந்த விமானத்தின் பெயர் "டக்லஸ் பிசி-3.' மியாமி நோக்கிச் சென்றுகொண்டிருந்த இந்த விமானம் திடீரென்று மறைந்துபோனது. அதில் 32 பேர் பயணம் செய்தார்கள். அவர்கள் என்ன ஆனார்கள் என்று தெரியவில்லை. இது நடந்தது 1948-ஆம் ஆண்டு டிசம்பர் 28-ஆம் தேதி.
அசோர்ஸிலிருந்து பெர்முடா செல்லும் பயணிகள் விமானம் 1948-ஆம் ஆண்டு ஜனவரி 30-ஆம் தேதி காணாமல் போனது. 1949 ஜனவரி 17-இல் ஜமைக்காவிலிருந்து, கிங்ஸ்டனுக்குப் பறந்து சென்ற இன்னொரு விமானத்தைப் பற்றிய எந்தத் தகவலும் தெரியவில்லை. இந்த இரண்டு விமானங்களும் தென் அமெரிக்க பிரிட்டிஷ் ஏர்வேஸ்க்குச் சொந்தமான ஒரே ரக விமானங்கள். இதுவும் பெர்முடா முக்கோணத்தில் நடந்தது.
இன்னும் ஒரு பெர்முடா தகவல். முன்பு கந்தகம் ஏற்றிச் சென்றுகொண்டிருந்தது "எஸ் எஸ் மரைன் சல்பர் குயின்' எனும் கப்பல். இது, பிறகு 1963 பிப்ரவரி 4-ஆம் தேதி எண்ணெய் ஏற்றிக்கொண்டு புளோரிடா வழியாக சென்றுகொண்டிருந்தது. அதில் 39 பயணிகள் இருந்தார்கள். அந்தக் கப்பலிலிருந்து பிறகு எந்தத் தொடர்பும் இல்லை. இந்தக் கப்பல் "காண முடியாத இடத்திற்குச் சென்றுவிட்டது' என்ற தகவலை மட்டும் பத்திரிகைகளில் காணமுடிந்தது.

மேலும், ஒரு வியப்பான சம்பவம் பெர்முடா முக்கோணப் பகுதியில் நடந்தது. இது நடந்தது 1921-இல். "ரய் ஃபுகு மரு' எனும் ஜப்பானியக் கப்பல் எந்தத் தடயமும் இல்லாமல் ஒட்டுமொத்தமாக மூழ்கிவிட்டது. அப்போது கப்பலிலிருந்து,""கத்திக் கூம்புபோல அபாயம் தெரிகிறது...! விரைந்து உதவிக்கு வாருங்கள்...''எனும் வார்த்தைகள் அபாய அறிவிப்பாக அனுப்பப்பட்டதாகக் கூறப்படுகிறது. கத்திக் கூம்பு எனும் வார்த்தை எதைக் குறிக்கிறது என்று இன்றுவரை அறியப்படவில்லை.
மேற்கண்ட அனைத்து மர்மச் சம்பவங்களும் பெர்முடா முக்கோணப்பகுதியில் நடந்திருந்தாலும், ஏன் இப்படி நடக்கின்றன? என்ற கேள்விக்கு இன்னும் சரியான விடை கிடைக்கவில்லை.
1962-இல் "பிளைட்-19' தொலைந்துபோன நிகழ்ச்சி குறித்து அமெரிக்காவின் புகழ்பெற்ற இதழ் ஒன்று ஒரு கட்டுரை வெளியிட்டிருந்தது.
விமான ஓட்டி,""நாங்கள் இப்போது எங்கே இருக்கிறோம் என்பதே எங்களுக்குத் தெரியவில்லை...'' என்று தகவல் அனுப்பியதாக , அக்கட்டுரையில் குறிப்பிட்டிருந்தது.
மேலும், வின்சென்ட் காடிஸ் என்பவர் "அர்கோசி' எனும் இதழில் எழுதும்போது, இந்த விமானம் தொலைந்ததற்கு மாயச் சக்திகளே காரணம் என்று குறிப்பிட்டிருந்தார். ஆனால், கடற்படை விசாரணைக் குழு அதிகாரிகள்,""விமானம் செவ்வாய் கிரகத்திற்கு எடுத்துச் செல்லப்பட்டுவிட்டது'' எனும் அதிர்ச்சித் தகவலை வெளியிட்டனர்.

இந்தச் சமயத்தில் பெர்முடா முக்கோணம் குறித்த திடுக்கிட வைக்கும் சுவாரஸ்யத் தகவல்கள் உலக நாடுகளெங்கும் பத்திரிகைகளில் பிரசுரமாயின.
இந்த மர்ம நிகழ்ச்சிகளுக்கு மேலும் திகிலூட்டும் விதமாக,"நமது கொல்லைப் புறத்தில் கடல் மர்மம்' எனும் கட்டுரையும், "கண்ணுக்குத் தெரியாத வெளிகள்' மற்றும் "சாத்தானின் முக்கோணத்தில்' எனும் புத்தகங்களும் வெளிவந்தன. இந்த வெளியீடுகளில், "வேற்றுக் கிரகத்தைச் சேர்ந்த மாய சக்திகள் கப்பல்களையும், விமானங்களையும் பிடித்துச் சென்றிருக்கலாம். அதில் இருந்த மனிதர்களை அந்த மாய சக்திகள் என்ன செய்தன என்று கடவுளுக்குத்தான் தெரியும்' என்று எழுதப்பட்டிருந்தன.
கரீபியன் தீவு மக்களும்,முக்கோணப் பகுதியில் நிகழும் மர்ம சம்பவங்கள் அனைத்திற்கும் மனிதனுக்கு அப்பாற்பட்ட மாயச் சக்திகளே காரணம் என்று முழுமையாக நம்பினார்கள்.
இந்த மர்மங்களுக்கு மாயச் சக்திகள்தான் காரணம் என்பதைப் பொய்யாக்கும் வகையில், அரிசோனா பல்கலைக்கழக ஆய்வு நூலகர் டேவிட் குசெ என்பவர், "தி பெர்முடா டிரையாங்கிள் மிஸ்ட்ரி சால்வ்டு' என்ற நூலை வெளியிட்டார்.
அவர், அந்த நூலில் பெர்முடா பகுதியில் நடைபெறும் தொலைதல்களுக்கு மனிதத் தவறுகள்தான் காரணம் என்று எழுதினார். மேலும், சூறாவளித்தாக்குதல், கடலுக்கு அடியில் ஓடும் வளைகுடா நீரோடைகள், மிகப் பெரிய முரட்டு அலைகள், கடற்கொள்ளையர்களின் செயல்கள் ஆகியவையும் காரணங்கள் என்று உறுதியாகக் கூறினார். அதற்கான தகவல்களையும் அவர் வெளியிட்டிருந்தார். சில எழுத்தாளர்களும் பத்திரிகையாளர்களும், இது மனிதனுக்கு அப்பாற்பட்ட சக்திகளின் வேலை என்று கதைவிடுவதற்கு வியாபார நோக்கமே காரணம் என்று அவர் குற்றம் சாட்டினார்.

சில ஆய்வாளர்கள், ""பெர்முடா முக்கோணப் பகுதியில் கடற்கரைப் பகுதியில் மீத்தேன் ஹைட்ரேட் படிமங்களாகச் சேகரமாகியிருக்கின்றன. இந்த மீத்தேன் ஹைட்ரேட் நீர் அடர்த்தியைக் குறைத்து பெரிய நீர்க் குமிழ்களை உருவாக்கி கப்பல்களை மூழ்கடித்துவிடுகின்றன'' என்று தெரிவிக்கின்றனர்.

மேலும் சில ஆய்வாளர்கள்,""திடீர் மீத்தேன் வெடிப்புகள் சேற்று எரிமலைகளை உருவாக்கி கப்பல்களை மிதக்க முடியாமல் மூழ்கடித்துவிடுகின்றன'' என்ற தகவல்களை வெளியிட்டனர்.
ஆனால், இதற்கு மறுப்பு தெரிவிக்கும் வகையில் அமெரிக்க நிலவியல் நிறுவனம் ஒரு அறிக்கையை வெளியிட்டது. அதில்,""உலகம் முழுதும் கடலுக்கடியிலான ஹைட்ரேட்டுகள் பெருமளவில் இருக்கின்றன. குறிப்பாக, தென்கிழக்கு அமெரிக்கக் கடற்கரையை ஒட்டிய "ப்ளேக்ரிட்ஜ்' பகுதியில் இச்சேகரங்கள் மிக அதிகமாக இருக்கின்றன.
இருப்பினும், அக் கடற்பகுதியில் பெர்முடா முக்கோணப் பகுதியில் நடப்பதைப்போன்ற எந்த நிகழ்வுகளும் நடப்பதில்லை. பெர்முடா முக்கோணப் பகுதியில் மீத்தேன் ஹைட்ரேட் படிமம் மிகக் குறைவு. எனவே, மர்மச் சம்பவங்களுக்கு ஹைட்ரேட்டுகள்தான் காரணம் என்று உறுதியாகச் சொல்ல முடியாது'' என்று தெரிவித்திருந்தது.
÷இதுவரை ஏராளமான விமானங்களும், கப்பல்களும் பெர்முடா முக்கோணப்பகுதியில் மிகவும் மர்மமான முறையில் மறைந்திருக்கின்றன. ஆயினும், இதற்கெல்லாம் அடிப்படையான காரணம் என்னவென்று உறுதியாகக் கூறமுடியாத நிலையே உள்ளது. உங்களுக்குத் தெரிந்தால் சொல்லுங்கள்.

رَبَّنَآ اِنَّكَ تَعْلَمُ مَا نُخْفِىْ وَمَا نُعْلِنُ وَمَا يَخْفٰى عَلَى اللّٰهِ مِنْ شَىْءٍ فِى الْاَرْضِ وَلَا فِى السَّمَآءِ
"எங்கள் இறைவனே! நாங்கள் (உள்ளங்களில்) மறைத்துக்கொள்வதையும், நாங்கள் வெளிப்படுத்துவதையும் நிச்சயமாக நீ நன்கறிவாய். வானத்திலோ பூமியிலோ உள்ளவற்றில் யாதொன்றும் அல்லாஹ்வாகிய உனக்கு மறைந்ததல்ல" (குர்ஆன் : 14:38)

## அதிசயம், அற்புதம், ஆச்சரியம் 23

இந்த அண்டசராசர பேரண்டம், ஒரு சிறுபுள்ளியாக எப்படிச் சுருங்கியிருந்திருக்க முடியும் ?
உங்கள் உள்ளங்கையில் பொத்தி வைத்தபடி, சுருங்கிய நிலையில் ஒரு பலூன் இருக்கிறது. அதை எடுத்து ஊதுகிறீர்கள். நிறையக் காற்று ஊதக்கூடிய பலூனாக இருந்தாலும், ஓரளவு பெரிதாகிய பின்னர் ஊதுவதை நிறுத்திவிடுகிறீர்கள். அதற்குமேல் ஊதினால் வெடித்துவிடலாமென்ற பயம் காரணமாகவோ அல்லது ஊதிய பருமன் போதுமென்று நினைத்ததாலோ, ஊதுவதை நிறுத்திவிட்டிருப்பீர்கள்.

சரி, இப்போது அந்தப் பலூனுக்கு என்ன நடக்கும்? அந்தப் பலூன் அந்தப் பருமனிலேயே நிலையாக இருக்க வேண்டுமென்று நீங்கள் நினைத்தால், அதன் வாயை இறுக்கக் கட்டிவிடுவீர்கள். பலூனின் பருமன் மாறாமல் நிலையாக அப்படியே இருக்கும். இதுதான் வழமையும் கூட.
ஆனால், இதைவிட வேறு இரண்டுவிதமான சம்பவங்களும் அந்தப் பலூனுக்கு நடக்கலாம். ஒன்று, அந்தப் பலூனை உங்களால் முடிந்தளவு ஊதிக்கொண்டே போவது. அது பருமனாகிப் பருமனாகி, ஒருநிலையில் காற்றின் அழுத்தம் தாங்க முடியாமல் வெடித்துச் சிதறும்.
இரண்டாவது, ஊதியது போதும் என்ற நிலையில் பலூனிலிருந்து வாயை எடுக்க, அதில் ஊதப்பட்ட காற்று, படிப்படியாக வெளியேறிச் சுருங்கியதொரு பலுனாகப் பழைய நிலைக்கு மாறும். இந்த மூன்று சம்பவங்களையும் கொண்ட செயற்பாடுகளைப் பலூன் உள்ளடக்கியிருக்கிறது.
இதைப் பற்றிச் சொல்லும்போது, சிறுபிள்ளைத்தனமாக உங்களுக்குத் தோன்றலாம். ஆனால், விரிவடையும் பேரண்டத்திற்கே இது உதாரணமாகச் சொல்லப்படுகிறது.

விரிவடையும் பேரண்டம் மர்மங்களையும், ஆச்சரியங்களையும் கொண்டது. "அண்டம் விரிவடைவதில் ஆச்சரியம் இருக்கலாம். அதிலென்ன மர்மம் இருக்கப் போகிறது?" என்று நீங்கள் நினைப்பீர்கள். அது என்ன மர்மமென்று சொல்வதுதான் இந்தக் கட்டுரையின் நோக்கம். அதுமட்டுமல்ல, அந்த மர்மம் ஏதோ ஒரு வகையில் ஆன்மீகத்தையும் தொட்டுச் செல்வது இன்னுமொரு ஆச்சரியம்.
அந்த மர்மம் என்னவென்று நாம் இப்போது பார்க்கலாம். அதற்கு முன்னர், பேரண்டம் என்னும் சுருங்கிய நிலையில் இருந்த பலூன், எப்படிப் பெரியதொரு பலூனாக ஊதப்பட்டது என்பதைப் பார்த்துவிடலாம்.
காலம்' (Time), 'இடம்' (Space) ஆகிய இரண்டுமேயில்லாத ஒரு இடத்தில், நீங்கள் இருப்பதாக உங்களால் கற்பனை செய்யமுடியுமா?
'இடம்' இல்லாத ஒரு இடத்தில் எப்படி இருக்க முடியும்? சரி, இந்தக் கேள்வியை இப்படிப் புரிந்து கொள்வோம். உங்கள் வீட்டில் நீங்கள் இப்போது இருக்கிறீர்கள். உங்கள் வீடு சென்னையில் இருக்கிறது என்று வைத்துக் கொள்வோம். சென்னையிலிருக்கும் வீட்டில் நீங்கள் இருப்பதை உங்களால் கற்பனை பண்ண முடியுமல்லவா? சென்னை, இந்தியாவில் இருக்கிறது. இந்தியா பூமியிலும், பூமி சூரியக் குடும்பத்திலும் இருக்கிறது. சூரியக் குடும்பம் பால்வெளி மண்டலத்திலும், பால்வெளி மண்டலம், பேரண்டத்திலும் இருக்கிறது.
இப்பொழுது யோசித்துப் பாருங்கள். இந்தப் பேரண்டத்தில் எங்கோவொரு மூலையில் நுண்ணியதொரு புள்ளியாக நீங்கள் அமர்ந்திருக்கிறீர்கள் என்பது புரியும்.

திடீரென ஒருகணத்தில், பேரண்டமே காணாமல் போய்விடுகிறது. பூமி மட்டும் சுற்றிக் கொண்டிருக்கிறது. பூமியைத் தவிர எங்கும், எதுவும் இல்லை. இந்த நிலையைக்கூட, உங்களால் கற்பனை பண்ணிப் பார்க்க முடியும்.

இப்போது பூமியும் படிப்படியாக மறையத் தொடங்குகிறது. உங்களைச் சுற்றியுள்ள அனைத்துமே மறைந்து போகின்றன. இறுதியில் உங்கள் வீடும், நீங்கள் நிற்கும் தரையும் கூட இல்லாமல் போகின்றது. ஆனால் நீங்கள் மட்டும் இருக்கிறீர்கள். உங்களைச் சுற்றியோ, மேலேயோ, கீழேயோ எதுவுமில்லை. எதுவுமில்லையென்றால், ஆமாம் எதுவுமேயில்லை. முழுமையான வெற்றிடம்.
அதை வெற்றிடம் என்று கூடச் சொல்ல முடியாது. அப்படிச் சொன்னால் அங்கு வெற்றிடம் என்ற ஒன்று இருக்கிறது என்றாகிவிடும். அதனால் வெற்றிடம் கூட அங்கில்லை. அது என்ன நிலையென்றே சொல்ல முடியாத ஒரு நிலை. அந்த நிலையில் நீங்கள் நிற்கிறீர்கள். எந்தச் செயலையும் செய்ய முடியாத ஒரு உறைந்த நிலையாக அது இருக்கும்.
நீங்கள் நடக்க முடியாது. நடப்பதற்குத்தான் இடமில்லையே! பார்க்க முடியாது. பார்ப்பதற்கு ஒளியுமில்லை, பொருட்களுமில்லை. பேச முடியாது. பேச்சைக் கடத்தும் காற்று அங்கில்லை. அதேபோல, எதையும் கேட்கவும் முடியாது. மொத்தத்தில் எதுவும் செய்ய முடியாது.
அங்குக் காலம் (நேரம்) என்பது கூட இல்லை. காலம் என்பதற்கான எந்த அர்த்தமும் அங்கில்லை. இப்போது முதலில் நான் கேட்டிருந்த கேள்வியை மீண்டும் பாருங்கள். காலம், இடம் இரண்டுமில்லாத ஒரு நிலையில் நீங்கள் இருப்பதாக உங்களால் கற்பனை செய்ய முடிகிறதா? கற்பனை செய்து பார்க்கவே முடியவில்லையல்லவா? ஆனால் கற்பனையே பண்ணமுடியாத அப்படியானதொரு நிலை உண்மையில் இருந்துதானிருக்கிறது. இன்றிலிருந்து கிட்டத்தட்ட 13.7 பில்லியன் ஆண்டுகளுக்கு முன்னர் அந்த நிலை இருந்திருக்கிறது. அந்த நிலையில் பேரண்டம், ஒரு அணுவைவிடச் சிறிய புள்ளியாகச் சுருங்கி இருந்திருக்கிறது. பேரண்டம் சிறுபுள்ளியாகச் சுருங்கியிருந்த நிலையை 'ஒருமை நிலை' (Singularity) என்று விஞ்ஞானிகள் சொல்கிறார்கள்.
13.7 பில்லியன் ஆண்டுகளுக்கு முன், மிகமிகச் சிறியதொரு புள்ளியாக ஒடுங்கியிருந்த ஏதோவொன்று, ஒரு குறித்த கணத்தில் திடீரெனப் பிரமாண்டமாக வெடித்துச் சிதறியது. வெடிப்பு என்றால் அப்படியொரு வெடிப்பு. மனிதனால் கற்பனையே பண்ணிக் கொள்ள முடியாதவொரு பெருவெடிப்பு. கோடானகோடி அணுகுண்டுகளை ஒன்றாய்ச் சேர்த்து வெடித்தது போல இருந்த அந்தப் பெருவெடிப்பைத்தான் 'பிக்பாங்க்' (Bigbang) என்கிறார்கள்.
"நிச்சயமாக வானங்களும், பூமியும் (முதலில்) இணைந்திருந்தன என்பதையும், இவற்றை நாமே பிரித்(தமைத்)தோம்" (குர்ஆன் : 21:30)

வெடித்த அடுத்த நொடியிலேயே அது பேரண்டமாக விரிவடைந்தது. மிகச் சிறியதொரு புள்ளி ஒரு நொடிக்கும் குறைந்த நேரத்துக்குள் பேரண்டமாக விரிவடைந்தது. அதனாலேயே பல விஞ்ஞானிகள் இதைப் 'பெருவெடிப்பு' என்று சொல்வதற்குப் பதில் 'பெருவிரிவு' (Expansion) என்கிறார்கள்.
وَ السَّمَآءَ بَنَيْنٰهَا بِاَيْىدٍ وَّاِنَّا لَمُوْسِعُوْنَ
(எவருடைய உதவியுமின்றி) நம்முடைய சக்தியைக் கொண்டே வானத்தை அமைத்தோம். நிச்சயமாக நாம் (அதனை அவர்களின் அறிவிற்கெல்லாம் எட்டாதவாறு) மிக்க விசால மாக்கியும் வைத்திருக்கின்றோம். (குர்ஆன் : 51:47)

பேரண்டம் இப்படித்தான் உருவாகியது என்று அறிவியல் சொல்லும்போது, பலரால் நம்ப முடியாமல் இருக்கிறது. கோடிக்கணக்கான நட்சத்திரக் கூட்டங்களையும், நட்சத்திரங்களையும், கோள்களையும் கொண்ட இந்தப் பேரண்டம், ஒரு சிறுபுள்ளியாக எப்படிச் சுருங்கியிருந்திருக்க முடியும் என்ற கேள்வி சந்தேகமாக அவர்களால் முன்வைக்கப்படுகிறது.
ஆனால், அறிவியல் இந்தச் சந்தேகங்களைச் சுலபமாகத் தீர்த்துவைக்க முயன்றாலும், சிக்கலான அறிவியல் விளக்கங்களைப் புரிந்துகொள்ளச் சிலரால் முடிவதில்லை. அந்த விளக்கம் என்னவென்று நாமும் பார்த்துவிடலாம். தமிழால், எந்தச் சிக்கலான அறிவியலையும் இலகுவாகப் புரியவைக்க முடியும் என்ற நம்பிக்கை எனக்கிருக்கிறது.
உங்களுக்கு முன், நூறு கிலோ எடையுள்ள சதுரமான இரும்புத்துண்டு ஒன்று இருக்கிறது என்று வைத்துக் கொள்ளுங்கள். அந்த இரும்புத்துண்டு, இரும்பு அணுக்களால் உருவானது என்பது உங்களுக்குத் தெரியும். அந்த இரும்புத் துண்டை உடைத்துச் சிதைத்து வரும் மிகமிகச்சிறிய துகளைத்தான் 'இரும்பு அணு' (Fe) என்கிறோம். செங்கற்களை ஒன்றன்மேல் ஒன்றாக வரிசையாக அடுக்கி அழகியதொரு வீடு கட்டுவது போல, கோடிக்கணக்கான இரும்பு அணுக்களால் உருவாக்கப்பட்டதுதான் இந்த இரும்புத்துண்டு. நாம் அதில் ஒரு இரும்பு அணுவை மட்டும் எடுத்துக் கொள்ளலாம்.

ஒரு அணுவில், அணுக்கருவும் (Nucleus), அதைச் சுற்றியபடி எலக்ட்ரான்களும் (Electron) இருக்கும். சரி, அந்த அணுவை ஒரு கிரிக்கெட் மைதானமளவு பெரியது என்று இப்போது கற்பனை செய்து கொள்ளுங்கள். அப்படியெனில், அதன் அணுக்கரு அந்த மைதானத்தின் நடுவே கிடக்கும் ஒரு கிரிக்கெட் பந்தின் அளவாகத்தான் இருக்கும். ஒரு அணுவின் பருமனில் கோடி மடங்கைவிடச் சிறியதாகவே அணுக்கரு இருக்கும்.
அணுக்கருவுக்கும் எலெக்ட்ரான்களுக்குமிடையில் இருப்பது மிகப்பெரிய வெற்றிடம். எலெக்ட்ரான்களுக்கு எடை கிடையாது. அதனால், அணுவின் எடை அணுக்கருவிலேயே இருக்கிறது.
இப்போது இந்த உதாரணத்தின்படி பாருங்கள். ஒரு கிரிக்கெட் மைதானத்தின் மொத்த எடையும், அதன் மையத்தில் உள்ள கிரிக்கெட் பந்தில்தான் உள்ளது. அதாவது ஒரு அணுவின் எடை என்பது அந்த அணுவின் கோடி மடங்கு சிறிய அணுக்கருவில்தான் இருக்கிறது.

இப்போது, மேலே சொல்லப்பட்ட நூறு கிலோ இரும்புத்துண்டை எடுத்துக் கொள்ளுங்கள். ஒரு பேச்சுக்கு அந்த நூறு கிலோ இரும்புத்துண்டில் மொத்தமாக ஒரு கோடி இரும்பு அணுக்கள் இருக்கிறது என்று வைத்துக் கொள்ளுங்கள் (மீண்டும் சொல்கிறேன் ஒரு பேச்சுக்குத்தான்). இரும்புத்துண்டின் மொத்த எடையும், கோடி இரும்பு அணுக்களில்தான் இருக்கும். அதாவது, கோடி இரும்பு அணுக்கருக்களில் இருக்கும்.
இப்போது நாம் அந்தக் கோடி அணுக்கருக்களையும் ஒன்று சேர்த்தோமென்றால், ஒரு குண்டூசி முனையளவைவிடச் சிறியதாகவே இருக்கும். ஆனால் அந்தக் குண்டூசி முனையளவிருக்கும் அணுக்களை நம் கைகளால் தூக்கவே முடியாது. காரணம் அது நூறு கிலோ எடையுள்ளதாக இருக்கும். அதோடு மிகவும் அடர்த்தியானதாகவும் இருக்கும்.
இப்போது, அண்டத்தில் உள்ள அனைத்து அணுக்களையும் எடுத்து, அவற்றில் உள்ள எலெக்ட்ரானை அகற்றிவிட்டுப் பார்க்கும்போது, எஞ்சுவது கைமுனையளவு அணுக்கருக்களாகத்தான் இருக்குமென்பது புரிகிறதா?
இப்படித்தான் இந்தப் பேரண்டம், ஒரு சிறுபுள்ளியாக சுருங்கி இருந்திருக்க முடியும்.

بَدِيْعُ السَّمٰوٰتِ وَالْاَرْضِ وَ اِذَا قَضٰٓى اَمْرًا فَاِنَّمَا يَقُوْلُ لَهٗ كُنْ فَيَكُوْنُ
(அன்றி) அவனே வானங்களையும் பூமியையும் முன்மாதிரியின்றியே படைத்தவன். அவன் எதைப் படைக்கக் கருதினாலும் அதனை "ஆகுக!" எனக் கூறிய மாத்திரத்தில் உடனே அது ஆகிவிடுகிறது. (குர்ஆன் : 2:117)

## அதிசயம், அற்புதம், ஆச்சரியம் 24

( மரணம் - ஒரு கணமேனும் அவர்கள் பிந்தவும் மாட்டார்கள்; முந்தவும் மாட்டார்கள் )
ஒரு மனித உடல் அதிகாரப்பூர்வமாக இறந்த பிறகும் விரல் நகங்கள் மற்றும் முடிகள் தொடர்ந்து வளர்கின்றன என்பதை நீங்கள் கேள்விப்பட்டிருப்பீர்கள்.
ஏனென்றால், 'மரணம்' மனித உடலின் அனைத்து செல்களிலும் பரவுவதற்கு சிறிது நேரம் ஆகும். மேலும் முதன்முறையாக, மனிதன் இறக்கும் போது மரணம் பயணிக்கும் வேகத்தை விஞ்ஞானிகள் பதிவு செய்ய முடிந்தது.

ஸ்டான்போர்ட் பல்கலைக்கழகத்தின் மருத்துவ ஆராய்ச்சியாளர்களுக்கு மரணம் நம் உடலில் எவ்வாறு நிகழ்கிறது என்பதை முதன்முறையாக கணக்கிடப்பட்டது.
அது நிமிடத்திற்கு 30 மைக்ரோமீட்டர்கள் அல்லது ஒரு மணி நேரத்திற்கு 2 மில்லிமீட்டர் ( 0.2 செமீ ) வேகத்தில் நிகழ்கிறது. மரணம் நம் உடலின் செல்கள் வழியாக ஒரு சென்டிமீட்டர் பயணிக்க ஐந்து மணி நேரம் ஆகும்.
அறிவியலில் வெளியிடப்பட்ட ஆராய்ச்சியின் படி, மனித உடலின் செல்லுலார் மட்டத்தில் திட்டமிடப்பட்ட மரணம் நிகழும் விகிதத்தை விஞ்ஞானிகள் அளந்துள்ளனர். விஞ்ஞானரீதியாக அப்போப்டொசிஸ் என அழைக்கப்படும் இந்த செயல்முறை, முதல் முறையாக பதிவு செய்யப்பட்டு, நேரம் ஒதுக்கப்பட்டது.
இறக்கும் செல்கள் மூலம் தூண்டுதல் அலைகளாக அப்போப்டொசிஸ் அல்லது திட்டமிடப்பட்ட செல்லுலார் மரணம் நிகழ்கிறது என்று விஞ்ஞானிகள் கண்டறிந்தனர், மேலும் இந்த தூண்டுதல் அலையின் வேகத்தைத்தான் ஸ்டான்போர்ட் ஆராய்ச்சியாளர்கள் அளவிட முடிந்தது. ஆனால்...
மரணம் நிகழ்ந்து விட்டது என்பதை எந்த உடல் உறுப்பின் செயல் இழப்பிலிருந்து முடிவு செய்யலாம் என்பதை மருத்துவ விஞ்ஞானம்
ஆராய்கிறது !
இதயம் ரத்தத்தை உந்தி தள்ளுவதே நிறுத்தும்போது மரணம் ஏற்படுவதாக முன்பு கருதப்பட்டது. மருத்துவர்கள் நாடிப் பிடித்து பார்ப்பார்கள் மூச்சு இருக்கிறதா.. என்று பரிசோதிப்பார்கள். மூக்குக்கு அருகே கண்ணாடியை வைத்து பார்த்து ஈரம் படிகிறதா .. என்று சோதித்துப் பார்ப்பார்கள்.
நவீன செயற்கை சுவாச கருவிகளின் ( வெண்டிலேட்டர்) வருகை வாழ்க்கையின் முடிவான மரணம் குறித்த எளிய புரிதல்களை முற்றிலும் ரத்து செய்து விட்டது.

தீவிர சிகிச்சை முறைகள் மரணத்தை வரையறை செய்வதை மேலும் சிக்கலாக்கி விட்டன . மருத்துவ அடிப்படையில் மரணத்தின் வரையறை நரம்பியலின் பிராந்தியத்துக்குள் நுழைந்து விட்டது
நரம்பு மண்டலத்தின் மரணம், மூளைச்சாவு ... போன்ற புதிய வார்த்தைகள் மருத்துவ அகராதிக்குள் நுழைந்து மரண கணப்பொழுதை மேலும் சிக்கலாகி விட்டன.
மூளை சாவு அடைந்த ஒரு நபருக்கு இதயமும் நுரையீரலும் தொடர்ந்து செயல்படும் நிலையில், அவர் இறந்துவிட்டார் என்று சொல்ல முடியுமா ?
உடல் உறுப்பு மாற்று சிகிச்சைகளின் நடைமுறைகள் வெளிப்படையாக இருக்கும் பொருட்டு மூளை சாவு நிகழ்வுகளை உறுதிப்படுத்தும் விதிமுறைகளைக் கடந்த மாதம் கேரளா அரசு வெளியிட்டது.
மருத்துவ அறிவியலில் ஏகப்பட்ட முன்னேற்றங்கள் ஏற்பட்டிருந்தாலும் ( ஒருவேளை அதுவே காரணமாகவும் இருக்கலாம் ) மருத்துவ ரீதியாகவும் அறநெறிகளின் அடிப்படையிலும் எந்த தருணத்தில் ஒருவருக்கு மரணம்

ஏற்படுகிறது என்பதை முடிவு செய்வதில் தெளிவில்லாத குழப்பமே மேலும் மேலும் நிலவுவதாக மருத்துவ விஞ்ஞானம் கூறுகிறது
''...ஒரு குறிப்பிட்ட தவணை வரை அவர்களை( மரணம் பிடிக்காது) பிற்படுத்துகிறான் - அவர்களுடைய தவணை வந்து விட்டாலோ ஒரு கணமேனும் அவர்கள் பிந்தவும் மாட்டார்கள்; முந்தவும் மாட்டார்கள்" (குர்ஆன் : 16:61)

அதிசயம், அற்புதம், ஆச்சரியம் 25
நீங்கள் மிகவும் வெறுக்கும் சப்தம் எது ?

வாழ்க்கையில் உங்களை மிக மிக அதிக அளவில் எரிச்சலூட்டிய சத்தம் எதுவாக இருந்திருக்கக் கூடும்? இந்தக் கேள்விக்கான பதில் பலருக்கும் பலவிதமானதாக இருக்கலாம்.
சிலருக்கு தூக்கத்திலிருந்து திடீரென விழிப்புத் தட்டியபின் கடிகார நொடி முட்களின் டிக் டிக் டிக் சத்தம் மீண்டும் தூக்கத்தில் ஆழ முடியாத அளவுக்கு எரிச்சலை உண்டாக்கியிருக்கலாம்.
சிலருக்கு ஆழ்ந்து உறங்கிக் கொண்டிருக்கையில் அதைக் கெடுப்பதே போல அருகில் ஒலிக்கக் கூடிய குறட்டைச் சத்தத்தைக் கேட்ட மாத்திரத்தில் கொலை வெறி கூட ஏற்படலாம்.
இன்னும் சிலருக்கு இரவெல்லாம் 10 நிமிடங்களுக்கொருமுறை விழித்துக் கொண்டு கரையும் பிறந்த குழந்தையின் அழுகுரல் கூட சிடுசிடுப்பைத் தரலாம்.
சிலருக்கு ஃபேன் சத்தம் கூட எரிச்சலுண்டாக்கும்.
சிலருக்கு டி.வி சேனல்களின் போகோ தீம் மியூசிக்கைக் கேட்டால் கூட ஆத்திரம், ஆத்திரமாக வரும்.
சிலருக்கு யாராவது கூரான நகங்களை சீட்டித் துணியில் தேய்த்தால் வருமே ஒரு கரகர சவுண்டு அதைக் கேட்டாலும் கூட உடலெல்லாம் கூசி சட்டெனக் கோபம் வரும்.
...இப்படி மனித வாழ்க்கையில் ஒவ்வொருவருக்கும் ஒவ்வொரு ஓசை அல்லது சத்தமும் உச்சபட்ச ஆத்திரத்தையோ அல்லது கோபத்தையோ தூண்டக்கூடும்.
சரி, இப்படி ஒவ்வொருவருக்கும் ஒவ்வொருவிதமான சவுண்டு அலர்ஜி இருக்கலாம். ஆனால், உலகில் உள்ள ஒட்டுமித்த மானுட இனத்தையுமே எரிச்சலூட்டக் கூடிய ஒரு சத்தம் உண்டு. அதற்கு நாடு, இனம், மொழி, கண்டங்கள் என்ற எந்த பேதமும் கிடையாது.
ஒட்டுமொத்த உலகையும் ஆத்திரமூட்டக் கூடிய, சஞ்சலப்படுத்தக்கூடிய, கோபமூட்டக்கூடிய ஒரு சத்தம் உண்டென்றால் அது குழாயில் தண்ணீர் லீக்காகும் சத்தம் தான்.
துளித்துளியாக தண்ணீர் லீக் ஆகி கீழிருக்கும் வாளித்தண்ணீரில் விழும் ஓசையை கற்பனை செய்து பாருங்கள். கற்பனையே கர்ண கடூரமான எரிச்சலை உண்டாக்குகிறது தானே!
ஆம், உலகம் முழுவதையுமே மிக எரிச்சலடையச் செய்யக்கூடிய அந்த ஓசையைக் கேட்கும் போது நமக்கு ஏன் அப்படியாகிறது என்று எப்போதாவது யோசித்துப் பார்த்திருக்கிறீர்களா?
இதோ நேஷனல் ஜியாக்ரபிக் சேனல் அதற்கு அறிவியல் பூர்வமாக விளக்கமளித்திருக்கிறது.
அதிவேக கேமிராக்கள் மூலமாக கேம்பிரிட்ஜ் பல்கலைக்கழக விஞ்ஞானிகள் தண்ணீர் லீக் ஆகும் போது வெளிப்படும் 'பிளிங்க்' ஓசையை மிக ஸ்லோவா மோஷனில் வீடியோவாக்கி அதை ஆராயத் தொடங்கினர்.
தண்ணீர் லீக் ஆகி துளித்துளியாக வெளியேறும் போது உள்ளிருக்கும் காற்றுக் குமிழி அதி வேகத்தில் தரையையோ அல்லது தேங்கியிருக்கும் மீதித் தண்ணீரையோ மோதுவதால்தான் அந்த ஓசை உலகிலேயே உச்சபட்ச எரிச்சலுண்டாக்கக் கூடியதாக ஓசையாகக் கருதப்படுகிறது.
ஆனால், குர்ஆனில் அல்லாஹ் ....

وَاقْصِدْ فِي مَشْيِكَ وَاغْضُضْ مِنْ صَوْتِكَ إِنَّ أَنكَرَ الْأَصْوَاتِ لَصَوْتُ الْحَمِيرِ
“நீ நடக்கும் போது நடுத்தரத்தைக் கடைப் பிடி! உனது குரலைத் தாழ்த்திக் கொள்! குரல்களில் வெறுக்கத்தக்கது கழுதையின் குரலாகும்” (என்றும் அறிவுரை கூறினார்). (அல்குர்ஆன்:31:19.)"
நமக்கு கோபம் வரும் போது நம்மை அறியாமல் சப்தமிட்டு பேசுகிறோம். நாம் சப்தமாக பேசும் போது யாரும் நம்முடைய பேச்சை விரும்பி கேட்க மாட்டார்கள். நம்முடைய பேச்சை விட்டும் திரும்ப தான் செய்வார்கள். நாம் சப்தமிட்டு பேசாமல் பொறுமையை கடைபிடிக்க வேண்டும். பொறுமையை கடைபிடிக்காமல் சப்தமிட்டு பேசினால் நாம் கழுதைக்கு ஒப்பானவர்களாக ஆகிவிடுவோம்.
நிச்சயமாக சபதங்களின் அது அது மிக வெறுப்பானது கழுதைகளின் சப்தமாகும். கழுதை சப்தம் அரபியருக்கும், மற்றைய ஜனங்களுக்கும் தெரிந்ததுதான். மனிதருக்கு வெறுக்கத்தக்கதாக இருப்பது மட்டுமின்றி பழிக்கத்தக்கதாகவும் இருக்கிறது.
நரகவாசிகள் நரகில் வேதனைப்படும் பொழுது, முதலாவதாக மிகப் பெரிய தொனியில் கத்துவார்கள். இறுதியில் மெதுவாக ஒடுங்கிவிடும். இந்த இரண்டுக்கும் இடையில் ஒரு விதமான இழுவையும் உண்டு. இது மாதிரியே கழுதை கத்துவது போலவே நரகவாசிகளது சப்தம் இருக்கிறது. ஆதலால்தான் மனிதருக்குப் பிடித்தமில்லாத சப்தங்களில் மிகவும் பழிப்புக் கிடமானது கழுதையின் சப்தம் எனக் கூறப்படுகிறது.

கழுதை கத்துவது போல சத்தம் தான் ஜனங்களுக்கு மிக வெறுப்பானது என்பது இவ்வசனத்தின் கருத்து மேலும் இவ்வாறு சப்தமிடுவது அல்லாஹுத்தஆலா இடத்தில் வெறுக்கத்தக்கதாக இருக்கிறது. இது அவனுக்கு பிரியமானது அல்ல என்பதும் இவ் வசனத்தில் எச்சரிக்கை செய்யப்படுகிறது
மேலும் எல்லா பொருட்களின் சப்தங்களும் தஸ்பீஹாக இருக்கின்றன ஆனால் கழுதையின் சப்தத்தை தவிர்த்து, காரணம் கழுதை ஷைத்தானை கண்டு மருண்டு சப்தமிடுகிறது. இதனால் தான் அந்த சத்தம் வெறுக்கத்தக்கது என்பதாக கூறப்பட்டிருக்கிறது
நீங்கள் கழுதையின் சப்தத்தை கேட்டால் சைத்தானை விட்டு அல்லாஹ்வைக் கொண்டு காவல் தேடுங்கள் ஏனெனில் அது சைத்தானை பார்த்து கொண்டு சப்தமிடுகிறது.
சேவல் கூவும் சப்தத்தை நீங்கள் செவியேற்றால் அல்லாஹ்விடத்தில் அவனது கிருபையை நீங்கள் கேளுங்கள் ஏனெனில் அது வானவரைப் பார்த்து கூவுகிறது

## அதிசயம், அற்புதம், ஆச்சரியம் 26

( கடிகார சுற்று திசை (Clockwise)

கடிகாரம் எப்போதும் ஒரே ஒரே மாதிரி அதாவது வலப்புறமாக சுற்றிவரும், இதனை கடிகார திசை என்று கூறுகிறார்கள். இதற்கு காரணம் பூமியின் சுழற்சி என தெரிவிக்கப்பட்டுள்ளது.
ஒவ்வொரு மணி துளியும், ஒவ்வொரு நிமிடமும் எப்போதும் முக்கியத்துவம் வாய்ந்தாகவே கருதப்படுகிறதுது.
ஒரு நாளைக்கு 24 மணி நேரம் என்ற அளவு பலருக்கும் போதாது என்ற நிலையும் ஏற்படுவதாக கூறிவருகின்றனர்.
கடிகார சுழற்சி குறித்து எப்போதும் ஒரே மாதிரியாக தான் இருக்கிறது. அதாவது வலப்புறமாக தான் சுற்றிவரும், இதனை கடிகார திசை (Clockwise) என்று கூறுவது உண்டு.

முட்கள் கொண்ட முதல் கடிகாரத்தைச் சீனர்கள்தான் தயாரித்தார்கள். சீனா நிலநடுக்கோட்டுக்கு வடக்கே உள்ளது.
வட துருவத்தில், தெற்கே பார்த்து நின்றீர்கள் என்றால் உங்கள் இடப் புறம் சூரியன் உதித்து வலப் புறம் மறையும். எனவே, அவர்கள் உருவாக்கிய கடிகாரம் இடமிருந்து வலமாக சுற்றுகிறது.
சூரியனை, பூமி 23.5 டிகிரி சாய்ந்த நிலையில் வலப்புறமாக சுற்றுகிறது. அதனால் கொஞ்சம் கொஞ்சமாக இடதுபுறத்தில் இருந்து(கிழக்கு) வலதுபுறமாக(மேற்கு), அதாவது சூரியன் கடிகார திசையில் சுழலுவது போல் தோன்றும்.
இடது புறத்தில் இருந்து வலதுபுறமாக சூரியனின் நிழல் நகர்வதை அடிப்படையாக கொண்டு கடிகார முள்களும் அந்த திசையிலேயே சுற்றும் வகையில் வடிவமைக்கப்பட்டுள்ளன.
இதைப்போல் குர்ஆனில் கஹ்ப் அத்தியாயத்தில் குகைத் தோழர்களின் குகையின் அமைப்பும் சூரியன் உதயமாகி அஸ்தமிப்பதை கடிகார சுற்று திசையில் அமைந்திருக்கிறது

وَتَرَى الشَّمْسَ اِذَا طَلَعَتْ تَّزٰوَرُ عَنْ كَهْفِهِمْ ذَاتَ الْيَمِيْنِ وَاِذَا غَرَبَتْ تَّقْرِضُهُمْ ذَاتَ الشِّمَالِ وَهُمْ فِىْ فَجْوَةٍ مِّنْهُ ذٰ لِكَ مِنْ اٰيٰتِ اللّٰهِ مَنْ يَّهْدِ اللّٰهُ فَهُوَ الْمُهْتَدِ وَمَنْ يُّضْلِلْ فَلَنْ تَجِدَ لَهٗ وَلِيًّا مُّرْشِدًا
சூரியன் உதயமாகும் போது (அவர்கள் மீது படாமல்) அது அவர்களுடைய குகையின் வலப்புறம் சாய்வதையும், அது அஸ்தமிக்கும் போது அது அவர்களுடைய இடப்புறம் செல்வதையும் நீர் பார்ப்பீர்; அவர்கள் அதில் ஒரு விசாலமான இடத்தில் இருக்கின்றனர் - (குர்ஆன் : 18:17)

குகையினுள் சென்ற அவ்வாலிபர்களான குகைத் தோழர்கள் அதில் 300 வருடங்கள் தூங்குகின்றனர். சூரியனின் வெப்பம் அவர்களை எம்முறையிலும் தாக்காதபடி அல்லாஹ் காப்பாற்றுகின்றான்.
சூரியன் உதயமாகும் பொழுது வெயில் அவர்கள் மீது படாதவாறு அக்குகையை விட்டு அவர்களின் வலப்பக்கமாக அது சாய்ந்து விடுகிறது.
பிற்பகலில் அது மறையும் பொழுது அவர்களை விட்டு இடப்பக்கமாகக் கடந்து சென்று விடுகிறது.
அவர்கள் அங்குமிங்கும் புரண்டு படுக்கின்றனர். ஆயினும், அவர்கள் மீது வெயில் சிறிதளவு கூடப்படுவதில்லை. இது எதனால்?
அக்குகையின் வாய் வடக்குப் பக்கமாக இருந்தது. அதனால் கிழக்கிலிருந்து உதயமாகி வரும் சூரியன் அவர்களது வலப்புறமாகவே சென்று விடும். இவர்கள் குகையின் மத்திய பாகத்திலுள்ள ஒரு மூலையில் விசாலமான இடத்தில் நித்திரை கொள்வதால் வடக்குப் பக்கமாக உள்ள வாசலின் வழியாக இவர்கள் மீது வெயில் படுவதற்கு வாய்ப்பில்லை.
சூரியன் மறையும் நேரமான பிற்பகலில் இவர்களின் இடப்பக்கமாகச் சென்று விடும். அதனால் வெயில் இவர்களுக்குத் தெற்கில் தான் வீசும். அதுவும் இவர்களின் மீது படாது.
சூரியன் தனது பன்னிரு இராசிகளில் எந்த இராசியில் சென்ற போதிலும் இதே நிலைதான். சற்று சிந்தித்துப் பார்க்கும் பொழுது குகையின் விசாலமான-நடு மையமான இடத்தில் அவர்கள் நித்திரை கொள்கின்றனர் என அறியலாம்.

அதுமட்டுமன்றி அல்லாஹ் ஒருவனையே நம்பி குகைக்கு வந்தவர்களாதலால், அவர்கள் அவனுடைய உதவி பெற்றவர்கள். அவன் தனது கருணையால் சூரிய வெப்பமோ. இதர துன்பங்களோ எதுவும் அவர்களை அணுகாதவாறு காப்பாற்றிக் கொண்டிருக்கின்றான்.
இது அவனுடைய அத்தாட்சிகளில் ஒன்றாகும். அவன் எதையும் செய்வான். அவனுடைய ஆற்றலுக்கு எதுவும் ஈடாகாது...

## அதிசயம், அற்புதம், ஆச்சரியம் 27

(அஃறிணையும் அவன் புகழ்பாடும் )

அனைத்தும் அணுக்களால் உருவாக்கப்பட்டது என்றால், அனைத்துமே உயிருடன் இருக்கிறதா ?
ஒரு வகையில் அப்படியும் வைத்துக் கொள்ளலாம். மனித அறிவை பொறுத்தமட்டு ரத்தமும் சதையுமாக இருக்கும் அணுக்கூட்டங்களை தான் நாம் உயிர் உள்ளவை என குறிப்பிடுகின்றோம். அதை தவிர வேறு எந்த பொருளையும் நாம் உயிர் உள்ளவை என நினைக்க மாட்டோம்.
யோசித்து பாருங்கள், நாம் சாப்பிடும் தயிர், அரிசி மாவு போன்றவைகளில் பேக்டீரியா மூலமாகத்தான் தத்தம் தன்மையில் மாற்றங்கள் அடைகின்றன. நாம் இவற்றை உயிர் என்று கருதுவது இல்லை. ஆனால் விஞ்ஞானிகள் அவ்வாறு கருதுகிறார்கள்.

என்னை பொறுத்த வரை உயிர் என்று நான் சொல்வது, "ஒன்று அல்லது அதற்கு மேற்பட்ட செயல்களை செய்ய உருவாக்கப்பட்ட அணுக்கூட்டங்கள் தான்"
நான், நீங்கள், உங்கள் நண்பன், வீட்டிற்கு வெளியில் உள்ள நாய், கூண்டிற்குள் அடைபட்ட பறவைகள், மடிக்கணினி, தொலைபேசி, என்று எல்லாமே உயிர் உள்ளவைகள் தான்.
அப்படியென்றால் "நான் என்ன வேலை செய்வதற்காக உருவாக்கப்பட்டேன்?" என்று நீங்கள் நினைக்கலாம் அதை கண்டுபிடிப்பதில் தான் சுவாரசியமே அடங்கியுள்ளது, அது எது என்று உங்கள் ஆழ்மனதிற்க்கு நிச்சயம் தெரிந்து இருக்கும்.
இதற்கு நான் ஒரு உதாரணம் சொல்கிறேன் கேளுங்கள்,
நாம் எப்படி பிறந்தோம், நமக்கென ஒரு உடல் தாயின் வயிற்றில் உருவாக்கப்பட்டு,நாம் பிறந்ததும் அதுவரை சுரக்காத தாய்ப்பால் சுரந்து நமக்கு ஊட்டப்படுகிறது. ஒவ்வொரு செல்களுக்கும் ஒவ்வொரு பணி செய்ய பணிக்கப்பட்டன, அந்த செல்கள் எப்படி வேலை செய்கின்றன என்று பார்த்தால், விஞ்ஞானம் எல்லாமே வேதியல் மாற்றங்களினால் நிகழ்கிறது என்கிறது.
எல்லா செல்களுக்கும் வேலை செய்ய உணவு தேவைபட்டது, அதற்காக ஒரு மோட்டர் பம்பு (இதயம்) உருவாக்கப்பட்டது. இதுபோல் பல உடல் பாகங்கள் ஒவ்வொன்றும் ஒவ்வொரு வேலை செய்ய உருவாக்கபட்டுள்ளன. இவையெல்லாவற்றையும் கட்டு படுத்த ஒரு பயோலாஜிக்கல் மென்பொருள் (டி என் ஏ) எல்லா செல்களிலும் நிறுவப்பட்டுள்ளன.
மிக முக்கியமாக மூளை, நாம் நினைக்கும் "நாம்" என்பது மட்டும் மூளை அல்ல, நமக்கே தெரியாமல் நம் உடலில் பல மாற்றங்களை செய்யும் வித்தைக்காரன்.
இவை எல்லாம் சேர்ந்து தான் "நாம்". ஒவ்வொரு "செல்"லும் ஒரு பணியை செய்கின்றன, அப்படியானால்

ஒவ்வொரு செல்லிற்கும் உயிர் உள்ளது என்று கொள்வது தானே சிறந்தது. இதையே தான் அறிவியலும் சொல்கிறது.
1. அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்கள் கூறியதாவது: (நபி (ஸல்) அவர்களது காலத்தில்) உணவுகளிலும் கடைவீதிகளிலும் நீங்கள் உண்ணப் பட்டுக்கொண்டிருக்கும்போது அ(ந்த உணவானது இறைவனைத் துதிப்பதை -தஸ்பீஹ் செய்வதை- நாங்கள் கேட்டிருக்கிறோம் அறிவிப்பாளர் அல்கமா ரஹ் நூல் ஹீைஹுல் புகாரி தமிழாக்கம், ஹதீல் 3579
2 அபூதர் (ரலி) அவர்கள் கூறியதாவது நபி (ஸல்) அவர்கள் தமது கரத்தால் சிறு கற்களை எடுத்தார்கள். அவை தேனீ ரீங்காரமிடுவதைப் போன்று அல்லாஹ்வைத் துதிப்பதைச் செவியுற்றார்கள். அவ்வாறே அபூபக்ர், உமர், உஸ்மான் (ரலி) ஆகியோரின் கரத்திலும் அவை தஸ்பீஹ் செய்துகொண்டிருந்தன. நூல் : முஸ்னது அல்பஸ்ஸார், தப்ரானீ
3. முஆத் பின் அனஸ் ரலி அவர்கள் கூறியதாவது : "அல்லாவின் தூதர் ( ஸல் )அவர்கள் ஒரு சமூகத்தாரை கடந்து சென்றார்கள். அச்சமூகத்தார் நம்முடைய ஊர்தி ஒட்டகங்கள் மீதும் வாகன பிராணிகள் மீதும் அமர்ந்து பேசிக் கொண்டிருந்தனர்.
அவர்களிடம் நபியவர்கள், "அவற்றின் மீது முறையோடு பிரயாணம் செய்யுங்கள். நல்ல முறையில் அவற்றை (அவிழ்த்து) விடுங்கள். பாதை உரையாடுவதற்குரிய நாற்காலிகளாக அவற்றைப் பயன்படுத்தாதீர்கள். எத்தனையோ ஊர்திப் பிராணிகள் அவற்றில் பயணம் செய்பவரை விடச் சிறந்தவையும் அவரைவிட அல்லாஹ்வை அதிகமாக நினைவு கூறக்கூடியவையும் இருக்கின்றன " என்று கூறினார்கள் நூல் : முஸ்னது அஹ்மத்
4) அப்துல்லாஹ் பின் அம்ர் (ரலி) அவர்கள் கூறியதாவது:

"அல்லாஹ்வின் தூதர் அவர்கள் தவளையை கொல்வதற்கு தடை விதித்தார்கள் மேலும் தவளையின் ஓசை இறை துதி ஆகும்" என்று கூறினார்கள். நூல் : தப்ரானீ பைஹகீ
5) அல்லாஹ்வின் தூதர் ( ஸல்) அவர்கள் கூறினார்கள்:
" நபி நூஹ் (அலை) அவர்கள் தம் மகனுக்கு கட்டளையிட்ட ஒரு விஷயத்தை உங்களுக்கு நான் கூறட்டுமா ? அவர்கள் தம் மகனிடம் கூறினார்கள் அருமை மகனே ! நீ சுபஹானல்லாஹ் (அல்லாஹ்வை துதிக்கிறேன்) என்று கூறவேண்டும் என உனக்கு நான் கட்டளையிடுகிறேன். ஏனெனில் அதுதான் படைப்பினங்களின் தொழுகையாகவும், இறை துதியாகவும் இருக்கிறது அதனாலேயே படைப்பினங்கள் தங்களின் வாழ்வாதாரம் வழங்கப்பெறுகின்றன.
உயர்ந்தோன் அல்லாஹ்வும் "எந்த பொருளும் (அல்லாஹ்வாகிய) அவனது புகழை போற்றாமல் இருப்பதில்லை" என்று கூறுகிறான். நூல் : தஃப்சீர் தபரீ
6) "தூணும் இறைவனை துதிக்கிறது. மரமும் இறைவனை துதிக்கிறது என்று இக்ரிமா (ரஹ்) அவர்கள் கூறினார்கள். மரம் அல்லது அதன் கிளை போன்ற உயிருள்ள ஒவ்வொன்றும் அல்லாஹ்வை துதிக்கின்றன என்று கூறினார்கள். இதன் தொடராக ...
ஹசன் அல்பஸ்ரி ளஹ்ஹாக் (ரஹ்) ஆகியோர், "உயிருள்ள ஒவ்வொன்றும் தஸ்பீஹ் செய்கின்றன" என்று கூறினார்கள். இதற்குச் சான்றாகப் பின்வரும் ஹதீஸ் அமைந்துள்ளது.
இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் இரு அடக்கத் தலங்களைக் கடந்து சென்றார்கள். அப்போது, "அறிந்து கொள்ளுங்கள்! (இதோ) இவர்கள் இருவரும் (மண்ணறைக்குள்) வேதனை செய்யப்பட்டுக்கொண்டிருக்கிறார்கள். ஒரு பெரிய (பாவச்) செயலுக்காக இவர்கள் வேதனை செய்யப்படவில்லை. இவர்களில் ஒருவர் (மக்களிடையே கோள் சொல்லித் திரிந்துகொண்டிருந்தார். மற்றொருவரோ சிறுநீர் கழிக்கும்போது (தமது உடலை) மறைக்கமாட்டார்" என்று கூறினார்கள்
பிறகு பச்சை பேரீச்சமட்டை ஒன்றைக் கொண்டுவரச்சொல்லி, அதை இரண்டாகப் பிளந்து, இவர் (மண்ணறை) மீது ஒரு துண்டையும் அவர் (மண்ணறை) மீது ஒரு துண்டையும் ஊன்றி வைத்தார்கள். பிறகு. "இவ்விரண்டின் ஈரம் உலராத வரை இவர்களின் வேதனை குறைக்கப்படலாம்" என்று கூறினார்கள் நூல் : புகாரி 1361
இந்த ஹதீஸ் குறித்துக் கருத்துத் தெரிவித்த அறிஞர்கள் சிலர். நபி (ஸல்) அவர்கள், "இவ்விரண்டின் ஈரம் உலராத வரை அவை தஸ்பீஹ் செய்கின்றன என்று கூறியதற்கு காரணம் அவ்விரண்டிலும் பசுமை இருக்கும் வரை தான் அவை தஸ்பீஹ் செய்கின்றன. அவை காய்ந்து விட்டால் அவற்றின் தஸ்பீஹ் நின்றுவிடும்" என கூறுகின்றனர் அல்லாஹ்வே மிக அறிந்தவன்
சான்றோர்களின் ஒருவர் கூறினார் கதவுகளின் கிரீச்சிடும் சப்தமும் தண்ணீரின் சலசலப்பு இறை துதிகள் ஆகும்.
"ஏழு வானங்களும் பூமியும் அவற்றிலுள்ள யாவும் (அல்லாஹ்வாகிய) அவனைத் துதிக்கின்றன. எந்தப் பொருளும் அல்லாஹ்வாகிய) அவனது புகழைப் போற்றாமல் இருப்பதில்லை. எனினும், அதன் துதியை நீங்கள் புரிந்துகொள்ளமாட்டீர்கள். நிச்சயமாக அவன் மிகுந்த சகிப்புத் தன்மை உடையோனும் மிக்க மன்னிப்போனும் ஆவான்"
( குர்ஆன் : 17: 44 )

அனைத்துப் பொருட்களிலும் அவனுக்கோர் சான்று
நற்சான்று பகரும் அவன் ஏகன் என்று.

## அதிசயம், அற்புதம், ஆச்சரியம் 28

சர்வதேச பிறை சாத்தியமா ?

விஞ்ஞானத்தின் அதிவேக வளர்ச்சியடைந்த இக்கால கட்டத்தில் உலக முழுவதும் உள்ள இஸ்லாமிய சமுதாயத்தை மக்காவின் சந்திர உதயத்துடன் இணைத்து சர்வதேச பிறை நோன்பு விசயத்தில் ஒன்றிணைக்கலாமே ...
"ஃபமன் ஷஹித மின்கு முஷ்ஷஹ்ர" (உங்களில் இந்த மாதத்தை அடைந்தவர் நோன்பு நோற்கட்டும்) (அல்குர்ஆன் 2:185) என்றே அல்லாஹுதஆலா கூறுகிறான்.
மக்காவில் பிறை பார்த்தும் உலகின் இன்னொரு கோடியில் பிறை பார்க்காத மக்கள் (அல் குர்ஆன் 2:185) இந்த வசனத்தின் பிரகாரம் ரமலான் மாதத்தை (பிறை பார்ப்பதின்) மூலம் அடையவில்லை. அவர்களை நோன்பு வைக்கும்படி கட்டாயப்படுத்தி ஏவுவது எப்படி சாத்தியமாகும் ?
"பிறையைப் பார்த்து நோன்பு வையுங்கள் பிறையைப் பார்த்து நோன்பை விடுங்கள்" என்று நபி (ஸல்) அவர்கள் கூறி இருக்க, மக்காவில் பிறை பார்க்கப்பட்டு கிழக்குப்பகுதியில் உள்ள பாகிஸ்தான் போன்ற நாட்டில் உள்ளவர்கள் பிறையைப் பார்க்கவில்லை என்று நமக்கு தெரிந்த பிறகும் எவ்வாறு அவர்களை நோன்பு வைக்க ஏவமுடியும்?
நபி அவர்கள் நோன்பின் அமலை பிறை பார்ப்பதுடன் தொடர்புபடுத்தியிருக்க அங்கே சந்திரன் உதயமாகவில்லை என்று நமக்கு நன்கு தெரிந்தும் அவர்களை நோன்பு வைக்கும்படி எப்படி கடமையாக்க முடியும்?

இவ்விஷயத்தில் இடர்பாடில்லாத சரியான அறிவுப் பூர்வமான ஒப்பீட்டு ஆதாரமாகிறது. மேற்கில் ஃபஜ்ரு உதயமாகும் முன்பே கிழக்கில் ஃபஜ்ர் உதயமாகி விடும் என்பது தெரிந்த விஷயம். எனவே அவ்வாறு உதயமாகிவிடுவதால் மேற்கிலிருக்கும் நாம் (சவூதி) நமக்கு இரவாயிருக்க நோன்பை ஆரம்பிக்க முடியுமா? என்றால் ஆரம்பிக்க மாட்டோம்.
கிழக்கில் சூரியன் மறைந்து விட்டபோது மேற்கிலிருக்கும் நாம் (சவூதி) பகலிலிருப்பதால் நோன்பு திறக்க முடியுமா? என்றால் முடியாது.
சந்திரனும் எல்லா விஷயத்திலும் சூரியனைப் போலவே. சந்திரன் மாதத்தைக் காட் டும். சூரியன் நாட்களைக் காட்டும். பிறைப் பார்ப்பது, சூரியன் மறைவது. ஃபஜ்ர் உதயமாவது இவைகளை தொடர்பு படுத்தியே நபி (ஸல்) அவர்கள் நோன்பை ஆரம்பிப்பதற் கும் நோன்பை திறப்பதற்கும் (இஃப்தார்) கூறியிருப்பதால் அறிவார்ந்த அடிப்படையிலும் எதார்த்தத்தின் அடிப்படையிலும் ஒவ்வொரு ஊருக்கும் அந்த ஊரின் உதய அஸ்தமனத்தை கவனித்து தனிப்பட்ட சட்டத்தை கூறுவதே ஆதாரத்தின் அடிப் படையில் சரியாக தெரிகின்றது. ( ஃபதாவா அர்கானுல் இஸ்லாம் 451)

மாதக் கணிப்பும் நேரக் கணிப்பைப் போலவே! எனவே நோன்பை ஆரம்பிப்பதிலும் (இஃப்தார் நோன்பு) திறப்பதிலும் (சூரிய உதயத்தை நேர கணிப்பு) கவனித்து எவ்வாறு வித்தியாசப்படுகின்றதோ அவ்வாறே மாதத்தின் ஆரம்ப, முடிவிலும் ஏற்படவே செய்யும் என்றே அறிஞர் பெருமக்கள் கூறியுள்ளனர்.
மேற்கிலிருப்பவர்களுக்கு முன்பாகவே கிழக்கிலிருப்பவர்கள் நோன்பை ஆரம்பித்து (இஃப்தார்) நோன்பை திறந்தும் விடுகின்றனர் என்று எல்லா முஸ்லிம்களும் அறிவார்கள். நேர வித்தியாசத்தில் எல்லோருக்கும் எவ்வாறு தனிச்சட்டமோ அவ்வாறு மாத ஆரம்பத்திற்குரிய சட்டமும்,
எனவே, “குமரி இருட்டு நீங்கி விடியற்காலை ஆகிவிட்டது என்று உங்களுக்கு தெளிவாகும் வரை உண்ணுங்கள், பருகுங்கள்."(அல்குர்ஆன் 2:187) என்ற குர்ஆன் வசனத்தின் அடிப்படையிலும் ...
"இங்கிருந்து இரவு வந்துவிட்டால் இங்கிருந்து பகல் சென்று சூரியன் மறைந்துவிட்டால் நோன்பாளி நோன்பு திறப்பார்" என்ற நபி அவர்களின் ஹதீஸின் அடிப்படையிலும்...
.
சர்வதேசப்பிறை மற்றும் பிறை விஷயத்தில் உலக முஸ்லிம்கள் அனைவருக்கும் ஒரே சட்டம் தான் என்று கூறுவதற்கு எந்த விதமான சாத்தியமும் இல்லை. ஏனெனில் அதை விட “இந்த மாதத்தை அடைந்தவர் நோன்பு நோற்கட்டும்" (அல்குர்ஆன் 2:185) - என்ற ஆயத்தும் பிறையைப் பார்த்து நோன்பு வையுங்கள் என்ற ஹதீஸும் தெளிவான முறையிலும் அறிவுப் பூர்வ ஒப்பீட்டு முறையிலும் வலுவானதாக உள்ளது. (ஃபதாவா ரமலான் 104)
எனவே சர்வதேச பிறை எப்போதுமே சாத்தியம் இல்லை

## அதிசயம், அற்புதம், ஆச்சரியம் 29

திருக்குர்ஆன் மற்றும் மற்ற வேதங்கள் அருளப்பட்ட மாதம்.

ஈமான் கொண்டோர்களே! உங்களுக்கு முன் இருந்தவர்கள் மீது நோன்பு விதிக்கப்பட்டிருந்ததுபோல் உங்கள் மீதும்(அது) விதிக்கப்பட்டுள்ளது!(அதன் மூலம்) நீங்கள் தூய்மையுடையோர் ஆகலாம்! (அல்குர்ஆன்2:183)
அல்லாஹ் திருமறையில் சொல்கிறான்:

شَهْرُ رَمَضَانَ الَّذِيْ أُنْزِلَ فِيْهِ الْقُرْآنُ هُدًى لِلنَّاسِ وَبَيِّنَاتٍ مِّنَ الْهُدَى وَالْفُرْقَانِ
'ரமலான் மாதம் எத்தகையதென்றால் அதில்தான் மனிதர்களுக்கு (முழுமையான) வழி காட்டியாகவும் தெளிவான சான்றுகளைக் கொண்டதாகவும் (நன்மை, தீமைகளை) பிரித்தறிவிப்பதுமான அல்குர்ஆன் அருளப் பெற்றது'. (அல்குர்ஆன் 2 : 185)

உலகமகா அற்புதமான திருக்குர்ஆன் ரமலான் மாதத்தில் இறக்கப்பட்ட காரணத்திற்காக அந்த ரமலான் மாதத்தில் நோன்பு வைக்க வேண்டும் என்பது அல்லாஹ்வின் கட்டளை. இது அதற்குரிய மற்றொரு சிறப்பு.
1) ரமலான் முதலாவது இரவில் நபி இபுறாஹீம் அலைஹிஸ்ஸலாம் அவர்களுக்கு 10 சுஹுஃபுகள் என்ற வேதபாட ஏடுகள் இறக்கப்பட்டன !
2) அதன்பின் 700 ஆண்டுகளுக்குப் பிறகு ரமலான் ஆறாவது நாளில் தௌராத் வேதம் நபி மூஸா அலைஹிஸ்ஸலாம் அவர்களுக்கு அருளப்பட்டது !
3) அதன் பிறகு 500 ஆண்டுகளுக்குப் பிறகு ரமலான் 12ல் ஸபூர் வேதம் நபி தாவூது அலைஹிஸ்ஸலாம் அவர்களுக்கு அருளப்பட்டது !
4) அதன் பிறகு ஆயிரத்து இருநூறு ஆண்டுகளுக்குப் பின் ரமலான் 18ல் இன்ஜீல் வேதம் நபி ஈஸா அலைஹிஸ்ஸலாம் அவர்களுக்கு அருளப்பட்டது !
5) அதன்பின் அறுநூற்று இருபது ஆண்டுகளுக்கு பின் நமது நபிகள் நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்கு புர்கான் வேதமும் அருளப்பட்டது !
ஆக 4 வேதங்களும் 110 சுஹுஃபுகளும் ரமலான் மாதத்தில்தான் அருளப்பெற்றது.

வான்மறைகள் வழங்கப்பட்ட வளமான மாதம், நன்மைகள் நிறைந்த புனிதமான மாதம், அல்லாஹ்வின் அருளும் மன்னிப்பும் நிறைந்த மாதம், எந்த மாதத்தை நபிகள் நாயகம் (ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்) அவர்கள் ஷஹ்ரே அஜீம், ஷஹ்ரே முபாரக் என்று வர்ணித்துச் சொன்னார்களோ அந்த மாதம் தான் இது.
வேதங்களுக்கும் ரமலான் மாதத்திற்கும் தொடர்பு இருப்பதுபோல் வேதங்களுக்கும் மலைகளுக்கும் தொடர்பு இருக்கிறது . அனைத்து வேதங்களும் மலைகளில்தான் இறக்கியருளப் பெற்றுள்ளன.

**அதிசயம், அற்புதம், ஆச்சரியம் 30**

நீரும் அவர்களில் ஒருவராவீர்
இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்:
'சொர்க்கத்தில் 'ரய்யான்' என்று கூறப்படும் ஒரு வாசல் இருக்கிறது! மறுமை நாளில் அதன் வழியாக நோன்பாளிகள் நுழைவார்கள். அவர்களைத் தவிர வேறு எவரும் அதன் வழியாக நுழைய மாட்டார்கள்! 'நோன்பாளிகள் எங்கே?' என்று கேட்கப்படும். உடனே, அவர்கள் எழுவார்கள்; அவர்களைத் தவிர வேறு எவரும் அதன் வழியாக நுழைய மாட்டார்கள்!
அவர்கள் நுழைந்ததும் அவ்வாசல் அடைக்கப்பட்டுவிடும். அதன் வழியாக வேறு எவரும் நுழையமாட்டார்கள்!'
என ஸஹ்ல்(ரலி) அறிவித்தார். ஸஹீஹ் புகாரி : 1896.
அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.
'ஒருவர் இறைவழியில் ஒரு ஜோடிப் பொருட்களைச் செலவு செய்தால் அவர் சொர்க்கத்தின் வாசல்களிருந்து, 'அல்லாஹ்வின் அடியாரே! இது (பெரும்) நன்மையாகும்! (இதன் வழியாகப் பிரவேசியுங்கள்!)' என்று அழைக்கப்படுவார்.
(தம் உலக வாழ்வின் போது) தொழுகையாளிகளாய் இருந்தவர்கள் தொழுகையின் வாசல் வழியாக அழைக்கப்படுவர்;
அறப்போர் புரிந்தவர்கள் 'ஜிஹாத்' எனும் வாசல் வழியாக அழைக்கப்படுவர்;
நோன்பாளிகளாய் இருந்தவர்கள் 'ரய்யான்' எனும் வாசல் வழியாக அழைக்கப்படுவர்;
தர்மம் செய்தவர்கள் 'சதகா' எனும் வாசல் வழியாக அழைக்கப்படுவர்!' என்று இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்.
அப்போது அபூ பக்ர்(ரலி) 'இறைத்தூதர் அவர்களே! என் தாயும் தந்தையும் உங்களுக்கு அர்ப்பணமாகட்டும்! இந்த வாசல்கள் அனைத்திலிருந்தும் அழைக்கப்படும் ஒருவருக்கு எந்தத் துயரும் இல்லையே! எனவே, எவரேனும் அனைத்து வாசல்கள் வழியாகவும் அழைக்கப்படுவாரா?' என்று கேட்டார்.
நபி(ஸல்) அவர்கள் 'ஆம்! நீரும் அவர்களில் ஒருவராவீர்
என்று நம்புகிறேன்!' என்றார்கள். ஸஹீஹ் புகாரி : 1897.

**லால்பேட்டை அன்சாரி ஹஜரத் அவர்களின் இல்ல திருமணத்தில் என் வாழ்த்துரை**
**( ஏன் கோணல் எலும்பைக் கொண்டு இறைவன் பெண்ணை படைத்தான் ? )**



உங்களிலிருந்தே உங்கள் மனைவிகளை அல்லாஹ் படைக்கிறான். (அல்குர்ஆன் : 16:72)
ஆதம் (அலை) அவர்களை குறிஞ்சி, முல்லை, மருதம் நெய்தல், பாலை என்ற 5 மண் வகைகளாலும், சுவனத்து நதி தஸ்னீம் (மணமகள் தஸ்னீம்) தண்ணீரைக் கொண்டு குழைத்து படைக்கப்பட்டார்கள் , அவர்களின் இடது புற விலா எலும்பால் ஹவ்வா படைக்கப்பட்டதனால், ஆண்கள் வயது ஏற ஏற அழகும், பெண்கள் வயது ஏற ஏற அழகின்மையும் பெறுகிறார்கள் .

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்: பெண், (வளைந்த) விலா எலும்பைப் போன்றவளாவாள். அவளை நீ நிமிர்த்த நினைத்தால் அவளை ஒடித்தே விடுவாய். அறிவிப்பவர்: அபூஹுரைரா (ரலி) நூல்: புகாரி 5184
இந்தச் செய்தியில் பெண்களுக்கு நபியவர்கள் வளைந்த விலா எலும்பை உதாரணமாகச் சொல்கிறார்கள்.
பிளாஸ்டிக் பொருளோ, இரும்போ வளைந்திருந்தால் நிமிர்த்தி விடலாம். வளைந்தேயிருக்கிற எலும்பை நிமிர்த்தப் போனால் அது நிச்சயம் உடையத்தான் செய்யும்.

விலா எலும்பைப் பற்றி கொஞ்சம் ..
"முள்ளந்தண்டு உடற்கூற்றியலில், விலா எலும்புகள் (RIB BONES) என்பன மார்புக் கூட்டை அல்லது விலா எலும்புக்கூட்டை (RIB CAGE) உருவாக்கும் நீண்டு வளைந்த எலும்புகளாகும்..
மனிதர்களில், ஆண், பெண் இருபாலாருக்குமே 24 விலா எலும்புகள் (12 இணை) அமைந்துள்ளன. முதல் 7 இணை எலும்புகளும், மார்பு நடு எலும்புடன், அவற்றுக்குரிய தனித்தனியான குருத்தெலும்புகளினால் இணைக்கப்பட்டுள்ளன.
ஏனைய 5 இணை எலும்புகளும், போலி விலா எலும்புகள் எனப்படுகின்றன. இவற்றுள் முதல் மூன்று இணைகளும், மார்பு நடு எலும்புடன் ஒன்றாகவே இணைக்கப்பட்டுள்ளன. கடைசி இரண்டு இணை எலும்புகளும் மிதக்கும் விலா எலும்புகள் அதாவது ஒப்புக் சப்பாக என மருத்துவியல் சொல்கிறது .
பெரும்பாலான விலங்குகளில் விலா எலும்புகள் மார்பைச் சுற்றி அமைந்து, நுரையீரல், இதயம் போன்ற உள்ளுறுப்புக்களைப் பாதுகாக்கின்றன. சில விலங்குகளில், குறிப்பாகப் பாம்புகளில், விலா எலும்புகள் முழு உடம்பையுமே தாங்குகின்றன.
ஏன் கோணல் எலும்பைக் கொண்டு இறைவன் பெண்ணை படைத்தான் ? சொல்றேன்
பெண் ஆணை விட 20 % எடைக்குறைவு .அவனைப் போல் வேகமாக ஓடவோ , தாவவோ முடியாது. கால்களில் பலம் குறைச்சல். இதய சுவாசப்பையும் அவளுக்குச் சின்னது.

மூளையின் அளவு அவனுக்கு 1400 CC அவளுக்கு 1250 CC அளவு மட்டும்தான் சொன்னேன்.மற்றபடி புத்தியைப் பற்றி அல்ல .
ஆண்களை விட சின்ன பொருட்களையே விரும்புகிறாள் . சின்ன குடை, சின்ன பர்ஸ் , கைக்குட்டை சின்னது .ஆடை, உள்ளாடை சின்னது. காலணி மெல்லிய வாருடைய சின்ன செருப்பு .அவள் வாகனம் ஸ்கூட்டி.மெல்லிய மல்லிகை வாசனை இப்படி எல்லாமே சின்னது.. சின்னது .
அவன் கபடி போன்ற முரட்டு விளையாட்டு . இவள் மென்மையாக. பல்லாங்குழிதான் விளையாடுவாள் புத்தகங்களை எப்போதும் நெஞ்சோடுதான் அணைத்துச் செல்வாள். ஆண்களைப் போல் பக்கவாட்டில் இல்லை.
மிரளும் இள மான்விழி அதுவும் சின்னது. விரல்களில் மென்மை இளவெண்டை. (LADIES. FINGAR)
அவளுடைய எலும்பு நளினமானது. தசை நார்கள் 30% வலிமை குறைவு. தொண்டை சின்னது. அதனால் கீச்சுக் குரல். பாடினால் பரவசம். ஆடினால் இவன் தடுமாறுவான் .
பெண் போலவே எல்லாவற்றையும் தன்னை தகவமைத்துக் கொள்ளும் அரவாணிகளால் குரல்வளையை மாற்றியமைக்க முடியாது.
அவளுக்கு இடுப்பு கொஞ்சம் பெரிசு (குழந்தைப் பிறப்புக்கு வசதியாக)
அவள் ரத்தத்தின் அடர்த்திக் குறைவு . ஹிமோகுளோபின் குறைவு. நாடித் துடிப்பு ஆணை விட அதிகம்.படக் கென வெட்கப்பட்டு கன்னம் சிவப்பாள். லேசாக கண்டித்தால், உடனே கண்ணீர் . அப்புறமா நேர் செய்ய இவனுக்கு ரொம்பவும் கஷ்டம் . இது தேவையா ?
அவள் உடம்பில் கால்சியம் ஸ்திரமாக இருக்காது. மாதவிலக்கின் போதும், கர்ப்ப காலத்திலும் அவள் நிறையவே கால்சியம் இழக்கிறாள். காரணம் அவள் படைப்பின் மூலப்பொருள் எலும்பு . எலும்பின் மூலப்பொருள் கால்சியம் . இதனால் அதிக தினங்கள் உடல் நலக்குறைவு , அதனால் மனத்தளவில் அதிகம் பாதிக்கப்பட்டிடுக்கிறாள்.
... இப்படி பெண்ணைப் பற்றி ஆய்வு செய்யும் ஸோஷியோ பயாலாஜி துறை கூறுகிறது .
நபி(ஸல்) அவர்கள் கோணல் என்று குறிப்படுவது இத்தனை குறைபாடுகளையும் சேர்த்துதான். ஆக கோணல் என்பது ஒரு குறியீடுதான்

பெண்கள் இப்படித்தான் இருப்பார்கள் என்று புரிந்து கொண்டு மனைவியை நிர்வாகம் செய்தால், விட்டுக் கொடுத்துப் போனால் அவளிடம் இன்பத்தை அடையலாம் என்கிறார்கள். எப்படிப் பார்த்தாலும் அவளிடம் கோணல் இருக்கத் தான் செய்யும் என்று நபியவர்கள் திட்டவட்டமாகச் சொல்லிவிடுகிறார்கள்.
முதல் கோணல் முற்றும் கோணல் என்பது சரிதானோ ?
ஒரு பெண் தைரியமாக இருக்கிறாள் என்றால் அவளின் தந்தை சிறந்தவர்.
ஒரு பெண் பாசமாக இருக்கிறாள் என்றால் அவளின் தாய் சிறந்தவர்.
ஒரு பெண் வாழ்க்கை முழுவதும் சந்தோஷமாக இருக்கிறாள் என்றால் அவளின் கணவனே அனைத்தையும் விட சிறந்தவன்.
"எங்கள் மகன் முஃபீது அஹமது சிறந்த மணாளனாக கணவனாக இருப்பார் "

லால்பேட்டை முஸ்லிம் பட்டதாரிகள் கல்விச் சங்கம் சார்பாக நடத்தப்பட்ட கல்வி விழிப்புணர்வு மாநாட்டில் கல்வியின் சிறப்பு பற்றிய என் சொற்பொழிவு




உலகமக்கள் இசையில் திளைத்திருந்த காலகட்டத்தில்தான் நபி தாவூத் (அலை) அவர்களுக்கு சபூர் வேதம் அருளப்பட்டது. இசையுலகில் மற்ற எல்லா இசையின் சப்த நாடிகளும் ஒடுங்கி சபூர் வேதம் மட்டுமே அரசாட்சி செய்தது.
மாய மந்திரங்களில் மக்கள் மதிமயங்கி கிடந்த கால கட்டத்தில்தான் தவ்ராத் வேதம் நபி மூஸா (அலை) அவர்களுக்கு அருளப்பட்டு மாய உலகம் மறைந்து, மதியுலகம் பிறந்தது.
எல்லா நோய்களுக்கும் மருத்துவத்தாலே தாங்களால் குணப்படுத்த முடியும் என்ற மக்களிடையே நபி ஈஸா (அலை) அவர்களுக்கு இன்ஜில் வேதம் அருளப்பட்டு, குணப்படுத்த முடியவே முடியாத பிறவிக் குருடர்கள் பார்த்தார்கள், பிறவி முடவர்கள் நடந்தார்கள்.
அறிவின் உச்சத்தில் ஆகாயம் வரை சிந்தித்த மக்கள், சந்திரனையும் பிளக்கச் சொல்லும் காலகட்டத்தில்தான் நம் பெருமானார் (ஸல்) அவர்களுக்கு திருக்குர்ஆன் அருளப்பட்டு, விண்ணை தாண்டி மிஃராஜ் என்னும் விண்ணுலக பயணத்தையும் கொடுக்கப்பட்டது.
மற்ற மதத்தில் இருப்பவர்கள் பூஜை புனஸ்காரம் என்றும் , ஜெபம், ஆராதனை பாடல் என்ற காரியங்களோடு அம்மதங்களின் வணக்க வழிபாடு முடிந்து விடுகிறது.
ஆனால் இஸ்லாம் மார்க்கத்தில் உள்ளவர்களுக்கு கல்வியறிவு அவசியம். இதில் குறைவு இருந்தால் கட்டாய வணக்க வழிபாட்டில் குறைவு ஏற்படும்.உதாரணமாக ...
"நம்பிக்கை கொண்டோர் மீது தொழுகை நேரம் குறிக்கப்பட்ட கடமையாகவுள்ளது" குர்ஆன் (4:103) என்ற வசனத்தை அமுல்படுத்த நாம் முன்னோர்கள் பெற்ற கல்வியறிவு மெய்சிலிர்க்க வைக்கிறது.
தொழுகை நேரங்கள் இக்காலத்தில் இருப்பது போல கடிகாரங்கள் கண்டுப்பிடிக்காத காலம் . அக்காலத்தில் ஒவ்வொரு பொழுது தொழுகை நேரங்களை கீழ்க்கண்ட வழிகளில்தான் நிறைவேற்றினார்கள்
ஃபஜ்ர் தொழுகை அடிவானம் வெளுத்து நட்சத்திரங்கள் பிரகாசிக்கும்போது தொழுதார்கள் (நஸாயி 514)
லுஹ்ர் தொழுகையை நிழல் செருப்பின் வார் அளவுக்கு வரும்போது தொழுதார்கள் (திர்மிதி 149)
அஸ்ர் தொழுகை நிழல் ஒரு மடங்கு + செருப்பின் வார் அளவுக்கு வரும்போது தொழுதார்கள் (நஸாயி 529) அல்லது நிழலின் நீளம் கோடையில் மூன்று முதல் ஐந்தடி வரை. குளிர் காலத்தில் ஐந்து முதல் ஏழடி வரை இருக்கும்போது தொழுதார்கள் (நஸாயி 507) அல்லது
சூரியன் பொன்னிறமாகும் வரை அசர் தொழுகையின் நேரமுள்ளது
(அபு தாவூத் 396)

நிழல் இருமடங்கு வரும் வரை அஸ்ர் தொழுகையின் நேரமுள்ளது. (திர்மிதி 149)
மக்ரிப் தொழுகையை அடிவானத்தின் செம்மை மறையும் வரை தொழுதார்கள் அல்லது நட்சத்திரங்கள் பிரகாசிக்கும் வரை தொழுதார்கள் (அபு தாவூத் 418)
இஷா தொழுகையை அடிவானத்தின் செம்மை மறைந்த பின் தொழுதார்கள் ( நஸாயி 529)
மேற்கண்ட ஹதீஸ்களில் ஒரு தொழுகை நேரத்திற்கே வெவ்வேறு கால வரையரைகளை நபி (ஸல்) அவர்கள் காட்டி தந்துள்ளர்கள். ஒன்று ஆரம்ப நேரம் மற்றொன்று இறுதி நேரம் என்று வைத்துகொண்டாலும் ஆரம்ப நேரத்திற்கே பல வரையறைகளை கற்று தந்துள்ளதை காணலாம்.
இப்படியெல்லாம் கல்வியறிவுக்கு முக்கியத்துவம் கொடுத்த இஸ்லாம் மார்க்கத்திடம் காலத்தைப் பற்றி யூதர்கள் கேட்டு காலத்தின் குறுக்கு வழி (TIME LOOPE) , காலத்தில் பயணம் (TIME TRAVEL ) போன்ற காலத்தின் கோட்பாடுகளை சொல்லி நம்மை திகைக்க வைக்கிறார்கள்.

காலத்தின் எல்லா வகை கோட்பாடுகளும், சித்தாந்தங்களும், குர்ஆனிலும், நபிமொழியிலும் புதைந்து கிடப்பதை நம்மவர்கள் அறியவில்லை போலும் .

1905 ஆம் ஆண்டு சூரிச் (ZURICH) பல்கலைக்கழகத்தில் விஞ்ஞான அறிஞர் ஆல்பர்ட் ஐன்ஸ்டைன் சிறப்பு சார்பியல் தத்துவத்தை சமர்ப்பித்தார்.
1) சம்பவங்கள் இல்லையேல் காலமே இல்லை
2) ஒளியின் வேகத்தில் பயணிப்பவருக்கு காலம் இயங்குவதில்லை.
ஒரே சூலில் இரட்டைக் குழந்தைகள். ஒரு குழந்தை மற்ற குழந்தை விட ஒரு சில நிமிடங்களுக்கு முன் பிறந்தது. அவர்கள் இருவரும் ஒரே நாளில் இறந்தனர்.ஆனால் அவர்களில் ஒருவருக்கு வயது 50.மற்றவருக்கு வயது 150.இது எவ்வாறு சாத்தியம் ?
"புஸ்து நஸ்ர்" என்பவனுக்கு தவ்ராத் வேதம் எங்கு ஓதக் கேட்டாலோ அல்லது அதை மனப்பாடம் செய்தவரைக் கண்டாலோ முதல் வேலை அவர்களைக் கொன்றொழித்து விட்டு தான் மறுவேலை! இது என்ன சைக்கோ...? தெரியவில்லை.
அவனுக்கு ஒரு செய்தி கிடைத்தது. பைத்துல் முகத்தஸ் (ஜெருஸ்ஸலம்) செல்லும் வழியில் ஒரு நகரம்; அங்குள்ளோர் அனைவரும் தவ்ராத் வேதத்தைக் கற்றவர்கள் என்று!
உடனே அவனின் படையெடுப்பால் அந்த சின்ன நகரம் சின்னாபின்னமாக்கப்பட்டு அதன் முகடெல்லாம் உடைந்து பாழடைந்து போனது.
அவ்வழியே நபி உஜைர் (UZYRE) அலைஹிஸ்ஸலாம் (வயது 30) செல்லும்போது அந்நகரை எப்படி இறைவன் மீண்டும் உருவாக்குவான்? என்ற சிந்தனையிலேயே ஒரு மர நிழலில் அமர்ந்து சில அத்திப்பழங்களையும், திராட்சைப் பழச்சாறையும் சிறிது குடித்தார்கள்
அல்லாஹ் அவரை நூறு ஆண்டுகள் வரை மரணித்திருக்கச் செய்து, பின்னர் அவரை உயிர்ப்பித்தான். தன் அருகில் இருந்த அவருடைய உணவும், அவருடைய பானமும் கெட்டுப் போகவில்லை.
ஆனால், கழுதை இறந்து அதன் எலும்புகள் மட்டும் கிடக்கக்கண்டார். இறந்த உயிரை தன்னால் உயிர்ப்பிக்க இயலும் என்பதை அவருக்கு உணர்த்த விரும்பிய இறைவன், அக்கழுதையை உயிர்ப்பெற்று எழச் செய்தான்.குர்ஆன் (2:259)

இப்போது உயிர்ப்பெற்றெழுந்த உஜைர் (UZYRE) நபிக்கு வயது அதே 30 தான்!
நபி உஜைர் (UZYRE) அலைஹிஸ்ஸலாம் அவர்களுடன் ஒரே நேரத்தில் பிறந்தவர் அவரது சகோதரர் அஜீஸ் (AZEEZ) ஆவார். ஒரே சூலில் பிறந்த இரட்டையர். ஆனாலும் இப்போது அஜீஸ் அவர்களுக்கு வயது 130 ஆக இருந்தது. இதனால் 30 வயதுடைய தன் சகோதரர் நபி உஜைர் என்பதை அவர் ஏற்றுக்கொள்ளவில்லை. பின்பு நபி உஜைரின் நபித்துவத்தின் அங்க முத்திரையான "நுபுவ்வத்" உடலில் மச்சமாக இருப்பதை இனம் காணப்பட்டு தன் தம்பி உஜைர் தான் அவர் என்பதை ஏற்றுக்கொண்டார்.
அதற்குப்பின் நபி உஜைர் (UZYRE) அலைஹிஸ்ஸலாம் தனது சகோதரர் அஜீஸுடன் இவ்வுலகில் இருபது வருடம் வாழ்ந்தார். ஒரே நாளில் சகோதரர்கள் இருவரும் இறப்பெய்தினர். இறக்கும்போது உஜைர் நபிக்கு வயது 50 ஆக இருந்தது. அவருடைய சகோதரருக்கு இறக்கும்போது வயது 150 ஆக இருந்தது.
உஜைர் நபி மரணித்திருந்த நூறு வருடங்களில் உலக சம்பவங்கள் எதுவும் அவருக்கு இல்லை. எனவே, அவருக்கு காலமும் இயங்கவில்லை.
அடுத்து ஆஸியா மைனான் மேற்கு கரையிலுள்ள ஸமீர்னாவுக்கு 50 மைல் தெற்கேயுள்ள இபிஸியஸ் நகரத்தில் ஏழு வாலிபர்கள் சுமார் 20 வயது மதிக்கத்தக்க இளைஞர்கள். இவர்கள் அனைவரும் ஏக இறைவழிபாட்டில் ஈடுபட்டு வந்தனர்.
கி.பி. 249 முதல் கி.பி.251 வரை ஆட்சி புரிந்த டிஷியல் என்ற மன்னன் கொடுங்கோலனாக இருந்ததால் ஏழு வாலிபர்கள் ஏக இறைவழிபாட்டுக்கு இடையூறுகள் பல விளைவித்தான்.
மன்னனின் தொல்லைகளில் இருந்து தங்களைத் தற்காத்துக்கொள்ள அவ்வாலிபர்கள் அருகிலுள்ள மலைக் குகை ஒன்றைத் தேர்ந்தெடுத்து அங்கு சென்று இறைவழிபாட்டில் மூழ்கினார்கள். கூடவே அவர்கள் கூட்டிச்சென்ற நாயும் அவர்களுடன் இருந்தது. சிறிது நேரத்தில் ஆழ்ந்த உறக்கம் அவர்களை ஆட்கொண்டது.
ஆழ்ந்த உறக்கம் தெளிந்து விழித்தபோது அவர்கள் அனைவருக்கும் பசித்தது. சிறிது நேரம்தான் உறங்கி இருப்போம் என்று கருதி தங்களின் ஒருவரிடம் பணம் கொடுத்து ஊருக்குள் சென்று உணவு வாங்கி வருமாறு அனுப்பினார்கள்.

அந்த வாலிபர் கொண்டு சென்ற வெள்ளிக்காசுகளை உணவுக்கடைக்காரர்கள் செல்லாதவை என்று வாங்க மறுத்துவிட்டனர். மேலும் வாலிபரின் உடை அலங்காரமும் மிகப் பழமையானதாக இருந்தது.
இறுதியில் அந்த வாலிபர் அவ்வூரின் அரசரிடம் சென்று முறையிட்டார். அந்த வெள்ளிக்காசுகளை வாங்கிப்பார்த்த அரசன் அவை 300 வருடங்களுக்கு முந்திய நாணயங்களாக இருந்தது கண்டு அதிசயித்து விசாரித்தான்.
அவர்கள் ஓரிரு தினங்களுக்கு முன்புதான் குகையினுள் சென்றதாக அந்த வாலிபர் தெரிவித்தார். இதனை விசாரித்த அரசனின் பெயர் இரண்டாம் தியோஷியஸ்.

உணவு வாங்க வந்த வாலிபரின் வாயிலாக குகைத் தோழர்களைப் பற்றி அறிந்த அரசன், அவரையும் அழைத்துக்கொண்டு குகைக்குச் சென்றான். அப்போதுதான் உணவு வாங்க வந்த வாலிபருக்கு தாங்கள் 300 வருடங்கள் உறங்கிவிட்ட உண்மை புலப்பட்டது.

சுமார் 20 வயது மதிக்கத்தக்க வாலிபர்களாக இருந்த அவர்களுக்கு 300 வருடங்கள் தூங்கி எழுந்த பிறகு அவர்களின் வயது 320 ஆக இருந்திருக்க வேண்டும். ஆனால் அப்படி இல்லாமல் 20 வயது உடையவர்களாகவே அவர்கள் இருந்துள்ளனர். அப்படியென்றால் அவர்கள் உறங்கிய அந்த 300 ஆண்டுகள் என்ன ஆனது....?
உறங்கிய 300 ஆண்டுகளில் இந்த ஏழு வாலிபர்களும் உலக சம்பவங்கள் எதிலும் பங்கு கொள்ளவில்லை. எனவே, இவ்வேழு வாலிபர்களுக்கும் காலம் இயங்கவில்லை.

குகைக்கு வந்த வாலிபருடன் சென்ற அரசன், அந்தக் குகையில் இவருடன் சேர்ந்து ஏழு வாலிபர்களும் அவர்களது நாயும் உறங்கிக்கொண்டிருக்க கண்டான். அரசனைக் கூட்டி வந்த வாலிபரும் குகைக்குள் சென்று மீண்டும் தன் உற்ற தோழர்களுடன் உறக்கத்தில் ஆழ்ந்துவிட்டார். குகையின் வாயிலும் அடைபட்டுவிட்டது.
அரசனும், அவனுடன் வந்தவர்களும் தாங்கள் கண்கூடாக நேரில் கண்ட அந்த அற்புதக் காட்சியைப் பற்றி அந்த மலைக்குகை வாசலின் கல்லில் விரிவாக எழுதி வைத்து விடுத் திரும்பினர்.
இதனை இறைமறையாம் திருக்குர்ஆன் கூறுவதைப் பார்ப்போமே!
"குகைத் தோழர்களும் அந்த மலையில் பொறிக்கப்பட்டிருக்கும் கல்வெட்டும் நம்முடைய அத்தாட்சிகளில் ஆச்சரியமாக இருந்தனர் என்று நீர் எண்ணுகிறீரா...?" (அல்குர்ஆன் 18:9)

ஆங்கில சரித்திர ஆசிரியரான லார்டு வில்லியம் மூர் "கிறிஸ்துவ தேவாலயங்களின் வரலாறு" என்ற நூலில் இந்த நிகழ்ச்சியைப் பற்றி குறிப்பிட்டு, இது உண்மையே என மேலும் உறுதிப்படுத்துகிறார்.
அடுத்து, ஹளரத் நபி ஈஸா அலைஹிஸ்ஸலாம் என்னும் இயேசு தன் சீடர்களுடன் இரவுச் சாப்பாட்டை சாப்பிட்டு முடித்தார்கள்.

பின் தம்முடைய சீடர்களை நோக்கி "நான் உங்களை விட்டு பிரிவது பற்றி நீங்கள் வருத்தமுறுகிறீர்கள். இஸ்ரவேலர்கள் என்னைத் தேடி அலைந்து கொண்டிருக்கிறார்கள். எனினும் எனக்குச் செய்யும் இழிவை விட்டும் நீங்கள் என்னை காக்க மாட்டீர்கள்" என்று கூறினார்கள்.
அதற்கு அவர்கள், "எங்களின் உடலில் உயிர் உள்ளவரை எங்களுடைய எதிரிகளால் உங்களுக்கு யாதொரு இன்னலும் இழைத்துவிட முடியாது" என்று கூறினார்கள்.
அப்போது இயேசு, ஷம்ஊனை அழைத்து "நீர் இவர்களின் தலைவராயிருந்த போதிலும் நீர் என்னை இறைத்தூதர் என ஏற்றுக்கொள்ள மறுப்பீர்; அதுவும் மும்முறை மறுப்பீர்" என்று கூறினார்.
அதன்பின் தம் சீடர்களை நோக்கி புன்முறுவல் பூத்தவண்ணம், "இன்று இரவு உங்களில் ஒருவர் என்னை சொற்ப விலைக்கு விற்றுவிடுவார். ஆனால், அந்தோ அவர் பொழுது புலர்வதற்கு முன் கொல்லப்படுவார்" என்று இயேசு கூறினார்.

அதுகேட்ட சீடர்களில் ஒருவர், இயேசு அவர்களை நோக்கி, "யார் அவர்? என்னிடம் கூறுங்கள்" என்று வேண்டினார். அதற்கு இயேசு, "அதுபற்றி கூறுவதற்கான தருணம் இதுவல்ல; விரைவில் அத்தீயோனே தன்னை எவன் என்று காட்டி விடுவான். நான் உலகை விட்டுப் புறப்படும் நேரம் நெருங்கி விட்டது" என்று கூறினார்.
இயேசு அவர்களின் பதிமூன்றாவது சீடனாகிய ஜூடாஸ் எஸ்கேயட் (யஹூதா) என்பவன் பணம் வாங்கிக்கொண்டு யூதர்களிடம் அவர்களைக் காட்டிக்கொடுத்தான். அவன் வாங்கிய தொகை வெறும் 30 பொற்காசுகள் என்று பைபிள் கூறுகிறது.

இறுதியாக இஸ்ரவேலர்கள் இயேசு அவர்களை ஒரு வீட்டில் சிறை வைத்தனர். பின் அவருடன் ஷம்ஊன் பக்கம் திரும்பி, "நீர் இயேசுவை இறைத்தூதர் அல்ல என்று கூறினாலொழிய நாங்கள் உம்மை உயிரோடு விட மாட்டோம்" என்று மிரட்டினர். அவர்களின் மிரட்டலுக்கு அஞ்சி அவ்வாறே அவரும் மும்முறை மறுத்தளித்து கூறினார். இயேசு அதுகேட்டு புன்முறுவல் பூத்தார்கள்

பொழுது புலர்ந்து கொண்டிருந்தது. அன்றைய தினம் கி.பி. 33 ஆம் ஆண்டு ஏப்ரல் 3 ஆம் நாள் வெள்ளிக்கிழமை இரவு தஹ்ஜத் என்னும் பின் நேரம்; இறைவன் அவர்களை விண்ணகத்துக்கு அழைத்துக் கொண்டு தன்னளவில் உயர்த்திக் கொண்டான். அப்போது இயேசு அவர்களின் வயது 33 என்பதை நினைவில் கொள்ளவும்.
இயேசு என்கிற நபி ஈஸா அலைஹிஸ்ஸலாம் அவர்கள் திமிஷ்கின் கிழக்குப் பகுதியிலுள்ள பெரிய பள்ளிவாசலில் உள்ள "மனாரத்துல் பைளாவு" எனும் வெள்ளை மனாரா அருகே இரவு தஹ்ஜத் என்னும் பின் நேரம் விண்ணிலிலிருந்து இறங்கி வருவார்கள். அப்போது அவர்களின் வயது அதே 33 ஆகத்தான் இருக்கும்.
நபி ஈஸா அலைஹிஸ்ஸலாம் அவர்களை உயர்த்தப்பட்டு, இவ்வருடம் 2023 லிருந்து கணக்கிட்டால் 2023 +33 = 2056 வருடம் பூர்த்தியாகிறது. இவ்வருடமே இயேசு (நபி ஈஸா அலைஹிஸ்ஸலாம்) வருவதாக வைத்துக் கொண்டால் 2056 வயது நிரம்பியவராக அவர் வரமாட்டார்கள். அதே 33 வயது உடையவராகத்தான் இப்பூமிக்கு வருவார்கள்.
விண்ணிற்கு உயர்த்தப்பட்ட நாளிலிருந்து இன்றுவரை உலக சம்பவங்கள் எதுவும் அவருக்கு இல்லை. எனவே, அவருக்கு காலமும் இயங்கவில்லை என்பதே விஞ்ஞான உண்மை.

நபி உஜைர் அலைஹிஸ்ஸாலாம் 30 வயதில் மரணித்து 100 வருடம் கழித்து உயிர்த்தெழுந்து வரும்போது 130 வயதுடையவராக் வரவில்லை. அதே 30 வயதுடையவராககத்தான் வந்தார்.
குகைத் தோழர்கள் 20 வயதுடையவர்களாக குகையில் ஆழ்ந்த நித்திரையில் 300 வருடம் தூங்கிய பிறகு அவர்கள் அனைவரும் 320 வயதுடையவர்களாக விழித்தெழவில்லை. அதே 20 வயதுடையவர்களாகவே வந்தனர்.
நபி ஈஸா அலைஹிஸ்ஸலாம் (இயேசு) 33 வயதுடையவராக விண்ணில் உயர்த்தப்பட்டு விண்ணில் வாழ்ந்து வருபவர்கள் எப்போது இப்பூமிக்கு வந்தாலும் அதே 33 வயதுடையவராககத்தான் வருவார்கள்.
மேற்கூறப்பட்ட 3 சம்பவங்களும் காலத்தின் குறுக்கு வழி (TIME LOOPE) வகையைச் சார்ந்தது.
நபி (ஸல்) அவர்களின் மிஹ்ராஜ் என்னும் விண்வெளி பயணம் மட்டுமே டைம் டிராவல் ( TIME TRAVEL ) வகையைச் சார்ந்தது.
இதுமட்டும் அல்லாமல் நபி (ஸல்) அவர்கள் தம் நபித்தோழர்களுக்கும் கல்வியறிவில் மிகைத்திருப்பதையே விரும்பினார்கள்

முஆத் இப்னு ஜபல் (ரலி) நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள், 'ஹலால் மற்றும் ஹராமில் எனது நாட்டிலேயே அதிகமான கற்றறிந்த மனிதர் முஆத் இப்னு ஜபல் (ரலி)' என்று தெரிவித்துள்ளார்கள்
ஏமன் நாட்டில் அப்பொழுது மிகவும் மோசமான நிலையில் மக்கள் மிகவும் தவறுகள் செய்பவர்களாக இருந்தனர் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் முஆத் இப்னு ஜபல் (ரலி) அவர்களை கவர்னராக யமன் நாட்டிற்கு (ஆட்சி நடத்தவும் பிரசாரம் செய்யவும்) அனுப்பினார்கள்.
அனுப்பியபோது, 'நீங்கள் எப்படி ஒரு தீர்ப்பை வழங்குவீர்கள் அல்லது ஒரு சர்ச்சைக்கு தீர்வு காண்பீர்கள் ?' என்று கேட்க
'நான் குர்ஆனில் காண்பதிலிருந்து தீர்வு காண்பேன் ' என்று முஆத் இப்னு ஜபல் (ரலி)) தெரிவித்தார்கள்
நபி (ஸல்) அவர்கள் கேட்டார்கள். 'நீங்கள் குர்ஆனில் இருப்பதை நீங்கள் அறியா விட்டால் என்ன செய்வீர்கள்?'
நபி (ஸல்) அவர்களின் ஸுன்னாவின் வழியில் தீர்வைக் கொடுப்பேன் என்று முஆத் இப்னு ஜபல் (ரலி) தெரிவித்தார்கள்
'நீங்கள் ஸுன்னாவிலும் இருப்பதை நீங்கள் அறியா விட்டால் என்ன செய்வீர்கள்?'
'என் அதிகாரத்தில் மிகச் சிறந்ததைக் கொண்டு, நான் நியாயமாகக் கையாள்வதன் மூலம் மனிதர்களிடையே தீர்ப்பளிப்பேன்.'என்று முஆத் இப்னு ஜபல் (ரலி) தெரிவித்தார்கள்.

## சூஃபியாக்களை பிரபஞ்சத்தின் எந்த விதிகளாலும் கட்டுப்படுத்த முடியாது



கலீபா ஹஜ்ரத் சேமலி உஸ்மானி யூசுப் அவர்களின் இல்லத்தில் நடந்த வருடாந்திர காஜா ஜிஸ்தி (ரஹ்) அவர்களின் மஜ்லிஸில் என் சிற்றுரை ...
சூஃபிகளைப் பற்றி.." என் உம்மத்திலே உள்ள அறிஞர்கள் பனீ இஸ்ராயீல்களிடையே தோன்றிய நபிமார்களுக்கு இணையானவர்கள் " என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள் .
"நான் ஞானத்தின் பட்டணம். அலீ அதன் தலைவாயில் " என்று நவின்று அலீ (ரலி) அவர்களை " தஸ்கியத்" என்ற கலையின் ஆசானாக அறிமுகம் செய்து வைத்தார்கள். அலீ (ரலி) அவர்களின் வழித் தோன்றல்கள் குறிப்பாக அசன் (ரலி) , ஹுஸைன் (ரலி) மற்றும் அவர்களின் சந்ததிகளின் வாயிலாக தஸ்கியத் என்னும் சூஃபிஸம் போதிக்கப்பட்டு வந்துள்ளது.

"நீங்களெல்லாம் இறக்கக் கூடிய மனிதர்களிடமிருந்து அறிவை பெறுகின்றீர்கள். நாங்களோ பிறப்பு, இறப்பு இல்லா இறைவனிடமிருந்து அறிவை பெறுகின்றோம் " என்று அபூ யாஸித் பிஸ்தாமீ (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்
இஸ்லாமிய அறிஞர்கள் ஆன்மீக அறிஞர்கள் , என்றும் மார்க்க அறிஞர்கள் இருவகைப் பட்டனர். ஆன்மீக அறிஞர்களின் பரம்பரை அலீ (ரலி) அவர்கள் முதல் துவங்குகிறது .

கென்யா. ஒருநாள் ஜலாலுதீன் ரூமி அவர்கள் பள்ளியில் மாணவர்களுக்கு கல்வி போதித்து கொண்டிருந்தார்கள். அங்கு காட்டுவாழ் மனிதரைப் போன்று ஒருவர் வந்து , இஃது என்ன ? என்று கிதாபுகளைப் பற்றி வினவினார். "இதைப்பற்றி எல்லாம் உமக்கு ஒன்றும் தெரியாது, சும்மா இரும்" என்று மௌலானா ரூமி சற்று வெறுப்போடு கூற . அவ்வளவுதான். அந்த மனிதர் அங்கிருந்த நூல்களை எல்லாம் அள்ளி பக்கத்தில் உள்ள தண்ணீர் தொட்டியில் போட்டு தண்ணீரில் மூழ்கடித்து விட்டார்கள். அதுகண்டு ரூமி அவர்களும் அவர்களின் மாணவர்களும் அலறி அடித்து துடித்து விட்டனர் .

அந்த நூல்கள் எல்லாம் பல வருடம் ரூமி ஆய்வு செய்து எழுதிய கிதாபுகள் . அப்போது அந்த மனிதர் அமைதியாக அந்த தண்ணீர் தொட்டிக்குள் கையை விட்டு அத்தனை நூல்களையும் வெளியே எடுத்தார்.
என்ன வியப்பு..! அந்த நூல்கள் எல்லாம் தண்ணீரில் நனையாது எப்படி இருந்ததோ அப்படியே இருந்தன. அதை பார்த்த ரூமி அவர்கள் அவரிடம் ,
இஃது என்ன என்று வினவ, " இதைப்பற்றி எல்லாம் உமக்கு ஒன்றும் தெரியாது .சும்மா இரும் " என்று கூறிவிட்டு, அவ்விடத்தை விட்டு ஓடினார் .
இப்போதுதான் அந்த மனிதர் சாமானியர் அல்ல , நாம் கற்ற கல்வி வேறு ,அவர் கற்ற கல்வி வேறு என்ற உண்மை மௌலானா ரூமி அவர்கள் உணர்ந்து, அந்த மனிதர்தான் ஷம்சுத் தப்ரேஸ் (ரஹ்) அவர்கள் என்பதை தெரிந்து கொண்டார்கள்.
சூஃபியாக்களை பிரபஞ்சத்தின் எந்த விதிகளாலும் கட்டுப்படுத்த முடியாது
அவரை பின்தொடர்ந்து ரூமி அவர்கள் ஓடி கண்டுபிடித்து அவர்களிடம் பிழையைப் பொறுத்தருளுமாறு வேண்டி , அவர்களின் ஆன்மீக மாணவராகி விட்டார் .
ஹள்ரத் அஜ்மீர் காஜா கரீப் நவாஜ் (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள். ஒருமுறை நானும் ஷைகு உஸ்மான் ஹாரூனி (ரஹ்) அவர்களும் பிரயாணத்தில் இருந்த போது தஜ்லா நதிக்கரையை அடைந்தோம். அதைக் கடந்து செல்வதற்கு படகு வசதியில்லை. நாங்கள் சீக்கிரமாக போக வேண்டியிருந்தது.
அப்போது ஷைகு உஸ்மான் ஹாரூனி (ரஹ்) அவர்கள் என்னை நோக்கி கண்களை மூடிக் கொள்ளுமாறு பணித்தார்கள். நான் அவ்வாறே செய்தேன். அவர்களுடன் நானும் தண்ணீரின் மீது எவ்வித சிரமமும் இன்றி நடந்து சென்றோம்.

அதன்பின் நான் ஷைகு அவர்களிடம், இது எவ்வாறு நிகழ்ந்தது? என்று கேட்டேன். அதற்கு அவர்கள், நான் ஐந்து முறை ஸூரத்துல் ஃபாத்திஹாவை ஓதிவிட்டு தண்ணீர் மீது கால் வைத்தேன். கடந்து விட்டேன் என்று கூறினார்கள்.
சூஃபியாக்களை பிரபஞ்சத்தின் எந்த விதிகளாலும் கட்டுப்படுத்த முடியாது
காஜா கரீப் நவாஜ் (ரஹ்) அவர்களின் ஆசிரமத்திற்கு எதிராக ஒரு ரொட்டி கடை இருந்தது.அந்த ரொட்டிக்கடைக்காரர் ஹாஜா நாயகத்தை பார்க்க வருபவர்களுக்கு ரொட்டி உணவு கொடுப்பது வழக்கம். பின் இரவு போய் ஹாஜா நாயகம் அவர்களை சந்தித்து விருந்தாளிக்கு கொடுத்த ரொட்டிக்குள்ள பணத்தை கேட்டு வாங்கிக் கொள்வார்.

ஒரு நாள் ஹாஜா நாயகம் அவர்களை சந்திக்க வந்த ஒரு நபர் ரொட்டிக்காரரிடம் நாங்கள் வெகு தொலைவில் இருந்து வந்து நாயகம் அவர்களின் தர்ஜா உணர்ந்து , அவர்களிடம் துஆ செய்ய சொல்லி எங்களது தர்ஜாவை இறைவன் உயர்த்தச் சொல்லி சந்திக்க வருகின்றோம்.
"நீ அவர்களின் அருமை பெருமை தெரிந்திருந்தால், அடம் பிடித்தாவது அந்த தர்ஜாவைப் பெற்றிருக்கலாமே " என்றார்.
அன்றிரவு ரொட்டிக் கடைக்காரர் ரொட்டிக்குரிய பணத்தை வாங்காமல், " ஹாஜா நாயகமே! உங்களின் தர்ஜா எனக்கு வேண்டும்" என்று கூறி அடம் பிடித்தார்.
ஹாஜா நாயகம் அவர்கள் "உன் தர்ஜா நிலை உயர துஆ செய்கிறேன் என்று சொல்ல , " முடியாது.. முடியாது..உங்களின் தர்ஜாதான் எனக்கு வேண்டும்" விடாப்பிடியாக அதேயே கேட்க ,
ஹாஜா நாயகம் அவர்கள் , தன் மார்போடு ரொட்டிக் கடைக்காரை சேர்த்து அணைக்க , புன்முறுவல் பூத்தவாறு இவ்வுலகை விட்டு ரொட்டிக்காரர் இறுதிப் பயணமானார்.
வஸ்வாஸ்- ஊசாட்டத்தைப் போடுபவன் ஷைத்தான் என்று குர்ஆன் வசனம் சொல்கிறது, நஃப்ஸ்- மனம் என்று குர்ஆன் வசனம் சொல்கிறது.
மேலும், மனம் மனிதனிடம் ஊசலாடுகிறது என்று குர்ஆன் (50:16) வசனம் காட்டுவதால் ,மனம் வேறு ; நான் வேறு என்பதும் தெளிவாகிறது.
இது பற்றி சூஃபி ஒருவர் சற்று விளக்கமாக ....
அபூ ஸயீது (ரஹ் ) அவர்கள் 'தூஸ் ' என்னும் ஊருக்கு ஒரு தர்வேஷ் (சீடர் )ஒருவருடன் மலைச் சாரலில் நடந்து கொண்டிருந்தபொழுது , கடுமையான குளிரின் காரணமாக அவர்களின் பாதங்கள் விரைத்துப் போயின.
இதைக் கண்ட தர்வேஷ், தம் மேலங்கியைக் கிழித்து , அவர்களின் பாதங்களுக்கு உரைபோன்று மாட்டலாமென்று எண்ணினார் . ஆனால் அந்த மேலங்கியோ உயர்தரமானதாக இருந்ததால் , அதனை கிழிக்க தர்வேஷ்க்கு மனம் வரவில்லை.
பின்னர் அவர்கள் இருவரும் தூஸ் நகர் வந்து , அங்கு அபூ ஸயீது (ரஹ் ) அவர்கள் மார்க்க சொற்பொழிவாற்றினர்கள் .

கூட்டத்தின் முன் வரிசையில் அமர்ந்திருந்த அந்த தர்வேஷ் ,
"இல்ஹாம் – இறைவன் அளிக்கும் உள்ளுணர்வுக்கும் ,
வஸ்வஸா - ஷைத்தானின் ஊசலாட்டத்திற்கும் வேற்றுமை என்ன? " என்று கேள்வி கேட்டார் .

உடனே அபூ ஸயீது (ரஹ் ) அவர்கள், "உம்முடைய மேலங்கியைக் கிழித்து என் பாதங்களுக்கு உரை போன்று மாட்டலாமென்று உம் உள்ளத்தில் முதலில் உதித்தது . இது இல்ஹாம் .
அவ்விதம் செய்ய வேண்டாமென்று உம் உள்ளத்தில் இரண்டாவதாகத் தோன்றியதே அது வஸ்வஸா ஆகும் " என்று பதிலுரைத்தார்கள் .அது கேட்டு, அந்த தர்வேஷுக்கு ஏற்பட்ட திடுக்கத்திற்கும் , வியப்பிற்கும் அளவே இல்லை.
சூஃபிக்களின் தவத்தில் தன்னை மறந்து இறைவனோடு ஒன்றி விடுகிறார்கள்
கௌதுல் அஃலம் முஹ்யித்தீன் அப்துல் காதிர் ஜீலானி (ரஹ்) அவர்கள் , ஈராக் காட்டினில் கடும் தவம் புரிந்து கொண்டிருக்கும் வேளையில் ஞானக் கொந்தளிப்பின் காரணமாக காட்டினில் தலைதெறிக்க ஓடுவார்கள் .
வெருண்டோடிய அவர்கள் ஓரிடத்தில் மயக்கமுற்றுக் கீழே விழுவர்.

அப்படி ஒரு தடவை ஓடி மயக்கமுற்று எழுந்த போது அவ்விடம் , பாக்தாதிலிருந்து பன்னிரண்டு நாட்கள் பயணத் தொலைவிலுள்ள " துஸ்தர் " நகரில் அவர்கள் நின்று கொண்டிருந்தார்கள் .
" நாம் சற்றுத் தொலைதானே ஓடினோம், அதற்குள் இவ்வளவு தூரம் வந்து விட்டோமே ! "
' ஷரியத் நிலையில் செய்யப்படும் சிறு செயல்கள் மஃரிபத் நிலையில் மிகப் பெரிய பலனை கொடுக்க வல்லது ' என ஞானாசிரியர்கள் இச்செயலைக் குறித்து கருத்து தெரிவிக்கிறார்கள் .
சூஃபியாக்களை பிரபஞ்சத்தின் எந்த விதிகளாலும் கட்டுப்படுத்த முடியாது

"இன்சான் காமில் " என்ற ஆன்மீக புரட்சியை ஏற்படுத்திய சிறப்பு பெற்ற கிரந்தத்தை எழுதிய அப்துல் கரீம் ஜீலீ ' என்ற சூஃபி. ஆட்சியாளர்களின் கருத்துக்கு மதிப்பு கொடுக்காததால் , அதிக வருடங்கள் சிறையில் கழித்ததால் ' ஜீலீ ' (கைதி ) இவர் பெயருடன் சேர்ந்து கொண்டது .
ஒவ்வொரு வெள்ளிக்கிழமையும் குளித்து விட்டு நல்ல உடையைப் உடுத்திக் கொண்டு ஜும்மா கூட்டுத் தொழுகைக்காக ஜெயில் கதவு வரை போவார் . அனுமதியும் கேட்பார் . மறுக்கப்படும் திரும்பி போய்விடுவார்.
இப்படி ஒவ்வொரு வெள்ளிக்கிழமையும் செய்வார் . அனுமதியும் கேட்பார் . மறுக்கப்படும். திரும்பி போய்விடுவார்..
" ஏன் இப்படி செய்கிறீர்கள் ? உங்களைத்தான் வெளியே விட மாட்டார்களே " என்று ஒரு கைதி கேட்டார் .
"தெரியும்.என் சக்திக்கு அப்பாற்பட்டதை நிறைவேற்றாததைப் பற்றி என்னை குறை சொல்ல முடியாது . ஜெயில் கதவுகளை திறப்பது என் கையில் இல்லை ; என்றாலும் , வெள்ளிக்கிழமை ஜும்மாவுக்காக கதவு வரை போவது என் கையில்தானே உள்ளது ? என்னால் முடிந்ததை மட்டுமாவது நான் நிறைவேற்ற வேண்டும் அல்லவா ? "
"உங்களைத்தான் வெளியே விட மாட்டார்களே " என்று கேட்ட கைதியின் கனவில் ...
ஏழு வானம் தாண்டிய பெருவெளி எல்லையின் பாதை இவர்களின் சிறைக் கதவிற்குள்ளே இருந்துதான் ஆரம்பிக்கிறது என்பதை கண்டார் .
ஆக சூஃபியாக்களை பிரபஞ்சத்தின் எந்த விதிகளாலும் கட்டுப்படுத்த முடியாது

## காலப் பெருவெளியில் சூஃபியாக்கள்


கலீபத்துல் காதிரி வஷத்தாரியும் என் நண்பருமான MEERAN SAHIB அவர்களின் இல்லத்தில் நடைபெற்ற ஹிந்துல்வலி காஜா முயீனுக்தின் ஜிஷ்தி (ரஹ்) அவர்களின் வருடாந்திர மஜ்லிஸில் " காலப் பெருவெளியில் சூஃபியாக்கள்" என்ற தலைப்பில் சொற்பொழிவு நிகழ்த்த கலீபா சாஹிப் அவர்கள் கேட்டுக் கொண்டதற்கிணங்க ...

________________________________________

இந்த நவீன காலத்தின் அறிவியல் சித்தாந்தங்களெல்லாம் மெல்ல மெல்ல மற்ற மதங்கள் குறிப்பாக யூதர்கள் என்னமோ அவர்கள்தான் கண்டுபிடித்து முதலில் உலகுக்கு சொன்ன மாதிரி நிறைய டைம் லூப் (TIME LOOPE ) திரைப்படங்கள் எடுத்து நமக்கு படம் காட்டுகிறார்கள்.
இந்தவேளையில் , டைம் லூப், டைம் டிராவல் என்கிற காலத்தின் கோட்பாட்டை இஸ்லாம் மார்க்கம் முன்னரே வழிமொழிந்திருப்பதை எத்தனை பேர் அறிவார்கள் ? சொல்றேன்.

عُرِضَ عَلَيۡهِ بِالۡعَشِىِّ الصّٰفِنٰتُ الۡجِيَادُ ۙ
நன்கு பயிற்சியளிக்கப்பட்ட உயர்ந்த குதிரைகள் (ஒரு) மாலை நேரத்தில் (சுலைமான்) அவர் முன் கொண்டுவரப்பட்ட பொழுது:
فَقَالَ اِنِّىۡۤ اَحۡبَبۡتُ حُبَّ الۡخَيۡرِ عَنۡ ذِكۡرِ رَبِّىۡ حَتّٰى تَوَارَتۡ بِالۡحِجَابِ
“நிச்சயமாக நான் (சூரியன் இரவாகிய) திரைக்குள் மறைந்து விடும்வரை, என்னுடைய இறைவனை நினைப்பது விட்டும் இந்த நல்ல பொருட்களின் மேல் அதிக அன்பாக அன்பு பாராட்டிவிட்டேன்” என அவர் கூறினார்.(குர்ஆன் : 38:31,32)

இறைவழி போருக்காக நபி சுலைமான் (அலை) அவர்களிடம் குதிரைகள் பார்வைக்கு அனுப்பப்பட்டன. அக்குதிரைகளின் வனப்பையும், அழகையும் பார்வையிட்டுக் கொண்டிருந்தபோது , சூரியன் மறைந்து விட்டது. அப்பொழுது இறைவனது கட்டளைப்படி, சூரியன் மீது நியமிக்கப்பட்டுள்ள மலக்குகளிடம், அஸருடைய நேரம் சூரியன் இருக்கிற இடத்திற்கு அதனை திரும்ப மீட்டுங்கள் '
அதாவது 'சூரியனை திரும்பவும் கொண்டு வாருங்கள்' என்று நபி சுலைமான் (அலை) கூறினார்கள். அவ்வாறு செய்யப்பட்டு, அஸர் தொழுகையை அதற்குரிய வேளையில் தொழுது கொண்டார்கள்.
இது சுலைமான் (அலை) அவர்களுக்குள்ள முஃஜிஸாக்களில் ஒன்று என்று அலீ (ரலி) அவர்கள் கூறியிருப்பதாக சொல்லப்பட்டிருக்கிறது.
ஆதாரம்: தப்ஸீருல் ஹமீது
இதே மாதிரியே நபி (ஸல்) அவர்கள் காலத்தில், நபிகளார் இட்ட பணியை முடித்த வேளையில் அலீ (ரலி) அவர்களுக்கு அஸர் வஃது தொழுகை 'களா' ஆகி விட்டது .
உடனே நபி (ஸல்) அவர்கள் சூரியனை அஸர் தொழுகை வஃதுக்கு கொண்டு செல்ல , அலீ (ரலி ) அவர்கள் அவ்வேளையில் தொழுது கொண்டதாக நபிமொழியிலிருந்து அறிந்து கொள்ள முடிகிறது.
ஹள்ரத் அஜ்மீர் காஜா கரீப் நவாஜ் (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள். ஒருமுறை நானும் ஷைகு உஸ்மான் ஹாரூனி (ரஹ்) அவர்களும் பிரயாணத்தில் இருந்த போது தஜ்லா நதிக்கரையை அடைந்தோம். அதைக் குறுக்கே கடந்து செல்வதற்கு படகு வசதியில்லை. மேலும் தஜ்லா நதியின் அகலம் ரொம்பவும் அதிகம். நாங்கள் சீக்கிரமாக போக வேண்டியிருந்தது.

அப்போது ஷைகு உஸ்மான் ஹாரூனி (ரஹ்) அவர்கள் என்னை நோக்கி கண்களை மூடிக் கொள்ளுமாறு பணித்தார்கள். நான் அவ்வாறே செய்தேன். அவர்களுடன் நானும் தண்ணீரின் மீது எவ்வித சிரமமும் இன்றி நடந்து சென்றோம். வெகு சீக்கிரத்தில் அக்கரையை அடைந்தோம்.
அதன்பின் நான் ஷைகு அவர்களிடம், இது எவ்வாறு நிகழ்ந்தது? என்று கேட்டேன். அதற்கு அவர்கள், நான் ஐந்து முறை ஸூரத்துல் ஃபாத்திஹாவை ஓதிவிட்டு தண்ணீர் மீது கால் வைத்தேன். கடந்து விட்டேன் என்று கூறினார்கள். இதுவும் காலத்தின் குறுக்கு (TIME LOOPE ) தானே !

தி இந்து 05 ஜூலை 2018 -ல் காலத்தின் குறுக்கு (Time loope ) பற்றி ஒரு செய்தி
இந்தோனேஷியாவில் ஒன்றரை வருடங்களுக்கு முன்பு காணாமல் போன பெண், தொலைந்துபோன இடத்திலேயே மீண்டும் கிடைத்திருக்கிறார். காணாமல் போனபோது அணிந்த உடைகளையே அணிந்திருந்தார். 52 வயது நைனிங் சுனார்ஷி, சுற்றிப் பார்ப்பதற்காக மேற்கு ஜாவாவில் உள்ள சைட்பஸ் கடற்கரைக்குச் சென்றிருந்தார். அலைகளில் கால்களை வைத்துக்கொண்டு நின்றிருந்தபோது எதிர்பாராமல் ராட்சத அலை அவரை இழுத்து சென்றது.

பெரிய அலைக்கு நடுவே ஒரு பெண்ணின் கைகள் உதவி கேட்டு கத்தியதைக் கடற்கரையில் இருந்தவர்கள் பார்த்திருக்கிறார்கள்.
யாராலும் பாய்ந்து சென்று காப்பாற்ற முடியவில்லை. காவல் துறைக்கு தகவல் தெரிவிக்கப்பட்டது. மீட்புப் படையினர் வந்து நாள் கணக்கில் தேடிய போதும் நைனிங் எங்கே போனார் என்றே தெரியவில்லை.
ஒரு வாரத்துக்குப் பிறகு ஓர் உடலைக் கண்டுபிடித்தார்கள். நைனிங் குடும்பத்துக்கு தகவல் தெரிவிக்கப்பட்டது. உடல் மிக மோசமாக சேதமடைந்திருந்தபோதும் இவர் இல்லை என்பதை உறுதியாகச் சொல்லிவிட்டனர்.
ஆனால், அவராகத்தான் இருக்கும் என்று மீட்புப் படையினர் கூறினர். பிறகு டிஎன்ஏ பரிசோதனை மேற்கொள்ளப்பட்டது. பரிசோதனை அறிக்கையில் நைனிங் இல்லை என்பது உறுதியானது. இனியும் அவர் உயிருடன் இருக்க வாய்ப்பில்லை என்று கூறி, மீட்புப் படையினர் தேடுதலைக் கைவிட்டனர்.
எங்கோ உயிருடன் இருக்கிறார், என்றாவது திரும்பி வருவார் என்ற உள்ளுணர்வு கொடுத்த நம்பிக்கையில் குடும்பத்தினர் வாழ்ந்து வந்தனர்.
சில நாட்களுக்கு முன்பு நைனிங்கின் மாமா, பாலபுஹன்ராட்டு கடற்கரையில் ஒரு பெண் திரும்பி வருவதாகக் கனவு கண்டார். முதலில் அதைப் பெரிதாக அவர் எடுத்துக் கொள்ளவில்லை. ஆனால் அடுத்தடுத்த நாட்களில் அதே கனவு வந்ததால் குடும்பத்தினரிடம் தெரிவித்தார்.
உடனே எல்லோரும் அந்தக் கடற்கரைக்குச் சென்றனர். நைனிங் தொலைந்துபோன கடற்கரையில் இருந்து வெகு அருகில் இருந்தது இந்தக் கடற்கரை. நீண்ட நேரம் காத்திருந்தும் அங்கே யாரும் வரவில்லை. ஏமாற்றமாக இருந்தது.

மறுநாள் வீடு திரும்பலாம் என்று முடிவெடுத்தனர். ஞாயிற்றுக்கிழமை, காணாமல் போய் மிகச் சரியாக ஒன்றரை வருடம் கழித்து கடற்கரையில் மணலால் மூடப்பட்டு ஒருவர் கண்டுபிடிக்கப்பட்டார். உடனே குடும்பத்தினர் ஓடிவந்தனர்.
தொலைந்து போனபோது என்ன உடைகளை அணிந்திருந்தாரோ, அதே உடைகளுடன் நைனிங் சுயநினைவின்றி கிடந்தார். எல்லோருக்கும் ஆனந்த அதிர்ச்சியாக இருந்தது.
அவரை வீட்டுக்கு அழைத்து வந்து, சுத்தம் செய்து படுக்க வைத்தனர். சுயநினைவு இல்லாததாலும் உடல் மிகவும் பலவீனமாக இருந்ததாலும் மருத்துவமனையில் சேர்த்தனர்.
இப்போதைக்கு இவரது உடல் பலவீனமாக இருந்தாலும் பெரிய அளவில் பாதிப்பு எதுவும் இல்லை. விரைவில் குணமாகிவிடுவார் என்று மருத்துவர்கள் தெரிவித்திருக்கிறார்கள்.
நைனிங் நினைவு திரும்பிய பிறகுதான் அவர் காணாமல் போய், திரும்பி வந்தது எப்படி என்ற விஷயம் தெரியும். ஆனால் அதைப் பற்றி எங்களுக்கு கவலை இல்லை, எங்கள் அம்மாவுக்கு தெய்வீக சக்தி இருப்பதால்தான் மீண்டும் திரும்பி வந்திருக்கிறார் என்கிறார்கள் இவரது குழந்தைகள்.
அட, என்ன ஓர் அதிசயம்!
இப்பெண்ணும் காலத்தின் குறுக்கு (Time loope ) என்ற நிகழ்வு நடந்தேறியிருக்கிறது !

இதே மாதிரி ஒரு சம்பவம் காஜா ஜிஷ்தி நாயகம் (ரஹ்) அவர்களின் சற்குருவான உஸ்மான் ஹாரூனி (ரஹ்) அவர்களும் காலப் பெருவெளியில் காலத்தின் குறுக்கு (Time loope ) வழியைப் பயன்படுத்தி இருக்கிறார்கள்.
இதோ ஒரு சம்பவம் :
ஒரு முறை கண்பார்வையில்லாத மிக பலஹீனமா வயோதிகர் ஒருவர், கையில் தடியை ஊன்றியவராக, அளவு கடந்த மனக்கவலையுடன் ஷைகு உஸ்மான் ஹாரூனி (ரஹ்) அவர்களிடம் வந்து ஸலாம் கூறினார்.
ஹள்ரத் ஷைகு அவர்கள் அவருக்கு பதில் ஸலாம் கூறி முகமலர்ச்சியோடு எழுந்து, தமக்கு அருகில் அமரச் செய்தார்கள். அப்போது அந்த வயோதிகர் கூறினார்.
முப்பது ஆண்டுகளாக எனது மகனைக் காணவில்லை அந்தக் கவலையால் நான் மிக இயலாமல் ஆகிவிட்டேன். அவன் இறந்ததாகவோ, வாழ்வதாகவோ எவ்வித தகவலும் இல்லை.இதற்காகவே தங்கள் முன் ஆஜராகி உள்ளேன் எனது மகன் சுகமாக வந்து சேர துஆச் செய்யுங்கள் என்றார்.

சிறிது நேரம் தலையைத் தாழ்த்தி முராக்கபாவில் இருந்து, பிறகு சிறிது நேரம் கழித்து தலை நிமிர்ந்த ஹள்ரத் உஸ்மான் ஹாரூனி (ரஹ்) அவர்கள், அங்கு அமர்ந்திருந்தோரை நோக்கி, "அனைவரும் இதற்காக துஆச் செய்யுங்கள். அவரது மகன் சுகமாக வந்து விடுவார்" என்றார்கள்.
அனைவரும் துஆ செய்து முடித்ததும், வந்திருந்த வயோதிகரை நோக்கி தாங்கள் சிறிது நேரத்திற்கு பின் தங்களின் மகனை அழைத்து வாருங்கள் என்று கூறினார்கள்.

அவர் இல்லம் திரும்பிய போது வழியிலேயே அவருக்கு நல்ல செய்தி கிடைத்தது. முன்னரே அவரது மகன் வந்திருந்தார். மகனைப் பார்த்ததும் அவரது கண்பார்வை நன்றாகி விட்டது. மகனை அழைத்துக் கொண்டு ஹள்ரத் ஷைகு உஸ்மான் ஹாரூனி (ரஹ்) அவர்களிடம் வந்தார்.
காணாமல் போய் திரும்பி வந்த மகனிடம் நடந்த நிகழ்ச்சிகளைப் பற்றி ஹள்ரத் அவர்கள் விசாரித்தார்கள். அப்போது அவர் கூறலானார்
.
"என்னைச் சிலர் பிடித்துக் கொண்டு போய் கடல் நடுவில் ஒரு தீவில் சங்கிலியால் பிணைத்து வைத்திருந்தார்கள். இன்றும் அங்குதான் இருந்தேன். ஹள்ரத் ஷைகு அவர்களின் இதே தோற்றத்தில் ஒரு பெரியார் எனது அருகில் வந்தார்கள்.
அந்த சங்கிலியை தமது பார்வையால் உடைத்தார்கள். உடனே அவர்கள் எனது பிடரியைப் பற்றிப் பிடித்துக் கொண்டு எனது காலடி மீது கால்வைத்து நடந்துவா என்றார்கள். மேலும் கண்ணை மூடிக் கொள்ளும்படி கூறினார்கள்.
அவ்வாறே மூடிக்கொண்டு நடந்து வந்தேன். பிறகு கண்ணைத் திறக்கச் சொன்னார்கள். கண்ணை திறந்து பார்த்த போது வீட்டு வாசலில் நின்றேன்" என்று கூறினார்.
இந்த சம்பவத்தை கூறி முடித்ததும் அவருடைய தந்தை, " என் மகன் காணாமல் போகும் போது எந்த வயதில் இருந்தாரோ அதே வயதில் அப்படியே திரும்ப வந்தான் "
( அவர் மகனை வேற்று கிரகத்திற்கு வேற்று கிரகவாசிகள் கொண்டு சென்றார்களோ என்னவோ .. காணாமல் போய் 30 வருடம் கழித்தும் மகனுக்கு அதே வயது )

ஹள்ரத் உஸ்மான் ஹாரூனி (ரஹ்) அவர்களின் பாதங்களை முத்தமிட்டு நன்றிக் கடன் செலுத்தினார். மேலும் அவர் "பாருங்கள்! அல்லாஹ்வின் அடியார்கள் தங்களிடம் எவ்வளவு பெரிய சக்தியை மறைத்து வைத்துள்ளார்கள்" என்று கூறினார்.
'டைம் டிராவல்' என்பது நபி (ஸல்) அவர்களின் விண்வெளி பயணம் செய்து, சுவர்க்கம் , நரகம் மற்றும் மறுமையின் நிகழ்வுகளை தன்பூத உடலுடன் தர்சித்து விட்டு , இரவில் அவர்கள் படுத்திருந்த படுக்கையின் சூடு ஆறுவதற்குள் போய் வந்ததை விவரிக்கிறது . ஆதாரம்: முஸ்லிம் 259
ஆக டைம் லூப்போ, டைம் டிராவலோ இஸ்லாம் மார்க்கத்திற்கு புதிதான விஷயமும் அல்ல; புறம்பான விஷயமும் அல்ல.

**தூத்துக்குடி மன்பவுஸ்ஸலாஹ் மதரஸா பேராசியர்கள் கேட்டுக் கொண்டதற்கிணங்க "எழுத்தும் , எழுத்தாற்றலும் " பற்றி என் சிறப்பு சொற்பொழிவு**



எழுத்தாற்றலுக்கு முன்பு இரண்டு தளங்கள் இருக்கிறது ஒன்று " எழுத்து " , மற்றொன்று எழுத்தை எழுதும் "கலமுல் அஃலா" என்னும் எழுதுகோல் (எழுதுகோல் என்பது ஒரு குறியீடுதான். உண்மையில் எழுதுகோல் என்பது அறிவு எனப்படுகிறது ) இவ்விரண்டையும் சமயோஜிதமாக பயன்படுத்தப்படும் ஆற்றல்தான் எழுத்தாற்றல் .

எழுத்து:-

எழுத்து என்பது மொழியின் ஓர் அங்கம்.மொழிகள் பேசுப்படுவதை பதிய , எழுத்து தேவையாக இருக்கிறது .
அப்படியென்றால் எழுத்தின் துவக்கம் எங்கே துவங்குகிறது ? கொஞ்சம் குர்ஆன் பக்கம் வாருங்கள் .
அரபி எழுத்துக்கள் மொத்தம் 28 . அதில் நேர் பாதி 14 எழுத்துக்களை தேர்வு செய்துள்ளான்.
அவைகள் அலிப், லாம் , மீம் , ஸாத் , நூன் , காப் , ஹா,யா, அய்ன், றா , தா , ஸீன், ஸீம் மற்றும் ஆல இம்ரான் அத்தியாயத்தின் தொடங்க வசனத்திலுள்ள மேல் சின்ன குறியீடு கொண்ட மீம் இவ்வெழுத்துக்களைக் கொண்டு இறைவன் 14 வித இணைப்பு செய்து 29 அத்தியாயங்களின் தலைப்புகளில் இந்த சங்கேத எழுத்துக்களைப் பயன்படுத்தியுள்ளான்.
அவற்றை அரபு மொழியில் "ஹுருபுல் முகத்தஆத்"எனக் குறிப்பிடுவர். இந்த எழுத்துக்கள்தான் உலக அனைத்து மொழிகளுக்கெல்லாம் அடித்தளமான ஒலி வடிவத்தைக் கொடுக்கிறது என்பதை மொழியியல் வல்லுநர்கள் குறிப்பிடுகின்றனர் .
எனவேதான் இறைவன் இந்த 14 எழுத்துக்களையும் , அவற்றின் கூட்டு இணைப்புடன் குர்ஆனில் பதிவு செய்கிறான் சங்கேத எழுத்துக்களைச் "சொற்களின் சுரங்கம் " என்றும் ."பேச்சு மொழியின் தொடக்கம்" என்றும் அப்துல்லாஹ் பின் அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறுகின்றனர் .
இன்றைய குர்ஆன் ஆராய்ச்சியாளர்கள் இந்த எழுத்துக்கள் குர்ஆனின் காவல் சின்னங்கள் என்கின்றனர். ஒரு 29 அத்தியாயத்திற்கு குறிப்பிட்ட எழுத்துக்கள் 19 எண்ணின் மடங்கு எத்தனை அடங்கியுள்ளன என்பதை அதிகாரத் தலைப்புகளிலுள்ள அந்த எழுத்துக்கள் வெளிக்காட்டுகின்றன .
ஆனால் 19 ன் மடங்குகள் மொத்த 29 அத்தியாயத்தில் 13 அத்தியாயத்திற்கு மட்டுமே பொருந்துகிறது. மீதமுள்ள 16 அத்தியாயத்தின் சங்கேத எழுத்துக்களின் எண்ணிக்கை எதைப் போதிக்கிறது என்பது இன்னும் தெரியவில்லை .
உலகில் வேறு எந்த மொழியிலும் , எந்த நூலிலும் காண இயலாத தனிச் சிறப்புடையது இந்த ஹுருபுல் முகத்தஆத் எழுத்துக்கள் .

வானவர் ஜிப்ரயீல் (அலை) அவர்களுக்குக் கூட விளங்காமலிருந்த சங்கேத எழுத்துக்களின் பொருளை நபி (ஸல்) அவர்கள் அறிந்திருந்தார்கள் என்பது "காப் , ஹா,யா, அய்ன், ஸாத் எனத் தொடங்கும் சூரா வெளிப்பட்ட நேரத்தில் ஒவ்வொரு எழுத்தையும் ஜிப்ரயீல் (அலை) அவர்கள் சொல்லச் சொல்ல "தெரிந்து கொண்டேன் , தெரிந்து கொண்டேன், என்று ஐந்து தடவை சொன்னார்கள்.
அப்போது ஜிப்ரயீல் (அலை) அவர்கள் "யா ரசூல்லாஹ் ! இந்த எழுத்திற்குரிய பொருளை நான் அறியாமல் இருக்கும் போது தாங்கள் எவ்வாறு அறிந்தீர்கள் ? என்று கேட்டதாக கிதாபு கபரில் கூறப்பட்டிருக்கிறது .
ஒவ்வொரு வேதத்திலும் ஒரு இரகசியம் உண்டு. இந்தக் குர்ஆனில் இதன் அத்தியாயங்களின் சிலவற்றின் ஆரம்பத்தில் அந்த இரகசியம் பொதிந்திருக்கிறது என்கிறார்கள் .

சூரத்துல் ஃபாத்திஹாவின் மொத்த எழுத்துக்கள் 114 .திருக்குர்ஆனின் மொத்த சூராக்கள் 114. இந்த சூராவை திரும்ப திரும்ப ஓதக்கூடிய வசனங்களாக தொழுகையில் ஒவ்வொரு ரக்அத்திலும் இறைவன் வைத்தானோ ? இது பற்றி குர்ஆனில்
وَلَقَدْ اٰتَيْنٰكَ سَبْعًا مِّنَ الْمَثَانِىْ وَالْقُرْاٰنَ الْعَظِيْمَ

(நபியே!) நிச்சயமாக நாம் உங்களுக்கு திரும்பத் திரும்ப ஓதக்கூடிய ஏழு வசனங்களை (உடைய "அல்ஹம்து" என்னும் அத்தியாயத்தை)யும், இந்த மகத்தான குர்ஆனையும் அளித்திருக்கிறோம். (குர்ஆன் : 15:87)

ஒரு புத்தகத்தின் முதல் பக்க அட்டவணைப் பொருளடக்கம் போல் திருக்குர்ஆனின் பொருளடக்கத்தை சூரத்துல் ஃபாத்திஹாவில் அருளப்பட்டிருக்கிறது. இதனால்தான் இந்த அத்தியாயத்தை ஒவ்வொரு தொழுகையின் ஒவ்வொரு ரக் ஆத்திலும் திரும்பத் திரும்ப ஓத வைத்தானோ என்று நம்மை சிந்திக்க வைக்கிறது !
பாத்திஹா அத்தியாயத்தில் அரபி நெடுங்கணக்கில் இருளெழுத்துக்கள் என்று குறிக்கப்படும் ஏழு எழுத்துக்கள் . . . . ஃதே , ஜீம் . கே , ஸே , ஷீன், ளே , ஃபே ஆகிய எழுத்துக்கள் தவிர்க்கப்பட்டுள்ளன
அடுத்து எழுதுகோல்
1 )" மனிதனை இரத்தக் கட்டியிலிருந்து சிருஷ்டித்தான் "
2)" எழுதுகோலைக் கொண்டுக் கற்றுக் கொடுத்தானே அவன் "
3) " மனிதனுக்கு அவன் அறியாததையெல்லாம் கற்றுக் கொடுத்தான் - குர்ஆன் (96 : 2 , 4 , 5 )
1) இரத்தக் கட்டியிலிருந்து மனிதனை சிருஷ்டித்ததையும் , எழுதுகோலைக் கொண்டு மனிதனுக்குக் கற்றுக் கொடுத்ததையும் இறைவன் சுட்டிக்காட்டி இருப்பது
மனிதனது மிக மிகத் தாழ்ந்த நிலையையும் , அவனது மிக உயரிய அந்தஸ்தையும் அதாவது மிகப் பெரிய அறிஞனாக , அறிவாளியாக , பெரிய ஆலீமாக இருப்பதையும் இங்கு கூறியுள்ளான் .
அது மட்டுமல்ல "அலக் " - என்ற வார்த்தைக்கு இரத்த கட்டி என்று பொருள் கூறுவது சரியல்ல என்ற முடிவுக்கு வந்துள்ளனர்.

காரணம் ஆணின் விந்தணுவும் , பெண்ணின் சினை முட்டையும் தத்தம் இரத்தத்திலிருந்துதானே உருவாகிறது இந்த இரண்டும் சந்திக்கும் கருவறையில் மீண்டும் இரத்தம் , இரத்தக் கட்டி என்று எப்படி கூற முடியும் ?
எனவே அலக் என்ற சொற்றொடருக்கு மன்திக் என்ற அரபு டிஸ்னெரியில் 400 க்கும் அதிகமான பொருளடக்கம் கூறப்பட்டிருக்கிறது . அதில் இரத்தமும் ஒன்று , மற்றொன்று "தொங்குதல்" அதாவது அட்டைப் பூச்சி மாதிரி கருவறையின் மேல் சதைப் பிடித்துக் கொண்டு தொங்குதல் என்பதாகும் இதுதான் சரியாக .இருப்பதாக சவூதியில் நடைப்பெற்ற திருக்குர்ஆன் மாநாட்டில் முடிவெடுக்கப்பட்டது .
தொங்கும் அந்தப் பொருள்தான் தொப்பிள் கொடி (அலக்) .இந்த தொப்புள் கொடியை குழந்தை பிறந்ததும் பத்திரப்படுத்தி வைத்தால் , அவனது உறுப்புகள் செயலிழந்தால் , செயலிழந்த அந்த உறுப்பின் ஜீனை எடுத்து தொப்புள் கொடிக்குள் வைத்து வளர்த்தால் அம்மனிதனுடைய புதிய உறுப்பு உருவாகி விடும் .
அலக் என்ற தொப்பிள் கொடியிலிருந்துதான் கடந்த கால செயலிழந்த உறுப்பின் ஜீனை வைத்து நிகழ்காலத்தில் வளர்த்து எதிர்காலத்தில் பயன்படும் புதிய உறுப்பு உருவாகிவிடும் .

இதேப் போலவே 'கலமுல் அஃலா' என்கிற எழுதுகோல் எழுதிய கடந்தகால நிகழ்வுகளை நிகழ்கால சிந்தனையுடன் கலந்து எதிர்காலத்திற்குரியவற்றை கலம் எழுதுகிறது .சரிதானே அலக் என்னும் தொப்புள் கொடியும் ,கலமுல் அஃலா என்கிற எழுதுகோலும் ஒரே பணியைத்தானே செய்கிறது .

இதனால் குர்ஆனில் - மனிதனை இரத்தக் கட்டியிலிருந்து சிருஷ்டித்தான் _ எழுதுகோலைக் கொண்டுக் கற்றுக் கொடுத்தானே அவன் - மனிதனுக்கு அவன் அறியாததையெல்லாம் கற்றுக் கொடுத்தான் "
"அல்லதீ அல்லம பில்கலமி" - (அதாவது எழுதுக் கோலைக் கொண்டு கற்றுக் கொடுத்தானே அவன் ) என்பது எழுதுகோலின் மூலமாக அவன் கற்றுக் கொடுக்க வேண்டியதைக் கற்றுக் கொடுத்தான்.
எழுதுகோலைக் கொண்டு எழுதுவதையும், விவரிப்பதையும் இறைவன் மனிதனுக்குக் கற்றுக் கொடுத்திருக்கிறான் என்ற அவனது அருட்கொடை இவ்வசனத்தில் சுட்டிக்காட்டப்பட்டுள்ளது.மேலும் எழுதுகோல் இல்லாதிருப்பின் இவ்வுலக, மறு உலக காரியங்கள் சீர்படாது.

இங்கு எழுதுகோல் என்பது சிருஷ்டிக்கப்பட்ட பொருள்களில் முதலாவதாகிய "கலமுல் அஃலா "வை சுட்டிக் காட்டுகிறது. மேலும் இதுதான் நபி (ஸல்) அவர்களது உயிர் என்றும் சொல்லப்படுகிறது.
இறைவன் முதலாவதாக "அல்கலம் " என்னும் எழுதுகோலை சிருஷ்டித்து , "கியாமத் நாள் வரை நிகழ்கிற யாவற்றையும் எழுது " என்று அதற்கு உத்தரவிட்டான். அந்த எழுதுகோல் முதன் முதலாவதாக " நான்தான் தவ்வாபு " (மிகவும் தவ்வாபை அங்கீகரிப்பவன் ).என்னிடம் தவ்பாச் செய்பவர்களை அங்கீகரிப்பேன் " என்று எழுதிற்று.
அரபி , சுர்யானி , தமிழ் இதர எல்லா எழுத்துக்களையும் ஏற்படுத்திய முதல் மனிதர் , நபி ஆதம் (அலை) அவர்கள் ஆவார்கள் .தமது மரணத்திற்கு முன்னூறு ஆண்டுகளுக்கு முன்னர் களி மண்ணில் அவற்றை எழுதி பின்னர் சுட்டு பத்திரப்படுத்தினார் .

அரபி எழுத்துக்களுக்கும், வானத்தின் விண்மீன்களுக்கும் மனித உடலின் உறுப்புகளுக்கும் இடையே நிறைய தொடர்பு உள்ளது . இதற்கு காரணம் வானிலிருந்து இறக்கப்பட்ட நபி ஆதம் (அலை) அவர்களின் உடலில் ஒவ்வொரு உறுப்புகளிலும் விண்ணிலுள்ள 12 ராசி நட்சத்திரங்களைப் பிரதிபலிக்கச் செய்தான் . இந்த 12 ராசி நட்சத்திரங்களும் நம் பூமியைச் சுற்றிய அமைந்திருக்கிறது .

தலை - மேஷம் , (ஆடு)

கழுத்து - ரிஷபம், (காளை மாடு)

கைகள் - மிதுனம் , (சிறுவர்கள் )

மார்பு காம்புகள் - கடகம் (நண்டு)

மார்பு -சிம்மம் (சிங்கம்)

இதயம் - கன்னி (இளம் பெண்)

தொப்பூழ் - துலாம் (தராசு)

இன உறுப்பு - விருச்சிகம் (தேள்)

தொடைகள் - தனுஷ் ( வில் அம்பு )

பின்புற பிட்டம் - மகரம் (ஒரு வகை ஜீவன்)

கால்கள் - கும்பம் (கும்பம் )

பாதங்கள் - மீனம் (மீன்)

இந்த 12 ராசி நட்சத்திரங்களை ஒரு சேர விண்ணியல் படத்தில் நீங்கள் பார்த்தால் மேற்சொன்ன மனித உறுப்புகளை நீங்கள் அவதானிக்கலாம் . இது வானில் இறைவன் எழுதிய எழுத்துக்கள்
ஆதம் (அலை) அவர்களுக்குப் பிறகு இத்ரீஸ் (அலை) அவர்கள் அந்த எழுத்துக்களை ஒலி வடிவத்தில் வெளிப்படுத்தினார்கள். " கத்தூரமல் " என்னும் எழுத்து உருவத்தையும் இத்ரீஸ் (அலை) ஏற்படுத்தினார் .
பாரசீக அட்சரத்தை முதன்முதலாக எழுதியவர் 3-வது பாரசீக மன்னன் "தஹ்மூறத்" என்பவராவர். கடிதங்களை ஏற்படுத்திய முதலாமவர் நபி யூசுப் (அலை) அவர்கள் என்று கஃபுல் அஹ்பார் (ரஹ்) அவர்கள் கூறியுள்ளார்.
மனிதனுக்கு அவன் அறியாததை எழுதுகோலைக் கொண்டும், அது அல்லாததைக் கொண்டும் கற்றுக் கொடுத்தான் என்பது இவ்விரு வசனங்களில் இருந்து தெரிய வருகிறது.மனிதன் கற்றுக் கொள்வதற்கும் , கற்றுக் கொடுப்பதற்கும் எத்தனையோ சாதனங்கள் இருக்கின்றன . அவற்றில் பிரதானமானது எழுதுகோல் மூலமாக கற்பிப்பதும் கற்றுக் கொள்வதுமாகும் .

எழுதுகோல், எழுத்து முதலியவை இறைவன் பேருபகாரங்களைச் சேர்ந்தவை என்பது இவ்வசனத்தின் மூலம் தெரிய வருகிறது .
இரண்டு மில்லியன் ஆண்டுகளுக்கு முன்பு காகம் எவ்வாறு கூடுகட்டியதோ அதுபோலவேதான் இன்னும் கட்டுகிறது. அதில் எந்த முன்னேற்றமும் இல்லை. ஆனால் மனிதனோ நிலவை அடைந்து விட்டான் . செவ்வாய்க்கு மாங்கல்யான் விண்கலத்தை தரை இறங்கச் செய்தான்
இந்த பிரபஞ்சத்தின் மீது ஆதிக்கம் செலுத்தும் இந்த முன்னேற்றம் கடந்த கால அறிவை அழியாமல் காப்பாற்றி, நவீன கால சிந்தனையுடன் அது மெருகுட்டப்படுகிறது. இதுதான் மானிட நாகரித்தின் பரிணாம வளர்ச்சியின் இரகசியம். இந்த ரகசியத்தைதான் எழுதுகோல் சொல்லித் தருகிறது.
ஆனால் தன் ஹபீபாகிய நபி (ஸல்) அவர்களை குறிப்பிட்டு குர்ஆனில் ,
(ஆகவே, அவர்களில்) எவர்கள் எழுதப் படிக்கத் தெரியாத (நம்) தூதராகிய இந்த நபியைப் பின்பற்றுகிறார்களோ அவர்கள் தங்களிடமுள்ள தவ்றாத்திலும், இன்ஜீலிலும் இவருடைய பெயர் எழுதப்பட்டிருப்பதைக் காண்பார்கள்.
(குர்ஆன் : 7:157)

அவ்வாறிருக்க நபி (ஸல்) அவர்கள் எழுதப் படிக்கத் தெரியாத உம்மி நபியாக இருந்தது ஏன் ? அவர்களுக்கு ஏன் அந்த அருட் கொடையை இறைவன் கொடுக்கவில்லை ? என்ற சந்தேகம் உண்டாகலாம் .சரிதானா ?
நபி (ஸல்) அவர்கள் எழுதப் படிக்கத் தெரிந்தவர்களாக இருப்பின், முற்காலத்து வேதங்களைப் படித்துக் கொண்டு அதன் மூலமாக அவர்கள் திருக்குர்ஆனை இயற்றினார்கள் என்று சன்மார்க்க விரோதிகள் கூறுவதற்கு இடமேற்படும். இவ்வாறு நபியவர்கள் எழுதப் படிக்க தெரியாதால் அவ்வாறு குறை கூற இடமில்லை.
கி.பி 628-ல் முஸ்லீம்களுக்கும் மக்கத்து குரைஷிகளுக்கும் ஹிஜ்ரி 6-ல் ஹுதைபிய்யா சமாதான உடன்படிக்கை கையெழுத்து ஆயிற்று.

உடன்படிக்கை ஆவணத்தில் நபிகளார் பெயருடன்
"ரசூலுல்லாஹ்" என்று சேர்த்து அலீ (ரலி) அவர்கள் எழுத ,
" இந்த நபியைத் நாங்கள் ஆண்டவனின் தூதர் " என்று ஒப்புக் கொள்ளாதபோது,எப்படி சமாதான ஒப்பந்தத்தில் கையெழுத்து இட முடியும் ? எனவே அவர்களை "ரசூல்லாஹ்"என்று குறிப்பிடாமல், அவர்களது தந்தையின் பெயரைத் தம் பெயருடன் அதாவது 'முஹம்மது பின் அப்துல்லாஹ் ' என்று சேர்த்து எழுத வேண்டும் குரைஷிகள் கூறினார்கள் .

நபிகளார் மீது அளப்பரிய மதிப்பும், மரியாதையும் ,மேலான உயிரையும் வைத்திருந்த அலீ (ரலி) அவர்கள் "ரசூல்லாஹ்" என்ற வார்த்தையை அழிக்க மறுத்து விட்டார்கள் .
உடனே 'ரசூல்லாஹ் ' என்ற வார்த்தை உடன்படிக்கையில் இருக்குமிடத்தைக் காட்டுமாறு நபிகளார் கேட்க, தம் கையாலேயே கோடிட்டு அடித்தார்கள் என்பதாக அறிகிறோம் .
அதாவது தாம் மறைவதற்கு சுமார் 4 ஆண்டுகளுக்கு முன் வரை கூட நபி (ஸல்) அவர்கள் எழுதப் படிக்கத் தெரியாத உம்மீயாக இருந்தார்கள் என்பதை இந்நிகழ்ச்சி எடுத்துக் காட்டுகிறது .
மேலும் .கலமுல் அஃலா என்னும் உயர்தரமான எழுதுகோல் நபி (ஸல்) அவர்களுக்கு பணிவிடை செய்ததாகவும் , லவ்ஹுல் மஹ்ஃபூல் என்பது அவர்களுக்கு புத்தகமாகவும் , அவர்கள் பார்க்குமிடமாகவும் இருக்கின்றன. எனவே நபிகளாருக்கு எழுத்தோ எழுதுகோலோ தேவைப்படவில்லை.
மேலும் எகிப்திய மன்னருக்கு இஸ்லாத்தை ஏற்றுக் கொள்ளுமாறு அழைப்பு விடுத்து எழுதிய மடல் இன்றும் ஒரு வரலாற்று ஆவணமாக இருந்து கொண்டிக்கிறது. அம்மடலில் நபி (ஸல்) அவர்களின் முத்திரை உள்ளது . கையெழுத்து இல்லை.

நபியவர்கள் எழுதப் படிக்கத் தெரியாத உம்மீயாக இருந்தாலும் , குர்ஆனின் ஒவ்வொரு எழுத்தின் அகமிய விளங்கங்களை பெற்றவர்களாக திகழ்ந்தார்கள் என்பதற்கு ஒரு நிகழ்வு ,
எழுதுகோலைப் பற்றி மிகப் பெரிய எழுத்தாளரான சுஜாதாவிடம் பேட்டி கேட்டார்கள் ." உங்கள் பேனாவில் அப்படி என்ன மாயத்தை ஊற்றி இருக்கிறீர்கள் ?"
"கடந்த இருபது வருடங்களாக நான் பேனாவால் எழுதுவதில்லை . ஆரம்பத்தில் டைப்ரைட்டர் மூலம் எழுதினேன் .பிறகு " பிசி " என்ற கம்ப்யூட்டர் மூலமாக எழுதி வருகிறேன்.
இப்போது கூட நான் அமெரிக்காவிலிருந்து கொண்டிருக்கும் போது இன்டர்நெட்டில் என் கதை, கட்டுரைகள் எழுதி அனுப்பும் வரை வந்து விட்டேன் இன்றைக்கு "வாய்ஸ் மெயில் " என்று பேசும் பேச்சே எழுத்துருவம் எடுத்து இன்டர் நெட்டில் அனுப்ப முடிகிறது.

கணிப்பொறி வந்ததால் , கையெழுத்துக் கலை (CALI GRAPHY ) மெள்ள அழிந்து , பின் எழுதுகோல் என்று ஒன்று தேவையா என்ற நிலை வரும் " என்றார்.
குர்ஆன் எழுதுகோலான " கலம் " பற்றி "எழுதுகோலைக் கொண்டுக் கற்றுக் கொடுத்தானே அவன் மனிதனுக்கு அவன் அறியாததைக் கற்றுக் கொடுத்தான் " என்று உயர்வாக இறைவன் சொல்லி இருக்க அது எப்படி தேவையா என்று புறந்தள்ளப்படும் ?
எழுதுகோல் என்கிற கலம் நவீன விஞ்ஞானத்தால் அது உருமாற்றம் செய்யப்பட்டு உன்னதப்படுத்தப்பட்டு விட்டதே தவிர எழுதுகோல் இல்லாமல் இல்லை. சுஜாதா சொல்வது மாதிரி கையெழுத்துக்கலை தேவையற்றுப் போகலாம் . ஆனால் எழுதும் கலம் நிச்சயமாக இருக்கிறது.
எழுதுகோல் என்பது நீங்கள் நினைக்கிற மாதிரி பேனா, பென்சில் மட்டுமல்ல; அது அறிவைக் குறிக்கிறது . பெற்ற அறிவுக்கும் , பெறப் போகிற அறிவுக்கும் உள்ள இணைப்பைக் குறிக்கிறது.
கலம் என்பது அறிவின் அடித்தள உயிர் ; கலம் என்பது மனித வாழ்க்கையின் வளத்தைக் குறிக்கும் ஓர் அடையாளச்சின்னம்.

எழுதுகோல் என்பது ஒரு குறியீடு. நிகழ்ச்சிகள் , உற்று நோக்குதல் , குறிப்புகள் , காணல்கள் , கோட்பாடுகள் , இத்யாதி ...இன்ன பிற ஆகியவற்றிலிருந்து அறிவை தேடுவதற்கும் , அறிவைப் பரப்புவதற்கும் மொழியின் வாயிலாக சொல்லப்படும் ஒரு குறியீடுதான் இந்த "எழுதுகோல் " என்ற சொற்றொடர் .
யதார்த்தமான உருவம் , நிறம் கூட மாறாத புகைப்படத்தை எடுத்துத் தரும் கேமிரா கூட ஒரு வகையில் உருவத்தை எழுதிய கலம்தானே !
இடர்பாடுள்ள மனித இதயத்தின் கோளாறுகளை சொல்லும் ECG என்கிற இயந்திரம் கூட இதயம் பேசிய வார்த்தைகளை எழுதிய கலம்தானே !
விண்வெளி ஆய்வு கூடத்திற்கு பூமியிலிருந்து அனுப்பப்படும் சமிக்ஞை ,செவ்வாய்க் கிரகத்தின் பாறைக்கடியில் நிறைய நீர் இருப்பதை அங்கிருந்தபடியே அனுப்பி வைக்கும் புகைப்படத்துடன் கூடிய சமிக்ஞை ... இதெல்லாம் எந்த எழுதுகோலால் எழுதப்படுகிறது என்பதை சற்று சிந்தியுங்கள்.
ஜெராக்ஸ், பேக்ஸ், கம்ப்யூட்டர் ,ரோபர்ட் இப்படி எத்தனையோ அதிநவீன விஞ்ஞானத்தால் 'கலம் ' உருமாற்றம் செய்யப்பட்டு உன்னதப்பட்டுத்தப்பட்டு விட்டது.
மனிதனின் கையெழுத்துதான் மாறியதே தவிர அவனின் தலை எழுத்தான " அறிவு " மேன்மைப்படுத்தப்பட்டுள்ளது.

எதிர் காலத்தின் அறிவு உச்சமாக நம்ம வீட்டு ரெப்ரிஜிரேட்டர்களுக்குள் பொதிந்திருக்கும் மைக்ரோ கம்யூட்டர்தானே காய்கறி , பால் இவற்றின் கையிருப்பு நிலையை அறிந்து அனுசரித்து, டிபார்ட்மெண்ட் ஸ்டோருக்கு இன்டர்நெட் மூலமாக ஆர்டர் கொடுத்துவிடும் . அரை லிட்டர் பால், ஒரு கிலோ பருப்பு, இரண்டு கிலோ ஆட்டிறைச்சி .... இதில் கலம் எங்கே ..? கையெழுத்து எங்கே ....?

இதனால்தான் இறைவன் குர்ஆனில் ,
" எழுதுகோலின் மீது சத்தியமாக ! அதைக் கொண்டு எழுதியவற்றின் மீது சத்தியமாக ! குர்ஆன் (68 : 01 )
இப்போ சொல்லுங்க ... இறைவன் சத்தியம் செய்யும் எழுதுகோல் நிச்சயமாக நீங்கள் இங்க் ஊற்றி எழுதப்படும் "பார்க்கர் " பேனாவும் இல்லை , ரினால்ட் ரிபிளும் இல்லை எஸ் .ராமகிருஷ்ணன் , சுஜாதா போன்றவர்கள் போன்றவர்கள் எழுதுகோலை தூக்கியெறிந்தாலும், இறைவன் எழுதுகோலின் மீது செய்த சத்தியம் ஒன்றும் பொய்ப்பித்துப் போகாது .

எழுத்தாற்றல்
நபிமார்களில் எழுத்தாளராக நபி ஜகரிய்யா (அலை) அவர்களை அல்லாஹ் குர்ஆனில் குறிப்பிடுகின்றான் .
இம்ரானின் மனைவி ஹன்னா தனக்கு குழந்தை பேறு இல்லாததால் , தனக்கு பிறக்கும் ஆண் குழந்தையை இறையாலயத் திருப்பணிக்காக கொடுப்பேன் என்று நேர்த்திக் கடன் செய்வதாக உறுதி பூண்டார்.
ஆனால் பிறந்ததோ பெண் பிள்ளை பெயர் மர்யம். அப்பெண் குழந்தையை ஒரு துணியில் போர்த்தி பைத்துல் முஹ்ஹதஸின் பொறுப்பாளர்களிடம் ஒப்படைத்தாள் .
" இவள் ஒரு பெண் குழந்தை .இவள் வளர்ந்து பருவம் எய்தும் போது இவளுக்கு மாதவிடாய் ஏற்பட செய்யும். மாதவிடாய் ஏற்பட்ட பெண் இறையாலயத்திற்குள் பிரவேசிக்கக் கூடாது. இருப்பினும் இறைவனின் திருப்பணிக்கு நேர்ச்சை செய்யப்பட்டு விட்ட இவளை என் இல்லத்திற்கு திரும்பக் கொண்டு போகும் நிலையில் நான் இல்லை " என்றாள் .

உடனே அவர்கள் " இவள் எங்கள் தலைவர் இம்ரானின் மகளாயிற்றே ! நாங்கள் செலுத்தும் குர்பானிப் பொருட்களுக்கு உரிமை படைத்தவரின் மகளாயிற்றே ! என்றனர் .
அப்போது அங்கிருந்த நபி ஜகரிய்யா (அலை) அவர்கள் " அவளை என்னிடம் கொடுங்கள் . ஏனெனில் அவளுடைய அன்னையின் சகோதரி என் மனைவியாவாள் ". என்று கூறினார்
அப்போது அவர்களுக்குள் பிணக்கம் ஏற்பட்டது. மர்யம் (அலை) அவர்களுக்கு யார் பொறுப்பேற்பது என்பதை முடிவு செய்ய , தவ்ராத் வேதத்தை எழுதப் பயன்படும் தத்தம் எழுதுகோல்களை தங்கள் நகர் பாலஸ்தீனத்தில் ஓடும் ஜோர்டான் நதியில் எறிய வேண்டும். யாருடைய எழுதுகோல் நதி நீரோட்டத்தில் அடித்துச் செல்லப்படாமல் மிதக்கிறதோ அவரே மர்யமை வளர்க்கப் பொறுப்பேற்க வேண்டும் என்பதே அவர்களின் தேர்வு முறையாக இருந்தது.

அதன்படி எல்லோரும் தங்கள் எழுதுகோலை நதியில் எறிய, நபி ஜகரிய்யா (அலை) அவர்களின் எழுதுகோலைத் தவிர ஏனைய எழுதுகோல் நதி நீரில் அடித்துச் செல்லப்பட்டது . நபியவர்களின் எழுதுகோல் நதி நீரோட்டத்தைக் கிழித்துக் கொண்டு எதிர்த் திசையில் முன்னேறியது.
இந் நிகழ்விலிருந்து தெரிய வருது , நல்ல எழுத்தாளர்களின் எழுத்துக்கள் ஹக்கை உண்மையை பிரதிபலிக்கச் செய்யும் . மற்ற எழுத்துக்களைப் போல் கால வெள்ளத்தில் இழுத்துச் செல்லாமல் , உண்மையை தாங்கி எதிர் நீச்சல் போட வேண்டும் .
எங்கு அநியாயம் , அக்கிரமங்கள் நடந்தேறும் போது , அதனை எதிர்த்து உண்மையை , உரக்கச் சொல்லும் எழுத்தாக இருக்க வேண்டும் .
அடுத்து , வானவர்கள் கிராமன், காத்திபீன் இருவரை கண்ணியமான எழுத்தாளர்கள் இருவரை உங்களில் ஒவ்வோரிடமும் சாட்டப்பட்டிருக்கிறார்கள்
كِرَامًا كَاتِبِيْنَۙ
அவர்கள் (மலக்குகளில் உள்ள) கண்ணியமான எழுத்தாளர்கள்.
(குர்ஆன் : 82:11)
அதென்ன கண்ணியமான எழுத்தாளர்கள் ?

இவ்வானவர்கள் நன்மையை எழுதினால் வானம் சென்று இறைவனிடத்தில் உடனுக்குடன் சமர்ப்பித்து, 'உன்னுடைய இன்ன அடியான் இன்ன நன்மையைச் செய்தான் ' என்று சாட்சியங் கூறுகின்றனர் .
தீமையைச் செய்தால் , அதனைக் குறித்து மௌனம் சாதிக்கிறார்கள் " "நாயனே , நீ மறைக்கிறவன், அவர்களோ உனது வேதத்தை தினந்தோறும் ஓதி உன்னைப் புகழ்ந்து வணக்க வழிபாடுகளில் ஈடுபடுகின்றனர் . எனவே அவர்களது மறைந்த குறையை வெளிப்படுத்த மாட்டோம்." என்று கூறுவார்கள்
மேலும் நன்மையை எழுதும் விஷயத்தில் அவர்கள் ரொம்பவும் தீவிரமானவர்கள் . தீமையை எழுதும் போது மனதின் மறதியாக தீமையைச் செய்து விட்டால் அதனை அவர்கள் எழுதிக் கொள்ள மாட்டார்கள்.
தீமையை பதிவும் விஷயத்தில் தவ்பா, இஸ்திஃபார் செய்யக் கூடும் என்ற எண்ணத்தால் சற்று தாமதிப்பவர்கள் .தவ்பா , இஸ்திபார் செய்தால் அதனையும் சேர்த்து எழுதி நன்மையின் தராசு தட்டை கனமாக்குவார்கள் .

இதனால்தான் இறைவன் இவர்களை கண்ணியமான எழுத்தாளர்கள் என்ற அடைமொழியோடு குறிப்பிடுகின்றான் .
இத்தனை விஷயங்களை ஒன்று விடாமல் தெள்ளத் தெளிவாக இறைவன் " லவ்ஹூ மஹ்பூள் " என்னும் பாதுகாக்கப்பட்ட பலகையில் எழுதப்பட்டுள்ளது.
இந்த பலகை 7 வது வானத்தில் அல்லாஹ் பாதுகாத்து வருகிறான் . இந்த பலகை இறைவன் உலகத்தைப் படைப்பிற்கு முன்னால் , வெண்மையான முத்துக்களின் கோர்வையால் அமைக்கப்பட்டு , சிகப்பு மரகதக் கற்களால் அதன் இருபுறமும் அழகுப்படுத்தி உள்ளான்.
7 வானத்தில் உள்ள இப்பலகையில் இருந்துதான் முதல் வானத்தில் உள்ள திருக்குர்ஆனுக்கு இறக்கி அருளப்பட்டது . இந்தப் பாதுகாக்கப்பட்ட பலகையை மற்ற படைப்பினங்கள் எதுவும் இதை அறிந்து கொள்ள முடியாது .
இறைவன் இந்தப் பலகையை ஒரு நாளைக்கு 360 தடவை பார்வையிடுகிறான்
பூமியில் ஓர் இலை பழுத்து விழுந்தாலும் அது பற்றிய விபரம் மிகத் தெளிவாக எழுதப்பட்டிருப்பதாக குர்ஆன் 6 : 59 ஆக எழுத்து ஆதி முதல் அந்தம் வரை வியாபித்திருக்கிறது .

**கலீபா காஜா அபூஸயீது ஜிஷ்தி உஸ்மானி அவர்களின் இல்லத்தில் நடைபெற்ற வருடாந்திர காஜா ஜிஷ்தி (ரஹ்) மஜ்லீஸில் என் சிறப்புரை :**



( கடுகளவு பொருள் கடலளவு சக்தியை வெளிப்படுத்தும் அந்த யுக்தியை சூஃபியாக்களும் அறிந்திருந்தனர் )

---

ஆல்பர்ட் ஐன்ஸ்டைன் என்கிற மாபெரும் விஞ்ஞானிக்கு "பொருள் எப்படி அழிவு பெறக் கூடும் ? புதிதாகச் சக்தி எப்படி தோன்றக் கூடும் என்ற எண்ணத்தில் ஆய்வு செய்த போது, உலகம் வியக்கும் ஓர் அதிசயமான சமன்பாட்டை கண்டார்.

$E = MC^2$

இதில் E -என்பது அளப்பரிக்கும் ஆற்றல் (Energy )
M_ பொருளின் எடை பொருண்மை (Mass)
C - ஒளியின் வேகம் (Velocity of Light )

பொருளும் சக்தியும் பின்னிப் பிணைந்தவைகள், அதாவது பொருள் அழியும் போது சக்தி பெறப்படும்.
மொத்த சக்தியும் ஒன்றாக பரிணமிக்கும் போது பொருள் திரளலாம்; பொருள் சக்தியாக , சக்தி பெருளாக மாறும் .
இதனிடையே ஒளியின் வேகம் இதில் ஏன் புகுந்தது ?
பொருளை அழித்து சக்தியாக மாற்றும் போது, பெறப்படும் சக்தியின் வேகம் ஒளியின் வேகம் அதாவது 1 நொடிக்கு ( 1 விநாடிக்கு ) 1,86, 282 மைல் வேகம் அல்லது 3 லட்சம் கிமீ வேகம் .

ஒளியின் வேகம் எதன் பொருட்டும் மாறாத தன்மை. எனவே பொருள் அழியும் போதெல்லாம் இந்த மாபெரும் வேகம் சக்திக்கு துணை நின்று அதை இயக்குகிறது.
2
E= MC அதாவது பொருளைக் சக்தியாக மாற்றும் போது கிடைக்கும் சக்தியின் அளவு பொருண்மையை ஒளியின் வேகத்தால் ஒரு முறை பெருக்கி மீண்டும் அவ்வேகத்தில் பெருக்கிய போது, கிடைக்கும் பெருக்கல் பலனாக இருக்கும் .
அணுவின் உள்ளே பூட்டி வைத்திருக்கும் சக்தியின் அளவு நம்பவே முடியாதபடி அவ்வளவு அதிகமானது. அணுவின் எடையைப் போல் ஒன்பது கோடி மடங்காக உள்ளது.
வெறும் இரண்டு பவுண்ட் எடையுள்ள யுரேனியம் முழுவதும் சக்தியாக மாற்றப்படக் கூடுமானால் , அந்த பொருள் 2200 கோடி கிலோ வாட் சக்தியை அளிக்கும். இது அமெரிக்கா முழுவதும் ஏறக்குறைய இரண்டு மாதத்திற்குத் தேவையான மின்சார சக்தியை அளிக்கும் .
2
E=MC இது, மொத்த பிரபஞ்சத்தின் சூட்சம ஒழுங்கு. இந்த மூன்று எழுத்துகளைக் கொண்டு " மொத்த பிரபஞ்சத்தின் சூட்சம ஒழுங்கு " என்று விஞ்ஞான உலகம் நிரூபித்து பிரகடனம் செய்யும்போது.

---

கடுகளவு பொருள் கடலளவு சக்தியை வெளிப்படுத்தும் அந்த யுக்தியை சூஃபியாக்களும் அறிந்திருந்தனர்

---

வல்ல ரஹ்மான் நிச்சயமாக குர் ஆனில் இந்த மூன்று எழுத்தையும் சொல்லி இருப்பான் அல்லவா ?
பொருள் , ஒளியின் வேகம் இவைகளால் உண்டாகும் அளப்பரிக்கும் ஆற்றல் குர்ஆனில் எங்கே இவைகள் ஒளிந்திருக்கிறது ?
தேடுவோம்.
E = ( அலிப்) என்பது அல்லாஹுத்தஆலா அருளிய குர்ஆனின் ஆற்றலை குறிக்கலாம் .
M = ( லாம்) ஜிப்ரயீல் (அலை) என்ற வானவர் அவர்கள் மூலமாக கொண்டு வந்த குர்ஆனைக் குறிக்கலாம்
C = (மீம்) முஹம்மது நபி (ஸல்) அவர்களை குறிக்கலாம் மேலும்

நபி (ஸல் ) அவர்கள் , ஒளியின்சொரூபத்தில் படைக்கப்பட்டவர்கள் .அவரகளுக்கு நிழல் விழாது. ஒளிக்கு ஏது நிழல்?
ஹுருபுல் முகத்தஆத் என்கிற சங்கேத எழுத்துக்கள் குர்ஆனில் 29 அத்தியாயங்களில் தலைப்பில் இறக்கி அருளப்பட்டிருந்தாலும்,அலிஃப் லாம் மீம் என்ற இந்த மூன்று எழுத்து குர்ஆனில் ஆறு சூராக்களின் முதன்மை வசனமாக பதியப்பட்டுள்ளது.
இந்த அலிஃப் லாம் மீம் ஆறும் ஒன்றல்ல: ஆல இம்ரானில் குர்ஆனில் (3 : 01) வரக்கூடிய அலிஃப் லாம் மீம் இந்த மூன்றெழுத்தில் மீமுக்கு மட்டும் தனியாக வாவ் என்று குறியீடு உள்ளது. அதாவது E யின்மடங்கு குறியிட்டது போல் குறிப்பிடப்படுகிறது.
சரி , குர்ஆனின் ஆற்றல்தான் என்ன இறைவா ?
"(நபியே) நீங்கள் கூறுங்கள் : கடல் நீர் அனைத்தும் மையாக இருந்து என் இறைவனின் வாக்கியங்களை (குர்ஆன்) எழுத ஆரம்பித்தால், என் இறைவனின் வாக்கியங்கள் முடிவதற்கு முன்னதாகவே இந்தக் கடல் மை அனைத்தும் செலவாகிவிடும் அதைப் போல் இன்னொரு பங்கு (கடலைச்) சேர்த்துக் கொண்ட போதிலும் கூட " திருக்குர்ஆன் ( 18 : 109 )

"பூமியிலுள்ள மரங்கள் அனைத்தும் எழுதுகோலாகவும், கடல்நீரை மையாகவும் வைத்து (அது தீர்ந்து) பின்னும் ஏழு கடல் நீரையும் மையாக வைத்து எழுதிய போதிலும் அல்லாஹ்வுடைய வசனங்கள் (எழுதி) முடிவு பெறாது. நிச்சயமாக அல்லாஹ் (அனைத்தையும் ) மிகைத்தவனும், ஞானமுடையவனாகவும் இருக்கின்றான். திருக்குர்ஆன் ( 31 : 27 )
அணு தன் எடையைப் போல் ஒன்பது கோடி மடங்கு அளப்பரிய சக்தியை ஒளியின்(மின்னல்) வேகத்தில் வெளிப்படுத்தும் .
அருளப்பட்ட குர்ஆனுக்கு அளவிட முடியாத அளப்பரிய ஆற்றலை எதன் மூலம் அளவிட முடியும் ?
" அலிப் , லாம் , மீம்"
முழுக்குர்ஆனும் நபி (ஸல்) அவர்களுக்கு அருளப்பட்டப் பிறகு நபிகளார் நபித்தோழர்களுக்கு ஒரு போட்டி வைத்தார்கள் அதாவது " ஒரு குதிரையின் மீது ஏறி முடிப்பதற்குள் முழுக்குர்ஆனையும் ஓதி முடிக்க முடியுமா ? என்று நபி ( ஸல்) போட்டி வைக்க, மற்ற நபித்தோழர்கள் சற்று யோசிக்க,
அலீ (ரலி) அவர்கள் , " அலிப், லாம், மீம் " இந்த 3 எழுத்தை சப்தமாக ஓதி குதிரையில் ஏறினார்கள். முழு குர்ஆனை ஓதியதாக நபி (ஸல்) அவர்கள் வெற்றியை அறிவிக்கிறார்கள்.

---

கடுகளவு பொருள் கடலளவு சக்தியை வெளிப்படுத்தும் அந்த யுக்தியை சூஃபியாக்களும் அறிந்திருந்தனர்

---

சற்குரு காட்டிய அல்லாஹ்வின் அர்ஷ்

காமிலான ஷைகைத் தேடிப் புறப்பட்ட ஹஜ்ரத் காஜா கரீபு நவாஜ் ரஹ்மத்துல்லாஹி அலைஹி அவர்கள் ஈராக் நாட்டில் ஹாரூன் நகரில் ஆன்மீக அரசாட்சி புரிந்து வந்த ஹஜரத் உஸ்மான் ஹாரூனி (ரஹ்) அவர்களை தமது ஆன்மீக ஆசானாக ஏற்று, பைஅத் பெற்றார்கள்
இதுபற்றி காஜா கரீப் நவாஜ்(ரஹ்) அவர்கள் " எனது ஷெய்கு எனக்கு இரண்டு ரக்அத் தொழும்படி பணித்தார்கள். அவ்வாறே செய்தேன். பிறகு கிப்லாவை முன்னோக்கி அமரும்படி கூற, நானும் அவ்வாறே அமர்ந்தேன். சூரா பகராவை ஓதும்படி கூறினார்கள். அவ்வாறு நான் ஓதிய பின் 80 தடவை சுபஹானல்லாஹ் கூறும்படி பணித்தார்கள். அவ்வாறு ஓதினேன்.
இதற்குப் பிறகு எனது கையை அவர்கள் கை மீது வைத்து என்னை தமது அருட் பார்வையால் நோக்கி, உம்மை அல்லாஹ்விடம் கொண்டு சேர்த்து விட்டேன்" என்று கூறினார்கள் .
அதன் பிறகு சில முறைப்படி தொப்பியும் , முபாரக்கான ஆடையும் அணிவித்தார்கள். பிறகு அங்கேயே அமர்ந்து ஆயிரம் தடவை சூரா இக்லாஸ் ஓதச் சொன்னார்கள்
.
அதை முடித்ததும் எங்களுடைய ஷைகுமார்களின் பயிற்சி முறைப்படி ஓரிரவு பகல் பரிபூரணமாக முஜாஹாத செய்ய வேண்டுமென்று கூறி , அதன் முறையை கற்று தந்தார்கள். அதையும் நிறைவேற்றிய பின்...
மறுநாள் ஷைகு அவர்களை சந்தித்தேன் .அப்போது என்னை நோக்கி வானத்தை பார்க்கும்படி கூறினார்கள். அவ்வாறே நான் பார்த்தபோது "எதுவரை பார்க்கிறீர் ? " என்று ஷைகு அவர்கள் கேட்டனர் .
"அல்லாஹ்வின் அர்ஷ் வரைப் பார்க்கிறேன்" என்று கூறினேன்.
பிறகு கீழே பார்க்கும் படி கூற, அவ்வாறே பார்த்தபோது,'' எதுவரை பார்க்கிறீர் ?" என்று ஷைகு கேட்டார்கள்.
"ஏழு பூமிக்கு கீழ் வரை பார்க்கிறேன் " என்று கூறினேன்.
பிறகு மீண்டும் ஆயிரம் தடவை சூரா இக்லாஸ் ஓதும்படி கூறினார்கள். அவ்வாறே ஓதினேன் "இப்போது எதுவரை பார்க்கிறீர் ?" என்று கேட்டார்கள் "ஹிஜாபே அழமத் " என்னும் திரைகள் வரை பார்க்கிறேன் " என்று கூறினேன்.
பிறகு கண்ணை மூடச் சொன்னார்கள். மூடினேன். பிறகு மீண்டும் திறக்கும்படி உத்தரவிட்ட போது, கண்ணைத் திறந்தேன் .ஷைகு அவர்கள் தமது இரு விரல்களை எனது அருகில் கொண்டுவந்து , அதற்கு இடையில் பார்க்கும்படி கூறினார்கள் . அவ்வாறு பார்த்தபோது எதைப் பார்க்கிறீர் ? என்று கேட்டார்கள். 18000 உலகங்களும் எனது கண்ணருகே வந்து இருப்பதை பார்க்கிறேன்' என்றேன்.
இதன் பிறகு ஷைகு அவர்கள் என்னை நோக்கி " உமது வேலை பூர்த்தியாகி விட்டது" எனக் கூறி அருகே கிடந்த செங்கலை தூக்கும் படி கூற , அதை தூக்கிய போது அதன் கீழே சில பொற்காசுகள் இருந்தன. அதை ஏழைகளுக்கு தர்மம் செய்யும்படி கூறினார்கள். அவ்வாறு செய்தேன்.
இதன்பிறகு ஷைகு அவர்களின் பணி விடையில் 20 ஆண்டுகள் செலவிட்டேன் .இரவிலும்,பகலிலும் ,தூக்கத்திலும், விழிப்பிலும், பயணத்திலும், ஊரிலும், எல்லா நிலைகளிலும் ஊழியம் செய்தேன் எனக்கு கிடைத்த எல்லா நற்பாக்கியங்களும் ஷைகின் பணிவிடையில் கிடைத்ததேயாகும்.

________________________________________

கடுகளவு பொருள் கடலளவு சக்தியை வெளிப்படுத்தும் அந்த யுக்தியை சூஃபியாக்களும் அறிந்திருந்தனர்

________________________________________

கூஜாவில் நுழைந்த ஆனாசாகர் ஏரி
ஆனாசாகர் ஏரிக்கரை அருகிலுள்ள மலையில் தங்கியிருந்த காரணத்தினால் ஹள்ரத் அவர்களும் தங்களின் உடன் பலர் இருந்தவர்களும் உளு செய்யவும், குளிக்கவும் ஆனாசாகர் ஏரித் தண்ணீரையே பயன்படுத்தினர். அந்த ஏரிக்கரையில் விக்ரஹ வழிபாட்டுத்தலங்கள் அமைந்திருந்தன அங்கிருந்த அர்ச்சகர்களுக்கு ஏரித்தண்ணீரை முஸ்லிம்கள் பயன்படுத்துவது பிடிக்காதது மட்டுமின்றி இதனால் தண்ணீரின் புனிதமும், வழிபாட்டுத்தலத்தின் புனிதமும் கெட்டு விடும் என்று கருதினர்.

ஒரு நாள் குளிப்பதற்காகச் சென்ற ஒருவரை அங்கிருந்த அர்ச்சகர்கள் தடுத்துவிட்டனர். அவர் திரும்ப வந்து ஹள்ரத் அவர்களிடம் விபரங்களைக் கூறினார். அதைக்கேட்ட ஹள்ரத் தமது ஆன்மீக மாணவர் ஒருவரை அழைத்து, தமது கூஜாவைக் கொடுத்து, "ஆனாசாகர் ஏரித்தண்ணீரை
அள்ளிக்கொண்டு வாரும்" என ஆணையிட்டனர்.
அவரும் அவ்வாறே செய்தார். தண்ணீர் கூஜாவில்
அள்ளப்பட்டது தான் தாமதம். ஏரியிலிருந்த தண்ணீர் முழுவதும் வற்றிக் காய்ந்து விட்டது. இப்போது தான் அர்ச்சகர்களுக்கு விபரம் புரிகிறது. அஜ்மீர் நகர் முழுவதும் தண்ணீர் இல்லாமல் கிணறுகள் கூட வறண்டுவிட்டன. இந்நிலையில் ஊர் முக்கியஸ்தர்களின் ஒரு குழுவினர் ஹள்ரத் கரீபு நவாஜ் (ரஹ்) அவர்களைச் சந்தித்து மன்னிப்பு அருளும்படி வேண்டிக் கொண்டதன் பேரில் ஹள்ரத் அவர்கள் கூஜாவில் அள்ளிக்கொண்டு வரப்பட்ட தண்ணீரை மீண்டும் ஏரியில்கொண்டு போய் கொட்டிவிடும்படி ஆணையிட்டனர்.
இதன்பின் ஏரியில் தண்ணீர் பெருக ஆரம்பித்தது. இந்த அற்புதம் கண்ட அஜ்மீர் நகர. மக்கள் கூட்டம் கூட்டமா இஸ்லாத்தை தழுவினர்.

________________________________________

கடுகளவு பொருள் கடலளவு சக்தியை வெளிப்படுத்தும் அந்த யுக்தியை சூஃபியாக்களும் அறிந்திருந்தனர்

